டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர் :

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு :

தொகுதி 15



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''இந்த நூலின் பெயரை வைத்துப் பார்க்கும்போது, பாகிஸ் தானைப் பற்றி மட்டுமே கூறும் நூலாகவே தோன்றக்கூடும். ஆனால் இந்நூல் இதற்கப்பாலும் செல்கிறது. இந்திய வர லாற்றையும் இந்திய அரசியலையும் அவற்றின் வகுப்புவாரி அம்சங்களையும் பகுத்தாயும் ஒரு நூலாக அமைந்திருக்கிறது. இவ்வகையில், இந்நூல் பாகிஸ்தான் கோரிக்கையின் அடிப் படையையும் விளக்கிக் கூறுவதாக உள்ளது. பாகிஸ்தானைப் பற்றிய ஒரு வெறும் ஆய்வு நூலாக மட்டும் இல்லாமல் அதற்கு மேலும் இது உயர்ந்து செல்கிறது. இந்திய வரலாற் றையும் இந்திய அரசியலையும் பற்றி இந்த நூலில் மிக அதிக மான, பெரிதும் பலதரப்பட்ட விவரங்கள், தகவல்கள் தரப் பட்டிருக்கின்றன. இந்த அடிப்படையில் இதனை இந்திய அரசியல் களஞ்சியம் எனக் கூறினால் அது மிகையாகாது.''

- டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

''பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை''

'இரண்டாவது பதிப்புக்கு முன்னுரை' என்னும் பகுதியிலிருந்து

This Volume XV in Tamil forms the Complete part of the English Edition Volume 8 : **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1990.**

*முதற் பதிப்பு : 1999*

மறுபதிப்பு: 2008



**விலை : ரூ. 40/-**

நூலகப் பதிப்பு: ரூ. 138

**வெளியீட்டாளர் :**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
நல அமைச்சகம்,
இந்திய அரசு,
25, அசோகா சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

---

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

# ஆலோசனைக்குழு

**திருமதி மேனகா காந்தி**
*நலத்துறை இராஜாங்க அமைச்சர்*
*(தனிப்பொறுப்பு)*
*இந்திய அரசு*

**திரு. தர்மசிங் மௌர்ய**
செயற்குழு உறுப்பினர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

**திரு. டி.கே. மணவாளன்,**
செயலாளர், நல அமைச்சகம்

**திரு. ஏ.கே. சௌத்ரி,**
இணைச்செயலாளர், நல அமைச்சகம்
மற்றும் உறுப்பினர் - செயலாளர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

*நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :*
**டாக்டர் எஸ். பெருமாள்,** எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

*திரு. வஸந்த் மூன்*
*பம்பாய்*

தமிழ் நூல் பதிப்பாளர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

மொழிபெயர்ப்பாளர்கள் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. நா. ஜெயராமன்*
*திரு. முனைவர் ஆ. இளங்கோவன்*
*திரு. முனைவர் கே.வி. பாலசுப்பிரமணியும்*

ஒப்புநோக்கியோர் :

*திரு. அ. பிச்சையா, (அசரீரி)*

பிழைதிருத்த உதவி:

*திருமதி பிரியா கமல், எம்.காம்.,*




## வாழ்த்துரை

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் பேச்சும் எழுத்தும் தொகுத்தளிக்கப்பட்ட இத்தொகுதியின் இரண்டாம் தமிழ்ப் பதிப்பனை தமிழ் வாசகர்களுக்கு சமர்ப்பிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் படைப்புக்களை தமிழ் வாசகர்கள் படித்து பயன்பெறுவர் என்று நம்புகிறேன்.

புதுடில்லி

(ஒப்பம்) திருமதி மீராகுமார்
இந்திய அரசு சமூகநீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்

# அணிந்துரை

பாரத ரத்னா டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்கள் வரலாறு, பண்பாடு, சமூகம், அரசியல் வளர்ச்சி ஆகியவற்றை ஆழமாக ஆய்ந்து படித்தறிந்தவர். உண்மையான தேச பக்தராக விளங்கிய அவர், இந்திய நாடு விடுதலைப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில் சந்திக்க நேர்ந்த பிரச்சினைகளை ஆழ்ந்த கவலையோடு ஆய்ந்தவர். இந்தியப் பிரிவினையும், இந்தியாவைப் பிரித்துத் தனி நாடாகப் பாகிஸ்தானை உருவாக்க வேண்டும் என்ற கோரிக்கையும் டாக்டர் அம்பேத்கருக்கு அதிர்ச்சியை அளித்தன. அதன் விளைவாக, 'பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை' என்னும் தலைப்பில் அவர் வெளியிட்ட சிந்தனை வளமிக்க நூல், அவர் காலத்தில் இந்தியாவில் நிகழ்ந்தவற்றைப் பிரதிபலிக்கின்றது. அந்த நூலின் தமிழாக்கம், இந்தியாவின் பிரிவினைக்குக் காரணமாக இருந்த சூழ்நிலைகளை அறியவும், அத்தகைய குறைபாடுகள் மீண்டும் தலைதூக்காமல் தடுப்பதற்குரிய புதிய பாதையை வகுப்பதற்கும், இந்திய நாட்டின் இறையாண்மையையும் ஒற்றுமையையும் கட்டிக் காப்பதற்கும் தமிழ் மக்கள் சிந்திப்பதற்கு உதவியாக இருக்க வல்லது. நமது நாடு நலமும் வளமும் மிக்கதாக இருக்கச் செய்வது நம் அனைவரின் தலையாய கடமையாகும்.

நல்வாழ்த்துக்கள்!

மேனகா காந்தி
(திருமதி மேனகா காந்தி)
நலத்துறை இராஜாங்க அமைச்சர்
(தனிப் பொறுப்பு). இந்திய அரசு

புதுடில்லி

# வாழ்த்துரை

'பாரத ரத்னா' விருது பெற்ற டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்கள் ஒப்பற்ற அறிஞரும், உண்மையான தேச பக்தருமாவார். அவர் நம் நாட்டுக்கு ஆற்றிய பணிகள் மறக்க முடியாதவை; எண்ணற்றவை. நம் நாட்டை நலிவடையச் செய்த பிரச்சினைகளுக்கான காரணங்களைக் கண்டறிந்து அவற்றைப் போக்கும் முயற்சிகளை மேற்கொண்டார்.

சமுதாயத்தில் நிலவும் துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் காரணமாக உள்ள சாதி, மத வேறுபாடுகளை ஒழித்தால்தான் நாடும், மக்களும் முன்னேற்றம் காணமுடியும். மக்களிடையே வேற்றுமை பாராட்டும் தீண்டாமைக் கொடுமையை ஒழித்து ஒன்றுபட்டு வாழும்போதே உயர்ந்த பண்பாடுள்ள சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் என்ற நிலையை எய்த முடியும். இத்தகைய கொள்கையை எடுத்துரைத்து நிலைநிறுத்துவதற்காகத் தம் வாழ்நாள் முழுவதும் அயராது பாடுபட்டவர் டாக்டர் அம்பேத்கர் அவர்கள். இந்த முயற்சியில் அவர் வெற்றியும் பெற்றார்.

குறிப்பாக இந்தத் தொகுதி, இந்திய நாட்டு விடுதலைப் போராட்டத்தின் இறுதி காலத்தில் நாட்டில் நிலவிய அரசியல் பிரச்சினைக்கு ஆக்கபூர்வமான தீர்வாக அமைந்துள்ளது. டாக்டர் அம்பேத்கர் அவர்கள், தம் கருத்துகளை ஆங்கில மொழியில் அழகாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்துள்ளார். அவருடைய சிந்தனைகளை இந்திய மொழிகளில் வெளியிட்டுப் பரப்பும் பணியை இந்திய அரசு மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் எண்ணங்களையும், கருத்துகளையும் தாங்கிவரும் இந்தத் தொகுதியும் மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

புதுடில்லி

**பி.எல். சர்மா,**
உறுப்பினர் - செயலாளர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
நல அமைச்சகம்

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 15-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் பதிப்பாசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

புதுடில்லி

**எச்.ஆர். பீமாசங்கர்,**
இயக்குநர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் பி.ஆர். அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் எட்டாவது தொகுதி, தமிழில் பதினைந்தாவது தொகுதியாக அமைந்துள்ளது.

பாகிஸ்தான் பிரிவினை பற்றிய சிக்கலை வெறும் ஆய்வு நூலாக மட்டுமல்லாமல், இந்திய வரலாற்றையும் இந்திய அரசியலையும் அதன் பன்முக வகுப்புவாரி பின்னணியில் பகுத்தாயும் இந்த நூலை இந்திய அரசியல் களஞ்சியம் என டாக்டர் அம்பேத்கர் அவர்கள் குறிப்பிட்டிருப்பது மிகப் பொருத்தமே.

ஆங்கில மொழியில் சிறந்த சிந்தனைக் களஞ்சியமாக விளங்கும் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்களை மக்களுக்குப் பயன்படும் வகையில் தமிழிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் வெளியிடும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசின் நலத்துறையும், டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் பாராட்டுதலுக்கு உரியவை. இந்த நூல்களை மொழிபெயர்க்கும் பணியைப் பலர் மேற்கொள்வதால் மொழி நடையிலும், சொல்லாட்சியிலும் வேறுபாடு ஏற்படுவது தவிர்க்க இயலாததாகியுள்ளது. இந்தக் குறைகளைத் தமிழ் மக்கள் பொறுத்துக் கொள்வார்கள் என நம்புகின்றோம்.

இந்த அரிய பணியில் ஈடுபட்டுள்ள மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர் ஆகிய யாவரும் நன்றிக்குரியவர்கள். முந்தைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஏற்பார்கள் என நம்புகின்றோம்.

**எஸ். பெருமாள்**
தமிழ்நூல் பதிப்பாசிரியர்.

# பாகிஸ்தான்
# அல்லது
# இந்தியப் பிரிவினை

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்

1946 - ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட நூலின்
மறுபதிப்பு

## ராமுவின் நினைவாக

எங்களுக்கேற்பட்ட
துன்பங்களையும் துயரங்களையும்
தாங்கிக் கொள்ளும் நண்பர்கள் எவருமில்லாத
அந்த நாட்களில்
நல்லதோர் நெஞ்சமும்
மேலான மனமும்
தூயநற் பண்புகளும் நிறைந்தவராய்
என்னோடு இணைந்து நின்று
என் துயரையெல்லாம் தன் துயராகக் கருதிய
ராமுவின் நினைவாக
இந்நூல் **சமர்ப்பணம்** செய்யப்படுகிறது.

# பொருளடக்கம்

## பகுதி IV

## பாகிஸ்தானும் நாட்டைப் பீடித்துள்ள பிணியும்



## பகுதி V

# இரண்டாவது பதிப்புக்கு முன்னுரை

பாகிஸ்தான் பிரச்சினை எல்லோருக்குமே மிகுந்த தலைவலியைத் தந்துள்ளது; அதிலும் இப்பிரச்சினையால் வேறு எவரையும் விட எனக்குத்தான் தலைவலி மிகவும் அதிகம். இதைவிட பெரும் முக்கியத்துவம் வாய்ந்த எழுத்துப்பணி எனக்கு எவ்வளவோ இருக்கிறது. அப்படியிருக்கும்போது இப்பிரச்சினை காரணமாக என் எழுத்துப்பணி வெகுவாகத் தடைபட்டுப் போயுள்ளது. இதனை என்னால் வருத்தத்தோடு நினைத்துப்பார்க்காமல் இருக்க முடியவில்லை. எது எப்படியோ, மேன்மேலும் பொறுமையைச் சோதிக்காமல், ஒன்று இப்பிரச்சினைக்கு ஒரு வழியாகத் தீர்வு காணப்பட்டு விடும் அல்லது திரும்பப் பெற்றுக் கொள்ளப்படும் என்று நம்புகிறேன்.

இந்த இரண்டாவது பதிப்பானது முதல் பதிப்பிலிருந்து நான்கு அம்சங்களில் வேறுபடுகிறது.

[1]முதல் பதிப்பில் ஏராளமான அச்சுப் பிழைகள் காணப்படுகின்றன; இது பற்றி பல வாசகர்களும் விமர்சகர்களும் குறை கூறியுள்ளனர். எனவே, இந்தப் பதிப்பைத் தயாரிப்பதில், இத்தகைய குற்றங்குறைகளுக்கு இடம் தராத வகையில், கூடியமட்டும் மிகுந்த கவனம் செலுத்தி இருக்கிறேன். முதல் பதிப்பு மூன்று பகுதிகளைக் கொண்டதாக மட்டுமே இருந்தது. பகுதி V இப்போது கூடுதலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. பாகிஸ்தான் பிரச்சினை குறித்த பல்வேறு சிக்கல்கள் சம்பந்தமான எனது சொந்தக்கருத்துகள் இப்பகுதியில் அடங்கியுள்ளன. பாகிஸ்தானைப் பற்றி எழுதியபோது இப்பிரச்சினையில் என் கருத்துகளைத் தெரிவிக்கத் தவறி விட்டதாக முதல்

---

1. முதல் பதிப்பில் அச்சுப்பிழை திருத்தும்போது நேர்ந்த கவனக்குறைவின் காரணமாக பல்வேறு வங்க மாவட்டங்களின் மக்கட்தொகைப் புள்ளிவிவரங்களில் முரண்பாடு ஏற்பட்டு விட்டது. தவிரவும், பாகிஸ்தானுடன் இணைக்கப்பட வேண்டிய வங்காளப் பகுதியின் தேசப்படத்திலும் ஒரு தவறு நேர்ந்துவிட்டது. அதாவது பாகிஸ்தானுடன் இணைக்கப்பட வேண்டிய இரண்டு மாவட்டங்கள் அதில் சேர்க்கப்படவில்லை. இந்தப் பதிப்பில் இந்தத் தவறு திருத்தப்பட்டு, தேசப்படமும் மக்கட்தொகை எண்ணிக்கையும் சரி செய்யப்பட்டுள்ளன.

பதிப்புக்கு எதிராக ஒரு குற்றச்சாட்டுக் கூறப்பட்டதால் இப்பகுதி புதிதாகச் சேர்க்கப்பட்டது. தற்போதைய பதிப்பு முதல் பதிப்பி லிருந்து மற்றொரு அம்சத்திலும் வேறுபடுகிறது. முதல் பதிப்பில் இடம்பெற்றிருந்த தேசப்படங்கள் இப்பதிப்பில் அப்படியே நீடிக் கின்றன; ஆனால் பின்இணைப்புகளின் எண்ணிக்கை அதிகரிக்கப் பட்டிருக்கிறது. முதல் பதிப்பில் பதினோரு பின் இணைப்புகள் மட்டுமே இருந்தன. இப்போதைய பதிப்பில் இருபத்தைந்து பின் இணைப்புகள் இடம்பெற்றிருக்கின்றன. இதுவல்லாமல், முதல் பதிப்பில் அகர வரிசை அட்டவணை ஏதும் இல்லை; ஆனால் இந்தப் பதிப்பில் அத்தகைய அட்டவணை ஒன்றையும் இணைத்துள்ளேன்.

இந்த நூல் நல்ல வரவேற்பினைப் பெற்றுள்ளது. இதில் இடம்பெற்றுள்ள எண்ணங்களையும், கருத்துகளையும், வாதங் களையும் அநேக ஆசிரியர்களும், அரசியல்வாதிகளும், செய்திப் பத்திரிகைகளின் ஆசிரியர்களும் தங்கள் தரப்புக்கு ஆதரவான முறையில் பயன்படுத்திக் கொண்டிருப்பதைப் பார்க்கிறேன். என் வாதங்களை அவர்கள் அப்படி அப்படியே, எழுத்துக்கு எழுத்து மாறாமல் எடுத் தாண்டிருப்பதையும் காண்கிறேன். ஆனால் இவற்றை என் நூலி லிருந்துதான் கையாண்டிருக்கிறார்கள் என்பதை ஏற்கும் தகைமை, பண்பு அவர்களிடம் இல்லாமற்போனதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. சரி, போனது போகட்டும், இதைப்பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. மாறாக, இந்தச் சிக்கலான பாகிஸ்தான் பிரச்சினையை எதிர்கொள்ளும் இந்தியர்களுக்கு இந்நூல் பெரிதும் பயனுள்ளதாக இருப்பது குறித்து மகிழ்ச்சியே அடைகிறேன். திரு.காந்தியும் திரு. ஜின்னாவும் அண்மையில் பேச்சுவார்த்தைகள் நடத்தியபோது பாகிஸ்தான் பிரச்சினை சம்பந்தமாக இந்த நூலை ஒரு பயனுள்ள ஆதாரப்பூர்வமான நூலாகக் கொள்ளலாம் என்று குறிப் பிட்டிருப்பது இந்நூலின் சிறப்புக்கு ஒரு சான்றாகத் திகழ்கிறது.

இந்த நூலின் பெயரை வைத்துப் பார்க்கும்போது, பாகிஸ்தானைப் பற்றி மட்டுமே கூறும் நூலாகவே தோன்றக்கூடும். ஆனால் இந்நூல் இதற்கப்பாலும் செல்கிறது. இந்திய வரலாற்றையும் இந்திய அரசியலையும் அவற்றின் வகுப்புவாரி அம்சங்களில் பகுத்தாயும் ஒரு நூலாக அமைந்திருக்கிறது. இவ்வகையில், இந்நூல் பாகிஸ்தான் கோரிக்கையின் அடிப்படையையும் விளக்கிக்கூறுவதாக உள்ளது. பாகிஸ்தானைப் பற்றிய ஒரு வெறும் ஆய்வு நூலாக மட்டும் இல்லாமல் அதற்குமேலும் இது உயர்ந்து செல்கிறது. இந்திய வரலாற்றையும் இந்திய அரசியலையும் பற்றி இந்த நூலில் மிக அதிகமான, பெரிதும் பலதரப்பட்ட விவரங்கள், தகவல்கள் தரப்பட்டிருக்கின்றன. இந்த

அடிப்படையில் இதனை இந்திய அரசியல் களஞ்சியம் எனக் கூறினால் அது மிகையாகாது.

இந்த நூல் இந்துக்களின் வெறுப்பையும் அதேபோன்று முஸ்லீம்களின் வெறுப்பையும் சம்பாதித்துக் கொண்டுள்ளது. ஆனால் இந்துக்களின் வெறுப்புக்கான காரணங்களும் முஸ்லீம்களின் வெறுப் புக்கான காரணங்களும் வெவ்வேறானவை; முற்றிலும் முரண் பட்டவை. என் நூலுக்குக் கிட்டியுள்ள எதிர்ப்புக்காக நான் வருந்த வில்லை. இந்த நூலை இந்துக்களும் நிராகரிக்கிறார்கள். முஸ்லீம் களும் ஏற்க மறுக்கிறார்கள் என்றால் அது எதைக் காட்டுகிறது? அச்ச மின்றி, அசைக்கமுடியாதபடி உண்மை விவரங்களை எடுத்துரைக் கும் இந்நூல் பாரபட்சமற்றது, எந்த ஒரு தரப்பையும் ஒருசார்பாக முட்டுக் கொடுத்து ஆதரிக்காதது என்பதையே உள்ளங்கை நெல்லிக் கனி போல் பறைசாற்றுகிறது.

இந்நூலில் நான் எழுதியிருப்பது சிலரது மனத்தைப் புண்படுத்துவதாக இருப்பதால் அவர்கள் என்மீது வருத்தம் கொண் டிருக்கிறார்கள். உண்மையைக் கூறினால் மற்றவர்கள் மனம் வருந்து வார்கள் என்று அஞ்சி அதற்காக நான் ஒருபோதும் உண்மையை மூடிமறைத்ததில்லை. இந்த நெறிமுறையைப் பின்பற்ற வேண்டி யிருப்பதற்காக நான் பல சந்தர்ப்பங்களில் வருத்தப்பட்டதுண்டு. ஆனால் அதற்காக என்றுமே பச்சாதாபப்பட்டதில்லை. என்னால் மனம் புண்பட்டவர்கள் என் குறிக்கோளின் நேர்மையையும், தன் னலமின்மையையும் கருத்திற்கொண்டு என்னை மன்னிக்க வேண்டும். உணர்ச்சிவசப்படாமல், நடுநிலையோடு எழுதியிருப்பதாக நான் உரிமை கொண்டாடவில்லை என்றாலும் யாருக்கும் தீங்கு விளை விக்கும், கேடுசெய்யும் நோக்கத்தோடு எழுதவில்லை என்று உறுதி யாக நம்புகிறேன். ஓர் இந்தியன் தனது நாட்டைப் பற்றி பேசும் போதும் இன்றைய நிலைமையைப் பற்றி சிந்திக்கும்போதும் அமைதி யாக இருப்பது சாத்தியமல்ல. பாகிஸ்தான் பிரச்சினையைக் கையாள் வதில் முற்றிலும் துல்லியமான, அதேசமயம் நிலைமையை நான் காணும் அடிப்படையில் சிந்தனையைத் தூண்டும் ஒரு படப்பிடிப் பினை வழங்குவதே என் நோக்கமாக இருந்து வந்திருக்கிறது. இரு தரப்புகளிலும் நான் கண்ட வலுவான அம்சங்களையும், அதே போன்று பலவீனமான அம்சங்களையும் துணிச்சலாக எடுத்துரைத் திருக்கிறேன். பிடிவாதமான, மூர்க்கத்தனமான, நடைமுறை சாத்திய மற்ற, நாசகரமான ஒரு பாதையைப் பின்பற்றுவதன் மூலம் ஏற்படக் கூடிய கொடிய விளைவுகளைத் துலாம்பரமாகச் சுட்டிக்காட்டி யிருக்கிறேன்.

அரசு அதிகார சக்திகளுக்கும் அரசு எதிர்ப்பு தேசிய சக்திகளுக்கும் இடையேயான மோதல் சம்பந்தப்பட்ட வரலாற்றுச் சான்று மாறுபடக்கூடியதாக, நிலையற்றதாக, இப்படியும் அப்படியுமானதாக இருந்து வந்திருக்கிறது. பேராசிரியர் பிரைட்மான் கூறுவதாவது:[1]

''எவ்வகையிலும் கீழ்ப்படிய மறுக்கும் ஒரு தேசிய இனத்தை தன் ஆட்சியின்கீழ் வாழும்படி ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் நிர்ப்பந்தப்படாத எந்த ஒரு நவீன கால அரசுமே இல்லை எனலாம். ஸ்காட்லாந்தியர்கள், பிரிட்டானியர்கள், காட்லோனியர்கள், ஜெர்மானியர்கள், செக்கோஸ்லோவாகியர்கள், பின்லாந்தியர்கள் முதலான இன மக்கள் அனைவரும் அவர்களது விருப்பத்துடனோ அல்லது விருப்பமில்லாமலேயோ அதிக வலிமை வாய்ந்த ஓர் அரசின் அதிகாரத்தை ஏதேனும் ஒரு சமயத்தில் ஏற்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டவர்களே ஆவர். பிரிட்டன் அல்லது பிரான்சில் போன்று பலவந்தம் காரணமாக அரசு அதிகாரமும் தேசிய சக்திகளும் இணைந்து செயல்பட்ட சந்தர்ப்பங்களும் அனேகம் உண்டு. ஆனால் பல சமயங்களில், ஜெர்மனி, போலந்து, இத்தாலி, மத்திய ஐரோப்பிய நாடுகள், பால்கன் நாடுகள் போன்ற ஏராளமான நாடுகளில் தேசிய சக்திகள் அரசு அதிகாரத் தளைகளை உடைத்து நொறுக்கியெறிந்து, தங்களது சொந்த அரசுகளை நிறுவிக் கொண்டதையும் வரலாறு காட்டுகிறது.''

தேசியத்தை அடக்கி ஒடுக்குவதில் அரசே விவேகமின்றி ஈடுபட்டு, இறுதியில் அம்முயற்சியில் அழியநேரிட்ட நாடுகளின் அனுபவத்தைச் சென்ற பதிப்பில் சித்தரித்திருந்தேன். இந்தப் பதிப்பில் இதர பல நாடுகளின் இதற்கு நேர்மாறான அனுபவத்தை விவரித்திருக்கிறேன்; ஒன்றுபட்டு வாழும் விருப்பார்வம் மட்டும் இருந்தால், பல்வேறு வகுப்பினரும், இன்னும் சொல்லப்போனால் பலதரப்பட்ட தேசிய இனங்களும் ஒரே அரசின் அரவணைப்பில் இணக்கமுற வாழ்வது அசாத்தியமல்ல என்பதை இதில் தெளிவுபடக் காட்டியிருக்கிறேன். இரு தரப்புகளுக்கும் அறிவுரை கூறுவதில் அவசியமில்லாத முறையில் அதிக உணர்ச்சிகரமான பதங்களை நான் பயன்படுத்தி இருப்பதாகக் கூறக்கூடும். இதனைத் தக்க காரணத்

1. தேசிய அரசின் நெருக்கடி (1943), பக்கம். 4.

தோடுதான் செய்திருக்கிறேன். முடங்கிப்போன உடல் உறுப்புக்கு உயிர்ப்பூட்ட மருத்துவர் அதிர்ச்சி வைத்தியம் செய்வதில்லையா? அதேமுறையைத்தான் நான் கையாண்டிருக்கிறேன். நாட்டில் என்ன நடக்கிறது என்பது குறித்த விழிப்புணர்வை மெத்தனப் போக்குடைய ஆனால் தூங்கி வழியாத, சூதுவாதற்ற ஆனால் விவரம் தெரியாத சராசரி இந்தியனிடம் ஊட்டி வளர்க்கவே முயல்கிறேன். என் முயற்சிக்கு எதிர்பார்க்கும் பலன் கிட்டும் என்றே நம்புகிறேன்.

முதல் தொகுதியில் எப்படியோ, ஊடுருவிவிட்ட எல்லா அச்சுப்பிழைகளையும், எழுத்தர் அளவிலான பிழைகளையும் அகற்றுவதற்கும், இத்தகைய தவறுகள் நேராது இத்தொகுதியை வெளிக்கொணர்வதற்கும் பம்பாய் கால்சா கல்லூரியைச் சேர்ந்த பேராசிரியர் மனோகர் பி.சிட்னிசும், திரு.கே.வி. சித்ரேயும் அயராது சலியாது பாடுபட்டனர். அவர்களுக்கு நன்றி தெரிவிக்காமல் இந்த முகவுரையை முடிப்பது உசிதமாக இருக்காது. தவிரவும், இந்த நூலுடன் இணைக்கப்பட்டிருக்கும் அகரவரிசைத் தொகுப்பு அட்டவணை அதன் பயன்தன்மையை மேலும் அதிகப்படுத்தியுள்ளது. இத்தகைய அட்டவணையைத் தயாரித்து அளித்தமைக்காக பேராசிரியர் சிட்னிசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*ஜனவரி 1, 1945* *பி.ஆர். அம்பேத்கர்*
*22, பிரிதிவிராஜ் சாலை,*
*புதுடில்லி*

# முகவுரை

ஒரு நீண்ட அறிமுகத்துடன் ஆரம்பமாகும் இந்த ஆய்வுக் கட்டுரைக்கு ஒரு முகவுரை தேவையில்லை என்று கூறுவது சரியாக இருக்கலாம். ஆனால் இந்த ஆய்வுக்கட்டுரையின் இறுதியில் ஒரு முடிவுரை இணைக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கும்போது ஒரு கட்டுரையுடன் ஒரு முகவுரையைச் சேர்ப்பதுதான் நியாயமாக இருக்கும் என்று எண்ணினேன். இவ்வாறு நான் கருதியதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; முதலாவதாக, முடிவுரை என்று ஒன்றிருக்கும் போது அதற்கு இணையாக முகவுரை என்று ஒன்றிருப்பது அவசியம்; இரண்டாவதாக, இந்த ஆய்வுக்கட்டுரையின் தோற்றுவாய் பற்றித் தெரிந்துகொள்ள ஆர்வமுள்ளவர்க்குச் சில வார்த்தைகள் கூறுவதற்கும், இக்கட்டுரையில் எழுப்பப்பட்டிருக்கும் பிரச்சினைகளின் முக்கியத்துவத்தை வாசகர்களின் மனத்தில் ஆழப் பதிய வைப்பதற்கும் இந்த முகவுரை எனக்கு வாய்ப்பளிக்கிறது. சரி, இனி விஷயத்திற்கு வருவோம். பம்பாய் மாகாணத்தில் சுதந்திரத்தொழிற்கட்சி என்ற ஓர் அரசியல் நிறுவனம் கடந்த மூன்றாண்டுகளாக இயங்கி வருகிறது. இதன் சுருக்கப்பெயர் ஐ.எல்.பி. என்பது. இது பழமையான அமைப்பு ஒன்றுமல்ல; அரசியலில் பழம் தின்று கொட்டை போட்டது மல்ல. அதேசமயம் அது முதுமையடைந்து தளர்ந்து தள்ளாடும் நிலையிலும் இல்லை. ஏனைய பல அரசியல் நிறுவனங்களுடன் ஒப்பிடும்போது ஐ.எல்.பி. ஓர் இளமையான அமைப்பு; ஓரளவு சுறுசுறுப்புடன் செயல்பட்டுவரும் நிறுவனம். எந்த ஒரு தன்னலக் குழுவுக்கும் எவரது சுயநல நோக்கங்களுக்கும் அது 'லாலி' பாடுவதில்லை; யாருக்கும் அடிவருடியாக, அடிமையாக இருப்பதில்லை, இத்தகைய சீரும் சிறப்பும் பெற்றது ஐ.எல்.பி. அமைப்பு. லாகூரில் கூடிய முஸ்லீம்லீக் பாகிஸ்தானை உருவாக்குவது சம்பந்தமான தீர்மானம் ஒன்றை ஏற்றது. இதுதான் லாகூர் தீர்மானம் என்பது. இந்தத் தீர்மானம் ஏற்கப்பட்ட உடனேயே, பாகிஸ்தானை உருவாக்கும் இந்தத் திட்டம் சம்பந்தமாக எத்தகைய நிலையை, போக்கைக் கடைப்பிடிப்பது என்பதைப் பரிசீலிப்பதற்காக ஐ.எல்.பி. யின் நிர்வாகக்குழு கூடியது. பாகிஸ்தானை உருவாக்கும் யோசனைக்கு ஆதார அடிப்படையாக அமைந்திருக்கும் கருத்தைப் பொருத்தவரையில் நிர்வாகக்குழு எத்தகைய ஆட்சேபத்தையும் காணவில்லை. இன்னும் சொல்லப்போனால், பாகிஸ்தானை உருவாக்கும்திட்டம் இனவாரி அரசுகளை அமைத்து, வகுப்புப்பிரச்சினைக்குத் தீர்வு காண உதவும்

என்ற முறையில் இத்திட்டம் நிர்வாகக்குழுவை ஈர்த்துக் கவர்ந்தது என்று கூடக் கூறலாம். எனினும் பாகிஸ்தானை உருவாக்கும் பிரச்சினை குறித்து இந்தக் கட்டத்தில் ஒரு திட்டவட்டமான, தீர்மானமான கருத்தை வெளியிடுவது அத்தனை உசிதமல்ல, உகந்ததல்ல என்று குழு உணர்ந்தது. எனவே, இப்பிரச்சினையை ஆழமாக அலசி ஆராய்ந்து ஓர் அறிக்கை தயாரிப்பதற்காக ஒரு கமிட்டியை அமைப்பதென குழு தீர்மானித்தது. இக் கமிட்டியின் தலைவராக நான் நியமிக்கப்பட்டேன். ஐ.எல்.பி. யைச் சேர்ந்த முதல்வர் எம்.வி.தோந்தே, பி.ஏ., திரு.எஸ்.சி. ஜோஷி எம்.ஏ. எல்.எல்.பி, வழக்கறிஞர், (ஓ.எஸ்), எம்.எல்.சி; திரு. ஆர்.ஆர். போலே, பி.எஸ் சி., எல்.எல்.பி., எம்.எல்.ஏ., திரு.டி ஜி.ஜாதவ், பி.ஏ, எல்.எல்.பி., எம்.எல்.ஏ., திரு.ஏ.வி. சித்ரே பி.ஏ; எம்.எல்.ஏ.,ஆகியோர் கமிட்டியின் உறுப்பினர்களாக இருந்தனர். பம்பாய் மாநகராட்சி உறுப்பினர் திரு.டி.வி. பிரதான் கமிட்டியின் செயலாளராக செயல்பட்டார். பாகிஸ்தான் குறித்த ஓர் அறிக்கை தயாரிக்கும்படி கமிட்டி என்னைக் கேட்டுக்கொண்டது. அவ்வாறே நான் அறிக்கை தயாரித்தேன். ஐ.எல்.பி.யின் நிர்வாகக் குழுவிடம் அந்த அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது. இதன் பேரில் இந்த அறிக்கை பிரசுரிக்கப்படவேண்டுமென்று குழுமுடிவு செய்தது. தற்போது பிரசுரிக்கப்பட்டிருக்கும் ஆய்வுரைதான் இந்த அறிக்கை.

பாகிஸ்தானைப் பற்றி ஆய்வு செய்யும் மாணவன் தனது சொந்தமுடிவுக்கு வருவதற்கு உதவுவதே இந்த நூலின் நோக்கம். இந்த நோக்கத்தைக் கருத்திற்கொண்டு, இது சம்பந்தப்பட்ட தேவையான சகல தகவல்களையும் சேகரித்துத் திரட்டி இந்தத் தொகுதியில் தந்திருக்கிறேன்; இதுவன்றி 14 பின் இணைப்புகளையும் 3 தேசப்படங்களையும் இதில் இணைத்துள்ளேன். இவையாவும் இந்நூலுக்கு மேலும் செழுமை கூட்டும் என்பது என் கருத்து.

பின்கண்ட பக்கங்களில் தொகுத்துத் தந்திருக்கும் விஷயங்களை வாசகர்கள் கவனமாகப் படிப்பது மட்டும் போதாது; அது பற்றி அவர்கள் ஆழ்ந்து சிந்திக்கவும் வேண்டும். அதுமட்டுமல்ல, தமது தலைமுறையைச் சேர்ந்த ஆங்கிலேயர்களுக்கு கார்லைல் விடுத்த எச்சரிக்கையையும் அவர்கள் கருத்திற்கொள்ளவேண்டும். அவர் கூறினார்:

> ''சுழன்றடிக்கும் சூறாவளியை எதிர்த்து 'தனது வலிமைமிக்க இளமையைப் பறைசாற்றிக்கொண்டு' சிறகடித்துப் பறந்து செல்லும் ஒரு கழுகைப்போல் இங்கிலாந்தின் மேதாவிலாசம் உலகுக்கெல்லாம் அறைகூவல் விடுத்தவாறு கதிரவனை நோக்கி வானளாவ பறந்து செல்லும் காலம் மலையேறிவிட்டது. தனது

இரையிலேயே குறியாக உள்ள பேராசைப் பிடித்த நெருப்புக் கோழி மணலுக்குள் தனது தலையை நுழைத்துக்கொள்வது போல இங்கிலாந்தும் தவறான வாதங்களில் தலையை நுழைத்துக்கொண்டிருக்கிறது. என்றேனும் இதற்கு ஒரு நல்ல முடிவு ஏற்பட்டே தீரும். இந்த முடிவு மெதுவாக வரலாம்; ஆனால் அது தவிர்க்க முடியாததாகவே இப்போது தோன்று கிறது. கொழுத்த இரைக்கு ஆசைப்படும் நெருப்புக்கோழி எப்போதுமே மணலுக்குள் தன் தலையை நுழைத்துக் கொண் டிருக்க முடியாது. அது எப்படியும் தன் தலையை வெளியே எடுத்துத்தான் ஆக வேண்டும். அதேபோன்று தெய்வங்களும் மனிதர்களும் நம்மைத் தட்டியெழுப்புவதற்குள் நாம் விழித் தெழ வேண்டும்! ஆயிரமாயிரம் மடங்கு கடுமையான எச்ச ரிக்கையுடன் நமது முன்னோர்களின் குரல்கள் நம்மை விழித்துக் கொள்ளும்படி நமக்கு ஆணையிடுகின்றன.''

இந்த எச்சரிக்கை ஒரு சமயம் ஆங்கிலேயர்களுக்குப் பொருந் தியது போலவே, இன்றைய சந்தர்ப்பச் சூழ்நிலைமைகளில் இந்தியர் களுக்கும் பொருந்தும். இதனை கவனத்திற் கொள்ளவில்லை என்றால் அவர்களுக்கு இது ஆபத்தாகவே முடியும்.

இனி, இந்த அறிக்கையைத் தயாரிப்பதில் எனக்கு உதவி யவர்களைப் பற்றி, உறுதுணையாக இருந்தவர்களைப் பற்றி ஒரு வார்த்தை கூறவேண்டும். பரோடா கலாபுவனத்தைச் சேர்ந்த திரு.எம்.ஜி.திப்னிஸ் டி.சி.இ.யும் திரு.சாகன்லால் எஸ்.மோடியும் எனக்குப் பெரிதும் உதவியாக இருந்தனர். முன்னவர் தேசப் படங் களைத் தயாரிப்பதிலும் பின்னவர் கையெழுத்துப்படியைத் தட்டச் சடித்துத் தருவதிலும் உதவி செய்தனர். பிரதிபலன் எதிர்பாராது அன்பின் அடிப்படையில் அவர்கள் இந்தப் பணியைப் புரிந்தமைக் காக அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதேபோன்று, அச்சுப்பார்வைப் படிகளைத் திருத்துதல், அச்சடிப்பை மேற்பார்த்தல் ஆகிய மிகவும் சலிப்பூட்டும், சுவாரசியமற்ற பணியை மேற்கொண்ட என் நண்பர்கள் திரு. பி.ஆர். கத்ரேகருக்கும், திரு. கே.வி. சித்ரேக்கும் பிரேத்தியேகமாக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

28, டிசம்பர், 1940 **பி.ஆர். அம்பேத்கர்**
'ராஜகிருகம்'
தாதர், பம்பாய்-14.

# முன்னுரை

பாகிஸ்தான் சம்பந்தமான முஸ்லீம் லீகின் தீர்மானம் பல்வேறு பிரதிபலிப்புகளை ஏற்படுத்தியுள்ளது. உணர்ச்சி முனைப்புடைய ஒற்றுமை மற்றும் அதிகார உணர்வில் குழந்தைப் பருவத்தில் உள்ளவர்களைப் பெரிதும் பீடிக்கக்கூடிய ஒருவிதமான அரசியல் தட்டம்மை எனச் சிலர் இதனைக் கருதுகின்றனர். வேறு சிலர் இதனை முஸ்லீம் மனநிலையின் ஒரு தற்காலிக அம்சமாக அல்லாமல், நிரந்தர அம்சமாகவே எடுத்துக்கொண்டு, அதற்காகப் பெரிதும் கலக்கமடைகின்றனர்.

இது சர்ச்சைக்குரிய பிரச்சினை என்பதில் ஐயமில்லை. பிரச்சினை உயிர்நாடியானது; எனவே, இந்தச் சர்ச்சையில் ஒரு தரப்பு இன்னொரு தரப்புக்கு எதிராகப் பயன்படுத்தாத எந்த வாதமுமே இல்லை எனலாம். தனித்தனி அரசுகளின் கீழ் இந்தியாவை இரு நாடுகளாகத் துண்டாட வேண்டும் என்ற இந்தக் கோரிக்கை தங்களது கற்பனைக்கும் எட்டாததாக இருக்கிறது என்று சிலர் வாதிக்கின்றனர்; காலகாலமாக, நூற்றாண்டு நூற்றாண்டுகளாக ஒன்றுபட்டிருந்த ஒரு நாட்டின் ஒற்றுமையைத் திட்டமிட்டுக் குலைப்பதற்குச் செய்யப்படும் இந்த முயற்சிகண்டு வேறுசிலர் கோபாவேசமடைந்து கொதித்துப் போயுள்ளனர்; இந்தப் பொங்கும் வெஞ்சினம் தங்கள் எண்ணங்களைச் சொற்களில் வெளியிடாதபடி அவர்களைத் தடுக்கிறது. இதை அத்தனைப் பெரிதாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை என்று வேறு சிலர் கருதுகின்றனர்; இதனை ஓர் அற்ப விஷயமாக எடுத்துக்கொள்கின்றனர்; இதற்கு ஆதரவாக சில உவமானங்களையும் உவமேயங்களையும் எடுத்துரைக்கின்றனர்; ''தலை வலிக்கிறது என்பதற்காக யாரும் தலையை வெட்டிவிடுவதில்லையே'', ''ஒரு குழந்தையின் தாய் யார் என்ற சண்டையில் இரு பெண்கள் ஈடுபட்டிருக்கும்போது, யாரும் குழந்தையை இரண்டு துண்டாக வெட்டிவிடுவதில்லையே'' என்றெல்லாம் கூறி பாகிஸ்தான் கோரிக்கை நகைப்புக்கிடமானது என்று இவர்கள் வாதிடுகின்றனர். முற்றிலும் உணர்ச்சிவசப்பட்ட சூழ்நிலையில் நடைபெறும் ஒரு சர்ச்சையில் பரிவுணர்வைவிடத் திகைப்பும், வெளிச்சத்தை விட வெப்பமும், கருத்தாழத்தை விடக் கேலிக்கூத்தும் மிகுந்திருப்பதை நடுநிலை மனோபாவம் கொண்ட ஒருவர் காண்பதில் வியப்பேதும் இல்லை.

இந்தப் பிரச்சினையில் எனது நிலை விசித்திரமானது ஒன்று

கூடிய வெறும் அரசியல் குழப்பத்தின் விளைவாக தோன்றியதே இந்தப் பாகிஸ்தான் கோரிக்கை என்று நான் நினைக்கவில்லை. நிலைமையை நான் புரிந்துகொண்டவரை, உடலின் ஓர் உறுப்பு எவ்வாறு ஓர் இயல்பை வளர்த்துக்கொள்கிறதோ அவ்வாறே முஸ்லீம் அரசியலும் ஓர் இயல்பை, குணத்தை உருவாக்கிக் கொண்டிருப்ப தாகவே எனக்குத் தோன்றுகிறது. இது நிலைத்து நிற்குமா, நிற்காதா என்பது இந்துக்களுக்கும் முசல்மான்களுக்கும் இடையேயான ஜீவ மரணப் போராட்டத்தில் செயல்படக்கூடிய சக்திகளைப் பொறுத் துள்ளது. பாகிஸ்தான் பிரச்சினையில் நான் எத்தகைய தடுமாற்றமும் கொள்ளவில்லை; அது குறித்து நான் சீற்றமும் அடையவில்லை; உவமானங்களையும் உவமேயங்களையும் அடுக்கடுக்காக எடுத்துக் கூறி இப்பிரச்சினையைத் தகர்த்துவிட முடியும் என்றும் நான் நம்பவில்லை. அவ்வாறு உவமானங்களால் இப்பிரச்சினைக்கு முடிவு கட்டிவிடமுடியும் என்று நம்புபவர்கள் ஓர் அபத்தத்தை எதுகை மோனையுடன் கூறுவதால் அது அர்த்தமுடையதாகிவிடாது என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். எந்த விஷயத்தையும் மனத்தில் ஆழப்பதிய வைக்கும் சக்தி ஓர் உருவகத்துக்கு, உவமானத்துக்கு இருந் தாலும் அது அசைக்க மறுக்கமுடியாத வலுவான வாதமாகி விட முடியாது. 90 சதவீத இந்திய முஸ்லீம்களின் உணர்ச்சிகளை ஆதார மாக, பக்கபலமாகக் கொண்ட ஒரு திட்டத்தை முன்பின் யோசிக் காமல் அப்பட்டமாக நிராகரிப்பது விவேகமுமல்ல, சாத்தியமுமல்ல என்று நான் கருதுகிறேன். பாகிஸ்தான் பிரச்சினையை அதன் எல்லா அம்சங்களிலும் ஆழமாக ஆராய்வதும், அதன் தாத்பரியங்களை, கருத்துக்களைத் தீர்க்கமாகப் புரிந்துகொள்வதும், அதனடிப்படையில் இந்தப் பிரச்சினை குறித்து ஒருவிவேகமான முடிவுக்கு வருவதுமே சரியான, முறையான போக்காக இருக்க முடியும் என்பதில் எள்ளள வும் ஐயமில்லை.

இவற்றையெல்லாம் நோக்கும் வாசகர் நிச்சயமாகப் பின்வருமாறு கேட்கவே செய்வார்: ஆரோக்கியத்தின் பொருட்டு அந்தந்தப் பருவத்திற்குரிய கனிகளைச் சாப்பிடுவது அவசியம் என்பது போன்று, பாகிஸ்தான் பற்றிய இந்த நூலும் படித்தற்கேற்றது தானா, காலத்துக்குரியதுதானா, இன்றைய சூழ்நிலைக்கு ஏற்புடையது தானா? இது காலத்திற்கேற்றது என்றால் படிப்பதற்கு தகுதியானது தானா? இவை இயல்பான, சரியான கேள்விகள். வாசகர்களைக் கவரும் நோக்கம் கொண்ட எந்த ஒரு நூலாசிரியரும் இந்தக் கேள்வி களுக்குப் பதிலளிப்பதற்கு முன்னுரையைப் பயன்படுத்திக் கொள்ளவே செய்வார்.

நூலின் காலப் பொருத்தத்தைப் பொறுத்த வரையில் எத்தகைய ஐயத்துக்கும் இடமில்லை. இந்தியர்களேகூட இந்தியாவைப் பார்க்கும் முறை, அதனை நோக்கும் பாங்கு கடந்த 20 ஆண்டுகளில் முற்றிலுமாக மாறியிருக்கிறது. பேராசிரியர் அர்னால்டு டாய்ன்பி 1915 ஆம் ஆண்டில் பின்வருமாறு எழுதினார்:

'பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டிஷ் ராஜதந்திரம் இந்தியாவை ஒரு 'தூங்கும் அழகியாக'க் கருதிவந்தது; அவள் துயிலெழும்போது கைப்பிடிக்கும் உரிமை தனக்கு உண்டு என்றும் பிரிட்டன் எண்ணி வந்தது; எனவே, அவள் படுத்திருந்த தோட்டத்தைச் சுற்றிலும் ஒரு முள்வேலியை எழுப்பியிருந்தது; அடுத்துள்ள பாலைவனத்தில் சுற்றித் திரியும் கொள்ளைக்காரர்களிடமிருந்து அவளைப் பாதுகாப்பதற்காகவே இந்த ஏற்பாட்டைச் செய்திருந்தது. இப்போது இளவரசி துயிலெழுந்துவிட்டாள்; தனக்கு இஷ்டமானவர்களைத் தான் கைப்பிடிப்பேன் என்று உரிமை கொண்டாடுகிறாள். இதே சமயம் கொள்ளைக்காரர்கள் மதிப்பிற்குரிய கனவான்களாகி விட்டனர்; கடுமையாக உழைத்துப் பாலைவனத்தைச் சோலைவனமாக்கியும் விட்டனர்; ஆனால் பிரிட்டிஷார் எழுப்பிய முள்வேலி அவர்களுக்குப் பெரும்தடையாக இருக்கிறது. இந்த வேலியை அகற்றும்படி அவர்கள் பண்போடு கேட்டுக் கொள்ளும்போது, அதற்கு நாம் இணங்கித்தான் ஆகவேண்டும்; ஏனென்றால் இதற்கான பலம் தங்களுக்கு வந்துவிட்டதாக அவர்கள் உணரும்போதுதான் இக் கோரிக்கையை முன் வைப்பார்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது; அவர்களது இக்கோரிக்கையை ஏற்க நாம் மறுத்தால் இந்திய இளவரசியின் அனுதாபம், பரிவு நமக்குக் கிட்டாது. இப்போது அவள் விழித்துக் கொண்டுவிட்டாள்; அக்கம் பக்கத்திலுள்ளவர்களிடையே சென்று நடமாடவும் அவர்களுடன் நெருங்கிப் பழகவும் விரும்புகிறாள்; அவர்களது புகழ்ச்சிகளையும் முகத்துதிகளையும் அதேபோன்று அவர்களது அச்சுறுத்தல்களையும் நமது ஆதரவு இல்லாமலேயே சமாளித்துக்கொள்ளக் கூடிய வலிமை தனக்கு வந்துவிட்டதாக உணர்கிறாள்; தோட்டத்திலேயே தன்னை அடைத்துவைத்திருக்கும் இந்த முள்வேலி பற்றி அவர்களைப் போன்றே இவளும் அலுப்பும் சலிப்புமடைந்து போயிருக்கிறாள்.''

னோமானால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஆன்மீக சகோதரத்துவத்திலிருந்து பிரிந்து செல்ல இந்தியா ஒருபோதும் விரும்பாது; ஆனால் அதேசமயம் அவள் மேன்மேலும் அதிக சுதந்திர வாழ்க்கையை நடத்துவதும், தன்னுடைய அண்டை அயலார்களுடன் நேரடி உறவுகளை ஏற்படுத்திக்கொள்வதில் ஆங்கிலோ- சாக்ஸன் காமன்வெல்த்துகளின் உதாரணத்தைப் பின்பற்றுவதும் தவிர்க்க முடியாதது.''

இந்த எழுத்தாளர் ஆங்கிலேயராயினும், 1915ல் அவர் வெளியிட்ட இந்தக் கருத்தே சாதிமதபேதமின்றி அனைத்து இந்தியர்களும் பொதுவாகக் கொண்டுள்ள கருத்தாகும். பேராசிரியர் டாய்ன்பியின் ''தூங்கும் அழகியான'' இந்தியா இப்போது துயிலெழுந்துவிட்ட நிலையில், அவளைப்பற்றி இந்தியர்கள் கருத்து என்ன? இந்தத் தூங்கும் அழகி கடந்த சில ஆண்டுகளாக நடந்துகொண்டுவரும் முறைகளைக் கூர்ந்து கவனித்து வருபவர்கள் இந்தத் தேவதை எப்படி இருக்க வேண்டுமென்று எதிர்ப்பார்க்கப்பட்டாளோ அப்படியில்லாமல் முற்றிலும் வேறுபட்டவளாக, விசித்திரமானவளாக இருப்பதைக் காண்கின்றனர். அவள் இரட்டைக் குணங்கள் கொண்ட பித்துப்பிடித்த ஒரு மங்கையாக, அரை மனிதத்தன்மையும் அரை மிருகத்தன்மையும் கொண்டவளாகக் காட்சியளிக்கிறாள்; அவளது இரண்டு இயல்புகளும் நிரந்தரமாக முரண்பட்டிருப்பதால் எப்போதுமே குழப்பத்தில், கொந்தளிப்பில், கலக்கத்தில் மூழ்கிப் போய் இருக்கிறாள். அவளது இரட்டை இயல்புகள் பற்றி ஏதேனும் ஐயம் இருக்குமானால், இந்தியாவை பாகிஸ்தான், இந்துஸ்தான் என இரண்டாகத் துண்டாட வேண்டும் என்ற முஸ்லீம் லீகின் தீர்மானத்தின் மூலம் அந்த ஐயம் இப்போது அகற்றப்பட்டுவிட்டது; இரட்டை இயல்புகளின் விளைவாய் ஏற்படும் இந்தக் குழப்பங்கள், கலக்கங்கள், யாவும் இனி என்றென்றைக்குமாக மறைந்து விடலாம்; இந்துக்களும் முஸ்லீம்களும் பரஸ்பரம் ஒருவரிடமிருந்து ஒருவர் விடுபட்டு, தத்தமது கலாசாரங்களுக்கும் பண்பாடுகளுக்கும் இசைந்த முறையில் தனித் தனி தாயகங்களில் வாழலாம்.

பாகிஸ்தானை உருவாக்கும் திட்டம் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட வேண்டிய ஒரு திட்டம் என்பதில் ஐயமில்லை. இந்தத்

திட்டம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று முஸ்லீம்கள் வற்புறுத்துவார்கள். அரசியல் அதிகாரத்தை மாற்று வதற்குத் தாங்கள் ஒப்புக்கொள்வதற்கு முன்னர் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே ஏதேனும் ஒரு வகையான உடன்பாடு ஏற்பட வேண்டும் என்று பிரிட்டிஷார் வலியுறுத்துவார்கள். அதிகார மாற்றத்திற்கு ஒரு நிபந்தனையாக இத்தகைய ஓர் உடன்பாட்டை பிரிட்டிஷார் வற்புறுத்துவதற்காக அவர்களைக் குறைகூறுவதில் பயனில்லை. ஏனென்றால் வலுவான இந்து பெரும்பான்மையின ருக்கு அதிகாரத்தை மாற்றுவதற்கும், அவர்களைத் தங்களது வாரிசு களாக்குவதற்கும், அவர்கள் சிறுபான்மையினரைத் தங்கள் விருப்பம் போல் நடத்துவதற்கும் பிரிட்டிஷார் சம்மதிக்கமுடியாது. அது ஏகாதிபத்தியத்துக்கு முடிவு கட்டுவதாகாது. மற்றொரு ஏகாதிபத்தி யத்தை உருவாக்குவதாகத்தான் அது இருக்கும். ஆகவே, பாகிஸ் த''னுடனான மோதலை இந்துக்கள் எவ்வகையிலும் தவிர்க்க முடியாது.

பாகிஸ்தான் திட்டத்தை ஒதுக்கித் தள்ளிவிட முடியாத நிலைமையில், அதனைப் பற்றிப் பரிசீலிக்க வேண்டுமானால் சில முக்கிய கருத்துகளை மனத்திற் கொள்ளவேண்டும்.

முதலாவதாக, இந்துக்களும் முஸ்லீம்களும் இந்தப் பிரச்சினையைத் தங்களுக்குள்ளாகவே தீர்த்துக் கொள்ள வேண்டும். இதில் அவர்கள் வேறு எவரது உதவியையும் நாட முடியாது. அதிலும் குறிப்பாக அவர்களுக்காக பிரிட்டிஷார் இதனைத் தீர்மானிக்க இயலாது. சாம்ராஜ்யக் கண்ணோட்டத்தி லிருந்து பார்க்கும்போது, இந்தியா பிளவுபடாத ஒரே நாடாக இருந்தாலும் சரி, அல்லது பாகிஸ்தான், இந்துஸ்தான் என்று இரு பகுதிகளாகத் துண்டாடப்பட்டாலும் சரி, அல்லது காங்கிரஸ் திட்டத்தின்படி இருபது மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட் டாலும் சரி இவையாவும் சாம்ராஜ்யத்திற்குள் திருப்தியாக வாழும் வரை பிரிட்டிஷாருக்கு அதுபற்றி எந்தக் கவலையும் இல்லை. இத்தகைய பிரதேசப் பிரிவினைகளினால் தங்கள் நலன் பாதிக்கப் படவில்லை என்கிறபோது அவர்கள் எவ்வகையிலும் தலையிட மாட்டார்கள்.

தவிரவும், பாகிஸ்தானை அடக்கி ஒடுக்குவதற்கு பிரிட்டிஷார் வன்முறையைப் பயன்படுத்துவார்கள் என்று இந்துக்கள் நம்பிக் கொண்டிருந்தால் அது சாத்தியமல்ல. ஏனென்றால், முதலாவதாக, பலாத்காரம் ஒரு பரிகாரமாகாது. அமெரிக்கக் காலனிகளுக்கு அதிகாரப் பலாத்காரம் பயன்படுத்தப்பட்டது சம்பந்தமாக நீண்ட காலத்திற்கு முன்னர் பர்க் நிகழ்த்திய தமது உரைகளில் வன்முறையும் எதிர்ப்பும் பயனற்றவை என்பதைச் சுட்டிக்காட்டினார். அவருடைய மறக்கவெண்ணாத சொற்களை இந்து மகாசபையின் நலன் கருதி மட்டுமின்றி, அனைவரது நலன் கருதியும் இங்கு மேற்கோள் காட்டுவது பொருத்தமாக இருக்கும் என்று நம்புகிறேன். அவர் கூறியதாவது:

> ''எந்தப் பிரச்சினையிலும் வன்முறையைப் பயன்படுத்துவது மட்டுமே பரிகாரமாகாது; அது தற்காலிகமானதுதான்; வேண்டுமானால் ஒரு கணத்துக்கு அது தாக்குப்பிடித்து நிற்கலாம். அப்படியும் மீண்டும் அடக்கி ஒடுக்கும் அவசியத்தை அது அகற்றி விடுவதில்லை. நிரந்தரமாக வலிமையினால் வென்று அடிமைப்படுத்தப்படும் ஒரு தேசம் ஆளப்பட முடியாது. வன்முறைக்கு எதிராகக் கூறப்படும் மற்றொரு ஆட்சேபத்தை இங்கு குறிப்பிடவேண்டும். அது நிச்சயமற்ற தன்மை என்பது. கொடுங்கோன்மை எப்போதுமே வலிமையுடன் இருப்பதில்லை; படைக்கலங்கள் மட்டுமே வெற்றியைத் தந்துவிடாது. வெற்றிபெறவில்லை என்றால் உங்களுக்கு வேறுவழி இல்லாது போய்விடுகிறது; ஏனெனில் சமரசம் தோல்வியடையும்போது வன்முறை இருக்கிறது; ஆனால் வன்முறை தோற்றாலோ சமரசம் ஏற்படும் என்ற நம்பிக்கைக்கு இடமே இல்லை. வலிமையும் அதிகாரமும் சில சமயங்களில் அன்பால் பெறப்படுகின்றன. ஆனால், தோல்வியுற்ற, வலுக்குறைந்த வன்முறையைக் கொண்டு பிச்சை கேட்பது போன்று அவற்றை மன்றாடிப் பெறமுடியாது. வன்முறைக்கு மேலும் ஓர் ஆட்சேபமும் இருக்கிறது. அதனை நிலைநாட்டும் முயற்சியே அதன் குறிக்கோளை ஊறுபடுத்திவிடுகிறது. நீங்கள் எதற்காகப் போராடுகிறீர்களோ அதைப்பெறுவதில்லை. மாறாக இந்தப் போட்டியில் நீங்கள் மதிப்பிழந்து, சிறுமைப்பட்டு, தேய்ந்து நலிந்து, சலித்துக் களைத்து மிகுந்த வேதனை கொள்கிறீர்கள்.''

வன்முறை என்பது பாகிஸ்தானுக்கு ஒரு மாற்று அல்ல; எனவே அது நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று.

மேலும், சுயநிர்ணய உரிமைக் கோட்பாட்டின் பலனை முஸ்லீம்களுக்கு மறுக்கமுடியாது. ஏனென்றால் இதே சுயநிர்ணய உரிமைக்கோட்பாட்டைத்தான் இந்து தேசியவாதிகள் தங்களுக்கு ஆதாரபலமாகக் கொண்டிருக்கிறார்கள்; மிகச் சின்னஞ்சிறு ஐரோப்பிய தேசங்களுக்கு எல்லாம்கூட உலகமனச்சாட்சி இந்த உரிமையை வழங்கியிருக்கும்போது, இந்தியாவுக்கு மட்டும் பிரிட்டன் எவ்வாறு இந்த உரிமையை மறுக்கமுடியும் என்று கேட்கிறார்கள். அப்படி யிருக்கும்போது இந்த உரிமையை ஏனைய சிறுபான்மையினருக்கு மறுக்கவேண்டும் என்று அவர்கள் பிரிட்டிஷாரை எவ்வாறு கேட்க முடியும். பாகிஸ்தானைக் கைவிடும்படி முஸ்லீம்களைப் பிரிட்டன் நிர்ப்பந்திக்க வேண்டும் என்று இந்திய தேசியவாதிகள் எதிர்ப்பார்க் கின்றனர்; ஆனால் இங்கு அவர்கள் ஒரு விஷயத்தை மறந்து விடு கின்றனர்; அதாவது, ஆதிக்கவெறிகொண்ட ஓர் அந்நிய ஏகாதிபத் தியத்திடமிருந்து சுதந்திரம் பெறுவதற்கு தேசியத்திற்குள்ள உரிமை யும், ஆதிக்க மனப்பான்மை கொண்ட பெரும்பான்மையினரின் தேசியத்திலிருந்து சுதந்திரம் பெறுவதற்கு சிறுபான்மையினருக்குள்ள உரிமையும் இரண்டு வெவ்வேறான விஷயங்களல்ல என்பதை அவர்கள் மறந்துவிடுகின்றனர்; முதலாவதாகக் குறிப்பிடப்பட்ட உரிமை இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்ட உரிமையை விடவும் எவ்வகையிலும் மிகவும் புனிதமானதல்ல என்பதையும் அவர்கள் மறந்துவிடுகின்றனர். இவை இரண்டுமே சுதந்திரப் போராட்டத்தின் இரு அம்சங்களாகும்; இவ்வகையில் இவை இரண்டும் அவற் றின் தார்மிக உட்பொருளில் சமத்துவ முக்கியத்துவம் வாய்ந்தவை. ஆதிக்க வெறிகொண்ட ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுதலை பெறும் பொருட்டு போராடிவரும் தேசியவாதியின் ஆதிக்க மனோபாவங் கொண்ட பெரும்பான்மையினரது தேசியத்தின் பிடியிலிருந்து விடு படுவதற்கு சிறுபான்மையினருக்குள்ள உரிமையைக் குலைப்ப தற்குப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளின் உதவியை நாடமுடியாது. எனவே இந்தப் பிரச்சினைக்கு முஸ்லீம்களும் இந்துக்களும்தான் தங்களுக்குள் தீர்வு காணவேண்டும். அவர்களுக்காகப் பிரிட்டிஷார் இப்பிரச்சினைக்கு முடிவுகாணமுடியாது. இது கவனத்திற் கொள்ள வேண்டிய முதல் முக்கியமான விஷயமாகும்.

இந்தியா முழுவதிலும் மேலாதிக்கம் செலுத்தக்கூடிய ஒரே மத்திய அரசாங்கம் அமைக்கப்படுவதை எதிர்ப்பதே பாகிஸ்தான் கோரிக்கையின் சத்தும் சாராம்சமும் எனலாம். பாகிஸ்தானுக்கு ஒன்றும், இந்துஸ்தானுக்கு ஒன்றுமாக இரண்டு மத்திய அரசாங்கங்கள் அமைக்கப்பட வேண்டுமென்று முஸ்லீம்கள் கோருகின்றனர். இது

இந்துக்கள் கருத்திற் கொள்ள வேண்டிய இரண்டாவது முக்கிய விஷயம். புதிய அரசியலமைப்புச் சட்டத்திற்கான திட்டங்கள் வகுக்கப் பட்டு, அதற்கான அடித்தளங்கள் இடப்படுவதற்கு முன்னதாக பாகிஸ்தான் பிரச்சினை தீர்க்கப்பட வேண்டும் என்பதே இதன் பொருள். இந்தியாவுக்கு ஒரே மத்திய அரசாங்கம் மட்டுமே இருக்க வேண்டுமாயின் அதற்கான அரசியல் அமைப்புச் சட்டத்தின் உருவரை ஒருவிதமானதாக இருக்கும்; ஆனால் இந்துஸ்தானுக்கு ஒரு மத்திய அரசாங்கமும் பாகிஸ்தானுக்கு ஒரு மத்தியஅரசாங்கமும் என்றிருக்க வேண்டுமாயின் அப்போது அதற்கான அரசியலமைப்புச் சட்டத்தின் உருவரை வேறுபட்டதாக இருக்கும். ஆதலால் இது விஷயத்தில் முடிவை ஒத்திப்போடுவது பெரிதும் விவேகமற்றதாகும். ஒன்று பாகிஸ்தானை உருவாக்கும் திட்டம் கைவிடப்பட்டு, பரஸ்பர உடன்பாட்டின்பேரில் மற்றொரு திட்டம் வகுக்கப்படவேண்டும் அல்லது இதுகுறித்து ஒரு திட்டவட்டமான முடிவுக்கு வரவேண்டும். அவ்வாறில்லாமல், பாகிஸ்தான் கோரிக்கையை இப்போதைக்குக் குழிதோண்டிப் புதைத்துவிட்டால், மீண்டும் அது ஒருபோதும் தலைதூக்காது என்று நினைப்பது மடமையிலும் மடமையாகும்; கடைந்தெடுத்த அறிவீனமாகும். பாகிஸ்தானைப் புதைப்பது என்பதும் பாகிஸ்தான் பூதத்தைப் புதைப்பது என்பதும் ஒன்றல்ல. இந்தியாவுக்கு ஒரே ஒரு மத்திய அரசாங்கம் என்னும் திட்டத்தைக் கடுமையாக எதிர்ப்பதே பாகிஸ்தான் கோரிக்கையின் ஆதார அடித் தளமாகும்; இந்த வக்கிரமான எதிர்ப்பு நீடிக்கும்வரை பாகிஸ்தான் பூதமும் இருந்து வரவேசெய்யும்; இந்தியாவின் அரசியல் எதிர் காலத்தின்மீது அது தனது தீயகரும்நிழலைப் பரப்பிவரவே செய்யும். இதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இப்போதைக்கு ஏதேனும் ஒரு தாற்காலிக ஏற்பாடு செய்துகொண்டு, பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காணுவதைப் பின்னொரு நாளைக்கு ஒத்திப்போடுவது அறி வுடைமையாகாது. இவ்வாறு செய்வது நோயைக் குணப்படுத்தாமல் அதன் அறிகுறிகளை மட்டும் அகற்றுவதற்கு ஒப்பாகும். இத்தகைய நிலைமையில் பல சந்தர்ப்பங்களில் என்ன நடைபெறுகிறது? நோய் தாற்காலிகமாக சற்றுத் தணிந்து, மீண்டும் கொடிய ரூபத்தில் அது தலைதூக்குவதைப் பார்க்கிறோம்.

இந்தியாவுக்கு ஒரே ஒரு மத்திய அரசாங்கம்தான் இருக்க வேண்டும் என்பது தீர்மானிக்கப்பட்டுவிட்ட விஷயமல்ல என்று நான் உறுதியாக நம்புகிறேன்; அது தற்போது சர்ச்சையிலுள்ள விவாதத்திலுள்ள ஒரு விஷயம்; அது தற்போது மிகவும் சூடான

பிரச்சினையாக இல்லாவிட்டாலும்கூட என்றேனும் ஒருநாள் அது விசுவரூபம் எடுக்கும் என்பது நிச்சயம்.

இந்தியாவுக்கு எத்தகைய மத்திய அரசாங்கமும் உருவாக்கப் படுவதைத் தாங்கள் விரும்பவில்லை என்று முஸ்லீம்கள் அறிவித் திருக்கிறார்கள்; இதற்கான காரணங்களை மிகத் தெள்ளத்தெளிவாக, எத்தகைய ஐயப்பாட்டுக்கும் இடமில்லாத வகையில் தந்துள்ளார்கள். முஸ்லீம்கள் மிகப்பெரும் எண்ணிக்கையில் இருக்கும் ஐந்து மாகா ணங்களை இனம் காணுவதில் அவர்கள் வெற்றி கண்டுள்ளார்கள். இந்த மாகாணங்களில் முஸ்லீம்கள் ஓர் அரசாங்கத்தை நிறுவும் சாத்தியக்கூறைக் காண்கிறார்கள்; இந்த மாகாணங்களில் அமைக்கப் படும் முஸ்லீம் மாகாணங்களின் சுதந்திரம் பாதுகாக்கப்படவேண்டும் என்பதில் ஆர்வமும் அக்கறையும் கொண்டவர்களாக இருக்கிறார்கள். இத்தகைய கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, மத்திய அரசாங்கம் என்பது இந்திய முஸ்லீம்களின் கண்களை உறுத்து வதாக இருக்கிறது; அவர்களுக்கு வெறுப்பூட்டுவதாக இருக்கிறது; தங்களுடைய முஸ்லீம் மாகாணங்கள் இந்துப் பெரும்பான்மை யினரின் மத்திய அரசாங்கத்துக்குக் கீழ்ப்பட்டிருக்கும் காட்சியையும், மேற்பார்வை அதிகாரம் பெற்ற அந்த அரசாங்கம் இந்த முஸ்லீம் மாகாணங்களின் நிர்வாகத்தில் தலையிடும் காட்சியையும் முஸ்லீம் கள் உருவகித்துக் காண்பதே இதற்குக் காரணம். இந்தியா முழுவதற்கும் ஒரே மத்திய அரசாங்கம் என்னும் யோசனையை ஏற்பது முஸ்லீம் மாகாண அரசாங்கங்களை இந்து மத்திய அரசாங்கத்தின் ஆதிக்கத்திற்கு உட்படுத்துவதற்கு சம்மதிப்பதையே குறிக்கும் என்று முஸ்லீம்கள் நினைக்கின்றார்கள்; மேலம், முஸ்லீம் மாகாணங்களை உருவாக்கு வதால் கிட்டும் ஆதாயம் மத்தியிலுள்ள இந்து அரசாங்கத்தின் ஆதிக் கத்துக்கு இம் மாகாணங்களை உட்படுத்துவதன் மூலம் இழக்கப் பட்டுவிடும் என்றும் முஸ்லீம்கள் அஞ்சுகிறார்கள். இந்தியாவில் மத்திய அரசாங்கமே இல்லாதிருப்பதுதான் இந்துக்களின் கொடுங்கோல் மத்திய ஆட்சியிலிருந்து முஸ்லீம்கள் தப்புவதற்கான வழியாக அவர்கள் காண்கின்றனர்.[1]

ஒரு மத்திய அரசாங்கம் ஏற்படுவதை முஸ்லீம்கள் மட்டும் தானா எதிர்க்கிறார்கள்? இந்துக்களின் நிலை என்ன? இந்தியாவில் அரசியல் சட்ட அமைப்பின் ஒரு நிரந்தரமான பகுதியாக இந்தியா

1. இந்தக் கருத்தைத்தான் மூன்றாவது வட்டமேசை மாநாட்டில் சர் முகமது இக்பால் முன்வைத்தார்.

வுக்கு எப்போதுமே ஒரு மத்திய அரசாங்கம் இருக்கவேண்டும் என்பது குறித்து நடைபெற்றுவரும் எல்லா அரசியல் விவாதங்களுக்கும் அடிப்படையாக ஒரு மௌனமான கோட்பாடு இருந்து வருவதாகத் தோன்றுகிறது. ஆனால் இந்தக் கோட்பாட்டைப் பற்றித் திட்டவட்டமாக எதையும் என்னால் கூறமுடியாது. எனினும் இந்தக் கோட்பாட்டில் இரண்டு அம்சங்கள் அடங்கியுள்ளன என்பதையும், இப்போதைக்கு அவை செயலற்றவையாக இருந்தாலும் என்றைக்கேனும் ஒரு நாள் அவை ஆதிக்கநிலைபெற்று, மத்திய அரசாங்கம் அமைக்கும் யோசனை யிலிருந்து இந்துக்களைப் பின்வாங்கச் செய்யும் என்பதை யும் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இவற்றில் முதலாவது அம்சம் இந்து மாகாணங்களிடையே இயல்பாக நிலவும் கலாசார முரண்பாடாகும். இந்து மாகாணங்களை ஒரு மகிழ்ச்சிகரமான குடும்பம் என்று கூறி விடுவதற்கில்லை. வங்காளிகளிடமோ, ராஜபுத்திரர்களிடமோ அல்லது மதராசிகளிடமோ சீக்கியர்களுக்கு எத்தகைய பரிவும் கனிவும் இருப்பதாகப் பாசாங்கு செய்ய முடியாது. வங்காளி தன்னை மட்டுமே நேசிக்கிறான். மதராசியோ தனது சொந்த உலகில் கட்டுண்டு கிடக்கிறான். மராட்டி யனோ, இந்தியாவில் முஸ்லீம் சாம்ராஜ்யத்தை ஒழித்துக்கட்டு வதற்குப் புறப்பட்ட மராட்டியர்கள் ஏனைய இந்துக்களுக்கு ஆபத்தான வர்களாக மாறியதையும், அவர்களை ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக் காலம் தங்களது அடிமை நுகத்தடியின்கீழ் அடக்கி ஒடுக்கி வைத்திருந் ததையும் நினைவு கூறுவதில்லை. இந்து மாகாணங்களிடையே பொதுவான மரபுகள், சம்பிரதாயங்கள் ஏதும் இல்லை; அவற்றைக் கட்டுப்படுத்தும் நலன்களும் இல்லை. மறுபுறம், மொழி, இன வேற்றுமைகளும், கடந்தகால சண்டைச் சச்சரவுகளும் பிணக்குகளும் அவற்றைப் பிரிக்கும் வலிமை வாய்ந்த சக்திகளாக இருந்து வந்திருக் கின்றன. இத்தனைக்கிடையேயும் இந்துக்கள் ஒன்றுபட்டு வருகிறார்கள் என்பதும் ஓர் ஐக்கிய தேசமாக மலர வேண்டும் என்ற உணர்வு அவர்களிடையே மேலோங்கிவருகிறது என்பதும் உண்மை. எனினும் அவர்கள் இன்னும் ஒரு தேசமாகப் பரிணமிக்கவில்லை என்பதை மறந்துவிடக்கூடாது. அவர்கள் ஒரு தேசமாக உருவாகும் இயக்க நிகழ்வில் இருந்துவருகிறார்கள். இந்த இயக்க நிகழ்வு பூர்த்தியடை வதற்கு முன்னர், ஒரு பின்னடைவு ஏற்பட்டு, ஒரு நூற்றாண்டுக் காலப் பணி முழுவதுமே தகர்ந்துவிடக்கூடும்.

இரண்டாவதாக, நிதியம்சம் குறுக்கிடுகிறது. மத்திய அரசாங் கத்தைப் பராமரிப்பதற்கு இந்திய மக்களுக்கு எவ்வளவு

செலவாகும் என்பதும், இதில் ஒவ்வொரு மாகாணமும் ஏற்க வேண்டிய பளு எந்தளவுக்கு இருக்குமென்பதும் போதிய அளவுக்குத் தெரியவில்லை.

பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்த ஆண்டு வருமானம் ரூ.194,64,17,926 ஆகும். இந்தத் தொகையில் மாகாண அரசாங்கங்கள் ஆண்டுதோறும் மாகாண வள ஆதாரங்களிலிருந்து ரூ.73,57,50,125 யும் மத்திய வள ஆதாரங்களிலிருந்து மத்திய அரசாங்கம் ஆண்டுதோறும் ரூ. 121,06,67,801யும் திரட்டித் தருகின்றன. இதிலிருந்து மத்திய அரசாங்கத்தைப் பராமரிப்பதற்கு இந்திய மக்கள் எவ்வளவு செலவிட வேண்டியுள்ளது என்பதைத் தெரிந்துகொள்ளலாம். இத்தனைக்கும் மத்திய அரசாங்கம் அமைதியையும் ஒழுங்கையும் பாதுகாக்கும் பணியை மட்டுமே செய்து வருகிறது; மக்களின் முன்னேற்றம் சம்பந்தப்பட்டவேறு எந்தப் பணிகளையும் அது செய்வதில்லை. அப்படியிருக்கும்போது, அமைதியை நிலைநாட்டுவதற்காக ஆண்டு தோறும் இவ்வளவு பெருந்தொகையைக் கொட்டி அழுவது அவசியம்தானா என்று மக்கள் கேட்க ஆரம்பித்திருப்பதில் வியப்பேதும் இல்லை. இவ்வகையில் பார்க்கும்போது, மாகாணங்களிலுள்ள மக்கள் அநேகமாக கவ்வும் குடலை இறுகப் பிடித்துப் பட்டினி கிடக்கிறார்கள் என்பதையும், தங்களது வருமானத்தைப் பெருக்குவதற்கு அவர்களுக்கு வேறு ஆதாரம் ஏதுமில்லை என்பதையும் இங்கு நினைவிற் கொள்ள வேண்டும்.

மத்திய அரசாங்கத்தைப் பராமரிப்பதற்கு இந்திய மக்கள் ஏற்கவேண்டியுள்ள சுமை பல்வேறு மாகாணங்களிடையே மிகவும் ஏற்றத்தாழ்வான முறையில் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. மத்திய வருவாய்க்கான ஆதாரங்கள் வருமாறு: 1.சுங்கவரிகள் 2. உள்நாட்டுப் பொருள்கள் மீது விதிக்கப்படும் தீர்வைகள் 3. உப்பு 4. செலாவணி 5. தந்தி மற்றும் அஞ்சல் 6. வருமான வரி 7. ரயில்வே. இந்திய அரசாங்கம் பிரசுரித்துள்ள கணக்குகளிலிருந்து அஞ்சல் மற்றும் தந்தி, ரயில்வே, காகித நாணயம் அச்சடித்தல் ஆகிய மூன்று துறைகளிலிருந்து எவ்வளவு வருமானம் கிடைக்கிறது என்பதை நிச்சயிக்க முடியவில்லை. ஏனைய துறைகளிலிருந்து கிட்டும் வருவாயை மட்டுமே மாகாணவாரியாக அறியமுடிகிறது. அந்த விவரங்களைப் பின்கண்ட அட்டவணையில் காணலாம்.

| மாகாணங்கள் | மாகாண வள ஆதாரங்களிலிருந்து மாகாண அரசாங்கம் திரட்டும் வருமானம் | மத்திய வள ஆதாரங்களிலிருந்து மத்திய அரசாங்கம் திரட்டும் வருமானம் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| 1. சென்னை | 16,13,44,520 | 9,53,26,745 |
| 2. பம்பாய் | 12,44,59,553 | 22,53,44,247 |
| 3. வங்காளம் | 12,76,60,892 | 23,79,01,583 |
| 4. ஐ. மாகாணங்கள் | 12,79,99,851 | 4,05,53,030 |
| 5. பீகார் | 5,23,83,030 | 1,54,37,742 |
| 6. மத்திய மாகாணம் மற்றும் பேரார் | 4,27,41,280 | 31,42,682 |
| 7. அஸ்ஸாம் | 2,58,48,474 | 1,87,55,967 |
| 8. ஒரிசா | 1,81,99,823 | 5,67,346 |
| 9. பஞ்சாப் | 11,35,86,355 | 1,18,01,385 |
| 10. வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 1,80,83,548 | 9,28,294 |
| 11. சிந்து | 3,70,29,354 | 5,66,46,915 |

மேற்கண்ட அட்டவணையிலிருந்து நாம் என்ன காண்கிறோம். மத்திய அரசாங்கத்தைப் பராமரிக்கும் செலவு மிக அதிகமாக இருப்பதோடு, பல்வேறு மாகாணங்கள் விஷயத்தில் அது பெரிதும் ஏற்றத் தாழ்வாக இருப்பதையும் பார்க்கிறோம். பம்பாய் மாகாண அரசாங்கம் திரட்டுவது ரூ. 12,44,59,353. அதேசமயம் பம்பாயிலிருந்து மத்திய அரசாங்கம் திரட்டுவதோ ரூ. 22,53,44,247. வங்க அரசாங்கம் திரட்டுவது ரூ. 12,76,60,892; வங்காளத்திலிருந்து மத்திய அரசு வசூலிக்கும் தொகை ரூ. 23,79,01,583. சிந்து அரசாங்கம் பெறும் தொகை ரூ. 3,70,29,354; மத்திய அரசாங்கம் சிந்துவிலிருந்து பெறும் தொகை ரூ. 5,66,46,915. அஸ்ஸாம் அரசாங்கம் ஏறத்தாழ ரூ. 21/2 கோடி வசூலிக்கிறது. ஆனால் மத்திய அரசாங்கமோ அசாமிலிருந்து கிட்டத் தட்ட ரூ. 2 கோடி கறக்கிறது. மாகாண அரசாங்கங்கள் மீது மத்திய சர்க்கார் சுமத்தும் பளு இவ்வா றிருக்கும்போது, ஏனைய மாகாண அரசாங்கங்கள் மத்திய அரசாங் கத்துக்கு அளிக்கும் தொகையோ மிகவும் குறைவு. உதாரணமாக, பஞ்சாப் தனக்காக ரூ. 11 கோடி வசூலிக்கிறது; ஆனால் மத்திய அரசுக்கோ ரூ. 1 கோடிதான் வழங்கு கிறது. இதேபோன்று, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின்

வருமானம் ரூ. 1,80,83,548; எனினும் மத்திய அரசாங்கத்துக்கு அது அளிக்கும் மொத்தப் பங்கு ரூ. 9,28,294 தான். இவ்வாறே, ஐக்கிய மாகாணம் திரட்டும் தொகை ரூ. 13 கோடியாக இருக்கையில், அது மத்திய அரசுக்கு ரூ. 4 கோடி மட்டுமே அளிக்கிறது. பீகார் தனக்காக ரூ. 5 கோடி வசூலிக்கிறது. ஆனால் அது மத்திய அரசாங்கத்துக்குத் தருவதோ ரூ. 1 1/2 கோடிதான். மத்திய மாகாணமும் பேராரும் ரூ. 4 கோடி அளவுக்கு வரி வசூலிக்கின்றன; ஆனால் மத்திய அரசுக்கு ரூ. 31 லட்சம்தான் செலுத்துகின்றன.

இந்த நிதி அம்சம் இதுவரை எவரது கவனத்தையும் கவராமலேயே இருந்து வந்திருக்கிறது. எனினும் இந்தியாவில் ஒரு மத்திய அரசாங்கம் நிறுவப்படுவதை மிக வலுவாக, ஆழமாக ஆதரிக்கும் இந்துக்களையும் கூட தற்போது தேசபக்த அம்சம் கவர்வதை விடவும் நிதி அம்சம் பெரிதும் கவரும் ஒரு காலம் வரவே செய்யும். எனவே, என்றேனும் ஒரு நாள் முஸ்லீம்கள் வகுப்பு நோக்கங்களுக்காகவும் இந்துக்கள் பொருளாதார நோக்கங்களுக்காகவும் மத்திய அரசாங்கத்தை ஒழித்துக் கட்டுவதற்கு கைகோர்ப்பது சாத்தியமே.

இது நிகழுமானால், புதிய அரசியலமைப்புக்கான அடித்தளம் இடுவதற்கு முன்னர் இது நிகழ்வது சாலச்சிறந்ததாக இருக்கும். இவ்வாறின்றி, ஒரு மத்திய அரசாங்கம் அமைப்பதற்கு வகை செய்யும் புதிய அரசியல் அமைப்புக்கான அஸ்திவாரம் போடப்பட்ட பின்னர் இது நிகழுமானால் அது மிகப்பெரிய விநாசத்தில், விபரீதத்தில் போய் முடியும். இந்தப் பொதுவான சிதைவில், அழிபாட்டில் இந்தியா ஓர் ஒன்றுபட்ட நாடு என்பது மறைந்தழிந்து போவதோடு, இந்துக்களின் ஒற்றுமையைக் கூடக் காப்பாற்ற முடியாமல் போகக் கூடும். நான் ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று, இந்து மாகாணங்களிடையே கூட, அவற்றை இணைக்கும் பிணைப்பு அதிகமில்லாத போது, அந்த அற்ப சொற்ப பிணைப்பும் இழக்கப்பட்டு விடுகையில், இந்து மாகாணங்களின் ஒற்றுமையையே கூடக் கட்டி உருவாக்குவதற்கு, வளர்த்து வலுப்படுத்துவதற்கு எதுவும் இல்லாது போய் விடும். இதன் காரணமாகத் தான் திட்டங்கள் தீட்டுவதற்கும், அவற்றிற்கான அடித்தளங்கள் இடுவதற்கும் முன்னர் அரசியலமைப்புச் சட்டம் யாருக்காக உருவாக்கப்படுகிறது என்பதையும், அது தற்காலிகமானதா, நிரந்தரமானதா என்பதையும் இந்தியர்கள் தீர்மானித்துக் கொள்ள வேண்டும் என்கிறோம். ஏனென்றால் ஒரே அஸ்திவாரமிட்டு, ஒரு முனையிலிருந்து மறு முனைவரை எத்தனை எத்தனையோ உத்தரங்களையும் எஃகுக் கட்டுமானங்களையும் அமைத்து ஒரு முழுக் கட்டிடத்தையும் கட்டிய பிறகு, அதில் ஒரு பகுதியைப் பிரிக்க வேண்டுமென்றால், உத்தரங்களையும் எஃகு கட்டுமானங்களையும்

உடைக்க வேண்டியிருக்கும்; அப்போது முழுக் கட்டிடமுமே ஆட்டம் காணும்; ஒரே கட்டுமானமாக இருக்க வேண்டும் என்று கட்டப்பட்ட அந்தக் கட்டிடத்தின் இதர பகுதிகளில் பயங்கர வெடிப்புகள் ஏற்படும். அதிலும் இந்தியா விஷயத்தில் இந்தப் பகுதி களை பிணைக்கும் சிமெண்டு மிகவும் தரம் குறைந்ததாக இருந் தால், வெடிப்புகளின் அபாயம் பெரிதும் பயங்கரமானதாக இருக்கும். இந்தியா முழுவதற்கும் ஒரு புதிய அரசியலமைப்புச் சட்டம் உரு வாக்கப்பட்டு, அதன் அடித்தளத்தின்மீது ஒரு கட்டுமானம் எழுப்பப் படுகிறது என்று வைத்துக் கொள்வோம். இதன் பிறகு, இந்துஸ்தானத் திலிருந்து பாகிஸ்தானைப் பிரிக்கும் பிரச்சினை எழுப்பப்பட்டு, அதற்கு இந்துக்கள் இணங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது என்றும் வைத்துக் கொள்வோம். அப்போது என்ன நிகழும்? இந்தப் பிரிவினைக்கு வழிவகுப்பதற்குச் சில மாற்றங்கள் செய்ய வேண்டி யிருக்கும். அந்த மாற்றங்கள் காரணமாக கட்டிடம் முழுவதுமே நொறுங்கி தகர்ந்து விழ நேரிடும். முஸ்லீம் மாகாணங்களைப் பீடிக்கும் இந்தப் பிரிவினை நோய் இந்து மாகாணங்களையும் எளிதாகத் தொற்றிக் கொள்ளும். முஸ்லீம் மாகாணங்களின் இந்தப் பிளவு உணர்வு ஒட்டுமொத்த சிதைவை ஏற்படுத்தும்.

அரசியலமைப்புச் சட்டங்கள் சீர்குலைவுக்குள்ளான சம்ப வங்கள் வரலாற்றில் எத்தனை எத்தனையோ உண்டு. அமெரிக்கக் கூட்டரசைச் சேர்ந்த தெற்கத்திய நாடுகளின் உதாரணம் நம் கண் முன்னே இருக்கிறது. தென் ஆப்பிரிக்கக் கூட்டரசிலிருந்து வெளியேறு வதற்கு நேட்டால் எப்போதுமே ஆர்வம் காட்டி வந்திருக்கிறது. ஆஸ்திரேலிய காமன்வெல்த்திலிருந்து பிரிந்து செல்லுவதற்கு மேற்கு ஆஸ்திரேலியா அண்மையில் முயன்று அந்த முயற்சியில் தோல்வி யடைந்ததை நாம் அறிவோம்.

இந்த சம்பவங்களில் எல்லாம் உண்மையில் சீர்குலைவு ஏதும் ஏற்படவில்லை; அப்படியே ஏற்பட்டாலும் அது உடனடியாக சரி செய்யப்பட்டு விட்டது. ஆனால் இத்தகைய அதிர்ஷ்டம் தங்களுக்குக் கிட்டும் என்று இந்தியர்கள் எதிர்பார்க்க முடியாது. அநேகமாக செக்கோஸ்லோவாகியாவுக்கு ஏற்பட்ட கதிதான் அவர்களுக்கு நேரிடக் கூடும். முதலாவதாக, முஸ்லீம் மாகாணங்கள் இந்து மாகாணங் களிலிருந்து பிரிந்து சென்று, இந்திய அரசியலமைப்பு சீர்குலைக்கப் படும்போது உள்நாட்டுப் போருக்குப் பிறகு அமெரிக்காவில் நடை பெற்றது போன்று, பிரிந்து சென்ற சில மாகாணங்களைத் திரும்பவும் இந்திய மாகாணங்களின் அரவணைப்பின் கீழ் கொண்டு வருவது சாத்தியமே என்று நம்புவது வீண். இரண்டாவதாக, புதிய இந்திய அரசியலமைப்பு குடியேற்ற நாட்டு அரசியலமைப்பாக இருக்கு

மாயின், அதற்கான அடித்தளமிடப்பட்ட பிறகு இத்தகைய சீர்குலைவி லிருந்து அந்த அரசியலமைப்பைக் காப்பாற்ற பிரிட்டிஷாராலேயே கூட முடியாது. எனவே, புதிய அரசியலமைப்புச் சட்டம் வகுக்கப் படும் முன்னர் பாகிஸ்தான் பிரச்சினைக்கு ஒரு தீர்வு காணுவது இன்றியமையாததாகிறது.

பாகிஸ்தான் கோரிக்கை அடுத்தமுறை அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்படும்போது இந்தியர்கள் தீர்மானிக்க வேண்டிய ஒரு திட்டம் என்பதிலும், இது சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வருவது தவிர்க்க முடியாதது என்பதிலும் எத்தகைய ஐயத்துக்கும் இட மில்லை என்றால், பிரச்சினையைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் அதனை அணுகுவது மிகவும் விநாசகரமான தவறாகும். வட்டமேசை மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்ட சில இந்தியப் பிரதிநிதிகளுக்கு அரசியலமைப்புச் சட்டம் பற்றிய ஞானம் பூஜ்யமாக இருப்பது கண்டு வியந்து போன அப்சர்வர் பத்திரிகையைச் சேர்ந்த திரு. கார்வின் பின்வருமாறு கூறியது எனக்கு நினைவிருக்கிறது; சைமன் கமிஷன் இந்தியாவைப் பற்றி அறிக்கை தயாரித்ததற்குப் பதிலாக இந்திய அரசியலமைப்புப் பிரச்சினைகள் குறித்தும், உலகில் பல்வேறு நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களில் இப்பிரச்சினைகளுக்கு எவ்வாறு தீர்வு காணப்பட்டுள்ளது என்பது குறித்தும் ஓர் அறிக்கை தயாரித்திருந்தால் நலமாக இருந்திருக்கும். தென் ஆப்பிரிக்காவின் அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கிய பிரதிநிதிகள் பயன்படுத்திக் கொள்வதற்கென்று இத்தகைய ஓர் அறிக்கை தயாரிக்கப்பட்டது என்பதை நான் அறிவேன். இக்குறைபாட்டை நீக்கும் ஒரு முயற்சி என எனது இந்த நூலைக் கூறலாம்; இவ்வகையில் காலத்திற்கேற்ற நூலாக இது வரவேற்கப்படும் என்று நம்புகிறேன்.

இந்த நூல் காலத்திற்கேற்றதுதானா என்ற கேள்விக்கான எனது பதிலை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். அடுத்து, இந்த நூல் படிப்பதற்குரியதுதானா என்ற இரண்டாவது கேள்வியைப் பொறுத்த வரையில், அகஸ்டின் பிர்ரெல் கூறிய சொற்களை எந்த எழுத் தாளரும் மறக்க முடியாது. அவர் கூறினார்:

> ''சமையற்காரர்களையும், போர் வீரர்களையும், நூலாசிரி யர்களையும் அவர்களது சாதனைகளைக் கொண்டுதான் மதிப்பிட வேண்டும்; சுவையான உணவுகளையும், புகழ்மிகு வெற்றி களையும், மனதுக்குகந்த நூல்களையும் அவர்களிடமிருந்து நாம் எதிர்பார்க்கிறோம். உணவில் என்ன பொருள்களைச் சேர்க் கிறார்கள், யுத்த களத்தில் எத்தகைய போர் உத்திகளைக்

கையாள்கிறார்கள், நூல்களில் என்ன முறைகளைப் பயன் படுத்துகிறார்கள் என்பதைப் பற்றியெல்லாம் நமக்குக் கவலை இல்லை. சமையலறையிலோ, படைத்துறை ஆலோசனைக் கூட்டத்திலோ, படிப்பறையிலோ நாம் அனுமதிக்கப்பட வேண்டும் என்பதும் நமது விருப்பம் அல்ல. சமையற்காரர் தமது உலோக வேவுகலத்தை தமது இஷ்டம்போல் பயன் படுத்துகிறார்; படைவீரர் தமது ஆட்களை தம் விருப்பம்போல் நிறுத்திவைக்கிறார்; எழுத்தாளர் தாம் சொல்ல வந்த விஷயத்தை முடிந்தளவு சிறந்த முறையில் கையாள்கிறார்; ஆனால் நமக்கு வேண்டிய எல்லாம் இதுவல்ல; உணவு தயாரானதும் சுவையாக இருக்கிறதா என்றுதான் கேட்கிறோம்; போர் முடிந்ததும் யார் வெற்றி பெற்றார்கள் என்று கேட்கிறோம்; புத்தகம் வெளிவந்ததும் படிக்கக்கூடியதாக இருக்கிறதா என்று வினவுகிறோம்.

''இசைவான முறையில் எழுதுவதுதான் எழுத்தாளர்களின் முதல் கடமை என்பதை அவர்களுக்கு நினைவுபடுத்த வேண்டிய அவசியம் இல்லை. சில சிடுசிடுப்பான எழுத்தாளர்கள்கூட இவ்வாறு செய்வதில் வெற்றியடைந்திருக்கிறார்கள்; எனவே எவரும் நம்பிக்கை இழக்க வேண்டிய அவசியம் இல்லை. ஒவ்வொரு நூலாசிரியரும் அவர்கள் உவகை கொண்டவராயினும் சரி, கடுமையானவராயினும் சரி தமது நூல் கூடிய மட்டும் உகந்த முறையில் இருக்கும்படிப் பார்த்துக்கொள்ள வேண்டும். நூல்கள் வாசிப்பது என்பது ஒரு கடமை அல்ல. எனவே இசைவற்ற முறையில் எழுதுவது ஏற்புடையதல்ல. இன்னொருவரது நூலைப் படிக்க வேண்டும் என்ற கட்டாயம் எவருக்கும் இல்லை.''

இந்த உண்மையை நான் முற்றிலும் அறிவேன். ஆனால் இது குறித்து நான் கவலைப்படவில்லை. ஏனைய நூல்களுக்கு வேண்டுமானால் இது பொருந்துமே தவிர பாகிஸ்தான் பற்றிய நூலுக்கு இது பொருந்தாது. பாகிஸ்தான் குறித்த நூலை ஒவ்வொருவரும் படிக்க வேண்டும்; இந்த நூலை அல்லாவிட்டாலும் வேறு ஏதேனும் நூலை வாசிக்க வேண்டும்; தமது நாடு இடர்பாடற்ற, தெளிந்த பாதையில் செல்லுவதற்கு உதவ விரும்பும் எவரும் இதைத்தான் செய்வார்கள்.

எந்த ஒரு நூலும் படிப்பதற்கு நன்றாக இல்லை என்றால், அதாவது அது சுவையற்றதாக இருந்தால், அதில் இரண்டு விஷயங்கள்

உபயோககரமானவையாக இருப்பதை வாசகர்கள் காண்பார்கள் என்பது நிச்சயம். இது என் நூலுக்கும் பொருந்தும்.

முதலாவதாக, நூலின் உள்ளடக்கம் சிறப்பான முறையில் அமைந்திருப்பதை வாசகர்கள் காண்பார்கள்; நூலில் தெரிவிக்கப் பட்டிருக்கும் விஷயங்கள் பயனுள்ளவையாக இருக்கும்; மிகவும் சிரமப்பட்டுத் தேடிப்பிடித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங் களை வாசகர்கள் எளிதாக அறிந்துகொள்வதற்கு இது உதவும். இந்தியாவின் கடந்த இருபதாண்டுக்கால அரசியல் மற்றும் சமூக வரலாற்றின் சாராம்சம் இந்த நூலில் பிழிந்து தரப்பட்டிருப்பதை வாசகர்கள் காணலாம். ஒவ்வொரு இந்தியரும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய கருத்துக் கருவூலம் இது.

இரண்டாவதாக, எத்தகைய ஒருதலைப்பட்சமான போக்கை யும் இந்நூல் கடைப்பிடிக்கவில்லை. பாகிஸ்தான் கோரிக்கையை அதன் எல்லா அம்சங்களிலும் விளக்குவதுதான் இந்நூலின் குறிக் கோளே தவிர, அக்கோரிக்கைக்கு ஆதரவாக வாதாடுவது அதன் குறிக்கோளல்ல. அதாவது இரத்தினச் சுருக்கமாகச் சொன்னால், பாகிஸ்தான் கோரிக்கையைப் பற்றி விரிவாக எடுத்துரைப்பதே அல்லாமல் மற்றபடி அதற்கு வக்காலத்து வாங்குவது நூலின் நோக்க மல்ல. ஆனால் அதேசமயம் பாகிஸ்தான் குறித்து எனக்குச் சொந்தக் கருத்துகள் ஏதுமில்லை என்று கூறுவது கடைந்தெடுத்தப் பாசாங்குத் தனமாகத்தான் இருக்கும். இது விஷயத்தில் எனக்குத் திட்டவட்ட மான கருத்துகள் உண்டு. இவற்றில் சில கருத்துகளை நான் பகிரங்க மாகவே வெளியிட்டிருக்கிறேன். வேறு சில கருத்துகளை அனு மானிக்க வேண்டியிருக்கும். எனினும் என் கருத்துகள் குறித்து இங்கு இரண்டு விஷயங்களைக் குறிப்பிட வேண்டும். முதலாவதாக, எங்கெல்லாம் என் கருத்துகளைத் தெரிவித்திருக்கிறேனோ அங்கெல் லாம் அவற்றைக் காரண காரியத்தோடு விளக்கியிருக்கிறேன். இரண் டாவதாக, அந்தக் கருத்துகள் எத்தகையனவாயினும் அவை பாரபட் சத்தோடு தெரிவிக்கப்பட்டவை அல்ல. அவை உண்மையில் ஆலோ சனைகளே தவிர கருத்துகள் அல்ல. வேறுவிதமாகச் சொன்னால், நான் திறந்த மனமுடையவன், வறண்ட மனமுடையவனல்ல. திறந்த மனமுடையவன் எப்போதுமே பாராட்டுதலுக்குரியவன். இது உண்மையாயினும், அதே சமயம் ஒரு திறந்தமனம் வறண்ட மனமாக வும் இருக்கக்கூடும் என்பதை மறந்துவிடக் கூடாது. இத்தகைய ஒரு திறந்தமனம் ஒருவனை மகிழ்ச்சிகரமான நிலைமைக்கும் அதே போழ்து

அபாயகரமான நிலைமைக்கும் உள்ளாக்கலாம். வறண்ட மனதுடையவனைப் பேரிடர் எளிதாகச் சூழ்ந்துகொள்ளும். இத்தகையவன் எடைப்பாரமும் சுக்கானும் இல்லாத ஒரு கப்பலைப் போன்றவன். அது திசைவழி தெரியாது தத்தளிக்கும். அக்கப்பல் நீரில் மிதந்து செல்ல முடியும். ஆனால் திசை தெரியாது ஏதேனும் ஒரு பாறையில் மோதி கவிழ்ந்துவிடக் கூடும். வாசகருக்கு உதவும் நோக்கத்தோடு சம்பந்தப்பட்ட எல்லா முக்கியத் தகவல்களையும் அவர் முன்னால் வைத்திருக்கிறேன். எனது கருத்துகளை வாசகர்மீது திணிக்க எவ்வகையிலும் முயலவில்லை என்பதை அவர் நிச்சயம் உணர்வார். பிரச்சினையின் இருதரப்பு வாதங்களையும் அவர் முன்னால் வைத்து தனது சொந்தக் கருத்தை உருவாக்கிக் கொள்வதற்கு வகை செய்திருக்கிறேன்.

சம்பந்தப்பட்ட விஷயங்களை எடுத்துரைப்பதில் நான் ஆத்திரமூட்டும் வகையில் நடந்து கொண்டிருப்பதாக வாசகர் குற்றஞ் சாட்டலாம்; இத்தகைய குற்றச்சாட்டு எம்மீது சுமத்தப்படும் என்பதை நான் உணர்ந்தே இருக்கிறேன். இதற்காக பட்டவர்த்தனமாகவும் மனப்பூர்வமாகவும் மன்னிப்புக் கோருகிறேன். வாசகரின் மனத்தைப் புண்படுத்துவது என் நோக்கமல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தப் புத்தகத்தில் ஆராயப்பட்டிருக்கும் பிரச்சினையை விருப்புவெறுப்பின்றி, கோபதாபமின்றி அணுக வேண்டும் என்று வலியுறுத்துவதே எனக்குள்ள ஒரே குறிக்கோள். என்மீது எத்தகைய கோபமிருந்தாலும் அதை ஒதுக்கி வைத்துவிட்டு, இந்தப் பிரம்மாண்ட பிரச்சினை மீது முழுக் கவனத்தையும் செலுத்தும்படி வாசகரைக் கேட்டுக்கொள்கிறேன்; பாகிஸ்தானா, பாகிஸ்தான் இல்லையா என்பதே அந்த மிக முக்கிய பிரச்சினை.



## பகுதி 1

# பாகிஸ்தான் கோரிக்கைக்கு ஆதரவாக முஸ்லீம்கள் முன்வைக்கும் வாதம்

பாகிஸ்தான் உருவாக்கப்பட வேண்டும் என்ற முஸ்லீம்களின் கோரிக்கை பின்கண்ட காரணங்களின் அடிப்'படையில் நியாயப்படுத்தப்படுகிறது:

i) இனரீதியில் மிகவும் ஒருபடித்தாக உள்ள நிர்வாகப் பகுதிகள் தோற்றுவிக்கப்பட வேண்டுமென்று முஸ்லீம்கள் கோருகின்றனர்.

ii) முஸ்லீம் பெரும்பான்மை கொண்ட இந்த ஒருபடித்தான நிர்வாகப் பகுதிகள் தனி அரசுகளாக அமைக்கப்பட வேண்டுமென்று முஸ்லீம்கள் விரும்புகின்றனர்.

அ. ஏனென்றால் முஸ்லீம்கள் ஒரு தனிதேசமாக அமைந்துள்ள நிலைமையில் தங்களுக்கென ஒரு தேசிய தாயகத்தை உருவாக்கிக் கொள்ள விரும்புகின்றனர்.

ஆ. ஏனென்றால் முஸ்லீம்களை ஒரு அந்நிய நாட்டின் இரண்டாந்தர குடிமக்களாக நடத்துவதற்கு இந்துக்கள் தமது பெரும்பான்மையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவதால் தனித் தேசக் கோரிக்கையை முஸ்லீம்கள் வலியுறுத்துகின்றனர். இந்தப் பகுதி இக்காரணங்கள் அனைத்தையும் விளக்கிக் கூறுகிறது.

# இயல் 1

# லீக் முன்வைக்கும் கோரிக்கை என்ன?

## I

*1940 மார்ச் 26 ஆம் தேதி இந்து இந்தியா இதற்கு முன் கண்டிராத வகையில் அதிர்ச்சிக்கு உள்ளாயிற்று. அன்றைய தினம் முஸ்லீம் லீக் தனது லாகூர் மாநாட்டில் பின்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது:*

*1) "அரசியலமைப்புப் பிரச்சினை குறித்து 1939 ஆகஸ்டு 27 ஆம் தேதியும், செப்டம்பர் 17, 18 தேதிகளிலும், அக்டோபர் 22 ஆம் தேதியும் பின்னர் 1940 பிப்ரவரி 3 ஆம் தேதியும் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் தெரிவித்திருந்தபடி அகில இந்திய முஸ்லீம் லீகின் கவுன்சிலும், காரியக் கமிட்டியும் மேற்கொண்ட நடவடிக்கையை அங்கீகரித்து உறுதிசெய்யும் அதேவேளையில், 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தில் இடம்பெற்றுள்ள கூட்டரசுத் திட்டம் முற்றிலும் ஒவ்வாதது என்றும், இந்த நாட்டின் பிரத்தியேக நிலைமைகளில் செயல்படுத்த இயலாதது என்றும், முஸ்லீம் இந்தியாவுக்கு அது அறவே ஏற்புடையதல்ல என்றும் இந்த அகில இந்திய முஸ்லீம் லீக் மாநாடு அழுத்தம் திருத்தமாக வலியுறுத்துகிறது;*

*2) "மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அரசாங்கத்தின் சார்பில் 1939 அக்டோபர் 18 ஆம் நாளன்று வைசிராய் வெளியிட்டுள்ள பிரகடனம் 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்திற்கு அடிப்படையாக உள்ள கொள்கையும் திட்டமும் இந்தியாவிலுள்ள பல்வேறு அரசியல் கட்சிகளுடனும், நலன்களுடனும், வகுப்புகளுடனும் கலந்தாலோசித்து மறுபரிசீலனை செய்யப்படும் என்று அறிவித்துள்ள அளவில் நம்பிக்கை அளிப்பதாக இருப்பினும், அரசியலமைப்புத் திட்டம் முழுவதும் தொடக்கத்திலிருந்து மீண்டும் பரிசீலிக்கப்பட்டாலொழிய முஸ்லீம் இந்தியா மனநிறைவு அடையாது என்பதையும், எந்தத் திருத்தப்பட்ட திட்டமும் முஸ்லீம்களின் அங்கீகாரத்துடனும் சம்மதத்துடனும்*

உருவாக்கப்பட்டாலன்றி அது அவர்களுக்கு ஏற்புடையதாக இருக்காது என்பதையும் இந்த மாநாடு திட்டவட்டமாகத் தெரிவித்துக் கொள்கிறது;

3. ''எந்த அரசியலமைப்புத் திட்டமும் பின்கண்ட மிக முக்கிய மான கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்திருந்தாலொழிய அது இந்த நாட்டில் நடைமுறைப்படுத்தத் தக்கதல்ல அல்லது முஸ்லீம்களால் ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என அகில இந்திய முஸ்லீம் லீகின் இந்த மாநாடு தீர்மானிக்கிறது; அதாவது பூகோள ரீதியில் தொடர்ச்சியாக உள்ள யூனிட்டுகள் பிராந்தி யங்களாக எல்லை வரையறை செய்யப்பட வேண்டும், அவசிய மான பிரதேச மறுசீரமைவுகளுடன் அவை அமைக்கப்பட வேண்டும்; இந்தியாவின் வடமேற்கு, கிழக்கு மண்டலங்கள் போன்ற முஸ்லீம்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையின ராக உள்ள பகுதிகள் 'சுதந்திர அரசுகளாக' இணைக்கப்பட வேண்டும். இவற்றில் அடங்கியுள்ள யூனிட்டுகள் தன்னாட்சி உரிமையும் அரசுரிமையும் படைத்தவையாக இருக்க வேண்டும்;

4. ''இந்த யூனிட்டுகளிலும் பிராந்தியங்களிலுமுள்ள சிறுபான்மை யினரது சமய, கலாசார பொருளாதார, அரசியல், நிர்வாக உரிமைகளையும் ஏனைய உரிமைகளையும், நலன்களையும் நிலைநாட்டுவதற்கு அவர்களுடன் கலந்தாலோசித்து அரசியல் சட்டத்தில் போதிய, பயனுறுதியுள்ள, சட்டரீதியான பாதுகாப்பு கள் விசேடமாக செய்யப்பட வேண்டும்; இதேபோன்று, முசல்மான்கள் சிறுபான்மையினராக உள்ள இந்தியாவின் இதர பகுதிகளில் அவர்களதும் இதர சிறுபான்மையினரதும் சமய, கலாசார, பொருளாதார, அரசியல், நிர்வாக உரிமைகளையும் இதர உரிமைகளையும் நிலைநாட்டுவதற்கு அவர்களுடன் கலந்தாலோசித்து அரசியல் சட்டத்தில் தகுந்த, பயனுறுதியுள்ள, சட்டரீதியான பாதுகாப்புக்குப் பிரத்தியேக ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

5. ''இந்த அடிப்படைக் கோட்பாடுகளுக்கு இணங்க, பாதுகாப்பு, அயல் விவகாரங்கள், செய்திப் போக்குவரத்து, சுங்கவரி மற்றும் அவசியமான இதர விஷயங்கள் குறித்த அனைத்து அதிகாரங் களையும் சம்பந்தப்பட்ட பிராந்தியங்கள் முடிவாக ஏற்பதற்கு வகைசெய்யும் ஓர் அரசியல் அமைப்புத் திட்டத்தை வகுப்பதற்கு இந்த மாநாடு காரியக் கமிட்டிக்கு அதிகாரமளிக்கிறது.

இந்தத் தீர்மானத்தின் நோக்கம் என்ன? முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள பகுதிகளைச் சுதந்திர அரசுகளாக இணைக்க வேண்டும் என்பதே தீர்மானத்தின் நோக்கம் என்பதை அத்தீர்மானத்தின் 3 ஆவது பத்தியிலிருந்து தெரிந்துகொள்ளலாம். இன்னும் திட்டவட்டமாக, தெளிவாகக் கூறுவதானால், வடமேற்கிலுள்ள பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தானம், சிந்து ஆகியவையும் கிழக்கிலுள்ள வங்காளமும் பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாணங்களாக இருப்பதற்குப் பதிலாக அவற்றைப் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளியே சுதந்திர அரசுகளாக ஆக்கப்பட வேண்டும் என்பதே இந்தத் தீர்மானத்தின் பொருள். இதுதான் முஸ்லீம் லீக் தீர்மானத்தின் சத்தும் சாரமுமாகும்.

இத்தீர்மானம் எதைக் கருத்தில் கொள்கிறது? முஸ்லீம் மாகாணங்கள் அரசுகளாக உருவாகிய பிறகு, ஒவ்வொன்றும் முழு அரசுரிமைப் படைத்த சுதந்திர நாடாக இருக்க வேண்டும் என்று அது எண்ணுகிறதா? அல்லது இவை அனைத்தும் ஒரே அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் கொண்டுவரப்பட்டு, அவை ஓர் கூட்டரசின் உறுப்புகளாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறதா? அல்லது ஏக மைய அரசின் அங்கங்களாக இருக்க வேண்டும் என்று கருதுகிறதா? இந்த விஷயத்தில் தீர்மானம் தெளிவில்லாமல் இருக்கிறது. ''பிராந்தியங்கள் சுதந்திர அரசுகளாக ஒன்றிணைககப்பட வேண்டும் என்றும், அவற்றின் அங்கப் பகுதிகள் தன்னாட்சி உரிமையும் அரசுரிமையும் படைத்தவையாக இருக்க வேண்டும் என்றும்'' தீர்மானம் கூறுகிறது. இங்கு ''அங்கப் பகுதிகள்'' என்னும் பதம் பயன்படுத்தப்பட்டிருப்பது ஒரு கூட்டரசு அமைக்கும் எண்ணத்தையே குறிப்பிடுகிறது. அவ்வாறாயின் அங்கப் பகுதிகள் ''முழு அரசுரிமை படைத்தவையாக'' இருக்க வேண்டும் என்ற பதம் இங்கு பயன்படுத்தப்படுவதற்கு அவசியமே இல்லை. ஏனென்றால் அங்கப் பகுதிகள் சேர்ந்த கூட்டரசு என்பதும், அங்கப் பகுதிகளின் முழு அரசுரிமை என்பதும் பரஸ்பரம் ஒன்றுடன் ஒன்று முரண்பட்டவை. எனவே, ஒரு மகா கூட்டரசைத் தீர்மானம் குறிப்பதாக இருக்கக் கூடும்.எனினும் எது எப்படியிருந்தாலும், இந்த சுதந்திர அரசுகள் சேர்ந்து ஒரு கூட்டரசை அமைக்கின்றனவா அல்லது ஒரு மகா கூட்டரசை அமைக்கின்றனவா என்பது இங்கு முக்கியமல்ல. மாறாக, இந்தப் பிரதேசங்கள் எல்லாம் இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டு, சுதந்திர அரசுகளாக அமைக்கப்பட வேண்டும் என்ற அடிப்படைக் கோரிக்கைதான் இங்கு முக்கியமானது.

இந்தத் திட்டம் ஏதோ ஒரு புதியதொரு திட்டம்போல் தோன்றும் படியான முறையில் தீர்மானத்தின் வாசகம் அமைக்கப்பட்டிருக் கிறது. ஆனால் உண்மை அதுவல்ல. 1930 டிசம்பரில் லட்சுமணபுரியில் நடைபெற்ற முஸ்லீம்லீகின் வருடாந்திர மாநாட்டில் தலைமை உரை யாற்றும்போது சர் முகமது இக்பால் முன்வைத்த திட்டத்திற்குத் தான் இந்தத் தீர்மானம் புத்துயிரளித்திருக்கின்றதே தவிர வேறல்ல. இத்திட்டம் அச்சமயம் முஸ்லீம் லீகால் ஏற்கப்படவில்லை. எனினும் திரு. ரெஹமத் அலி என்பவர் இத்திட்டத்தை மீண்டும் முன்வைத்து, அதற்குப் பாகிஸ்தான் என்ற பெயரையும் சூட்டினார். திரு. ரெஹமத் அலி எம்.ஏ.எல்.எல்.பி. 1933 ஆம் ஆண்டில் பாகிஸ்தான் இயக்கத்தைத் தோற்றுவித்தார். அவரது திட்டம் இந்தியாவை பாகிஸ்தான், இந்துஸ்தான் என இரு பகுதிகளாகப் பிரித்தது. அவரது பாகிஸ்தானில் பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், காஷ்மீர், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவை அடங்கியிருந்தன. எஞ்சிய பகுதிகளை அவர் இந்துஸ்தான் எனக் குறிப்பிட்டார். ''வடக்கே உள்ள ஐந்து முஸ்லீம் மாகாணங்களைக் கொண்ட ஒரு சுதந்திரமான, தனி பாகிஸ் தானை அமைப்பதே' அவரது நோக்கம். இந்தத் திட்டம் வட்டமேசை மாநாட்டு உறுப்பினர்களிடையே விநியோகிக்கப்பட்டது. ஆனால் ஒருபோதும் அது அதிகாரப்பூர்வமாக முன்வைக்கப்படவில்லை. இந்தத் திட்டத்திற்குப் பிரிட்டிஷ் அரசின் ஒப்புதலைப் பெறுவதற்குத் தனிப்பட்ட முறையில் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டதாகத் தோன்று கிறது. எனினும் பிரிட்டிஷ் அரசாங்கம் இத்திட்டத்தை பரிசீலிக்க மறுத்துவிட்டது. ''பழைய முஸ்லீம் சாம்ராஜ்யத்தை மீண்டும் உயிர்ப் பிக்கும் ஒரு முயற்சியாக'' இத்திட்டத்தை அவர்கள் கருதியதே இதற்குக் காரணம்.[1]

பாகிஸ்தான் குறித்த இந்தப் பழைய திட்டத்தைத்தான் லீக் விரிவுபடுத்திற்று; வங்கத்திலும் அஸ்ஸாமிலும் வாழும் முஸ்லீம் களையும் இத்திட்டத்தின்கீழ் கொண்டுவரும் பொருட்டு, கிழக்கே மேலும் ஒரு முஸ்லீம் அரசைத் தோற்றுவிக்க அது திட்டமிட்டது. இதைத் தவிர மற்றபடி, லீக் முன்வைத்த விரிவுபடுத்தப்பட்ட இத்திட்டம் சர் முகமத் இக்பாலால் முன்மொழியப்பட்டு திரு. ரெஹமத் அலியால் பிரபலப்படுத்தப்பட்ட திட்டத்தை சாராம்சத்திலும் உருவரை யிலும் ஒத்ததே ஆகும். கிழக்கில் தோற்றுவிக்க உத்தேசிக்கப்பட்ட இந்தப் புதிய முஸ்லீம் அரசுக்குப் பெயர் எதுவும் சூட்டப்பட வில்லை. இருப்பினும் திரு. ரெஹமத் அலியின் திட்டத்தோடு

1. ஹலிட் எடிப் - இந்தியாவின் உட்புறம், பக்கம். 355.

ஒப்பிடுகையில் இது கோட்பாட்டளவிலும் சரி, சித்தாந்தப் பிரச்சினைகளிலும் சரி எவ்வகையிலும் வேறுபட்டிருக்கவில்லை. ஆனால் இதிலுள்ள ஒரே ஒரு சிக்கல் என்னவென்றால் இந்த இரண்டு முஸ்லீம் அரசுகளுக்கும் இரத்தினச்சுருக்கமான, இனிமையான பெயர்களைத் தேர்ந்தெடுக்க லீக் தவறிவிட்டது என்பதுதான். இவ்வாறு அது செய்யத் தவறியதால், மேற்கிலுள்ள முஸ்லீம் அரசு, கிழக்கிலுள்ள முஸ்லீம் அரசு என்று பல் உடைபடும் பெயர்களுடன் நமது விவாதத்தை நடத்த வேண்டியிருக்கிறது. இந்தச் சிக்கலுக்குத் தீர்வு காண இரு - தேசக் கோட்பாட்டிற்கு அடிப்படையாக உள்ள சித்தாந்தத்தை அதாவது பட்டவர்த்தனமாகக் கூறுவதானால் நாட்டுப் பிரிவினையைப் பாகிஸ்தான் என்ற பெயரால் அழைக்கலாம் என்று கருதுகிறேன்; வடமேற்கிலும் வடகிழக்கிலும் உள்ள இரண்டு முஸ்லீம் அரசுகளை முறையே மேற்கு பாகிஸ்தான் என்றும், கிழக்கு பாகிஸ்தான் என்றும் குறிப்பிடலாம் என நினைக்கிறேன்.

இந்தத் திட்டம் இந்து இந்தியாவின் கவனத்தை ஈர்த்தது மட்டுமன்றி, அதனை மிகுந்த அதிர்ச்சி கொள்ளவும் செய்தது. இங்கு இயல்பாகவே ஒரு கேள்வி எழுகிறது. இந்தத் திட்டத்தில் அப்படி என்ன புதுமையான அம்சம் அல்லது அதிர்ச்சி அளிக்கக்கூடிய அம்சம் இருக்கிறது?

## II

வடமேற்கிலுள்ள மாகாணங்களை ஒன்றிணைப்பது அதிர்ச்சி தரக்கூடிய ஒரு யோசனையாகுமா? அவ்வாறு கருதுபவர்கள், இது அநேக வைசிராய்களும், ஆட்சிப் பொறுப்பாளர்களும், தளபதிகளும் நீண்ட நெடுங்காலமாகவே முன்வைத்து வந்துள்ள ஒரு திட்டம் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். வடமேற்கிலுள்ள பாகிஸ்தான் மாகாணங்களில், பஞ்சாபும் வடமேற்கு எல்லைப்புற மாகாணமும், 1849ல் பிரிட்டிஷார் பஞ்சாபைக் கைப்பற்றிக் கொண்டது முதலே ஒரே மாகாணமாக இருந்து வந்திருக்கிறது. இவை இரண்டும் 1901 ஆம் ஆண்டு வரை ஒரே மாகாணமாகவே நீடித்து வந்திருக்கிறது. 1901 ஆம் ஆண்டில்தான் கர்ஸான் பிரபு அவற்றின் ஒற்றுமையைக் குலைத்து, இரு மாகாணங்களாகப் பிரித்தார். பஞ்சாபைச் சிந்துவுடன் இணைக்கும் பிரச்சினையைப் பொறுத்தவரையில், பஞ்சாப் வெற்றிக் கொள்ளப் படுவதற்கு முன்னர் அல்லாமல் பின்னர் சிந்து கைப்பற்றிக் கொள்ளப் பட்டிருக்குமானால் சிந்து பஞ்சாபில் இணைக்கப்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஏனென்றால் இவ்விரு மாகாணங்களும்

அடுத்தடுத்து இருப்பதோடு ஒரே நதியால் இணைக்கப்பட்டிருக்கின்றன; இது அவற்றிடையே மிகவும் இயல்பான பிணைப்பாக அமைந்திருக்கிறது. இவ்வாறிருக்கும்போது, சிந்து பம்பாய் மாகாணத்துடன் இணைக்கப்பட்டது; பஞ்சாபுடன் இணைக்கப்படாதபோது பம்பாயிலிருந்துதான் சிந்துவை நிர்வகிக்க முடியும் என்பதே இதற்குக் காரணம். ஆயினும் சிந்துவை பம்பாயிலிருந்து பிரித்துப் பஞ்சாபுடன் இணைக்க வேண்டும் என்ற கோரிக்கை எவ்வகையிலும் கைவிடப்படவில்லை; அக்கோரிக்கை அவ்வப்போது நெடுகிலும் வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. டல்ஹௌசி பிரபு கவர்னர் ஜெனரலாக இருந்த சமயத்தில் இக்கோரிக்கை முதன்முதலில் முன்வைக்கப்பட்டது; ஆனால் பொருளாதாரக் காரணங்களுக்காக பிரிட்டிஷ் வாணிகக் கம்பெனியின் இயக்குநர்கள் குழு இக்கோரிக்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. சிப்பாய் புரட்சிக்குப் பிறகு, இப்பிரச்சினை மீண்டும் பரிசீலிக்கப்பட்டது. ஆனால் சிந்து நதியை ஒட்டிய பகுதிகளில் செய்திப் போக்குவரத்து வசதிகள் மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்ததால் கானிங் பிரபு இக்கோரிக்கையை ஏற்க மறுத்துவிட்டார். சிந்து பஞ்சாபுடன் இணைக்கப்படுவது நியாயமான கோரிக்கை என்று 1876ல் நாத்புரூக் பிரபு கருதினார். அவருக்குப் பின்னர் பொறுப்பேற்ற லிட்டன் பிரபு பஞ்சாபின் ஆறு எல்லைப்புற மாவட்டங்களையும் சிந்து நதியை ஒட்டியுள்ள சிந்து மாவட்டங்களையும் இணைத்து ஒரு தனி மாகாணமாக்க 1877ல் முயற்சி செய்தார். இம்முயற்சி வெற்றி பெற்றிருக்குமானால், ஹஜாரா, பெஷாவர், கோஹத், பான்னு, டேரா இஸ்மாயில் கான், டேரா காஜி கான் ஆகிய ஆறு பஞ்சாப் எல்லைப்புற மாவட்டங்களும் சிந்து நதி தீர மாவட்டங்களும் இணைந்திருக்கும். ஆனால் இந்த யோசனைகள் பிரிட்டிஷ் ராஜாங்க அமைச்சருக்கு ஏற்புடையவையாக இல்லை. லேண்ட்ஸ்டவுனே பிரபு வைசிராயாக இருந்த போது (1888-94) சிந்துவை பஞ்சாபுடன் இணைக்கும் திட்டம் மீண்டும் முன்வைக்கப் பட்டது. ஆனால் அப்போதும் இதற்கு ஒரு தடங்கல் ஏற்பட்டது; அதாவது பலுசிஸ்தான் ஆட்சி வட்டாரம் அமைக்கப்பட்டதால் எல்லை மாவட்டம் என்ற அந்தஸ்தை சிந்து இழந்தது; இதனால் அதன் ராணுவ முக்கியத்துவமும் குன்றியது; இதன் விளைவாய் அச்சமயம் பஞ்சாபுடன் சிந்து இணைக்கப்படவில்லை. பிரிட்டிஷார் பலுசிஸ்தானைக் கைப்பற்றியிருக்கவில்லை என்றால், பஞ்சாபிலிருந்து வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தை கர்ஸான் பிரபு பிரிக்காதிருந்தால் பாகிஸ்தான் ஒரு நிர்வாக யூனிட்டாக உருவாக்கப்படுவதை நீண்ட காலத்திற்கு முன்பே நாம் பார்த்திருப்போம்.

வங்காளத்தில் ஒரு தேசிய முஸ்லீம் அரசை உருவாக்கும் பிரச்சினையை இனி எடுத்துக் கொள்வோம். இதிலும் புதுமை எதுவும் இல்லை. வங்காள மற்றும் அஸ்ஸாம் மாகாணத்தை 1. டாக்காவை தலைநகராகக் கொண்டு கிழக்கு வங்க, அஸ்ஸாம் மாகாணம் என்றும், 2. கல்கத்தாவைத் தலைநகராகக் கொண்டு மேற்கு வங்க மாகாணம் என்றும் 1905 ஆம் ஆண்டு வாக்கிலேயே கர்ஸான் பிரபு இரண்டாகப் பிரித்தது பலருக்கு நினைவிருக்கும். புதிதாக உருவாக்கப்பட்ட கிழக்கு வங்க, அஸ்ஸாம் மாகாணத்தில் அசாமும் பழைய வங்க மாகாணத்தைச் சேர்ந்த பின்கண்ட மாவட்டங்களும் அடங்கியிருந்தன: 1. டாக்கா, 2. மைமன்சிங், 3. பரித்பூர், 4. பாக்கர்கஞ்ச், 5. திப்பேரா, 6. நௌகாலி, 7. சிட்டகாங், 8. சிட்டகாங் குன்றுப் பகுதிகள், 9. ராஜசாஹி, 10. தினாஜ்பூர், 11. ஜல்பைகுரி, 12. ரங்பூர், 13. போக்ரா, 14. பாப்னா, 15. மால்டா. பழைய வங்க, அஸ்ஸாம் மாகாணத்தின் எஞ்சிய மாவட்டங்களும், அத்துடன் மத்திய மாகாணத்திலிருந்து சம்பல்பூர் மாவட்டமும் சேர்ந்து மேற்கு வங்க மாகாணம் உருவாயிற்று.

ஒரு மாகாணத்தை இரு மாகாணங்களாகப் பிரிக்கும் இந்த நடவடிக்கை இந்திய வரலாற்றில் வங்கப் பிரிவினை என்று குறிக்கப் படுகிறது. கிழக்கு வங்கத்தில் ஒரு முஸ்லீம் அரசை உருவாக்கும் முயற்சி என இதனைக் கூறலாம்; அஸ்ஸாமின் சில பகுதிகளைத் தவிர புதிய கிழக்கு வங்க, அஸ்ஸாம் மாகாணம் முஸ்லீம்களைப் பெரும் பான்மையினராகக் கொண்டிருந்ததே இதற்குக் காரணம். இந்துக்கள் இந்தப் பிரிவினையை மிகக் கடுமையாக எதிர்த்தனர்; முஸ்லீம்களின் ஆர்வ விருப்பங்களை அவர்கள் மதிக்கவில்லை; முஸ்லீம்களும் தங்கள் பலத்தை வெளிப்படுத்தக்கூடிய நிலையில் இல்லை; அந்த அளவுக்கு அவர்கள் பலவீனமாக இருந்தனர். எனவே, 1911 ஆம் ஆண்டு பிரிட்டிஷார் இந்தப் பிரிவினையை ரத்து செய்தனர். வங்கப் பிரிவினை இவ்வாறு ரத்துச் செய்யப்பட்டிருக்கவில்லை என்றால், கிழக்கு வங்க முஸ்லீம் அரசு ஒரு புதிய திட்டமாக இருப்பதற்குப் பதிலாக அதற்கு இப்போது 39 வயதாகி இருக்கும்.[1]

---

1. இந்திய அரசு கெஜெட் அறிவிப்பு நிர். 2832, செப்டம்பர் 1, 1905 அக்டோபர் 16 ஆம் தேதி முதல் இரண்டு மாகாணங்களும் தனித்தனி நிர்வாக யூனிட்டுகளாக மாறின.

# III

இந்துஸ்தானத்திலிருந்து பாகிஸ்தானைப் பிரிக்கும் திட்டம் அதிர்ச்சி தரக்கூடிய திட்டமா? அவ்வாறாயின், இந்தப் பிரச்சினையுடன் தொடர்புடையவையும், காங்கிரஸ் கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகளாக அமைந்திருப்பவையுமான சில அம்சங்களை இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். திரு. காந்தி காங்கிரசைக் கைப்பற்றியதுமே அந்த அமைப்பைப் பிரபலப்படுத்த இரண்டு நடவடிக்கை மேற்கொண்டார். அவர் மேற்கொண்ட முதல் நடவடிக்கை சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கியதாகும்.

இந்திய அரசியலில் திரு. காந்தி பிரவேசிப்பதற்கு முன்னர், ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றும் போட்டியில் ஈடுபட்டிருந்த கட்சிகள் காங்கிரசும், லிபரல்களும், வங்காளப் பயங்கரவாதிகளும் தான் எனலாம். உண்மையில் இப்போட்டியில் காங்கிரசும் லிபரல்களும் ஒரு கட்சியினராக, ஒரு தரப்பினராக இருந்தனர்; இன்று அவர்களைப் பிரிப்பது போன்ற வேறுபாடுகள் ஏதும் அன்று அவர்களிடையே இல்லை. ஆதலால் இந்தியாவில் அன்று லிபரல்கள், பயங்கரவாதிகள் ஆகிய இரு கட்சியினரே இருந்தனர் என்று சொல்ல வேண்டும். இந்த இரு அமைப்புகளிலும் சேருவதற்கான நிபந்தனைகள் மிகக் கடுமையானவையாக, கடினமானவையாக இருந்தன. லிபரல் கட்சியில் சேரவேண்டுமென்றால் கல்வி கற்றிருப்பது மட்டுமன்றி கல்வித் துறையில் உயர்ந்த பட்டம் பெற்றவராகவும் இருக்க வேண்டும். கல்வித்துறையில் சிறப்புமிக்க இடம் பெற்றிருந்தாலன்றி, லிபரல் கட்சியில் அனுமதிக்கப்படுவது பற்றி ஒருவர் எண்ணிக்கூடப் பார்க்க முடியாது. கல்வி கற்காதவர்கள் அரசியல் அதிகார ஏணியில் ஏற முடியாதபடிப் பெரிதும் தடுக்கப்பட்டிருந்தனர். பயங்கரவாதிகளோ மிகக் கடுமையான சோதனைகளை நிர்ணயித்திருந்தனர். லட்சியத்திற்காக தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணிப்பதுடன் நில்லாமல், தங்கள் உயிரையே தியாகம் செய்யச் சித்தமாக இருப்பவர்கள் மட்டுமே அவர்களது அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். எனவே, வீணர்கள் எவரும் பயங்கரவாதிகளின் இயக்கத்தில் சேர முடியாது. இதே சமயம், சட்டமறுப்பு இயக்கத்தில் சேர கல்வி தேவையில்லை; உயிரைக் கொடுக்க வேண்டும் என்று அது கோரவில்லை. ஆகவே, கல்வி கற்றிராத, கடும் தண்டனை எதையும் ஏற்க விரும்பாத, ஆனால் அதேசமயம் தேசபக்தர்கள் என்ற பெருமையை, புகழை ஈட்ட ஆர்வம் கொண்ட ஏராளமானோருக்குச் சட்ட மறுப்பு இயக்கம் என்பது ஓர் எளிதான, நடுத்தர மார்க்கமாக அமைந்திருந்தது.

இந்த நடுத்தர மார்க்கம் தான் லிபரல் கட்சியை விடவும், பயங்கர வாதிகளின் கட்சியை விடவும் காங்கிரசை அதிக பிரபலமானதாக ஆக்கிற்று.

திரு. காந்தி மேற்கொண்ட இரண்டாவது நடவடிக்கை மொழி வாரி மாகாணங்கள் என்ற கோட்பாட்டை அறிமுகப்படுத்தியதாகும். திரு. காந்தியின் வழிகாட்டுதல் மற்றும் தூண்டுதலின் பேரில் காங்கிரஸ் தயாரித்த அரசியலமைப்பின்படி, இந்தியாவில் பின்கண்ட மொழி மற்றும் தலைநகர்களுடன் கீழ்க்கண்டவாறு மாகாணங்கள் அமைந்திருக்கும்:

| மாகாணம் | மொழி | தலைநகரம் |
|---|---|---|
| ஆஜ்மீர்-மேர்வாரா | ஹிந்துஸ்தானி | ஆஜ்மீர் |
| ஆந்திரா | தெலுங்கு | சென்னை |
| அஸ்ஸாம் | அசாமி | கௌஹாத்தி |
| பீகார் | ஹிந்துஸ்தானி | பாட்னா |
| வங்காளம் | வங்காளி | கல்கத்தா |
| பம்பாய் (நகரம்) | மராத்தி-குஜராத்தி | பம்பாய் |
| டில்லி | ஹிந்துஸ்தானி | டில்லி |
| குஜராத் | குஜராத்தி | ஆமதாபாத் |
| கர்னாடகம் | கன்னடம் | தார்வார் |
| கேரளம் | மலையாளம் | கள்ளிக்கோட்டை |
| மகாகோசலம் | ஹிந்துஸ்தானி | ஜப்பல்பூர் |
| மகாராஷ்டிரம் | மராத்தி | புனா |
| நாகபுரி | மராத்தி | நாகபுரி |
| வ.மே.எ. மாகாணம் | புஷ்டு | பெஷாவர் |
| பஞ்சாப் | பஞ்சாபி | லாகூர் |
| சிந்து | சிந்தி | கராச்சி |
| தமிழ்நாடு | தமிழ் | சென்னை |
| ஐக்கிய மாகாணங்கள் | ஹிந்துஸ்தானி | லட்சுமணபுரி |
| உத்கல் | ஒரியா | கட்டாக் |
| விதர்பா (பேரார்) | மராத்தி | அகோலா |

இந்த ஏற்பாட்டில் பிரதேசமோ, மக்கட் தொகையோ அல்லது வருவாயோ எவ்வகையிலும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட வில்லை. ஒவ்வொரு நிர்வாக யூனிட்டும் ஒரு குறைந்தபட்ச வாழ்க்கைத் தரத்தை உத்தரவாதம் செய்யக் கூடியதாக இருக்க வேண்டும்; இதன்

பொருட்டு அந்த யூனிட் போதிய பிரதேசத்தையும், போதிய மக்கட் தொகையையும், போதிய வருவாயையும் பெற்றிருப்பது அவசியம். மொழிவழி மாகாணங்களை அமைக்கும் திட்டத்தில் இந்த முக்கிய மான, உயிர்நாடியான கருத்து இடம்பெறவில்லை. அதற்குப் பதிலாக மொழிதான் தீர்மானமான, திட்டவட்டமான அம்சமாகக் கருதப் பட்டது. இந்திய சமூக வாழ்க்கையின் உறுதியற்ற, தளர்ந்துபோன கட்டமைப்பில் இது சீர்குலைவு அம்சத்தைப் புகுத்தக்கூடும் என்ற உண்மை கணக்கிலெடுத்துக் கொள்ளப்படவே இல்லை. மக்களின் ஸ்தல உணர்வுகளுக்குத் தீனிபோட்டு, உசுப்பிவிட்டு அவர்களைக் காங்கிரசின் பக்கம் ஈர்ப்பதே இந்தத் திட்டத்தின் முழு முதல் குறிக் கோள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. மொழிவழி மாகாணங்கள் என்னும் கோட்பாடு நிலைத்து நின்றுவிட்டது; அதனைச் செயல் படுத்த வேண்டும் என்ற கோரிக்கை விடாப்பிடியாக வலியுறுத்தப் பட்டது; அதனைத் தவிர்ப்பது சாத்தியமற்றதாகிவிட்டது; எனவே, காங்கிரஸ் ஆட்சிபீடம் ஏறியபோது, அதனைச் செயல்படுத்தும்படி ஆயிற்று. ஒரிசா ஏற்கெனவே பீகாரிலிருந்து பிரிந்து சென்றுவிட்டது.[1] சென்னையிலிருந்து பிரிய வேண்டும் என்று ஆந்திரா கோரிவருகிறது. இதேபோன்று மகாராஷ்டிரத்திலிருந்து பிரிவதற்கு கர்னாடகம் துடித்துக் கொண்டிருக்கிறது.[2] மகாராஷ்டிரத்திலிருந்து பிரியவேண்டும் என்று கோராத ஒரே மொழி வழி மாகாணம் குஜராத்தான். ஒரு வகையில் குஜராத்தும் கூட பிரிவினை கோரிக்கையைத் தற்போதைக்கு ஒத்தி வைத்திருக்கிறது என்றுதான் உண்மையில் கூறவேண்டும். மகாராஷ்டிரத்துடன் இணைந்திருப்பது அரசியல் ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் லாபகரமானது என்று குஜராத் உணர்ந்திருப்பது ஒருவேளை இதற்குக் காரணமாக இருக்கலாம்.

இது எப்படி இருந்தபோதிலும், மொழிவழி அடிப்படையில் பிரிவது என்பது காங்கிரசைப் பொறுத்தவரையில் ஓர் ஏற்றுக் கொள்ளப்பட்ட கோட்பாடாகிவிட்டது என்பது வெள்ளிடைமலை. கர்னாடக - ஆந்திரப் பிரிவினை மொழிவழி அடிப்படையில் அமைந்தது என்றும், பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையோ கலாசார வேறுபாட்டின் அடிப்படையில் அமைந்தது என்றும் வாதிப்பதில் அர்த்தம் ஏதும் இல்லை. ஏனென்றால் இந்த வேறுபாட்டில் வித்தி

1. இது 1935-ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டப்படி செய்யப்பட்டது.

2. சென்னை மாகாணத்திலிருந்து கர்னாடகமும் சில மாவட்டங்களைக் கேட்கிறது.

யாசம் ஒன்றும் இல்லை. மொழிவழி வேறுபாடு என்பது கலாசார வழி வேறுபாட்டின் மறுபெயரே அன்றி வேறல்ல;

கர்னாடகமும் ஆந்திராவும் பிரிவதில் அதிர்ச்சி அளிக்கக் கூடியது எதுவும் இல்லை என்றால், பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையில் மட்டும் என்ன அதிர்ச்சி இருக்கமுடியும்? பாகிஸ்தான் கோரிக்கை சீர்குலைவை உண்டு பண்ணும் என்று வாதிப்பதனால், இந்து மாகாணங்களான கர்னாடகம், மகாராஷ்டிரத்திலிருந்தும், ஆந்திரா சென்னையிலிருந்தும் பிரிந்து செல்லுவதைவிட இது ஒன்றும் அதிக சீர்குலைவை ஏற்படுத்திவிடாது. பாகிஸ்தான் என்பது தனக்கே உரிய தனது சொந்தக் கலாசாரத்தை வளர்த்துக் கொள்வதற்குச் சுதந்திரம் வேண்டுமென்று ஒரு கலாசார யூனிட் முன்வைக்கும் கோரிக்கையின் மறுவெளிப்பாடேயாகும்.



## இயல் 2

# தாயகம் கோரும் ஒரு தேசம்

இத்தகைய பிரிவினைக் கோரிக்கைகளுக்குப் பின்னால் நிர்வாக, மொழி அல்லது கலாசார அம்சங்கள் போன்ற பல காரணக் கூறுகள் இருக்கின்றன என்ற உண்மை அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது; புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. இந்தக் கோரிக்கைகளை எவரும் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை; உண்மையைக் கூறுவதானால் பலர் அவற்றை ஏற்றுக்கொள்ளவும் செய்கின்றனர். ஆனால் இந்துக்கள் அப்படியல்ல; முஸ்லீம்கள் பிரிவினைக் கோட்பாட்டுக்கும் அப்பால் செல்லுகின்றனர் என்று அவர்கள் குறைகூறுகின்றனர். இந்தப் பாதையை அவர்கள் மேற் கொள்ள காரணம் என்ன, ஏன் பிரிவினை கேட்கின்றனர், பாகிஸ் தானுக்கும் இந்துஸ்தானுக்குமுள்ள பொதுப் பிணைப்பைச் சட்ட ரீதியாகத் துண்டிக்கவேண்டும் என்று எதற்காகக் கோருகின்றனர் என்பன போன்ற கேள்விகளை இந்துக்கள் எழுப்புகின்றனர்.

இந்தக் கேள்விகளுக்கான பதில் முஸ்லீம் லீகின் தீர்மானத் தில் காணப்படுகிறது; இந்தியாவில் உள்ள முஸ்லீம்கள் ஒரு தனி தேசம் என்று அந்தத் தீர்மானம் பிரகடனம் செய்திருக்கிறது. முஸ்லீம் லீகின் இந்தப் பிரகடனம் தான் இந்துக்களை பெரிதும் சீற்றங் கொள்ளச் செய்திருக்கிறது; எள்ளி நகையாடச் செய்திருக்கிறது.

இந்துக்கள் இவ்வாறு சீற்றம் கொள்வது முற்றிலும் இயல் பானதே. இந்தியா ஒரு தேசமா, இல்லையா என்பது இந்திய தேசிய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்ட காலம் முதலே ஆங்கிலோ - இந்தியர் களுக்கும் இந்து அரசியல்வாதிகளுக்குமிடையே சர்ச்சைக்குரிய, வாக்குவாதத்திற்குரிய ஒரு பிரச்சினையாக இருந்து வந்திருக்கிறது. இந்தியா ஒரு தேசமல்ல. 'இந்தியர்கள்' என்பது இந்திய மக்களுக்குச் சூட்டப் பட்ட மற்றொரு பெயரே தவிர வேறல்ல என்று சாற்று வதில், பகர்வதில் ஆங்கிலோ-இந்தியர்கள் என்றுமே சலித்த தில்லை; சளைத்ததில்லை. ஓர் ஆங்கிலோ- இந்தியரின் சொற்களில் கூறுவதானால்; ''இந்தியாவைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டு

மானால், இந்தியா என்று ஒன்றிருப்பதையே மறந்துவிட வேண்டும்''. மறுபுறம், இந்து அரசியல்வாதிகளும், தேசபக்தர்களும் இதற்குச் சற்றும் குறையாத உத்வேகத்தோடு, உணர்ச்சியோடு, பிடிவாதத் தோடு இந்தியா ஒரு தேசம்தான் என்று அழுத்தம் திருத்தமாக, உறுதியோடு சாதித்து வந்தனர். ஆனால் இந்தியா ஒரு தேசமல்ல என்ற ஆங்கிலோ- இந்தியர் களின் கூற்றை மறுப்பதிற்கில்லை. வங்கத்தின் தேசியக் கவிஞரான டாக்டர் தாகூரே கூட அவர்களது கருத்தை ஏற்றுக் கொள்கிறார். எனினும் இந்த விஷயத்தில் இந்துக் கள் தாகூருக்கே கூட விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை.

இதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன; முதலாவதாக, இந்தியா ஒரு தேசமல்ல என்று ஏற்றுக்கொள்வதை ஒரு பெருத்த அவமானமாக, மானக்கேடாக இந்துக்கள் கருதி வந்தனர். தேசியத் தன்மையும், தேசியமும் மக்களிடம் இருக்கவேண்டிய சீரிய பண்பு களாகக் கருதப்படும் ஓர் உலகில், திரு. எச்.ஜி.வெல்சின் சொற்களில் கூறுவதானால், தேசியத் தன்மையின்றி இந்தியா இருப்பதைப் பெரும்கூட்டம் திரண்டிருக்கும் ஓர் அவையில் ஒரு மனிதன் ஆடை யின்றி இருப்பதற்கு ஒப்பான அவக்கேடாக இந்துக்கள் உணர்ந்தனர். இரண்டாவதாக, தேசியத்தன்மைக்கும் சுயாட்சிக் கோரிக்கைக்கும் இடையே மிக நெருங்கிய தொடர்பு இருப்பதை ஓர் இந்து தெரிந் திருந்தான். மேலும், ஒரு தேசமாக அமைந்துள்ள மக்களுக்கு, அதன் காரணமாகவே, சுயாட்சி பெற உரிமை உண்டு என்பது 19 ஆம் நூற்றாண் டின் இறுதிவாக்கில் ஓர் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடாகி விட்டது என்பதையும், தனது மக்களுக்குச் சுயாட்சி கோரும் எந்த ஒரு தேசபக்தனும் அவர்கள் ஒரு தேசமாக அமைந்திருப்பதை நிரூபித்தாக வேண்டும் என்பதையும் இந்து அறிந்திருந்தான். இந்தக் காரணங் களை முன்னிட்டு, உண்மையில் இந்தியா ஒரு தேசமா, இல்லையா என்ற ஆராய்ச்சியில் இந்து ஓயாது ஒழியாது ஈடுபட்டு வந்தான். ஆனால் தேசியத்தன்மை என்பது ஒரு மக்களைத் தேசம் என்று அழைக்கும் பிரச்சினையுடன் மட்டும் சம்பந்தப்பட்டதா அல்லது மக்கள் ஒரு தேசமாக இருந்துவரும் பிரச்சினையுடன் சம்பந்தப் பட்டதா என்பதை யுக்திபூர்வமாக சீர்தூக்கிப் பார்க்க அவன் ஒரு போதும் முற்பட்டதில்லை. எனினும் அவன் ஒரு விஷயத்தை நன்கு தெரிந்து வைத்திருந்தான். அதாவது இந்தியாவுக்கு சுயாட்சிபெறும் தனது கோரிக்கையில் வெற்றி பெற வேண்டுமானால், இந்தியா ஒரு தேசம் என்பதைத் தன்னால் ஆதாரபூர்வமாக நிரூபிக்க முடியா விட்டாலும், இதில் உடும்புப் பிடிவாதம் காட்டியே ஆகவேண்டும் என்பதை அவன் அறிந்திருந்தான்.

இந்த விஷயத்தில் எந்த இந்தியனும் அவனுக்கு மறுப்பு தெரிவித்ததில்லை. தலைசிறந்த வரலாற்று ஆசிரியர்களும்கூட இந்தக் கோட்பாட்டை ஆதரித்து எழுத முன்வந்தனர். தேசபக்த நோக்கோடு, உணர்வோடுதான் அவர்கள் இவ்வாறு செய்தனர் என்பதில் ஐய மில்லை. இது ஓர் அபாயகரமான பிரமை என்பதைத் தெரிந்திருந்த இந்து சமூக சீர்திருத்தவாதிகளால் கூட இந்தக் கோட்பாட்டைப் பகிரங்கமாக எதிர்க்க முடியவில்லை. ஏனென்றால் இக்கோட்பாட் டிற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் எவரும் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் கைக்கூலி, நாட்டின் எதிரி என்று தூற்றப்பட்டனர்; முத்திரை குத்தப் பட்டனர். இதனால் இந்து அரசியல்வாதியால் தனது கருத்தை நீண்ட நெடுங்காலம் வரை பிரபலப்படுத்த முடிந்தது. அவனுடைய பகைவன் ஆங்கிலோ-இந்தியனும் அவனுக்குப் பதிலளிப்பதை, எதிர்வாதம் செய்வதை நிறுத்திக் கொண்டுவிட்டான். இந்து அரசியல்வாதியின் பிரசாரம் கிட்டத்தட்ட வெற்றியடையும் தறுவாயில் இருந்தது. இந்த சமயத்தில்தான் முஸ்லீம் லீகின் இந்தப் பிரகடனம் வெளியிடப்பட் டிருக்கிறது; வெண்ணெய் திரண்டுவரும் வேளையில் தாழி உடைந்து விட்டிருக்கிறது; குழப்பத்தின் கருநிலை உருவாகி இருக்கிறது. இந்த அடி ஆங்கிலோ-இந்தியனிடமிருந்து வரவில்லை என்றாலும் பயங் கரமான அடியாக விழுந்திருக்கிறது. இந்து அரசியல்வாதி வருடக் கணக்கில் செய்து வந்துள்ள பணியை இது நிர்மூலமாக்கி இருக்கிறது. இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் ஒரு தனித்தேசம் என்றால், அப்போது இந்தியா ஒரு தேசமல்ல என்றாகிறது. இந்து அரசியல்வாதிகளின் அடித்தளத்தையே, அஸ்திவாரத்தையே இது தகர்க்கிறது. எனவே, அவர்கள் கவலையும் அதிர்ச்சியும் அடைவதும், முதுகில் விழுந்த குத்து என்று பிரலாபிப்பதும் முற்றிலும் இயல்பே.

ஆனால் குத்தோ, இல்லையோ இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் முசல்மான்களை ஒரு தேசம் என்று கூறலாமா என்பதுதான். இது ஒருபுறமிருக்க, இங்கு ஒரு கேள்வி எழுகிறது; ஒரு தேசம் என்பது என்ன? இது குறித்து எவ்வளவோ எழுதப்பட்டிருக்கிறது. இதுபற்றித் தெரிந்து கொள்ள ஆர்வமுடைய வர்கள் அவற்றைப் படிக்கலாம்; அதன் பலதரப்பட்ட அடிப்படைக் கண்ணோட்டங்களையும் வெவ்வேறு அம்சங்களையும் தெரிந்து கொள்ளலாம். எனினும் இந்த விஷயத்தின் மையக்கருத்தை தெரிந்து கொண்டால் போதுமானது; இதனை ஒரு சில சொற்களில் கூறி விடலாம். தேசியத்தன்மை என்பது ஒரு சமூக உணர்வு. அது ஒத்த தன்மையை, இணக்கத்தை வெளிப்படுத்தும் கூட்டு உணர்ச்சிப் பாங்காகும்; இத்தகைய மெய்ப்பாட்டு உணர்வுக்கு ஆட்பட்டவர்கள்

தங்களை உற்றார் உறவினர்களாகப் பாவிக்கின்றனர். இந்த தேசிய உணர்வை இருபுறமும் கூருள்ள ஒரு வாள் எனலாம். இது ஒரு பக்கம் தனது உற்றார் உறவினர்களிடம் தோழமை பாராட்டுகிறது; இன்னொரு பக்கம் உற்றார் உறவினர்கள் அல்லாதவர்களிடம் தோழமை கொள்வதில்லை. இதனை ஒரு வகையான ''தனி உணர்வு நிலை'' எனலாம்; இத்தகைய உணர்வுநிலை உள்ளவர்கள் அனைவரையும் இது ஒருபுறம் மிக வலுவாக ஒன்றிணைக்கிறது; பொருளாதார முரண்பாடுகளாலும் சமூக படிநிலைகளாலும் எழக்கூடிய வேறுபாடுகள் அனைத்தையும் சமாளிக்க இது துணைபுரிகிறது. இன்னொருபுறம், இத்தகைய உணர்வுநிலை இல்லாதவர்களிடமிருந்து இவர்களைப் பிரிக்கிறது. வேறு எந்தக் குழுவுடனும் இணைந்திருக்காத விருப்பத்தையே இது குறிக்கிறது. தேசியத்தன்மை மற்றும் தேசிய உணர்வு என்பதன் சாராம்சம் இதுதான்.

இப்போது முஸ்லீம்களின் கோரிக்கையை இந்த உரைகல்லில் உரசிப் பார்ப்போம். இந்தியாவின் முஸ்லீம்கள் தனித்த ஒரு பிரிவினரா, இல்லையா? அவர்களுக்கென ஒரு தனி உணர்வு நிலை இருப்பது உண்மையா, இல்லையா? ஒவ்வொரு முஸ்லீமும் தனது சொந்தக் குழுவினருடன் இணைந்திருக்க வேண்டும் என்று விருப்பம் கொண்டிருப்பது உண்மையா, இல்லையா?

இந்தக் கேள்விகளுக்கான விடை 'ஆம்' என்பதாக இருக்குமானால், அப்போது இந்த சர்ச்சைக்கு இத்துடன் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்; முஸ்லீம்கள் ஒரு தேசம் என்ற வாதத்தை எத்தகைய ஆட்சேபமின்றி ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இந்துக்களுக்கும் முசல்மான்களுக்கும் இடையே சிற்சில வேறுபாடுகள் இருப்பினும் அவர்கள் ஒரே தேசமாக அமையக் கூடிய அளவுக்கு அவர்களிடையே போதுமான அளவுக்கு ஒருமைப்பாடு இருக்கிறது என்பதை இந்துக்கள் புலப்படுத்தவேண்டும்; இன்னும் பச்சையாக, பட்டவர்த்தனமாகக் கூறுவதானால், ஒன்றுபட்டிருக்கும் விருப்பம் இரு தரப்பினரிடமும் இருக்கிறது என்பது உறுதிப்படுத்தப்பட வேண்டும்.

முஸ்லீம்கள் ஒரு தனி தேசத்தினர் என்ற முஸ்லீம்களது கருத்துடன் முரண்படும் இந்துக்கள் முஸ்லீம் சமுதாயத்துக்கும் இந்து சமுதாயத்துக்கும் இடையே ஒருமைப்பாட்டுப் பிணைப்புகள் போல் தோன்றும் இந்திய சமூக வாழ்க்கையின் சில அம்சங்களைத்

தங்கள் வாதத்துக்கு ஆதார அடிப்படையாகக் கொண்டிருக்கின்றனர் என்று கூறலாம்.

முதலாவதாக, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே வருண இன வேறுபாடு ஏதுமில்லை என்று கூறப்படுகிறது. பஞ்சாபி முசல்மானும் பஞ்சாபி இந்துவும், உ.பி. முசல்மானும் உ.பி. இந்துவும், பீகார் முசல்மானும் பீகார் இந்துவும், வங்காள முசல்மானும் வங்காள இந்துவும், சென்னை முசல்மானும் சென்னை இந்துவும் ஒரே வருண இனத்தைச் சேர்ந்தவர்களே ஆவர். சொல்லப்போனால், சென்னை பிராமணருக்கும் பஞ்சாப் பிராமணருக்கும் இடையே இருப்பதை விடவும் சென்னை முசல்மானுக்கும் சென்னை பிராமணருக்கும் இடையே அதிக இன உறவு இருக்கிறது என்று கூறவேண்டும்.

இரண்டாவதாக, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே மொழி ஒற்றுமையில் மிகுந்த நம்பிக்கை வைக்கப்படுகிறது. இந்துக் களிடமிருந்து மொழி வழியில் வேறுபட்ட ஒரு தனிப்பிரிவினராக இருக்கும் அளவுக்கு முஸ்லீம்களுக்கென பொதுமொழி ஏதும் இல்லை என்று கூறப்படுகிறது. மாறாக, இரு தரப்பினரிடையேயும் பரிபூரண மொழி ஒற்றுமை நிலவுகிறது எனவும் வாதிக்கப்படு கிறது. பஞ்சாபில் இந்துக்களும் முஸ்லீம்களும் பஞ்சாபி மொழி பேசுகின்றனர். சிந்துவில் இரு பிரிவினரும் சிந்தி மொழி பேசுகின் றனர். வங்காளத்தில் இருசாரரும் வங்காளியில் உரையாடுகின்றனர். குஜராத்தில் இருவரும் குஜராத்தி மொழியைப் பயன்படுத்துகின்றனர். மகாராஷ்டிரத்தில இரு சமூகத்தினரும் மராத்தி மொழிபேசுகின்றனர். இவ்வாறே ஒவ்வொரு மாகாணத்திலும் நடைபெறுகிறது. நகரங்களில் மட்டும்தான் முசல்மான்கள் உருது மொழியிலும் இந்துக்கள் அந்தந்த மாகாணத்தின் மொழியிலும் பேசுகின்றனர். ஆனால் நகரங்களுக்கு வெளியே நாட்டுப்புறத்தில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே முழு அளவில் மொழி ஒற்றுமை நிலவுகிறது. மூன்றாவதாக, இந்தியா இந்துக்களும் முஸ்லீம்களும் காலகாலமாக, பல நூற் றாண்டுகளாக ஒன்றாக சேர்ந்து வாழ்ந்துவரும் நாடு என்பதும் சுட்டிக்காட்டப்படுகிறது. அது முற்றிலும் இந்துக்களுக்கு சொந்தமான நாடு என்றோ, அதே போன்று அறவே முகமதியர்களுக்கு உரிய நாடு என்றோ கூறமுடியாது.

வருண இன ஒற்றுமையை மட்டுமன்றி, இவ்விரு சமூகத்தினரின் சமூக, கலாசார வாழ்க்கையில் நிலவும் சில குறிப்பிட்ட பொது அம்சங்களையும் இங்கு ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது. பல முஸ்லீம்

பிரிவினரின் சமூக வாழ்க்கை இந்துப் பழக்க வழக்கங்களுடனும் சம்பிரதாயங்களுடன் பின்னிப் பிணைந்திருப்பது இவ்வகையில் முக்கியமாக சுட்டிக்காட்டப்படுகிறது. உதாரணமாக, பஞ்சாபைச் சேர்ந்த அவான்கள் எனப்படும் மக்களை எடுத்துக்கொள்வோம். அவர்கள் அனைவரும் அநேகமாக முஸ்லீம்களே. அப்படியிருந்தும் அவர்கள் இந்துப் பெயர்களையே தங்களுக்குச் சூட்டிக் கொண்டுள்ளனர்; அது மட்டுமன்றி, பிராமணர்களைப் போன்று குடிவழி மரபையும் பின்பற்றி வருகின்றனர். இந்து குடும்பப் பெயர்களை முஸ்லீம்களிடையே சர்வ சாதாரணமாகக் காணலாம். எடுத்துக்காட்டாக, சௌதாரி என்பது இந்துக் குடும்பப் பெயர். ஆயினும் உ.பி.யிலும் வட இந்தியாவிலும் உள்ள ஏராளமான முஸ்லீம்கள் இப்பெயரை வைத்துக் கொண் டிருப்பது அங்கு காணப்படும் சர்வசாதாரணக் காட்சியாகும். திருமண விஷயத்தில் சில முஸ்லீம் பிரிவினர் பெயரளவில் தான் முஸ்லீம்களாக இருக்கின்றனர். அவர்கள் ஒன்று இந்துத் திருமண சடங்குகளை மட்டுமே பின்பற்றுகின்றனர் அல்லது முதலில் இந்து சம்பிரதாயப்படி திருமண வினைமுறைகளைச் செய்துவிட்டு பிறகு காஜியை அழைத்து முஸ்லீம் வழக்கப்படி அதனைப் பூர்த்தி செய்கின்றனர். முஸ்லீம்களில் சில பகுதியினர் திருமணம், பாதுகாவல், வாரிசுச் சொத்துரிமை போன்ற விஷயங்களில் இந்து சட்டமுறையையே பின்பற்றுகின் றனர். ஷரியத் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னர் பஞ்சாபிலும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் கூட இவ்வாறுதான் நடை பெற்று வந்தது. சமூகத்துறையில் சாதிமுறை எவ்வாறு இந்து சமுதா யத்தின் ஒரு பிரிக்க முடியாத பகுதியாக இருந்து வருகிறதோ அவ்வாறே அது முஸ்லீம் சமுதாயத்தின் ஒரு பகுதியாகவும் இருந்து வருகிறது. சமயத்துறையைப் பொறுத்தவரையில், பல முஸ்லீம் பிர்களுக்கு இந்து சீஷ்யர்களும், அதே போன்று சில இந்து யோகிகளுக்கு முஸ்லீம் சீடர்களும் இருந்தனர். வேறுபட்ட சமயங்களைச் சேர்ந்த ஞானிக ளிடையே மிக நெருங்கிய நட்புறவு நிலவி வந்திருப்பதைப் புலப் படுத்தும் பல உதாரணங்கள் உள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மிகுந்த நட்புறவுடனும் நல்லிணக்கத்துடனும் வாழ்ந்து வந்த ஜாமாலி சுல்தான், தியல் பவான் ஆகிய இரு துறவிகளை இவ்வகையில் எடுத்துக்காட்டாகக் கூறலாம். இந்தப் புனிதர்களின் சமாதிகள் பஞ்சாபில் ஜிராட்டில் அடுத்தடுத்து அமைந்திருப்பதுடன் இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய இரு தரப்பினராலும் மிகுந்த பயபக்தி யுடன் போற்றப்பட்டு வருகின்றன. சுமார் கி.பி. 1700ல் வாழ்ந்து வந்தவர் பாவாபாது என்னும் முஸ்லீம் சாது. அவரது கல்லறை கங்ரா மாவட்டம் ராணிடாலில் இருந்து வருகிறது. இவர் காலத்தில் வாழ்ந்து வந்த சோதி குரு குலாப்சிங் என்ற இந்து தவசியின் திருவருளால்

இவருக்குத் தீர்க்கத்தரிசி என்ற சிறப்புப் பட்டம் கிடைத்ததாகக் கூறப்படுகிறது. மறுபுறத்தில், பாபா சாஹானா என்ற இந்துத் தூயவரின் சமயக் கோட்பாடு ஜாங் மாவட்டத்தில் இன்று தீவிரமாகக் கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது. இவர் ஒரு முஸ்லீம் பிர்ரின் சீடராக இருந்தார் என்றும், அந்தப் பிர் தம்முடைய இந்து மாணாக்கரின் மிஹ்ரா என்ற உண்மையான பெயரை மீர்ஷா என்று மாற்றிவிட்டார் என்றும் சொல்லப்படுகிறது.

இவையாவும் உண்மையே என்பதில் ஐயமில்லை. முஸ்லீம் களில் பெரும்பகுதியினர் இந்துக்களின் அதே இனத்தைச் சேர்ந்த வர்கள் என்பதும் ஐயத்துக்கு அப்பாற்பட்ட உண்மை. எல்லா முகமதியர்களும் ஒரு பொதுவான மொழியைப் பேசவில்லை என்பதையும், பலர் இந்துக்கள் பேசும் அதே மொழியையே பேசு கின்றனர் என்பதையும் மறுப்பதற்கில்லை. இரு வகுப்பினருக்கும் பொதுவான சில சமூக பழக்க வழக்கங்கள் இருக்கின்றன என்பதையும் மறுத்துரைக்க முடியாது. இதேபோல், சில சமய சடங்குகளும், வினை முறைகளும், சம்பிரதாயங்களும் ஒன்றுபோலிருக்கின்றன என்பதும் முற்றிலும் உண்மை. ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது. மேலே கூறியவற்றின் அடிப்படையில் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே தேசமாக அமைந்துள்ளனர் என்று தெரிவிக்கப்படும் கருத்தை இவை யெல்லாம் ஆதரித்து நிலைநாட்டக் கூடியவையாக இருக்கின்றனவா? தாங்கள் பரஸ்பரம் பின்னிப் பிணைந்தவர்கள் என்ற உணர்வை முஸ்லீம்களின் மனத்தில் இவை ஊட்டி வளர்த்துள்ளனவா?

இந்துக்களின் வாதத்தில் பல குறைபாடுகள், ஓட்டைகள் காணப்படுகின்றன. முதலாவதாக, இந்துக்கள் சுட்டிக்காட்டியிருக்கும் பொதுவான அம்சங்கள் சமூக ஒருங்கிணைவை உருவாக்கும் பொருட்டு இரு வகுப்பினரும் பரஸ்பரம் ஒருவர் மற்றவரது வழிமுறைகளையும் பழக்கவழக்கங்களையும் ஏற்றுத் தம்முடையவையாக்கிக் கொள்ளும் உணர்வுப்பூர்வமான முயற்சியின் விளைவாகத் தோன்றியவை அல்ல என்பதை இங்கு நினைவிற் கொள்ளவேண்டும். மாறாக, இந்த ஒருமித்தத்தன்மை முற்றிலும் யாந்திரிகமான சில காரணங்களால் தோன்றியதேயாகும். அரைகுறையான மத மாற்றங்கள் இதற்கு ஓரளவு காரணம் எனலாம். சாதி இந்துக்களிடமிருந்தும், சாதிநீக்கம் செய்யப்பட்ட இந்துக்களிடமிருந்தும் பெரும்பாலான முஸ்லீம்கள் மதம் மாற்றம் செய்யப்பட்ட இந்தியா போன்ற ஒரு நாட்டில், மதம் மாறியவர்களின் முஸ்லீம் மயமாக்கம் பூரணத்துவமுடையதாகவோ, பயனுறுதியுடையதாகவோ இல்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு.

இந்துக்கள் கலகக் கொடி தூக்கி விடுவார்களோ என்ற அச்சம் ஒரு காரணமாக இருக்கலாம்; விஷயத்தை நயமாக எடுத்துக்கூறி இணங்க வைக்கும் முறையில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டிருக்கலாம்; திருச்சபை குருமார்கள் போதிய எண்ணிக்கையில் இல்லாததால் மத போதனை செய்யும் பணியில் சுணக்கம் ஏற்பட்டிருக்கலாம். எனவே, முஸ்லீம் சமூகத்தின் பெரும்பகுதியினர் தங்களது சமய வாழ்க்கை யிலும் சமூக வாழ்க்கையிலும் தங்களுடைய இந்து பூர்வீகத்தை அங்குமிங்குமாக வெளிப்படுத்தியதில் வியப்பேதுமில்லை. இந்துக் களும் முஸ்லீம்களும் பல நூற்றாண்டுக் காலமாக ஒரு பொதுவான சுற்றுச்சூழலுக்கு ஆட்பட்டிருந்தனர். ஒரு பொதுவானச் சுற்றுச்சூழல் பொதுவான விளைவுகளை ஏற்படுத்தவே செய்யும். பொதுவான சுற்றுச்சூழலின்பால் ஒருமாதிரியான முறையில் இடையறாது நடந்து கொள்வதால் ஒரு பொதுவான பாணி உருவாவது தவிர்க்க முடியாதது. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே பேரரசர் அக்பர் தொடங்கி வைத்த சமய நல்லிணக்க காலத்தின் எச்சமிச்சங்கள் என்றும் இந்தப் பொது அம்சங்களை ஓரளவுக்குக் கூறலாம்; நிகழ்காலமோ, எதிர்காலமோ இல்லாத ஒரு கடந்த காலத்தின் விளைவு எனவும் இதனைச் சொல்லலாம்.

வருண இன ஒற்றுமை, மொழி ஒற்றுமை, ஒரு பொதுவான நாட்டில் வாழ்தல் ஆகியவற்றின் அடிப்படையில் செய்யப்படும் வாதத்தைப் பொறுத்தவரையில் அது வேறுபட்டதொரு கோணத்தில் அமைந்திருப்பதைப் பார்க்கிறோம். ஒரு தேசத்தை உருவாக்குவதில் அல்லது உருச்சிதைப்பதில் இந்த அம்சங்கள் எல்லாம் தீர்மான மானவையாக இருக்கும்பட்சத்தில், இன ஒற்றுமை, மொழி ஒற்றுமை, வாழும் இடம் போன்றவற்றின் காரணமாக இந்துக்களும் முசல் மான்களும் ஒரு தேசமாக அமைந்திருக்கின்றனர் என இந்துக்கள் கூறுவது சரியாக இருக்கலாம். ஆனால் இனமோ, மொழியோ, நாடோ, ஒரு மக்களை ஒரு தேசமாக உருவாக்குவதற்குப் போது மானவை அல்ல என்பதை வரலாற்று அனுபவம் காட்டுகிறது. இந்த உண்மையை ரெனன் மிகச்சிறப்பாக எடுத்துரைத்திருக்கிறார்; இதற்கு மேலும் இதனைத் தெளிவான மொழியில் விவரிப்பது என்பது சாத்தியமல்ல. தேசியத் தன்மை என்ற தமது புகழ்பெற்ற கட்டுரையில் நீண்ட காலத்திற்கு முன்னர் ரெனன் பின்வருமாறு குறிப்பிட்டிருக் கிறார்:

> ''வருண இனத்தையும் தேசத்தையும் ஒன்றாகப் போட்டுக் குழப்பக்கூடாது. உண்மை என்னவென்றால் கலப்பற்ற தூய இனம் என்று எதுவும் இல்லை; மனித இனவியலின் அடிப்

படையின்மீது அரசியலைச் சார்ந்திருக்கச் செய்வது புராணகால விசித்திர கற்பனை விலங்கின்மீது சவாரி செய்வதற்கு ஒப்பான தாகும். இன உணர்வுகள் ஆரம்பத்தில் முக்கியத்துவம் வாய்ந் தவையாக இருந்தாலும் தமது முக்கியத்துவத்தை அடிக்கடி இழக்கும் தன்மை உடையவை. மனித வரலாறு விலங்கி யிலிலிருந்து அடிப்படையிலேயே மாறுபட்டது. கொறிவிலங்கு களுக்கும் பூனை போன்ற பிராணிகளுக்கும் போன்றே இனம்தான் எல்லாமும் அல்ல''

மொழியைப் பற்றிக் கூறும்போது ரெனன் பின்வருமாறு சுட்டிக்காட்டுகிறார்:

''மொழியானது இணக்கத்தை வரவேற்கிறது; அதனை வலுக்கட்டாயமாகத் திணிப்பதில்லை. அமெரிக்காவும் இங்கி லாந்தும் அதேபோல் ஸ்பானிஷ் அமெரிக்காவும் ஸ்பெயினும் ஒரே மொழிகளைத்தான் பேசுகின்றன; ஆனால் அதற்காக அவை ஒரே தேசங்களாகி விடவில்லை. இதற்கு மாறாக, சுவிட்சர்லாந்து மூன்று அல்லது நான்கு மொழிகளைப் பேசும் பல்வேறு பகுதிகளின் இணக்கத்தின் அடிப்படையில் உருவாகி இருக்கிறது; இதுவே அதன் ஸ்திரத்தன்மைக்கு ஆதார அடிப் படையாகவும் உள்ளது. மனிதனிடம் மொழியை விடவும் மேலான ஒன்று இருக்கிறது. அதுதான் திடசித்தம் என்பது. பல்வேறு மொழிகள் பேசப்படினும் ஒன்றுபட்டிருக்கவேண்டும் என்ற சுவிட்சர்லாந்தின் திடஉறுதி பல சந்தர்ப்பங்களில் ஒடுக்குமுறையின்மூலம், அடக்குமுறையின் மூலம் ஈட்டப் படும் மொழி ஒற்றுமையை விடவும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.''

பொது நாடு என்னும் கருத்து குறித்து ரெனன் பின்கண்ட விளக்கத்தை அளித்தார்:

''இனத்தைவிட நிலப்பரப்புதான் தேசத்தை உருவாக்குகிறது. நிலம் ஓர் அடித்தளத்தை, போருக்கும் பணிக்குமான தளத்தை வழங்குகிறது; மனிதன் அதற்கு ஆன்மாவை அளிக்கிறான்; மக்கள் எனப்படும் புனிதமானதை உருவாக்குவதில் மனிதன் தான் எல்லாமுமாக, யாதுமாக இருக்கிறான். உலோகாயத இயல்புகொண்ட எதுவும் இதனைச் செய்யமுடியாது.''

இவ்வாறு, இனம், மொழி, நாடு ஆகியவை ஒரு தேசத்தை உருவாக்கப் போதுமானவை அல்ல என்பதைத் தெளிவுபட எடுத் துரைத்த ரெனன் அப்படியானால் ஒரு தேசத்தை உருவாக்குவதற்கு அவசியமானது என்ன என்ற கேள்வியை முனைப்போடு முன் வைக்கிறார். இக்கேள்விக்கான அவரது பதிலை அவருடைய சொற் களிலேயே இங்கு தருகிறோம்:

''தேசம் என்பது ஜீவத் துடிப்புள்ள ஓர் ஆன்மா; ஓர் ஆன்மீகக் கோட்பாடு. இரண்டு விஷயங்கள் - உண்மையில் இவை இரண்டும் ஒன்றுதான் - இந்த ஆன்மாவை, இந்த ஆன்மீகக் கோட்பாட்டை உருவாக்கி உள்ளன. ஒன்றுகடந்த காலத்தியது, மற்றது நிகழ்காலத்தியது. ஒன்று எல்லோருக்கும் பொதுவான செழுமைமிக்க பண்டைப் பாரம்பரியங்கள்; மற்றது ஒன்றுபட்டு வாழ்வதற்கான உண்மையான இசைவு, ஆர்வம், காலம் காலமாக, வழிவழியாக வந்த மரபுரிமையைப் பெரிதும் போற்றிப் பேணி பாதுகாக்கும் மனத்திட்பம். மனிதன் முயற்சியின்றிச் சோம்பிக் கிடப்பவனல்ல. தனிநபரைப் போன்றே தேசமும் நீண்ட கடந்தகால முயற்சிகளின், எத்தனை எத்தனையோ தியாகங் களின், ஒருமுகநோக்கின், முழு ஈடுபாட்டின் விளைவாக உருவாவதே ஆகும். எனவே, முன்னோர்களை வழிபடுவது முற்றிலும் முறையானது என்பதில் ஐயமில்லை; ஏனென்றால் நாம் இன்றுள்ள நிலைமைக்கு நம்மைக் கொண்டு வந்தவர்கள் நம்முடைய மூதாதையர்கள்தான். வீரஞ்செறிந்த கடந்த காலம், அருந்திறல் வாய்ந்த பெருமை சான்ற பெரியோர்கள், புகழ்-போலியல்லாத, கலப்படமற்ற உண்மையான புகழையே இங்கு குறிப்பிடுகிறேன் - இவைதாம் ஒரு தேசியக் கருத்து உருவாவ தற்கான சமூக அடித்தளமாக, மூலதனமாக அமைந்துள்ளன. கடந்த காலத்தில் அனைவருக்கும் பொதுவான புகழினைப் பெற்றிருப்பது, நிகழ்காலத்தில் ஒரு பொதுவான திடசித்தம் கொண்டிருப்பது, ஒன்றுபட்டு மகத்தான காரியங்களைச் சாதித்திருப்பது, அவ்வாறே மீண்டும் செய்யும் ஆர்வம் - இவை யெல்லாம் ஒரு மக்களினத்தை உருவாக்குவதற்கு அத்தியா வசியமாகத் தேவைப்படும் அம்சங்களாகும். நாம் செய்ய ஒப்புக் கொண்ட தியாகங்களின், ஏற்பதற்கு இசைந்த துன்பத் துயரங் களின் பரிமாணம் குறித்துப் பெருமிதமடைகிறோம். நாம் நிர்மாணித்த இல்லம் குறித்துப் பெருமைப்படுகிறோம்; நமது வழித்தோன்றல்களுக்கு அதனை வழங்குவோம். 'நீங்கள் எப்படி இருந்தீர்களோ, அப்படி நாங்கள இருக்கிறோம்; நீங்கள் எப்படி

இருக்கிறீர்களோ அப்படி நாங்கள் இருப்போம்' என்ற பொருட் செறிந்த, எளிமையான ஸ்பார்ட்டா நகரத்துக் கீதமே ஒவ்வொரு நாட்டின் தேசிய கீதமாக இருக்க வேண்டும்.

''கடந்த காலத்தில் மரபுரிமையாகப்பெற்ற புகழையும் துயரங்களையும் பகிர்ந்துகொள்ளுதல், நிகழ்காலத்தில் செயல் படுத்தப்படவேண்டிய உகந்ததோர் லட்சியம்; ஒன்றாகத் துன்ப துயரங்களை அனுபவித்தல், ஒன்றாக களிவுவகை கொள்ளுதல், ஒன்றாக ஆர்வ விருப்பங்களை வளர்த்துக் கொள்ளுதல்; இவை யாவும் நடைமுறைத் தந்திரக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது பொதுவான சுங்கச்சாவடிகளை விடவும், பொது எல்லை களை விடவும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்; இன, மொழிப் பாகுபாடுகள் இருப்பினும் இவற்றை எல்லாம் புரிந்துகொள்ளமுடியும். 'ஒன்றாகத்துன்பதுயரங்களை அனுபவித் தல்' என்று சற்று முன்னர் கூறினேன். உண்மையில், ஒன்றாகத் துன்பப்படுவது ஒன்றாக மகிழ்ச்சியுறுவதைக் காட்டிலும் அதிக ஒன்றிணைக்கும் சக்திவாய்ந்தது. தேசிய நினைவுச்சின்னங் களைப் பொறுத்தவரையில், வெற்றிச்சின்னங்களை விட துயரச் சின்னங்கள் மிகவும் மதிப்பு வாயந்தவை; ஏனென்றால் அவை நாம் செய்யவேண்டிய கடமைகளை வலியுறுத்துகின்றன; பொது முயற்சியை வற்புறுத்துகின்றன.''

இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றுசேர்ந்து பெருமிதம் கொண்ட அல்லது துயருற்ற நிகழ்ச்சிகள் ஏதும் வரலாற்றில் இடம் பெற்றிருக்கின்றனவா? இதுதான் பிரச்சினையின் மிக உயிர் நாடியான அம்சம். இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றிணைந்து ஒரு தேசமாக அமைய வேண்டும் என்று இந்துக்கள் விரும்பி னால் இந்தக் கேள்விக்கு அவர்கள் பதில் அளித்தாக வேண்டும். அவர்களது உறவின் இந்த அம்சங்களைப் பொறுத்த வரையில், பரஸ்பரம் ஒருவருடன் ஒருவர் மோதிக்கொள்ளும் ஆயுதந்தாங்கிய இரண்டு பட்டாளங்களாகவே படைப் பிரிவுகளாகவே இருந்து வந்திருக்கின்றனர் என்பது கண்கூடு. ஒரு பொதுவான சாதனை புரிவதற்காக அவர்கள் ஒன்றுபட்டுப் பங்கெடுத்துக் கொண்ட தில்லை. அவர்களது கடந்தகாலம் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் அழித்துக் கொள்ளும் காலமாகவே, அரசியல் துறையிலும் சரி, சமயத்துறையிலும் சரி பரஸ்பரம் பகைமையும் கடும் வெறுப்பும் காட்டும் காலமாகவே இருந்து வந்திருக்கிறது. ''இந்து தேசிய இயக்கம்'' என்ற தமது பிரசுரத்தில் பாய் பரமானந்த் பின்கண்டவாறு சுட்டிக் காட்டியிருக்கிறார்: ''வரலாற்றில் (முஸ்லீம்களுக்கு எதிராக) இந்த

நாட்டின் கௌரவத்திற்காக, தன்மானத்திற்காக, சுதந்திரத்திற்காகப் போராடிய பிருதிவிராஜ், பிரதாப், சிவாஜி, பெரகிபிர் போன்றோரின் நினைவை இந்துக்கள் உயர்வாக மதிக்கின்றனர், போற்றிப் பாராட்டு கின்றனர். ஆனால் அதே சமயம் முகமதியர்களோ இந்தியாவின் மீது படையெடுத்த முகமது பின் காசிம் போன்றோரையும், ஔரங்கசீப் போன்ற ஆட்சியாளர்களையும் தங்களுடைய தேசிய வீரர்களைாகக் கருதுகின்றனர். சமயத்துறையில், ராமாயணம், மகாபாரதம், பகவத் கீதை போன்றவற்றிலிருந்து இந்துக்கள் ஆதர்சமும் அகத்தூண்டு தலும் பெறுகின்றனர். ஆனால் முசல்மான்களோ குரானையும் ஹாதியையும் தான் தங்களுக்கு வழிகாட்டியாகக் கொள்கின்றனர். இவ்விதம் இந்துக்களையும் முஸ்லீம்களையும் இணைக்கும் அம்சங் களைவிட அவர்களைப் பிரிக்கும் அம்சங்களே மிகவும் மேலோங்கி காணப்படுகின்றன; பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருக் கின்றன. இந்து, முகமதிய சமூக வாழ்க்கையின் சில குறிப்பிட்ட பொது அம்சங்களை ஆதாரமாகக்கொண்டும், பொதுவான மொழி, பொதுவான இனம், பொதுவான நாடு ஆகிய அம்சங்களைக் கணக்கி லெடுத்துக் கொண்டும் தற்செயலான, மேலெழுந்தவாரியான கூறுகளை. இன்றியமையாத, அடிப்படையான கூறுகளாக இந்துக்கள் தவறாகக் கற்பிதம் செய்துகொண்டுள்ளனர். பொதுவான அம்சங்கள் எனப் படுபவை இந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒன்றிணைப்பதைவிட அரசியல், சமய முரண்பாடுகள் அவர்களை மிக ஆழமாகப் பிளவு படுத்துகின்றன. இரண்டு சமூகங்களின் கடந்த காலத்தையும் இவ்விரு தரப்பினராலும் மறந்துவிடக் கூடுமானால் நிலைமை வேறுவிதமாக இருக்கும். ஒரு தேசத்தைக் கட்டி உருவாக்கும் ஓர் அம்சம் என்ற முறையில் இந்த மறக்கும் இயல்பின் முக்கியத்துவத்தை ரெனன் பின்வருமாறு கோடிட்டு காட்டுகிறார்:

''மறக்கும் இயல்பு - இதனை வரலாற்றுத் தவறு எனக்கூடக் கூறுவேன் - ஒரு தேசத்தை உருவாக்குவதில் ஒரு முக்கிய அம்ச மாக விளங்குகிறது; எனவே, வரலாற்று ஆய்வுகள் தீவிர மடைவது பல சந்தர்ப்பங்களில் தேசியத்தன்மைக்கு ஓர் ஆபத்தாக அமைந்துவிடுகிறது. எல்லா அரசியல் அமைப்புகளின் தொடக்க காலத்தில் நிகழ்ந்த வன்முறைச் செயல்களை, இன்னும் சொல்லப் போனால் மிக அனுகூலமான விளைவுகளை ஏற்படுத்திய நிகழ்ச்சிகளைக்கூட வரலாற்று ஆய்வு மீண்டும் வெளிச்சத்துக்குக் கொண்டு வருகிறது. மனிதப் பண்பற்ற ஈனச் செயல்கள் மூலமோ, கோரக் கொடுமைகள் மூலமோதான் எப்போதுமே ஐக்கியம்

கட்டி உருவாக்கப்பட்டு வந்திருக்கிறது. வடக்குப் பிரான்ஸ், தெற்குப் பிரான்சின் இணைப்புக்கு தரப்பட்ட விலை அற்ப சொற்பமல்ல; ஓர் இனமே பூண்டோடு அழித்தொழிக்கப்பட்டது; நூறு ஆண்டுக்காலம் நடைபெற்ற காட்டுமிராண்டித்தனமான, மிகக்கோரமான வெறியாட்டத்தின் விளைவாகவே இந்த இணைப்பு சாதிக்கப்பட்டது. சமயச் சார்பின்மையின் லட்சியப் புருஷராகக் கருதப்பட்ட பிரெஞ்சு மன்னர், முழுநிறைவான தேசிய ஒற்றுமையை நிலைநாட்டியவர் என்று பெயர்பெற்ற பிரெஞ்சு மன்னர் அவரது கொடூரச்செயல்கள் அம்பலத்துக்கு வந்தபோது, மிக அருகில் இருந்து அவர் பார்க்கப்பட்ட போது தமது செல்வாக்கை இழந்தார்; செல்லாக்காசானார். அவர் உருவாக்கிய தேசமே அவரைச் சபித்தது. பழித்தது, மீளாப் பழிக்கு ஆளாக்கிற்று; அவரது தகைமை என்ன, அவர் மதிப்பு என்ன, அவர் சாதித்தது என்ன என்பது இன்று கல்வியில் மேம்பட்டவர்களுக்கு மட்டுமே தெரியும்.

''மேற்கு ஐரோப்பிய வரலாற்றில் இந்த மகத்தான வரலாற்று விதிகள் ஏனைய நாடுகளில் முற்றிலும் வேறுபட்ட விளைவு களை ஏற்படுத்தின. பிரெஞ்சு மன்னரின் அரிய சாதனையைப் பின்பற்ற முற்பட்டபோது பல நாடுகள் பேரிடருக்கு உள்ளாகின. செயிண்ட் ஸ்டீபனின் ஆட்சியில் மகியார்களும் ஸ்லாவாக் களும் 800 ஆண்டுக்கு முன்னர் இருந்தது போன்றே பிளவு பட்டிருந்தனர்; சிண்டு பிடித்துக்கொடிருந்தனர். ஹாப்ஸ்பர்க் ஆட்சி தன் ஆளுகையின் கீழுள்ள பல்வேறு சக்திகளைப் பிணைப்பதற்குப் பதிலாகப் பிரித்து வைத்திருந்தது; ஒன்றுக்கு எதிராக ஒன்றை மோதவிட்டுக் கொண்டிருந்தது. பொஹிமியாவில், வேறொரு நாடகம் அரங்கேற்றப்பட்டது: ஒரு குப்பியில் நீரையும் எண்ணெயையும் நிரப்பி வைப்பதுபோல் அங்கு செக்குகளும் ஜெர்மானியர்களும் திணித்து வைக்கப்பட்டிருந்தனர். மத அடிப் படையில் தேசிய இனங்களைப் பிரித்துவைக்கும் துருக்கியின் கொள்கையால் மிகக் கடுமையான விளைவுகள் ஏற்பட்டன. இதனால் கிழக்குப்பகுதி நாசமடைந்தது. ஸ்மிர்னா அல்லது சலோனிகா போன்ற ஒரு நகரை எடுத்துக்கொள்ளுங்கள்; அங்கு தத்தமது சொந்த கடந்தகால நினைவலைகளைக் கொண்ட ஐந்து அல்லது ஆறு வகுப்பினரைக் காணலாம்; அவர்களிடையே பொதுவான அம்சங்கள் எனக் கூறத்தக்க எதையும் காண்பது அரிது. ஆனால் தேசம் என்று கூறுகிறபோது அதன் தனிப்பட்ட அனைத்து உறுப்பினர்களிடமும் பொதுவான அம்சங்கள் இருப்பது

அவசியம்; இதே போன்று அவர்கள் எல்லோரும் பல கடந்த கால விஷயங்களை மறந்தவர்களாகவும் இருக்கவேண்டும்; இதுதான் தேசம் என்பதன் உள்ளுறை சாரமாகும். தான் ஒரு பர்கண்டியனா, அலனா, அல்லது விசிகோத்தா என்பதை எந்தப் பிரெஞ்சுக் குடிமகனும் இன்று அறியமாட்டான்; ஒவ்வொரு பிரெஞ்சுக் குடிமகனும் செயிண்ட் பர்த்தலோமியாவையும், பதின்மூன்றாம் நூற்றாண்டில் தெற்கில் நடைபெற்ற படுகொலைகளையும் மறந்தவனாக இருக்கவேண்டும். தாங்கள் பிரெஞ்சு மரபுமூலத்தில் வந்தவர்கள் என்பதை மெய்ப்பிக்கும் சான்றுகளைக் காட்டக்கூடிய பத்துக் குடும்பங்களைக் கூட இன்று பிரான்சில் பார்க்கமுடியாது. அவ்வாறு ஏதேனும் சான்று வழங்கப்பட்டாலும் அது பெரும்பாலும் தவறானதாகவே இருக்கும்; ஏனென்றால் நமக்குத் தெரியாத ஆயிரக்கணக்கான இனக்கலப்புகளின் விளைவாக மரபுவழி அமைப்பு முறையே சீர்குலைந்து போயிருக்கும்.''

இதிலுள்ள வருந்தத்தக்க, பரிதாபத்துக்குரிய விஷயம் என்னவென்றால், இரு சமூகத்தினருமே தங்களது கடந்த காலத்தை ஒரு போதும் மறக்கவோ, துடைத்தெறியவோ முடியாது என்பதுதான். அவர்களது கடந்தகாலம் அவர்களது மதத்தில் ஆழப்பதிந்து போயுள்ளது. இதனால் கடந்தகாலத்தை மறப்பது என்பது அவர்களது மதத்தையே மறுப்பதாகும்; அதனைக் கைவிடுவதாகும். இவ்வாறு நடைபெறும் என்று எதிர்ப்பார்ப்பது முற்றிலும் வீண்.

இவ்விதம், பொதுவான வரலாற்று முன்நிகழ்வுகள், சான்றுகள் இல்லாத நிலைமையில், இந்துக்களும் முசல்மான்களும் ஒரு தேசமாக அமைந்துள்ளனர் என்ற இந்துக்களின் வாதம் அடிபட்டுப் போகிறது; வேரற்று அடிசாய்ந்துவிடுகிறது. அப்படியிருக்கும்போது இந்த வாதத்தையே உடும்புப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருப்பது மாயத்தோற்றத்திற்குப் பின்னால் ஓடுவதற்கு ஒப்பானதேயாகும். இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றிணைந்திருக்கவேண்டும் என்ற ஆர்வம் ஏதும் இந்திய முசல்மான்களிடையே காணப்படவில்லை.

முசல்மான்கள் ஒரு தேசமாக அமைந்திருக்கின்றனர் என்ற இந்த உரிமைக்கோரிக்கை அவர்களுடைய தலைவர்களுக்குப் பிற்காலத்தில் உதித்த யோசனையேயாகும் என்று கிளிப்பிள்ளைபோல் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. ஒரு குற்றச்சாட்டு என்ற முறையில் இது உண்மையே. முஸ்லீம்கள் இதுவரை தங்களை

ஒரு வகுப்பாக அழைத்துக்கொள்வதில் முற்றிலும் திருப்தியடைந்திருந்தனர். அண்மையில்தான் அவர்கள் தங்களை ஒரு தேசமாகப் பிரகடனம் செய்துகொள்ள ஆரம்பித்தனர். ஆனால் ஒருவரது நோக்கத்தைத் தாக்குகின்ற குற்றச்சாட்டு அவரது கோட்பாட்டை மறுதலிப்பதாகாது: முஸ்லீம்கள் ஒருசமயம் தங்களை ஒரு வகுப்பாகக் கூறிக்கொண்டுவந்திருக்கின்றனர். எனவே, அவர்கள் இப்போது தங்களை ஒரு தேசமாகக் கூறிக்கொள்ளமுடியாது என்று வாதிடுவது தேசிய உணர்வின் புதிரான மனோதத்துவ செயற்பாடுகளைத் தவறாகப் புரிந்துகொண்டிருப்பதையே காட்டுகிறது. ஒரு தேசமாக உருவாகக் கூடிய அம்சங்களைக் கொண்டுள்ள மக்கள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ அங்கெல்லாம் அந்த தேசிய உணர்வு வெளிப்படுத்தப் படவேண்டும், இது அவர்களது இயல்பான கடமை, அவ்வாறு சிறிதுகாலம் அதனை வெளிப்படுத்த அவர்கள் தவறி பிற்பாடு வெளியிட்டால் அந்தக் கோரிக்கை நியாயமற்றது என்பதைக் காட்டுவதற்கு இந்தத் தவற்றைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்ற கருத்தை இந்த வாதம் தன்னுள் கொண்டிப்பருப்பதாகத் தெரிகிறது. இத்தகைய வாதத்துக்கு ஆதரவாக எத்தகைய வரலாற்றுச் சான்றும் இல்லை. இது குறித்து பேராசிரியர் டோய்ன்பி பின்வருமாறு கூறுகிறார்:

> ''இந்த அம்சங்கள் ஒன்றோ அல்லது இன்னும் சொல்லப் போனால் பலவோ இருப்பதைக் கொண்டு, ஒரு தேசியப்பண்பு இருந்து வருவது குறித்து ஆரம்பத்திலேயே வாதிப்பது என்பது சாத்தியமல்ல; இவை காலகாலமாக அங்கு இருந்திருக்கலாம்; எத்தகைய உணர்வையும் அவை தூண்டாதிருக்கலாம். எனவே ஒரு விஷயத்தை வைத்து இன்னொரு விஷயத்தை வாதிப்பது இயலாத காரியம்; இதே அம்சங்களே ஓரிடத்தில் தேசிய உணர்வைத் தூண்டி ஊக்குவிக்கக்கூடும், அதே அம்சங்கள் இன்னோரிடத்தில் எத்தகைய பலனையும் ஏற்படுத்தாதிருக்கலாம்.''

இதற்கான காரணத்தைப் பேராசிரியர் பார்க்கர் சுட்டிக் காட்டியிருக்கிறார்; எத்தகைய உணர்ச்சி பிரதிபலிப்புகளையும் வெளிப்படுத்தாமல் நூற்றாண்டுக்கணக்கில்கூட சந்தடியின்றி தேசங்கள் இருந்து வருவதும் தேசிய வாழ்வுக்குரிய தார்மிக அம்சங்கள் இருந்தும்கூட அவற்றின் உறுப்பினர்கள் பலர் அவற்றை அறியாதிருப்பதும் முற்றிலும் சாத்தியமே என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். முசல்மான்கள் விஷயத்திலும் இதேபோன்று நடந்திருக்கக்கூடும். ஒரு தேசிய வாழ்க்கைக் குரிய ஆன்மீக அம்சம் தங்களிடம் இருப்பதை அவர்கள் நீண்டகாலம்

அறியவில்லை. தங்களைத் தனித் தேசமாக அங்கீகரிக்க வேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் இவ்வளவு தாமதமாக முன்வைத்த தற்கு இதுவே காரணம். ஆனால், ஒரு தேசிய வாழ்வுக்குரிய ஆன்மீக அம்சம் அவர்களிடம் இருக்கவே இல்லை என்று இதற்குப் பொருள் அல்ல.

தேசிய உணர்வு இருந்தபோதிலும், தனித் தேசமாக உருவாவதில் ஆர்வமில்லாத மக்களினங்கள் பல இருக்கின்றன என்று வாதிப்பது வீண். கனடாவிலுள்ள பிரெஞ்சுக்காரர்களையும் தென் ஆப்பிரிக்காவிலுள்ள ஆங்கிலேயர்களையும் இதற்கு உதாரணமாகக் காட்டலாம். தங்களிடம் தேசியப்பண்பு இருப்பதை அறிந்திருந்தும் பலரிடம் அது தேசியம் என்ற உணர்வைத் தட்டியெழுப்பாத சந்தர்ப்பங்கள் பல உண்டு என்பது உண்மையே. வேறுவிதமாகச் சொன்னால், தேசிய உணர்வு இல்லாமல் தங்களைத் தேசங்களாகப் பாவிக்கும் மக்கள் இருக்கக்கூடும். இந்த அடிப்படையில் முசல்மான்கள் தங்களை ஒரு தேசமாகக் கருதிக் கொள்ளலாம். ஆனால் இதைக் கொண்டு தங்களுக்கு தனி தேசிய வாழ்வைக் கோர வேண்டிய அவசியமில்லை என்று வாதிடலாம்; கனடாவில் பிரெஞ்சுக்காரர்களும் தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்களும் பெற்றுள்ளது போன்ற ஒரு நிலையோடு அவர்கள் ஏன் திருப்தியடையக்கூடாது என்று கேட்கலாம். இத்தகைய ஒரு நிலை ஏற்புடையதுதான். ஆனால் பிரிவினைக் கோரிக்கையை வலியுறுத்த வேண்டாம் என்று முஸ்லீம்களிடம் இதமாக எடுத்துரைப்பதன் மூலமே இத்தகைய நிலையை மேற்கொள்ள முடியும் என்பதை இங்கு நினைவிற் கொள்ள வேண்டும். அவர்கள் பிரிவினைதான் வேண்டும் என்று விடாப்பிடியாக வலியுறுத்தும்போது அதற்கு எதிரான வாதமாக இது இருக்க முடியாது.

மேலே கூறியபடி நயமாக எடுத்துரைப்பதை எதிர்ப்பாகத் தவறாக எடுத்துக்கொள்வதைத் தவிர்ப்பதற்கு இரண்டு விஷயங்களைக் கவனத்திற் கொள்ள வேண்டும். முதலாவதாக, தேசியப் பண்புக்கும் தேசியத்துக்கும் இடையே வேறுபாடு இருக்கிறது என்பதை கவனத்திற் கொள்ள வேண்டும். மனிதமனம் இரண்டு வேறுபட்ட உள உணர்வுகளைக் கொண்டது. தேசியப் பண்பு என்பது "ஒத்த உளப் பாங்கையும், குருதித் தொடர்புடைய இந்த உறவுப் பிணைப்பு இருப்பதை அறிந்திருப்பதையும்" குறிக்கிறது. தேசியம் என்பது "இந்த உறவுப் பிணைப்பால் கட்டுண்டவர்கள் தனித் தேசிய வாழ்வு வாழும் விருப்பத்தை"ப் பிரதிபலிக்கிறது. இரண்டாவதாக, தேசிய உணர்வு இல்லாமல் தேசியம் இருக்க முடியாது என்பதில் ஐயமில்லை. ஆனால்

இதற்கு எதிர்மறையானது எப்போதும் உண்மையாக இருக்க முடியாது என்பதையும் மனத்திற்கொள்வது முக்கியம். தேசியப்பண்பு இருக்கக் கூடும், எனினும் தேசிய உணர்வு அறவே இல்லாதிருக்கலாம். வேறு விதமாகச் சொன்னால் தேசியப் பண்பு எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே தேசியத்தைத் தோற்றுவிக்கும் என்று கூறமுடியாது. தேசியப்பண்பு தேசியமாகக் கொழுந்துவிட்டு எரிவதற்கு, எழுச்சி பெறுவதற்கு இரண்டு தகுதிகள் தேவை. முதலாவதாக, ''ஒரு தேசமாக வாழ வேண்டும்'' என்ற ஆர்வம், விருப்பம், திட உறுதி தேவை. தேசியத்தை இந்த விருப்பத்தின் ஆற்றல் மிக்க வெளிப்பாடு எனக் கூறலாம். இரண்டாவதாக, தேசியம் அமர்வுகொள்வதற்கும், ஓர் அரசாக மலரச் செய்வதற்கும், தேசத்துக்கு ஒரு கலாசாரத் தாயகத்தை உருவாக்கு வதற்கும் ஒரு பிரதேசம் இருக்கவேண்டும். இத்தகைய ஒரு பிரதேசம் இல்லையென்றால், ஆக்டன் பிரபு கூறியதுபோல், தேசியம் என்பது ''மீண்டும் வாழ்க்கையைத் தொடங்குவதற்கு ஒரு சரீரத்திற்காக அலைந்து திரிந்து அது கிடைக்காமல் மடிந்து போகும் ஓர் ஆன்மாவை ஒத்ததாகவே இருக்கும்.'' முஸ்லீம்கள் ஒரு ''தேசமாக வாழும்'' உறுதியை வளர்த்துக் கொண்டுள்ளனர். இயற்கை அவர்களுக்கு இத்தகைய ஒரு பிரதேசத்தை வழங்கியிருக்கிறது; அப்பிரதேசத்தை அவர்கள் தங்களுடையதாக்கிக் கொண்டு, அதனை ஓர் அரசாகவும், புதிதாகப் பிறந்த முஸ்லீம் தேசத்தின் கலாசாரத் தாயகமாகவும் ஆக்கிக்கொள்ள முடியும். இத்தகைய சாதகமான சூழ்நிலைமைகளைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது, கனடாவில் பிரெஞ்சுக்காரர் களும், தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்களும் வகிப்பது போன்ற ஒரு நிலையை மேற்கொள்ளத் தாங்கள் தயாராக இல்லை என்றும், தங்களுக்கென ஒரு சொந்தத் தாயகம் ஏற்படுவதையே தாங்கள் விரும்புவதாகவும் முஸ்லீம்கள் கூறினால் அதில் வியப்பேதும் இருக்கமுடியாது.



## இயல் 3

# இழிந்த நிலையிலிருந்து விடுபடுதல்

"இந்தியாவைத் துண்டாட வேண்டும் என்றும், தனி முஸ்லீம் அரசுகளை அமைக்க வேண்டும் என்றும் இந்திய முசல்மான்கள் கோருவதில் என்ன நியாயம் இருக்கிறது? எதற்காக இந்த எழுச்சி? ஏன் இந்தக் கிளர்ச்சி? அப்படி அவர்களுக்குள்ள மனக்குறைகள்தான் என்ன?" - இவ்வாறு நியாயமான சீற்ற உணர்வோடு இந்துக்கள் கேட்கின்றனர். தேசிய உணர்வு ஒரு தேசிய அரசை உருவாக்குவதற்கு ஒரு போதிய அடிப்படையாகிவிட்டது என்பது இன்று நன்கு நிலை நாட்டப் பெற்றுவிட்ட ஒரு கோட்பாடாகி விட்டன. வரலாற்றில் பரிச்சயமுள்ள எவரும் அறியாதிருக்க முடியாது. இதுபற்றி மாபெரும் வரலாற்று ஆராய்ச்சியாளரான ஆக்டன் பிரபு பின்வருமாறு கூறுகிறார்:

> "பழைய ஐரோப்பிய அமைப்பில் தேசிய இனங்களின் உரிமைகள் அரசாங்கங்களால் ஏற்றுக்கொள்ளப்படவோ, மக்களால் வலியுறுத்தப்படவோ இல்லை. தேசங்களின் நலன் களால் அல்லாது ஆளும் குடும்பங்களின் நலன்களாலேயே எல்லைகள் ஒழுங்குப்படுத்தப்பட்டுச் சீரமைக்கப்பட்டன. பொதுவாக மக்களின் ஆர்வ விருப்பங்கள் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படாமல் ஆட்சி செய்யப்பட்டு வந்தது. அனைத்து சுதந்திரங்களும் ஒடுக்கப்பட்டன; தேசிய சுதந்திரத்திற்கான கோரிக்கைகள் அப்பட்டமாக உதாசீனம் செய்யப்பட்டன; ஃபெனிலோன் குறிப்பிட்டதுபோல், ஓர் இளவரசி தனது அந்தப்புரத்தில் இருந்துகொண்டு ஆட்சி புரிந்து வந்தாள்".

தேசிய இனங்கள் ஆரம்பத்தில் அக்கறையற்றவைகளாக, கருத்தில்லாதவைகளாக, எழுச்சியற்றவைகளாக இருந்து வந்தன. ஆனால் அவை விழிப்படைந்தபோது -

> "அவை முதலில் தமது சட்டப்பூர்வமான ஆட்சியாளர் களுக்கு ஆதரவாக படையெடுப்பாளர்களை எதிர்த்துக் கிளர்ந்

தெழுந்தன. அடாவடியாக அதிகாரத்தைக் கைப்பற்றியவர்களால் தாங்கள் ஆட்சி செய்யப்படுவதை அவை ஏற்க மறுத்தன. அடுத்து, ஆட்சியாளர்கள் தங்களுக்கு இழைக்கும் கொடுமைகளை எதிர்த்து அவை கிளர்ச்சி செய்யும் தருணம் வந்தது. குறிப்பிட்ட நியாயமான குறைகளை நிவர்த்திக்க வேண்டி இந்தக் கிளர்ச்சிகள் வெடித்தன. பின்னர் பிரெஞ்சுப் புரட்சி ஆகாவென்றெழுந்தது; அது ஒரு முழுமையான மாற்றத்தைக் கொண்டு வந்தது. தாங்கள் செய்ய விரும்புவதைச் செய்வதற்குத் தங்களுக்குள்ள உரிமையின் தலைசிறந்த பிரமாண சூத்திரமாக, அடிப்படைத் தத்துவமாக தங்களது ஆர்வ விருப்பங்களை, தேவைகளைக் கருதும்படி அது மக்களுக்குப் போதித்தது. கடந்த காலத்திலும் நிகழ்கால நிலைமையாலும் கட்டுப்படுத்த முடியாத ஆட்சி உரிமை மக்களுக்கு உண்டு என்று அது பிரகடனம் செய்தது. பிரெஞ்சுப் புரட்சி போதித்த இந்தப் பாடம் அனைத்து முற்போக்குச் சிந்தனையாளர்களாலும் ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு கோட்பாடாக பரிணமித்தது. மில் இந்தக் கோட்பாட்டுக்கு தன் ஆதரவை அளித்தார். ''மனித இனத்தின் எந்தப் பகுதி தன்னை இணைத்துக் கொள்வதற்கு மனித ஜீவன்களின் பல்வேறு கூட்டமைப்புகளில் எதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளச் சுதந்திரம் பெற்றிருக்கிறது என்பதை எவராலும் கூறமுடியாது'' என்கிறார் அவர்.

பின்வருமாறு கூறுமளவுக்கும் அவர் சொல்லுகிறார்:

''அரசாங்கங்களின் எல்லைகள் பிரதானமாக தேசிய இனங்களின் எல்லைகளுக்கு இசைந்தவையாக இருப்பது பொதுவாக சுதந்திர அமைப்புகளுக்கு அத்தியாவசியமாக இருக்க வேண்டிய ஒரு தகுதியாகும்.''

தேசிய இனக் கோட்பாடு ஒரு மக்களின் விருப்பமே மற்றெல்லாவற்றையும் விட மேலானது, உன்னதமானது என்ற ஜனநாயகக் கோட்பாட்டுடன் பின்னிப் பிணைந்துள்ளது என்பதை வரலாறு காட்டுகிறது. தங்களுக்கு ஒரு தேசிய அரசு வேண்டும் என்று ஒரு தேசிய இனம் கோரும்போது அதற்கு ஆதரவாக தங்களுக்குள்ள மனக் குறைகளை அவர்கள் பட்டியல் போட்டுத் தரவேண்டும் என்று இதற்குப் பொருள் அல்ல. மக்களின் விருப்பமே இந்தக் கோரிக்கையை நியாயப்படுத்தப் போதுமானது.

ஆனால் தங்களது கோரிக்கைகளுக்கு ஆதரவாக தங்களுக் குள்ள குறைகளை எடுத்துரைப்பது அவசியம் என்று வலியுறுத்தப் படுமானால் அத்தகைய குறைகள் எண்ணிலடங்காதவை, கணக் கற்றவை என்று முஸ்லீம்கள் கூறுகின்றனர். அந்தக் குறைகளை எல்லாம் ஒரே வரியில் இரத்தினச்சுருக்கமாகக் கூறிவிடலாம். அதாவது இந்து சமுதாயத்தின் கொடுங்கோன்மையிலிருந்து அரசியல் சட்டப் பாதுகாப்புகள் அவர்களைக் காப்பாற்றத் தவறிவிட்டன.

வட்டமேசை மாநாட்டில் முஸ்லீம்கள் தங்களுக்கு வேண்டிய பாதுகாப்புகளைப் பட்டியலிட்டுத் தந்தனர். அவர்கள் சமர்ப்பித்த பதினான்கு அம்சக் கோரிக்கைகளில் இவை இடம் பெற்றிருந்தன. வட்டமேசை மாநாட்டில் பங்கு கொண்ட இந்துக்களின் பிரதிநிதிகள் இவற்றை ஏற்கவில்லை. இதனால் ஒரு முட்டுக்கட்டை நிலைமை ஏற்பட்டது. அப்போது பிரிட்டிஷ் அரசாங்கம் தலையிட்டு ''வகுப்புத் தீர்ப்பு'' எனப்படும் திட்டத்தை வழங்கிற்று. இதன்படி முஸ்லீம்கள் தங்களது எல்லாப் பதினான்கு கோரிக்கைகளையும் பெற்றனர். இந்த வகுப்புத் தீர்ப்பு இந்துக்களிடையே மிகுந்த கசப்பு உணர்வை ஏற்படுத்திற்று. ஆனால் இந்துக்கள் பொதுவாகக் காட்டிய இந்த எதிர்ப்பில் காங்கிரஸ் பங்குகொள்ளவில்லை; இத்தீர்ப்பு தேச விரோத மானது என்றும், முஸ்லீம்களின் சம்மதத்துடன் இதனை மாற்ற வேண்டும் என்றும் அது கூறியது. இந்த விஷயத்தில் முஸ்லீம்களின் உணர்வு களை ஊறுபடுத்தக் கூடாது என்பதில் காங்கிரஸ் மிகவும் கவனமாக இருந்தது. எனவே, வகுப்புத் தீர்ப்பைக் கண்டித்து மத்திய சட்ட மன்றத்தில் தீர்மானம் கொண்டு வரப்பட்டபோது காங்கிரஸ் அதை ஆதரிக்கவோ, எதிர்க்கவோ செய்யாமல் நடுநிலைமை வகித்தது. இதனால் காங்கிரஸ் எடுத்த இந்த நிலையை முகமதியர்கள் ஒரு நேச சமிக்ஞையாகக் கருதினர்.

இதற்கிடையே, இந்துக்கள் பெரும்பான்மையினராக உள்ள மாகாணங்களில் நடைபெற்ற தேர்தல்களில் காங்கிரஸ் பெரும் வெற்றி பெற்றது. இந்த வெற்றி முஸ்லீம்களின் மன அமைதியை எவ்வகையிலும் குலைத்துவிடவில்லை. காங்கிரஸ் குறித்து அச்சம் கொள்ளத் தேவையில்லை என்று அவர்கள் எண்ணினர்; நாட்டை ஆள்வதில் காங்கிரசும் முஸ்லீம் லீகும் ஒத்துழைக்கக்கூடிய சாத்தியக் கூறு இருப்பதாகவும் அவர்கள் கருதினர். ஆனால் இந்து மாகாணங் களில் இரண்டு வருடங்கள் மூன்று மாதங்கள் நடைபெற்ற காங்கிரஸ் ஆட்சி அவர்களை முற்றிலும் ஏமாற்றத்திற்கு உள்ளாக்கிற்று; அவர் களை காங்கிரசின் மிகக் கடுமையான பகைவர்களாகவும் மாற்றி

விட்டது. இது சம்பந்தமாக 1939 டிசம்பர் 22 ஆம் நாள் முஸ்லீம்கள் நடத்திய விமோசன தினம் அவர்களது கோபாவேசத்தின் ஆழத்தை, உக்கிரத்தைக் காட்டுவதாக இருந்தது. இதைவிட மோசம் என்ன வென்றால், அவர்களது கசப்பு உணர்ச்சி காங்கிரசுடன் மட்டும் நிற்கவில்லை. வட்டமேசை மாநாட்டில் சுயராஜ்யக் கோரிக்கையைப் பலமாக ஆதரித்த அதே முசல்மான்கள் இப்போது சுயராஜ்யத்தின் மிகவும் கடைந்தெடுத்த பகைவர்களாயினர்.

முஸ்லீம்கள் இந்த அளவுக்குச் சீற்றம் கொள்ளும்படியாக, கசப்படையும்படியாக காங்கிரஸ் என்ன செய்தது? காங்கிரஸ் ஆட்சியில் முஸ்லீம்கள் மிகவும் கொடுமைப்படுத்தப்பட்டதாக, கர்ணகடூரமாக அடக்கி ஒடுக்கப்பட்டதாக லீக் குற்றம் சாற்றிற்று. லீக் நியமித்த இரண்டு குழுக்கள் இது குறித்து விசாரித்து அறிக்கை சமர்ப்பித்த தாகவும் கூறப்பட்டது. இவையெல்லாம் பாரபட்சமற்ற ஒரு விசேட நீதிமன்றத்தால் விசாரிக்கப்பட வேண்டிய விஷயங்கள் என்பது ஒருபுறமிருக்க, பின்கண்ட இரண்டு விஷயங்கள் இந்த மோதலைக் கிளர்த்திவிட்டன என்பதில் ஐயமில்லை. 1) முஸ்லீம் லீகை முஸ்லீம் களின் ஏகப்பிரதிநிதியாக ஏற்க காங்கிரஸ் ஒப்பவில்லை; 2) காங்கிரஸ் மாகாணங்களில் கூட்டு மந்திரிசபைகள் அமைக்க காங்கிரஸ் மறுத்து விட்டது.

முதலில் குறிப்பிட்ட பிரச்சினையில் காங்கிரசும் லீகும் மிகப் பிடிவாதமாக, சற்றும் விட்டுக் கொடுக்காத, வளைந்து கொடுக்காதப் போக்கைக் கடைப்பிடித்தன. அஹ்ரார்கள், தேசிய முஸ்லீம்கள், ஜமயத்-அல்-உலேமா போன்ற பல முஸ்லீம் அரசியல் நிறுவனங் களில் ஒன்றாக முஸ்லீம் லீகை ஏற்றுக்கொள்ள காங்கிரஸ் தயாராக இருந்தது. ஆனால் முஸ்லீம் லீகை முஸ்லீம்களின் ஒரே பிரதிநிதியாக ஏற்றுக்கொள்ள அது தயாராக இல்லை. அதேபோன்று, முஸ்லீம் லீகும் இந்திய முசல்மான்களின் ஒரே பிரதிநிதித்துவ அமைப்பாக தன்னை ஏற்றுக்கொண்டாலொழிய, காங்கிரசுடன் எத்தகைய பேச்சுவார்த்தை களும் நடத்தத் தயாராக இல்லை. இந்துக்கள் லீகின் கோரிக்கையை அதீதமானதெனப் பழித்து அதனை இகழவும் செய்தனர். தேசங் களிடையே எவ்வாறு உடன்பாடு செய்து கொள்ளப்படுகின்றன என்ற ஆராய்ச்சியில், உசாவலில் இந்துக்கள் மட்டும் இறங்கி இருக்க வில்லை என்றால் எங்களது கோரிக்கையின் மடமையை நாங்கள் புரிந்து கொண்டிருப்போம் என்று முஸ்லீம்கள் கூறக்கூடும். மேலும், ஒரு தேசம் இன்னொரு தேசத்துடன் உடன்பாடு செய்துகொள்ள முற்படும்போது, பின்னர் குறிப்பிட்ட தேசத்தின் அரசாங்கத்தை

அத்தேசத்தை முற்றிலும் பிரதிநிதித்துவப்படுத்துவதாக அது ஏற்றுக் கொள்கிறது என்றும் வாதிக்கக்கூடும். எந்த ஒரு நாட்டிலும் அன்றைய அரசாங்கம் மக்கள் அனைவரையும் பிரதிநிதித்துவப்படுத்துவதில்லை. எல்லா இடங்களிலும் அது பெரும்பான்மையினரையே பிரதிநிதித் துவப்படுத்துகிறது. ஒவ்வொரு அரசாங்கமும் தனது குடிமக்களில் பெரும்பான்மையினரைப் பிரதிநிதித்துவப்படுத்தினால் போது மானது. இந்த ஒப்புமை இப்பிரச்சினை குறித்த காங்கிரஸ் - லீக் சர்ச்சை யிலும் பயன்படுத்தப்பட வேண்டும் என்று முஸ்லீம்கள் கோரக்கூடும். முஸ்லீம்கள் அனைவரையும் பிரதிநிதித்துவப்படுத்துவதாக லீக் இல்லாவிட்டாலும், அவர்களில் பெரும்பான்மையினரைப் பிரதிநிதித் துவப்படுத்துவதாக இருக்கும்பட்சத்தில், இந்து-முஸ்லீம் பிரச்சினை யில் ஓர் உடன்பாடு காணுவதற்கு அதனுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு காங்கிரசுக்கு ஆட்சேபம் ஏதும் இருக்க முடியாது. ஆனால் அதேசமயம், தாங்கள்தான் அரசாங்கத்தைப் பிரதிநிதித்துவப்படுத்து கிறோம் என்று உரிமை கொண்டாடும் ஒன்றுக்கு மேற்பட்ட அமைப்புகள் இருக்கும் இன்னொரு நாட்டின் அரசாங்கத்தை அங்கீ கரிக்காதிருக்கும் உரிமை ஓர் அரசாங்கத்துக்கு இருக்கிறது. இந்த அடிப்படையில் லீகை காங்கிரஸ் அங்கீகரிக்காதிருக்கக் கூடும். எனினும், தேசிய முஸ்லீம்களையோ, அஹ்ரார்களையோ அல்லது ஜமியத்-அல்-உலேமாவையோ காங்கிரஸ் அங்கீகரித்து இரு வகுப்பு களுக்கிடையேயான உடன்பாட்டின் ஷரத்துகளை வகுத்தாக வேண் டும். அதேபோழ்தில், லீகுடன் செய்துகொள்ளும் உடன்பாட்டையா அல்லது ஏனைய முஸ்லீம் அமைப்புகளுடன் செய்து கொள்ளும் உடன்பாட்டையா எந்த உடன்பாட்டை முஸ்லீம்கள் நிராகரிக்கக் கூடும் என்பதை முற்றிலும் அறிந்தே அது செயல்பட வேண்டி யிருக்கும். இந்த இரு தரப்புகளில் ஏதேனும் ஒன்றுடன் காங்கிரஸ் உடன்பாட்டுக்கு வரவேண்டும். எந்த ஒரு தரப்புடனும் உடன்பாடு செய்து கொள்ள மறுப்பது மதிகேடானது மட்டுமல்ல, விஷமத்தன மானதுமாகும். காங்கிரசின் இத்தகைய போக்கு முஸ்லீம்களை கொதிப் படையச் செய்வதோடு அவர்களைப் பொறுமை இழக்கவும் செய்யும். தங்களிடையே பிளவையும் தங்கள் அணிகளில் குழப்பத்தையும் உண்டு பண்ணி, தங்களது தரப்பைப் பலவீனப்படுத்தும் ஒரு முயற்சி யாக காங்கிரசின் இந்தப் போக்குக்கு முஸ்லீம்கள் பொருள் கொள் வதில் நியாயம் இருக்கவே செய்கிறது.

அடுத்து, இரண்டாவது பிரச்சினைக்கு வருவோம். காங்கிரஸ் அதிகாரத்துக்கு வரும் மாகாணங்களில் அமைக்கப்படும் அமைச் சரவைகளில் சட்டமன்றத்திலுள்ள முஸ்லீம் உறுப்பினர்களின்

நம்பிக்கைக்குப் பாத்திரமான முஸ்லீம் அமைச்சர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது முஸ்லீம் கோரிக்கை. காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் தங்களது இந்தக் கோரிக்கை ஏற்கப்படும் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றமே காத்திருந்தது. அவர்களது கோரிக்கையைப் பொறுத்தவரையில் காங்கிரஸ் ஒரு சட்டநுணுக்கமான போக்கையே மேற்கொண்டது. முஸ்லீம்களை தமது அமைச்சரவைகளில் சேர்த்துக் கொள்ள காங்கிரஸ் சம்மதித்தது; ஆனால் இவர்கள் தங்களது கட்சிகளிலிருந்து விலகி, காங்கிரசில் சேர்ந்து, காங்கிரஸ் உறுதிமொழியில் கையொப்பமிட வேண்டும் என்ற நிபந்தனைகளை விதித்தது. மூன்று காரணங்களுக்காக முஸ்லீம்கள் இதனை மிகக் கடுமையாக எதிர்த்தனர்.

முதலாவதாக, இதை நம்பிக்கைத் துரோகமாக அவர்கள் கருதினர். தங்களது இந்தக் கோரிக்கை அரசியல் சட்ட உணர்வுக்கு உடன்பாடானது என்று முஸ்லீம்கள் கூறுகின்றனர். அமைச்சரவைகளில் சிறுபான்மை சமூகத்தினரின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொள்வதற்கு வட்டமேசை மாநாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்டது. இதற்குச் சட்டரீதியாக வகை செய்ய வேண்டும் என்று சிறுபான்மையினர் வலியுறுத்தினர். ஆனால் இந்துக்களோ சட்டரீதியாக அன்றி மரபொழுங்கு முறையில் இப்பிரச்சினைக்குத் தீர்வு காண விரும்பினர். முடிவில் இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட ஒரு வழி கைக்கொள்ளப்பட்டது. அதாவது ஆளுநர்களுக்கு இடப்படும் செயல்துறைக் கட்டளைகளில் இந்த மரபொழுங்குக்கு வகை செய்யப்பட வேண்டும் என்றும், அமைச்சரவைகள் அமைக்கப்படும் போது இந்த மரபொழுங்கு செயல்படுத்தப்படும்படிப் பார்த்துக் கொள்வது ஆளுநர்களின் கடமைப் பொறுப்பாக இருக்க வேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. முசல்மான்கள் இதைச் சட்டரீதியாக ஆக்க வேண்டுமென்று வலியுறுத்தவில்லை; ஏனென்றால் இந்துக்களின் நல்லெண்ணத்தை அவர்கள் சார்ந்திருக்க வேண்டியவர்களாக இருந்தனர். ஆனால் முஸ்லீம்களின்பால் தான் மேற்கொள்ளும் போக்கு சரியானதாகவும் வழுவற்றதாகவும் இருக்கும் என்றும், விட்டுக்கொடுக்கும் பண்புடையதாக விளங்கும் என்றும் அவர்களை நம்பவைத்த ஒரு கட்சியால் இந்த உடன்பாடு முறிக்கப்பட்டது, அப்பட்டமாக மீறப்பட்டது.

இரண்டாவதாக, காங்கிரசின் கருத்து இந்த மரபொழுங்கின் உண்மையான நோக்கத்துக்கு முரண்பட்டதாக இருப்பதை முஸ்லீம்கள் உணர்ந்தனர். செயல்துறைக் கட்டளைகளில் காணப்படும் இது

சம்பந்தமான விதியின் வாசகத்தை அவர்கள் முழுமையாக நம்பு கின்றனர்; அதிலுள்ள "சிறுபான்மை சமூகத்தின் உறுப்பினர்" என்ற சொற்களுக்கு ஒரே ஒரு அர்த்தம்தான் இருக்க முடியும். அதாவது அந்த சமூகத்தின் நம்பிக்கையைப் பெற்றவர் என்றுதான் பொருள் கொள்ள வேண்டும் என்று அவர்கள் வாதிடுகின்றனர். ஆனால் காங்கிரஸ் மேற்கொள்ளும் நிலையோ இந்த விதியின் அர்த்தத்துக்கு நேர் மாறானதாக இருக்கிறது; நாட்டிலுள்ள எல்லாக் கட்சிகளையும் உடைத்து, காங்கிரசை இந்நாட்டின் ஒரே அரசியல் கட்சியாக்கும் மறைமுகமான, இரகசியமான முயற்சி எனக்கூட உண்மையில் இதனைக் கூறலாம். காங்கிரஸ் உறுதிமொழியில் கையெழுத்திட வேண்டும் என்ற கோரிக்கைக்கு இதைத் தவிர வேறுநோக்கம் ஏதும் இருக்க முடியாது. ஒரு சர்வாதிகார ஆட்சியை அமைக்கும் இந்த முயற்சிக்கு இந்துக்களிடம் வேண்டுமானால் வரவேற்பு இருக்கலாம்; ஆனால் சுதந்திரமான மக்கள் என்ற முறையில் முஸ்லீம்களின் அரசியல் மரணத்தையே இது குறிக்கும்.[1]

ஒப்புக்கொள்ளப்பட்ட மரபொழுங்கைச் செயல்படுத்தக் கடமைப்பட்ட ஆளுநர்கள் அவ்வாறு செய்ய மறுப்பதைக் கண்ணுற்றபோது முஸ்லீம்களின் சீற்றம் பெருமளவுக்கு அதிகரித்தது. ஆளுநர்கள் இவ்வாறு நடந்து கொண்டதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒரு நிலையான அரசை அமைக்கக்கூடிய ஒரே பெரும்பான்மை கட்சி காங்கிரஸ்தான் என்பதையும், ஆக ஒன்று காங்கிரஸ் ஆட்சி அமைக்க அனுமதிக்க வேண்டும் அல்லது அரசியல் சட்டத்தையே தற்காலிகமாக நிறுத்தி வைக்க வேண்டும். இதைத் தவிர வேறு மார்க்கமில்லை என்பதைக் கண்டபோது சில ஆளுநர்கள் மரபொழுங்கை அமல்படுத்தும் தமது கடமைப் பொறுப்பைச் செய்ய மறுத்துவிட்டனர். இதர ஆளுநர்களோ காங்கிரஸ் அரசாங்கத்தின் தீவிர ஆதரவாளர்களாக மாறி, காங்கிரசைப் போற்றிப் புகழும் அளவுக்கு அல்லது காங்கிரசின் அதிகாரப்பூர்வமான கட்சி உடையான கதர் அணியும் அளவுக்குச் சென்று

---

1. "எமது ஆளுநர் தமது அமைச்சரவைக்கு நியமனங்கள் செய்யும்போது, மிகச் சிறந்த அமைச்சர்களைத் தெரிவு செய்வதற்குப் பின்கண்டவாறு மிகுந்த முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்; அதாவது தமது அபிப்பிராயத்தில் சட்டமன்றத்தில் உறுதியான பெரும்பான்மை பெற்றிருப்பவரிடம் கலந்தாலோசித்து, சட்டமன்றத்தின் முழு மொத்த நம்பிக்கையைப் பெறுவதில் பெரிதும் சிறந்து விளங்குபவர்களையே (கூடிய மட்டும் சிறுபான்மைச் சமூகங்களைச் சேர்ந்தவர்கள் உட்பட) அவர் தமது அமைச்சர்களாக நியமிக்க வேண்டும்; இவ்வாறு செய்யும்போது தமது அமைச்சர்களிடையே கூட்டுப் பொறுப் புணர்வை ஊட்டி வளர்க்க வேண்டிய அவசியத்தை அவர் எப்போதும் மனத்திற் கொண்டிருக்க வேண்டும்".

தங்களது பாரபட்சப்போக்கைக் காட்டி, தங்கள் கடமையைச் செய்யத் தவறிவிட்டனர். இது எப்படியிருந்தாலும், தங்களுக்கு உறுதி கூறப் பட்ட ஒரு முக்கியமான பாதுகாப்பு ஏற்பாடு தங்களைக் காப்பாற்றத் தவறிவிட்டதை முஸ்லீம்கள் தெரிந்துகொண்டனர்.

முஸ்லீம்களின் இந்தக் குற்றச்சாட்டுகளுக்குக் காங்கிரசின் பதில் இருவகைப்பட்டது. முதலாவதாக, கூட்டு மந்திரிசபைகள் அமைச் சரவைகளின் கூட்டுப் பொறுப்புக்கு முரண்பாடானவை என்று அவர்கள் வாதிக்கின்றனர். இதனை ஒரு நேர்மையான வாதமாக ஏற்க முசல்மான்கள் மறுக்கின்றனர். பிரிட்டிஷார்தான் தங்கள் ஆட்சி அமைப்பின் ஒரு கோட்பாடாக இதனை முதலில் ஆக்கிய ஒரே மக்களாவர். ஆனால் அங்கும்கூட இது பின்னர் கைவிடப்பட்டு விட்டது. இந்தப் பிரச்சினை குறித்து பிரிட்டிஷ் நாடாளுமன்றம் விவாதித்தது. ஒரு சமயம் கருதப்பட்டதுபோல் இது அப்படி ஒன்றும் மீறவொண்ணாததல்ல, இதிலிருந்து விலகிச்செல்வது அரசாங்க எந்தி ரத்தின் திறமையையோ, அது தங்குதடையின்றிச் செயல்படுவதையோ எவ்வகையிலும் பாதிக்காது என்ற முடிவுக்கு வரப்பட்டது. இரண்டா வதாக, உண்மையைக் கூறுவதானால் காங்கிரஸ் அரசாங்கத்தில் கூட்டுப் பொறுப்பு ஏதுமில்லை. ஒவ்வொரு அமைச்சரும் மற்ற அமைச்சர்களுடன் சம்பந்தப்படாமல் சுதந்திரமாகவே இருக்கிறார்; பிரதம மந்திரியோ ஓர் அமைச்சர் போன்றே இருக்கிறார். எனவே, கூட்டுப் பொறுப்புப் பற்றி காங்கிரஸ் பேசுவது உண்மையிலேயே முறைகேடானது, தகாதது. இன்னும் சொல்லப்போனால் இந்த வாதம் நேர்மையற்றது, நியாயமற்றது என்றுகூடக் கூறலாம். ஏனென் றால் காங்கிரஸ் சிறுபான்மையாக உள்ள மாகாணங்களில் அவர்கள் கூட்டு மந்திரிசபைகளை அமைத்திருக்கவே செய்கின்றனர்; இதர கட்சிகளைச் சேர்ந்த அமைச்சர்களை காங்கிரஸ் உறுதிமொழியில் கையெழுத்திட வேண்டும் என்று கோரவில்லை. ''கூட்டு மந்திரி சபை மோசமானது என்றால், அது ஓர் இடத்தில் நல்லதாகவும் இன்னோ ரிடத்தில் மோசமானதாகவும் எப்படி இருக்க முடியும்?'' என்று கேட்பதற்கு முசல்மான்களுக்கு உரிமை உண்டு.[1]

இனி, காங்கிரசின் இரண்டாவது பதிலைப் பரிசீலிப்போம். பெரும்பாலான முஸ்லீம்களின் நம்பிக்கையைப் பெறாத முஸ்லீம் அமைச்சர்களைத் தாங்கள் நியமித்திருந்த போதிலும் அவர்கள்

---

1. காப்புவரிப் பிரச்சினையில் மாறுபட்ட கருத்துக் கொள்ள அமைச்சரவை எடுத்த முடிவைப் பற்றி 1932 ஜனவரி 22ஆம் தேதி பிரிட்டிஷ் பிரதமர் வெளியிட்ட அறிவிப்பையும், இதுகுறித்து நாடாளுமன்றத்தில் நடைபெற்ற விவாதத்தையும் காண்க.

முஸ்லீம் மக்களின் நலன்களைப் பாதுகாக்கத் தவறவில்லை என்று காங்கிரசார் வாதிடுகின்றனர். உண்மையிலேயே முஸ்லீம்களின் நலன் களை மேம்படுத்த அவர்கள் பல காரியங்களைச் சாதித்திருக்கலாம். அரசாங்கம் குறித்து போப்பாண்டவர் கொண்டுள்ள கருத்தை இது ஆதாரமாகக் கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. அவர் கூறினார்:

> ''அரசாங்க அமைப்பு முறைகளைப் பற்றி அறிவிலிகள் தங்க ளுக்குள் சச்சரவிட்டுக் கொண்டிருக்கட்டும்; எது மிகச் சிறந்த முறையில் நிர்வகிக்கப்படுகிறதோ அதுவே மிகச் சிறந்த அரசாங்க அமைப்பாகும்.''

இந்தப் பதிலை அளித்திருப்பதிலிருந்து முஸ்லீம்கள் மற்றும் ஏனைய சிறுபான்மையினரின் பிரதான வாதத்தை காங்கிரஸ் மேலிடம் தவறாகப் புரிந்துகொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. முஸ்லீம்களின் எதிர்வாதம் முஸ்லீம்களுக்கும் ஏனைய சிறுபான்மையினருக்கும் காங்கிரஸ் ஏதேனும் நன்மை செய்திருக்கிறதா, இல்லையா என்பது சம்பந்தப்பட்டதல்ல. அவர்களது மனக்குறை இதிலிருந்து முற்றிலும் வேறுபட்டதொரு பிரச்சினை சம்பந்தப்பட்டது. சுயராஜ்யத்தில் இந்துக்கள் ஆளும் இனமாகவும் முஸ்லீம்களும் ஏனைய சிறுபான்மை யினரும் ஆளப்படும் இனங்களாகவும் இருக்க வேண்டுமா? இதுதான் கூட்டு அமைச்சரவைகள் அமைக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை யில் அடங்கியுள்ள பிரச்சினை. இந்த விஷயத்தில் முஸ்லீம்களும் இதர சிறுபான்மையினரும் ஒரு திட்டவட்டமான, தெளிவான முடிவை மேற்கொண்டுள்ளனர். அதாவது, ஆளப்படும் இனங்களின் நிலையை ஏற்க அவர்கள் தயாராக இல்லை.

ஆளும் சமூகம் ஆளப்படும் சமூகத்திற்கு நன்மை செய்திருக் கிறது என்பது முற்றிலும் வேறுவிஷயம்; ஆளப்படும் மக்களாகத் தாங்கள் நடத்தப்படுவதை மறுக்கும், எதிர்க்கும் சிறுபான்மை சமூகத் தினரின் வாதத்துக்கு இது பதிலாக இருக்க முடியாது. இந்தியாவில் பிரிட்டிஷார் இந்தியர்களுக்கு எத்தனையோ நன்மைகள் செய்துள் ளனர். அவர்கள் சாலைகளை மேம்படுத்தியுள்ளனர்; மிகுந்த விஞ்ஞானக் கோட்பாடுகளின் அடிப்படையில் கால்வாய்கள் கட்டி யுள்ளனர்; ரயில் போக்குவரத்தைப் புகுத்தியுள்ளனர்; இந்தியர்களின் கடிதங்களை அஞ்சல் மூலம் விரைவாக அனுப்பியுள்ளனர்; அவர் களது தகவல்களை மின்னல் வேகத்தில் விரைந்தனுப்பியுள்ளனர்; அவர்களது நாணயச்செலாவணி முறையை அபிவிருத்தி செய்துள்ளனர்;

நிறுத்தலளவைகள் முகத்தலளவைகள் முதலியவற்றை ஒழுங்கு படுத்தியுள்ளனர்; நிலயியல், வானூல், மருத்துவம் சம்பந்தப்பட்ட தவறான கருத்துகளைத் திருத்தியுள்ளனர்; அவர்களிடையே நடை பெற்று வந்த சண்டைச் சச்சரவுகளை, பூசல்களைத் தடுத்து நிறுத்தி யுள்ள்னர்; அவர்களது பொருளாயத நிலைமைகளில் ஓரளவு முன் னேற்றத்தைச் சாதித்துள்ளனர். இத்தகைய சில நல்லாட்சி நடவடிக்கை களை மேற்கொண்டமைக்காக பிரிட்டிஷாரிடம் நன்றி விசுவாசத் துடன் நடந்து கொள்ளும்படியும், சுயாட்சிக்கான கிளர்ச்சியைக் கைவிடும்படியும் எவரேனும் இந்திய மக்களைக் கேட்டுக் கொண்ட துண்டா? அல்லது பிரிட்டிஷாரால் தாங்கள் அடிமை இனமாக நடத்தப்படுவதற்கு எதிரான தங்கள் எதிர்ப்பை அவர்களது சமூக நல உயர்வு, மேம்பாட்டுச் செயல்களைக் கருத்திற்கொண்டு இந்தியர்கள் கைவிட்டு விட்டார்களா? இந்தியர்கள் இவ்விதம் ஒன்றும் செய்ய வில்லை. இந்த சில நற்செயல்களைக் கண்டு அவர்கள் திருப்தியடைந்து விடவில்லை; சமாதான மடைந்து விடவில்லை; மாறாக, தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளும் உரிமைக்காகத் தொடர்ந்து போராடவே செய்தனர். இது முற்றிலும் இயல்பானதே ஆகும்; நியாயமானதேயாகும். ஏனென்றால் அயர்லாந்தின் தேசபக்தர் குர்ரன் குறிப்பிட்டது போன்று, எந்த மனிதனும் தனது தன்மானத்தை இழந்து நன்றி செலுத்த மாட்டான்; எந்தப் பெண்மணியும் தன்னுடைய கற்பைப் பறிகொடுத்து நன்றி காட்டமாட்டாள்; எந்தத் தேசமும் தனது நன்மதிப்பைக் காவு தந்து நன்றியுடையதாக இருக்காது. இதற்கு மாறாக நடந்து கொள்வது கார்லைல் சுட்டிக்காட்டியது போன்று ஒருவரது வாழ்க்கைத் தத்துவம் 'பன்றியின் தத்துவமாக' இருப்பதையே எடுத்துக்காட்டும். காங்கிரஸ் வெறுமனே சில நலமார்ந்த செயல்களைப் புரிவதைக் காட்டிலும் காங்கிரசால் தங்களது தீர்மானம் மதிக்கப்பட வேண்டும் என்பதி லேயே முஸ்லீம்களும் ஏனைய சிறுபான்மையினரும் மிகுந்த அக்கறை கொண்டுள்ளனர் என்பதை காங்கிரஸ் தலைமை உணர்ந்து கொண்ட தாக, புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. தங்கள் நிலையை நன்கு உணர்ந்துள்ள மனிதர்கள் தின்று கொழுப்பதிலேயே கண்ணும் கருத்து மாக உள்ள பன்றிகள் அல்ல. அவர்களுக்கென்று பெருமை இருக்கிறது, பெருமிதம் இருக்கிறது, சுயகௌரவம் இருக்கிறது; மலைமலையாக தங்கத்தையும் வெள்ளியையும் கொட்டி குவித்தாலும் கூட அவர்கள் தங்கள் தன்மானத்தை இழப்பதற்கு, பலியிடுவதற்கு ஒருபோதும் ஒப்பமாட்டார்கள். சுருக்கமாகச் சொன்னால், ''வாழ்க்கை என்பது ஊனுணவை விட மிக உன்னதமானது''.

காங்கிரஸ் ஓர் இந்து அமைப்பல்ல என்று கூறுவதில், வாதாடுவதில் பயனில்லை, அர்த்தமில்லை. தனது இயைபில், உருவாக்கத்தில், உள்ளடக்கத்தில் இந்துவாக உள்ள ஓர் அமைப்பு இந்துவின் மனத்தையே பிரதிபலிக்கும்; இந்துவின் ஆர்வ விருப்பங் களையே, அபிலாஷைகளையே ஆதரித்து நிற்கும். அவ்வாறு பார்க்கும் போது காங்கிரசுக்கும் இந்து மகாசபைக்கும் இடையே உள்ள ஒரே வேறுபாடு பிந்தியது தனது சொற்களில் முரட்டுத்தனமாகவும், செயல்களில் காட்டுமிராண்டித்தனமாகவும் நடந்து கொள்கிறது; காங்கிரசோ இது விஷயத்தில் சற்றுப் பண்பட்ட முறையிலும் சூழ்ச்சித் திறத்துடனும் நடந்து கொள்கிறது, அவ்வளவுதான் வித்தியாசம்! இதைத் தவிர காங்கிரசுக்கும் இந்துமகாசபைக்கும் இடையே வேறு எந்த வேறுபாடும் இல்லை.

இதேபோன்று, ஆளுவோரையும் ஆளப்படுவோரையும் காங்கிரஸ் பிரித்துப் பார்ப்பதில்லை என்று கூறுவதும் வெட்டிப் பேச்சு, உதவாக்கரை வாதம். இது உண்மையானால், ஏனைய சமூகங் களை சுதந்திரமான, சமத்துவமான பங்காளிகளாக அங்கீகரிக்க தான் தயாராக இருப்பதைக் காட்டி காங்கிரஸ் தனது நேர்மையை மெய்ப்பிக்க வேண்டும். இத்தகைய அங்கீகாரத்துக்குச் சான்று என்ன? இதற்கு ஒரே ஒரு சான்றுதான் இருக்க முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. சிறுபான்மை சமூகத்தினரின் மெய்யான பிரதிநிதிகளுடன் அதிகாரத் தைப் பகிர்ந்து கொள்வதே அது. காங்கிரஸ் இதற்குத் தயாராக இருக்கிறதா? இதற்கான பதிலை ஒவ்வொருவரும் அறிவர். காங்கிர சிடம் விசுவாசம் கொண்டிராத ஒரு சமூகத்தைச் சேர்ந்த உறுப்பின ருடன் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ள காங்கிரஸ் தயாராக இல்லை. காங்கிரசிடம் விசுவாசம் காட்டுவது அதிகாரப் பகிர்வுக்கு ஒரு முன் நிபந்தனையாக முன்வைக்கப்படுகிறது. ஒரு சமூகம் காங்கிரசிடம் விசுவாசம் கொண்டிருக்கவில்லை என்றால், அந்த சமூகம் அரசியல் அதிகாரம் பெறுவதிலிருந்து விலக்கப்பட வேண்டும் என்பது காங்கிரஸ் கடைப்பிடித்து வரும் ஒரு நியதியாகத் தோன்றுகிறது.

அரசியல் அதிகாரத்திலிருந்து விலக்கி வைக்கப்படுவதை ஆளும் இனத்துக்கும் ஆளப்படும் இனத்துக்குமுள்ள வேறுபாட்டின் சாராம்சம் எனலாம். இவ்வகையில் இந்தக் கோட்பாட்டை காங்கிரஸ் கடைப்பிடித்து வருகிறது; ஆட்சிபீடத்தில் இருந்தபோது இந்த வேறுபாட்டை காங்கிரஸ் நடைமுறைப்படுத்தி வந்தது. நாங்கள் ஏற்கெனவே எத்தனை எத்தனையோ துன்ப துயரங்களை அனுபவித்து விட்டோம். இப்போது ஆளப்படும் இனத்தின் நிலைக்கு நாங்கள்

தள்ளப்பட்டிருப்பது இவை யாவற்றிலும் கொடுமையிலும் கொடுமையாகும் என்று முசல்மான்கள் முறையிடக்கூடும். பிரிட்டிஷார் இந்த நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டது முதலே அவர்களது வீழ்ச்சியும் தாழ்ச்சியும் சரிவும் ஆரம்பமாகிவிட்டது. நிர்வாகத்திலும் பரிபாலனத்திலும் சட்டத்திலும் பிரிட்டிஷார் கொண்டு வந்த ஒவ்வொரு மாற்றமும் முஸ்லீம் சமூகத்திற்கு ஒன்றன்பின் ஒன்றாக பலத்த அடிகளாக அமைந்தது. சிவில் விஷயங்களில் இந்துக்கள் தங்கள் சட்டத்தைப் பின்பற்ற இந்தியாவின் முஸ்லீம் ஆட்சியாளர்கள் அனுமதித்தனர். ஆனால் அவர்கள் இந்து குற்றவியல் சட்டத்தை ரத்துச் செய்துவிட்டு, முஸ்லீம் குற்றவியல் சட்டத்தை நாட்டின் சட்டமாக ஆக்கினர்; எல்லா இந்துக்களும் முஸ்லீம்களும் இதனையே கடைப்பிடிக்க வேண்டும் என்று நிர்ப்பந்தித்தனர். பிரிட்டிஷார் செய்த முதல் காரியம் மற்றொரு சட்டத்தைக் கொண்டு வந்து முஸ்லீம் குற்றவியல் சட்டத்தைப் படிப்படியாக அகற்றியதேயாகும்; மக்காலேயின் குற்றத் தண்டனை சட்டத் தொகுப்பு சட்டமாக்கப்பட்டு இப்பணி பூர்த்தி செய்யப்பட்டது. இது இந்தியாவிலுள்ள முஸ்லீம் சமுதாயத்தின் தன்மானத்தின் மீதும் அந்தஸ்தின் மீதும் தொடுக்கப்பட்ட முதல் அடியாகும். இதனைத் தொடர்ந்து ஷரியத் அல்லது முஸ்லீம் சிவில் சட்டம் பிரயோகிக்கப்படும் துறைகள் குறுக்கப்பட்டன. திருமணம், வாரிசுரிமை போன்ற தனிப்பட்ட உறவுகள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் மட்டுமே இந்தச் சட்டத்தைப் பயன்படுத்தலாம் என்று வரையறுக்கப்பட்டது; அதிலும் பிரிட்டிஷார் அனுமதிக்கும் அளவுக்கே இது நடைமுறைப்படுத்தப்பட்டது. இத்துடன் கூடவே இன்னொரு முக்கிய நடவடிக்கையும் மேற்கொள்ளப்பட்டது; அதாவது அதுவரை நீதித்துறையிலும் பொது நிர்வாகத் துறையிலும் ஆட்சி மொழியாக இருந்து வந்த பாரசீக மொழி 1837-ல் நீக்கப்பட்டு, ஆங்கிலமும் வட்டார மொழிகளும் அதன் இடத்துக்கு வந்தன. அடுத்தபடியாக, காஜிகளுக்கு இருந்து வந்த அதிகாரம் ரத்து செய்யப்பட்டது; முஸ்லீம் ஆட்சிக் காலத்தில் இவர்கள்தான் ஷரியத் சட்டத்தைச் செயல்படுத்தி வந்தனர். இவர்களுக்குப் பதிலாக சட்ட அதிகாரிகளும் நீதிபதிகளும் நியமிக்கப்பட்டனர்; இவர்கள் முஸ்லீம்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை; எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களாகவும் அவர்கள் இருக்கலாம்; அவர்கள் எடுக்கும் முடிவுகள் முஸ்லீம்களைக் கட்டுப்படுத்தின. இவையெல்லாம் முஸ்லீம்களுக்குப் பலத்த அடிகளாக இருந்தன. இதன் விளைவாக, தங்கள் செல்வாக்கு சரிந்ததையும், தங்கள் மொழி முடக்கப்பட்டதையும், தங்களது கல்வி முறை செல்லாக் காசு ஆனதையும் முஸ்லீம்கள் கண்டனர். இத்துடன் நில்லாமல், அவர்களைப் பெரிதும் பாதிக்கும் வேறு பல அடிகளும் விழுந்தன;

சிந்துவையும் அயோத்தியையும் பிரிட்டிஷார் கைப்பற்றிக் கொண்டதையும், சிப்பாய் எழுச்சியையும் இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிடலாம். அதிலும் கடைசியாகக் குறிப்பிடப்பட்ட விஷயம் மேல்தட்டு முஸ்லீம்களை வெகுவாகப் பாதித்தது; இவர்களுக்கு சிப்பாய்கள் எழுச்சியில் பங்கிருக்கக்கூடும் என்ற சந்தேகத்தின் பேரில் அவர்கள் பல்வேறு தண்டனைகளுக்கு உள்ளாக்கப்பட்டனர்; அவர்களுடைய சொத்துக்கள் பரந்த அளவில் பறிமுதல் செய்யப்பட்டன. இந்த எழுச்சியின் முடிவில், மேல்தட்டு முஸ்லீம்களும் சரி, கீழ்த்தட்டு முஸ்லீம்களும் சரி மிகுந்த தொல்லைகளுக்கு ஆளாயினர்; அவர்களது பெருமிதம் படுபாதாளத்தில் வீழ்ந்தது; பெரும் ஏமாற்றம், மனக்கசப்பு என்னும் காரிருள் அவர்களைச் சூழ்ந்து கொண்டது; வறுமையும் வெறுமையும் அவர்களை வாட்டியெடுத்தன. செல்வாக்கு இழந்தவர்களாக, கல்வியற்றவர்களாக, வளமற்றவர்களாக இந்துக்களை எதிர்கொள்ளும்படி முஸ்லீம்கள் விடப்பட்டனர். பிரிட்டிஷார் நடுநிலைமை வகித்தனர். இவ்விரு சமுதாயங்களுக்கும் இடையேயான போராட்டத்தின் விளைவு பற்றி அவர்கள் அக்கறை கொள்ளவில்லை. இந்தப் போராட்டத்தின் விளைவாக முஸ்லீம்களின் நிலை மேலும் மோசமடைந்தது. பிரிட்டிஷார் இந்தியாவை அடிமைப்படுத்தியதானது இவ்விரு சமூகங்களின் பரஸ்பர நிலையில் ஒரு பரிபூரண அரசியல் புரட்சியைத் தோற்றுவித்தது. 600 ஆண்டுகள் வரை முசல்மான்கள் இந்துக்களின் எசமானர்களாக இருந்தனர். பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பு அவர்களை அதே இந்துக்களின் நிலைக்குத் தாழ்த்திவிட்டது. முஸ்லீம்களின் கண்ணோட்டத்தில், ஆளுவோராக இருந்து உடனொத்த குடிமக்கள் குடிமக்களாவதே இழிவானதாகும்; ஆனால் உடனொத்த குடிமக்கள் நிலையிலிருந்து இந்துக்களால் ஆளப்படுவோராக மாறுவதோ உண்மையில் இதைவிடவும் மிகவும் இழிவானதாகும். இத்தகைய சகிக்கவொண்ணாத, பொறுக்க முடியாத நிலையிலிருந்து விடுபடுவதற்காக தனித் தேசிய அரசுகள் அமைக்கப்பட வேண்டும் என்று தாங்கள் கோருவது, முஸ்லீம்களுக்கு ஓர் அமைதியான தாயகத்தை உருவாக்கித் தரக்கூடியதும், ஆளும் இனத்துக்கும் ஆளப்படும் இனத்துக்குமிடையேயான சச்சரவுகள் தங்கள் வாழ்க்கையைச் சிதைக்காமல், சீர்குலைக்காமலிருக்கக் கூடியதுமான தனித் தேசிய அரசுகள் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்று தாங்கள் வலியுறுத்துவது எவ்வகையிலும் நியாயமற்றதா, இயற்கைக்கு மாறானதா என்று முஸ்லீம்கள் கேட்கின்றனர்.



பகுதி II

# பாகிஸ்தான் பிரிவினைக்கு எதிராக இந்துக்களின் வாதங்கள்

பாகிஸ்தானைத் தனிநாடாகப் பிரிப்பதற்கு எதிராக இந்துக்களின் உள்ளங்களில் மூன்று காரணங்கள் நிலவுவதாகத் தெரிகிறது. அவை :

1. பிரிவினையால் இந்தியாவின் ஒருமைப்பாடு சிதறும்
2. இந்தியாவின் பாதுகாப்புக்கு ஊறுவிளையும்
3. பிரிவினையால் மதவாதச் சிக்கல்களுக்குத் தீர்வு காண முடியாது.

இக்காரணங்களில் பொருள் பொதிந்துள்ளதா? இம்மூன்று மறுப்புகளிலும் எந்த அளவுக்கு உண்மையுள்ளது? என்பனவற்றை இப்பகுதியில் ஆராய்வோம்.

## இயல் 4

# ஒருமைப்பாட்டுச் சிதறல்

## I

(பாகிஸ்தான் பிரிந்து தனி நாடாவதால்) இந்தியாவின் ஒருமைப்பாடு சிதைவுறும் என்று இந்துக்கள் குறைகூறுவதற்கு முன்னால், அவர்கள் வலியுறுத்தும் ஒருமைப்பாடு உண்மையில் நிலவுகிறதா என்பதை உறுதிசெய்து கொள்ளவேண்டும். பாகிஸ்தானுக்கும் இந்துஸ்தானுக்கும் (இந்தியாவுக்கும்) இடையே ஒருமைப்பாடு நிலவுகிறது என்பது உண்மைதானா?

ஆம் என்று விடையிறுக்கும் இந்துக்கள், முஸ்லீம்கள் பிரித்துத் தனிநாடாக்கக் கோரும் பகுதிகள் காலங்காலமாக இந்தியாவின் பகுதிகளாகவே நிலவிவந்துள்ளதைச் சான்றாக வலியுறுத்துகின்றனர். வரலாற்றின் அடிப்படையில் இஃது ஐயத்திற்கிடமில்லாத உண்மையே. இப்பகுதிகள் சந்திரகுப்தரின் ஆட்சிகாலத்திலேயே இந்தியாவின் பகுதிகளாக இருந்துவந்திருக்கின்றன. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சீனப்பயணி யுவான் சுவாங் இங்கு வந்த போதும் இப்பகுதிகள் இந்தியாவில் இருந்துவந்தனவென்பது வரலாற்று உண்மை. அக்காலத்தில் இந்தியா ஐந்து பகுதிகளாக (ஐந்து இந்தியாக்களாக) விளங்கியதென்று யுவான் சுவாங் தமது குறிப்பேடுகளில் பதிந்துள்ளார்.[1] அவை, வடஇந்தியா, மேற்கிந்தியா, மத்திய இந்தியா, கிழக்கிந்தியா, தென்னிந்தியா என்பனவாம். இவ்வைந்து பகுதிகளிலுமாக மொத்தம் 80 நாடுகள் (அரசுகள்) இருந்தன. யுவான்சுவாங்கின் கூற்றுப்படி, வடஇந்தியா என்பது பஞ்சாபை மையமாகக் கொண்டு, காசுமீரம் அதனைச் சூழ்ந்த மலை நாடுகளுடன், சிந்துநதிக்கப்பால் கிழக்கு ஆப்கானிஸ்தானம் முழுமையும் கொண்டிருந்தன; அத்துடன் இன்றைய சிஸ் - சட்லெஜ் ஆற்றையொட்டிய நாடுகளுடன் சரசுவதி

---

1. கன்னிங்ஹாமின் பண்டைய நிலவியல் (பதிப்பாசிரியர் மஜூம்தார்) பக்கங்கள் 13-14. புராணங்களை இயற்றியவர்கள் இந்தியாவை ஒன்பது பிரிவுகளாகப் பிரித்திருந்தனர்.

யாற்றுக்கு மேற்கிலிருந்த நாடுகளையும் உள்ளடக்கியிருந்தது. அதாவது காபூல், ஜாலாலாபாத், பெஷாவர், கஜினி, பானு ஆகிய மாவட்டங்கள் அனைத்தும் கபிஸ்தா நாட்டையாண்ட இந்து சத்திரிய மன்னரின் ஆட்சியின் கீழ் இருந்துவந்துள்ளன; காபூலுக்கு 27 கல் தொலைவிலுள்ள சரிகார் இவரது தலைநகரமாயிருந்திருக்கலாமென்று கருதப்படுகிறது. பஞ்சாப்(பாஞ்சால) நாட்டில் தட்சசீலம், சிங்கபுரம், உரசா, பஞ்ச், ராஜோரி முதலிய பகுதிகள் காசுமீர மன்னரின் ஆட்சியிலும், மூல்தான், ஷோர்கோட் முதலிய பகுதிகள் அடங்கிய சமவெளிப் பகுதிகள் யாவும் லாகூருக்கு அருகிலுள்ள தாகி அல்லது சங்களாவைத் தலைநகராகக் கொண்ட அரசர் ஒருவரின் ஆட்சியிலும் இருந்திருக்கின்றன. யுவான் சுவாங் இந்தியாவுக்கு வந்திருந்த காலத்தில் வடஇந்தியாவின் எல்லைகள் இவ்வாறு நிலவியதாகவே நாம் அறிகிறோம்.

ஈண்டு பேராசிரியர் டாய்ன்பீ குறிப்பிடும் கருத்து ஒன்றையும் நோக்குவோம்:

> ''வரலாற்று அடிப்படையில் உணர்ச்சிவசப்படும் போக்குகளிலிருந்து நம்மைக் காத்துக்கொள்வது அவசியம். அதாவது ஒரு காலத்தில் நிலவிய ஆனால் நிகழ்காலத்திற்கு ஒவ்வாத நிலைமைகளின் அடிப்படையில் வாதிடுவதைத் தவிர்க்க வேண்டும். இதற்குப் பல எடுத்துக்காட்டுகளைக் கொண்டு விளக்கம் தரலாம். (இரண்டாம் உலகப் போரின்போது) இத்தாலியப் படைகள் திரிபோலியைக் கைப்பற்றியதைக் குறித்து எழுதிய இத்தாலிய நாளிதழ்கள் தந்தைநாட்டின் இழந்த பகுதிகளில் ஒன்று மீட்கப்பட்டதாக எழுதின; உரோமப் பேரரசின் ஒரு மாநிலமாகத் திரிபோலி விளங்கியதை இதற்குக் காரணமாகச் சுட்டினர். அவ்வாறே கிரேக்க இனவெறியர்கள் கி.மு. நான்காம் நூற்றாண்டில் அலெக்சாண்டர் பிறந்த ஊராகிய பெல்லா, மாசிடோனியாவில் இருப்பதால், இன்றைய மாசிடோனியா முழுமையும் கிரேக்கத்துடன் சேர வேண்டுமெனக் கோரினர். இதற்கு மாறாகக் கி.பி. பத்தாம் நூற்றாண்டில் பல்கேரியப்பேரரசின் கீழ் மாசிடோனியாவின் மற்றொருமூலையிலுள்ள ஆர்க்கிடா நகரம் இருந்தமையால் மாசிடோனியா தமக்கே சேரவேண்டுமெனப் பல்கேரியர் வாதிட்டனர். மீண்டும் அப்பகுதிகள் எமாதியப் படையெடுப்பாளர்களால் வெல்லப்பட்டதன் அடிப்படையில் கிரேக்க தேசியவாதிகள் அவற்றின் மீது உரிமை கொண்டாடினர்.''

இவ்வாறு எடுத்துக் காட்டுகளை டாய்ன்பீ சுட்டுகிறார்.

இதேவகையான வாதம் இங்கும் பயன்படுத்தப்படுகிறது. அதாவது, ஒருகாலத்தில் நிலவிய, ஆனால் இன்றைக்குப் பொருந்தாத நிலைமைகளின் அடிப்படையில், அதற்குப்பின்னர் தொடர்ந்த ஓராயிரம் ஆண்டுக்கால வரலாற்று நிகழ்ச்சிகளைப் புறக்கணித்து விட்டு யுவான் சுவாங் பயணகாலத்தின் அடிப்படையில் வாதிடலும் இத்தன்மையானதுதான்.

யுவான்சுவாங் வந்த காலத்தில் பஞ்சாப் மட்டுமின்றி ஆப்கானிஸ்தானமும் கூட இந்தியாவின் ஒரு பகுதியாக இருந்த தென்பதும், அக்காலத்தில் இப்பகுதிகளில் வேதமதமும் புத்த மதமும் மட்டுமே நிலவின என்பதும் உண்மைதான். ஆனால் யுவான் சுவாங் தம் நாட்டுக்குத் திரும்பியதற்குப் பிந்தைய காலத்தில் என்னென்ன நிகழ்ச்சிகள் நடந்துள்ளன என்பதையும் நோக்க வேண்டாமா?

இந்தக்கால இடைவெளியில் நிகழ்ந்தனவற்றுள் முக்கிய மானவை வடமேற்கு எல்லை வழியாகக் கூட்டங் கூட்டமாய் வந்த முஸ்லீம் படையெடுப்புகளே. இவற்றுள் முதல் படையெடுப்பு கி.பி.711 இல் முகமது பின் காசிம் தலைமையில் நடைபெற்றது; அப்போது அரேபியர்கள் சிந்து மாநிலத்தை வென்று தம் ஆதிக் கத்தின் கீழ்கொண்டுவந்தனர். பாக்தாத்தில் ஆட்சிபுரிந்த கலீபாவின் ஆணைப்படி நிகழ்ந்த இப்படையெடுப்பு நிலையான ஆட்சிக்கு வழிகோலவில்லை; தொலைதூரத்திலிருந்து நேரடியாக ஆளுவதில் உள்ள சிரமங்களால் இவ்வாட்சி கி.பி. ஒன்பதாம் நூற்றாண் டின் மத்தியில் விலக்கிக் கொள்ளப்பட்டது.[1] இதற்குப் பின்னர் கி.பி. 1001இல் இருந்து தொடர்ச்சியாகப்பல கடும் படையெடுப்பு களைக் கஜினிமுகமது நடத்தினார். இவர் 1030 ஆம் ஆண்டு இறந்தார். ஆனால் முப்பதாண்டு காலக் குறுகிய இடைவெளியில் 17 முறை படையெடுத்தார். இவரையடுத்து 1173 ஆம் ஆண்டு முதல் கோரிமுகமது வின் படையெடுப்புகள் தொடங்கின; இவர் கி.பி. 1206 இல் கொல்லப் பட்டார். கஜினிமுகமதுவின் 30 ஆண்டுக்காலப்படையெடுப்பு களும் இந்தியாவைக் கடுமையாகப் பாதித்தன. இதனைத்தொடர்ந்து செங்கிஸ்கான் தலைமையில் மொகலாயக் கூட்டங்களின் படை யெடுப்புத் தொடங்கியது; 1221 இல் நிகழ்ந்த முதல்படையெடுப் பில் இந்தியாவின் எல்லையைத் தாக்கிவிட்டு நாட்டில் நுழை யாமல் அவர்கள் திரும்பி விட்டனர். இருபதாண்டுகளுக்குப் பின்னர்

1. முகமது கோரி மீண்டும் சிந்துவைக் கைப்பற்றினார்.

இரண்டாம் படையெடுப்பின்போது லாகூர்வரை வந்து அதனை வீழ்த்தினர். இப்படையெடுப்புகளில் 1398 இல் நிகழ்ந்த தைமூரின் படையெடுப்பே மிகப் பயங்கரமானது. பின்னர் 1526-இல் பாபரின் படையெடுப்பு நிகழ்ந்தது. இத்தகைய படையெடுப்புகள் பாபருடன் நின்றுவிடவில்லை. இரு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மேலும் இரண்டு கடுமையான படையெடுப்புகளை இந்தியா எதிர்கொள்ள நேர்ந்தது. 1738 ஆம் ஆண்டில் நாதிர்ஷாவின் கடல்போன்ற சேனைகளின் படையெடுப்பில் பஞ்சாப் மூழ்கித்திணறியது. இதனைத் தொடர்ந்து 1761 இல் நிகழ்ந்த அகமதுஷா அப்தலியின் படையெடுப்பின்போது பானிப்பட்டில் மராட்டியர்கள் ஒடுக்கப்பட்டனர்; இதையடுத்து முஸ்லீம் ஆதிக்கத்திற்கெதிரான இந்துக்களின் எழுச்சி மீண்டும் தலைதூக்கவொண்ணா வகையில் முற்றுமாக வேரறுக்கப் பட்டது.

இம் முஸ்லீம் படையடுப்புகள் நாடு பிடிக்கவும் கொள்ளையடிக்கவும் மட்டுமே நடத்தப்படவில்லை. வேறு முக்கியமானதோர் நோக்கத்தின் அடிப்படையிலும் இவை நிகழ்ந்தன. சிந்து மாநிலத்தின் துறைமுகமான தேபூலுக்கருகில் கைப்பற்றப்பட்ட கப்பலொன்றைச் சிந்துவின் அரசர் தாகீர் திருப்பித் தர மறுத்ததற்குப் பழிவாங்கும் நோக்கிலேயே முகமதுபின் காசிமின் படையெடுப்பு நிகழ்ந்தது. எனினும் பல தெய்வ, உருவ வழிபாடுகளை மேற்கொண்டிருந்த இந்திய நாட்டைத் தாக்கிவென்று முஸ்லீம் மதத்தை இங்கு நிறுவுதலும் அவர்களது குறிக்கோள்களில் ஒன்றாக இருந்தது. முகமது பின் காசிம் ஹஜ்ஜாஜுக்கு விடுத்த மடல் ஒன்றில், பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

> ''தாகீர் அரசரின் மருமகனும் படைவீரர்களும் முக்கிய அதிகாரிகளும் கொல்லப்பட்டனர். புறச்சமயிகள் பலர் இஸ்லாத்துக்கு மாறினர்; மாறாதோர் கொல்லப்பட்டனர். விக்கிரக வழிபாட்டுக் கோயில்களுக்குப் பதிலாக மசூதிகளும் வழிபாட்டிடங்களும் நிறுவப்பட்டு உரியகாலங்களில் குத்பா ஓதிவழிபாடு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நாள் தோறும் காலையும் மாலையும் தக்பீரும் எல்லாம் வல்ல இறைவனின் புகழும் முழங்குகின்றன.''[1]

1. இந்திய இஸ்லாம், டாக்டர் டைடஸ் பக்கம். 10.

சிந்து அரசரின் தலையோடு அனுப்பப்பட்ட இக்கடிதத்துக்குப் பதிலாக ஹஜ்ஜாஜ் எழுதியதாவது:

> ''பகைவர், நண்பர் என்ற வேறுபாடோ உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடோ காட்டாமல் மக்கள் அனைவருக்கும் தகுந்த பாதுகாப்பு அளிக்கவேண்டும். புறச்சமயிகளுக்கு இடங்கொடாதீர்; அவர்களது தலையை வெட்டுக' என இறைவன் கூறுகிறார். இறைவனின் இவ்வாணையை உணர்க; அதன்படி, எதிரிகளுக்குத் தாராளமாகப் பாதுகாப்பளித்துக் கொண்டே போனால் உமது பணிநீளுமென்பதையுணர்ந்து நம்மைச் சாராத எதிரிகளுக்குச் சற்றும் இடங்கொடாதிருப்பீராக.''[1]

முகமது கஜினியும் தமது பலபடையெடுப்புகளைப் புனிதப் போர்களாகவே கருதினார். இவரது வரலாற்றாசிரியரான அல்உத்பி இவரது படையெடுப்புகளைக் குறித்து எழுதுவதாவது:

> ''அவர் உருவ வழிபாட்டுக் கோயில்களை அழித்து இஸ்லாத்தை நிறுவினார். நகரங்களைக் கைப்பற்றி மூட நம்பிக்கையும் உருவ வழிபாடும் கொண்ட ஈனர்களைக் கொன்று முஸ்லீம்களுக்குத் திருப்தியளித்தார். தாய்நாடு திரும்பி இஸ்லாத்துக்காகத் தாம் பெற்ற வெற்றிகளை விவரித்ததுடன் ஆண்டுக்கொருமுறை இந்தியா மீது புனிதப்போரை மேற்கொள்வதாகவும் உறுதிபூண்டார்.''[2]

முகமதுகோரியும் தமது இந்தியப் படையெடுப்புகளைப் புனிதப் போர்களாகவே கருதினார். அவரது வரலாற்றாசிரியரான ஹசன் நிசாமி, படையெடுப்புகளைக் குறித்துக் கூறுவதாவது:

> ''அவர் பலதெய்வ வழிபாடு, உருவவழிபாடு எனும் முட்புதர்களைத் தமது வாள்கொண்டு களைந்து இந்திய நாட்டைப் புறச்சமய அழுக்கு நீக்கித் தூய்மைப்படுத்தினார். அவரது அரசாணை வீச்சின் உத்வேகம் ஒரு கோயிலைக் கூட விட்டு வைக்கவில்லை''.[3]

தமது இந்தியப் படையெடுப்பின் நோக்கம் குறித்துத் தைமூர் தமது நாட்டு குறிப்புகளில் எழுதியுள்ளதாவது:

1. டாக்டர் டைடஸின் மேற்கோள், மேற்படி நூல், பக்கம் 10.
2. மேற்படி நூல், பக். 11
3. மேற்படி நூல், பக். 11.

''(இறைவனின் ஆசியும் அருளும் தமக்கும் தமது குடும்பத்திற்கும் நிறைவாகப்பெற்ற) முகமதுநபியவர்களின் ஆணைப்படி, புறச்சமயிகளைப் போரில் வென்று மெய்யான நம்பிக்கையின் பாதைக்கு அவர்களை மாற்றுவதே எனது இந்தியப்படையெடுப்பின் நோக்கம். நம்பிக்கையின்மை, பலதெய்வவழிபாடுபோன்ற அழுக்குகளையும் கோயில்களையும் வழிபாட்டுச்சிலைகளையும் அழிப்பதன் மூலம் களைந்து அந்நாட்டைத் தூய்மைப்படுத்துவதில் இறைவனின் நம்பிக்கைக்குத் துணைவர்களாகவும் படைஞர்களாகவும் செயல்படுவோம்.'' [1]

முஸ்லீம்களின் இத்தகைய படையெடுப்புகளில் பல முஸ்லீம்களுக்கிடையிலான போர்களாகவும் நிகழ்ந்துள்ளன என்னும் உண்மையை, முஸ்லீம் படையெடுப்புகள் என இவற்றைக் கருதுவதன் மூலம் மறந்துவிடுகிறோம். ஆனால் படையெடுத்து வந்தவர்கள் தார்த்தாரியர், ஆப்கானியர், மங்கோலியர் எனப் பல்வேறு இனத்தவர்கள் என்பதே மெய். கஜினி முகமது தார்த்தாரியர்; கோரிமுகமது ஆப்கானியர்; தைமூர் மங்கோலியர்; பாபர் தார்த்தாரியர்; நாதிர்ஷாவும் அகமதுஷா அப்தலியும் ஆப்கானியர். இந்தியப் படையெடுப்புகளில், தார்த்தாரியரை அழிக்க ஆப்கானியர் நடத்திய படையெடுப்புகளும், தார்த்தாரியரையும் ஆப்கானியரையும் அழிக்க மங்கோலியர் நடத்திய படையெடுப்புகளும் அடங்கும். முஸ்லீம் படையெடுப்பாளர்கள் அனைவரையும் சமய சகோதரத்துவ அன்பால் பிணைக்கப்பட்ட, ஒரே குடும்பத்தவராய்க் கருதுதல் கூடாது. அவர்கள் ஒருவருக்கொருவர் கடும் பகைவர்களாக விளங்கி மாற்றாரைப் பூண்டோடு அழிக்கும் போர்களை நடத்தியுள்ளனர். இவ்வாறு தமக்கிடையே பலபோர்களை நிகழ்த்திக் கொண்டிருந்தாலும் கூட, இந்து மத நம்பிக்கையை ஒழிக்கும் நோக்கத்தில் இவர்கள் அனைவரும் ஒன்றுபட்டிருந்தனர் என்பதை நமது கவனத்தில் கொள்ள வேண்டும்.

எனவே இந்திய வரலாற்றுப் போக்கினை ஆராயும்போது, படையெடுப்பாளர்களின் அடிப்படை நோக்கமே, அவர்கள் கையாண்ட முறைகளைவிடப் பெரும் பங்கு வகிக்கிறது என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

1. லேன் பூலே, மத்திய கால இந்தியா, பக்கம் 155.

படையெடுப்பில் வென்ற காசிம் முகம்மதுவின் முதல் சமயச் செயலே தேபூல் நகரில் சிறைப்பிடிக்கப்பட்ட பார்ப்பனர்கள் அனைவரையும் சுன்னத் செய்துக்கொள்ளக் கட்டாயப்படுத்தியதே ஆகும். இத்தகைய பலவந்த மதமாற்றத்திற்கு வலுவான எதிர்ப்பு காட்டப்பட்டதால் 17 வயதிற்கு மேற்பட்டோர் அனைவரும் கொல்லப்பட்டனர்; ஏனையோர், பெண்கள், குழந்தைகள் உட்பட, அடிமைகளாக்கப்பட்டனர். மேலும், இந்துக் கோயில்கள் கொள்ளையடிக்கப்பட்டு, கிடைத்த கொள்ளையில் ஐந்தில் ஒரு பங்கை அரசாங்கத்துக்கு ஒதுக்கி மீதியைப் படையினரே பங்குபோட்டுக் கொண்டனர்.

கஜினி முகம்மது தொடக்கத்திலிருந்தே இந்துக்களின் உள்ளங்களில் பீதியைத் தோற்றுவிக்கும் நடைமுறைகளை மேற்கொண்டார். கி.பி. 1001இல் ஜெய்பால் அரசர் தோற்கடிக்கப்பட்ட போது அவரை அடிமைத்தளையுடன் வீதிகளில் இழுத்துவந்து அவர் அவமானப்படுவதை அவரது படைத்தலைவர்களும், மகன்களும் காணச்செய்தார்; இதன்வழி புறச்சமயிகளின் பூமியில் இஸ்லாத்தைப் பற்றிய அச்சம் கொடிகட்டிப் பறந்திடுவதையே அவர் விரும்பினார்.

''புறச்சமயிகளைக் கொன்றழிப்பது (கஜினி) முகம்மதுவுக்குத் தனியானதோர் இன்பமாகவே இருந்தது. கி.பி. 1019இல் சந்த் ராய் நகரின்மீது நடந்த படையெடுப்பில் ஏராளமான புறச்சமயிகள் கொல்லப்பட்டனர். முஸ்லீம்கள் கொள்ளைப் பொருள்களோடு எளிதில் திருப்தியடைந்து விடுவதில்லை. சூரியனையும் தீயையும் வணங்கும் புறச்சமயிகளைக் கொன்றுகுவிக்கும் வெறியே கொள்ளை நாட்டத்தைவிட அவர்களிடம் மிகுதியாக இருந்தது. முஸ்லீம் வரலாற்றாசிரியர்கள், இந்துப் படைகளைச் சேர்ந்த யானைகள் அப்படைகளிலிருந்து விலகி இஸ்லாத்தின் சேவைக்காக முஸ்லீம் படைகளுடன் சேர்ந்து வருவதாகக்கூட எழுதியுள்ளனர்.''[1]

அடிக்கடி நிகழ்ந்த சமயப்படுகொலைகளால் இந்துக்களின் உள்நாட்டுப்பண்பாடும் பெருமளவில் பாதிக்கப்பட்டது. எடுத்துக்காட்டாக முகமது பக்தியார் கில்ஜி பீகாரை வென்றபோது நிகழ்ந்தவற்றைப் பற்றி தபாகுத் -இ-நசிரி இவ்வாறு எழுதுகிறார்:

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'' பக். 22.

''வெற்றியாளர்கள் ஏராளமான செல்வங்களைக் கைப்பற்றினர். அங்கு வாழ்ந்தவர்கள் பலர் மொட்டையடித்திருந்த பார்ப்பனர்கள். அவர்கள் யாவரும் கொல்லப்பட்டனர். கல்வியில் சிறந்து விளங்கிய அந்நகரில் ஏராளமான நூல்கள் கிடைத்தன; ஆனால் கோட்டை கைப்பற்றப்பட்டபோது படிப்பறிவுடையோர் யாவரும் கொல்லப்பட்டுவிட்டதால் அந்நூல்களின் பொருளை அறிந்துசொல்ல யாரும் கிடைக்கவில்லை.'' [1]

இப்படையெடுப்பு பற்றிய சான்றுகளைத் தொகுத்துரைக்க முற்படும் டாக்டர் டைடஸ் பின்வருமாறு கூறுகிறார்:

''கோயில்கள் இடிக்கப்பட்டு சிலைகள் அவமதிக்கப்பட்டதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. காசிம் முகமது சிந்து மாகாணத்தில் தமது அழிவுவேலைகளைத் திட்டமிட்டு நடத்தினார். ஏராளமான கோயில்களை இடித்த அவர், மூல்தானிலிருந்த புகழ் பெற்ற கோயிலொன்றை மட்டும் விட்டு வைத்தார்; ஏனெனில் இங்கு யாத்திரையாக வரும் எண்ணற்ற பக்தர்கள் வளமான காணிக்கைகளைச் செலுத்தி வந்தனர். (கோயிலை இடித்துவிட்டால் இக்காணிக்கைகளைக் கொள்ளையடிக்க முடியாதல்லவா?) எனவே, வருவாய் நோக்கில் கோயிலை விட்டுவைத்த அவர், கொள்ளையடித்து திரும்பும் போதெல்லாம் மூலவர் சிலையின் கழுத்தில் மாட்டிறைச்சித் துண்டு ஒன்றைக் கட்டி இழிவுபடுத்திவிட்டு வரத் தவறவில்லை.

''காசிம் முகமது ஆயிரம் கோயில்களை அழித்தவர் எனப் பரவலாகக் கருதப்பட்டதாக மினாஜ்-அஸ்-சிராஜ் தெரிவிக்கிறார். அவரது கோயில் தகர்ப்புச் சாதனையின் சிகரமாக சோமநாதபுரம் ஆலயத்தைக் கூறலாம். இக்கோயில் கொள்ளையடிக்கப்பட்டு அங்கிருந்த சிலை நான்கு துண்டுகளாக உடைக்கப்பட்டது; அத்துண்டுகள் கஜினியின் ஜம்மா மசூதி, அரண்மனை வாயில், மக்கா, மதினா ஆகிய இடங்களுக்கு அனுப்பப்பட்டன.'' [2]

இந்துஸ்தானியப் புறச்சமயிகள்மீது ஆண்டுதோறும் புனிதப் படையெடுப்பு மேற்கொள்ளுவதாய்ச் சூளுரைத்த கஜினிமுகமது,

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'', பக்கம். 22, 23.
2. மேற்படி நூல், பக். 22 - 23.

சோமநாதபுரம் ஆலயத்தைத் தாக்கும் வரை தமது உருவ உடைப்புப் போர்களில் தளரவேயில்லையென்று லேனேபூலே கூறுகிறார். இக்கோயிலைத் தகர்ப்பதற்காகவே, அவர் தமது வாழ் நாளின் இறுதிக்கட்டத்திலும் பாலைவனங்கள் வழியாக மூல்தானி லிருந்து கடற்கரையிலிருந்த அன்ஹல்வாரா வரை கடுமையான போர்ப் பயணத்தை மேற்கொள்ளவும் தயங்கவில்லை; ஆலயத்தை அணுகும்வரை வழிநெடுகப் போரிட்டுக் கொண்டே சோமநாத புரத்தையடைந்தார். அங்கே, இறுதியில் அந்தப் புகழ்பெற்ற ஆல யத்தைக் கண்டார்:

''பக்தகோடிகளான நூறாயிரம் யாத்ரிகர்கள் அங்கு கூடி யிருந்தனர். ஆயிரம் பார்ப்பனர்கள் கோயில்பணிகளிலும், அதன் செல்வங்களைக் காப்பதிலும் ஈடுபட்டிருந்தனர்; ஆலய வாயிலருகே, நூற்றுக்கணக்கான நாட்டிய, இசைக்கலைஞர் கள் ஆடல்பாடல்களில் திளைத்திருந்தனர். கோயிலினுள் பொன்னாலும் மணியாலும் அலங்கரிக்கப்பட்ட தூணொத்த பெரும் லிங்க உருவம், உயர்மணிகள் பதிக்கப்பட்ட சர விளக்கு கள் சூழ மிளிர்ந்துகொண்டிருந்தது. ...... மதிலினுள்ளே பல பிரகாரங்களில் கூடியிருந்த அசட்டு நம்பிக்கை கொண்ட பார்ப்பனர்கள், வெளிநாட்டுப் புறச்சமயிகள் ஆலயத்தைத் தாக்கத் துணிந்தால் சோமநாதர் அவர்களைப் பூண்டோடு ஒழித்துவிடுவார் எனக் கேலிபேசி இறுமாப்புடன் இருந்தனர். இவற்றுக்கஞ்சாது வெளிநாட்டவர்கள் (படையெடுப்பாளர் கள்) கோயில் மதில்களைத் தாண்டி நுழைந்து கொண்டிருந்த போது தீவிரமாய் மன்றாடிய பக்தர்கள் கோரிக்கைகளுக்குச் சோமநாதர் செவி சாய்க்காமல் மௌனம் பூண்டுவிட்டார். இந்நம்பிக்கையால் ஐம்பதாயிரம் இந்துக்கள் உயிரிழந்தனர்; புனித ஆலயத்தைப் படையெடுப்பாளர்கள் மகிழ்ச்சியார வாரத்தோடு சூறையாடினர். இலிங்கம் உடைத்துத் துண் டாடப்பட்டு வெற்றியாளர் அரண்மனைக்குக் கொண்டு செல்லப்பட்டது. ஆலயக் கதவுகள் எடுத்துச் செல்லப்பட்டு கஜினியில் நிறுவப்பட்டன; பத்து லட்சம் பவுன் (ஆங்கில நாணயம்) பொறுமான செல்வம் கொள்ளைப் பொருளாகக் கிடைத்தது.''

---

1. லேன் பூலே, இடைக்கால இந்தியா, பக்கம். 26.

கஜினி முகமதுவின் படையெடுப்புகள் புனித மரபாகப் போற்றப்பட்டு, பிந்தைய படையெடுப்பாளர்களும் அவரது வழி முறைகளைப் பின்பற்றலாயினர். இது குறித்து டாக்டர் டைடஸ் பின்வருமாறு கூறுகிறார்:[1]

''கஜினி முகம்மதுவின் வழியைப் பின்பற்றிய ஊக்கமிக்க படையெடுப்பாளர்களில் ஒருவர் முகமது கோரி. இவர் ஆஜ்மீரை வென்றபோது, உருவவழிபாட்டுக் கோயில்களை தூண்கள் முதல் கடைக்கால்கள் வரை தகர்த்து அவ்விடங் களில் மசூதிகளையும் முஸ்லீம் கல்வி நிலையங்களையும் நிறுவினார்; இஸ்லாமியச் சட்டங்களையும் மரபுகளையும் நிலைநிறுத்தினார். டில்லி நகரிலும் அதனை அண்மிய பகுதி களிலும் உருவச் சிலைகளும் உருவ வழிபாடும் அறவே அகற்றப்பட்டு அவ்விடங்களில் ஏக தெய்வ வழிபாட்டாளர் களின் இறைவனுக்கு மசூதிகள் நிறுவப்பட்டன.

''குத்புதீன் ஐபக்கும்கூட ஆயிரம் கோயில்களை அழித்து அவற்றின் அடித்தளங்களில் மசூதிகளை நிறுவியவர் எனப் பெயர் பெற்றவர். அவர் டில்லியில் நிறுவிய ஜாமிமசூதி; பல்வேறு கோயில்களை யானைப்படைகொண்டு இடித்துக் கொள்ளையடிக்கப்பட்ட பொன்னும் மணியும் கொண்டு அலங் கரிக்கப்பட்டது; அதில் குரான் வாசகங்கள் பல பொறிக்கப் பட்டன. இதன் மேலைவாயிலிலிருந்து கீழைவாயில் வரை கட்டி முடிப்பதற்கு, கட்டுமானப் பொருள்களுக்காக 27 கோயில்கள் இடிக்கப்பட்டன.''

''குத்புதீனுக்குப் போட்டியாக, ஜாமி மசூதிக்கு இரண்டாவது கோபுரம் எழுப்ப ஆர்வமுற்ற அலாவுதீன் மலைகளிலிருந்து கல்லெடுத்து வந்ததன்றி பல கோயில்களை இடித்தும் கல் திரட்டினார் என அமீர் குஸ்ரு கூறுகிறார். முந்தைய படை யெடுப்பாளர்கள் வடநாட்டுப் படையெடுப்பின்போது கையாண்ட நடைமுறையையொட்டி, அலாவுதீன் தமது தென்னிந்தியப் படையெடுப்பின்போது ஏராளமான கோயில் களைத் தரைமட்டமாக்கினார்.''

''சுல்தான் பிரோஸ்ஷா புதிய கோயில்கட்டத் துணிந்த இந்துக் களைத் தாம் கடுமையாக நடத்திய போக்கைச் சித்தரிப்பதை

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'', பக்கங்கள் 23-24.

நோக்குவோம்: இறைதூதரின் ஆணைக்குமாறாக இந்நகரிலும் (டில்லி) அதன் சுற்றுப்புறங்களிலும், உருவவழிபாட்டுக் கோயில்களை நிறுவ முற்பட்டபோது இறைவழியின் ஆணைக்கேற்ப அவற்றையெல்லாம் அழித்தேன். இம்முயற்சிகளுக்கு முன்னின்ற புறச்சமயத் தலைவர்களைக் கொன்றேன்; மற்றவர்களுக்குச் சூடுபோட்டேன்; புறச்சமயிகளின் உருவ வழிபாடு நடந்த இடங்களிலெல்லாம் இப்போது முஸ்லீம்கள் மெய்யான இறைவனை வழிபடுகின்றனர்.''

ஷாஜஹானின் ஆட்சிக்காலத்தில்கூட, இந்துக்கள் புதிய கோயில்களைக் கட்டமுனைந்தபோது, அவை இடிக்கப்பட்டன என்பதை பாத்ஷாநாமா என்ற நூல் பின்வருமாறு விவரிக்கிறது:

''முந்தைய பேரரசரின் (அக்பரின்) ஆட்சிக்காலத்தின்போதே, புறச்சமயிகள் தமது சமயத் தலைமைப்பீடமான காசியில் பல கோயில்களைக் கட்டத்தொடங்கினர். அவை பணிமுற்றுப் பெறா நிலையில் உள்ளனவென வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்: புறச்சமயிகள் அவற்றைக் கட்டிமுடிப்பதில் ஆர்வம் காட்டினர். (இஸ்லாம்) நம்பிக்கையின் காவலரான பேரரசர் காசியில் மட்டுமன்றித் தமதாட்சிக்குட்பட்ட ஏனைய இடங்கள் அனைத்திலும் கோயில்களை அழிக்க ஆணையிட்டார். காசி மாவட்டத்தில் 76 கோயில்கள் இடிக்கப்பட்டதாக அலகாபாத் மாநில நிர்வாகம் தெரிவிக்கிறது.''[1]

உருவ வழிபாட்டை முற்றுமாக அழிக்கும் இறுதி முயற்சியை அவுரங்கசீப் எடுத்துக்கொண்டார். இந்துக்கோயில்களையும் போதனைகளையும் அழிக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளை 'மா' அதிர்இ ஆலம்கிரி என்ற நூலின் ஆசிரியர் பின்வருமாறு விவரிக்கிறார்.

''தத்தா, மூல்தான், காசி ஆகிய மாநிலங்களில், குறிப்பாகக் காசியில் முட்டாள் பார்ப்பனர்கள் மூடத்தனமான நூல்களைப் பள்ளிகளில் கற்பித்துவருகிறார்கள் என்றசெய்தி. கி.பி. 1669 ஏப்ரலில் அவுரங்கசீப்புக்கு எட்டியது; முஸ்லீம்களும்கூட இப்பள்ளிகளுக்குச் செல்கின்றனர் எனவும் அவர் அறிந்தார்.

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'' பக்கம். 24.

மார்க்க நெறியாளரான பேரரசர் புறச்சமயிகளின் கோயில் களைக் கடும் நடவடிக்கைகொண்டு ஒடுக்கவேண்டுமென மாநில ஆளுநர்களுக்கு ஆணைபிறப்பித்தார்.[1] உருவ வழி பாட்டுப் போதனையும், கடைப்பிடிப்பும் முற்றுமாக நிறுத்தப் பட வேண்டுமென அவரது ஆணை கூறியது.... காசி விசுவ நாதர்ஆலயம் தகர்த்தழிக்கப்பட்டதென அரசு அதிகாரிகள் மாமன்னர்க்குத் தகவல் அனுப்பினர்.'' டாக்டர் டைடஸ் மேலும் வருணிப்பதாவது:[2]

''முகமது, தைமூர் போன்ற படையெடுப்பாளர்கள் புறச் சமயிகளை நயத்தாலும் பயத்தாலும் மதமாற்றம் செய்வதை விடத் தமது சமயப் போர்வாள் கொண்டு உருவ உடைப்பு, கொலை, கொள்ளை, பிடிபட்டவர்களை அடிமைகளாக்குதல் போன்ற செயல்களிலேயே நாட்டம் கொண்டிருந்தனர். ஆனால் நிலையான ஆட்சியாளர்களாக ஆள முற்பட்டோருக்கு, மத மாற்றம் அவசரத் தேவையாயிற்று. நாடு முழுமைக்குமான சமயமாக இஸ்லாத்தை நிறுவுதல் அரசின் அடிப்படைக் கொள்கையாய் உருவெடுத்தது.

''முகமதுவைப் போலவே, ஆயிரம் கோயில்களை அழித் தவர் என்று பெரும்பெயரெடுத்த குத்புதீன், பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், அடிக்கடி பலவந்தமான மதமாற்றத்தைத் தூண்டி யிருக்கவேண்டும். ஒரு நிகழ்ச்சியைக் கூறலாம். அவர் (அலிகாரில்) கி.பி.1194 இல் கோயிலை நெருங்கியபோது விவேகமும் புத்திக் கூர்மையும்கொண்ட படைவீரர்கள் இஸ்லாத்தைத் தழுவினர்; ஏனையோர் வாள் வீச்சில் உயிர் இழந்தனர்.

''கடுமையான நடவடிக்கைகள் மூலமாக மதமாற்றங்கள் நிகழ்த்தப்பட்டதற்கு மேலும் ஏராளமான எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன. பிரோஸ்ஷா (கி.பி. 1351-1388)வின் ஆட்சிக் காலத்தில் நடந்த பரிதாபகரமான நிகழ்ச்சி ஒன்றைச் சுட்டு வோம்: டெல்லியைச் சேர்ந்த முதியபார்ப்பனர் ஒருவர் தமது வீட்டில் சிலைகளை வைத்துவழிபடுவதாகவும், முஸ்லீம் பெண்களை மதமாற்றத்திற்கு தூண்டுவதாகவும் குற்றம் சாட்டப்பட்டார். அவர் வரவழைக்கப்பட்டு நீதிபதிகள், மருத்து வர்கள், வழக்கறிஞர்கள் மற்றும் மூத்தோர்கள் கொண்ட

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'' பக். 22.
2. மேற்படி நூல், பக். 31-32.

அவைமுன் நிறுத்தப்பட்டார். இது குறித்துச் சட்டம் தெளிவாக இருப்பதாகக்கூறி, அவர் முஸ்லீமாக மாறவேண்டும், அல்லது எரிக்கப்படவேண்டும் என்று அவை தீர்ப்பளித்தது. மெய்யான சமயமும் சரியான நெறியும் தெளிவுறுத்தப்பட்டும்கூட அவற்றை அவர் ஏற்க மறுத்ததால், சுல்தானின் ஆணைப்படி உயிருடன் எரிக்கப்பட்டதுடன், 'சுல்தானின் கடுமையான சட்டங்களையும், அவற்றைச் செயல்படுத்துவதில் அவர் காட்டும் உறுதியையும், அவரது ஆணைகள் சிறிதளவும் வழுவாது நிறைவேற்றப்படுமென்பதையும் நோக்குக' என்ற எச்சரிக்கையும் விடுக்கப்பட்டது.''

கோயில்களை அழிப்பதுடன், இந்துக்களை அடிமைகளாக்குவதும் கஜினி முகமதுவின் கொள்கையாக இருந்தது. இதுபற்றி டாக்டர் டைடஸ் கூறுவதாவது:

''இந்தியாவில் இஸ்லாம் நுழைய முற்பட்ட காலத்தின் தொடக்கக்கட்டத்தில் புறச்சமயிகளைக் கொன்று குவித்துக் கோயில்களை அழித்ததுடன் நிற்காமல் தோல்வியுற்ற மக்களில் பலர் அடிமைகளாகப்பட்டனர் என்பதையும் காண்கிறோம். இப்படையெடுப்புகளில் படைத்தலைவர்களுக்கும் பிறபடை வீரர்கள் யாவருக்கும் கொள்ளையில் பங்கு என்பது அவர்களைப் பெரிதும் கவரும் ஓர் அம்சமாக விளங்கியது. புறச்சமயிகளைக் கொன்று குவித்தல், கோயில்களை அழித்தல், அடிமைகளைக் கைப்பற்றுதல், மக்களின் வீடுகளில், குறிப்பாகக் கோயில் பூசாரிகளின் வீடுகளில் கொள்ளையடித்தல் ஆகியவையே முகமதுவின் படையெடுப்புகளுக்கு முக்கிய நோக்கங்களாய்த் தோன்றுகின்றன. அவரது படையெடுப்புகளின்போது ஒரு சமயம், 'அழகிய ஆடவர் மகளிர்' சுமார் 5 லட்சம் பேர் அடிமைப்படுத்தப்பட்டுக் கஜினிக்குக் கொண்டு செல்லப் பட்டனர்.''[1]

பின்னர், கி.பி. 1017 இல் கனோஜியை முகமது கைப்பற்றியபோது அளவிறந்த செல்வத்துடன், 'எண்ணமுயன்றோர் விரல் சோர்வுறும் அளவுக்கு'' ஏராளமான கைதிகளையும் கொண்டு

1. டாக்டர் டைடசின், 'இந்திய இஸ்லாம்' நூலில் காணப்படும் மேற்கோள்.

சென்றார். அவரது கி.பி. 1019 ஆம் ஆண்டுப்படையெடுப்புக்குப் பிறகு கஜினியிலும் மத்திய ஆசியாவிலும் இந்திய அடிமைகள் எவ்வாறு மலிந்திருந்தனர் என்பதை அக்கால வரலாற்றாசிரியர் கூற்றாகக் காண்போம் :[1]

> ''கைதிகளின் எண்ணிக்கையை அவர்கள் எந்த அளவுக்கு மலிந்திருந்தார்கள் என்பதிலிருந்து உணரலாம்; அவர்கள் நபர் ஒருவர் இரண்டு திராம்முதல் பத்துதிராம் வரை விலை வைத்து விற்கப்பட்டனர். இவர்கள் பின்னர் கஜினிக்குக் கொண்டு செல்லப்பட்டபோது, நெடுந்தொலைவுப் பட்டணங்களிலிருந்து அடிமை வணிகர்கள் வந்து இவர்களை வாங்கிச் சென்றனர். .... அழகியோர், கறுப்பர், செல்வர், ஏழையர் என்ற வேறுபாடின்றி, அகப்பட்டோரெல்லாம் அடிமைகளாக்கப்பட்டனர்.
>
> ''கி.பி. 1202 இல் குத்புதீன் களிஞ்சரைக் கைப்பற்றியபோது, கோயில்கள் அனைத்தும் மசூதிகளாக மாற்றப்பட்டு உருவ வழிபாடு பூண்டோடழிக்கப்பட்டது; ஐம்பதாயிரம் ஆடவர் அடிமைத்தளையில் பிணைக்கப்பட்டனர்; சமவெளி முற்றுமே இந்து அடிமைத்தனமெனும் இருளில் மூழ்கியது.''

புனிதப்போரில் கைப்பற்றப்பட்ட இந்துக்களுக்கு அடிமைத் தனமே கதியாயிருந்தது. போர் நிகழாத காலங்களிலும் இந்துக்களை இழிவுபடுத்தக் கையாளப்பட்ட கொடுமையான வழிகளும் கொஞ்ச நஞ்சமல்ல. அலாவுதீனின் ஆட்சிக்காலத்தில், 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், சில பகுதிகளில் இந்துக்கள் சுல்தானுக்கு மிகத் தொந்தரவு கொடுத்தனர். எனவே, இந்துக்களைக் கிளர்ச்சி செய்ய முனையுமளவுக்குத் தழைத்தெழவிடாத வகையில் வரிகளால் ஒடுக்க அவர் முனைந்தார்.

> ''குதிரைகளையும் ஆயுதங்களையும் வைத்துக்கொள்ளவோ, உயர்ந்த துணிமணிகள் அணியவோ, உயர்தர வாழ்க்கை வசதிகளைத் துய்க்கவோ, இயலாதவாறு இந்துக்கள் சுரண்டப் பட்டனர்.''

ஜிஸியா வரியைப் பற்றி டாக்டர் டைடஸ் கூறுகிறார்:[2]

> ''சுல்தான்கள், பேரரசர்கள், மன்னர்கள் எனப் பலவகைப் பட்ட ஆட்சிகளிலும், இந்துக்களிடம் ஜிஸியா வரி வசூலிக்கப்

1. டாக்டர் டைடஸ், ''இந்திய இஸ்லாம்'' பக். 29.
2. மேற்படி நூல், பக். 30.

பட்டதில் மட்டும் மாற்றமில்லை. வரிவிதிப்பு ஆளுவோர்களின் வசூல் திறமையைப்பொருத்து அமைந்தது. இறுதியாக, அக்பரின் அறிவார்ந்த ஆட்சியில் (கி.பி.1665) தான் மொகலாயப்பேரரசு முழுவதிலும் (முஸ்லீம் ஆட்சியின் அடிப்படைக்கொள்கையாக எட்டுநூற்றாண்டுகளுக்குமேல் நிலவிய) இவ்வரி நீக்கப்பட்டது."

இவ்வரியைப் பற்றி லேன்பூலே கூறுவதாவது:

''இந்துக்களுக்கு நிலத்தின் விளைச்சலில் பாதி வரியாக விதிக்கப்பட்டதுடன், அவர்களிடமிருந்த எருமைகள், ஆடுகள் கறவைகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே தீர்வைகள் விதிக்கப்பட்டன.ஏழையர், செல்வர் வேறுபாடின்றி அனைவருக்கும் ஒரு ஏக்கர் நிலத்திற்கு இவ்வளவு, கால்நடை ஒன்றுக்கு இவ்வளவு என்று வரிவிதிக்கப்பட்டது. வரிவசூல் அலுவலர்கள் கையூட்டு பெற்றுச் சலுகை காட்டினால், பணி நீக்கத்துடன் தடியடி, குறடு, கிடுக்கிச் சட்டம், தளையிடல், சிறை முதலான கடுமையான சித்திரவதைகளுக்குட்படுத்தப் பட்டனர். புதிய விதிகள் மிகக் கடுமையாகச் செயல்படுத்தப் பட்டன; ஒரு அலுவலர் 20 இந்துக்களிடமிருந்து கட்டிவைத்து அடித்தல் போன்ற முறைகளில் வரி வசூலிக்கப் பணிக்கப் பட்டார். இந்துக்களின் வீடுகளில் தங்கம், வெள்ளியேதும் வைத்துக்கொள்வதிற்கில்லை என்பதுடன், வெற்றிலைபாக்கு போன்ற மலிவான இன்பங்களுக்குக்கூட வழியில்லை. அரசின் உள்ளூர்(இந்து) அலுவலர்கள் வறுமையிலேயே வாழ்ந்தனர்; அவர்களது மனைவியர் முஸ்லீம் வீடுகளில் பணிப்பெண்டிராகும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். அரசின் வருவாய்த்துறை அலுவலர்கள், பிளேக் என்னும் கொள்ளை நோயைவிடக் கடுமையாய்க் கருதப்பட்டனர். அரசுப்பணியாளராக நேர்வது மரணத்தைவிடக் கொடுமையான இழிவாய்க் கருதப்பட்டது; அத்தகையோருக்கு இந்துக்கள் எவரும் பெண் கொடுக்க மாட்டார்கள்''[1]

இவ்வாணையைப் பற்றி அக்கால வரலாற்றாசிரியர் கூறுகிறார் :

1. லேன் பூலே, மத்திய கால இந்தியா, பக். 104.

> ''சட்டங்கள் மிகக் கடுமையாகப் பின்பற்றப்பட்டன; சௌக்கிதார்கள், குத்கள், முகாதிம்கள் போன்ற பணியாளர்கள் குதிரையில் செல்லவோ, ஆயுதந்தரிக்கவோ, வெற்றிலை போடவோ, நல்ல துணியணியவோ இயலா நிலையிலிருந் தனர்... இந்துக்கள் தலை நிமிர்ந்து நடக்கவும் அனுமதிக்கப் படவில்லை... அடியுதைகள், தளைகள், கிடுக்கிச் சட்டங் களில் பிணித்தல் போன்ற முறைகளில் வரிவசூல் செய்யப் பட்டது.''

இக்கொடுமைகளெல்லாம் பேராசை, பிறழ்ந்த அறநெறி யுணர்வு காரணமாகச் செய்யப்பட்டனவென்பதற்கில்லை. மாறாக, இஸ்லாமிய ஆட்சியின் அடிப்படை வழிமுறைகளாக இவை நிலவி வந்தன. சுல்தான் அலாவுதீன் ஒருமுறை, 'முஸ்லீம் சட்டநெறிகளின் கீழ், இந்துக்களின் நிலையென்ன?' எனத் தெளிவுறுத்துமாறு கேட்டபோது, காஜி விடுத்த பதில் இதனையுணர்த்துகிறது. காஜியின் விளக்கமாவது:

> ''அவர்கள் திறை செலுத்தக்கடமைப்பட்டவர்கள்; வரி வசூல் அலுவலர் வெள்ளி வேண்டுமெனக்கேட்டால், மறுபேச்சின்றி பணிவும், மரியாதையும் காட்டித் தங்கம் கொடுக்க வேண்டியது அவர்கள் கடமை. அலுவலர்கள் அவர்களது வாயில் குப்பையைப் போடவிரும்பினால் மறு பேச்சின்றி வாயைத் திறந்து அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும். அவர்கள் செலுத்தும் திறையைப் பணிந்து உவந்து செலுத்துகின்றனர் என்பதற்கு அடையாளமாக இக் குப்பையை வாயில் ஏற்றுக்கொள்ளவேண்டும். இஸ்லாத்தின் புகழை உயர்த்தலே கடமையென்றும், அதையெதிர்க்க முனை வதில் பயனில்லையென்றும் அவர்கள் உணரவேண்டும். அவர்களை இழிவானவர்கள் எனக் கூறி 'அவர்களை அடிமைத் தனத்திலேயே வைத்திருங்கள்' எனக் கடவுளே கட்டளை யிடுகிறார். இந்துக்களை இழிநிலையில் நடத்துதல் நமது சமயக் கடமை; ஏனெனில் இறைத்தூதருக்கு அவர்கள் உறுதி யான எதிரிகள்; அவர்களைக் கொலை செய்யவும், கொள்ளை யடிக்கவும் அடிமைப்படுத்தவும் தூதர் கட்டளையிட்டுள்ளார். 'அவர்களை இஸ்லாத்துக்கு மாற்றுங்கள்; மறுத்தால் கொலை செய்தோ, அடிமைப்படுத்தியோ அவர்களது செல்வங்களை யும் சொத்துக்களையும் கவர்ந்து கொள்ளுங்கள்' எனத் தூதர் கூறியுள்ளார். இந்துக்கள் மீது ஜிஸியா வரி விதிப்பதற்கு

இஸ்லாமியச் சட்ட வல்லுநர்களில் பேரறிஞரான ஹனிபாவே அனுமதியளித்துள்ளார். மற்ற சட்ட நெறியாளர்களோ, ''இஸ்லாமா? சாவா? என்ற இரண்டிலொன்றுதான் இந்துக்களுக்கான தேர்வாக இருக்க முடியும் என்று கூறியுள்ளனர்.''[1]

கஜினி முகமதுவின் படையெடுப்புக்கும் அகமதுஷா அப்தலியின் படையெடுப்புக்கும் இடைப்பட்ட 762 ஆண்டுக் கால நிலை இதுதான்.

எனவே, வடஇந்தியாஆரிய வர்த்தத்தின் பகுதியே என்று இந்துக்கள் கூறுவதற்கு இடமுண்டா? முன்னொரு காலத்தில் இந்துக்களுக்கு இப்பகுதிகள் சொந்தமாயிருந்தமையால், இவை என்றென்றும் இந்தியாவின் பகுதியாக இருக்கவேண்டுமெனக் கூற இடமுண்டா? என்பன போன்ற வினாக்களுக்கு விடை தேட வேண்டிய நிலையிலுள்ளோம். பண்டைக் காலத்தில் ஆப்கானிஸ்தான் உட்பட வடஇந்தியா முழுமையும் இந்துக்களும் பௌத்தர்களும் மட்டுமே வாழ்ந்தனர் என்னும் வரலாற்று உணர்ச்சியால், பிரிவினையை எதிர்ப்பவர்கள் 762 ஆண்டுகளாகத் தொடர்ந்து, அடிக்கடி நடைபெற்ற முஸ்லீம் படையெடுப்புகளையும், அவற்றின் நோக்கங்களையும் அதன் விளைவாக தோன்றியுள்ள மாற்றங்களையும் காண மறுத்துக் கண்களை மூடிக் கொண்டுவிட முடியுமா என்ற வினாவை எதிர்கொள்ள வேண்டும்.

படையெடுப்புகளின் பல்வேறு விளைவுகளுக்கிடையே முக்கியமானது, தற்போது பாகிஸ்தானாகப் பிரிக்கப்பட வேண்டுமென்று கோரப்படும் பகுதிகளின் வாழ்க்கைநிலை, பண்பாடு ஆகியவை பெருமளவில் மாற்றப்பட்டுள்ளமையேயென்று கருதுகிறேன். எனவே, இப்பகுதிகளுக்கும் இந்தியாவின் பிறபகுதிகளுக்குமிடையே ஒருமைப்பாடு சிதைந்துவிட்டது என்பதோடன்றி வெறுப்புணர்வே மிகுந்துள்ளதெனலாம்.

படையெடுப்புகளின் முதல் விளைவு, வடஇந்தியாவுக்கும் இந்தியாவின் பிறபகுதிகளுக்குமிடையிலான ஒருமைப்பாட்டின் சிதைவே. வட இந்தியாவை வென்றபின் கஜினிமுகமது அதை இந்தியாவிலிருந்து பிரித்துக் கஜினியிலிருந்து ஆட்சி செய்தார். கோரிமுகமது வட இந்தியாவை வென்றபோது அதை இந்தியாவோடு

1. டாக்டர் டைடஸ், 'இந்திய இஸ்லாம்', பக். 29ல் மேற்கோள்.

இணைத்து முதலில் லாகூரிலிருந்தும் பின்னர் டெல்லியிலிருந்தும் ஆட்சிசெய்தார். அக்பரின் அண்ணனான, ஹக்கீம் வட இந்தியா விலிருந்து காந்தாரத்தையும் காபூலையும் பிரித்து ஆட்சிசெய்தார்; அக்பர் அவற்றை மீண்டும் வடஇந்தியாவுடன் இணைத்தார்; அவை மீண்டும் 1738 இல் நாதிர்ஷாவினால் பிரிக்கப்பட்டன. சீக்கியர் களின் எழுச்சி மட்டும் நிகழாதிருந்தால் அப்போதே வடஇந்தியா தனித்துப் பிரிந்திருக்கும். எனவே, வடஇந்தியா, அடிக்கடி கழற்றி மாட்டப்படும் புகைவண்டியின் (சரக்குப்பெட்டி) போலவே இருந்து வந்துள்ளது. இதைப்போன்றே, அல்சாஸ்- லொரைன் பகுதி ஆரம்பத்தில் ஸ்விட்சர்லாந்து தாழ்நாடுகள் இவற்றோடு ஜெர்மனி யின் பகுதியாய் கி.பி. 1680 வரை விளங்கியது. 1680 இல் பிரான்சு வென்று அதனைத் தனது பகுதியாக்கிக் கொண்டது. மீண்டும் ஜெர்மனி 1871இல் அதைவென்று தனது நாட்டுடன் சேர்த்துக் கொண்டது. 1918 இல் மீண்டும் அது பிரிக்கப்பட்டு பிரான்சுடன் சேர்க்கப்பட்டது. 1940 இல் அது பிரான்சிலிருந்து பிரிக்கப்பட்டு, ஜெர்மனியுடன் சேர்க்கப்பட்டது.

படையெடுப்பாளர்கள் கடைப்பிடித்த ஆட்சிமுறைகள் பல பின் விளைவுகளை இங்கு விட்டுச் சென்றுள்ளன. இவ்விளைவு களில் ஒன்றே இந்து, முஸ்லீம்களுக்கிடையே நிலவும் கசப்புணர்வு. ஒரு நூற்றாண்டுக்காலம் இணைந்து அரசியல் வாழ்க்கைக்குப் பின்னரும், தணியவோ, மறக்கவோ இயலாத அளவுக்கு இக்கசப் புணர்வு ஆழமாக வேரூன்றியுள்ளது. படையெடுப்புகளின் போதெல் லாம் நடைபெற்ற கோயில்களை இடித்தல், கட்டாய மதமாற்றம், சொத்துக்களைச்சூறையாடி மக்களைக்கொன்று குவித்தல், ஆண் பெண் குழந்தைகளை அடிமைப்படுத்திப் பலவகையில் இழிவு செய்தல் போன்ற நிகழ்ச்சிகள் தலைமுறை தலைமுறையாய் நினைவில் நிற்பதன் வாயிலாகக் கர்வமடைந்துள்ள முஸ்லீம் களுக்கும் அவமான உணர்வில் மூழ்கிய இந்துக்களுக்குமிடையே நல்லுணர்வு நிகழ வாய்ப்பேதும் இல்லையன்றோ? இதுவுமன்றி இந்தியாவின் வடமேற்கு மூலைதான் பல கொடூர நிகழ்ச்சி களுக்குக்களமாய் விளங்கியது; முஸ்லீம் கொள்ளையர் கூட்டத் தினர் இப்பகுதியில் அலையலையாய் வந்து குவிவர்; பின்னர் நாட்டின் பிறபகுதிகளுக்கு வெவ்வேறு திசைகளில் செல்லுவர். இப்படையினர் சிறுசிறு எண்ணிக்கையில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளைச் சென்றடைந்தனர். காலப்போக்கில் இந்தியாவின் தூரப்பகுதிகளிலிருந்து அவர்கள் பின்வாங்கவும் செய்தனர். நெடுங் காலம் நிலவிய அவர்களது ஆட்சியின்போது இங்கு நிலவிய ஆரியப் பண்பாட்டின்மீது, இஸ்லாமியப் பண்பாடு ஆழமாகப்

பதிக்கப்பெற்றதன் விளைவாய் இந்தியாவின் வடமேற்குமூலை யில், பிறபகுதிகளினின்றும் சமய, அரசியல் நோக்குகளில் முற்றி லும் மாறுபட்ட சமுதாயம் உருவாகியது. முஸ்லீம் படையினர் இந்தியா வரும்போது இந்துக்களுக்கு எதிரான முழக்கங்களோடு தான் வந்தனர். ஆனால் அவர்கள் எதிர்ப்பு முழக்கங்கள் முழங்கி கோயில்களுக்குத் தீவைப்பதுடன் திரும்பிவிடவில்லை. அப்படிப் போயிருந்தால் மிக நன்றாக இருந்திருக்கும். ஆனால் இப்படிப் பட்ட எதிர்மறை விளைவுகளுடன் அவர்கள் திருப்தியடைந்து விடவில்லை. அதற்கு மேலாக இஸ்லாத்தை இம்மண்ணில் விதைத்து விட்டுத்தான் சென்றனர். அதன் வளர்ச்சி ஓங்கியுயர்ந்த தேக்குத்தோப்பு போன்று மாபெரும் அளவில் நிகழ்ந்தது. அத்தோப்பு வடஇந்தியாவில்தான் மிக அடர்த்தியாய்ப் பெருகியது. தொடர்ந்து வந்த படையெடுப்பாளர்கள் அதற்கு நல்ல உரமும் நீரும் இட்டு அதனைத் தழைத்தோங்கிடச் செய்தனர். இவ்வளர்ச்சியோடு ஒப்பிடும்போது பௌத்தமும் இந்துசமயமும் வெறும் புதர்களெனக் கிடந்தன. சீக்கியர் எழுச்சி என்னும் கோடரி கூட இப்பெருந் தோப்பைப் பெரிதும் பாதித்துவிடவில்லை. சீக்கியர்கள் வட இந்தியாவை வென்று அரசியல் தலைமையேற்றபோதிலும், யுவான் சுவாங் காலத்துக்கு முந்தைய சமய, பண்பாட்டு ஒருமையை மீண்டும் உருவாக்க இயலவில்லை. சீக்கியர்கள் அரசியல் அளவில் வட இந்தியாவை மீண்டும் ஒருமைப்படுத்திய போதிலும், சமய, பண்பாட்டு நோக்கில் இப்பகுதி இந்தியாவின் அல்ஸாஸ்லொ ரெய்ன் என்று சொல்லத்தக்க வகையில், அந்நியமாகவே விளங் கியது. இவ்வுண்மைகளையெல்லாம் மறந்துவிட்ட கருத்துக் குருடர் களே, பாகிஸ்தான் பிரிவினை என்பது ஒன்றாயிருக்கும் நாட்டை இரண்டாகத் துண் டாடுவதாக எண்ணுவர்.

பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே இந்துக்கள் காணும் ஒருமைப்பாடுதான் என்ன? புவியியல் சார்ந்த ஒருமைப் பாடு எனில் அது மெய்யான ஒருமைப்பாடன்று; அது இயற்கை யமைப்புகளின் விளைவே. புவியியல் அடிப்படையில் ஒருமைப் பாடு காணமுனைவோர், மனிதரை இயற்கை கட்டுப்படுத்துவதில்லை யென்பதை உணர வேண்டும். நடையுடை பழக்க வழக்கங்கள் போன்ற புறத் தன்மைகள் சார்ந்த ஒருமைப்பாடும் சுற்றுச்சூழலால் அமைவ தாகையால் மெய்யான ஒருமைப்பாடாக அமையாது. அரசு நிர்வாகம் காரணமாக ஒருமைப்பாடு கூறுவதும் செயற்கையாகவே இருக்கும். இதற்கு பர்மா ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும். 1826 இல் எந்தாபு ஒப்பந்தத்தின்படி அரகான், தெனாசரிம் பகுதிகள் இந்தியா

வுடன் இணைக்கப்பட்டன; 1852இல் மார்த்தபன் இணைக்கப் பட்டது; 1886 இல் மேல் பர்மாவும் இணைக்கப்பட்டது. இவ்வாறாக 1826 இல் இந்தியாவுக்கும் பர்மாவுக்குமிடையே உருவாக்கப்பட்டு 110 ஆண்டுகாலத்திற்குமேல் நடைமுறையில் இருந்த நிர்வாக ஒருமைப்பாடு 1937 இல் உடைந்து பர்மா தனிநிர்வாகத்தின் கீழ் வந்ததற்கு யாரும் வருந்தவில்லை. இத்தனைக்கும் இந்திய-பர்மிய ஒருமைப்பாட்டுக்குப் பாகிஸ்தான் - இந்திய ஒருமைப்பாட்டை விட வலுவான அடிப்படை உண்டு. நிலைத்த ஒருமைப்பாடு என்பது, மக்களிடையே, பண்பாட்டு அடிப்படையில் அமையும் உள்ளார்ந்த கேளிர் உணர்வு வாயிலாகத்தான் உருவாகமுடியும். இக்கோணங் களில் நோக்கும்போது பாகிஸ்தான்-இந்திய ஒருமைப்பாடு என்பது, வெற்று கற்பனையாகத்தான் உள்ளது. இதற்கான அடிப்படைகளைப் பர்மிய இந்திய ஒருமைப்பாட்டுக்கான அடிப்படைகளின் அளவுக்குக் கூட வலுவானவையல்ல. இந்தியாவிலிருந்து பர்மா பிரிக்கப் பட்டதை எதிர்க்காத இந்துக்கள் அரசியல் நோக்கில் பிரிக்கக் கூடியதும், சமுதாய நோக்கில் பகைமையுணர்வுமிக்கதும், சமய நோக்கில் அந்நியமானதுமாகிய பாகிஸ்தான் போன்றதொரு பகுதியை மட்டும் பிரிக்கக் கூடாதெனக் கோருதல் மிக விந்தை யானது.



# இயல் 5

# பாதுகாப்பு வலிமை குன்றல்

பாகிஸ்தான் உருவாதலினால் இந்துஸ்தானத்தின் பாதுகாப்பு எந்தவகையில் பாதிக்கப்படும்? இச்சிக்கல் ஒன்றும் அவசரம் மிகுந்த தன்று; பாகிஸ்தான் பிரிக்கப்பட்டவுடனேயே இந்துஸ்தானும் பாகிஸ் தானும் போரில் இறங்குமென எண்ணுதற்குக் காரணமில்லை. எனினும் இந்தச் சிக்கல் உறுதியாக எழுப்பப்படுமாதலின், இதைப் பற்றியும் ஆய்ந்து பார்ப்போம்.

இச்சிக்கலை மூன்று கோணங்களில் ஆயவேண்டும். 1. எல்லைகள். 2. ஆதார வளங்கள். 3. போர்ப்படைகள்.

## I

### எல்லைகள் குறித்த பிரச்சினை

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையிலான எல்லையை அறிவியல் அடிப்படையில் நிறுவ இயலாதென இந்துக்கள் வலி யுறுத்துகின்றனர். எல்லைகள் நிர்ணயிப்பதில் இந்துக்களுக்கு இடர்ப்பாடுள்ளது என்பதற்காக முஸ்லீம்கள் தமது உரிமைகளை விட்டுக்கொடுக்கவேண்டுமெனக் கோரமுடியாது என்பதே இதற்கு விடையாக அமையும். ஆனால் இந்துக்களின் அச்சம் தேவையற்றது என்பதற்கு மேலும் இரண்டு காரணங்களைக் கூறமுடியும்.

முதலாவதாக, எந்தவொரு நாட்டில் எல்லையையாவது அறிவியல் அடிப்படையில் அமைந்ததெனக்கூற இயலுமா? 'வடமேற்கு எல்லை' என்ற நூலின் ஆசிரியரான டேவிஸ் பின்வருமாறு கூறுகிறார்:

> ''நமது இந்தியப் பேரரசின் வடமேற்குப் பகுதியில் இன, அரசியல், இராணுவத் தேவைகளுக்கேற்ப சரியானதொரு எல்லையை நிர்ணயித்தல் இயலாத செயல். எளிதில் வரை

*யறுக்கக்கூடிய புவியியல் அமைப்புகளைக் கொண்டும், நெருங்கிய உறவுள்ள மக்கள் இனத் தொகுதிகளைப் பிளவு படுத்தாமலும், அரசியல் நோக்கில் இசைவானதுமான எல்லை யென்பது வெறும் மனக்கோட்டையேயன்றி, நடைமுறையில் இயலாதது.''*

*வரலாற்றை நோக்கினால் இந்தியாவின் எல்லையைப் பல்வேறு நபர்கள் வெவ்வேறுவகையாகப் பரிந்துரைத்துள்ளனர் என்பதுடன், அவற்றுள் எதனையும் அறிவியல்பூர்வமான எல்லை என்பதற்கில்லை. எல்லைச்சிக்கலுக்கு விடையாக முன்னேற்ற கோட்பாடு, சிந்துநதிக்குப் பின்வாங்கல் கோட்பாடு என இரண்டு கோட்பாடுகள் முன்வைக்கப்படுகின்றன. இவற்றுள் முதலாவ தாகிய, முன்னேற்றக்கோட்பாடு என்பதற்கு வலுவான காரண மொன்றும், சற்று வலுக்குன்றிய காரணமொன்றும் முன்வைக்கப் படுகின்றன என சர் ஜார்ஜ் மக்மன் கருதுகிறார். ஆப்கானிஸ்தான் விவகாரங்களைக் கட்டுக்குள் வைத்திருத்தல், இந்தியாவின் வடமேற்கு எல்லையில் பாதுகாப்பான அரணை உறுதிசெய்ய உதவுமென்பது வலுவான காரணமாய்க் கூறப்படுகிறது; இதனால் ஆக்சஸ்வரை இந்தியாவின் செல்வாக்கு நிலவ ஏதுவாகும். வடமேற்கு எல்லை மாநிலத்துக்கும் ஆப்கானிஸ்தானுக்குமிடையில் (இந்துப்) பழங்குடி யினத்தவர் வாழும் மலைப்பகுதிகள் இந்தியாவுக்குள் அடங்கும் படியாக வரையறுக்கப்படும் துராண்ட் கோடு வரை நிர்வாக எல்லை அமையவேண்டுமென்பது சற்று வலுக்குன்றியவாதம். இந்தியாவின் பாதுகாப்புக்குகந்த எல்லை எனும் வலுவான வாதம் நெடுங் காலத்துக்கு முன்னரே கைவிடப்பட்டுவிட்டது. எனவே, இந்தியா வின் எல்லையாகப் பின்வரும் மூன்று மாற்றுகளில் ஒன்றையே தேர்ந்தெடுக்க இயலும்: அவை, 1. சிந்து நதி 2. வடமேற்கு எல்லை மாநிலத்தின் தற்போதைய நிர்வாக எல்லை 3. துராண்ட் கோடு. இந்தியாவின் எல்லை சிந்து நதியாக, இன்னும் ஒருபடிமேலே சட்லெஜ் நதிவரை கூட அமையவேண்டுமென்றே பாகிஸ்தான் வலி யுறுத்தும். இக்கொள்கைக்கு ஆதரவாளர்கள் இல்லாமலில்லை. இக்கொள்கையின் தீவிர ஆதரவாளரான லாரன்சு பிரபு இந்திய எல்லை எக்காரணத்தாலும் சிந்துநதியையொட்டிய மலையடிவாரங் களுக்கு அப்பாலிருக்கக்கூடாதென வலியுறுத்துகிறார். எந்தப் படை யெடுப்பாளரையும் சிந்துச் சமவெளியில் எதிர்கொள்வதே உகந்த தென்பது அவர் கருத்து. சிந்துச்சமவெளி எனும் வலுவான தளத்தி லிருந்து வெகுதொலைவில் படையெடுப்புகளை எதிர்கொள்வது பேதைமை கொண்ட, வலிமைகுன்றிய உத்தியாகுமென அவர்*

கருதுகிறார். ஆப்கானிஸ்தானத்திலிருந்து மலைப்பகுதிகளைக் கடந்து வருதலே எதிரிப்படைகளுக்கு மிகுந்த இடர்பாடாகவிருக்கு மென்றும் அவர் கருத்து தெரிவிக்கிறார். ஆனால், இதற்கு மாறாக நதி என்பது சிறந்த பாதுகாப்பரணன்று என்பதைப் பலரும் சுட்டிக் காட்டியுள்ளனர். ஆனால் சிந்து நதியே எல்லையாக இருக்க வேண்டுமென்பதற்கான மெய்யானகாரணம் வேறு என்பதை டேவிஸின் பின்வரும் கூற்று உணர்த்துகிறது:

> ''சிந்து நதிக்குத் திரும்புக' என்ற முழக்கத்தை, வடமேற்கு எல்லை மாநிலத்தில் வாழும் இன்றைய மக்களின் நலன் களைக் கருத்தில் கொண்டுநோக்கும்போது பொருளற்றதாகி விடுகிறது. இதனால் நமது பெருமைக்குக்கேடுவிளையும் என்பதுடன், நமது நல்லாட்சியின் கீழ்வாழ்ந்து வந்த மக்க ளுக்குப் பெரும் நம்பிக்கைத் துரோகம் செய்வதாகவும் முடியும்.''

சொல்லப்போனால் இன்றைய உலகில் போர்முறை உத்தி களின் வளர்ச்சி காரணமாக, ஓங்கி உயர்ந்த மலைகள், ஆழ்ந் தகன்ற ஆறுகள், பரந்த கடல்கள், நெடுக விரவிய பாலைவனங் கள் போன்ற புவியியல் கூறுகள் எவற்றையுமே பாதுகாப்பான இயற்கை அரண்கள் எனக் கூறுவதில் பொருளில்லை.

இரண்டாவதாக, இயற்கையான எல்லைகள் இல்லாத நாடு களும்கூட இக்குறைக்கு எளிதான மாற்று காணமுடியும். அப்படிப் பட்ட நாடுகள் பலவற்றை எளிதில் குறிப்பிட்டுக்கூறலாம். அந்த நாடுகள் அனைத்துமே இயற்கையரண்களை விடப் பெரிதும் மேம்பட்ட செயற்கையரண்களை வெற்றிகரமாக நிறுவியுள்ளன. ஏனைய உலக நாடுகளால் அமைக்க முடிந்த காப்பரண்களை இந்துக்களால் மட்டும் அமைக்கமுடியாதென ஏன் கருதவேண்டும்? இங்கு நிறைந்துள்ள வளங்களை நோக்கும்போது, வலிமையான அரண்களை உருவாக்க நம்மாலும் இயலும் என்று இந்துக்கள் உறுதியாக நம்பலாம்.

# II

# வளங்கள் குறித்த பிரச்சினை

அறிவியல் சார்ந்த எல்லை என்பதைவிட முக்கியமானது வளங்கள் குறித்த பிரச்சினை. தேவையான கருவிகளை உற்பத்தி செய்தற்கேற்ற வளங்கள் பல்கியிருந்தால் அறிவியல் அடிப்படை யற்றதாகவும் வலிமைகுன்றியதாகவும் கருதப்படும் எல்லைகளை வலிமை கொண்ட காப்பரண்களாக எளிதில் மாற்றி அமைக்க லாம். எனவே, இந்துஸ்தானத்திற்கும் பாகிஸ்தானுக்கும் கிடைக்க விருக்கும் வளங்களை ஒப்புநோக்குதல் அவசியமாகிறது. ஒப்பீடு அட்டவணை வடிவில் கீழே தரப்பட்டுள்ளது.

பாகிஸ்தானின் வளங்கள்

| மாநிலம் | பரப்பளவு | மக்கள் தொகை | வருவாய்* (ரூபாய் கணக்கில்) |
|---|---|---|---|
| வடமேற்கு எல்லை மாநிலம் | 13,518 | 2,425,003 | 1,90,11,842 |
| பஞ்சாப் | 91,919 | 23,551,210 | 12,53,87,730 |
| சிந்து | 46,378 | 3,887,070 | 9,56,76,269 |
| பலுச்சிஸ்தானம் | 54,228 | 420,648 | ..... |
| வங்காளம் | 82,955 | 50,000,000 | 36,55,62,485 |
| மொத்தம் | 288,998 | 80,283,931 | 60,56,38,326 |

★ மத்திய மாநில அரசுகளின் கூட்டுவருவாய் தரப்பட்டுள்ளது.

## இந்துஸ்தானின் வளங்கள்

| மாநிலம் | பரப்பளவு | மக்கள் தொகை | வருவாய் |
|---|---|---|---|
| | | | (ரூபாய் கணக்கில்) |
| ஆஜ்மீர்-மேவாரா | 2,711 | 560,292 | 21,00,000 |
| அஸ்ஸாம் | 55,014 | 8,622,251 | 4,46,04,441 |
| பீகார் | 69,348 | 32,371,434 | 6,78,21,588 |
| பம்பாய் | 77,271 | 18,000,000 | 34,98,03,800 |
| மத்தியமாநிலம் & பேரார் | 99,957 | 15,507,723 | 4,58,83,962 |
| குடகு | 1,593 | 163,327 | 11,00,000 |
| டில்லி | 573 | 636,246 | 70,00,000 |
| சென்னை | 142,277 | 46,000,000 | 25,66,71,265 |
| ஒரிசா | 32,695 | 8,043,681 | 87,67,269 |
| ஐக்கிய மாநிலம் | 206,248 | 48,408,763 | 16,85,52,881 |
| மொத்தம் | 607,657 | 178,513,919 | 96,24,05,206 |

இவை ஒட்டுமொத்த விவரங்களே; இவற்றில் சில சிறு திருத்தங்கள் இருக்கலாம். மேலும் புகைவண்டித்துறை, நாணயத் துறை, அஞ்சல்துறை முதலிய பொதுத்துறை வருவாய்கள் இவற்றில் சேர்க்கப்படவில்லை; ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் இத் துறைகள் ஈட்டும் வருவாயைச் சரியாக மதிப்பிட இயலவில்லை. இயன்றால், வருவாய் விவரங்களில் அதற்கேற்பத் திருத்தங்கள் தேவைப்படும். இத்துறைகளின் வருவாய் பாகிஸ்தானை விட இந்துஸ்தானுக்கு மிகப் பெரும் அளவில் இருக்குமென்பதில் ஐயம் இல்லை. வருவாய்த் தொகைகளில் கூடுதல்போன்றே சில இனங் களில் குறைதலையும் எதிர்பார்க்கலாம். இதில் பெரும்பகுதி பாகிஸ்தானுக்கே சாரும். மேலும் பஞ்சாபின் ஒரு பகுதி மேற்கு

பாகிஸ்தானிலிருந்து பிரிக்கப்படும். அவ்வாறே வங்காளத்தில் ஒரு பகுதியும் கிழக்கு பாகிஸ்தானில் இருந்து பிரிக்கப்படும். அஸ்ஸாமி லிருந்து ஒரு பகுதி பாகிஸ்தானுடன் சேர்க்கப்படும். வங்காளத்தில் 15 மாவட்டங்களும், பஞ்சாபில் 13 மாவட்டங்களும் இந்தியாவில் சேருமென எனக்குத் தோன்றுகிறது. இதன்விளைவாகப் பரப்பளவு, மக்கள்தொகை, வருவாய் ஆகியவை எந்த அளவு குறையுமென்பதைச் சரிவர மதிப்பிடுவதற்குத் தேவையான விவரங்கள் கிட்டவில்லை. இருப்பினும் பஞ்சாப், வங்காள மாநிலங்களைப் பொருத்தமட்டில் வருவாய் சமபாதியாய்ப் பகிர்ந்து கொள்ளப்படுமென்று துணிந்து கூறலாம். அதாவது, பாதியை பாகிஸ்தான் இழக்கும்; அது இந்தியா வுக்கு கூடுதலாய்க் கிடைக்கும். ஒட்டுமொத்தத்தில் பாகிஸ்தானின் வருவாய் 60 கோடியிலிருந்து 36 கோடியாகக் குறையும், இந்துஸ் தானின் வருவாய் 96 கோடியிலிருந்து 120 கோடியாக உயரும். அதாவது, பாகிஸ்தான் இழக்கும் 24 கோடி ரூபாய் இந்துஸ்தானுக்குக் கூடுதல் வரவு!

இங்கு திரட்டித் தரப்பட்டுள்ள விவரங்களை ஆய்ந்தால் பாகிஸ்தானைவிட மிகப்பெரும் அளவிலான வளங்களை இந்துஸ்தான் பெறும் என்பது புலனாகிறது. வளங்கள் என்பதை நிலப்பரப்பு, மனிதவளம், வருவாய் என எந்த வகையில் எடுத்துக் கொண்டாலும் இது பொருந்தும். எனவே, வளங்களின் பற்றாக்குறை குறித்த அச்சம் எதுவும் தேவையில்லை. எனவே, பாகிஸ்தான் உருவாதலால் இந்துஸ்தானம் வலிமை குன்றிய நிலைக்குத் தள்ளப்பட்டு விடாது என்பது உறுதி.

# III

# போர்ப்படைகள் குறித்தப் பிரச்சினை

ஒரு நாட்டின் பாதுகாப்பு அதன் அறிவியல் சார்ந்த எல்லைகளைவிட, வளங்களையே அதிகம் சார்ந்துள்ளது. ஆனால் இவ்விரண்டையும் விடப் போர்ப்படைகளைச் சார்ந்தே ஒருநாட்டின் பாதுகாப்பு வலிமை அமையவியலும்.

*பிரிவினையால் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் கிடைக்கக் கூடிய போர்ப்படைகள் என்னென்ன?*

இந்தியநாட்டின் பாதுகாப்புப் பிரச்சினையில் முக்கியமானது என சைமன் ஆணையம் குறிப்பிடுவது, 'இந்தியாவின் சில குறிப்பிட்ட பகுதிகளில் மட்டுமே படைக்கு ஆட்சேர்ப்பு நடத்தவியலுதலும், பிறபகுதிகளில் படையில் சேர ஆட்கள் முன்வர மாட்டார்கள் என்பதே தகும். இந்தியர்களில் பலருக்கு நம்பற்கரிய வியப்புதரக் கூடிய சில விவரங்கள், சைமன் ஆணையத்தின் அறிக்கையில் இருந்து எடுக்கப்பட்டுக் கீழே அட்டவணையாய்க் கொடுக்கப்பட்டுள்ளன.

| படைச் சேர்ப்புப் பகுதிகள் | படைச் சேர்ப்பு எண்ணிக்கை |
|---|---|
| 1. வடமேற்கு எல்லை மாநிலம் | 5,600 |
| 2. காசுமீரம் | 6,500 |
| 3. பஞ்சாப் | 86,000 |
| 4. பலுச்சிஸ்தானம் | 300 |
| 5. நேபாளம் | 19,000 |
| 6. ஐக்கிய மாநிலம் | 16,500 |
| 7. இராசபுத்தானம் | 7,000 |
| 8. மத்திய இந்தியா | 200 |
| 9. பம்பாய் | 7,000 |

| | |
|---|---|
| 10. மத்திய மாநிலம் | 100 |
| 11. பீகார் & ஒரிசா | 300 |
| 12. வங்காளம் | இல்லை |
| 13. அஸ்ஸாம் | இல்லை |
| 14. பர்மா | 3,000 |
| 15. ஐதராபாத் | 700 |
| 16. மைசூர் | 100 |
| 17. சென்னை | 4,000 |
| 18. பிறபகுதிகள் | 1,900 |
| மொத்தம் | 1,58,200 |

இந்நிலை ஒருகுறிப்பிட்ட ஆண்டில் மட்டும் விதிவிலக்காக நிகழ்ந்ததன்று; இந்திய மக்களின் பொதுவான இயல்பின் விளைவே என்பதற்குச் சான்றாக சைமன் ஆணையம், இரண்டாம் உலகப் பெரும் போரின்போது நடைபெற்ற ஆட்சேர்ப்பு விவரங்களைப் பிறிதொரு அட்டவணையில் தந்துள்ளது. ''எந்தப் பகுதியிலும் ஆட் சேர்ப்புக்கு எதிரான போக்கு நிலவவில்லை என்பதற்கு ஆதாரமாக இவ்விவரங்கள் விளங்கும்.''

| மாநிலம் | | போர்ப்படை ஆட்சேர்ப்பு | போரிடாத துணைப் பணியாளர் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | சென்னை | 51,233 | 41,117 | 92,340 |
| 2. | பம்பாய் | 41,272 | 30,211 | 71,483 |
| 3. | வங்காளம் | 7,117 | 51,395 | 59,052 |
| 4. | ஐக்கிய மாநிலம் | 163,578 | 117,565 | 281,143 |
| 5. | பஞ்சாப் | 349,688 | 97,288 | 446,976 |
| 6. | வடமேற்கு எல்லை | 32,181 | 13,050 | 45,231 |
| 7. | பலுச்சிஸ்தானம் | 1,761 | 327 | 2,088 |
| 8. | பர்மா | 14,094 | 4579 | 18,673 |
| 9. | பீகார் & ஒரிசா | 8,576 | 32,976 | 41,552 |
| 10. | மத்திய மாநிலம் | 5,376 | 9,631 | 15,007 |
| 11. | அஸ்ஸாம் | 942 | 14,182 | 15,124 |
| 12. | ஆஜ்மீர்-மேர்வாரா | 7,341 | 1,632 | 8,973 |
| 13. | நேபாளம் | 58,904 | - | 58,904 |
| மொத்தம் | | 7,42,053 | 4,14,493 | 11,56,546 |

இவ்விவரங்களை ஒப்புநோக்கும்போது, இந்தியப் படைவீரர்களில், பெரும்பகுதியினர், பாகிஸ்தானுடன் சேர்க்கப்படவுள்ள பகுதிகளிலிருந்து எடுக்கப்பட்டவர்கள் என்பது நன்கு புலனாகிறது. இதைக் காரணமாகக் கொண்டு, பாகிஸ்தான் பிரிக்கப்பட்டால் இந்துஸ்தான் தன்னைப் பாதுக்காத்துக்கொள்ள இயலாது என்ற வாதம் எழுப்பப்படலாம்.

சைமன் ஆணையம் தெரிவித்துள்ள தகவல்கள் ஐயத்திற்கிடமின்றி நம்பகமானவையே. ஆனால் இவற்றை மட்டுமே கொண்டு 'படைவீரர்களைப் பாகிஸ்தான் தான் தோற்றுவிக்கும்; இந்தியாவால் தோற்றுவிக்கமுடியாது' என்று சைமன் அறிக்கை காட்டுவது போன்ற முடிவுக்கு வந்துவிடமுடியாது. இத்தகைய முடிவு எவ்வகையிலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல என்பதைக் கீழ்வரும் விளக்கங்களால் உணரலாம்.

முதலாவதாக, சைமன் ஆணையம் சுட்டிக்காட்டுவது போல, இத்தகைய நிகழ்வு இந்தியாவுக்கு மட்டுமே உரிய தனித்த இயல்பன்று. இத்தகைய நிகழ்ச்சிக்கு மக்களின் அடிப்படைக் குறைபாடுகள் ஏதும் காரணமென்றும் கருதமுடியாது. பிரிட்டிஷ் அரசின் படைச்சேர்ப்புக் கொள்கையே இதற்கு முக்கிய காரணமென்று உணரலாம். இந்தியாவின் வடமேற்குப் பகுதிகளில்தான் போர்க்குணம் மிகுந்த மக்கள்மிகுதி என்று அரசு விளக்கம் தருகிறது. அரசின் விளக்கம் உண்மைக்கு மிகப் புறம்பானது என்பதை உறுதியான தகவல் அடிப்படையில் சௌத்திரி[1] காட்டியுள்ளார். 1857 ஆம் வருட புரட்சி நடைபெற்ற காலத்திலிருந்தே, இந்தியப் படையில் வடமேற்கு இந்தியர் எண்ணிக்கை மிகுதியாய்க் காணப்பட்டு வந்துள்ளது என்பதை அவர் புலப்படுத்தியுள்ளார்; அதாவது 1879இல் நிறுவப்பட்ட சிறப்பு ராணுவக் குழு போர்க்குணம் மிகுந்த, போர்க்குணம் குறைந்த என்னும் பாகுபாட்டுக் கொள்கையை முன்வைப்பதற்கு[2] இருபதாண்டுகளுக்கு முன்னரேயே இந்நிலை

1. மாடர்ன் ரெவ்யூ சஞ்சிகையின் ஜூலை 1930, செப்டம்பர் 1930, ஜனவரி 1931, பிப்ரவரி 1931 இதழ்களில் ''இந்தியாவில் போர்க்குணம் மிக்க இனங்கள்'' குறித்து சௌத்திரியின் கட்டுரைகள்.

2. சிறப்பு ராணுவக் குழுவின் ஆய்வு வினாத் தொகுதியில் பின்வரும் வினாவும் இடம் பெற்றிருந்தது:

> ''இந்தியப் படைக்குத் திறமையும் வீரமும் மிக்க கூடுதல் படை திரட்ட வேண்டியிருப்பின், இந்தியப் பேரரசின் பாதுகாப்பு நோக்கில், வலிமை குன்றிய போர்க்குணமற்ற இனங்களிலிருந்து திரட்டுவதைவிட, ஏற்கனவே நல்ல வீரர்களைத் தந்துள்ள பகுதிகளிலிருந்து திரட்டுவது உகந்ததல்லவா?''

உருவாகியுள்ளது என்பதையும் அவர் நிறுவியுள்ளார். வடமேற்கு இந்தியமக்கள் தமது போர்க்குணமிகுதியால் படையில் மிகுந்த எண்ணிக்கையில் இடம்பெறவில்லை; மாறாகப், புரட்சிப் படைகளை ஒடுக்குவதில் இவர்கள் ஆங்கில அரசுக்கு ஒத்துழைப்பு தந்ததே இதற்கு முக்கியக் காரணம் என்பதையும், 1857 புரட்சியில் வங்கப்படைகள் முழுமையுமே இறங்கியிருந்தன என்பதையும் சௌத்திரி சுட்டுகிறார்.

சௌத்திரி மேலும் கூறுவதாவது:

''புரட்சிக்கு முந்தைய வங்காளப்படையின் பெரும்பகுதி கங்கை வடிநிலத்தின் பார்ப்பன- சத்திரிய வீரர்களைக் கொண்டிருந்தது. மூன்று மாநிலப்படைகளை முழுமையாக ஒப்பு நோக்கினால், இக்கட்டுரையின் முற்பகுதியில் குறிப்பிட்டவாறு, ஒவ்வொரு மாநிலப்படையும் அவை அந்தந்த மாநிலத்தின் தேசியப்படையென்ற நிலையை யெய்தவில்லையெனினும் அந்தந்த மாநிலத்தின் போர்வன்மையின் அடிப்படையிலேயே அமைந்திருப்பதையும், அந்தந்த மாநில மக்களின் போர்த்திறன் அடிப்படையிலன்றிப் பிறவழிகளிலேதும் படை திரட்டல் இயலாதென்பதையும் உணரலாம். மேலும் மாநிலப் படைகள் அந்தந்த மாநில மக்களிலிருந்தே திரட்டப்பட்டவை யென்பதும் தெளிவு. அதாவது, சென்னை மாநிலப் படையில் தமிழர், தெலுங்கர்களும், பம்பாய் மாநிலப் படையில் மேற்கு இந்தியப் பகுதி மக்களும், வங்காள மாநிலப் படையில் பீகார், ஐக்கிய மாநில, வங்காளி (சற்றுக் குறைந்த அளவில்) வீரர்களும் மிகுந்திருப்பதைக் காணலாம். படை வீரர்களாகச் சேருவதற்கு போர்வீரர்களுக்கேற்ற அடிப்படைத் தகுதிகளேயன்றி சாதி, மத, இனத்தகுதிகள் ஏதும் வலியுறுத்தப்படவில்லை. சென்னை, பம்பாய் மாநிலங்களில் படைசேர்ப்பு முறைகளை விடுத்து, வங்காளப் படையில் வடமேற்கு இந்தியவீரர்கள், அவர்களின் உறுதியான படை வன்மைக்கு ஏற்ற எண்ணிக்கையில் இடம்பெறாவகையில், சில விதிகள் தடையாயிருந்தன. எடுத்துக்காட்டாக, இப்படைகளில், ஒரு துணைப்பிரிவில் (ரெஜிமெண்ட்) பஞ்சாபியர் 200 பேருக்கு மேலும், அதிலும் சீக்கியர் 100 பேருக்குமேலும் சேர்க்கலாகாதென அரசு ஆணை ஒன்று தடைசெய்திருந்தது. வங்கப்படையின் இந்துப்பிரிவுகள் படைவீரர்கள் புரட்சியில் மிக ஆழ்ந்து ஈடுபட்டதன் விளைவாகவே, புரட்சி ஒடுக்கப்

பட்ட பின்னர் பஞ்சாபியர்களுக்கு ஆட்சேர்ப்பில் அதிக வாய்ப்புகள் கிடைத்தன. புரட்சி நடைபெற்றுவந்தபோது பஞ்சாபியர் சந்தேகத்துக்குரியவராய்க் கருதப்பட்டு, வங்காளப் படையில் அயோத்தியர், வட, தென் பீகாரிகள், ஷாகாபாத் போஜ்பூர், கங்கை யமுனை இடைநிலப் பகுதிகளைச் சேர்ந் தோர், ரோகில் கண்டு பகுதி மக்களே அதிக எண்ணிக்கையில் இடம் பெற்றிருந்தனர். இப்பகுதிகளில் சேர்க்கப்பட்ட படை வீரர்களில், பலபிரிவுப் பார்ப்பனர்கள், சத்திரியர்கள், இராச புத்திரர்கள், அகீர்கள் ஆகிய உயர் சாதிகளைச் சேர்ந்தவர் களே மிகுதி. சராசரி விகிதங்களில் கூறப்புகின், 7/24 பகுதி பார்ப்பனர்கள், 1/4 பகுதி இராசபுத்திரர்கள், 1/6 பகுதி தாழ்ந்த சாதி இந்துக்கள், 1/6 பகுதி முஸ்லீம்கள், 1/8 பகுதி பஞ்சாபியர் வங்காளப் படைகளில் இடம் பெற்றிருந்தனர்.

''இப்படையில் தற்போது அதிக எண்ணிக்கையில் சேரும் பஞ்சாப், நேபாளம், வடமேற்கு எல்லை மாநிலம் ஆகிய மாநிலங்களையும், குமான், கார்வால், இராசபுதனம் ஆகிய மலைப்பகுதிகளையும் சேர்ந்த படைவீரர்கள், அப்போது மிகச்சிலரே இருந்தனர். போர் சாதியினர் என்று பெயர் பெற்ற சீக்கியர், கூர்க்கா, பஞ்சாபியர், முஸ்லீம்கள், குமானியர், கூர்ஜரர், தோக்ராக்கள், ஜாட்டுகள், பட்டாணியர், கார்வாலியர், இராசபுத்திரர் ஆகியோர் இந்தியப் படை வலிமையின் தூண்களாக இன்று கருதப்பட்டபோதிலும் அன்று காண்பதற்கு அரிதாக மிகச்சிறு எண்ணிக்கையிலேயே இருந்தனர். ஒரே ஓர் ஆண்டு, ஒரே ஓர் புரட்சி இந்நிலையை வெகுவாக மாற்றிவிட்டது. 1857 ஆம் ஆண்டுப் புரட்சிக்குப்பின், முந்தைய வங்காளப்படை ஒடுக்கப்பட்டு, பஞ்சாபியர் நிறைந்ததும், காட்டுமிராண்டித் தனமான கொடூரம் வாய்ந்ததுமான புதிய படை, இன்றைக் கிருக்கின்ற அமைப்பு, தன்மை, இனவிகிதங்களை ஏறத்தாழ ஒத்திருக்கும் வகையில் அமைக்கப்பட்டது.

''வங்காளப் படையின் இந்துப் பிரிவுகள் புரட்சியில் ஈடு பட்டதன் விளைவாகத் தோன்றிய காலியிடங்கள் சீக்கியர் உள்ளிட்ட பஞ்சாபியர்களையும் மலைச்சாதியினரையும் கொண்டு நிரப்பப்பட்டன. இந்துஸ்தானத்தைப் பழிவாங்கவும் கொள்ளை யடிக்கவும் வெறி கொண்டிருந்த இவர்கள் வெகு சிலராய் எண்ணிக்கையிலிருக்கும் ஆங்கிலேயரை விட

இந்துக்களே தமக்கு முக்கிய எதிரிகள் என்ற எண்ணம் ஊட்டப் பட்டவராய்ப் புரட்சியை அடக்கி யொடுக்குவதில் முனைந்து செயலாற்றினர். இப்பகையுணர்வை ஊக்கி வளர்த்துப் புரட்சியை அடக்குவதில் ஆங்கிலேயர் வெற்றி பெற்றனர். கூர்க்காக்கள் படையில் சேர்க்கப்படுகிறார்கள் என்பதை அறிந்துகொண்ட டல்ஹவுசி பிரபு இங்கிலாந்திருந்து தமது நண்பருக்கு எழுதிய கடிதமொன்றில், ''அயோத்தியர்களுக் கெதிராக அவர்கள் வெறித்தனமாய்ப் போரிடுவர்'' என்று தமது திருப்தியை வெளி யிட்டுள்ளார். புரட்சிக்குப் பின்னர், இந்தியப் படைகளின் அலுவலர் தலைவர் ஜெனரல் மான்ஸ்பீல்டு, சீக்கியர்களைப் பற்றி எழுதும்போது, 'அவர்கள் ஆங்கிலேயர்களாகிய நம்மீது பற்றேதும் கொண்டவர்களல்லர்; ஆனால் இந்துஸ்தானியர் மீதும் வங்காளப்படையின் மீதும் கொண்ட வெறுப்புணர் வினால், தங்கள் விடுதலைக்குப் போராடும் வாய்ப்பை விடுத்து, நமது படைச்சேர்ப்பில் கூட்டங்கூட்டமாய்த் திரண் டனர்; இந்துஸ்தான நகரங்களைச் சூறையாடிப் பழி தீர்ப்பதில் முழுமுனைப்பு காட்டினர்; நாம் தரும் நாட் கூலியை விடத் தமது பகைவர்களை மிதித்துத் துவைப்பதிலும், கொள்ளை யடித்துக்கிடைக்கும் வருவாயிலுமே அவர்களது நாட்டம் இருந்தது. சுருங்கச் சொன்னால் ரஞ்சித்சிங்கின் பழைய கால்சாப் படையினரின் மதவுணர்வு காரணமாக இந்துக்கள் மீதிருந்த பகையுணர்வின் எச்சங்களைத் திறமையாகப் பயன் படுத்தி, இந்துக்கள் ஒழிக்கப்படும்வரை அவர்களை நமது சேவையில் இருத்தும் வண்ணம் வெற்றிகரமாகச் செயல்பட்டோம்' எனக் குறிப்பிடுகிறார்.

''இவ்வாறு நிறுவப்பட்ட உறவு நெடுநாள் தொடரும், புரட்சியின்போது சீக்கியர்களும் கூர்க்காக்களும் ஆற்றிய சேவைக்குப் பயனாக இந்தியப் படையில் இனி அவர்கள் மதிப்புமிக்க சிறப்பிடம் பெறுவர் என்றும் குறிப்பிடுகிறார்.''

இந்தியப் படைகளில் வடமேற்குப் பகுதி மக்களின் மேலா திக்க நிலை 1857 ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பிறகுதான் உருவானது எனும் சௌத்திரியின் கூற்று ஐயந்திரிபற்ற உண்மையாகும். மேலும், அவர்கள் தமது போர்க்குண உயர்வுகளால் இந்நிலையைப் பெற வில்லையென்பதற்கு உறுதியான சான்று தரும் தகவல்களையும் திரட்டி இந்தியத் தரைப்படையின் அமைப்பு புரட்சிக்கு முன்னும் பின்னும் எவ்வாறிருந்தது என்பதை விளக்கும் விவரங்களை அட்ட வணையிட்டுத் தந்துள்ளார்.

**இந்தியக் காலாட் படையின் இயைபில் மாற்றங்கள்**

**(பல்வேறு பகுதி மக்களின் எண்ணிக்கை விழுக்காடு)**

| | வடமேற்கு இந்தியா | | | | |
|---|---|---|---|---|---|
| ஆண்டு | பஞ்சாப், வட மேற்கு எல்லை மாநிலம் காசுமீரம் | நேபாளம் கார்வால் குமான் | வடகிழக்கு இந்தியா, பீகார், ஐக்கிய மாநிலம் | தென் இந்தியா | பர்மா |
| *1856* | *10*க்குள் | மிகக் குறைவு | *90*க்கு குறையாமல் | - | இல்லை |
| *1858* | *47* | *6* | *47* | - | ,, |
| *1883* | *48* | *17* | *35* | - | ,, |
| *1893* | *53* | *24* | *23* | - | ,, |
| *1905* | *47* | *15* | *22* | *16* | ,, |
| *1919* | *46* | *14.8* | *25.5* | *12* | 1.7 |
| *1930* | *58.5* | *22* | *11* | *5.5* | 3 |

இத்தகவல்கள் புரட்சிக்கு முந்தைய ஆண்டான 1856இல் இந்தியப் படைகளில் வடமேற்கு இந்திய வீரர்கள் மிகக் குறை வாகவே இருந்ததையும், புரட்சிக்குப் பின்னரே அவர்கள் பெரும் பகுதி இடம்பெறத் தொடங்கினர் என்பதையும் தெளிவாக்கு கின்றன.

போர்க்குணம் மிகுந்த இனத்தினர், போர்க்குணம் குறைந்த இனத்தினர் என்ற பாகுபாடு முதன் முதலாக 1879இல் தான்

கொள்கையடிப்படையில் அறிமுகப்படுத்தப்பட்டது; பின்னர் இராபர்ட்ஸ் பிரபுவால்[1] வலியுறுத்தப்பட்டு, அதன் பின்னர் கிட்சனர் பிரபுவால் இந்தியப் படைச் சேர்ப்பு முறையின் அடிப்படைக் கோட்பாடாக ஏற்றுக்கொள்ளப்பட்டதேயன்றி மெய்யாகவே வடமேற்குப் பகுதி மக்கள் போர்க்குணம் மிக்கவர்கள் என்று கூற அடிப்படையேதுமில்லை. வடமேற்கு இந்திய மக்கள் போர் வலிமை மிக்கவர்கள் என்றும் ஏனைய மக்கள் போர் வலிமை குன்றியவர்கள் என்றும் இந்திய அரசு அறிவித்தது அக்காலச் சூழ் நிலையின் பிறழ்ச்சி விளைவேயென்பதைத் தவிர வேறு காரண மில்லை. தொடர்ந்து வடமேற்கு இந்தியப் பகுதிகளிலேயே படைச் சேர்ப்பு நிகழ்ந்து வந்தமையால், இந்தியாவின் பிறபகுதி மக்க ளுக்கு வாய்க்காத, நல்லூதியம் தரும் நிரந்தரத் தொழிலாக அம் மக்கள் படைப்பணியைக் கருதத் தொடங்கினர். எனவே, வட மேற்கு இந்திய மக்களைத் தாராளமாகப் படையில் சேர்த்துக் கொண்டு அதேசமயம் பிற பகுதி மக்களுக்கு அத்தகைய வாய்ப்புக் களை மறுப்பதென்ற நடைமுறையை அரசு தொடர்ந்து கடைபிடித்து வந்தது; இதன் விளைவாகவே இன்று படைஞர்களில் வடமேற் கிந்திய மக்கள் எண்ணிக்கை மேலோங்கியிருக்கிறதெனில் மிகை யாகாது. மக்களில் பலர் விரும்பியோ விரும்பாமலோ தங்கள் மரபுத் தொழிலில் ஈடுபடல் இயல்பு. அவர்கள் வேறு புதிய தொழிலில் ஈடுபடுவதில்லை என்பதைக் கொண்டு மட்டும் அவர்கள் அத் தொழிலுக்குத் தகுதியற்றவர்கள் என்று கூறிவிட முடியாது; 'அது அவர்களது பரம்பரைத்தொழில் அன்று' என்று மட்டுமே முடிவுக்கு வரலாம்.

போர்க்குணம் மிக்கோர், போர்க்குணம் குன்றியோர் என்னும் பாகுபாடு தெளிவற்ற, செயற்கையான பிரிவினையேயாகும். தகுதியை விடப் பிறப்பே சிறப்புக்கு உரைகல் எனும் இந்துக்களின் சாதி

---

1. 'நாற்பத்தோர் ஆண்டுகள்' என்ற தமது நூலில், இராபர்ட்ஸ் பிரபு எழுதுவதாவது:

''சென்னை படை வீரர்களின் தேவைகளையும், திறன்களையும் கூர்ந்தறியும் பொருட்டு, ஒவ்வொரு குளிர் பருவத்திலும் நீண்ட பயணங்களை மேற்கொண்டேன். கடந்த நூற்றாண்டிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் அவர்களது முன்னோர்கள் போர்களில் காட்டிய வீரதீரப் பண்புகளின் அடையாளங்களை அவர்கள்பால் தேடிச் சோர்ந்து போனேன். எனவே பண்டைய வீர உணர்வு வங்காள மராட்டிய மக்களைப் போன்றே அவர்களிடமும் மடிந்து போய் விட்டதென முடிவுக்கு வரவேண்டியுள்ளது. எனவே அவர்களைப் போர்க்குணம் வாய்ந்த படைவீரர்களுக்கு எதிராகப் போரிடச் செய்து வெற்றி பெறல் அரிதென்றும், அப்படையைச் சென்னை மாநிலத்துக்கு வெளியே பயன்படுத்த இயலா தென்றும் முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது.''

பாகுபாட்டை விட இது மூடத்தனமானது எனலாம். ஒருகாலத்தில், இப்பாகுபாட்டை மெய்யானதென்றே அரசு வலியுறுத்திப் படைச் சேர்ப்பின் நடைமுறை அடிப்படையாக பின்பற்றி வந்தது; இதனைக் காரணங் காட்டியே படைகளில் வடமேற்கு இந்திய மக்களை மிகுதி யாகச் சேர்த்து வந்தது. இப்பாகுபாட்டுக்கும் மெய்யான போர்ப் பண்புகளுக்கும் அடிப்படைத் தொடர்பேதும் இல்லையெனத் தற்போது ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இந்தியத் தலைமைத் தளபதியாய் விளங்கிய, காலஞ்சென்ற சர் பிலிப் செட்வோடு, இந்தியப் படையின் அமைப்பு குறித்து இலண்டன் வானொலியில் பேசும்போது[1], வடஇந்தியாவின் கடும்வெயில், உறைகுளிர் ஆகிய தட்பவெப்ப நிலைமைகளை ஒட்டியே வடஇந்தியப் போர்களில் ஈடுபடுத்தத் தென்னிந்தியர்களை விட வடஇந்தியர்களையே நாடிச் சேர்த்ததாக விளக்கியுள்ளார். போர்ப்பண்புகள் இல்லாமல் எந்த ஒரு இனமும் நிலைத்திருக்க இயலாது. மேலும் அது பிறப்பினால் வருவதன்று; வளர்ப்பினாலும் பயிற்சியாலும் எவரும் அப்பண்பு களைப் பெற முடியும்.

இவையன்றியும், பயிற்சித் தேவையேதுமில்லாமலேயே, இந்துஸ்தானத்தில் போர் வீரம் நிரம்பவுண்டு. இங்கு வாழக்கூடிய சீக்கிய மக்களின் போர்க்குணம் குறித்துக் கூறத் தேவையில்லை. போர்ச் சாதியினர் என்று வருணிக்கப்படும் இராசபுத்திரர்களைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. கடந்த போரில் மராட் டியர் காட்டிய போர்ப்பண்புகளையும் நாம் கண்டிருக்கிறோம். போர்ச்சூழல்களில் வீரமும் திறமையும் காட்டுவதில் சென்னை மாநில மக்களும் பின்தங்க மாட்டார்களென நம்பலாம். ஒரு காலத்தில் இந்தியப் படையின் தலைமைத் தளபதியாய் விளங்கிய ஜெனரல் சர் பிரடெரிக் பி. ஹேன்ஸ், சென்னை மாநிலப் படை வீரர்களைப் பற்றிக் கூறியுள்ளது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

> "வங்காளப் படையோடு ஒப்பிடும்போது சென்னைப் படை யில் பலங்குன்றிய படைவீரர்களே மிகுதி என வழக்கமாகக் கூறப்படுகிறது; உடல்வாகுவை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு நோக்கினால் இது மெய்யாகவுமிருக்கலாம். வீர உணர்வும், போர்ப் படைக்குரிய பிற தன்மைகளும் இப்படை வீரர்களிடையே காண்பதரிதென்றும் கூறப்படுவதை என்னால்

1. இண்டியன் சோஷியல் ரிபார்மர், ஜனவரி 27, 1940.

ஏற்கவியலாது. அண்மைக் காலங்களில் அவர்களுக்குப் போர்ப் பணிகள் மிகுதியாகக் கொடுக்கப்படவில்லை யென்பது மெய்யே. அகழிகள் தோண்டும் பணிகளில் மட்டுமே ஒரு பிரிவினர் பயன்படுத்தப்பட்டுள்ளனர். இதைக் கொண்டு மட்டுமே சென்னைப் படை வீரர்கள் வீரம் குன்றியவர்கள் என்று கூறுவதை நான் ஏற்பதற்கில்லை. வரலாற்று உண்மை களும் இவற்றுக்கு மாறாகவே இருக்கின்றன. உடற்பயிற்சி, போர்ப்பயிற்சிகளில் இவர்கள் யாருக்கும் தாழ்ந்தவர்கள் அல்லர். உடல் நலம் பேணல் குறித்த அறிக்கைகளும் இவர் களும் ஏனைய மக்களுக்கு இணையாக விளங்குவதையே காட்டுகின்றன. போர் வீரர்கள் வரிசையில் வைக்கக் கூடிய சுருங்கை தோண்டும் வீரர்களின் கைபர்கணவாய்ச் சாதனை களும் இப்பகுதி மக்களின் வீரத்திற்குச் சான்று பகர்கின்றன.''

எனவே தேவையான எண்ணிக்கையில் போர்ப்படைகள் தமது மக்களிடையே கிடைக்குமாவென இந்துஸ்தானம் அஞ்சத் தேவை யில்லை. எனவே, இதன் காரணமாகப் பாகிஸ்தான் பிரிவினை யால் இந்தியாவின் வலிமை எவ்வகையிலும் குன்றாது.

சிறப்பாக இந்தியப் படைகளுக்கே உரித்தானவை என்று மூன்று தனித்தன்மைகளை சைமன் ஆணையம் சுட்டிக்காட்டியுள்ளது. முதலாவதாக, இந்தியப் போர்ப் படைகளுக்கு இரண்டு வகைக் கடமைகள் உண்டு. ஆப்கானிய எல்லையில் சுயேச்சையாக வாழும் மலைக்குடியினர், சமவெளிகளில் வாழும் அமைதியான மக்களைத் தாக்கி கொள்ளையடிக்காமல் காப்பது முதலாவது கடமையாகும். இரண்டாவது கடமை நன்கு நிறுவப்படாத எல்லைப்புறங்களின் வழியாக அண்டை நாடுகளின் படையெடுப்பு நிகழாமல் பார்த்துக் கொள்வதாகும். 1850 ஆம் ஆண்டு முதல் 1922 ஆம் ஆண்டு வரை கொள்ளையருக்கெதிராக 72 போர்ப் பயணங்களை இப்படைகள் நடத்தியுள்ளன. அதாவது சராசரியாக ஆண்டுக்கு ஒருமுறை. நன்கு நிறுவப்படாத எல்லைகளின் வழியாகவே பன்னெடுங்காலமாக அன்னியர் படையெடுப்புகள் தொடர்ந்து நடந்துள்ளன என்பதை யும் ஆணையம் சுட்டிக்காட்டுகிறது. மேலும் இவ்வாறு படை யெடுக்கக்கூடிய நாடுகள் சர்வதேச சங்கத்தில் இடம் பெறாதவை என்பது ஆபத்தின் கூர்மையைக் காட்டுவதாக உள்ளது என்றும் ஆணையம் குறிப்பிடுகின்றது. இவ்விரண்டு அம்சங்களும், பிரிட்டிஷ் பேரரசின் வேறெந்தப் பகுதியிலும் காணப்படாத, இந்தியாவின் பாதுகாப்பைப் பாதிக்கக்கூடிய தனித்தன்மை வாய்ந்த பிரச்சினைகள்

என்றும், தன்னாட்சி நிலைமையை எதிர்நோக்கும் பிரிதெந்த நாட்டிலும் இல்லாத வகையிலான பாதுகாப்புச் சிக்கல்கள் என்றும் சைமன் ஆணையம் குறிப்பிடுகிறது.

இந்தியப் படையின் இரண்டாவது தனி இயல்பாக சைமன் ஆணையம் குறிப்பிடுவதாவது:

> "இந்தியப் படைகளின் பணி, வெளிநாட்டார் தாக்குதல்களிலிருந்து நாட்டைக் காப்பதுடன் நின்றுவிடாது; அது எல்லைகளிலன்றி உள்நாட்டிலும் பரவலாக நிறுத்தப்பட்டு உள்நாட்டு அமைதியை பாதுகாக்கும் பணியிலும் அடிக்கடி ஈடுபடுத்தப்படுகிறது. ஏனைய நாடுகளில் ... போர்ப் படைகள் இவ்வாறு பயன்படுத்தப்படுவதில்லை; இந்நோக்கத்திற்கென்று படைகள் நிறுவப்படுதலும் கிடையாது. ஆனால் இந்தியாவின் நிலைமையோ முற்றிலும் மாறாகக் காணப் படுகிறது. உள்நாட்டுக் கலவரங்களைத் தடுக்கவும் ஒடுக்கவுமே ஆண்டில் பல முறை இந்தியப் படைகள் பயன்படுத்தப் படுகின்றன. இந்தியக் காவல் துறை மிகச் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டுள்ளதெனினும், தீவிர மதவெறிக் கும்பல்களால் அடிக்கடி திடீரென நடத்தப்படும் வன்முறை வெறியாட்டங்களைக் காவல்துறையால் மட்டுமே சமாளிக்க இயலுவதில்லை. படைவீரர்கள், இவ்வாறு, உள்நாட்டு அமைதி காக்கும் பணிக்கு அழைக்கப்பட நேருமென்பதைப் படை வீரர்கள், காவல் துறையினர் மட்டுமன்றி பொதுமக்களில் பலரும்கூட நன்கு உணர்ந்துள்ளனர் எனலாம். இவ்வாறு உள்நாட்டு அமைதி காக்கவும் கலவரங்களையடக்குவதுமான நோக்கங்களுக்காகப் படைகளை அழைத்தல் நாளுக்கு நாள் பெருகி வருவதுடன், பெரும்பாலான சமயங்களில் பிரிட்டிஷ் படைகளையே அனுப்புமாறு கோருதலும் வழக்கமாகி விட்டது. கடந்த கால் நூற்றாண்டில் இத்தகைய பணிகளுக்காக இந்தியப் படைகளைப் பயன்படுத்தியதைவிட பிரிட்டிஷ் படைகளைப் பயன்படுத்தும் போக்கு மிகுந்திருப்பதைக் காணலாம். முஸ்லீம்களுக்கு எதிராக இந்துக்களுக்கோ, இந்துக்களுக்கெதிராக முஸ்லீம்களுக்கோ ஆதரவு காட்டாமல் நடுநிலையாக ஆங்கிலப் படையினர் செயல்படுவர் என்னும் நம்பிக்கையே இப்போக்குக்குக் காரணமாகும்... இராணுவத் தலையீடு கொண்டே தீர்வு காணநேர்ந்த கலவரங்களில் பெரும்பாலானவை சாதி, மதவெறிகளின் விளைவாய்த் தோன்றியவையே என்பதால், பூசலில் ஈடுபடும் சாதிகளையோ மதத்தினரையோ சாராத ஆங்கிலப் படையினரால் மட்டுமே பாரபட்சமின்றி,

ஐயத்திற் காளாகாது வலிமையான முறைகளில் விரைந்து செயல்பட முடியும். இத்தகைய நிலைமைக்குச் சிறந்த சான்று ஒன்றினைக் காணலாம்; இந்தியப் படை வீரர்களின் மொத்த எண்ணிக்கையில் ஆங்கிலேயர்கள் ஐந்தில் இரண்டு பங்கு உள்ளனர். எனினும், உள்நாட்டு அமைதிப் பணியில் ஈடுபடும் படை வீரர்களில் பதினைந்துக்கு எட்டு பேர் ஆங்கிலேயர்களே.''

இந்தியப் படைகளின் இத்தனித்தன்மையைப் பற்றி ஆணையம் மேலும் கூறுவதாவது:

''எனவே, எவ்வாறு கனடா கனடிய துருப்புகளை சார்ந்து நிற்கிறதோ, அயர்லாந்து அயர்லாந்து துருப்புகளைச் சார்ந்து நிற்கிறதோ அவ்வாறே தற்போதுள்ள ராணுவத்திற்குப் பதிலாக முற்றிலும் இந்தியப் படைவீரர்களாலேயே நாடு பாதுகாக்கப் படுகின்ற, அமைதி நிலைநாட்டப்படுகின்ற ஓர் எதிர் காலத்தைப் பற்றி இந்தியா விஷயத்தில் சிந்திக்கும்போது, இந்திய உள்நாட்டுப் பிரச்சினையின் பரிமாணங்களையும் தன்மையையும், அதேபோன்று அமைதியான ஆட்சியை ஆதரித்து நிற்பதில் நாட்டின் பொதுமக்கள் திருப்தி கொள்ளும் வகையில் தற்போது பிரிட்டிஷ் படைவீரர்கள் ஆற்றிவரும் பங்கையும் உணர்வதும் - அதனை நினைவில் கொள்வதும் அவசியம்.''

இந்தியப் படைகளின் மூன்றாவது தனித்தன்மையாக சைமன் ஆணையம் குறிப்பிடுவது, படைவீரர்களில் வடமேற்குப் பகுதியினர் மிகுதியான எண்ணிக்கையில் இருப்பதையே. இந்நிலை வந்ததற்கான காரணிகளைப் பற்றியும், அக்காரணிகளைப் பற்றிய அரசின் விளக்கங்களையும் ஏற்கனவே ஆய்ந்து நோக்கினோம்.

ஆனால் சைமன் ஆணையத்தால் சுட்டிக்காட்டப்படாத பிறிதொரு தனித்தன்மையும் இந்தியப் படைக்கு உண்டு. இதை ஆணையம் புறக்கணித்திருக்கலாம், அல்லது அறியாமலே கூட இருந்திருக்கலாம். ஆனால் சமுதாய, அரசியல் விளைவுகளைப் பொருத்தமட்டில் ஆணையம் சுட்டிய மூன்று தனித்தன்மைகளையும் விட மேலோங்கி நிற்கக் கூடியது இதுவே.

இத்தனித்தன்மை, பரவலாக அறியப்படுமாயின், பலர் ஆவேசமாகச் சிந்திக்கத் தொடங்கிவிடுவார்கள். இதனால் தீர்வு காண இயலாத சிக்கல்களும், இந்தியாவின் அரசியல் முன்னேற்

றமும் தடைப்படலாம். படையை இந்தியமயமாக்குவதைவிடக் கடினமானதும் முக்கியம் வாய்ந்ததுமான பல சிக்கல்களுக்குக் காரணமாய் இது அமையும்

இந்தியப் படைகளின் வகுப்புவாரி இயைபு பற்றியதே ஆணையம் புறக்கணித்துள்ள அம்சமாகும். சௌத்திரி தமது கட்டுரைகளில் திரட்டித் தந்துள்ள தகவல்கள் இது பற்றிய விளக்கமான தெளிவிற்கு வழிகோலுகின்றன. இந்தியக் காலாட் படையில், சேவை புரியும் படை வீரர்கள் எந்தப் பகுதிகளை, எந்த வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் என்பதை அவர் கீழ்க்கண்டவாறு பட்டியலிட்டுத் தந்துள்ளார்:

### இந்தியப் படையின் வகுப்புவாரி இயைபில் மாற்றங்கள்

| பகுதிகளும், வகுப்புகளும் | படை வீரர் எண்ணிக்கை விழுக்காடு (%) | | | |
|---|---|---|---|---|
| | 1914இல் | 1918இல் | 1919இல் | 1930இல் |
| I. பஞ்சாப், காசுமீரம், வட மேற்கு எல்லை மாநிலம் | 47 | 46.5 | 46 | 58.5 |
| 1. சீக்கியர்கள் | 19.2 | 17.4 | 15.4 | 13.58 |
| 2. பஞ்சாபி முஸ்லீம்கள் | 11.1 | 11.3 | 12.4 | 22.6 |
| 3. பட்டாணியர்கள் | 6.2 | 5.42 | 4.54 | 6.35 |
| II. நேபாளம், குமான், கார்வால் | 15 | 18.9 | 14.9 | 22.00 |
| 1. கூர்க்காக்கள் | 13.1 | 16.6 | 12.2 | 16.4 |
| III. வட இந்தியா | 22 | 22.7 | 25.5 | 11.0 |
| 1. ஐக்கிய மாநில இராசபுத்திரர் | 6.4 | 6.8 | 7.7 | 2.55 |
| 2. இந்துஸ்தானி முஸ்லீம்கள் | 4.1 | 3.42 | 4.45 | 0 |
| 3. பிராமணர்கள் | 1.8 | 1.86 | 2.5 | 0 |
| IV. தென்னிந்தியா | 16 | 11.9 | 12 | 15.5 |
| 1. மராட்டியர் | 4.9 | 3.85 | 3.7 | 5.33 |
| 2. சென்னை முஸ்லீம்கள் | 3.5 | 2.71 | 2.13 | 0 |
| 3. தமிழர்கள் | 2.5 | 2.0 | 1.67 | 0 |
| V. பர்மா | | | | |
| 1. பர்மியர்கள் | 0 | 0 | 1.7 | 3.0 |

குறிப்பாக 1919 ஆம் ஆண்டுக்குப்பிறகு இந்தியப் படைப் பிரிவுகளின் வகுப்புவாரி இயைபில் எத்தகைய ஆழமான மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன என்பதை ஐயத்திற்கிடமில்லா வகையில் இந்த அட்டவணை தெளிவுறுத்துகிறது. இம்மாற்றத்தின் முக்கியத் தன்மைகளாவன:

1) பஞ்சாபி முஸ்லீம்கள், பட்டாணியர் விகிதத்தின் அதிவேகப் பெருக்கம்;

2) சீக்கியர்களின் விகிதம் முதலிடத்திலிருந்து கணிசமாகக் குறைந்து மூன்றாவது இடத்துக்கு இறங்கியுள்ள நிலை;

3) இராசபுத்திரர்களின் விகிதம் வெகுவாய்க் குறைந்து நான்காமிடத்துக்குத் தள்ளப்பட்ட நிலை;

4) ஐக்கிய மாநிலப் பிராமணர்கள், சென்னை மாநில முஸ்லீம்கள், பிராமணர், பிராமணரல்லாதோர் உள்ளடங்கிய தமிழர்கள் ஆகிய இனத்தவரின் எண்ணிக்கை அடியோடு மறைந்து விட்ட நிலை.

மேலும் ஆழமான ஆய்வுக்கு உதவும் வகையில், காலாட் படை, குதிரைப் படை போன்ற பிரிவுகளின் வகுப்புவாரி இயைபு சம்பந்தமாக 1930 ஆண்டுக்கான விவரங்களை சௌத்திரி தந்துள்ளார். அந்த விவர அட்டவணையை ஈண்டு நோக்குவோம்.

**1930 இல் இந்தியப் படையின் வகுப்புவாரி இயைபு**

| வகுப்பு | பகுதி | காலாட்படையில் % பங்கு | | குதிரைப்படையில் % பங்கு |
|---|---|---|---|---|
| | | கூர்க்கா நீங்கலாக | கூர்க்கா உட்பட | |
| 1. பஞ்சாபி முஸ்லீம் | பஞ்சாப் | 27 | 22.6 | 14.28 |
| 2. கூர்க்காக்கள் | நேபாளம் | - | 16.4 | - |
| 3. சீக்கியர் | பஞ்சாப் | 16.24 | 13.58 | 23.81 |
| 4. தோக்ராக்கள் | வட பஞ்சாப், காசுமீரம் | 11.4 | 9.54 | 9.53 |
| 5. ஜாட்டுகள் | இராசபுதனம், பஞ்சாப் ஐக்கிய மாநிலம் | 9.5 | 7.94 | 19.06 |
| 6. பட்டாணியர் | வடமேற்கு எல்லை மாநிலம் | 7.57 | 6.35 | 4.76 |
| 7. மராட்டியர் | கொங்கணம் | 6.34 | 5.33 | ... |
| 8. கார்வாலியர் | கார்வால் | 4.53 | 3.63 | ... |
| 9. ஐ.மா. இராச புத்திரர் | ஐக்கிய மாநிலம் | 3.04 | 2.54 | ... |
| 10. இராசபுதன இராசபுத்திரர் | இராசபுதனம் | 2.8 | 2.35 | ... |
| 11. குமானியர் | குமான் | 2.44 | 2.05 | ... |
| 12. குஜார்கள் | வடமேற்கு இராசபுதனம் | 1.52 | 1.28 | ... |
| 13. பஞ்சாபி இந்துக்கள் | பஞ்சாப் | 1.52 | 1.28 | ... |
| 14. அகீர்கள் | பஞ்சாப் | 1.22 | 1.024 | ... |
| 15. முஸ்லீம்கள், இராசபுத்திரர், ரங்கார்கள் | டில்லி, | 1.22 | 1.024 | 7.14 |
| | டில்லியை அண்மிய பகுதிகள் | 1.22 | 1.024 | 7.14 |
| 16. கைம்கானியர் | இராசபுதனம் | ... | ... | 4.76 |
| 17. கச்சின்கள் | பர்மா | 1.22 | 1.024 | ... |
| 18. சின்கள் | பர்மா | 1.22 | 1.024 | ... |
| 19. காரென்கள் | பர்மா | 1.22 | 1.024 | ... |
| 20. தக்காண முஸ்லீம்கள் | தக்காணம் | ... | ... | 4.76 |
| 21. இந்துஸ்தானி முஸ்லீம்கள் | ஐக்கிய மாநிலம் | ... | ... | 2.38 |

1. இந்தியப் படைகளில், காலாட்படையின் பயிற்சி பெற்ற 82 பிரிவுகளிலும், பயிற்சிபெறும் 18 பிரிவுகளிலும் (பட்டாலியன்கள்) குதிரைப் படையின் 21 பிரிவுகளிலும் (ரெஜிமெண்ட்டுகள்) கூர்க்கா

(தொடர்ச்சி பின்பக்கம்)

1930 ஆம் ஆண்டு நிலவரப்படி வகுப்புவாரி அடிப்படையில் மட்டும் விவரங்களைத் தொகுத்தால் கீழ்வருமாறு அமையும்:

| வகுப்பு | காலாட் படைப்பிரிவில் % | | குதிரைப்படைப் பிரிவில் % |
|---|---|---|---|
| | கூர்க்காக்கள் நீங்கலாக | கூர்க்காக்கள் உட்பட | |
| 1. இந்துக்கள் - சீக்கியர் | 60.55 | 50.554 | 61.92 |
| 2. கூர்க்காக்கள் | ... | 16.4 | ... |
| 3. முகமதியர் | 35.79 | 29.974 | 30.08 |
| 4. பர்மியர் | 3.66 | 3.078 | ... |

அட்டவணை புலப்படுத்தும் வகுப்புவாரி விகிதங்களைத் தொகுத்து நோக்கி, சௌத்திரி தெரிவிக்கும் செய்தியின் சுருக்கமாவது, இந்தியக் காலாட் படையில் 36 சதவிகிதமாகவும், இந்தியக் குதிரைப் படையில் 30 சதவிகிதமாகவும் முஸ்லீம்கள் பங்கு பெற்றிருந்தனர் என்பதே.

1930 ஆம் ஆண்டு நிலவரத்தைக் கண்டோம். அதற்குப் பின்னர் இவ்விகிதங்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் நாம் காண வேண்டும்.

இந்திய ராணுவ வரலாற்றில், இதைப் பற்றி 1930 ஆம் ஆண்டுக்குப் பிந்தியகால விவரங்கள் கிடைக்கப் பெறவில்லை என்பதே இடர்ப்பாடான நிலைமையாகும். இன்றைய காலகட்டத்தில் இந்தியப் போர்ப்படைகளில் எத்தனை விழுக்காடு முஸ்லீம்கள் உள்ளனர் என்பதை அறியமுடியவில்லை. இவ்விவரங்களைத் தரக்கூடிய அரசு வெளியீடுகள் ஏதும் காணப்படவில்லை. கடந்த காலத்தில் இத்தகைய தகவல்களைத் தரும் வெளியீடுகள் பல கிடைக்கப் பெற்றன. அத்தகைய வெளியீடுகள் நிறுத்தப்பட்டுள்ளன

(முன்பக்கத் தொடர்ச்சி)

காலாட் படையின் 20 பிரிவுகளிலும் உள்ள படை வீரர்களின் வகுப்புவாரி விகிதத்தின் அடிப்படையில் பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது. இந்திய மலைநிலத்துப் பீரங்கிப் படையின் 19 அணிகளும், கண்ணி வெடிவைப்போர், அகழி தோண்டுவோர்களின் 3 பிரிவுகளும், இந்திய சமிக்கைப் படைக்குழுவினரும், இந்திய முன்னோடிப்படைகளும் இதில் சேர்க்கப்பட வில்லை. இவர்களில் பஞ்சாபி, முஸ்லீம், சீக்கியர், பட்டாணியர், இந்துஸ்தான இந்துக்களும், முஸ்லீம்களும், எல்லா வகுப்புகளையும் சேர்ந்த மதராசிகள், ஹஜ்ரா ஆப்கானியர் ஆகிய பல்வேறு வகுப்பினரும் இவற்றில் இடம்பெற்றிருந்தனர். இவற்றில் இடம்பெற்றிருந்த மதராசிகளும் ஹஜ்ராக்களும் வேறு படைப் பிரிவுகளுக்கு மாற்றப்பட்டனர் என்பதால் விளையும் வேறுபாடுகள் வகுப்புவாரி விகிதத்தைப் பாதிக்கும் அளவில் இல்லையெனலாம். மேலும் பிரிட்டிஷ் காலாட் படையிலும் பீரங்கிப் படையிலும் இடம்பெற்றுள்ள இந்தியர்களின் எண்ணிக்கையும் இப்பட்டியலில் சேர்க்கப்படவில்லை.

வென்பதும் கிடைக்கப்பெறும் வெளியீடுகளில் இத்தகைய தகவல்கள் இடம் பெறுவதில்லை என்பதும் வியப்புக்குரியதாகும். இத்தகவல் களைத் தரக்கூடிய அரசு வெளியீடுகள் ஏதும் கிடையாது என்பதுடன, மத்திய சட்டப்பேரவை உறுப்பினர்கள் இதுகுறித்து வினாக்கள் எழுப்பினாலும் தகவல் மறுக்கப்படுகிறது என்பதே இன்றைய நிலை. இத்தகவல்களைத் தருதற்கு அரசு எவ்வளவு பிடிவாதமாக மறுக்கிறது என்பதை விளக்க சட்டப்பேரவை செயல்குறிப்புகளின் கேள்வி பதில் பகுதிகளிலிருந்து ஒரு சிறுபகுதி இங்கே தரப்படுகிறது:

கீழே தரப்படும் கேள்வி பதில் பகுதி 1938 ஆம் ஆண்டு செப்டம்பர் 15 ஆம் தேதிய அவைக் குறிப்புகளிலிருந்து பெறப் பட்டது:

## இந்தியாவின் பாதுகாப்புக்கான ஏற்பாடுகள்[1]

கேள்வி 1360: திரு. பத்ரிதத் பாண்டே (திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்தியாயா சார்பில்)

| | | | | |
|---|---|---|---|---|
| (அ) | x | x | x | x |
| (ஆ) | x | x | x | x |
| (இ) | x | x | x | x |

(ஈ) 1937, 1938 ஆம் ஆண்டுகளில் எத்தனை இந்தியர்கள் படை வீரராகவும், அலுவலர்களாகவும் இந்தியக் காலாட் படையிலும், குதிரைப் படையிலும் பணியமர்த்தப்பட்டுள்ளனர்? பணியமர்த்தப் பட்ட வீரர்கள், அலுவலர்களில் பஞ்சாபியர், சீக்கியர், பட்டாணியர், கார்வாலியர், மராட்டியர், மதராசிகள், பீகாரிகள், வங்காளிகள், ஐக்கிய மாநில இந்துஸ்தானியர், கூர்க்காக்கள் ஆகிய வகுப்பினரின் எண்ணிக்கைகள் தனித்தனியே எவ்வளவு?

(உ) பஞ்சாபியர், சீக்கியர், பட்டாணியர், கார்வாலியர் தவிரப் பிறிதெவரும் பணியமர்த்தப்படவில்லையெனில், இனி வருங் காலத்தில் பிற மாநிலங்களில் படைச் சேர்ப்பு நிகழ்த்திப் பயிற்சி தர மாண்புறு அமைச்சர் திட்டமிட்டுள்ளாரா?

(ஊ) இந்தியப் பாதுகாப்புக்காக மாநிலப் படைப்பிரிவுகளைத் திரட்டி பயிற்சிதர மாநில அரசுகளைப் பாதுகாப்புச் செயலர் கேட்டுக் கொள்வாரா? இல்லையெனில் இந்தியாவின் பாதுகாப்புக்காகத்

---

[1] சட்டப்பேரவை விவாதங்கள், 1938, பகுதி VI பக். 2462.

திறமை வாய்ந்த படையை உருவாக்குதற்கு அவர் என்ன திட்டம் வைத்துள்ளார்?

**திரு. சி.எம்.ஜி. ஓகில்வி :**

(அ) மாண்புமிகு உறுப்பினர் கேட்கும் விவரங்களை வெளியிடுதல் பொதுமக்களின் நலனுக்குகந்ததல்ல என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

(ஆ) இந்திய விமானப்படையில் 1937-38 ஆம் ஆண்டில் 5 உயர் பயிற்சியாளர்களும் 33 இந்தியப் பணிபயில்பவர்களும் பணியமர்த்தப் பட்டுள்ளனர்.

(இ) 1937-38 ஆம் ஆண்டிலேயே, பேரரசின் கப்பற்படையில் 5 இந்தியர்கள் உயர் பதவிகளில் சேர்க்கப்பட்டுள்ளனர்; போட்டித் தேர்வுகள் வாயிலாக மேலும் 4 இந்தியர்கள் 1938 அக்டோபரில் பணியமர்த்தப்படவுள்ளனர்; 'டஃபரின்' சிறப்புத் தேர்வுகள் வாயிலாக மட்டும் மேலும் மூவர் தேர்வு செய்யப்படவுள்ளனர். இதே காலத்தில் இந்தியப் பேரரசுக் கடற்படையின் பிற பணியிடங் களில் 314 இந்தியர்கள் சேர்க்கப்பட்டுள்ளனர்.

(ஈ) 1938, மார்ச் 31 ஆம் தேதியுடன் முடிகின்ற ஆண்டில் இந்தியப் படைகளில் 54 இந்தியர்களுக்கு உயர் பதவிகள் வழங்கப்பட்டுள்ளன. அவர்கள் தற்போது பிரிட்டிஷ் படைப் பிரிவுகளில் பயிற்சிப் பெற்றுக் கொண்டுள்ளனர். அவர்களில் காலாட் படைக்கு எத்தனைபேர், குதிரைப் படைக்கு எத்தனை பேர் அமர்த்தப்படுவர் என்பதை இப்போது கூற இயலவில்லை. இதே காலத்தில் (ஆண்டில்) குதிரைப் படையில் 961 இந்திய வீரர்களும், காலாட் படையில் 7,970 இந்திய வீரர்களும் பணியமர்த்தப்பட்டுள்ளனர். இவர்களது வகுப்புவாரி விகிதம் தலைமை அலுவலகத்தில் கிடைக்கவில்லை. ஆட்சேர்ப்பு அலுவலகங்களிலிருந்து இவ்விவரங்களைத் திரட்ட முற்படுவது தேவையற்ற வீண் செலவும் உழைப்புமாகும்.

(உ) இல்லை.

(ஊ) கேள்வியின் முதற்பகுதிக்கு இல்லையென்பதே விடை. இரண்டாம் பகுதிக்கு, இந்தியாவுக்கு ஏற்கெனவே, அதன் நிதி நிலைக்கேற்ற திறமையான படை உள்ளது என்பதையும், எல்லா வகை யிலும் அதன் திறமை குன்றாது காலத்துக்கேற்றபடி மேம்பாடு களைச் செய்யவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுமென்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எஸ். சத்தியமூர்த்தி:** மேற்கண்ட வினாவின் (ஈ), (உ) பகுதிகளை இணைத்து நோக்கி ''இந்தியப் படையில் பெரும்பகுதியில் பஞ்சாபின் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரே உள்ளனர்'' என்று பொது நலப் பணியில் ஈடுபட்டுள்ளோர் பலர் அறிக்கைகளை விடுத்திருத்தல் அரசின் கவனத்துக்கு வந்துள்ளதா? இத்தகவல்களைக் கவனத்தில் கொண்டு, பல்வேறு நாடுகளைப் போன்று அரசியல் அதிகாரத்தை இராணுவம் கைப்பற்றிக் கொண்டு சர்வாதிகார ஆட்சி நடத்தும் ஆபத்தைத் தவிர்ப்பதற்காக, படைச்சேர்ப்புப் பணிகளை நாடெங்கும், பல்வேறு வகுப்பினரையும் உள்ளடக்கிப் பரவலாக நடத்துவதன் மூலம், இந்தியப் படைக்கு மெய்யான தேசியத் தன்மை தர அரசு முயலுமா?

**திரு. சி.எம்.ஜி. ஓகில்வி:** இவ்வினாவிலிருந்து தாங்கள் குறிப்பிடும் வினா எவ்வாறு எழுகிறது என்று நான் கூறுதற்கில்லை. ஆனால், மாநில எல்லை வேறுபாடுகள் அரசின் மதிப்பீடுகளில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லையென உறுதியாகக் கூறுவேன். இந்தியாவின் பாதுகாப்பு நோக்கில் சிறந்த படைவீரர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்களேயன்றி, மாநிலங்களின் பாதுகாப்புக்கெனப் படை திரட்டப்படுவதில்லை; இங்கு மாநில நலன்களைவிட நாட்டு நலனுக்கே முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும். எங்கு சிறந்த போர்வீரர்கள் கிடைக்கிறார்களோ அங்கிருந்துதான் பெரும் எண்ணிக்கையில் படை திரட்டுவோமேயன்றி பிற இடங்களிலிருந்து அல்ல.

**திரு. எஸ். சத்தியமூர்த்தி:** படையினரில் பெரும்பாலோர் பஞ்சாபிலிருந்து சேர்க்கப்பட்டவர்களாவென அறிய விரும்புகிறேன்; மேலும் மிக அண்மைக்காலத்தில் எனது மாநிலத்தைச் (சென்னை) சேர்ந்த வீரர்கள் இந்தியப் படையில் ஆற்றிய வீரதீரச் செயல்களை அரசு மறந்து விட்டதாவென்றும் அறிய விரும்புகிறேன். தவிரவும், படைச் சேர்ப்புகளில் சென்னை மாநிலத்தவரும், ஏனைய பல்வேறு மாநிலத்தவரும் நடைமுறையில் புறக்கணிக்கப் படுகின்றனராவென்பதையும் அறிய விரும்புகிறேன்.

**திரு. சி.எம்.ஜி. ஓகில்வி:** இந்தியப் படையில் சென்னை மாநிலம் முற்றுமாகப் புறக்கணிக்கப்படவில்லை; சென்னையைச் சேர்ந்தவர்கள் போர்ப்படைகளில் புரிந்த தீரச்செயல்களை அரசு மகிழ்ச்சியோடு நினைவு கூர்கிறது. அவர்கள் எந்தப் பணிகளில் மேம்பட்ட திறமை காட்டியுள்ளார்களோ அப்பணிகளுக்கு இப்போதும் சேர்க்கப்படுகிறார்கள். இப்போது அகழிகள் தோண்டுவோர், கண்ணி வெடியாளர்கள், பீரங்கிப் படையினரில் சுமார் 4500 பேர் பணியிலுள்ளனர்.

திரு. எஸ். சத்தியமூர்த்தி: அதாவது மொத்தம் 1,20,000 பேரில்?

திரு. சி.எம்.ஜி. ஓகில்வி: தோராயமாக, ஆம்.

திரு. எஸ். சத்தியமூர்த்தி: சென்னை மாநிலத்தின் மக்கள் தொகையையும், மத்திய அரசின் கருவூலத்திற்கு, இம்மாநிலத்திலிருந்து கிடைக்கும் வருவாயையும், எல்லா மாநிலங்களிலிருந்தும் வீரர்களைக் கொண்ட தேசியப் போர்ப் படை உருவாக வேண்டிய தேவையையும் கருத்தில் கொண்டு நோக்கினால் இது சரியான விகிதம் என்று கருத முடியுமா?

திரு. சி.எம்.ஜி. ஓகில்வி: சிறந்த போர்ப்படையை உருவாக்க வேண்டிய தேவையையே அரசு கவனத்தில் கொள்கிறது.

திரு. எஸ். சத்தியமூர்த்தி: இந்தியப் போர்ப்படைக்குப் பஞ்சாபைத் தவிர பிற மாநிலங்களிலிருந்து சிறந்த போர் வீரர்கள் கிடைக்க மாட்டார்களென, எந்தச் சோதனைகள் மூலம் அரசு முடிவு செய்துள்ளது என்பதை அறியலாமா?

திரு. ஓகில்வி: அனுபவத்தின் மூலமாகத்தான்.

டாக்டர் சர் ஜியாவுதீன் அகமது: கணக்குத்துறையின் பல்வேறு பிரிவுகளிலும் சென்னை மாகாணவாசிகளே பெரும் எண்ணிக்கையில் உள்ளனர் என்பது மெய்யா? அவ்வாறெனில், அத்துறையில் அவர்களின் எண்ணிக்கையைக் குறைக்க உடன் நடவடிக்கைகளை அரசு எடுக்குமா?

திரு. ஓகில்வி: அக்கேள்வியிலிருந்து, இது எவ்வாறு எழுகிறதென எனக்குப் புரியவில்லை. ஆனால் எந்த ஒரு மாநில நலனுக்காகவும் பணித் திறமைக்கு ஊறு செய்ய அரசு ஒருபோதும் தயாராக இராது.

## இந்தியப் படைப் பிரிவுகளில் பல்வேறு சாதிகளைச் சேர்ந்த இந்திய வீரர்கள்[1]

வினா 1078: திரு. எம். அனந்த சயனம் ஐயங்கார் (திரு. மானுசு பேதார் சார்பில்)

(அ) இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலிருந்தும், சீக்கியர்,

1. சட்டப்பேரவை விவாதங்கள், 1938, தொகுதி VI, பக்கம் 2478.

மராட்டியர், இராசபுத்திரர், பார்ப்பனர், முஸ்லீம்கள் என்ற பல்வேறு சாதியினரையும் கொண்டு படைப்பிரிவுகள் அமைக்கும் ஏற்பாடு பிரிட்டிஷ் ஆட்சியில் சோதித்துப் பார்க்கப்பட்டுள்ளதா என்பதைப் பாதுகாப்புச் செயலர் தெரிவிப்பாரா?

(ஆ) அவ்விதம் சோதித்துப் பார்க்கப்படவில்லையெனில், ஏன் அவ்வாறு செய்யப்படவில்லை என்பதற்கான காரணங்கள் அரசின் கொள்கை அறிக்கையாகத் தரப்படுமா?

(இ) படையின் மாண்புறு தலைமைத் தளபதியவர்கள் இதனைப் பேரரசரின் அரசுடன் கலந்தாலோசிப்பாரா?

(ஈ) பல்கலைக்கழகப் படைப் பிரிவுகள், பம்பாய்ச் சாரணர் இயக்கம், நாட்டின் காவல்துறை போன்ற அமைப்புகளில் சாதி மதப் பிரிவுகள் ஏதும் பாராட்டப்படுவதில்லை என்பதை அரசு அறியுமா?

**திரு. சி.எம்.ஜி. ஓகில்வி:**

(அ) இல்லை

(ஆ) படையமைப்பின் அடிப்படைக் கொள்கையாக, படையின் துணைப் பிரிவுகள் (கம்பெனி, குவாட்ரன் போன்றவை) ஒருபடித் தானவையாக இருக்க வேண்டுமென்று அரசு கருதுகிறது.

(இ) இல்லை. காரணம் கேள்வியின் முந்தைய பகுதிக்குக் கூறப்பட்ட விடையே.

(ஈ) அரசு அறியும்.

**திரு. சத்தியமூர்த்தி:** 'ஒருபடித்தான' என்ற சொல்லை என்ன பொருளில் அரசு பயன்படுத்துகிறது என அறியலாமா? ஒரே மாநிலத்தின் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்டு அமைத்தல் என்பதுதான் அதன் பொருளா?

**திரு. ஓகில்வி:** படைப் பிரிவு உறுப்பினர்கள் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டுமென்பதே அதன் பொருள்.

*திரு. சத்தியமூர்த்தி:* விடையில் மேலும் விளக்கம் தேவை. ஒரு வகுப்புக்கும் இன்னொரு வகுப்புக்கும் இடையே வேறுபாடு காட்டப்படுகிறதா?

*திரு. ஓகில்வி:* ஆம்.

*திரு. சத்தியமூர்த்தி:* எந்த அடிப்படையில்? மத அடிப்படையிலா, இன அடிப்படையிலா? மாநில அடிப்படையிலா?

*திரு. ஓகில்வி:* பெரும்பாலும் இன அடிப்படையே. மற்றவை கருதப்படுவதில்லை.

*திரு. சத்தியமூர்த்தி:* எந்த இனங்களுக்கு முதன்மை தரப்படுகிறது? எந்த இனங்களுக்கு முதன்மை தரப்படுவதில்லை?

*திரு. ஓகில்வி:* இராணுவப் பட்டியலைப் பார்க்குமாறு மாண்புறு உறுப்பினரை வேண்டுகிறேன்.

## இந்தியப் படைக்கு ஆள்சேர்ப்பு[1]

*வினா 1162: திரு. பிரஜேந்திர நாராயன் சௌத்திரி:*

அ) இந்துஸ்தான் டைம்ஸ் நாளேட்டின் 1938, செப்டம்பர் 5 இதழில், பஞ்சாப் பிரதமர் மாண்புறு சர் சிக்கந்தர் ஹியாத்கான், தமது சகோதரப் படைஞர்களிடையே பேசும்போது, ''இந்தியப் படைகளில் நிலவும் பஞ்சாபியரின் மேலாதிக்க நிலைக்கு ஊறுபாடு ஏற்படுவதை நாட்டுப்பற்றுள்ள பஞ்சாபியர் எவரும் விரும்பார்'' என்று கூறியிருப்பதாக அசோசியேட்டட் பிரஸ் ஆப் இந்தியா வெளியிட்டிருப்பது அரசின் கவனத்துக்கு வந்துள்ளதா? என்பதையும்

ஆ) இந்தியப் படைகளில் பஞ்சாபியரையே மிகுந்த எண்ணிக்கையில் சேர்ப்பதன் மூலம் அதில் பஞ்சாபியரின் மேலாதிக்க நிலையை அரசு தொடர்ந்து நிலை நிறுத்த முனைகிறதா, அல்லது இன, மாநிலப் பாகுபாடின்றி நாட்டின் அனைத்துத் தரப்பிலிருந்தும் படைக்கு ஆள் திரட்ட உத்தேசமுண்டா? என்பதையும் பாதுகாப்புச் செயலர் தெரிவிக்க வேண்டுகிறேன்.

---

1. சட்டப்பேரவை விவாதங்கள், 1938, தொகுதி vi, பக்கம் 2754.

**திரு. ஓகில்வி:**

அ. ஆம்

ஆ. இது குறித்து 1938 செப்டம்பர் 15 இல், திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாவின் கேள்விக்கு அளித்த பதிலை நோக்குமாறு மாண்புறு உறுப்பினரை வேண்டுகிறேன்.

**திரு. சத்தியமூர்த்தி:** வினாவின் முதல் பகுதிக்கான விடையை முந்தைய கேள்விகளுக்கான விடைகளில் காணுமாறு செயலர் கூறுகிறார். ஆனால் அவ்விடைகள் '' படையில் பஞ்சாபியரின் ஆதிக்கம் குறைவதை நாட்டுப்பற்றுள்ள பஞ்சாபியர் எவரும் விரும்பார்'' என்ற பஞ்சாப் பிரதமரின் உரைக்குப் பின்னர் தரப்பட்டவையல்ல: பஞ்சாப்பிரதமரின் உரையை அரசு ஆய்ந்து பார்த்ததாவென அறிய விரும்புகிறேன். இத்தகைய உரையின் ஆபத்தான பொருளை அரசு உணர்ந்துள்ளதா என்பதையும் அறியவிரும்புகிறேன். முதலும் முடிவுமாக இந்தியத்தன்மை வாய்ந்ததாக இருக்கவேண்டிய படையில் மாநில, இன ஆதிக்கத்தை வலியுறுத்திப் பொறுப்புள்ள அமைச்சர் பேசுவதைத் தடுக்க அரசு என்ன நடவடிக்கை எடுக்கவுள்ளதென்பதையும் அறியவிரும்புகிறேன்.

**திரு. ஓகில்வி:** இதுபோன்றதொரு கேள்விக்குக் கடந்த செப்டம்பர் 15 இல் அளிக்கப்பட்ட பதிலை நோக்குமாறுதான் மாண்புறு உறுப்பினர்க்கு மீண்டும் கூறவேண்டியுள்ளது. படைச் சேர்ப்பு குறித்து இந்திய அரசின் கொள்கை பன்முறை தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

**திரு. சத்தியமூர்த்தி:** சிறந்த போர் வீரர்களையே எடுத்தல் என்ற கொள்கை ஏற்கனவே கூறப்பட்டதுதான். நான் இங்கே குறிப்பாகச் சுட்டிக்கேட்க விரும்புவது பஞ்சாப் பிரதமரின் உரையின் பொருளை நண்பர் நன்குணர்ந்துள்ளாராவென்பதே. ஒருமாநிலப்பிரதமர் இன, மாநிலக் கண்ணோட்டத்தில் தமது மாநிலத்துக்கு இராணுவத்தில் மேலாதிக்கம் கோருவதன் ஆபத்தான விளைவுகளை அரசு உணர்ந்து தவறுகளைத் திருத்த நடவடிக்கை மேற்கொள்ளுமா?

**திரு. ஓகில்வி:** இதனால் ஆபத்தான விளைவுகள் ஏதுமில்லை; மாறாக நற்பயனே விளையும் என அரசு கருதுகிறது.

**திரு.சத்தியமூர்த்தி:** ஒரு குறிப்பிட்ட மாநில, இன மக்களின் மேலாதிக்கம் படையில் நிலவுவதை அரசு ஏற்றுக்கொள்கிறதா?

அப்படியே ஏற்றுக்கொள்வதானாலும், பொறுப்புள்ள அமைச்சர் ஒருவர் இப்படி வெளிப்படையாகப் பேசுவதால் மாநில, இனப் பூசல்களும் பொறாமைகளும் ராணுவத்தில் நுழைந்து நாட்டில் ராணுவ சர்வாதிகாரம் தோன்றக்கூடிய வாய்ப்புகளை அரசு கருதிப் பார்க்கவில்லையா?

**திரு. ஓகில்வி:** உறுப்பினர் சுட்டும் அச்சுறுத்தல்கள் எவற்றுக்கும் இடமிருப்பதாக அரசு கருதவில்லை.

**திரு. எம்.எஸ். ஆனே:** சர் சிக்கந்தர் ஹியாத்கானின் உரையில் பொதிந்துள்ள கொள்கையை அரசு ஏற்றுக் கொள்கிறதா?

**திரு. ஓகில்வி:** அரசின் கொள்கை ஏற்கனவே, பன்முறை தெளிவாக உரைக்கப்பட்டுள்ளது..

**திரு. ஆனே:** படையில் பஞ்சாபியர் மேலாதிக்கம் நிலவ வேண்டுமென்பதுதான் அரசின் கொள்கையா?

**திரு. ஓகில்வி:** படையில் சிறந்த வீரர்கள் சேர்க்கப்பட வேண்டுமென்பதுதான் அரசின்கொள்கை

**திரு. ஆனே:** எனது கேள்வியை மீண்டும் வலியுறுத்துகிறேன், படையில் பஞ்சாபியர் மேலாதிக்கம் நிலவவேண்டும் என்பதுதான் அரசின் கொள்கையா?

**திரு. ஓகில்வி:** இக்கேள்விக்குப் பன்முறை பதில் கூறிவிட்டேன். எல்லா மாநிலங்களிலிருந்தும் சிறந்த போர்வீரர்களைப் படையில் சேர்க்கவேண்டுமென்பதுதான் அரசின் கொள்கை. தற்போது சிறந்த வீரர்களே படையில் சேர்க்கப்பட்டுள்ளனர் என்பதில் அரசு மன நிறைவு கொள்கிறது.

**திரு. ஆனே:** அவ்வாறாயின், சர் சிக்கந்தர் ஹியாத் கான் முன் வைக்கும் கொள்கையைத் திருத்தியமைத்து அரசு ஓர் அறிக்கை வெளியிடுதல் தேவையல்லவா?

**திரு. ஓகில்வி :** அரசின் கொள்கையில் குறிப்பாக மாற்றல் ஏதும் செய்யும் எண்ணமில்லை.

1938 நவம்பர் 23இல் கீழே தரப்பட்டுள்ள கேள்வியைத் தொடர்ந்து இது குறித்து மீண்டும் ஒரு வாக்குவாதம் நடைபெற்றது.

## மத்திய மாநிலம், பீரார் பகுதிகளிலிருந்து இந்தியப் படைக்கு ஆள்சேர்ப்பு[1]

**வினா. 1402. திரு. கோவிந்த் வி. தேஷ்முக் :** பாதுகாப்புச் செயலரிடம் பின்வரும் கேள்விகளை கேட்க விரும்புகிறேன்.

அ. மத்திய மாநிலம், பீரார் பகுதிகளிலிருந்து படைக்கு ஆள்சேர்ப்பு எந்தெந்த மையங்களில் நடைபெறுகிறது?

ஆ. அந்த ஆள்சேர்ப்பின்போது எந்தெந்த வகுப்புகளிலிருந்து வீரர்கள் எடுக்கப்படுகின்றனர்?

இ. இந்தியப்படை வீரர்களின் மொத்த எண்ணிக்கையில் மத்திய மாநிலம், பீரார் பகுதி வீரர்களின் விகிதம் எவ்வளவு? இப்பகுதி மக்கள்தொகை விகிதத்தோடு இது எவ்வாறு ஒப்பாக அமைகிறது?

ஈ. அரசின் தற்போதைய படைசேர்ப்புக் கொள்கை என்ன? அது மாற்றம் செய்யப்படுமா? இல்லையெனில், ஏன்?

**திரு. ஓகில்வி:** அ. மத்திய மாநிலத்திலோ, பீராரிலோ படைசேர்ப்பு மையங்கள் ஏதுமில்லை. படையில் சேரவிரும்பும் மத்திய மாநில மக்கள் டில்லி மையத்தையும், பீரார் மக்கள் புனே மையத்தையும் அணுகலாம்.

ஆ. பீராரைச் சேர்ந்த மராட்டியர் தனி வகுப்பினராய்ப் பணியமர்த்தப்படுகின்றனர். மத்திய மாநிலத்திலிருந்தும் பீராரிலிருந்தும் பணியமர்த்தப்படும் இந்துக்களும், முஸ்லீம்களும், 'இந்துக்கள்' முஸ்லீம்கள் என்றே வகைப்படுத்தப்படுகின்றனர். இவர்கள் எத்தகைய வகுப்புவாரி ஆதிக்க அடிப்படையிலும் பணியமர்த்தப்படுவதில்லை.

இ. இந்தியப் படைவீரர்களின் எண்ணிக்கையில் 0.03% என்ற விகிதத்தில் இப்பகுதிவீரர்கள் இடம்பெற்றுள்ளனர். இவர்களது எண்ணிக்கை இப்பகுதியின் மொத்த ஆண்கள் தொகையில் 0.0004% மட்டுமே.

---

1. சட்டப்பேரவை விவாதங்கள், 1938, தொகுதி VII, பக்கம் 3313.

ஈ. இப்போதைய கொள்கையில் மாறுதல் ஏதும் செய்யத் தற்போதைக்கு உத்தேசமில்லை. 1938 செப்டம்பர் 15 இல் திரு. சத்யமூர்த்தியின் வினாவுக்கும் (எண் 1060), இதே தேதியில் மியான்குலாம் காதிர் முகமது ஷாபன் கேட்ட (1086வது) வினாவுக்கும் நான் அளித்த பதிலிலும், இந்திய ராணுவத்துக்கு எல்லா வகுப்புகளிலிருந்தும் ஆள் சேர்ப்பது சம்பந்தமாக மாண்புமிகு திரு.பி.என்.சப்ரூ, 1935 மார்ச் 13ல் கொண்டு வந்த தீர்மானத்தின் மீது மாநிலக் கவுன்சிலில் நடைபெற்ற விவாதத்திற்கு மதிப்புறு தலைமைத் தளபதி அளித்த பதிலிலும், மாண்புமிகு சுசீல் குமார் ராய் சௌத்திரி 21.2.38 இல் இந்தியருக்கு இராணுவப் பயிற்சியளித்தல் குறித்துக் கொண்டுவந்த தீர்மானத்திற்கு அளித்த பதிலிலும் இதற்கான காரணங்கள் திட்டவட்டமாகவே தெரிவிக்கப்பட்டுள்ளன.

இதனைத் தொடர்ந்து, 1939 பிப்ரவரி 6 இல் மீண்டும் ஒரு விவாதம் நடைபெற்றது. அப்போது பின்கண்ட கேள்விகள் கேட்கப்பட்டன:

## இந்தியப் படைக்கு ஆள்சேர்ப்பு[1]

**வினா 129: திரு. சத்தியமூர்த்தி:** எனது கீழ்வரும் வினாக்களுக்குப் பாதுகாப்புச் செயலர், தயைசெய்து பதில் கூறுவாரா?

அ) இது குறித்த கேள்விக்கு முன்னர் அரசு பதிலளித்துள்ளதன் பின்னர், எல்லா மாநிலங்களிலும் எல்லாச் சாதியினரிடையிருந்தும் படைவீரர்கள் திரட்டும் வகையில் அரசின் கொள்கையில் மாற்றமேதும் செய்யும் கருத்து கவனத்திலுள்ளதா?

ஆ) இது குறித்து ஏதாவது முடிவு செய்யப்பட்டுள்ளதா?

இ) பிற மாநில இன மக்களைப் போர்ப்படைகளில் சேர்த்துக் கொள்ள அரசு ஏன் தொடர்ந்து மறுத்துவருகிறது என்பதற்கான காரணங்கள் தெளிவாக உரைக்கப்படுமா?

ஈ) தற்போது இந்தியப் படைகளில் சேர்க்கப்படும் மாநில, இன மக்களைத் தவிரப் பிற மாநில, இனமக்கள் போர்த்திறமைகளில் போதிய வல்லமை பெறமாட்டார்கள் என்ற முடிவுக்கு வர அரசு என்னென்ன சோதனைகளை நடத்தி ஆராய்ந்துள்ளது?

---

1. சட்டப்பேரவை விவாதங்கள், 1939, தொகுதி 1, பக்கம். 253.

திரு. ஓகில்வி :

அ. இல்லை

ஆ. இப்பிரச்சினை எழவில்லை.

இ & ஈ 15.9.38 இல் வினாக்கள் 1060, 1086 ஆகியவற்றுக்கும் 23.11.38 இல் வினா 1402க்குமான எனது பதில்களில் காரணங்கள் தெள்ளத்தெளிவாக உரைக்கப்பட்டுள்ளன. மேலும் மாநிலக் கவுன் சிலில் 13.3.35இல் இந்தியப் போர்ப்படைகளில் எல்லா வகுப் பினரையும் சேர்த்தல் பற்றிய மாண்புறு. திரு..பி.என்.சப்ருவின் தீர்மானத்திற்கும், 21.2.38 இல் இந்தியர்களுக்குப் படைப்பயிற்சி அளித்தல் குறித்த மாண்புறு சுசீல்குமார் ராய் சௌத்திரியின் தீர்மானத் திற்கும் மதிப்புறு தலைமைத்தளபதி அளித்த பதிலிலும் இதற்கான காரணங்கள் தெளிவுபட உரைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு இந்திய அரசால் கடைப்பிடிக்கப்பட்டு வந்த மௌனச்சதியை முறித்து, அண்மையில் 1943 ஜூலை 8 இல் பிரிட்டிஷ் பாராளுமன்ற காமன்ஸ் சபையில் எழுப்பப்பட்ட வினாவொன் றுக்கு விடையாக இந்தியா மந்திரி இந்தியப் படைவீரர்களில் மாநில மற்றும் வகுப்புவாரியான முழு விவரங்களைத் தந்துள்ளார். அவையாவன:

I. இந்தியப் படைவீரர்களில் மாநிலவாரி விகிதம்

| மாநிலம் | %படைவீரர் | மாநிலம் | %படைவீரர் |
|---|---|---|---|
| 1. பஞ்சாப் | 50 | 7. வங்காளம் | 2 |
| 2. ஐக்கிய மாநிலம் | 15 | 8. மத்திய மாநிலம் & பீரார் | - |
| 3. சென்னை | 10 | 9. அஸ்ஸாம் | 5 |
| 4. பம்பாய் | 10 | 10. பீகார் | - |
| 5. வடமேற்கு எல்லை | 5 | 11. ஒரிசா | - |
| 6. ஆஜ்மீர் &மேவாரா | 3 | 12. நேபாளம் | 8 |

## II. இந்தியப் படையினரில் வகுப்புவாரி விகிதம்

| | | |
|---|---|---|
| 1. | முஸ்லீம்கள் | 34% |
| 2. | இந்துக்கள் & கூர்க்காக்கள் | 50% |
| 3. | சீக்கியர்கள் | 10% |
| 4. | கிறித்தவர்களும், பிறரும் | 6% |

இந்தியா மந்திரி மேற்கண்ட விவரங்களைத் தந்துள்ளமை மிக வரவேற்கத்தக்கது. ஆனால் இதுபடையின் போர்க்கால வீரர் எண் ணிக்கை குறித்த தகவல் ஆகும். அமைதிக்கால விவரங்கள் இவற்றி னின்று மிக மாறுபட்டிருக்கவேண்டும். அவ்விகிதங்கள் போர்க் குணம்மிக்க இனங்கள், போர்க்குணம் குன்றிய இனங்கள் என்ற பாகுபாட்டின் அடிப்படையிலேயே அமைந்திருக்க வேண்டும். இப்பாகுபாடு போர்க்காலப் படைத்திரட்டலின் போது கைவிடப் பட்டுள்ளது. அது மீண்டும் அமைதிக்காலம் வரும்போது தலை தூக்காது என்பதற்கான உத்தரவாதம் ஏதுமில்லை. நாம் அறிய விரும்பியது அமைதிக்காலத்தில் இந்தியப்படையின் வகுப்புவாரி விகிதங்கள், அவை இன்னும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

இயல்பான அமைதிக்காலத்தில் இந்தியப் போர்ப்படை யினரில் 60% முதல் 70% வரை முஸ்லீம்களின் எண்ணிக்கை இருந்து வந்ததாகச் சிலர் கூறுகின்றனர். வேறுசிலர் 50 சதவீத அளவில் இருக்குமெனக் கூறுகின்றனர். சரியானதகவல் கிடைக்கப்பெறாத நிலையில், பிந்தைய தகவலையே சரியானதெனக் கொள்ளலாம். தகவலறிந்தவர்கள் மத்தியில் விசாரித்துத் தெரிந்துகொண்டவகை யிலும் முஸ்லீம்களின் எண்ணிக்கை 50% அளவிலேயே இருக்கக் கூடுமென ஊகிக்கலாம். இவ்விகிதம் 50% என்றே வைத்துக் கொண் டாலும் இது, இந்துக்களை அச்சுறுத்தக்கூடிய பெரிய விகிதம்தான். இது உண்மையானால், இந்தியாவில் பிரிட்டிஷ்படைக்கொள்கை, 1857 புரட்சிக்குப் பின்னர் எவ்வளவு அப்பட்டமாக மீறப்பட்டு வந்திருக்கிறது என்பதற்குச் சான்றாகும்.

இப்புரட்சிக்குப்பிறகு, இந்தியப்படையமைப்பைக் குறித்து இரண்டு ஆய்வுகளுக்கு அரசு ஆணையிட்டது. 1859இல் நியமிக்கப் பட்ட பீல் ஆணையம் முதல் ஆய்வினை மேற்கொண்டது. 1879 இல் நியமிக்கப்பட்ட சிறப்புப் போர்ப்படைக் குழு, இரண்டாவது ஆய்வினை மேற்கொண்டது.

வங்காளப்படையின் என்னென்ன குறைகளால் 1857 ஆம் ஆண்டில் புரட்சியில் அது ஈடுபட்டது என்பதை ஆயும் பணியையே, பீல் ஆணையம் தனது முதன்மையான பொறுப்பாக எடுத்துக் கொண்டது. இவ்வாணையத்தின் முன்பு, புரட்சியில் ஈடுபட்ட வங்கப் படையின் குறைகள்குறித்து தொடர்ந்து பல சாட்சிகள் கூறியதாவது :

> "வங்காளப்படையின் அணிகளில், தற்செயலாகப் பல்வேறு இனமக்கள் கலந்திருந்தனர். வகுப்பு, குழுவேறுபாடுகளின் அடிப்படையில் படைப்பிரிவுகள் ஏதும் அமைக்கப்பட வில்லை... படை அணிகளில் இந்து, முஸ்லீம், சீக்கியர், பூர்பியாக்கள் என்பன போன்ற வேறுபாடுகளைத் துறந்து, இனப் பகைமைகளையும் ஓரளவு மறந்து பொதுவான குறிக்கோளின் அடிப்படையில் வீரர்கள் இணக்கமாயிருந்தனர்." [1]

ஆகவே, வேறுபாடுகள், நமக்குப் பயனளித்து கொண்டிருக் கும்வரை, பேணிக் காப்பாற்றப்படவேண்டும். ஒரு நாட்டு முஸ்லீம் பிறநாட்டு முஸ்லீம்களை அச்சம், வெறுப்பு, இகழ்ச்சிகொண்டு நோக்கவேண்டும். படைப்பிரிவுகள், மாநில அடிப்படையிலேயே அமைக்கப்பட வேண்டும்; வேறுபாடுகள், பகைமை, போட்டி, பொறாமைகள் வலிவாக நிலவும் புவியியல் எல்லைகளுக்குள் ளிருந்தே ஒரு படைப் பிரிவின் வீரர்கள் அனைவரும் இருக்க வேண்டும். ஒரே மாநிலத்தைச் சேர்ந்தோர் இந்து, முஸ்லீம் வேறு பாடின்றி ஒரே படைப்பிரிவில் சேர்க்கப்பட வேண்டும். படைப் பிரிவு களுக்கிடையே இவ்வேறுபாடுகள் தோற்றுவிக்கப்பட்டுத் தக்க சமயத் தில் பயன்படுத்தற்கேற்பப் பேணிக்காக்கப்படவேண்டும்... இவ்வாறு உருவாக்கப்படும் அமைப்பில், இரண்டு பெருந்தீங்குகளைத் தவிர்க்க இயலும்: முதலாவதாக, படையினர் அனைவரும் ஒருநாட்டு வீரர் என்ற உணர்வு பெறுதலையும், இரண்டாவதாக, மற்ற இனங் களுடன் தொடர்புகொள்வதன் மூலமும் இதர இந்திய மாநிலங் களுக்குப் பயணம் செய்வதன் மூலமும் ஏற்படக்கூடிய தீய அரசியல் நடவடிக்கைகளையும் சூழ்ச்சிகளையும் தவிர்க்கமுடியும் என்று சர் ஜான் லாரன்சு பரிந்துரை செய்தார்.[2]

---

1. மக்மன் & லோவெட், "இந்தியாவின் படைகள்" பக்கம் 84-85, சௌத்திரியால் மேற்கோள் காட்டப்பட்டது.

2. சௌத்திரி அவர்கள் காட்டியுள்ள மேற்கோள்.

பீல் ஆணையத்தின் முன்னர் கருத்துக் கூறவந்த ஆங்கிலேய படைவீரர்கள் பலர் இப்பரிந்துரையையே இந்திய ராணுவக் கோட்பாடாக வலிந்து ஆதரித்துப் பரிந்துரைத்தனர். இதுவே, வகுப்பு அடிப்படைப் படையமைப்புக் கோட்பாடு எனக் கடைப் பிடிக்கப்பட்டு வந்தது.

1879 ஆம் ஆண்டின் சிறப்புப் படைக்குழு, வேறுவகையான சிக்கலுக்குத் தீர்வுகாண முனைந்தது. சிக்கல் என்னவென்பது, குழு வெளியிட்டிருந்த கருத்தறிவினாப் பட்டியலிலிருந்தே தெற்றெனப் புலப்பட்டது. வினாப்பட்டியலிலிருந்த வினாக்களில் ஒன்று:

> ''பேரரசின் பாதுகாப்புத்தேவைகளைக் கருத்தில் கொண்டு, இந்தியப் படையின் கூடுதல் ஆயத்தப் பிரிவினை உருவாக்கும் போது, வலிமை குன்றிய, போர்க்குணம் குறைந்த பகுதிகளை விடுத்து, சிறந்த போர்வீரர்களைத் தரும் பகுதிகளிலிருந்தே படைச்சேர்ப்பு நடத்திப்பேணுதலே உகந்ததல்லவா? பேரரசின் பாதுகாப்பை முழுமையாகக் கருத்தில் கொண்டுதானே, நாட்டின் எந்த ஒரு பகுதிக்கும் அளவுக்கு மீறிய வலிமையோ, முதன்மையோ தரலாகாதெனும் கோட்பாடு பின்பற்றப்பட வேண்டும்?''

வினாவின் முக்கியப்பகுதி, 'எந்தவொரு இனத்தையோ, மதத்தை சார்ந்தவர்களுக்கு அளவுக்கு மீறிய வலிமையோ முதன்மையோ தராமையின் அவசியம் என்பதன் அடிப்படையில் அமைந்திருந்ததென்பது தெளிவு. இவ்வினாவுக்குக் குழு முன் படை அலுவலர்கள் அளித்த சாட்சியங்கள் ஒருமித்த கருத்துடனேயே அமைந்திருந்தன.

பம்பாய்ப் படையின் தலைமைத்தளபதி, லெப்டினெண்ட் ஜெனரல், எச்.ஜே.வாரஸ் உரைத்ததாவது:

> ''இந்தியப் படைக்கெனத் திறம்மிக்க வீரர்களைத் தேடிப் பணியமர்த்த முற்படும்போது, சிறந்த போர்வீரர்களைத் தரும் பகுதிகளிலிருந்து போர்வீரர்களை நாடித் தேர்ந்தெடுக்கும் போது, அப்பகுதி மக்களின் இனம், மதம் ஆகியவற்றுக்கு உயர்வான வலிமையும், முதன்மையும் தராமலிருக்க இயலாது என்றே கருதுகிறேன்.''

தலைமைத் தளபதி சர் பிரடெரிக் பி.ஹேய்ன்ஸ் கூறினார்:

"படைவீரர் எண்ணிக்கையில் மிகுந்த வங்காளப் படையினின்று இனம், மொழி, ஈடுபாடுகளில் வேறுபட்டு நிற்கும் இப்படைகளை (சென்னை, பம்பாய்ப் படைகளை) வங்கப் படைகளுக்கு ஈடுகொடுக்கும் மாற்றுப்படையாக அவற்றின் தனித்தன்மை குன்றாது நிறுத்திப் பேணிவருதல் கூடாதென்பது அறிவுடைமையோ, பண்பாடோ ஆகாது. மிகச்சிறந்த போர்ப் படையாளர்களைத் திரட்டி இராணுவம் அமைத்தல் என்ற நோக்கில் இப்படைவீரர்களின் எண்ணிக்கையை ஒருபோதும் குறைக்கமாட்டேன். இவர்களைக் குறைத்துவிட்டு ஆற்றலும் திறமும் மிக்க வங்காள வீரர்களைத் தேர்ந்தெடுத்துப்படையின் திறனை மேம்படுத்துமாறு கூறப்பட்டால், அதைவிட அறிவின்மையும், பண்பாடின்மையும் கொண்ட ஆலோசனை வேறு ஏதும் இருக்க முடியாதென்றே கருதுவேன்."

பஞ்சாப் மாநிலத்துணை ஆளுநரும், இதே போன்ற கருத்தைத் தெரிவித்துள்ளார். "இந்தியாவுக்கான படைவீரர்களை ஒரே புலத்திலிருந்து திரட்டுதல் எனக்கு உடன்பாடில்லை. ஒரு குறிப்பிட்ட தேசிய இனமக்கள் படையில் மேலாதிக்கம் பெறுதல், அரசியல் காரணங்களுக்காகத் தடுக்கப்படவேண்டியது அவசியம் என்று அவர் கருத்து வெளியிட்டுள்ளார்.

சிறப்பு இராணுவக்குழு இக்கருத்தோட்டங்களை ஏற்றுக் கொண்டு, இந்திய இராணுவத்தின் அமைப்பில் எந்தவொரு மாநிலத்தைச் சேர்ந்தவருக்கும் மேலாதிக்கம் ஏற்படாதவாறு அதன் ஆட்சேர்ப்புமுறை கட்டுப்படுத்தப் படவேண்டுமென்று பரிந்துரை செய்தது.

இவ்வாறு இந்திய இராணுவக் கொள்கைக்கு இந்த கோட்பாடுகள்தான் அடிப்படையாக அமைந்திருந்தன. எனினும், நடைமுறையில் இந்திய ராணுவத்திற்குப் படைசேர்ப்பு நிகழ்ந்த தன்மையை நோக்கும்போது, 1879 ஆம் ஆண்டின் சிறப்பு இராணுவக் குழு பரிந்துரைத்த கோட்பாட்டுக்கு, நேர்மாறான முறையில் மாற்றங்கள் புரட்சிகரமானவையாக, இருந்ததைக் காண்கிறோம். இத்தகைய புரட்சிகரமான தலைகீழ் மாற்றம் எவ்வாறு நிகழ்ந்தது எனப் புரியவில்லை. இது, நன்கு நிறுவப்பட்ட உறுதியான கொள்கைக்கு முரணான புரட்சி எனலாம். சொல்லப்போனால்,

இந்தியப் படைகளில் வடமேற்குப்பகுதிமக்களின் மேலாதிக்கம் மேலும் மேலும் வளர்தல் கண்டஞ்சி, அதைத்தடுக்க வேண்டு மென்ற நோக்கத்திலேயே சிறப்பு இராணுவக்குழுவின் கோட்பாடு உருவாக்கப்பட்டது. மேலும் அது வெறும் வழிகாட்டு கொள்கையாக அன்றி, உறுதியாகக் கடைபிடிக்கப்படவேண்டிய நியதியாகவே வலியுறுத்தப்பட்டிருந்தது. இந்தியப் படைகளில் தலைமைத் தளபதி யாகவிருந்த இராபர்ட்ஸ் பிரபு, தமக்குப்பிடித்தமான வடமேற்குப் பகுதி மக்களைத் தாரளமாகப் படையில் சேர்ப்பதற்குத் தடையாக இருக்குமென்று எதிர்ப்பு காட்டியபோதிலும், தமது பதவிக் காலத்தில் இக்கோட்பாட்டையேற்றுச் செயல்படுத்த வேண்டிய கட்டாயத் திலிருந்தார். இந்தக் கோட்பாடு எவ்வளவு தூரம் மதிக்கப்பட்டிருந்தது என்பதற்கு மேலும் ஒரு சான்று கூறலாம். 1903 இல், கிட்சனர் பிரபு சென்னைப் படைப்பிரிவுகள் 15 ஐ பஞ்சாபி படைப் பிரிவுகளாக மாற்றும் திட்டத்தை மேற்கொண்டபோது அதற்கு பஞ்சாபி முஸ்லீம் கள், சீக்கியர்களின் அதிகரிப்புக்கு ஈடுசெய்யும்வகையில் கூர்க்காக் கள், பட்டாணியர்களின் எண்ணிக்கையையும் உயர்த்தினார். அவ ருடைய வாழ்க்கை வரலாற்றாசிரியர். சர் ஜார்ஜ் ஆர்தர், இதைப் பற்றி கூறுகிறார்:

> ''1857 ஆம் வருடப் புரட்சி தந்த படிப்பினையைக் கருத்தில் கொண்டு, எந்தவொரு தனி இனத்தாருக்கும் படையில் மேலாதிக்கம் தருவதன் ஆபத்துகளுக்கெதிராக அரசு விழிப் புடனேயே இருக்கிறது. பஞ்சாபியரைக் காலாட்படையில் கூடுதலாகச் சேர்க்கும்போது, அதற்கு ஈடுகட்டப் படையில் கூர்க்காக்களையும் மிகுதியான எண்ணிக்கையில் சேர்ப்பதுடன், எல்லைப்படையில், எல்லைப்பகுதி வாழ்ப் பட்டாணியர் களைக் கூடுதலாகச் சேர்ப்பதும் அவசியமாகிறது.''

ஒருமுகமாகவும் உறுதியான கட்டுப்பாட்டுடனும் முதல் உலகப் போர்க்காலம் வரை பின்பற்றப்பட்டுவந்த இக்கோட்பாடு, அதன் பின்னர் எவ்விதத் தயக்கமோ, ஆரவாரமான அறிவிப்போ இன்றி மறைமுகமான முறையில் கைவிடப்பட்டது ஏன் என்பது புதிராகவே உள்ளது. இந்தியப் படைகளில் மிகப்பெருமளவில் முஸ்லீம்களின் மேலாதிக்கம் தோன்ற ஆங்கிலேயர்கள் அனுமதித்ததற்கான கார ணங்கள்தான் என்ன? இதற்கு இரண்டுவகையில் விளக்கம் தரலாம்; ஒன்று, உலகப் பெரும் போரின்போது இந்துக்களை விட, முஸ்லீம்கள் சிறப்பான வகையில் போர்த்திறமும் வீரமும் காட்டியிருக்க வேண்டும்; அல்லது, ஆங்கிலேயர்களிடமிருந்து அரசியல் அதிகாரத்தை

மீட்பதற்காகப் போராடத் தொடங்கியிருந்த இந்துக்களை ஒடுக்கு வதற்கு படைஅணிகளில் முஸ்லீம்களின் மேலாதிக்கமே உரிய வழி என்று கருதியே ஆங்கிலேயர்கள் படையமைப்புக் கோட் பாட்டைக் கைவிட்டிருக்க வேண்டும்.

விளக்கம் எதுவாக இருப்பினும், மேற்கண்ட விவரங் களை ஆயும்போது இரண்டு உண்மைகள் தெளிவாகப் புலப்படு கின்றன. ஒன்று, இன்றைய நிலையில் இந்தியப் படைகளில் முஸ்லீம் களே பெரும்பாலான எண்ணிக்கையில் இருக்கின்றனர். இரண் டாவது, முஸ்லீம்களில் கூட பஞ்சாபி, வடமேற்குஎல்லைமாநில முஸ்லீம்களே மேலாதிக்க நிலை பெற்றுள்ளனர். இத்தகைய படை யமைப்பின் விளைவாக, வெளிநாட்டுப் படையெடுப்புகளிலிருந்து, இந்தியாவைக் காக்கும் பொறுப்பு, பஞ்சாபி, வடமேற்கு எல்லை மாநில முஸ்லீம்களிடமே முற்றுமாக ஒப்படைக்கப்பட்டுள்ளது. என்ன காரணத்தாலோ ஆங்கிலேயர் தமக்குத் தந்த சிறப்பு நிலையை உணர்ந்து பஞ்சாபி, வடமேற்குஎல்லை மாநில முஸ்லீம்கள் பெரு மிதம் கொள்ளத் தொடங்கினர். இந்தியாவின் வாயிற்காப்பாளர்கள் தாங்கள்தாம் என அவர்கள் பெருமிதமாகப் பேசிக்கொள்வதை நாம் சாதாரணமாகக் கேட்க முடியும். எதிர்கால இந்தியாவின் பாதுகாப்பைப் பற்றி எண்ணிப்பார்க்கும் இந்துக்கள், படையமைப் பின் மெய்யான நிலையைக் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

இந்த 'வாயில் காவலர்கள்' இந்தியாவின் விடுதலையை யும் தன்னாட்சியையும் கட்டிக்காப்பாற்றுவார்களென இந்துக்கள் எந்த அளவுக்கு நம்பமுடியும்? இந்த வினாவுக்கான விடை இந்தியா வின் வாயிலைத் தட்டித் திறந்து தாக்க முற்படுவோர் யாவர் என்பதைப் பொருத்தே அமையும். வடமேற்கு எல்லை வழியாக இந்தியாவின் மீது படையெடுக்க வாய்ப்புடன் பொது எல்லை களைக் கொண்ட அயல்நாடுகள் இரண்டுதான்; அவை, ஆப்கானிஸ் தானமும், ரஷ்யாவுமே. இவற்றுள் எந்நாடு, எப்போது இந்தியா மீது படையெடுக்கக்கூடும் என்பதை அறுதியிட்டுக்கூற இயலாது. படையெடுப்பு ரஷ்யா நாட்டிலிருந்து வந்தால் நமது வாயில் காவலர்கள் அதை எதிர்த்து நாட்டுப்பற்றுடன் உறுதியாகப் போராடு வார்கள் என்று நம்பலாம். ஒருவேளை ஆப்கானியர்கள் தனி யாகவோ, பிற முஸ்லீம் நாடுகளுடன் கூட்டுசேர்ந்துகொண்டோ இந்தியாவின் மீது படையெடுத்தால் அப்போதும் நமது வாயில் காவலர்கள் உறுதியுடன் எதிர்த்து நின்று நாட்டைக் காப்பார்களா? அல்லது அவர்கள் தாராளமாய் உள்நாட்டில் நுழைய வழிவிட்டுப்

பகைவர்களுடன் ஒத்துழைப்பார்களா? இந்தச்சிக்கலை இந்துக்கள் எவரும் புறக்கணித்து விட முடியாது. இவ்வளவு முக்கியமான சிக்கலில் நாட்டின் பாதுகாப்புக்கு உறுதிப்பாடு என்ன என்பதைத் தெளிவுறுத்திக் கொள்ளவே இந்துக்கள் முனைவர்.

இந்தியா மீது படையெடுக்க ஆப்கானியர்கள் ஒருபோதும் கருதமாட்டார்கள் என்று கூறப்படலாம். ஆனால் கடுமையான இடர்ப்பாடுகளையும் எதிர்கொள்ளத் திறமுண்டா என்ற அடிப் படையில்தான் எந்தக் கொள்கையையும் சோதிக்க வேண்டும். ஒருவேளை முஸ்லீம்களான ஆப்கானியர் படையெடுக்க நேர்ந்தால், பஞ்சாபி, வடமேற்குஎல்லை மாநிலத்தைச் சார்ந்த படைவீரர்கள் எப்படி நடந்துக் கொள்ளக்கூடும் என்பதைப் பற்றிய தெளிவான கண்ணோட்டத்துடன்தான் அவர்களது நாட்டுப்பற்றையும், நம்பகத் தன்மையையும் மதிப்பிடவேண்டும். இத்தகைய சூழலில் அவர்கள் பிறந்த மண்ணைக் காப்பதற்காக போராடுவார்களா? அல்லது சார்ந்த சமயத்தின் மேம்பாட்டுக்குத் துணைநிற்பார்களா?' என்ற வினாவுக் கான விடையை ஆராயாமல் இந்தியாவின் பாதுகாப்பைப் பற்றி உறுதியான நம்பிக்கை கொள்ள இயலாது. இந்தியா ஆங்கிலேயரின் பாதுகாப்பின்கீழ் இருக்கும்வரை சங்கடமும் கலக்கமும் தரக்கூடிய இச்சிக்கல்களுக்கு விடைதேடுதல் தேவையில்லை என்று புறக் கணிப்பது நமது பாதுகாப்புக்கு உகந்தபோக்கு ஆகாது. அத்தகைய மெத்தனமான எண்ணம் தோன்றுவதே மன்னிக்க முடியாத குற்ற மெனலாம். முதலாவதாகக் கடந்த உலகப்பெரும்போர் காலத்தில், மெய்யாகவே இந்தியாவின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் தோன்றிய நிலையில், இந்தியாவை எந்நிலையிலும் காக்கும் வல்லமை ஆங்கி லேயருக்குக் கிடையாது என்பது தெளிவாகப் புலனாகியது. இரண் டாவதாக, ஒரு அமைப்பின் அதாவது இந்தியப் படையின் செயல் பாட்டுத் திறனை, அது செயற்கையான சூழலில் எப்படிச் செயல் படுகிறது என்பதிலிருந்து மதிப்பிடமுடியாது. ஆங்கிலேயரின் கட்டுப் பாட்டில் இந்தியப் படைவீரர்களின் செயல்பாங்கு செயற்கை யானதே. படை வீரரின் இயல்பூக்கங்களுக்கும் இயற்கையான பற்றுகளுக்கும் ஆங்கி லேயரின் கட்டுப்பாடு இடம்கொடுப்பதில்லை. அதனாலேயே ஆங்கிலேயரின் கீழ் பணிபுரியும்போது அவர்கள் திறமையுடன் செயல்பட்டாலும், அது செயற்கையான சூழ்நிலையே; அச்சூழலில் அவர்கள் நன்கு செயல்படுவதைக் கொண்டு, இந்தியர் கட்டுப்பாட்டின் கீழ்வந்த பின்னரும் அவ்வாறே செயல்படுவர் என்று உறுதி கூறமுடியாது. ஆங்கிலேயர் ஆட்சி அகன்ற பின்னரும், இந்தியப்

படைகள்,. இந்தியாவின் நலனுக்கேற்றவகையில் திறமையாகச் செயல்படுவார்கள் என்ற உறுதிப்பாடு இந்துக்களுக்குக் கிட்ட வேண்டும்.

ஆப்கானியர் படையெடுப்பு நிகழ்ந்தால் பஞ்சாபி, வட மேற்கு எல்லை மாநில வீரர்களைப் பெரும்பாலாராகக் கொண்ட இந்தியப் படையின் செயல்பாடு எப்படியிருக்குமென்று நடத்தப்படும் ஆய்வு எவ்வளவுதான் மனத்துன்பம் தரக்கூடியதாக யிருப்பினும், இதனை நாம் எதிர்கொள்ள வேண்டிய முக்கியமான பிரச்சினை யெனலாம்.

'படைகளில் முஸ்லீம் படைவீரர்களின் உயர்விகிதம் நிரந்தரமான அமைப்புமுறையென்று நாம் ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும்?; அதைத்தக்க வகையிலே மாற்றியமைக்க இயலாதென ஏன் கருதவேண்டும்? ' எனச்சிலர் கூறலாம். இவ்வமைப்பைத் தேவை யான வகையில் திருத்தியமைக்க இயலுமெனக் கருதுவோர் அம் முயற்சிகளில் ஈடுபடட்டும். ஆனால், இதுவரை மேற்கொண்ட முயற்சிகளின் பலன்களைக் கொண்டு எண்ணிப்பார்க்கையில் அதை அவ்வளவு எளிதில் திருத்திவிடமுடியாதென்பது புலனாகும். மாறாக, நாட்டின் அரசியலமைப்புச் சட்டம் திருத்தியமைக்கப் படும்போது, முஸ்லீம் சிறுபான்மையினரின் பாதுகாப்பை உறுதி செய்வதன் பொருட்டு, இந்தியப் படையமைப்பு இவ்வாறுதான் முஸ்லீம் மேலாதிக்கத்துடன்தான் இருக்கவேண்டுமென்று சட்டத் திருத்தமே செய்யப்பட்டாலும் வியப்படைவதற்கில்லை. இந்துக் களுக்கெதிராக, முஸ்லீம்கள் இத்தகைய கோரிக்கையை முன்வைப்பர் என்பது உறுதி; இத்தகைய கோரிக்கைகளில் இதுகாறும் அவர்கள் வெற்றிபெற்றே வந்துள்ளனர். எனவே, இந்தியப்படையின் அமைப்பு இப்போதிருக்கும் நிலையிலிருந்து மாறப்போவதில்லை என்ற கருத்தோட்டத்தின் அடிப்படையிலேயே, நமது வருங்காலத்தைப் பற்றிய சிந்தனைகளை மேற்கொள்ளவேண்டும். அடிப்படைகள் ஏதும் மாறி விடவில்லையென்ற நிலையில், நாம் எதிர்நோக்கு கின்ற சிக்கலும் அப்படியே நீடிக்கிறது. முஸ்லீம்கள் நிறைந்த இப்படை, ஆப்கானியப் படையெடுப்புக்கெதிராகப் போராடி நாட்டைக் காக்குமென்று இந்துக்கள் நம்பிக்கை கொள்ள முடியுமா? முடியும் என்று போலித் தேசியவாதிகள்தான் பதிலளிப்பர். இவ் வினாவிற்கு விடையளிக்க முற்படுமுன், மெய்ம்மை நிலையை உணரத் துணிவுகொண்டவர்கள் ஒருகணம் தீர சிந்தனை செய்தல் வேண்டும். இந்துக்கள் காக்கப்படுதற்கு மாறாக அழித்தொழிக் கப்பட வேண்டிய காபிர்கள் (அவநம்பிக்கையாளர்கள்)என்று

முஸ்லீம்கள் கருதுகின்றனர் என்பதை மெய்ம்மை நாட்டம் கொண்டோர் ஒருபோதும் மறக்கவியலாது. மேலும், ஐரோப்பியரைத் தம்மினும் மேலானவர்களாக ஏற்றுக்கொள்ளும் முஸ்லீம்கள், இந்துக் களைத்தம்மினும் தாழ்வானவர்களாகக் கருதுவதையும் மறுப்பதிற் கில்லை. முற்றிலும் முஸ்லீம் படைவீரர்களைக் கொண்ட படைப் பிரிவுகள், இந்துப்படைத் தலைவர்களின் கீழ் செயல்படநேரின், எவ்வளவுதூரம் தளபதிக்குப் பணிந்து நடப்பர் என்பது ஐயப்பாடே! முஸ்லீம்களிலேயே கூட வட மேற்குப்பகுதி முஸ்லீம்கள்தாம் இந்துக் கள் மீது மிகுந்த பகைமையும் வெறுப்பும் கொண்டவர்கள் என்பதை யும் மெய்ம்மை நாட்டமுள்ளோர் கவனத்தில் கொள்ள வேண்டும். மேலும் அனைத்துலக முஸ்லீம் உணர்வு குறித்த பிரசாரங்களுக்குப் பஞ்சாபி முஸ்லீம்கள் எளிதில் இரையாகக் கூடியவர்கள் என்பதை யும் மறுப்பதற்கில்லை. இத்தனை எதிர்மறைச் சூழல்களைப் பற்றி நன்கறிந்திருந்தும், முஸ்லீம் நாடுகள் படையெடுத்து வந்தால், இந்தியப் படையிலுள்ள முஸ்லீம்கள் நாட்டுப்பற்றோடு போராடு வர் என்றோ, அத்தகைய படையெடுப்பு நிகழ வாய்ப்பில்லை யென்றோ கருதும் இந்துக்கள் உண்மையாகவே மிகுந்த அசட்டுத் துணிச்சல் கொண்டவர்கள் தாம் என்பதில் கிஞ்சித்தும் ஐயமில்லை. 1889 இல் தியோடர் மாரிசன்[1] கூடப் பின்வருமாறு கூறியுள்ளார்:

> ''இந்திய மக்கள் வன்முறையால் அடக்கியாளப்பட வேண்டியவர்கள் என்று முஸ்லீம்கள் கொண்டிருக்கும் கண் ணோட்டம் ஒன்றே, இந்திய நாட்டுக்கு விடுதலையளித்த லாகாது என்பதற்குப் போதுமான காரணமாகும். தன்னாட்சி பெற்ற இந்தியாமீது வடக்கிலிருந்து ஆப்கானியர் படை யெடுக்க முற்படும் கட்டத்தில், இந்திய முஸ்லீம்கள், தம் நாட்டவரான இந்துக்கள், சீக்கியர்களோடு ஒன்று பட்டுப் போராடிப் பகைவரை எதிர்ப்பதற்குப் பதிலாக, சமய உற வெனும் நெருக்கத்தால் ஈர்க்கப்பட்டுப் பகைவர்களுடன் சேர்ந்து விடுவர்.''

1919 இல் கிலாபத் இயக்கம் நடத்திக்கொண்டிருந்த இந்திய முஸ்லீம்கள், இந்தியாவின் மீது படையெடுக்கும்படி ஆப்கானிஸ் தானத்தின் அமீரை வேண்டினர் என்பதையெண்ணிப் பார்க்கும்

1. 'இந்தியாவில் பேரரசின் ஆட்சி' பக். 5

போது, தியோடர் மாரிசனின் கருத்து வெறும் ஊகமல்லவென்பதை உணர்கிறோம்.

ஆப்கானிஸ்தான் படையெடுத்தால் பஞ்சாபி, வடமேற்கு எல்லை மாநில முஸ்லீம்களைக் கொண்ட படை எப்படி நடந்து கொள்ளும் என்பது மட்டுமே நம்மை எதிர்நோக்கும் பிரச்சினை அல்ல. இந்துக்கள் ஆழ்ந்து எண்ணிப்பார்க்கவேண்டிய மற்றொரு முக்கியமான பிரச்சினையையும் ஈண்டு நோக்குவோம். படை வீரர்களின் விசுவாசம் எப்படியிருந்தாலும் ஆப்கானியப் படையெடுப்புக்கெதிராக இப்படையை இந்திய அரசு தடையின்றிப் பயன்படுத்த இயலுமா? இது தொடர்பாக, முஸ்லீம் லீகின் நிலைப்பாட்டையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. அஃது நமக்கொன்றும் புதிதன்று; அந்நிலைப்பாடு முஸ்லீம்லீக் தோன்றுவதற்கு நெடுநாள் முன்பாகவே, கிலாபத் குழுவால் வகுக்கப்பட்டு விட்டது. வருங்காலத்தில் எவ்வளவு காலத்திற்கு முஸ்லீம்கள் இந்நிலைப்பாட்டில் உறுதியாக இருப்பார்கள் என்ற வினாவுக்குத் தீர்வில்லை. இந்நிலைப்பாட்டில் முஸ்லீம் லீகினால் பிரிட்டிஷ் அரசுக்கெதிராக வெற்றிபெற முடியவில்லை என்பதைக் கொண்டு வருங்கால இந்திய அரசுக்கெதிராகவும் வெற்றி பெறமாட்டார்கள் என்று கூறிவிட முடியாது.

இந்துக்களின் கண்ணோட்டத்தில் முஸ்லீம்களின் நிலைப்பாடு நாட்டுப்பற்றுக்கு முரணானதென்றாலும், முஸ்லீம்களின் சமயக் கண்ணோட்டத்திற்கு மிக இணக்கமானதாகவே முஸ்லீம் லீகினால் பரிந்துரைக்கப்பட்டு இந்திய முஸ்லீம் சமுதாயத்தின் ஒப்பிசைவைப் பெற்றுவிட இயலுமாதலின் முஸ்லீம்கள் வெற்றி பெறவே வாய்ப்பு மிகுதியெனலாம். இவ்வாறு, இந்தியாவின் போர்ப் படைகளை முஸ்லீம் பகைநாடுகளுக்கெதிராக பயன்படுத்துவதற்கு முட்டுக்கட்டைகள் போடுவதில் முஸ்லீம் லீக் வெற்றி பெறுமாயின், இந்துக்களின் நிலைப்பாடு என்னவாக இருக்கும்? இதுவும் இந்துக்கள் தீர்வு காணவேண்டிய சிக்கல்களில் ஒன்றாகும்.

பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையால் உருவாகியுள்ள இரு நாட்டு மனப்பான்மை தொடர்ந்து நிலவும் சூழ்நிலையில் அரசியலமைப்பில் ஒரே நாடாக இந்தியா தொடருமெனில் இந்தியாவின் பாதுகாப்பைப் பொறுத்தமட்டில் இந்துக்கள் இரு பேராபத்துகளுக்கிடையே சிக்கித் தவிக்கும் இடர்பாட்டுக்குள்ளாவார்கள். போர்ப்படைகள் இருக்கும்; ஆனால் அவற்றைத் தேவைக்கேற்பப்

பயன்படுத்துவதற்கு முஸ்லீம்லீகின் குறுக்கீடுகளும் தடைகளும் இருக்கும். அதையும் மீறிப்பயன்படுத்தும்போது படைகள் எந்த அளவுக்கு நாட்டுப்பற்றோடு போரிடுவர் என்ற ஐயமும் இருப்பதால் நாட்டுப் பாதுகாப்பு என்னும் இன்றியமையாத் தேவையே கேள்விக்குரிய பிரச்சினையாகிவிடும். பஞ்சாபி, வடமேற்கு எல்லைப்புற முஸ்லீம்களின் மேலாதிக்கம் ஓங்கியிருக்கும் இப்படைகளை மிகுந்த பொருட்செலவில் பராமரிக்கும் பொறுப்பை ஏற்கும் இந்துக்கள், முஸ்லீம் படையெடுப்பாளர்களுக்கு எதிராக அப்படையை நம்பகமாகப் பயன்படுத்த இயலுமா என்ற தவிப்பிலிருக்க நேரிடும். முஸ்லீம் லீகின் கண்ணோட்டமும் முட்டுக்கட்டைகளும் தொடர்ந்தால், இந்தியப் படையில் முஸ்லீம்களின் எண்ணிக்கை குறைந்தாலும்கூட, அவற்றைத் தேவைக்கேற்ப இந்திய அரசு பயன்படுத்தஇயலா நிலைமை ஏற்படும்; தற்போது பிரிட்டிஷ் வல்லாட்சியின் கீழ் இருப்பதைப்போன்ற நிலையில், இந்தியநாடு அண்டையிலுள்ள முஸ்லீம் நாடுகளுக்கு அஞ்சியடங்கி அவற்றின் நிழலில் வாழ நேரிடும்.

பாதுகாப்பான எல்லை வேண்டுமா? பாதுகாப்பான படை வேண்டுமா? என்று கடினமானதொரு தேர்ச்சியைச் செய்யவேண்டிய இக்கட்டான நிலையில் இந்துக்கள் உள்ளனர். இக்கட்டத்தில் இந்துக்கள் மேற்கொள்ளவேண்டிய முதிர் அறிவுமிக்க பாதை என்ன? இந்தியாவுக்குப் பாதுகாப்பான எல்லை வேண்டுமென்பதற்காக முஸ்லீம் இந்தியாவும் தங்களுடனேயே சேர்ந்திருக்கவேண்டுமென்று கோருதல் அவர்களது நலன்களுக்குகந்ததாகுமா? அல்லது பிரிவினையை ஏற்றுக்கொண்டு அதன்வழி நம்பகமான படையைப் பெறுதல் இந்துக்களின் நலன்களுக்கு உகந்த வழியா? ஐயத்திற்கிடமில்லாதவாறு ஓர் உண்மை நம் முன்னே தெளிவாகத் தெரிகிறது; இப்பகுதிவாழ் முஸ்லீம்கள் இந்துக்களுக்கெதிரான கடும்பகைமையுணர்வு மிக்கவர்கள் என்பதே அது. முஸ்லீம்களை வெளியே அனுப்புவதால் இந்துக்களுக்குப் பாதுகாப்பு மிகுதியா? அவர்கள் உள்ளே இருந்து வருவதால் பாதுகாப்பு மிகுதியா? நல்லறிவு பெற்ற எவருமே இக்கேள்விக்கு 'முஸ்லீம்களை உள்ளேயிருத்தி அவர்களின் பகைமையை எதிர்த்து நிற்பதைவிட அவர்களை வெளியே அனுப்பிப் பகைமையை எதிர்கொள்வதே பாதுகாப்பானது' என்றுதான் பதிலிருப்பர். முஸ்லீம்களை வெளியேற்ற விரும்புதலே உள்ளார்ந்த நாட்டுப்பற்றின் வெளிப்பாடாக இருக்கமுடியும். இந்தியப்படைகளில் முஸ்லீம்களின் மேலாதிக்கத்தை அறுதியாக முடிவுக்குக் கொண்டுவர இஃதொன்றே உற்றவழி.

முஸ்லீம் மேலாதிக்கத்தை நீக்குதலை எவ்வாறு சாதிக்க இயலும்? பாகிஸ்தான் பிரிவினையை ஆதரித்தல் ஒன்றே அதற்கு உற்றவழியாகும். பாகிஸ்தான் தனிநாடாகப் பிரிந்துபோனபின், இந்தியா தனது செல்வ வளங்களையும் மனித வளங்களையும் கொண்டு, முற்றிலும் நம்பகமான படையினை நிறுவமுடியும்; அதன் பயன் பாட்டிற்கெதிராக முட்டுக்கட்டைகள் போட எவரும் இரார்; அதை எந்தப் பகைவருக்கெதிராக, எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்றெல்லாம் எவரது கட்டளைகளும் நம்மை முடக்க வியலாது. பாகிஸ்தான் பிரிவினையால் இந்தியாவின் வலிமை குன்றி விடு மென்று அஞ்சத் தேவையில்லை; மாறாக இந்தியாவின் வலிமை பன்மடங்காய்ப் பெருகும்.

தற்போதைய படையமைப்பினால் படையில் தங்கள் எண்ணிக்கைச் சிறுமையால் தங்கள் பாதுகாப்பு எவ்வளவு தூரம் பின்னடைவுக்குள்ளாகியுள்ளது என்பதை இந்துக்கள் இன்னமும் சரியாக உணரவில்லையென்றே தோன்றுகிறது. இத்தகைய கேடான தொரு பின்னடைவை, மிகவும் அரியவிலை கொடுத்து வாங்கிக் கொண்டிருக்கிறோம் என்பதையும் இந்துக்கள் உணர்ந்தபாடில்லை.

இந்தியப் படையின் முக்கிய, ஆள் சேர்ப்புக் களமான பாகிஸ்தான் பகுதியிலிருந்து இந்திய மைய அரசின் கருவூலத்திற்குக் கிடைக்கும் வருவாய் வெகுசொற்பமே என்பதைக் கீழ்வரும் விவரங்கள் புலப்படுத்தும்:

**மைய அரசுக்கு மாநில வாரியாக வருவாய் விவரம்**

| | | ரூ. |
|---|---|---|
| I. | பஞ்சாப் | 1,18,01,385 |
| | வட மேற்கு எல்லைப்புறம் | 9,28,294 |
| | சிந்து | 5,86,46,915 |
| | பலுச்சிஸ்தானம் | ....... |
| | பாகிஸ்தான் பகுதியிலிருந்து மொத்தம் | 7,13,76,594 |

இதற்கு மாறாக இந்துஸ்தான் மாநிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய் வருமாறு:

| | | ரூ. |
|---|---|---|
| II. | சென்னை | 9,53,26,745 |
| | பம்பாய் | 22,53,44,247 |
| | வங்காளம்* | 12,00,00,000 |
| | ஐக்கிய மாநிலம் | 4,05,53,000 |
| | பீகார் | 1,54,37,742 |
| | மத்திய மாநிலம் - பீரார் | 31,42,682 |
| | அஸ்ஸாம் | 1,87,55,967 |
| | ஒரிசா | 5,67,346 |
| இந்துஸ்தானிலிருந்து மொத்தம் | | 51,91,27,729 |

இந்திய அரசின் வருவாயில் பெரும்பகுதி இந்துஸ்தானத்திலிருந்தே கிடைக்கிறது; பாகிஸ்தான் மாநிலங்களிலிருந்து வெகு சொற்ப அளவே கிடைக்கின்றது என்பதை இவ்விவரங்கள் காட்டுகின்றன. சொல்லப்போனால் பாகிஸ்தான் பகுதி மாநிலங்களின் அரசுச் செயல்பாடுகள், இந்துஸ்தான் மாநிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டுதான் நடத்தப்படுகின்றன. அதாவது, இந்துஸ்தான் மாநிலங்களின் வளத்தை உறிஞ்சும் அட்டைகளாகவே பாகிஸ்தான் மாநிலங்கள் விளங்கி வருகின்றன. அவை மத்திய அரசின் நிதிக்குக் கொடுப்பது கொஞ்சமே என்பது மட்டுமல்ல; மத்திய அரசு வருவாயில் பெரும்பகுதி இம்மாநிலங்களுக்காகச் செலவிடப்படுகிறது. மத்திய அரசின் மொத்த ஆண்டு வருவாய் 121 கோடி ரூபாய் அளவினதாகும். இதில் ஆண்டுதோறும் 52 கோடி ரூபாய் படைகளுக்காகச் செலவிடப்படுகிறது. இப்பெருந்தொகை எந்தப் பகுதியில் செலவிடப்படுகிறது? இந்த 52 கோடி ரூபாயின் பெரும் பகுதியை வரியாகக் கொடுப்பவர்கள் யார்? போர்ப்படைகளுக்காகச் செலவிடப்படும் இந்த 52 கோடி ரூபாயின் பெரும்பகுதி பாகிஸ்தான் பகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முஸ்லீம் படைக்காகச் செலவிடப்படுகிறது. அதாவது, பெரும்பாலும் இந்துக்களிடமிருந்து திரட்டப்பட்ட இந்த 52 கோடி ரூபாயின் பெரும் பகுதி,

* வங்காள மக்கள் தொகையில் சரிபாதி முஸ்லீம்கள் என்பதால், வங்காள மாநில வருவாயில் பாதியே இங்கு காட்டப்பட்டுள்ளது.

இந்துக்களல்லாதவர்களே பெரிதும் நிறைந்துள்ள படையின் செலவுகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது. இத்தகைய அவல நிலை நிலவுதல் எத்தனை இந்துக்களுக்குத் தெரியும்? இந்த அவலம் யாருடைய செலவிலே நடத்தி வைக்கப்படுகிறது என்பதையும் எத்தனை இந்துக்கள் அறிவர்? இன்றைய அவலநிலையினைத் தடுக்கும் திறமில்லாத இந்துக்களை இதற்குப் பொறுப்பாக்க முடியாது. ஆனால் இதே நிலை நீடித்துத் தொடருவதை அனுமதிக்க வேண்டுமா? இதுவே இன்று நம்மை எதிர்நோக்கும் கேள்வியாகும். இதனை உடனடியாக நிறுத்த வேண்டுமென நாம் விரும்பினால், அதற்கு உறுதியான வழி பாகிஸ்தான் பிரிந்து போக விட்டு விடுவதே. பாகிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பது, நம்முடைய அழிவுக்கான ஆயுதத்தை நாமே விலை கொடுத்து வாங்குவதற்கு அல்லது காசு கொடுத்துக் கொள்ளிக்கட்டை வாங்கி முதுகில் சொறிந்து கொள்வதற்கு ஒப்பாகும். எனவே, பாதுகாப்பான எல்லை என்பதைவிடப் பாதுகாப்பான படையை நாடுவதே நன்மையான காப்பு நெறியாகும்.



# இயல் 6

# பாகிஸ்தானும் வகுப்பு நல்லிணக்கமும்

பாகிஸ்தான் பிரிவினை வகுப்பு நல்லிணக்கத்துக்கு வழி வகுக்குமா என்பதே ஒவ்வொரு இந்துவின் உள்ளத்திலும் இயல்பாக எழக்கூடிய அடுத்த வினாவாகும். இவ்வினாவிற்குச் சரியாக விடையிறுக்க வேண்டுமெனில், வகுப்பு நல்லிணக்கத்திற்கான தேவைகள் என்ன என்பதைப் பற்றிச் சற்று ஆழமாக ஆயவேண்டும். வகுப்புப் பிரச்சினை என்று குறிப்பிடும்போது, இந்துக்களும் முஸ்லீம்களும் என்ன கருதுகிறார்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுதல் அவசியம். இதைப் பற்றிய தெளிவான கருத்தின்றி, பாகிஸ்தான் பிரிவினை வகுப்பு நல்லிணக்கத்திற்கு வழிவகுக்குமா என்று கூறல் இயலாது.

எல்லையைப் பொருத்தமட்டில் ''முன்னேற்றக் கொள்கை'' என்பதற்கு மேலோட்டமான பொருளொன்றும், ஆழமான பொருளொன்றுமாக இருவேறு பொருள்கள் உண்டு. மேலோட்டமாக இச்சொல் பயன்படுத்தப்படும்போது என்ன பொருளில் கூறப்படுகிறதோ, அதற்கு முற்றிலும் மாறான, முரணான கருத்து ஆழமான பொருளில் அடங்கியுள்ளது.

## I

முதலில் வகுப்புப் பிரச்சினை குறித்து, அதன் மேலோட்டமான பொருளில் நோக்குவோம். வகுப்புப் பிரச்சினை என்பது, அதன் மேலோட்டமான பொருளில், இந்திய சட்டமன்றங்களில் இந்துக்களும், முஸ்லீம்களும் உரிய இடம் பெறுதலைக் குறிக்கின்றது. இந்தப் பொருளில் பயன்படுத்தப்படும்போது, வகுப்பு நல்லுறவு என்பது இரண்டு வெவ்வேறு பிரச்சினைகளுக்கான தீர்வு காண்பதன் தேவையை அடக்கியுள்ளது.

1) பல்வேறு சட்டமன்றங்களிலும் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஒதுக்கீடு செய்யப்பட வேண்டிய இடங்களின் எண்ணிக்கை;

2) இவ்வாறு ஒதுக்கப்படும் இடங்களுக்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் வாக்காளர்களாக எவரை ஏற்றுக் கொள்வது?

வட்டமேசை மாநாட்டில் முஸ்லீம்கள் பின்வருமாறு கோரினர்:

1) மாநிலச் சட்டமன்றங்களுக்கும், மையச் சட்டமன்றத் திற்கும் முஸ்லீம் பிரதிநிதிகள், தனி வாக்காளர் தொகுதிகளிலிருந்தே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

2) முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாநிலங் களில் அவர்களது மக்கள் தொகைக்கு ஏற்ப அவர்களுக்கு இப்போது தரப்பட்டுள்ள பிரதிநிதித்துவம் நீடிப்பதுடன், முஸ்லீம்கள் பெரும் பான்மையினராக வாழும், பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லை, வங்காள மாநிலங்களில் முஸ்லீம்களுக்குப் பெரும்பான்மையான இடங்கள் ஒதுக்கீடு செய்ய சட்டத்தின் வாயிலாக உறுதி அளிக்கப்பட வேண்டும்.

முஸ்லீம்களின் இவ்விரு கோரிக்கைகளையும், தொடக்கத் திலிருந்தே இந்துக்கள் எதிர்த்து வந்தனர். மாநில, மையச் சட்டமன்ற உறுப்பினர்களுக்கான தேர்தல்கள் அனைத்திலும் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் கூட்டு வாக்காளர் தொகுதிகளே இருக்க வேண்டு மென்றும், சிறுபான்மையினருக்கு அவர்கள் முஸ்லீம்களாயினும், இந்துக்களாயினும் இட ஒதுக்கீடுகள் அவர்களது மக்கள் தொகை விகிதத்திற்கேற்ப முடிவு செய்யப்பட வேண்டுமென்றும், இந்துக்கள் வலியுறுத்தினர்; மேலும், எந்தவொரு மாநிலத்திலும் தனியொரு இனத்தவர்க்குப் பெரும்பான்மையிடங்கள் சட்ட வாயிலாக ஒதுக்கீடு செய்யப்படுவதைக் கடுமையாக எதிர்த்தனர்.

மாட்சிமைதங்கிய அரசு தனது வகுப்புவாரித் தீர்ப்பின் மூலம் இந்த சிக்கலுக்குத் தீர்வு கண்டது; எளிமையான அதேசமயம் மிகவும் கடுமையான இந்தத் தீர்வு இந்துக்களின் எதிர்ப்புகளைப் பொருட் படுத்தாமல், முஸ்லீம்களின் கோரிக்கைகளை முழுமையாக ஏற்றுக்கொண்டது. அதாவது, முஸ்லீம்களுக்கு இடஒதுக்கீடும் தனி வாக்காளர் தொகுதிகளும் அனுமதிக்கப்பட்டன ; மேலும், முஸ்லீம் கள் பெரும்பான்மையாக வாழும் மாநிலங்களில் அவர்களுக்கே சட்டரீதியாக பெரும்பான்மை இடங்கள் ஒதுக்கப்படவும் உறுதி செய்யப்பட்டது.

இந்த வகுப்புவாரித் தீர்ப்பினால் விளையும் பிரச்சினை என்ன? ஆங்கில அரசின் வகுப்புவாரித் தீர்ப்புக்கு இந்துக்கள் எதிர்ப்பு தெரிவிப்பதில் பொருள் உண்டா? இந்த வினாக்களுக்குக் கவனமாகவும் ஆழமாகவும் ஆய்ந்து விடை தேடுதல் இன்றியமையாதது.

முதலாவதாக, முஸ்லீம் சிறுபான்மையினருக்கு இட ஒதுக்கீடு அளிப்பதற்கு இந்துக்களின் எதிர்ப்பு குறித்து நோக்குவோம். இட ஒதுக்கீட்டின் அளவு முன்பின்னாக இருப்பது குறித்துக் கருத்து வேறுபாட்டுக்கு இடமுண்டு என்றாலும், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் இந்துச் சிறுபான்மையினருக்கு இடஒதுக்கீடு எவ்வாறு செய்யப்படுகிறதோ, அதே அடிப்படையில் தான் இந்துப் பெரும் பான்மை மாநிலங்களில் முஸ்லீம் சிறுபான்மையினருக்கு இட ஒதுக்கீடு செய்யப்படும் என்பதால், இந்துக்களின் எதிர்ப்புக்கு வலிமை குன்றி விடுகிறது. சிந்து, வடமேற்கு எல்லை மாநிலங்களில் இந்துக்கள் எவ்வாறு நடத்தப்படுகிறார்கள் என்பதை இவ்வொதுக் கீட்டுக் கொள்கைக்கான உரைகல்லாகக் கொள்ளலாம்.

இரண்டாவதாக, ஒரு இனத்தவர்க்குச் சட்டரீதியாக பெரும் பான்மை இடஒதுக்கீடு செய்யப்படுவதற்குக் காட்டப்படும் எதிர்ப்பைப் பற்றிப் பார்ப்போம். இந்த எதிர்ப்புக்கும் தகுந்த காரண மிருப்பதாய்க் கூறவியலாது. கொள்கையளவில் வேண்டுமானால் உறுதி செய்யப்பட்ட பெரும்பான்மை ஒதுக்கீடென்பது நீதியற்றதும், தீங்கு விளைவிப்பதுமான முறைகேடு என்று கூறலாம். ஆனால் தற்போது இந்தியாவில் நிலவுகின்ற சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு நோக்கினால் இத்தகைய பெரும்பான்மை ஒதுக்கீட்டைத் தவிர்ப்பதற்கில்லையெனலாம். அதாவது, சிறுபான்மையினர்க்கு அளிக்கப்படும் இட ஒதுக்கீடு பெரும்பான்மையினரைச் சிறுபான்மை யினராக ஆக்கிவிடக் கூடாது என்பதை ஏற்றுக்கொள்ளும்போது, பெரும்பான்மையினருக்குப் பெரும்பான்மையான இடஒதுக்கீடு தேவை யென்பதை மறுப்பதற் கில்லை. அதாவது, சிறுபான்மையினர்க்காக ஒதுக்கப்படும் இடங்களின் எண்ணிக்கையை முடிவு செய்யும்போதே பெரும்பான்மையினர்க்கான இட ஒதுக்கீடும் முடிவாகி விடுகிறது. பெரும்பான்மையினரைச் சிறுபான்மையினராக்கும் வகையில் சிறு பான்மையினர்க்கு இடஒதுக்கீடு கூடாதென்பதை ஏற்றுக்கொண்டால், அதன்வழிப் பெரும்பான்மையினர்க்குப் பெரும்பான்மையிடங்கள் சட்ட வாயிலாக உறுதிசெய்யப்படுவதை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்பதில் கருத்து வேறுபாட்டுக்கிடமில்லை. எனவே, பஞ்சாப்,

வடமேற்கு எல்லைப்புறம், சிந்து, வங்காள மாநில சட்டமன்றங்களில் முஸ்லீம்களுக்குப் பெரும்பான்மை இடஒதுக்கீடு குறித்த இந்துக்களின் எதிர்ப்பில் வலுவில்லை; ஏனெனில் இந்துக்கள் பெரும்பான்மையாக வாழும் ஏனைய மாநிலங்களில் அவர்களுக்கும் சட்டபூர்வப் பெரும் பான்மை ஒதுக்கீடு ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஒதுக்கீட்டு முறை இருசாரார்க்கும் ஒரே மாதிரியாகவே அளிக்க முற்படுவதால், ஒரு தலைசார் திட்டம் என்று இதனைக் குறை கூறுவதற்கில்லை.

ஆனால் இந்துக்கள் காட்டும் எதிர்ப்பு பொருளற்றது என்பதால் வகுப்புவாரித் தீர்ப்பை எதிர்ப்பதற்கு நியாயமான காரணங்களே இல்லை என்று பொருளல்ல.

வகுப்புவாரித் தீர்ப்பை எதிர்ப்பதற்கு போதுமான காரணங்கள் இருக்கவே செய்கின்றன. ஆனால் அந்தக் காரணங்கள் இந்துக்கள் காட்டும் எதிர்ப்புக்கு ஆதார அடிப்படையாக உள்ள காரணங்கள் அல்ல.

இந்த எதிர்ப்பின் அடிப்படை என்ன என்பதை ஈண்டு தெளிவாக்க முற்படுவோம். இந்துப் பெரும்பான்மை மாநிலங்களில், முஸ்லீம் சிறுபான்மையினர் தங்களுக்கு தனிவாக்காளர் தொகுதிகள் வேண்டுமென்று வற்புறுத்துகின்றனர். வகுப்புவாரி தீர்ப்பு அவர்களுக்கு இவ்வுரிமையை நல்குகிறது. இதனால் ஏற்பட்டுள்ள நிலைமை என்ன? முஸ்லீம் சிறுபான்மையினரின் ஒப்புதலின்றி தனிவாக்காளர் தொகுதிகளை அவர்களிடமிருந்து பறிக்க முடியாது. அவர்களது இந்த முடிவுக்கு இந்து பெரும்பான்மையினர் கட்டுப்பட்டாக வேண்டும். இந்நிலைமையில், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் உள்ள இந்துச் சிறுபான்மையினர் கூட்டு வாக்காளர் தொகுதிகளே இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகின்றனர். வகுப்புவாரித் தீர்ப்பு அவர்களது கோரிக்கையை ஏற்க மறுத்து, அவர்களுக்கும் அவர்கள் எதிர்க்கும் தனிவாக்காளர் தொகுதிகளையே ஒதுக்க முனைகிறது. இந்துப் பெரும்பான்மை மாநிலங்களில் வாக்காளர் தொகுதி விஷயத்தில் முஸ்லீம் சிறுபான்மையினரின் சுயநிர்ணய உரிமை ஏற்றுக்கொள்ளப்படும்போது இங்கு ஒரு கேள்வி எழுகிறது. முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் வாக்காளர் தொகுதிகளை தேர்ந்தெடுத்துக் கொள்ளும் விஷயத்தில் இந்து சிறுபான்மையினருக்கும் அத்தகைய உரிமையை ஏன் அளிக்கப்படவில்லை? இதற்கென்ன விடை? இதற்கு சரியான விடையேதும் இல்லையெனில், ஆங்கில அரசின் வகுப்புவாரித் தீர்ப்பில் ஆழமான பாரபட்சப்

போக்கு நிலவுகிறது என்பதை ஐயத்திற்கிடமின்றி ஊகிக்கலாம்; எனவே, இக்குறையைக் களைதல் அவசியமான கடமையாகும்.

முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாநிலங்களில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களைப் போன்றே தனிவாக்காளர் தொகுதி அடிப்படையில் சட்டரீதியான பெரும்பான்மை உரிமை அளிக்கப் படுகிறதே என்பது இந்தக் கேள்விக்கான விடையாகாது[1]. சிறிது ஆழ்ந்து நோக்கில், இந்த ஏற்பாட்டில், இருசாரார்க்கும் சமமான உரிமையளிப்பு கிடையாது என்பது புலப்படும். இந்துப் பெரும் பான்மை மாநிலங்களில் இந்துக்களுக்குத் தனித் தொகுதிகள் என்பது அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளக்கூடிய விஷயமல்ல. தங்களுக்குத் தனித்தொகுதிகள் வேண்டுமென்ற கோரிக்கையில் முஸ்லீம்கள் உறுதியாக இருப்பதிலிருந்து தோன்றுவதுதான் இது. ஒரு குறிப்பிட்ட சூழலில், ஒரு சிறுபான்மையினத்தவர்கள், தனி வாக்காளர் தொகுதி கள் வாயிலாகத் தங்கள் நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதுடன், இதனால், தனிவாக்காளர் தொகுதி மூலம் தமக்கு எதிரான பெரும் பான்மையினம் வல்லாண்மை பெற்றுவிடுமோ என்ற அச்சத்திற் கிடமில்லை என்றும் கருதலாம். ஆனால், பிறிதொரு சிறுபான்மை யினம் (அது வேறு பல மாநிலங்களில் பெரும்பான்மையினமாக இருந்தாலும் கூட) தனக்குத் தனிவாக்காளர் தொகுதிகள் ஒதுக்கப் பட வேண்டுமென்று கோரினால், அக்கோரிக்கையே, பெரும் பான்மையினத்தவர் சட்டப்பூர்வமாகத் தனிவாக்காளர் தொகுதி யுரிமை கோரிப்பெற்று வல்லாண்மை செலுத்த வழிவகுக்குமோ என்று பிறிதொரு சூழலில், தயங்கலாம்; அதனால் பொதுவாக்காளர் தொகுதிகளே தமது தற்காப்புக்கு உகந்தவழி என்றும் கருதலாம். இங்கு சரியான முடிவெடுப்பதற்கு, ஒரு இனத்தார், தம்மைத்தாமே கேட்டுக் கொள்ள வேண்டிய கேள்வி : பெரும்பான்மையினத்தவர், தங்கள் பெரும்பான்மை வலிமையை வகுப்புவாத நோக்கங்களுக்காக, வகுப்புவாத வேறுபாடு கொண்டு பயன்படுத்தக் கூடுமா என்பதே, பெரும்பான்மையோர் வகுப்புவாத நோக்கிலேயே தங்கள் வலிமையைப் பயன்படுத்துவர் என்று கருதினால், சிறுபான்மையோர், பொது வாக்காளர் தொகுதிகளின் வாயிலாக இடஒதுக்கீடு என்னும் கோட்பாடு தான், பெரும்பான்மையோரும் தனிவாக்காளர் தொகுதிகளைக்

1. இந்து வாக்காளர் தொகுதி எனக் குறிப்பிடுதல் பொருத்தமாகாது. ஏனெனில் இது பொது வாக்காளர் தொகுதி, தனிவாக்காளர் தொகுதி எதிலும் சேர்க்கப்படாத அனைவரும் இதில் அடங்குவர்; ஆனால் பொது வாக்காளர் தொகுதியில் பெரும்பான்மையோர் இந்துக் களாதலால், இது இந்து வாக்காளர் தொகுதி எனக் குறிப்பிடப்படுகின்றது.

கோருவதைத் தடுக்கும் ஒரே வழி என்ற கண்ணோட்டத்தில், பொது வாக்காளர் தொகுதிகளே தமக்கு உறுதியான பாதுகாப்பு எனத் தேர்ந்தெடுப்பர். இத்தகைய அமைப்பில் வகுப்புவாரி அடிப்படையிலான நெருக்கம் அத்துணை வலிவாக இராதாகையால், பெரும்பான்மையினர் தங்கள் வலிமையை வகுப்புவாரி நோக்கில் பயன்படுத்தும் வாய்ப்புகள் வெகுவாய்க் குறைந்து விடும்; அச்சூழலில் சிறுபான்மையினர்க்கான ஒதுக்கீடுகளுக்கு மட்டும் தனிவாக்காளர் தொகுதிகளை அச்சமும் தயக்கமும் இன்றிப் பெற்றுப் பயனடையலாம். தெளிவாகக் கூறப்புகின், முஸ்லீம் சிறுபான்மை மாநிலங்களில், தங்களுக்குத் தனிவாக்காளர் தொகுதிகள் கோரிப் பெறுவதனால், இந்துப் பெரும்பான்மையினரும் தனிவாக்காளர் தொகுதிகள் பெற இடமளித்தாலும் கூடத் தங்கள் நலன்கள் பாதிக்கப்படமாட்டாதென முஸ்லீம்கள் உறுதியாக நம்புகின்றனர்; ஏனெனில் இந்துக்கள் தம்மைவிட எண்ணிக்கையில் மிகுந்திருப்பினும், அவர்களிடையே ஆழ வேரூன்றி நிலவும் சாதி, இன வேறுபாடுகளால் அவர்கள் முஸ்லீம்களுக்கெதிராகத் தங்கள் பெரும்பான்மை வலிமையைப் பயன்படுத்தல் இயலாதென உறுதியாக நம்புகின்றனர். மாறாகத் தங்களுடைய உறுதியான சமூகக் கட்டுக்கோப்பின் வலிமையால், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் 'உறுதியான முஸ்லீம் அரசாங்கத்தை' அமைக்க முடியுமென அவர்கள் நம்புகின்றனர்; அதை அயர்லாந்தின் தன்னாட்சிக்காக சாலிஸ்பரி பிரபு முன்வைத்த 'ஹோம் ரூல்' திட்டத்தின்படி அமைக்க முடியும் என்றும் கருதுகின்றனர். ஒரே சிறு வேறுபாடு; அயர்லாந்தில் ஹோம் ரூல் இருபதாண்டுகளே நீடித்தது; முஸ்லீம் தன்னாட்சி அரசுக்கோ, வகுப்புவாரி உரிமையளிப்பு நீடிக்கும்வரை ஆபத்தில்லை. எனவே, இருசாராரின் சூழல் நிலைகளும் ஒரே மாதிரியானவை அல்ல. இந்துப் பெரும்பான்மை மாநிலங்களில் இந்துக்களுக்குச் சட்டபூர்வப் பெரும்பான்மை ஒதுக்கீடு என்பதே, அவர்களது விருப்பத்தேர்வாக இல்லாமல், முஸ்லீம் சிறுபான்மையினர் கோரிக்கையின் துணை விளைவாகவன்றோ எழுகிறது. அதேசமயம், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் முஸ்லீம்களுக்குத் தனிவாக்காளர் தொகுதிகள் ஒதுக்கீடு செய்யப்படுவது இந்துச் சிறுபான்மையினர் கோரிக்கையின் விளைவாக அல்ல என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். இந்துப் பெரும்பான்மை மாநிலங்களில் இந்துப் பெரும்பான்மை ஆட்சிக்கு முஸ்லீம்களை உட்படுத்தல், முஸ்லீம்களே இசைந்து ஏற்றுக்கொள்ளப்படும் ஒன்று எனும்போதில், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் முஸ்லீம் பெரும்பான்மை ஆட்சிக்கு இந்துக்களை அவர்களது விருப்பத்திற்கெதிராக உட்

படுத்துதல் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டாயத் திணிப்பே தவிர வேறல்ல என்பதையும் உணர வேண்டும்.

வகுப்புவாரித் தீர்ப்பு பற்றிய நமது அலசல்களை இப்போது தொகுத்து நோக்குவோம். வகுப்பு பிரச்சினைக்கு மேலோட்டமான பொருளையெடுத்துக் கொண்டு வகுப்புவாரி ஒதுக்கீடு தீர்வாகுமா வென நோக்கினால், இந்துப் பெரும்பான்மை மாநிலங்களில் முஸ்லீம்களுக்குக் கொடுக்கப்படும் உரிமைகள் முஸ்லீம் பெரும் பான்மை மாநிலங்களில் இந்துக்களுக்கும் கிடைக்குமென்ற நோக்கில் ஒதுக்கீடு பாகுபாடு காட்டுவதாகக் குறைகூற இயலாது. அவ்வாறே முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் பெரும்பான்மையோர் பெறும் உரிமைகள், இந்துப் பெரும்பான்மை மாநிலங்களிலும் பெரும்பான்மையினருக்கு வழங்கப்படுவதால், இந்த நோக்கிலும் பாகுபாடிருப்பதாகக் குறைகூற முடியாது. ஆனால் இருவகை மாநிலங்களிலும் சிறுபான்மை வாக்காளர்களைப் பொறுத்தமட்டில் இந்தத் திட்டம் சமநீதி வழங்கவில்லை; மாறாகப் பெரும் அநீதி விளைவிக்கிறது. இந்து மாநிலங்களில், முஸ்லீம் சிறுபான்மையின ருக்குச் சுய நிர்ணய உரிமை வழங்கும் இத்திட்டம், முஸ்லீம் பெரும் பான்மை மாநிலங்களில் இந்துச் சிறுபான்மையினருக்கு இவ் வுரிமையை வழங்க மறுக்கிறது. இந்து மாநிலங்களில் முஸ்லீம் இடஒதுக்கீட்டுத் தொகுதிகளில் வாக்காளர் யாவர் என்பதை முஸ்லீம் களே முடிவு செய்வதில், இந்துப் பெரும்பான்மையினர் குறுக்கிட அனுமதி மறுக்கப்படுகிறது. ஆனால், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் வாக்காளர் யாவர் என்பதைப் பெரும்பான்மை யினரே முடிவு செய்வர்; இதில் சிறுபான்மையோர் கருத்துக்குச் சற்றும் இடமில்லை. இவ்வாறாக, முஸ்லீம் மாநிலங்களில் முஸ்லீம் களுக்குச் சட்டபூர்வமான பெரும்பான்மை ஒதுக்கீடும், தனி வாக்காளர் தொகுதிகளும் தர முன்வரும் 'வகுப்புவாரித் தீர்ப்பு' முஸ்லீம் மாநிலங்களில் இந்துக்கள் மீது முஸ்லீம் மேலாதிக்க ஆட்சியைத் திணிக்கிறது; அவ்வாட்சியில் இந்துக்களுக்குச் செல் வாக்கிராது; அதை மாற்றும் உரிமையும் இந்துக்கள் பெறார்.

வகுப்புவாரித் தீர்ப்பின் குறை என்னென்பதை இப்போது நாம் தெளிவாக உணர்கிறோம். இது ஒரு கொடுமையான தீங் கென்பதை ஒப்புக்கொண்டாக வேண்டும். இன்று உலகெங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்ட, அரசியல் நெறிகளில் ஒன்றான, 'முழுமை யான அரசியல் அதிகாரம், எந்த ஒருவரிடமும் நம்பி ஒப்படைக்க

லாகாது' என்ற கோட்பாட்டிற்கே முரணாக அமைகிறது இக் கோட்பாடு,

''எந்தவொரு நாட்டிலாவது அளவிறந்த அரசியல் அதிகாரம் செலுத்தும் குழு ஒன்று இருக்கிறதென்றால் அவர்களால் ஆளப்படுவோர்க்கு விடுதலையென்பது ஒரு போதும் இருக்க முடியாது. ஏனென்றால், வரலாற்று ஆய்வுகள் தரும் முடிவுப்படி, கட்டுப் படுத்தப்படாத முழு அதிகாரம் என்பது, அதைச் செலுத்துவோரையே முடிவில் நச்சாக்கு கிறது. அவர்கள் எப்போதும் மற்றவர்க்கு நல்லவையெனத் தாம் கருதுவதையே பிறர் மீது வலிந்து திணிப்பர்; முடிவாகத் தாங்கள் தொடர்ந்து அதிகாரத்தில் இருப்பதுதான் சமுதாய நலனுக்கான நெறியென்ற கருதுகோளை அழுத்தமாகப் பற்றிக் கொள்வர். நாட்டின் விடுதலையென்பது அரசியல் அதிகாரத் திற்கு வரம்பு கட்டுவதன் வாயிலாகவே எய்தப்படும்....'' என்று மிக விளக்கமாகவே உரைக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது முக்கியமான அரசியல் கோட்பாடாவது, 'அரசன் ஆளுவதற்கு எவ்வாறு தெய்வீக உரிமை ஏதும் கிடையாதோ, அவ்வாறே, பெரும்பான்மையோர் ஆள்வதற்கும் தெய்வீக உரிமை ஏதும் கிடையாது' என்பதாகும். இருப்பினும் பெரும்பான்மை யோர் ஆட்சி சகித்துக் கொள்ளப்படுகிறதென்றால் அது ஒரு குறிப் பிட்ட காலத்திற்குத்தான் தரப்படுகிறது என்பதும், அது மாற்றப் படும் உரிமைக்கு உட்பட்டது என்பதும் இரண்டாவதாக வகுப்பு வாரி பெரும்பான்மைக்கு அன்றி சிறுபான்மை வாக்களிப்பு உரிமைக்குத் தம்மை ஒப்படைத்துக் கொண்டுவிட்ட அரசியல் பெரும்பான்மையின் ஆட்சியே என்பதும்தான் இதற்குக் காரணம். அரசியல் பெரும்பான்மையினர் அரசியல் சிறுபான்மையினர் மீது செலுத்தக்கூடிய அதிகாரமே இவ்வாறு கட்டுப்பாடான அளவில் தான் செலுத்த அனுமதிக்கப்படுகிறதெனில், ஒரு வகுப்பைச் சேர்ந்த சிறுபான்மையினரை மற்றொரு வகுப்பைச் சேர்ந்த பெரும் பான்மையோர் காலகாலத்திற்கும் தமது அதிகாரத்தின்கீழ் அடக்கி யாள எங்ஙனம் அனுமதிக்க இயலும்? ஒரு வகுப்பைச் சேர்ந்த பெரும்பான்மையினரை, மற்றொரு வகுப்பைச் சேர்ந்த சிறுபான்மை யினர் மீது, அவர்களது வாக்களிப்பு உரிமைக்கு உட்படாமல், அதிலும் சிறுபான்மையினர் அதனை வலியுறுத்தும்போது, ஆட்சி செலுத்த அனுமதித்தல் மக்களாட்சிக் கோட்பாடுகளின் முழுமையான பிறழ்ச்சி என்பதுடன் இந்துச் சிறுபான்மையினத்தவரின் பாதுகாப்புக் குறித்துப் பொறுப்பற்ற அலட்சியம் காட்டுவதுமாகும்.

# II

*இனி வகுப்புப் பிரச்சினை என்பதன் ஆழமான பொருளில் இந்துக்கள் கூறுகின்ற இடர்ப்பாடுகள் யாவை எனக் காண்போம். இதனை ஒரு பிரச்சினையாக இந்துக்கள் எப்படி கூறுகிறார்கள்? வகுப்புப் பிரச்சினை என்பது அதன் ஆழமான அர்த்தத்தில் வலிந்து முஸ்லீம் மாநிலங்களை உருவாக்கும் முயற்சியுடன் சம்பந்தப் பட்டதாகும். லக்னோ உடன்பாட்டின்போது வகுப்புப் பிரச்சினையை முஸ்லீம்கள், அதன் மேலோட்டமான பொருளில்தான் வெளிப் படுத்தினர். முதன்முறையாக, வட்டமேசை மாநாட்டில்தான் முஸ்லீம் கள் வகுப்பு பிரச்சினையை அதன் ஆழமான பொருளில் வெளி யிட்டனர். 1935 ஆம் ஆண்டு சட்டத்திற்கு முன் பெரும்பாலான இந்திய மாநிலங்களில் இந்துக்கள் பெரும்பான்மையினராகவும், முஸ்லீம்கள் சிறுபான்மையினராகவுமே இருந்து வந்தனர். பஞ்சாப், வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாநிலம் ஆகிய மூன்று மாநிலங்களில் மட்டுமே முஸ்லீம்கள் பெரும்பான்மையினராகவும், இந்துக்கள் சிறுபான்மையினராகவும் இருந்தனர். எஞ்சிய மாநிலங் கள் அனைத்திலும் இந்துக்கள் பெரும்பான்மையினராகவும் முஸ்லீம் கள் சிறுபான்மையினராகவும் இருந்தனர். இவற்றுள்ளும் வட மேற்கு எல்லை மாநிலத்தில், மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத் தங்கள் செயல்படுத்தப்படா நிலையில் முஸ்லீம் பெரும்பான்மை யென்பது பெயரளவுக்கே இருந்து வந்தது; அங்கு பொறுப்பான அரசு ஏதும் செயல்படவில்லை. எனவே, நடைமுறையில் பஞ்சாப், வங்காளம் ஆகிய இரண்டினை மட்டுமே முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்கள் எனலாம். முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டுமென்று முஸ்லீம்கள் விரும் பினர்; அதன் அடிப்படையில், பம்பாய் மாநிலத்திலிருந்து சிந்து பகுதியைப் பிரித்துத் தன்னாட்சியுள்ள ஒரு தனி மாநிலமாக ஆக்கவும், ஏற்கனவே தனி மாநிலமாக இருந்த வடமேற்கு எல்லை மாநிலத்தை முழு தன்னாட்சி மாநிலமாக ஆக்கவும் கோரினர். ஏனைய அம்சங்கள் ஒருபுறமிருக்க, முற்றிலும் நிதி வசதிக் கண்ணோட் டத்தின் அடிப்படையில் பார்க்கும்போது, இக்கோரிக்கை ஏற்கப் படவியலாததொன்றெனக் கூறிவிடலாம். வடமேற்கு எல்லை மாநிலத்திற்கோ, சிந்து பகுதிக்கோ தமது தேவைகளை நிறைவு செய்து கொள்ளக்கூடிய அளவில் கூட நிதிவளம் கிடையாது. இருப்பினும் பிரிட்டிஷ் அரசு முஸ்லீம்களின் கோரிக்கைக்கு இணங்கி இம்மாநி லங்களை உருவாக்கியதுடன், இவ்விரண்டு மாநிலங்களின் நிதித் தேவைகளையும் சமாளிக்க மைய அரசு நிதியிலிருந்து உதவியும்*

செய்தது[1]. இதன் விளைவாக அம்மாநிலங்கள் நிதி நிலையில் தன்னிறைவு பெற முடிந்தது.

முஸ்லீம் பெரும்பான்மையும், இந்துச் சிறுபான்மையும் கொண்ட இந்த மாநிலங்கள் நான்கும், நிர்வாக வசதிக்காகவோ, கட்டுக்கோப்பு நோக்குடனோ இவ்வாறு தன்னாட்சியுடன் விளங்க உருவாக்கப்படவில்லை. பல மாநிலங்களில் இந்துப் பெரும்பான்மை யினரின் ஆட்சியில் முஸ்லீம் சிறுபான்மையர் இருக்க நேரும். சிறுமையால் ஊறுபட்ட முஸ்லீம் பெருமித உணர்வுக்கு ஈடு செய் வதற்காகவா இந்த முஸ்லீம் பெரும்பான்மை மாநிலத் திட்டம் என்றால் அதுவுமில்லை. அப்படியாயின் முஸ்லீம் மாநிலங்கள் உருவாக்கப்படும் திட்டத்தின் உள்நோக்கம்தான் என்ன? குறிப்பிட்ட மாநிலங்களில் சட்டரீதியாக, உறுதிசெய்யப்பட்ட பெரும்பான்மையை யும், தனி வாக்காளர் தொகுதிகளையும் முஸ்லீம்கள் கோருவதன் நோக்கம், அம்மாநிலங்களில், தனித்த முஸ்லீம் ஆட்சியதிகாரத்தை இயன்றவரை முழுமையான வடிவில் நிறுவுவதற்காகவே என்று இந்துக்கள் கூறுகின்றனர். இவ்வாறு நாட்டின் சில பகுதிகளில் தனித்த முஸ்லீம் அதிகாரத்தை நிறுவ முஸ்லீம்கள் விரும்புவதன் நோக்கம் என்னவென்று கேட்பின், 'இந்துப் பெரும்பான்மை மாநிலங் களில் முஸ்லீம் சிறுபான்மையினர் கொடுமைப் படுத்தப்படுவதைத் தடுப்பதற்கான ஆயுதமாக, முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் இந்துச் சிறுபான்மையினரைக் கொடுமைப்படுத்தும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்வதற்காகத்தான்' என்று இந்துக்கள் பதிலுரைக் கின்றனர். அதாவது, கொடுமைக்குக் கொடுமை, அச்சுறுத்தலுக்கு அச்சுறுத்தல், அடிக்கு அடி என்று பகைப்பான்மையிலான பாது காப்புத் திட்டமாக இது எண்ணப்படுகிறது. இத்தகைய திட்டம், நாட்டில் அமைதியையும் நீதியையும் நிறுவுதற்கு பதிலாக ஒவ்வொரு சாராரும் தம் பகுதி வாழ் சிறுபான்மையினரை அச்சுறுத்திப் பழி வாங்கும் கொடூரமான திட்டமென்பதில் ஐயமில்லை. அதாவது இந்து மாநிலங்களில் பெரும்பான்மை இந்துக்கள் செய்யக்கூடிய தீங்கு களுக்காக, முஸ்லீம் மாநிலங்களில் வாழும் அப்பாவி இந்துக்கள் கொடுமைப்படுத்தப்படுவர்; முஸ்லீம் மாநிலங்களில் இந்துக் களுக்குத் தீங்கு செய்யப்படின் இந்து மாநிலங்களிலுள்ள அப்பாவி

1. சிந்து மாநிலத்துக்கு ரூ. 1,05,00,000 யும் வடமேற்கு எல்லைப்புற மாநிலத்துக்கு ரூ. 1,00,00,000வும் உதவித் தொகையாக வழங்கப்பட்டது.

முஸ்லீம்கள் கொடுமைப்படுத்தப்படுவர். அதாவது, ஒவ்வொரு மாநிலத்திலும் சிறுபான்மையினர் சமுதாயமே பிணைக்கைதிகளைப் போன்ற வாழ்க்கைக்குத் தள்ளப்படும்.

முஸ்லீம்கள் தொடக்கத்திலிருந்தே இத்தகைய நோக்கத்தில் தான், வகுப்புவாரி மாநிலங்களின் அமைப்பு பற்றிய எண்ணம் கொண்டிருந்தனர் என்பதை, 1927 ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாட்டிற்குத் தலைமை வகித்த மௌலானா அபுல் கலாம் ஆசாத் ஆற்றிய உரை புலப்படுத்துகிறது. உரையின்போது மௌலானா கூறியதாவது:

''லக்னோ உடன்பாட்டின் மூலம் அவர்கள் (முஸ்லீம் பிரதிநிதிகள்) தமது நலன்களை விற்றுவிட்டனர். கடந்த மார்ச் மாதத்திய டில்லி முன்மொழிவுகளின் போதுதான், இந்திய முஸ்லீம்கள் விழிப்படைந்து தங்கள் உரிமைகள் என்ன என்பதை தெரிந்து கொண்டனர். 1916 ஆம் ஆண்டு உடன்பாட்டில் எய்தப் பட்ட தனி வாக்காளர் தொகுதிகள் முஸ்லீம் பிரதிநிதிகள் இடம் பெறுவதை மட்டுமே உறுதி செய்தன; ஆனால் நமது சமுதாயத்தின் நல்வாழ்வை உறுதி செய்ய உறுப்பினர் எண்ணிக் கையின் வலிமையே முக்கியமானது. இத்தகைய வலிமையை உறுதி செய்வதன் மூலம் டில்லி முன்மொழிவுகள்தான் வருங் கால இந்தியாவில் முஸ்லீம்களுக்குரிய சரியான பங்கிற்கு வழிகாட்டுகின்றன. தற்போது வங்காளம், பஞ்சாப் மாநிலங் களில் நிலவும் சற்றுக் கூடுதலான பெரும்பான்மையென்பது வெறும் மக்கள் தொகைப் புள்ளிவிவரமாகவேயுள்ளது; ஆனால் டில்லி முன்மொழிவுகள் தான் முதன் முதலாக ஐந்து மாநிலங் களில் முஸ்லீம் பெரும்பான்மைக்கும் குறைந்தபட்சம் சிந்து, வடமேற்கு எல்லைப்புறம், பலுச்சிஸ்தான் ஆகிய மூன்று மாநிலங்களில், மிகவுயர்ந்த பெரும்பான்மைக்கும் வழிவகுக் கின்றன. இத்தகைய பெரும் நடவடிக்கையினைத் தமது தலை வர்கள் மேற்கொண்டிருப்பதை உணராத முஸ்லீம்கள் வாழவே தகுதியற்றவர்கள். வருங்கால இந்தியாவில் ஒன்பது இந்து மாநிலங்களும் ஐந்து முஸ்லீம் மாநிலங்களும் இருக்கும். அந்த ஒன்பது மாநிலங்களில் இந்துக்கள் முஸ்லீம்களை எவ்வாறு நடத்துகிறார்களோ, அதைப்போன்றே ஐந்து மாநிலங்களில் இந்துக்களை முஸ்லீம்கள் நடத்த இயலும். இது பெரிய

*ஆதாயம் அல்லவா? இது முஸ்லீம்கள் தமது உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்காகக் கிடைக்கும் பெரிய ஆயுத மில்லையா?''*

முஸ்லீம் மாநில ஆட்சியாளர்கள் இத்திட்டத்தின் விளைவாய்த் தாங்கள் பெறும் பயன்களையும், தமது கையில் கிடைக்கும் ஆயுதத்தின் வலிமையையும் நன்கு உணர்ந்துள்ளனர்; அதைக் கடுமையாகப் பயன்படுத்தத் தயங்க மாட்டார்கள் என்பதை, அண்மைக்காலத்தில் வங்க மாநிலப் பிரதமர் பாசில்-அல்-ஹக் ஆற்றிய உரையும் உறுதி செய்கிறது.

வகுப்புப் பிரச்சினையின் பிரதான அம்சமாக அமைந்துள்ள இந்த வகுப்புவாரி மாநிலத் திட்டம், கொடூரமான சமய அடக்குமுறை எந்திரமாகப் பயன்படுத்தப்படுமென்பதில் ஒருதுளியும் ஐயத்திற்கிடமில்லை. தனி வாக்காளர் தொகுதிகள் எனும் கருவி கொண்டு மக்களைப் பிணையாளர்களாக்கும் இத்திட்டத்தை எந்த வகையிலும் நியாயப்படுத்தவியலாது. அதிக முஸ்லீம் மாநிலங்கள் உருவாக்கக் கோருவதன் உள்நோக்கம் இதுதான் எனில், இதனடிப்படையாக விளைவது தீமை நிறைந்த சமுதாய அமைப்பே என்பதில் எத்தகைய ஐயமுமுண்டோ?

தனித்த வாக்காளர் தொகுதி மூலம், பெரும்பான்மைச் சமயத்தினர்க்கு உறுதி செய்யப்பட்ட சட்டமன்றப் பெரும்பான்மையும் அதன் வாயிலாகச் சிறுபான்மை வகுப்பினரை அச்சுறுத்தி அடக்கியாள வழிவகுக்கும் வகுப்புவாரி மாநிலங்கள் உருவாதலுமே வகுப்புப் பிரச்சினை என அழைக்கப்படுவதில் உள்ளடங்கியுள்ள இருபெருங்கேடுகள் என்பதையே, நமது, மேற்கண்ட, ஆய்வுகள் உணர்த்துகின்றன.

இத்தகைய பிரச்சினை தோன்றியதற்கு முஸ்லீம்களே காரணம் என இந்துக்களும், இந்துக்களே காரணம் என முஸ்லீம்களும் ஒருவரையொருவர் குறைகூறுகின்றனர். முஸ்லீம்கள் முரட்டுப் பிடிவாதக்காரர்கள் என இந்துக்களும், இந்துக்கள் அற்பத் தன்னலவாதிகள் என முஸ்லீம்களும் குற்றம் சாட்டுகின்றனர். ஆனால் வகுப்புப்

பிரச்சினை தோன்றி நிலவுதற்கு முஸ்லீம்களின் பேராசைத்தனமும் தகுதிக்கு மீறிய அகம்பாவமும் கொண்ட கோரிக்கைகளோ, அவர் களது உரிமைகளை அற்பத்தனமாக மறுக்கும் இந்துக்களின் தன் னலமோ உண்மையான காரணமன்று என்பதை இரு சாராருமே மறந்து விடுகின்றனர். எங்கெங்கு பெரும்பான்மை வகுப்பினரும் சிறுபான்மை வகுப்பினரும் பகைமையுணர்வோடு அருகருகே சேர்ந்து வாழும் கட்டாயம் ஏற்படுகிறதோ அங்கெல்லாம் இத்தகைய வகுப்புப் பிரச்சினை தோன்றுவதைத் தவிர்க்க இயலாது. தனி வாக்காளர் தொகுதியா, பொதுவாக்காளர் தொகுதியா, ஒதுக்கீட்டு விகிதத்தின் அடிப்படை மக்கள் தொகை விகிதமா, குறிப்பிட்ட பகிர்வா என்பது போன்றவையெல்லாம், பெரும்பான்மைச் சமுதாயமும் சிறுபான்மைச் சமுதாயமும் ஒன்றையொன்று பகைமையோடு எதிர்நோக்குவதான பிரச்சினையின் விளைவுகளேயன்றி அவைகளே பிரச்சினைகள் அல்ல. பகைமை கொண்ட இரு சமுதாயங்களை (பெரும்பான்மையொன்று, சிறு பான்மையொன்று) ஒரே பொது அரசு என்னும் வலிமை வாய்ந்த எஃகுச் சட்டத்தில் பற்றிப் பிணைத்தல், இப்பிரச்சினைக்கு சிறந்த தீர்வாகி விடாது.

அவ்வாறெனில், பாகிஸ்தான் பிரிவினை இச்சிக்கலுக்கு எவ்வாறு தீர்வர்க அமைய முடியும்?

இதற்கான விடை மிகத் தெளிவானது. வடமேற்குப் பகுதி மாநிலங்களுக்கும், வங்காளத்திற்கும் தற்போது நிலவும் எல்லை களின் அடிப்படையில் நாடு பிரிக்கப்பட வேண்டுமென்ற பாகிஸ்தான் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், வகுப்புப் பிரச்சினைக்கு அடிப்படையாக நிலவும் தீமைகளுக்குத் தீர்வுகண்டுவிட முடியாது. பெரும்பான்மைச் சமயத்தவரும் சிறுபான்மைச் சமயத்தவரும் பகைமையோடு ஒருவரையொருவர் எதிர்கொள்ளும் சூழலும், அதற்கான காரணங்களும் அப்படியேதானிருக்கும். முஸ்லீம் சிறு பான்மையினர் மீது இந்துப் பெரும்பான்மையினர் ஆட்சி, இந்துச் சிறுபான்மையினர் மீது முஸ்லீம் பெரும்பான்மையினர் ஆட்சி எனும் இரண்டு விளைவுகளே இன்றைய சூழலில் நம்மை எதிர் நோக்கி அச்சுறுத்தும் பெருங்கேடுகளாகும். இப்போதைய மாநில எல்லைகளைக் கொண்டு பாகிஸ்தான் அமைக்கப்பட்டால், இதே தீமைகள் பாகிஸ்தானில் கடுமையாக நிலவுவதைத் தவிர்க்க

வியலாது. வகுப்புப் பிரச்சினையின் ஆழமான நோக்கில் தோன்றும் இத்தீங்கு தொடர்ந்து நிலவும் என்பதோடன்றி, மேலும் கொடூர மான முறையில் வடிவெடுக்கவும் வாய்ப்பு அதிகமுண்டு இப்போதைய அமைப்பிலாவது, வகுப்புப் பெரும்பான்மை கொண்ட மாநில அரசொன்று, பிணைச் சமுதாயமாய் அங்கு வாழும் சிறு பான்மையினர் மீது காரணமின்றித் தீங்கிழைக்க முற்படின், மைய அரசின் அதிகாரத்தைப் பயன்படுத்தி அதனைத் தடுக்கவியலும். இப்போதைய நிலையில் மைய அரசில் இந்துப் பெரும்பான்மையே இருக்குமாதலால், முஸ்லீம் பெரும்பான்மை மாநிலங்களில் வாழும் சிறுபான்மையோர் தங்கள் பாதுகாப்புக்கு மைய அரசு கைகொடுக் கும் என்று நம்பிக்கை கொள்ளவாவது இடமிருக்கிறது. ஆனால் உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்கள் அனைத்திலும் முழுமையான இறையாண்மை பெற்ற முஸ்லீம் நாடாகப் பாகிஸ்தான் உருவாக்கப் பட்டால் அங்கு வாழ நேரும், இந்துச் சிறுபான்மையினர் மீது கொடுமையிழைக்கப்பட்டால், அவர்கள் வெளியிலிருந்து எவ்வித மான உதவியையோ, பெரும்பான்மையோர் அரசின் வல்லாண் மையைக் கட்டுப்படுத்தும் குறுக்கீடுகளையோ எதிர்பார்க்கவிய லாது; அத்தகைய குறுக்கீடு எதற்கும் சட்டபூர்வமான அனுமதி இருக்கமுடியாது. எனவே, துருக்கியர் ஆட்சியில் ஆர்மீனியர் பட்ட துன்பங்களையும், ஜாரின் ரஷ்யாவிலும், நாஜி ஜெர்மனியிலும் யூதர் கள் உற்ற இன்னல்களையும் பாகிஸ்தானில் இந்துக்கள் அடைய நேரும். இத்தகைய திட்டம் சகிக்க இயலாததொன்றாகும். எனவே வகுப்பு வெறிகொண்ட முஸ்லீம் தேசிய அரசொன்றின் தயவின் கீழ் அப்பாவி இந்துச் சிறுபான்மை மக்களை ஒப்படைக்கும் திட்டத்திற்கு இசைவு தர இந்துக்கள் மறுப்பதில் வியப்பில்லை.

## III

இதுவரை அலசப்பட்ட கருத்துக்கள், பாகிஸ்தான் பிரிவினை ஏற்றுக்கொள்ளப்பட்டு நடைமுறைக்கு வந்தால், நிகழக்கூடிய விளைவுகளைப் பற்றிய மனந்திறந்த வெளிப்பாடேயாகும். ஆனால், விளைவுகளுக்கான மூலகாரணங்களைக் கவனமாக ஆய்தல் அவ சியம். பாகிஸ்தான் பிரிவினையினால் மட்டுமே இத்தகைய விளைவு கள் தோன்றுமா? அல்லது பாகிஸ்தானின் எல்லைகளைக் குறிப் பிட்ட வகையில் அமைப்பதாலா? பாகிஸ்தான் பிரிவினையே

சிக்கல்களுக்கு அடிப்படைக் காரணம் எனில், பிரிவினையினா லேயே தீங்குகள் நிகழும் எனில், அதைப்பற்றிய ஆலோசனைகளில் இந்துக்கள் தமது நேரத்தை வீணடிக்க வேண்டியதில்லை; பிரிவினைப் பேச்சே வேண்டாமென அவர்கள் புறக்கணித்தால் குறைகூற முடியாது. மாறாகக், குறிப்பிட்ட எல்லைகளுடன் பாகிஸ்தான் அமைவதுதான் தீங்குகளுக்கான காரணம் என்றால், பாகிஸ்தான் பிரிவினைப்பிரச்சினை என்பது பாகிஸ்தானுக்கான சரியான எல்லை களை வகுப்பதில் அடங்குமெனலாம்.

இப்பிரச்சினையைப் பற்றித் தீரச் சிந்திக்கும்போது பாகிஸ்தான் பிரிவினையே தீங்குகளுக்குக் காரணமாகாது என்பதும், தீங்குகள் ஏதும் வருமெனில், அது பாகிஸ்தானுக்கு வரையறுக்கப் படும் எல்லைகளால்தான் வரக்கூடும் என்பதும் தெளிவாகும். மக்கள் தொகைவிரவலை ஊன்றி ஆய்பவர்களுக்கு இது எளிதில் புலனாகும். கிழக்கு, மேற்கு பாகிஸ்தான்களுக்குத் தற்போது கோரப் படும் எல்லைகளுக்குள் ஒரே வகுப்பைச் சார்ந்த மக்கள் வாழ வில்லை, மாறாக இருவகுப்பு மக்களும் பெரும் எண்ணிக்கைகளில் வாழ்கின்றனர் என்பதே தீமைகள் விளைவதற்குக் காரணமாய் விளங்கும். பிரிவினைக்குப் பின்னரும், இப்பகுதிகளில் முஸ்லீம் பெரும்பான்மையும் இந்துச் சிறுபான்மையும் விரவலாகக் கலந்த மக்கட்தொகைப் பரவலே காணப்படும். இத்தகைய கலப்பு மக்கட் பரவல் சூழலில், முன்னர் சுட்டிய தீயவிளைவுகளைத் தவிர்க்க வியலாது. ஒரே இனத்தைச் சார்ந்த மக்கள் வாழ்பகுதிகளை மட்டும் கொண்டு பாகிஸ்தான் அமைக்கப்பட்டால், இத்தீங்குகளை அறவே தவிர்க்கமுடியும். அப்படி அமையும் பாகிஸ்தானில் பெரும்பான்மை யினர் என்றோ, அவர்களிடமிருந்து காக்கப்படவேண்டிய சிறு பான்மையினர் என்றோ எவரும் இராராதலின், தனிவாக்காளர் தொகுதி கள் என்ற கோரிக்கைக்கே தேவையிராது. அவ்வாறே, சிறுபான்மை வகுப்பினரை பிணைய வகுப்பினராய்ப் பெரும்பான்மை வகுப் பினர் நடத்தக் கூடுமென்ற பேச்சுக்கும் இடமிராது.

எனவே, இங்குள்ள பிரச்சினை சரியான எல்லை வகுத்தலே என்று முடிவாகிறது. அதன் தீர்வையொட்டிய வினாவை இவ்வாறு எழுப்பலாம்: பெரும்பான்மையோர், சிறுபான்மையோர் என இருசாராரும் கொண்ட கலப்பு மக்கள் சமுதாயம் அமையாமல், அத்தகைய சமுதாயம் அமைவதால் வரும் தீங்குகளைத் தவிர்க்கும்

வகையில், முஸ்லீம் மக்கள் மட்டும் வாழும் பகுதிகளைக் கொண்டு, பாகிஸ்தானுக்கு எல்லை வகுத்தல் இயலுமா? பல இடங்களில் எல்லைகளை மாற்றியும், சில இடங்களில் மக்களை இடம் பெயரச்செய்தும், ஒரே முஸ்லீம் இனத்தைச் சார்ந்த மக்களடங்கிய தாகப் பாகிஸ்தானுக்கு எல்லை வகுத்தல் இயலும் என்பதே சரியான விடையாகும்.

ஈண்டு, பிற்சேர்க்கைகள் V, X, XI, ஆகியவற்றில் தரப் பட்டுள்ள, பாதிக்கப்படும் பகுதிகளின் மக்கட்தொகை விரவல் களையும், முஸ்லீம் மக்கள் பரவலை மட்டுமே கொண்டதாகப் பாகிஸ்தானை அமைப்பதற்கு எல்லைகள் எவ்வாறு வகுக்கப்பட வேண்டும் என்பதைக் காட்டும் நாட்டுப்படங்களையும் ஊன்றி ஆயுமாறு வாசகர்களை, வேண்டுகிறேன். பஞ்சாபை எடுத்துக் காட்டாகக் கொண்டு இரண்டு கூறுகளை நோக்கலாம்:

i. சில மாவட்டங்களில் முஸ்லீம்கள் மிகப் பெரும் பான்மையினராகவும், சில மாவட்டங்களில் இந்துக்கள் மிகப் பெரும்பான்மையினராகவும், வெகுசில(ஓரிரு) மாவட்டங்களில் இரு சமயத்தவரும் ஏறத்தாழ சமஎண்ணிக்கையிலும் பரவியிருப் பதைக் காணலாம்.

ii. முஸ்லீம்கள் மிகப்பெரும்பான்மையினராய் வாழும் மாவட்டங்களும், இந்துக்கள் மிகப்பெரும்பான்மையினராய் வாழும் மாவட்டங்களும் ஒன்றுக்கொன்று குறுக்கிடைப் பகுதிகளாக அமை யாமல், அவையிரண்டும் தனித்தனியே பிரிக்கக்கூடிய தொகுதிகளாக அமைந்திருப்பதையும் நோக்கலாம்.

கிழக்கு பாகிஸ்தானின் எல்லையமைப்பை முடிவு செய் வதற்கு அஸ்ஸாம், வங்காள மாநிலங்களின் மக்கட்தொகைப் பரவல் ஆய்வுசெய்யப்படவேண்டும். மக்கள்தொகை விவரங்கள் சுட்டும் உண்மைகளாவன:

i. வங்காளத்தின் சில மாவட்டங்களில் முஸ்லீம்கள் மிகப் பெரும்பான்மையினராகவும், ஏனையவற்றில் இந்துக்கள் மிகப் பெரும்பான்மையினராகவும் வாழ்கின்றனர்.

ii. அஸ்ஸாமிலும் இவ்வாறே இந்துக்கள் மிகப் பெரும் பான்மையினராய் வாழும் மாவட்டங்கள் என்றும், முஸ்லீம்கள் மிகப்பெரும்பான்மையினராய் வாழும் மாவட்டங்கள் என்றும் வகைப்படுத்தமுடியும்.

iii. இவ்விரு மாநிலங்களிலும் இந்துப் பெரும்பான்மை மாவட்டங்களும், முஸ்லீம் பெரும்பான்மை மாவட்டங்களும் ஒன்றுக் கொன்று குறுக்கிடைப்பகுதிகளாக அமையவில்லை; தனிப்பகுதி களாகத் தொகுக்கக்கூடிய வகையில்தான் அமைந்துள்ளன.

iv. அஸ்ஸாம், வங்க மாநிலங்களில் முஸ்லீம்கள் மிகப் பெரும்பான்மையாய் வாழும் மாவட்டங்கள் தொடர்கோவையாக அமைந்துள்ளன.

இவ்வுண்மைகளின் அடிப்படையில், பஞ்சாப், அஸ்ஸாம், வங்காள மாநிலங்களில், இந்துக்கள் மிகப்பெரும்பான்மையினராய் வாழும் மாவட்டங்களை விட்டுவிட்டு, முஸ்லீம் மக்களின் பரவலை சீராகக்கொண்ட தனிநாடு ஒன்றினை நிறுவ இயலுமென்று உறுதி யாகக் கூறலாம். பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ள நாட்டுப்படங்களும், இத்தகைய பிரிவினை சாத்தியமே என்பதற்குச் சான்று பகர்கின்றன.

வடமேற்கு எல்லைப்புறம், சிந்து மாநிலங்களில் நிலைமை சற்றுக் கடினமாய் விளங்குகிறது. இம்மாநிலங்களில் மக்கள் தொகைப் பரவல் விவரங்கள் பிற்சேர்க்கைகள் VI, VII, VIII, IX களில் தரப்பட்டுள்ளன; இவற்றிலிருந்து இம்மாநிலங்களின் நிலவரங் களைப் புரிந்து கொள்ளலாம். குறிப்பாக, இம்மாநிலங்களில் இந்துப் பெரும்பான்மை மாவட்டங்கள் என எவையும் கிடையாது; ஏறத்தாழ ஒவ்வொரு மாவட்டத்திலும் இந்துக்கள் மிகச் சிறு எண்ணிக்கையில் சிதறிக் கிடக்கின்றனர். பிற்சேர்க்கைகள் மற்றொரு உண்மையையும் தெளிவாகச் சுட்டுகின்றன. அதாவது, வடமேற்கு எல்லைப்புறம், சிந்து மாநிலங்களில் இந்துக்கள் பெரும்பாலும் நகர்ப்புறப் பகுதிகளிலேயே காணப்படுகின்றனர். சிந்து மாநிலத்தின் நகர்ப்புறங்களில் இந்துக்கள் பெரும்பான்மையினராகவும், கிராமப்புறங்களில் முஸ்லீம்கள் மிகப் பெரும்பான்மையினராகவும் காணப்படுகின்றனர். வடமேற்கு

எல்லை மாநிலத்திலோ நகரங்கள் கிராமங்கள் யாவற்றிலும் முஸ்லீம்களே மிகப் பெரும்பான்மையோராய் வாழ்கின்றனர்.

ஆகவே, பஞ்சாப், வங்க மாநில நிலவரங்களிலிருந்து, வட மேற்கு எல்லை, சிந்து மாநில நிலவரங்கள் முற்றிலும் வேறுபட்டுள்ளதைக் காண்கிறோம். பஞ்சாப், வங்க மாநிலங்களில் இயற்கையாகவே முஸ்லீம், இந்துப் பெரும்பான்மைப் பகுதிகள் பிரிந்தமைந்திருப்பதால், எல்லைகளைச் சரியாகத் திருத்தியமைப்பதன் மூலம் ஒரே சமய மக்கள் சீராக வாழும் பகுதிகளைப் பிரித்து, ஒரே வகுப்பினர் கொண்ட நாடாக உருவாக்குதல் இயலும்; மிகச்சிறு எண்ணிக்கையில் மட்டுமே மக்கள் குடிபெயர நேரும். ஆனால், வடமேற்கு எல்லைப்புற சிந்து மாநிலங்களில், இந்துச் சிறுபான்மையோர் மாநிலம் முழுவதும் பரவலாக விரவிக் கிடப்பதால் எல்லைகளைத் திருத்தியமைப்பதால் மட்டுமே ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த மக்கள் வாழும் அரசை உருவாக்க இயலாது. மக்களை குடிபெயரச் செய்தல் ஒன்றே இங்கு வழியாகத் தெரிகிறது.

மக்களை இடம் பெயர்த்துக் குடியமர்த்தும் திட்டத்தைப் பலர் பழித்து இகழ்வர். அப்படி இகழ்வோர், பெரும்பான்மை வகுப்பினரின் பகைப்புலத்திற்கிடையே சிறுபான்மையோரை வாழவிடுவதால் அவர்களுக்கு நிகழும் இன்னல்களையும், கடந்த காலத்தில் அத்தகையோரின் துயர் களைய எடுத்துக் கொள்ளப் பட்ட முயற்சிகளின் தோல்விகளையும் பற்றி அறியாதவர்கள் என்றே கூறலாம். ஐரோப்பாவில் உலகப் பெரும் போருக்குப் பின்னர் அமைந்த நாடுகளிலும், பழைய நாடுகளிலும் கூடச் சிறுபான்மையோருக்கான பாதுகாப்பு, அரசியலமைப்புச் சட்டத்தில் உறுதி செய்யப்படுவதன் மூலமாகவே எய்தப்படுமென்ற எதிர்பார்ப்புகள் பொய்த்துப் போனதையே வரலாறு உணர்த்துகிறது. எனவே, சிறுபான்மையோர் உரிமைகளைப் பெரும்பான்மையோர் மிதித்துச் சிறுமைப்படுத்துவதைத் தவிர்க்க நீண்ட அடிப்படை உரிமைப் பட்டியல்கள் அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டு வருவதையும் அறிவோம். வரலாற்று அனுபவம் என்ன கூறுகிறது? சட்டப் பாதுகாப்புகளால் சிக்கல் தீரவில்லை என்பதையும், சிறுபான்மை இனத்தவர் மீது நடத்தப்பட்ட கொடும் போர்களாலும் சிக்கலைத் தீர்க்க இயலவில்லை என்பதையுமே வரலாறு உணர்த்துகிறது. எனவே, அயலவரான சிறுபான்மையினரை நாடுகளுக்

கிடையே குடிபெயரச் செய்து மாற்றிக் கொள்வதன் வாயிலாக ஒரே இனத்தவர் நாடு எனும் நிலையை அடைவதையே இறுதி யான தீர்வாக வரலாறு காட்டுகிறது. துருக்கி, கிரேக்கம், பல்கேரியா ஆகிய நாடுகளுக்கிடையே இத்தகைய சிறுபான்மையோர் பரிமாற்றம் தான் இறுதித் தீர்வாக அமைந்தது. குடிபெயர்த்தல் திட்டத்தைப் பழித்திகழ்வோர் துருக்கி, கிரேக்கம், பல்கேரியா ஆகிய நாடுகளின் சிறுபான்மையினரது சிக்கல் வரலாற்றினை படித்துப் பார்க்க வேண் டும். படித்தால் சிறுபான்மையோர் சிக்கல்களுக்கான நிலைத்த தீர்வு காண்பதற்கு ஒரே வழி சிறுபான்மை மக்கள் குடிபெயர்ப்புப் பரிமாற்றம்தான் என்ற முடிவுக்கு இந்நாடுகள் வந்ததை அறிந்து கொள்வர். இந்த நாடுகளில் நடைபெற்றது, ஏதோ ஒரு சில மக்களைக் குடிபெயர்க்கும் எளிய செயலன்று. ஏறத்தாழ இரண்டு கோடி மக்கள் குடிபெயர்க்கப்பட்ட மாபெரும் திட்டப் பணியாகும். நிலையான வகுப்பு அமைதி என்னும் குறிக்கோளை எய்துதற்கு இப்பணியின் தேவையை உணர்ந்தமையால், இதிலுள்ள இடர்ப் பாடுகளைப் பொருட்படுத்தாமல், திட்டத்தை நிறைவேற்றும் பணி யில் மூன்று நாடுகளுமே ஒன்றுபட்டுச் செயலாற்றின.

சிறுபான்மை மக்களைக் குடிபெயர்ப்பு செய்வதுதான் நீடித்த வகுப்பு அமைதிக்கு ஒரே வழி என்பதில் ஐயம் ஏதும் இல்லை. இதை உணர்ந்துகொண்டால், இந்துக்களும் முஸ்லீம்களும் மெய் யான பாதுகாப்புக்கு உறுதி தராத, பாதுகாப்பு உடன்பாட்டுக் கூறு களைப் பற்றி வீணே வாதிடுவானேன்? வளங்குறைந்த நாடுகளான துருக்கி, கிரேக்கம், பல்கேரியா போன்ற நாடுகளால் நிறைவேற்ற முடிந்த திட்டத்தை இந்தியாவினால் செயலாக்க முடியாது என்று தயங்குவதற்குத் தக்க காரணம் ஏதுமில்லை. பார்க்கப்போனால் இங்கு குடிபெயர்ப்பு செய்யப்பட வேண்டிய மக்களின் எண்ணிக்கை மிகக்குறைவே. நீக்கப்பட வேண்டிய, எளிதில் நீக்கப்படக்கூடிய தடைகள் ஒரு சிலவற்றைக் காரணம் காட்டி, நிலையான வகுப்பு அமைதிக்கு உறுதியாக வழிவகுக்கும் இத்திட்டத்தைப் புறக்கணித் தல், அறிவீனத்தின் உச்சநிலை என்றே கூறலாம்.

இதுவரை நமது கருத்தாய்வுகளில் எடுத்துக் கொள்ளப் படாத மற்றொரு பிரச்சினையும் உண்டு. எப்படியும் ஒரு கட்டத்தில் கருதப்பட வேண்டியதாதலின், இப்போது அதனை எடுத்துக்கொள்ள விரும்புகிறேன். பிரிவினைக்குப் பின்னர் இந்தியாவில் வாழும் முஸ்லீம் சிறுபான்மையினரைப் பாகிஸ்தான் பிரிவினை எவ்வாறு பாதிக்கும் என்ற வினா விரைவில் எழுப்பப்படுவது உறுதி.

பாகிஸ்தான் பிரிவினைத் திட்டம் அப்பகுதிகளைச் சேர்ந்த முஸ்லீம் பெரும்பான்மையினரின் நலன்களிலேயே இதுவரை கருத்துச் செலுத்தி வந்துள்ளதேயன்றி, எஞ்சிய இந்தியாவில் வாழும் பாதுகாப்பு தேவைப்படும் முஸ்லீம் சிறுபான்மையினரின் நலன்கள் குறித்து இதுகாறும் அக்கறை காட்டப்படாததால், இவ்வினா விரைவில் எழுமென்பது இயல்பே. அவ்வாறாயின் இவ்வினாவை யார் எழுப்புவர்? இந்துக்கள் எழுப்பப் போவதில்லை; பாகிஸ்தானிய முஸ்லீம்களோ, இந்துஸ்தான் முஸ்லீம்களோதான் இதனை எழுப்ப வேண்டும். பாகிஸ்தான் ஆதரவாளரான, இரஹமத் அலியிடம் எழுப்பப்பட்ட வினாவும் அவரளித்த பதிலுமாவது:

''இந்துஸ்தானப் பகுதியில் வாழும் நாலரைக் கோடி முஸ்லீம்களின் நிலைமையை பாகிஸ்தான் பிரிவினை எவ்வாறு பாதிக்கும்?''

''உண்மையைக் கூறப்போனால் அவர்களைப் பற்றிய சிந்தனையே, கிடுக்கிப் பிடிபோன்று என்னை நெருக்குகிறது. அவர்களும் நமது குருதி, சதை மட்டுமன்றி உயிரோடு உயிராகவும் ஒன்றியவர்களே. நாம் அவர்களை மறந்து விடுவதென்பதோ, நம்மை அவர்கள் மறந்து விடுவதென்பதோ ஒருக்காலும் நடவாது. அவர்களது இன்றைய நிலையும் வருங்காலப் பாதுகாப்பும் இன்று மட்டுமன்றி என்றைக்கும் எமக்கு முக்கியமானவையே. இப்போதைய நிலையில் பாகிஸ்தான் பிரிவினையால், அவர்களது நலன்கள் பாதிக்கப்பட மாட்டா. அவர்களது மக்கள் தொகையின் அடிப்படையில் (நான்கு இந்துக்களுக்கு ஒரு முஸ்லீம்), இப்போதிருப்பதைப் போன்றே சட்டமன்றங்களிலும் ஆட்சிப் பொறுப்புகளிலும் அவர்களது பிரதிநிதிகள் இடம் பெறுவர். வருங்காலத்தில் அவர்களது நலன்களுக்கு ஒரேயொரு வகையில் தான் நாம் உறுதிகூற முடியும்; அதாவது, பாகிஸ்தானில் முஸ்லீம் அல்லாத சிறுபான்மையினரின் உரிமைகளுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க மனதார உறுதியளித்துக் கடைப்பிடிப்பதன் மூலம் இந்துஸ்தான முஸ்லீம்களுக்கும் அதேபோன்ற உரிமைகளைப் பெற்றுத் தருவது தான்.''

''ஆனால், எங்கள் நலன்களை எது உறுதியாகக் காக்குமெனில், நாங்கள் பாகிஸ்தான் நாட்டை உருவாக்க விரும்புவது

எங்கள் மக்களின் நல்வாழ்வை நிலைநாட்டுதற்காகவே என்பதை, இந்துக்களும் அறிந்துள்ளனர் என்பதே. இதுவே எங்களது தேசிய அரண் என்றால், அவர்களுக்கும் இதுவே அறநெறி நங்கூரம் எனலாம். இந்த நங்கூரம் உறுதியாகப் பற்றியிருக்கும்வரை, எல்லா நலன்களையும் நாம் எய்துவோம்; அது தளர நேர்ந்தால் அனைத்தையும் இழக்க நேரிடும்''

இந்துஸ்தான முஸ்லீம்களும் இதைப் போன்றே தெளிவான தொரு பதிலைத் தந்துள்ளனர். அவர்கள் கூறுவது, ''முஸ்லீம்கள் பாகிஸ்தானிலும், இந்தியாவிலுமாகப் பிரிந்து வாழ நேர்வதால் எங்கள் வலிமை குன்றிவிடாது. முஸ்லீம்கள் அனைவரும் இந்தியக் குடிமக்களாக வாழ்வதைவிட, இந்தியாவின் கிழக்கிலும், மேற்கிலும் தனித்த இஸ்லாமிய நாடுகள் நிறுவப்படுவதால் எங்களுக்குக் கூடுதலான பாதுகாப்பே கிடைக்கும்''. அவர்களது கூற்றைத் தவறென்று எவரால் கூறமுடியும்? செக்கோசுலேவேகியா நாட்டின் சூடெட்டன் பகுதிவாழ் மக்கள் தம் நலன்களைத் தங்கள் வலிமையால் காத்துக் கொள்வதைவிட, செக்கோசுலேவேகியாவின் அண்டை நாடாக வலிமை மிக்க ஜெர்மன் நாடு இருப்பதன்றோ அவர்களது நலன்களின் காப்பை உறுதி செய்து வந்துள்ளது?[1]

இது எவ்வாறிருப்பினும், இப்பிரச்சினை குறித்து இந்துக்கள் அக்கறை காட்டத் தேவையில்லை. இந்துக்கள் அக்கறை செலுத்த வேண்டிய பிரச்சினை இதுதான்: பாகிஸ்தான் உருவாக்கப்படுவதன் மூலம், இந்துஸ்தானத்தில் வகுப்புப் பிரச்சினை எந்த அளவுக்குத் தணிவடையும்? நாம் கருத்துச் செலுத்த வேண்டிய மெய்யான பிரச்சினை இதுவே. பாகிஸ்தான் உருவாக்கப்படுவதால் இந்துஸ்தானத்தில், வகுப்புப் பிரச்சினை அறவே மறைந்து விடாது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எல்லைகளைத் திருத்தியமைப்பதன் மூலம் பாகிஸ்தானை ஒரே இனத்தைச் சேர்ந்த மக்களின் நாடாக உருவாக்குதல் இயலுமென்றாலும், இந்துஸ்தான் பல்வேறு வகுப்பினர் கொண்ட நாடாகத்தான் விளங்க முடியும். இந்துஸ்தானம் முழுவதும் முஸ்லீம்கள் பரவிக்கிடக்கின்றனர்; அவர்களில் பெரும் பாலோர் நகரங்களிலேயே திரண்டு வாழ்ந்து வருகின்றனர். எவ்வளவு

1. முஸ்லீம் லீக் தலைவர்கள், செக்கோசுலேவேகியாவுக்கெதிரான, இட்லரின் மிரட்டல் உத்திகளால் சூடெட்டன் ஜெர்மானியரின் நலன் காக்கும் முயற்சிகளைப் பற்றி நன்கு கற்றறிந்துள்ளனரெனலாம். முஸ்லீம் லீகின் 1937 ஆம் ஆண்டு கராச்சி மாநாட்டில் அவர்களது மிரட்டல் உரைகளை நோக்குக.

திறமையாக முயன்று பார்த்தாலும் எல்லைக்கோடுகளை எப்படி மாற்றி வரைந்து பார்த்தாலும் இந்துஸ்தானத்தை ஒரே இனத்தவர் வாழும் நாடாக மாற்றிவிட முடியாது. இந்துஸ்தானத்தை ஒரே இன நாடாக்குதற்குக் குடிபெயர்த்தல் ஒன்றே வழியாக இருக்க முடியும். இதனைச் செய்து முடிக்கும்வரை, பாகிஸ்தான் உருவாக்கப் பட்டாலும் கூட, இந்துஸ்தானத்தில் பெரும்பான்மையோர் - சிறு பான்மையோர் பூசல்களையும், அதனால் இந்திய அரசியலில் விளை யும் குழப்பங்களையும் தவிர்க்கவியலாது என்பதை நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

பாகிஸ்தான் பிரிவினையால் இந்துஸ்தானத்தில் வகுப்பு நல்லிணக்கத்தை முழுமையாக நிறுவ இயலாதென்றே ஏற்றுக் கொண்டாலும், அதை மட்டும் காரணமாய்க் காட்டி இந்துக்கள் பாகிஸ்தான் பிரிவினையை மறுக்க இயலுமா? அப்படிப்பட்ட முடிவு எதையும் இந்துக்கள் மேற்கொள்வதற்கு முன்னர், பாகிஸ்தான் பிரிவினையால் தோன்றக்கூடிய, பின்வரும் விளைவுகளைப் பற்றி யும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

முதலாவதாகப் பாகிஸ்தான் பிரிவினையால், வகுப்புப் பிரச்சினை எத்தகைய பரிமாணத்தை அடையுமென்பதை நோக்க வேண்டும். பாகிஸ்தான், இந்துஸ்தான் பகுதிகளில் இருக்கக்கூடிய முஸ்லீம் மக்கள் தொகை பற்றிய விவரங்களின் அடிப்படையில் இதைப் பற்றிய நல்ல மதிப்பீட்டினைச் செய்ய இயலும்.

| பாகிஸ்தானில் முஸ்லீம் மக்கள் தொகை | | இந்துஸ்தானில் முஸ்லீம் மக்கள் தொகை | |
|---|---|---|---|
| 1. பஞ்சாப் | 13,332,460 | 1. (பர்மா, ஏடன் தவிர்த்த) பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்த முஸ்லீம் மக்கள் தொகை | 66,442,766 |
| 2. வடமேற்கு எல்லை மாநிலம் | 2,227,303 | | |
| 3. சிந்து | 2,830,800 | | |
| 4. பலுச்சிஸ்தான் | 405,309 | | |
| 5. கிழக்கு வங்க முஸ்லீம் மாநிலங்கள் | | 2. பாகிஸ்தான் பகுதிகளில் மொத்த முஸ்லீம் மக்கள் தொகை | 47,897,301 |
| i) கிழக்கு வங்கம் | 27,497,624 | | |
| ii) சில்ஹெட் | 1,603,805 | | |
| மொத்தம் | 47,897,301 | 3. பிரிட்டிஷ் இந்துஸ்தானத்தில் எஞ்சும் முஸ்லீம் மக்கள் தொகை | 18,545,465 |

இந்த விவரங்கள் காட்டுவதென்ன? பிரிட்டிஷ் இந்திய முஸ்லீம்களில் 18,545,465 பேர் மட்டுமே இந்துஸ்தானில் எஞ்சியிருக்க, 47,897,301 பேர் பாகிஸ்தானின் குடிமக்களாகி விடுவார்கள் என்பதையே இவை உணர்த்துகின்றன. வகுப்புப் பிரச்சினை என்ற நோக்கில் இவ்விவரங்களை ஆய்ந்தால் பாகிஸ்தான் பிரிக்கப்படாத முழுமையான இந்தியாவில் 6 1/2 கோடி முஸ்லீம் மக்களின் பிரச்சினைக்குத் தீர்வுகாணுவதற்குப் பதிலாக, பிரிவினைக்குப் பிந்திய இந்தியாவில் இரண்டு கோடி முஸ்லீம்களின் பிரச்சினைக்கு மட்டிலும் தீர்வு கண்டால் போதுமென்பதையும் இவ்விவரங்கள் உணர்த்துகின்றன. வகுப்பு நல்லிணக்கம் விரும்பும் இந்துக்களுக்கு இது வரவேற்கத்தக்க செய்தியன்றோ. என்னுடைய நோக்கில், பாகிஸ்தான் பிரிவினை, இந்துஸ்தானத்தில் வகுப்புப் பிரச்சினையை அறவே அகற்றிவிடாதென்றாலும், கணிசமாகக் குறைத்துவிடும் என்பது உறுதி; அதனால் அமைதியான முறையில் தீர்வு காண்பதற்கேற்ற எளிய பிரச்சினையாக அது மட்டுப்படுமென்று நம்புகிறேன்.

இரண்டாவதாக, மத்தியச் சட்டமன்றத்தில் உறுப்பினர்களின் வகுப்புவாரிவிகிதம் பாகிஸ்தான் பிரிவினையால் எவ்வாறு மாறும் என்பதையும் இந்துக்கள் எண்ணிப்பார்க்க வேண்டும். 1935 ஆம் ஆண்டு இந்திய அரசின் சட்டத்தின்படி, பாகிஸ்தான் உருவாக்கப்பட்டால், மையச் சட்டமன்றத்தில் உறுப்பினர்களின் வகுப்புவாரி எண்ணிக்கை எவ்வாறு அமையுமென்பது கீழே பட்டியலில் காட்டப்பட்டுள்ளது.

| அவையின் பெயர் | உறுப்பினர்களின் பகிர்வு (எண்ணிக்கை) | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | முழுமையான இந்தியாவில் | | | பாகிஸ்தான் பிரிந்த பின்னர் | | |
| | மொத்த இடங்கள் | முஸ்லீம் அல்லாத (இந்து) பகுதிகளிலிருந்து | முஸ்லீம் பகுதிகளில் இருந்து | மொத்த இடங்கள் | முஸ்லீம் அல்லாத (இந்து) பகுதிகளிலிருந்து | முஸ்லீம் பகுதிகளில் இருந்து |
| மாநிலங்களவை | 150 | 75 | 49 | 126 | 75 | 25 |
| கூட்டரசுப் பேரவை | 250 | 105 | 82 | 211 | 105 | 43 |

வகுப்புவாரி உறுப்பினர் பகிர்வின் மாற்ற அளவீடுகளை மேலும் தெளிவாக்குவதற்காக மேலே அட்டவணையிடப்பட்டுள்ள விவரங்கள் சதவீத அடிப்படையில் மீண்டும் கீழே பட்டியலிடப் பட்டுள்ளன.

| அவையின் பெயர் | உறுப்பினர் (வகுப்புவாரி) விகிதம் %இல் | | | |
|---|---|---|---|---|
| | முழுமையான இந்தியாவில் | | பாகிஸ்தான் பிரிந்த பின்னர் | |
| | இந்து இடங்களுடன் ஒப்பிடும்போது முஸ்லீம் இடங்களின் சதவீதம் | மொத்த இடங்களுடன் ஒப்பிடும் போது முஸ்லீம் இடங்களின் சதவீதம் | இந்து இடங்களுடன் ஒப்பிடுகையில் முஸ்லீம் சதவீதம் | மொத்த இடங்களுடன் ஒப் பிடும்போது முஸ்லீம் இடங்களின் சதவீதம் |
| மாநிலங்கள் அவை | 33 | 66 | 25 | 33 1/3 |
| கூட்டரசுப் பேரவை | 33 | 80 | 21 | 40 |

பாகிஸ்தான் உருவாக்கப்பட்டால் எத்துணை பெரிய மாற்றங்கள் நிகழுமென்பதைப் பட்டியல் உணர்த்துகிறது. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசு சட்டத்தின்படி, கூட்டரசுப் பேரவை, மாநிலங்கள் அவை இரண்டிலும் 33% இடங்கள் முஸ்லீம்களுக்கு ஒதுக்கப்பட வேண்டும். ஆனால் இந்து உறுப்பினர்களின் எண்ணிக்கையோடு ஒப்பிடும்போது 80% இடங்களைப் பேரவையிலும், 66% இடங்களை மாநிலங்கள் அவையிலும் பெறும் முஸ்லீம்கள் இந்துக்களோடு ஏறத்தாழ சம வலிமையுடன் விளங்குவார்கள். ஆனால் பாகிஸ்தான் பிரிக்கப்பட்ட பின்னர், மாநிலங்கள் அவையில் மொத்த இடங்களில் முஸ்லீம் உறுப்பினர்களுக்கான இடங்கள் விகிதம் 33 1/3% இலிருந்து 25% ஆகவும் கூட்டரசுப் பேரவையில் 21 சதவீதமாகவும் குறையும்; இந்துக்களின் இடங்களுடன் ஒப்பிடும்போது அவர்களின் விகிதம் மாநிலங்கள் அவையில் 66% இலிருந்து 33 1/3% ஆகவும் கூட்டரசுப் பேரவையில் இந்த விகிதம் 80 சதவீதத்திலிருந்து 40 சதவீதமாகவும் குறைந்துவிடும். இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்பட்ட பின்னரும் தற்போதைய ஒதுக்கீட்டு அடிப்படையிலேயே முஸ்லீம் உறுப்பினர் எண்ணிக்கை முடிவு செய்யப்படுமென்ற

ஊகத்திலேயே மேற்கண்ட விவரங்கள் தரப்பட்டன. ஆனால் பிரி வினைக்குப் பிந்திய இந்தியாவில் ஒதுக்கீடுகள் மறுக்கப்பட்டாலோ, குறைக்கப்பட்டாலோ, வகுப்புவாரி உறுப்பினர் விகிதங்கள் இந்துக் களுக்கு மேலும் சாதகமாகவே மாற்றமுறும். அவ்வாறு மாறாமல் இப்போதைய அடிப்படையிலேயே ஒதுக்கீடுகள் தொடர்ந்தாலும் கூட இந்துக்கள் பெறும் விகிதாசார ஆதாயம் கணிசமான அளவி லேயே இருக்கும். எனவே, முழுமையான இந்திய அரசில் இந்துக் கள் பங்குபெறும் விகித்தைவிடப் பாகிஸ்தான் பிரிந்த பின்னர் பெறும் பங்கு விகிதம் குறிப்பிடத்தக்க அளவில் மேம்பட்டிருக்கு மென்று உறுதியாகக் கருதுகிறேன்.

இதுவரை கூறப்பட்டவை பாகிஸ்தான் பிரிவினையால் கிடைக்கப்பெறும் பொருள்வளஞ்சார் நன்மைகள். இவையன்றி உளவியல்சார் நன்மையொன்றும் நமக்குக்கிட்டும். இந்தியாவின் வடக்கிலும் கிழக்கிலும் வலிமையுடன் விளங்கும் முஸ்லீம்களின் துணைவலிமை உண்டு என்னும் தெம்புடன்தான் தற்போது தென் னிந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும் வாழும் மிகச் சிறுபான்மை யினரான முஸ்லீம்கள் செயல்படுகின்றனர். எனவே, பாகிஸ்தானைத் தனிநாடாகப் பிரித்து ஒதுக்குவதன் மூலம், வட இந்தியாவிலும், கிழக்கு இந்தியாவிலும் வகுப்பு நல்லமைதியை நிறுவுவோமாயின் தென்னிந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் தானாகவே வகுப்பு நல்லமைதி உருவாகும். இந்தியாவின் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் பெரும்பான்மையோர் சிறுபான்மையோர் என்று பகுக்கத் தேவை யின்றிச் சமுதாய அமைப்பு நிலவுமாதலின் வகுப்பு நல்லிணக்கத்தை ஆங்கு நிறுவுதல் எளிதாகவே இயலுமென்பதில் ஐயமில்லை. வடக்கு, கிழக்கு இந்திய முஸ்லீம்களுக்கும், இந்துஸ்தான முஸ்லீம் களுக்குமிடையிலான தொடர்பு அறுபடுதல் இந்துஸ்தான இந்துக்கள் பெறும் முக்கிய நன்மைகளில் ஒன்றாகும்.

பாகிஸ்தான் பிரிவினை தோற்றுவிக்கக்கூடிய விளைவு களைப் பற்றி முழுமையாகவே ஆய்ந்தோம். இவையெல்லாவற்றை யும் தொகுத்து நோக்கும்போது, பாகிஸ்தான் பிரிவினையால் வகுப்புப் பிரச்சினை முழுமையாகத் தீர்ந்துவிடாது என்பதையும் உணர்கிறோம். ஆனால், மிகப் பெருத்த எண்ணிக்கையிலான முஸ்லீம் களுடன் தொடர்ந்து பூசலிட நேரும் நிலையிலிருந்து விடுபட்டு, மிகச் சிறுபான்மையோராய் எஞ்சும் முஸ்லீம்களுடன் எளிதில் வகுப்பு நல்லமைதியை நிறுவும் வாய்ப்பை பாகிஸ்தான் பிரிவினை இந்துக் களுக்கு நல்குகிறது. முழுமையான தீர்வு தரவில்லையென்பதற்

காகவே, இந்துக்கள் அதை மறுக்க வேண்டுமா என்று எண்ணிப் பார்க்க வேண்டும். பெரும் கேடு ஒன்றை எதிர்கொள்வதைவிடப் பகுதி நன்மையேனும் தரும் தீர்வு மேலானதன்றோ?

## IV

வகுப்பு நல்லிணக்கத்தின் அடிப்படையில் பாகிஸ்தான் பிரிவினை பற்றிய அலசல்களை கடைசியாக ஒரு பிரச்சினை குறித்த அலசலுடன் முடிவுக்குக் கொண்டு வருவோம். பாகிஸ்தான் பிரிவினைத் திட்டத்தைக் குறைபாடுகளேதுமின்றி நிறைவேற்றுதற்கு உதவியாக, பஞ்சாப், வங்காள மாநிலங்களின் எல்லைகள் திருத்தியமைக்கப் படுவதற்கு அங்கு வாழும் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒப்புக் கொள்வார்களா?

முஸ்லீம்களைப் பொறுத்தமட்டில், எல்லைகளைத் திருத்தியமைப்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளக் கடமைப்பட்டவர்கள். ஒப்புக்கொள்ள மறுப்பார்களென்றால், தங்கள் கோரிக்கையின் தன்மையையே அவர்கள் புரிந்து கொள்ளவில்லையென்பதே காரண மாயிருக்க முடியும். பாகிஸ்தான் பிரிவினையை ஆதரிக்கும் முஸ்லீம் பொதுமக்களில் பலர் இதைப் பற்றித் தெளிவின்றி மேலோட்ட மாகப் பேசிக் கொண்டிருப்பதை நோக்க, இது கூட சாத்தியம் தான் எனக் கருதலாம். முஸ்லீம்களில் சிலர் பாகிஸ்தானை, 'முஸ்லீம் களின் தேசிய அரசு' என்றும், வேறுசிலர், 'முஸ்லீம்களின் தேசியத் தாயகம்' என்றும் குறிப்பிட்டு பேசுதலை நோக்கலாம். இவை யிரண்டுக்கும் அடிப்படையில் வேறுபாடு உண்டு என்பதில் ஐயத்திற் கிடமில்லை. இந்த அடிப்படை வேறுபாடு என்னவென்பது, பாலஸ் தீனத்தில் யூதர்களுக்கென 'தேசியத் தாயகம்' ஒன்று உருவாக்க முற்பட்டபோது விளக்கப்பட்டது. எல்லைகளை மாற்றியமைப்பதற்கு முஸ்லீம்கள் எதிர்ப்பு தெரிவித்தால், அவ்வெதிர்ப்பைக் கைவிடச் செய்தற்கு இவ்விரண்டுக்குமிடையிலான வேறுபாடு பற்றிய தெளிவான விளக்கம் தரல் அவசியமாகிறது.

முன்னணி வல்லுநர் ஒருவரின் விளக்கமாவது:

''தேசியத் தாயகம் என்பது, ஓரின மக்கள், தங்களுடைய தார்மிக, சமுதாய, அறிவு நிலைசார் குறிக்கோள்களையொட்டிய மேம்பாட்டு முயற்சிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்வதற்கான

சட்ட உரிமைகளுடன், ஆனால் அரசியல் இறையாண்மையின்றிப் பெறும் வரையறுக்கப்பட்ட பகுதியே ஆகும்.''

1922 இல் வெளியிடப்பட்ட பாலஸ்தீனக் கொள்கை அறிக்கையில், தேசிய வாழ்விடம் என்ற கருத்தை ஆதரித்து, பிரிட்டிஷ் அரசாங்கமே, பின்வருமாறு கூறியுள்ளது:

''பாலஸ்தீனத்தில் யூதர் தேசியத் தாயகம் உருவாக்கப்படுவதன் பொருள் என்னவென்று கேட்பின், அங்கு வாழ்மக்கள் அனைவரின் மீதும் யூத தேசியத்தைத் திணிக்கும் செயலல்லவென்றும் மாறாக, அங்கு வாழ்கின்ற யூத மக்கள், உலகின் பிற பகுதிகளில் வாழும் யூத மக்களின் உதவியோடு புவியெங்கணுமுள்ள யூதர் அனைவரும் சமய, இன அடிப்படையில் ஈடுபாடும் பெருமிதமும் கொள்ளத்தக்கதோர் மையமாக உருவாக்கி மேம்படுத்த வாய்ப்பான இடமாகவே அது அமையுமென்று கூறலாம். ஆனால் யூத இனத்தவர் திறமை, ஆற்றல்களை முழுமையாக ஈடுபடுத்தித் தமது தாயகத்தில் மேம்பாட்டுக்கான பணிகளில் தடையின்றி ஈடுபட வாய்ப்பளிக்கப்பட வேண்டுமென்பதன் பொருட்டாக, பாலஸ்தீனியரின் சம்மதத்தை எதிர்நோக்கத் தேவையின்றி, பாலஸ்தீனம் யூதர்கள் முழு உரிமையோடு பெறும் தாயகமாகவே ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். இக்காரணத்திற்காகவே, பண்டைய வரலாற்றுத் தொடர்புகளின் அடிப்படையில், பாலஸ்தீனத்தில் யூதர்களின் தேசியத் தாயகம் அமைவது பன்னாட்டு அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டு அங்கீகாரமும் வழங்கப்பட வேண்டும்.''

இக்கூற்றுகளிலிருந்து, தேசிய அரசுக்கும், தேசியத் தாயகத்துக்குமிடையிலான வேறுபாடு தெளிவாகும். வேறுபாடு என்னவெனில், தேசியத் தாயகத்தைப் பெறும் இனத்தவர்கள், தாயக நிலத்தில் முழுமையான அரசியல் இறையாண்மையையோ, தமது இன தேசியத்தை அங்குவாழும் பிற இன மக்கள்மீது திணிக்கும் உரிமையையோ பெறமாட்டார்கள் என்பதே அவ்வேறுபாடு. அவர்கள் பெறுவதெல்லாம் தாயகப் பகுதியின் குடிஉரிமையும், தங்கள் பண்பாட்டைக் காத்துக் கொள்ளச் சட்ட வாயிலாக உறுதிபெறும் உரிமையும் தான். ஆனால் தேசிய அரசு பெறும் மக்கள் அரசியல் இறையாண்மையுடன், தங்கள் அரசின்கீழ் வரும் பிற இன மக்கள் மீதும் தங்கள் தேசியத்தைத் திணிக்கும் உரிமை பெறுவர்.

இந்த வேறுபாடு மிக முக்கியமானது. எனவே இதன் அடிப் படையில் பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையை நாம் ஆய்ந்து பார்க்க வேண்டும். முஸ்லீம்கள் எதற்காகப் பாகிஸ்தான் கோரு கிறார்கள்? முஸ்லீம்கள் தங்களுக்கு ஒரு தேசியத் தாயகம் தான் தேவையென்று கருதினால் அதற்காக பாகிஸ்தான் பிரிவினை கோர வேண்டியதில்லை. இந்தியாவிலேயே, முஸ்லீம் மாநிலங்களை அவர்கள் தம் தாயகமாக்கிக் கொள்ள முடியும்; அவர்களது சமயப் பண்பாட்டை மேம்படுத்தும் வாய்ப்புகளுக்கு இங்கு குறையேதும் இருக்காது. அவர்கள் பாகிஸ்தானை ஒரு தேசிய அரசாகக் கோரு கிறார்களெனில், தமது நாட்டுப் பகுதி மீது முழு இறையாண்மை கோருவதாகவே பொருள். அதைக் கோர அவர்களுக்கு உரிமை யுண்டு. ஆனால், அவர்கள் பெறும் நாட்டின் எல்லைப் பகுதிகளுள், முஸ்லீம் அல்லாத சிறுபான்மையினரையும் குடிமக்களாக இருத்திக் கொண்டு அச்சிறுபான்மையினர் மீது இஸ்லாமிய தேசியத்தைத் திணிக்க அனுமதிக்கப்பட வேண்டுமா என்பதே கேள்வி. அரசியல் இறையாண்மையுடன் அத்தகைய உரிமை இணைந்தேயிருக்குமென் பதில் ஐயமில்லை. ஆனால் இத்தகைய கலப்பு மக்கட் குழுமங்கள் வாழும் நாடுகளிலெல்லாம் இதுவே பெரும்பாலான குழப்பங்களுக்குக் காரணமாயிருக்கிறது என்பது இற்றை நாள் உலகநிலை. இந்தக் கூறுபாட்டைப் புறக்கணித்துவிட்டுப் பாகிஸ்தான் பிரிவினைக்குத் திட்டமிடுதல் வரலாற்றின் படிப்பினையைப் புறக்கணிப்பதாகும். வெகு அண்மைக் காலத்தில் துருக்கி, கிரேக்கம், பல்கேரியா, செக்கோசுலேவேகியா ஆகிய நாடுகளில் சிறுபான்மையினத்தவர் மீது பெரும்பான்மையினத்தவர் நிகழ்த்திய கொடுமைகள், கொலை கள், கொள்ளைகள், சூறையாடல்கள் முதலான அட்டூழியங்களைப் பற்றி இக்கால வரலாற்று ஏடுகள் விவரிப்பனவற்றையெல்லாம் மறந்து விடத்தான் முடியுமா? ஆனால் இதற்கான வாய்ப்பை நம்மால் தவிர்க்க இயலும். அதாவது முற்றிலும், முஸ்லீம் மக்களை மட்டுமே கொண்ட தேசிய முஸ்லீம் அரசினை அமைக்க அனுமதிப்பதன் வாயிலாகவே இதைச் சாதிக்க இயலும். முஸ்லீம்களும் இந்துக்களும் கலந்து ஒருவருக்கொருவர் பகைமையுணர்வு பூண்டு முஸ்லீம் பெரும்பான்மையுடன் வாழும் பகுதிகளைக் கொண்டு பாகிஸ்தான் அரசு அமைக்க ஒருபோதும் அனுமதியளிக்கக் கூடாது.

பாகிஸ்தான் பிரிவினைக்கு வித்திட்ட முஸ்லீம்கள் இந்த நோக்கில் எண்ணிப் பார்த்திருக்க மாட்டார்கள். பாகிஸ்தான் தனிநாடு என்ற கருத்தை முதன் முதலாய் முன்வைத்த சர் எம். இக்பால் நிச்சய மாக இந்தக் கண்ணோட்டத்தில் சிந்தித்துப் பார்க்கவில்லை.

1930 இல் முஸ்லீம் லீக் மாநாட்டின் தலைமையுரையில் அவர் 'அம்பாலா டிவிஷனையும், முஸ்லீம் அல்லாதோர் பெரும்பான்மையாக வாழும் சில மாவட்டங்களையும் வேண்டுமானால் விட்டுக் கொடுக்கத் தமது இசைவினைத் தெரிவித்தார்; அப்படி விட்டுக் கொடுப்பதன் வழி கலப்பற்ற முஸ்லீம் சமுதாயத்தை எய்த இயலுமென்றும் தெரிவித்தார். ஆனால் பாகிஸ்தான் பிரிவினையைக் கோருபவர்களில் பலர் பஞ்சாபும் வங்காளமும் முழுமையாக இப்போதைய எல்லைகளுடன் பாகிஸ்தானுடன் இணைக்கப்படுமென்று எதிர்பார்க்கின்றனர். வங்காளத்தையும் பஞ்சாபையும் முழுமையாகக் கோருவதன் மூலம், பாகிஸ்தான் பிரிவினைப் பற்றி திறந்த மனத்துடன் இருக்கும் இந்துக்களின் எதிர்ப்பையும் சம்பாதித்துக்கொள்ள நேரிடும் என்பதை அவர்கள் உணர வேண்டும். முஸ்லீம் சமய நம்பிக்கையையும், முஸ்லீம் பண்பாட்டையும் காத்துப் பரப்புதற்கென்றே தோற்றுவிக்கப்படும் நாட்டில், இந்துக்களும் வாழ்வதற்கு இந்துக்கள் ஒருபோதும் இசைய மாட்டார்கள்; அவர்கள் எதிர்ப்பது உறுதி. இதைத் தெரிந்து கொள்ள முஸ்லீம்களுக்குப் பெருமுயற்சியேதும் தேவையில்லை. தற்போதைய எல்லைகளுடனே வங்கமும், பஞ்சாபும் முழுமையாக வேண்டுமென முஸ்லீம்கள் கோரினால், அவர்கள் தமக்கென ஒரு தேசியத் தாயகமோ, தேசிய அரசோ கோருவதனுடன், மேலும் வஞ்சகமான உள்நோக்கமும் கொண்டுள்ளனர் என்ற குற்றச்சாட்டுக்கு இலக்காக நேரிடும். பெரும்பான்மை முஸ்லீம் சமூகங்களுக்கிடையே, பிணை மக்களாய் இந்துச் சிறுபான்மையினரைத் தக்கவைத்து மிரட்டல் அரசியல் நடத்தத் திட்டமிடுவதான குற்றச்சாட்டுக்கும் அவர்கள் இலக்காக நேரிடும்.

இத்தகைய, பல்வேறு கூறுகளையும் தீர எண்ணிப்பார்க்கும் முஸ்லீம்கள், பாகிஸ்தான் பிரிவினைக்காக, மாநிலங்களின் எல்லைகளைத் திருத்தியமைக்க இசைவுதரக் கடமைப்பட்டவர்களே.

இனி வங்க, பஞ்சாப் மாநில இந்துக்களின் சிந்தனைகள் எத்தன்மையினதாக அமைய வேண்டும் என்பது குறித்து நோக்குவோம். இம்மாநிலங்களில் இந்துக்களின் நிலையே மிகுந்த சிக்கல் வாய்ந்தது. இங்கு, பிரிவினை தொடர்பாக, மேல்சாதி இந்துக்களின் கருத்துகளை மட்டும் ஆய்தலே போதுமானது; ஏனெனில் இந்துக்களில் பெரும்பாலோர்க்கு வழிகாட்டி அவர்களது கருத்தை உருவாக்குவோர் இவர்களே. மேல்சாதி இந்துக்கள் நல்ல தலைவர்களாய் விளங்குவதில்லை என்பதே இந்துக்களின் பின்னடைவு. அவர்களது

நடைமுறை நெறிகள் பெரும்பாலும் இந்துக்களைப் பேரழிவு களுக்கே இட்டுச் சென்றுள்ளன. அவர்களது அடிப்படைப் பண்பே இயல்பான பேராசையும், நல, வளங்களைப்பிறரோடு பகிர்ந்து கொள்ள ஒப்பாத தன்னலப்போக்கும்தான். கல்வி, செல்வம், உயர் பதவிகள் யாவற்றையும் இவர்கள் தமக்கே உரித்தாக்கிக் கொள்ள முனைவர். இதன் வழி அரசு அதிகாரத்தையே தம் வசம் வைத்துள் ளனர். எல்லா நலன்களையும் தங்கள் ஏகபோக உரிமையிலிருந்து வழுவிவிடாமல் காப்பதொன்றே தங்கள் செயல்பாடுகளின் மைய நோக்கமாகக் கொண்ட தன்னலவாதிகளே இவர்கள். இத்தகைய மேற்சாதிக் குழுத்தன்னலத்தின் அடிப்படையிலேயே, செல்வம், கல்வி, அதிகாரம் இவையேதும், தாழ்ந்தசாதி இந்துக்களுக்குச் சற்றும் போய்ச் சேர்ந்து விடக்கூடாதென்பதை உறுதிசெய்யும் வகையிலேயே அனைத்துச் செயல்பாடுகளையும் மேற்கொள்வதுடன், இதற்கான உறுதியான அடித்தளமாகப் புரட்டுச்சாத்திரங்கள் பலவற்றின் வாயிலாய், மேற்சாதி மக்களுக்குத் தொண்டு செய்வதே தமது கடன் என்று தாழ்ந்த சாதியினரின் மனப்போக்கையே பிறழ்வாக வளர்த்து வந்துள்ளனர். இவ்வாறாக கல்வி, செல்வம் அதிகாரம் உள்ளிட்ட எல்லா நலன் களையும், தாழ்ந்தசாதி இந்துக்களுக்கு ஒரு துளியும் விட்டுக் கொடுக்காமல் தாமே முழுமையாய் நுகர்வதை நெடுங் காலமாக நம்பவியலாப் பெருமளவில் வெற்றிகரமாய் நடத்தி வந்துள்ளனர். மிக அண்மைக் காலத்தில்தான் தாழ்ந்தசாதி இந்துக்கள் இந்த ஏகபோகக் கொள்ளைக்கு எதிரான புரட்சியுணர்வுடன், சென்னை, பம்பாய், மத்திய மாநிலங்களில் பார்ப்பனரல்லாதார் கட்சிகளைத் தோற்றுவித்து நடத்தி வருகின்றனர். இருந்தும், அம் மாநிலங்களில் கூட மேல்சாதி இந்துக்களே இன்னமும் உயர்வான நிலைகளில் இருந்து மேலாதிக்கம் செலுத்திவருகின்றனர். இந்துக் களில் தாழ்ந்த சாதியினரை எவ்வாறு கல்வி, செல்வம், அதிகாரம் முதலிய அனைத்து நலன்களிலிருந்தும் வெற்றிகரமாக ஒதுக்கி வைத்தது போன்றே, முஸ்லீம்களையும் நடத்த முற்பட்டனர். தாழ்ந்த சாதி இந்துக்களைப் போன்றே முஸ்லீம்களையும் அதிகாரப் பதவிகள் எதையும் அடைய விடாது தடுக்கவே விரும்புகின்றனர். மேல்சாதி இந்துக்களின் அரசியலைப் புரிந்து கொள்ள வேண்டுமெனில் அவர் களது கீழான பண்புகளைப் பற்றித் தெரிந்திருத்தல் அவசியம்.

அவர்களது தாழ்பண்புகளுக்கு இரண்டு எடுத்துக்காட்டு களைச் சுட்டலாம். 1929 இல் பம்பாய் மாநிலத்திலிருந்து சிந்துவைத்

தனி மாநிலமாகப் பிரிக்கக் கூடாதென்று சைமன் ஆணையத்தின் முன் இந்துக்கள் மிகத் தீவிரமாக இடைவிடாது வாதாடினர். ஆனால் 1915இல் சிந்து பகுதியைச் சேர்ந்த இந்துக்களே, சிந்து பம்பாய் மாநிலத்திலிருந்து பிரித்துத் தனி மாநிலமாக ஆக்கப்பட வேண்டு மென வன்மையாகக் கோரினர். ஆனால் இரு முரண்பட்ட கோரிக்கை களுக்கும் காரணம் ஒன்றே. 1915இல் சிந்துவில் தேர்ந்தெடுக்கப் பட்ட அரசு ஏதுமில்லை; இருந்திருப்பின் அது முஸ்லீம் அரசாகவே இருந்திருக்கும். முஸ்லீம் அரசொன்று இல்லாத சூழலில், சிந்து தனி மாநிலமாகப் பிரிக்கப்பட்டால், அரசு உயர்பதவிகளில் பெரும் பாலானவற்றைத் தாம் கைப்பற்றி விடலாம் என்ற நோக்கத்தி லேயே அன்று இந்துக்கள் மாநிலப் பிரிவினை கோரினர். ஆனால் 1929 இல், சிந்து மாநிலமாய்ப் பிரிவினை செய்யப்பட்டு அங்கு முஸ்லீம் அரசு பொறுப்பேற்றால், அரசு உயர்பதவிகள்ில் தங்க ளுடைய ஏகபோக நிலைமை பாதிக்கப்படும் என்பதாலேயே இந்துக் கள் எதிர்த்தனர்; முஸ்லீம் அரசு பொறுப்பேற்பதும், உயர்பதவி களில் முஸ்லீம்களுக்குக் கூடுதல் வாய்ப்பு கிடைப்பதும், சிந்துப் பிரிவினையின் தவிர்க்கவியலா உடன் விளைவுகளென்பதை நன் குணர்ந்தே எதிர்ப்புக் காட்டினர். மேல் சாதி இந்துக்களின் தாழ் பண்புக்கு மற்றொரு எடுத்துக்காட்டாக வங்க மாநிலப் பிரிவினைக்கு அவர்கள் காட்டிய எதிர்ப்பினைக் கூறலாம். முழுமையான வங்காளம் மட்டுமின்றி, பீகார், ஒரிசா, அஸ்ஸாம், ஐக்கிய மாநிலம் ஆகியவற்றில் உயர் அரசுப் பொறுப்புகளையெல்லாம் வங்காள இந்துக்களே பெற்றுவந்தனர். வங்க மாநிலம் இரண்டாய்ப் பிரிக்கப் பட்டால் பசுமையான இந்த மேய்ச்சல் நிலத்தில் ஒரு பகுதி போய்விடுமே என்றுதான் இந்துக்கள் வங்கப் பிரிவினையை எதிர்த் தனர். வங்கம் பிரிந்தால் கிழக்கு வங்கத்தின் ஆட்சியதிகாரப் பதவி களை முஸ்லீம்களுக்குப் பெருமளவில் விட்டுத்தர வேண்டியிருக் கும். இவ்வாறு வங்காள முஸ்லீம்களுக்குத் தமது பதவிகளில் ஒரு பகுதியை விட்டுத்தர வேண்டிய நிலையைத் தவிர்த்து தங்கள் ஏகபோக நிலையை நீடித்து இருத்திக் கொள்வதே இந்துக்களின் வங்கப் பிரிவினை எதிர்ப்புக்குத் தலையாய காரணம். ஆனால், நாட்டுக்கு விடுதலை கோருகின்ற காலகட்டத்தில், வங்கப் பிரி வினையை எதிர்ப்பதன் மூலம், கிழக்கு வங்கம் மட்டுமின்றி மேற்கு வங்கத்திலும் முஸ்லீம்களை ஆட்சியாளர்களாக்கும் திருப்பணியி லேயே தாம் ஈடுபட்டிருக்கிறோம் என்பதை இந்துக்கள் கனவிலும் எண்ணிப் பார்த்ததில்லை.

இந்தக் கட்டத்தில் மேற்குறிப்பிட்ட சிந்தனைகள் தோன்றுதற்குக் காரணம், மேல்சாதி இந்துக்கள் வழிவழிவந்த தமது தாழ் பண்புகள் காரணமாகத், தங்களது பதவி வேட்டைக் காடுகளின் பரப்பு குறைந்து விடுமேயென்ற காரணமொன்றுக்காகவே, பாகிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பார்களோ என்னும் அச்சம் தான். பாகிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பதற்கான பல்வேறு காரணங்களில், மேல்சாதி இந்துக்களின் தன்னலமும் ஒன்றாக இருக்குமெனில் வியப்பதற்கில்லை.

பஞ்சாபி, வங்காள இந்துக்கள் இன்று இரண்டில் ஒரு மாற்று வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டத்தில் உள்ளனர். அவர்கள் தம் வருங்காலத்தைப் பற்றித் தீரச் சிந்தித்து உரிய முடிவு எடுக்க வேண்டிய முக்கியமான கட்டம் இது. பஞ்சாபில் 13,332,460 முஸ்லீம்களுடன், இந்துக்களும் சீக்கியர்களும் 11,392,732 பேர் வாழ்கின்றனர். வேறுபாடு 1,939,728 மட்டுமே. அதாவது பஞ்சாப் மாநிலத்தில் முஸ்லீம் பெரும்பான்மை 8% மட்டுமே. இந்த விவரங்களின் அடிப்படையில், பஞ்சாப் மாநில ஒருமைப்பாட்டை வலியுறுத்தி 46% இந்து, சீக்கிய மக்களை 54% முஸ்லீம் மக்களின் ஆட்சியின் கீழ் கொண்டு வருதல் உகந்ததா? அல்லது எல்லைகளைத் தக்கவாறு வகுத்து மாநிலத்தை இரண்டாய்ப் பிரிப்பதன் மூலம் 46% இந்து, சீக்கிய மக்களை முஸ்லீம் ஆட்சியின் கொடூரங்களில் சிக்காமல் காப்பது உகந்ததா? இந்த இரண்டில் ஒரு வழியைப் பஞ்சாபி இந்துக்கள் தேர்ந்தெடுக்க வேண்டும்.

வங்காளத்தில் முஸ்லீம் மக்கள் தொகை 27,497,624; இந்து மக்கள் தொகை 21,570,407; வேறுபாடு 5,927,217 மட்டுமே. அதாவது வங்க மாநிலத்தில் முஸ்லீம் பெரும்பான்மை 12% மட்டுமே. இவ் விவரங்களின் அடிப்படையில் எழுகின்ற வினா இதுவே. வங்காளத்தின் எல்லைகளைத் திருத்தியமைத்து, கிழக்கு வங்கத்தையும், சில்ஹட்டையும் கொண்டு தேசிய முஸ்லீம் அரசு அமைப்பதற்கு எதிர்ப்பு காட்டுவதன் வாயிலாக, 44% இந்துக்களை 56% முஸ்லீம்களின் ஆட்சிக்குட்படுத்துவது உகந்ததா? அல்லது, எல்லைகளைத் திருத்தியமைத்து வெவ்வேறு தேசிய அரசுகளின் கீழ் இந்துக்களும் முஸ்லீம்களும் வாழ அனுமதிப்பதன் வாயிலாக, 44% வங்க இந்து மக்களை முஸ்லீம் ஆட்சியின் கொடூரப்பிடியில் சிக்காமல் தவிர்ப்பது உகந்ததா? இவ்விரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய பொறுப்பு இன்று வங்க இந்துக்கள்பால் உள்ளது.

பஞ்சாப், வங்காள மாநில இந்துக்கள் எந்த வழியைத் தேர்ந்தெடுத்தல் தங்கள் வருங்கால நல்வாழ்வுக்கு உகந்தது என நன்கு சிந்தித்து முடிவு செய்யட்டும். தங்களுடைய உயர் வேலைவாய்ப்புப் பகுதிகளில் சில குறைந்துவிடும் என்பதற்காக, வங்க, பஞ்சாபி மேல்சாதி இந்துக்கள் பாகிஸ்தான் பிரிவினையை எதிர்ப்பதன் மூலம் மாபெரும் தவறு ஒன்றைச் செய்கிறார்கள் என்று அவர்களுக்குச் சுட்டிக்காட்ட வேண்டும். அரசுப் பதவிகள் அனைத்தையும் தங்கள் ஏகபோக உரிமையாய் வைத்துக்கொள்ளும் காலம் மலையேறி விட்டதென்று அவர்களுக்கு உணர்த்த வேண்டும். தேசியத்தின் பெயரால் அவர்கள் தாழ்ந்த சாதி இந்துக்களை வேண்டுமானால் இன்னும் ஏமாற்றிக் கொண்டிருக்கலாமேயன்றி, முஸ்லீம் மாநிலங்களில் வாழும் பெரும்பான்மை முஸ்லீம் மக்களை ஏமாற்றி அதிகாரப் பதவிகளைத் தங்கள் வசமே தக்க வைத்துக்கொள்வதென்பது இனியும் நடவாது. சுயநிர்ணய உரிமையை எதிர்த்து, (வங்க, பஞ்சாப் மாநிலங்களில்) முஸ்லீம் பெரும்பான்மையினர் ஆட்சியின் கீழ் வாழ உடன்படுவோம் என்று இந்துக்கள் நிறைவேற்றியுள்ள தீர்மானம் - பாகிஸ்தானுக்கெதிரான இந்துக்களின் கூக்குரல் - மிகத் துணிச்சல் வாய்ந்ததெனலாம். ஆனால் முஸ்லீம்களை முட்டாள்களாக்கி முழுமையான ஆட்சியதிகாரத்தை என்றென்றும் தக்க வைத்துக்கொள்ள முடியுமென்று அவர்கள் கருதல் அறிவுடைமையாகாது. லிங்கன் கூறியவாறு, எல்லாரையும் எப்போதும் ஏமாற்றுவதென்பது இயலாததொன்று. வங்க, பஞ்சாபி மாநில இந்துக்கள் முஸ்லீம் பெரும்பான்மையோர் ஆட்சியின் கீழ் வாழ்வதென முடிவு செய்வதன் மூலம் அனைத்தையும் இழக்க நேரிடலாம். மாறாகப் பிரிந்துபோக இசைவதன் மூலம் நன்மைகள் எதையும் பெற இயலவில்லையெனினும், அனைத்தையும் இழக்கும் ஆபத்தை யாவது தவிர்க்கலாம்.



## பகுதி - III

# பாகிஸ்தான் இல்லை என்றால்?

பாகிஸ்தானுக்கு ஆதரவான முஸ்லீம்களின் வாதத்தையும் அதற்கு எதிரான இந்துக்களின் வாதத்தையும் தெரிந்து கொண்ட பிறகு பாகிஸ்தானுக்கு ஏதேனும் மாற்று இருக்கிறதா என்பதைக் கண்டறிவது அவசியம். பாகிஸ்தான் குறித்த ஒரு கருத்தை உருவாக்கிக் கொள்ளும் போது, அதற்குரிய மாற்றுகளையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். பாகிஸ்தானுக்கு ஒரு மாற்று இல்லை என்றாலும் அல்லது பாகிஸ்தானுக்கு ஒரு மாற்று இருந்தாலும் அது பாகிஸ்தானை விட மோசமானதாகும். மூன்றாவதாக, பாகிஸ்தானோ அல்லது அதற்கான மாற்றோ சம்பந்தப்பட்ட தரப்பினர்களுக்கு ஏற்புடையதாக இல்லை என்றால் அதன் விளைவுகள் எத்தகையவையாக இருக்கும் என்பதையும் கருத்திற் கொள்ள வேண்டும். இந்த அம்சங்கள் குறித்த விவரங்கள் இப்பகுதியில் பின்வரும் தலைப்புகளில் முன்வைக்கப்பட்டிருக் கின்றது:

1. பாகிஸ்தானுக்கு இந்து மாற்று ஏற்பாடு
2. பாகிஸ்தானுக்கு முஸ்லீம் மாற்று ஏற்பாடு
3. அயல்நாட்டுப் படிப்பினைகள்

இயல் 7

# பாகிஸ்தானுக்கு இந்து மாற்று ஏற்பாடு

## I

பாகிஸ்தானுக்குப் பதிலாக ஓர் இந்து மாற்று ஏற்பாட்டினைப் பற்றிச் சிந்திக்கும்பொழுது, மறைந்த லாலா ஹர்தயாள் 1925 இல் முன்வைத்த திட்டம்தான் எவருடைய மனத்திலும் உடனடியாக நினைவுக்கு வரும். லாகூரிலிருந்து வெளிவந்த ''பிரதாப்'' என்ற செய்தி ஏட்டில் ஓர் அறிக்கையின் வடிவில் அது பிரசுரிக்கப்பட்டது. தமது அரசியல் ஏற்பாடு என்று அவர் அழைத்த அந்த அறிக்கையில் லாலா ஹர்தயாள் பின்வருமாறு கூறினார்:[1]

> ''இந்து இனத்தின், இந்துஸ்தானத்தின், பஞ்சாபின் வருங் காலம், பின்வரும் நான்கு தூண்களை ஆதாரமாகக் கொண்டு தான் அமையமுடியும் என்று அறுதியிட்டுக் கூறுவேன் : 1. இந்து ஒற்றுமை 2. இந்து ராஜ்யம் 3. முறையாக சுத்திகரிப்பு சடங்குகள் செய்து முஸ்லீம்களை மதமாற்றம் செய்தல், 4. ஆப்கனிஸ் தானையும் எல்லைப் பகுதிகளையும் வெற்றி கொண்டு அங் குள்ள முஸ்லீம்களைத் தூய்மைப்படுத்தி இந்து மதத்துக்கு மாற்றுதல்.இந்த நான்கு விஷயங்களையும் செய்து முடிக்காத வரை நமது குழந்தைகளின் பேரக்குழந்தைகளின் இந்து நாடு களின், வருங்காலச் சந்ததியினரின் பாதுகாப்பு எப்போதும் ஆபத்து நிறைந்ததாகவே இருக்கும். இந்து இனத்தின் பாதுகாப்பு என்பது சாத்தியமற்றதாகிவிடும். இந்து இனம் ஒப்பற்ற வர லாற்றைக் கொண்டது; அதனுடைய மரபுகள் ஒரே மாதிரி யானவை. ஆனால் முசல்மான்களும் கிறித்தவர்களும் இந்துஸ் தானத்தின் எல்லைகளுக்கு அப்பாற்பட்டவர்கள். ஏனெனில் அவர்களுடைய மதங்கள் அன்னியமானவை. அவர்கள் பாரசீக, அராபிய, ஐரோப்பிய நெறிமுறைகளையே நேசிக் கின்றனர். இவ்வாறு, கண்ணில் விழுந்த தூசியை அகற்றுவது போல, நாம் இந்த இரு மதத்தவர்களையும் சுத்திகரிக்க வேண்டும். ஆப்கனிஸ்தானும் எல்லைப் புறத்தைச் சேர்ந்த மலைப் பகுதி களும் முன்னர் இந்தியாவின் ஓர் அங்கமாகத்தான் இருந்தன. ஆனால் இப்போது இஸ்லாமியர்களின் ஆதிக்கத்தில் உள்ளன.

1. ''இந்தியனின் பார்வையில்'' என்ற தலைப்பில் 25.7.1925 தேதியிட்ட ''டைம்ஸ் ஆப் இந்தியா''வைப் பார்க்கவும்.

நேபாளத்தில் இந்து மதம் முக்கிய இடத்தை வகிப்பது போலவே, ஆப்கனிஸ்தானிலும் எல்லைப்புறப் பிரதேசங்களிலும் இந்து நெறிமுறைகளே மேலோங்கி நிற்கவேண்டும்; இல்லையெனில் சுதந்திரம் பெறுவது பயனற்றதாகிவிடும். ஏனெனில் மலைசாதி மக்கள் எப்போதுமே போர் விரும்பிகளாகவும் நாடுபிடிக்கும் வெறிகொண்டவர்களாகவும் உள்ளனர். அவர்கள் நமது எதிரிகளாக மாறும் பட்சத்தில், நாதிர்ஷா, ஜமன்ஷா போன்றோருடைய காலம் மீண்டும் துளிர்த்துவிடும். தற்போது ஆங்கிலேய அதிகாரிகள் நமது எல்லைகளைப் பாதுகாத்து வருகின்றனர்; ஆனால், இந்த நிலைமை வெகுகாலம் நீடித்திருக்கமுடியாது... இந்துக்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள விரும்பினால், அவர்கள் ஆப்கனிஸ்தானையும் எல்லைப்புறப் பிரதேசங்களையும் வெற்றி கொண்டு மலைவாழ்மக்கள் அனைவரையும் மதமாற்றம் செய்யவேண்டும்.''

பாகிஸ்தானுக்குப் பதிலாக ஒரு மாற்று ஏற்பாடு என்ற வகையில் லாலாஹர்தயாளின் இத்திட்டத்திற்கு எத்தனை இந்துக்கள் ஆதரவளிக்க முன்வருவார்கள் என்பது எனக்குத் தெரியாது.

முதலாவதாக, இந்துமதம், பிறரைக் கட்டாயப்படுத்தி மதம் மாற்றம் செய்யும் மதமல்ல. காங்கிரசின் தலைவர் என்றமுறையில் மவுலானா முகமது அலி தமது உரையில் மிகச் சரியாகவே கூறி உள்ளார்:

''வெகுகாலமாகவே இந்து மதத்திற்கெதிராக இந்தப் புகாரை நான் கூறிவந்திருக்கிறேன். 1907 இல் அலகாபாதில் ஒரு நிகழ்ச்சியில் உரையாற்றிக்கொண்டிருந்த நான் முசல்மான்களுக்கும் இந்துக்களுக்கும் இடையிலான முரண்பாடுகளைச் சுட்டிக் காட்டினேன். ஒரு முஸ்லீமைப் பற்றி மோசமாகச் சொல்வதெனில் அவனிடம் ருசியற்ற ஒரு பதார்த்தம் இருந்தது. அதை அவன் மன்னர்கள் விரும்பிச் சாப்பிடும் பதார்த்தம் என்று சொன்னான். அதைத் தன்னுடன் அனைவரும் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினான். அதன் ருசியை விரும்பாதவர்களுக்குக் கூட அதைக் கட்டாயமாக ஊட்டி விட்டான். அதேசமயம் அவனது இந்து சகோதரன், தன்னுடைய சமையல் திறமைகளில் அபார நம்பிக்கை கொண்டவன். தன்னுடைய சமையற்கட்டில் தனிமையில் சமைத்ததெல்லாம் தனியாளாகக் கபளீகரம் செய்வான். தான் சமைத்த உணவில் ஒரு பருக்கையைக் கூடத் தன் உடன்பிறந்த

வனுக்கென்று ஒதுக்காமல் தானே அனைத்தையும் உண்பான். பொறுப்பற்ற முறையில் நான் இதைக் கூறவில்லை. உண்மை யில் தமது மதத்தின் இந்த அம்சத்தைப் பற்றி விளக்கிக் கூறுமாறு ஒரு சமயம் நான் மகாத்மா காந்தியைக் கேட்டுக் கொண்டேன்''.

தமது கேள்விக்கு மகாத்மா காந்தி என்ன பதிலளித்தார் என்பதைத் திரு. முகமது அலி தெரிவிக்கவில்லை. இந்துக்கள் எவ்வளவுதான் விரும்பினாலும் இஸ்லாமிய மதத்தையோ அல்லது கிறித்தவ மதத்தையோ போலல்லாமல், இந்துமதம் பரவும் மத மாக மாறமுடியாது என்பதுதான் உண்மை. அதற்காக, இந்து மதம் ஒருபோதும் பரவும் மதமாக இருந்ததில்லை என்று சொல்ல முடியாது. மாறாக, ஒரு காலத்தில் அது பரவும் மதமாகத்தான் இருந்தது; உண்மையில் அது ஒரு பரவும் மதமாகத்தான் இருந் திருக்கவேண்டும்; இல்லாவிடில் பரந்து விரிந்த இந்தியக் கண்டத் தில் இந்துமதம் எவ்வாறு பரவியது என்பதை விளக்குவது கடின மாக இருக்கும்.[1] இந்து சமுதாயம் தனது சாதி அமைப்பை உரு வாக்கிய காலத்திற்குப் பின்னர், பரவும் மதமாக இருந்த இந்து மதம், பரவாத மதமாகி விட்டது. ஏனெனில் சாதி என்பது மத மாற்றத்திற்கு ஒவ்வாததாகும். வேற்று மதத்தவரைத் தனது மதத் திற்கு மாறச்செய்வதற்கு தனது சமயக் கோட்பாடுகளை மட்டுமே ஒரு சமுதாயம் வழங்குவது போதாது; வேற்று மதத்தவரை இந்து மதத்திற்கு மாறச் செய்வதற்கு ஒரு உத்வேகமுள்ள சமயப் பரப்பாளர் முயன்றாரேயானால் அவரை யாரும் தடுக்கமுடியாது. ஆனால் அவ்வாறு ஒரு வேற்று மதத்தவரை இந்து மதத்தவராக மாற்று வதற்கு முன் அவர் எதிர்கொள்ளும் கேள்வி இதுதான்: மதம் மாறுபவரின் சாதி என்னவாக இருக்கும்? இந்துக்களின் நம்பிக்கை யின்படி, ஒருவர் ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்தவராக இருக்க வேண்டுமெனில் அந்தநபர் அந்தச் சாதியில் பிறந்தவராக இருத்தல் வேண்டும். மதம்மாறுபவர் அந்தச் சாதியில் பிறந்தவரல்ல. ஆகவே அவர் எந்த சாதியையும் சாராதவராகிறார். இதுவும் கூட ஒரு முக்கியப் பிரச்சினையாகும். அரசியலையோ, மதத்தையோ விட மனிதன் ஒரு சமூகப் பிராணியாகத்தான் இருக்கிறான். அவன் மதத்தைச் சாராதவனாக இருக்கலாம்; அவனுக்கு மதம் தேவை

1. இந்து சமயம் ஒரு பரவும் மதமாக இருந்ததா? ஆம் எனில் இப்போது ஏன், அது அவ்வாறில்லை என்ற பிரச்சினை குறித்து 1926ல் தெலுகு சமாச்சாரின் ஆண்டு மலரில் வெளியான 'சாதியும் மதமாற்றமும்' என்ற எனது கட்டுரையைக் காணவும்.

யற்றதாகவும் இருக்கலாம்: அவனுக்கு அரசியல் இல்லாமல் இருக்கலாம்; அது அவனுக்கு தேவையற்றதாகவும் இருக்கலாம். ஆனால் அவன் ஒரு சமுதாயத்தைச் சார்ந்தவனாகத்தான் இருக்க முடியும்; சமுதாயம் இல்லாமல் அவனால் இருக்கமுடியாது. ஓர் இந்துவைப் பொறுத்தவரை சாதியில்லாமல் இருப்பது என்பது சமுதாயம் இல்லாமல் இருப்பதைப் போன்றதாகும். மதம் மாறு பவருக்கு சமுதாயமே இல்லாதிருக்கும்போது, எப்படி மதமாற்றம் நிகழும்? இந்துசமுதாயம் தனிப்பட்ட உரிமைகளையும் தானாகவே வளரும் சாதி அமைப்புகளையும் கொண்டு சிதறிக் கிடக்கும்வரை இந்து மதம் பரவும் மதமாக மாறமுடியாது. ஆகவே ஆப்கன் மக்களை யும் எல்லைப்புற மலைவாழ் மக்களையும் மதமாற்றம் செய்வ தென்பது வெறுங்கனவாகத்தான் இருக்கும்.

இரண்டாவதாக, லாலா ஹர்தயாளின் திட்டத்தைச் செயல் படுத்த கணக்கிடமுடியாத அளவு நிதி ஆதாரங்களும் தேவைப் படும். ஆப்கன் மக்களையும் எல்லைப்புற மலைவாழ் மக்களையும் இந்துக்களாக மாற்றுவதற்கு தேவையான நிதியை யாரால் வழங்க முடியும்? மற்றவர்களைத் தங்களது மதத்திற்கு மாற்றும் முயற்சி களை வெகுகாலத்திற்கு முன்னரே நிறுத்திக்கொண்ட இந்துக்கள், மதமாற்றம் செய்யும் ஆர்வத்தையும் இழந்துவிட்டனர். ஆர்வ மின்மை, நிதி சம்பந்தமான பிரச்சினைகளை நிச்சயமாக தோற்று விக்கும். மேலும் வருணாசிரம முறையில் (சதுர் வருணங்கள்) உரு வாக்கப்பட்டுள்ள இந்து சமுதாயத்தில், பண்டைக் காலந்தொட்டே செல்வவளமானது மிகவும் ஏற்றத்தாழ்வான முறையில் பகிர்ந் தளிக்கப்பட்டு வந்துள்ளது. இந்துக்களிடையே செல்வத்திற்கும் சொத்திற்கும் பனியாக்கள் மட்டுமே உரியவர்களாக உள்ளனர். இப்பிரிவில் நிலக்கிழார்களையும் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் இவர்கள் அந்நியப் படையெடுப்பாளர்கள் அல்லது உள்நாட்டுக் கலகக்காரர்களால் உருவாக்கப்பட்டவர்கள். இவர்கள் எண்ணிக்கை யில் பனியாக்களை விடக் குறைவானவர்களே. பனியா என்பவன் பணத்தால் செய்யப்பட்டவன். தனிப்பட்ட லாபம் ஒன்றே அவனது உயிர்மூச்சு. பணத்தைச் சம்பாதித்துச் சேமித்து தனது சந்ததியின ருக்கு விட்டு செல்வதைத் தவிர பணத்தின் பயன்கள் எதுவும் அவனுக்குத் தெரியாது. மதத்தைப் பரப்புவதோ அல்லது கலாசாரத்தை வளர்த்து மேம்படுத்துவதோ அவனுக்கு ஆர்வமில்லாத துறைகள். அவனுடைய வரவு செலவுக் கணக்கில் பாங்கான வாழ்க்கைக்குரிய செலவினங்கள் இடம் பெற்றிராது. காலங்காலமாக இதுதான் அவனது பாரம்பரியமான மரபாக இருந்து வந்துள்ளது. பணம்

கிடைப்பது நிச்சயமென்றால் அவன் ஒரு காட்டுமிராண்டியாகவே ஆகிவிடுவான். அவனது வரவு செலவுத் திட்டத்தின் செலவுக் கணக்கில் மட்டும் ஒரே ஒரு புதிய செலவினம் இடம் பெற்றுள்ளது. அதுவே அரசியல். திரு.காந்தி அரசியல் தலைவராகப் பிரவேசித்தது முதல் இது நடைபெற்றது. காந்திய அரசியலுக்கு ஆதரவு அளிப்பது என்பதே அந்தச் செலவினம். அரசியல் மீது கொண்ட மோகமே இதற்குக் காரணம் என்று கூறமுடியாது. பொது விவகாரங்களில் ஈடுபட்டுத் தனிப்பட்ட முறையில் லாபமடைவதே இதற்குக் காரணம். ஆப்கன் மக்களிடையும் எல்லைப்புறப் பழங் குடியினரிடையேயும் இந்து மதத்தைப் பரப்பும் கவைக்குதவாத லட்சியத்திற்காக இத்தகைய நபர்கள் பணம் செலவழிப்பார்கள் என்று எப்படி எதிர்ப்பார்க்க முடியும்?

மூன்றாவதாக, ஆப்கனிஸ்தானில் மதமாற்றத்திற்காகக் கிடைக்கக் கூடிய வசதிகள் பற்றிய பிரச்சினை. குரான் தவறானது அல்லது காலத்திற்கு ஒவ்வாதது என்று துருக்கியில் கூறப்பட்டது போல் ஆப்கனிஸ்தானிலும் கூறுவது சாத்தியம் என்று லாலா ஹர்தயாள் எண்ணியிருக்கிறார் என்பது தெளிவாகிறது. லாலா ஹர்தயாளின் அரசியல் சாசனம் பிரசுரிக்கப்பட்டதற்கு ஓராண்டிற்கு முன்னர்தான், அதாவது 1924இல், ஆப்கனிஸ்தானின் மிக உயர்ந்த மதகுருக்களின் நீதிமன்றத் தீர்ப்பின்படி காபூலில், தன்னை தேவ தூதன் என்றும் மாஹ்தி என்றும் தீர்க்கதரிசி என்றும் கூறிக்கொண்ட குவாதியானைச் சேர்ந்த மிர்ஜா குலாம் அகமதுவின் சீடர்களில் ஒருவனான நியமதுல்லா என்பவன் கல்லால் அடித்துக் கொல்லப் பட்டான்.[1] ஒரு கிலாபத் ஏட்டில் வந்தசெய்தியின்படி, இஸ்லாம் மதத்திற்கும் இஸ்லாமிய சட்டதிட்டங்களுக்கும் மாறான கருத்துகளையும் நம்பிக்கைகளையும் போதித்து வந்ததுதான் இந்த நபர் செய்த குற்றமாகும். முதலாவது ஷரியாத் நீதிமன்றம், மத்திய மேல்முறையீட்டு நீதிமன்றம், நீதித்துறை அமைச்சகத்தின் கீழ் இயங்கும் இறுதி மேல்முறையீட்டுக் கமிட்டியின் உலேமாக்கள் மற்றும் மதகுருமார்கள் வழங்கிய ஒரே மாதிரியான தீர்ப்பின்படி இந்தநபர் கல்லால் அடித்துக் கொல்லப்பட்டான் என்று அதே செய்தி ஏடு கூறுகிறது. இத்தகைய சிரமமான பின்னணியில் இத்திட்டம் பிறவிக் கோளாறுடையதாகவே இருக்குமென்றும் இது செயல் படுத்தும் பட்சத்தில் மிகவும் அழிவை உண்டாக்கும் என்றும் சொல்ல வேண்டியதில்லை. இது முரட்டுத் துணிச்சலான

1. 27-11-1924 தேதியிட்ட 'டைம்ஸ் ஆப் இந்தியா'வில் வெளியான 'இந்தியனின் பார்வையில்' என்ற செய்தியைக் காணவும்.

தன்மையுடையது, பஞ்சாபைச் சேர்ந்த வெறிகொண்ட சில ஆரிய சமாஜ உறுப்பினர்களைத் தவிர எந்த ஒரு நியாயஉணர்வுடைய நபரையும் கவர முடியாத அளவுக்கு மிகவும் கற்பனையானது.

## II

இந்து மகாசபை மேற்கொண்டிருந்த நிலையைப் பற்றி சபையின் ஆண்டு நிறைவுக் கூட்டத் தொடர்களில் ஆற்றிய தமது உரைகளில் சபையின் தலைவர் திரு.வி.டி.சாவர்க்கர் விளக்கியுள்ளார். அவரது கூற்றுப்படி, இந்து மகாசபை பாகிஸ்தானுக்கு எதிரானது, எல்லாவகையிலும் அதை எதிர்க்கத் திட்டமிட்டுள்ளது. இத்தகைய கூற்றுக்களின் பொருளை நாமறியோம். வன்முறைப் பிரயோகம், பலவந்தம், எதிர்ப்பு ஆகியவைதான் அக்கூற்றுகளின் பொருள் என்றால், அவை எதிர்மறையான விளைவுகளையே ஏற்படுத்தும். இந்த வழிமுறைகள் எந்த அளவுக்கு வெற்றிகரமாக அமையும் என்பதைத் திரு. சாவர்க்கரும் இந்து மகாசபையும் மட்டுமே கூறமுடியும்.

இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் முன்வைத்த கருத்தின்பால் திரு.சாவர்க்கர் ஓர் எதிர்மறையான அணுகுமுறையையே கொண்டுள்ளார் என்று கூறுவது நியாயமற்றது. அவர்களுக்குப் பதிலளிக்கும் விதமாக அவர் தமது ஆக்கப்பூர்வமான யோசனைகளை முன்வைத்திருக்கிறார்.

அவருடைய ஆக்கப்பூர்வமான கருத்துக்களைப் புரிந்து கொள்வதற்கு, அவருடைய அடிப்படைக் கோட்பாடுகள் சிலவற்றையும் மனதில் கொள்ளவேண்டும். இந்துமதம், இந்துத்துவம், இந்து அரசு ஆகிய சொற்களை சரியாகப் புரிந்து கொள்ள வேண்டுமென்று திரு.சாவர்க்கர் வலியுறுத்துகிறார். அவர் கூறுவதாவது:[1]

> ''இந்து இயக்கத்தின் சித்தாந்தத்தை விளக்கும்போது பின்வரும் மூன்று சொற்றொடர்களின் பொருளை மிகச் சரியாகப் புரிந்துகொள்வது மிகவும் அவசியம். ''இந்து'' என்ற சொல்லில் இருந்துதான் ''இந்துயிசம்'' என்ற சொல் ஆங்கிலத்

1. 1939 டிசம்பரில் நடைபெற்ற இந்து மகாசபையின் கல்கத்தா கூட்டத் தொடரில் ஆற்றிய உரை. பக்கம். 14.

தில் உருவானது. அதற்கு இந்துக்கள் பின்பற்ற வேண்டிய மத சம்பிர தாயங்கள் என்று பொருள். ''இந்துத்துவம்'' என்ற இரண்டாவது சொல் சர்வாம்சமான அர்த்தத்தைக் கொண்டது. ''இந்துமதம்'' என்ற சொல் இந்து மக்களின் மத அம்சங்களைக் குறிப்பிடுவது மட்டும.ன்றி, அவர்களுடைய கலாசார, மொழி, சமூக, அரசியல் அம்சங்களையும் கூட விளக்குகிறது.

அது கிட்டத்தட்ட ''இந்து ஆட்சி அமைப்பு முறை'' என்ற அர்த்தத்திற்கு ஒப்பானதாகும். அதன் மிகச் சரியான மொழி யாக்கம் ஏறக்குறைய ''இந்துத் தன்மை'' என்பதாகும். மூன்றா வது சொல்லான ''இந்து அரசு'' என்பதற்கு ஒட்டுமொத்தமாக இந்துக்களைப் பற்றிக் குறிப்பிடுதல் என்று பொருள். இஸ்லாம் என்பது முஸ்லீம் உலகத்தைக் குறிப்பது போன்று இந்து உலகத்தை ஒட்டு மொத்தமாகக் குறிக்கும் சொல்லே அது.''

இந்து மகாசபையை ஒரு மதஅமைப்பு என்று கூறுவது மிகத்தவறானது என்று திரு.சாவர்க்கர் கூறுகிறார். இத்தவறான கூற்றை மறுதலிக்கும் முகமாக அவர் கூறுவதாவது:[1]

''ஆங்கிலக் கல்விகற்ற இந்துக்களில் பெரும்பகுதியினர் இந்துமகா சபையில் சேராதிருக்கின்றனர் என்ற விஷயம் எனது கவனத்திற்கு வந்துள்ளது. கிறித்தவ சமயப் பரப்புக் குழுவைப் போன்று, இதுவும் ஒரு மதவாத அமைப்பு என்ற தவறான கருத்தே இதற்குக் காரணம். இது உண்மைக்குப் புறம்பானது. இந்து மகாசபை இந்து சமயப் பரப்புக் குழு வல்ல. கடவுள் நம்பிக்கை, ஒன்றே கடவுள் என்ற கொள்கை, மாயாவாதம் அல்லது கடவுள் மறுப்புக்கொள்கை போன்ற மதசம்பந்தமான பிரச்சினைகளைப் பல்வேறு இந்து மதப் பிரிவுகள் விவாதித்து முடிவுகட்டும் என்று இந்து மகாசபை கருதுகிறது. இந்துமகாசபை ஓர் இந்துதர்ம மகா சபைஅல்ல. மாறாக, அது ஓர் இந்து தேசிய மகா சபை ஆகும். இந்து மதத் திற்குள்ளேயே உள்ள பல்வேறு பிரிவுகள் அல்லது மத சம்பிர தாய சிந்தனைகளைக் கொண்ட பிரிவுகள் எதையும் சாராமல் இருக்க வேண்டும் என்பதே இந்துமகாசபையின் அடிப் படைக் கோட்பாடாகும். ஒரு தேசிய இந்து அமைப்பு என்ற முறையில், எந்த ஒரு இந்து அல்லாத அல்லது இந்துக்

1. இதே உரை பக்கம். 25.

களின் உரிமையைப் பறிக்கின்ற, இந்துஸ்தானத்தில் தோன்றாத எல்லா மதங்களின் தாக்குதல்களிலிருந்தும், அது தேசிய இந்து சமயத்தைப் பாதுகாத்து, பரவச்செய்யும். ஆனால் இதனுடைய நடவடிக்கைத் துறையானது ஒரு தனிப்பட்ட மத அமைப்பை விடவும் சர்வாம்சத் தன்மை கொண்டது. இந்து மகாசபை யானது தன்னை இந்து அரசின் தேசிய வாழ்வுடனும் அதன் முழுமையான சமூக, பொருளாதார, கலாசார அம்சங்களுடனும் எல்லாவற்றிற்கும் மேலாக அரசியல் அம்சங்களுடனும் முழுமையாக இணைத்துக் கொள்கிறது; இந்து தேசத்தின் சுதந்திரம், பலம், புகழ் ஆகியவற்றுக்குப் பெருமை சேர்க்கும் அனைத்து அம்சங்களையும் போற்றிப் பாதுகாக்க உறுதி பூணுகிறது; நியாயமான, சரியான வழிமுறைகள் அனைத்தை யும் பயன்படுத்தி இந்துஸ்தானத்தின் முழுமையான அரசியல் சுயசார்பையும், பூரண சுயராஜ்யத்தையும் அடையும் ஓர் இன்றியமையாத கருவியாகவும் அது செயல்படும்.''

முஸ்லீம் லீகிற்கு எதிராகச் செயல்படுவதற்காகத்தான் இந்து மகாசபை தோற்றுவிக்கபட்டுள்ளது என்பதையும், வகுப்புவாரித் தீர்ப்பு சம்பந்தமான பரிந்துரைகளினால் எழும் பிரச்சினைகளுக்கு, இந்துக்களுக்கும் முசல்மான்களுக்கும் திருப்தியளிக்கும் விதத்தில் தீர்வு காணப்படும்போது இந்து மகாசபை மறைந்துவிடும் என்பதை யும் திரு. சாவர்க்கர் ஒப்புக்கொள்வதில்லை. அரசியல்ரீதியாக இந்தியா சுதந்திரமடைந்த பின்னரும் கூட இந்து மகாசபை தொடர்ந்து செயல்படும் என்று திரு.சாவர்க்கர் வலியுறுத்துகிறார். அவர் கூறுவதாவது:[1]

''..... முஸ்லீம் லீக் அல்லது காங்கிரசின் இப்போதைய தலைவர்களுடைய இந்து எதிர்ப்புக் கொள்கைக்கு எதிராகச் செயல்படுவதற்காக மட்டுமே மகாசபை தோற்றுவிக்கப் பட்டது என்றும் இந்தப் போலியான சாக்குப்போக்கின் முகத் திரை கிழிந்தஉடன் அதன் செயல்பாடு தானாகவே மறைந்து விடும் என்றும் சொல்வதில் நுனிப்புல் மேயும் பல விமர்ச கர்கள் திருப்தியடைவது போல் தெரிகிறது. ஏதோ ஒரு மனக்குறையைப் போக்குவதற்கென்று அல்லது இன்று பெய்த

1. இதே நூல்: பக்கம். 24 - 27.

மழையில் முளைத்த காளான் போன்ற ஒரு கட்சியை எதிர்ப்பதற்கென்று போலியான கொந்தளிப்பு அல்லது வீண் போராட்டத்தின் விளைவாகத் தோன்றியது அல்ல இந்துமகாசபை என்பதை இந்துமகாசபையின் குறிக்கோள்கள் தெளிவுபடுத்துகின்றன. உயிர்வாழும் தகுதியைப் பெற்றுள்ள ஒவ்வொரு ஜீவராசியும் அது தனிநபராக இருந்தாலும் சரி அல்லது சமூகமாக இருந்தாலும் பாதகமான முறையில் மாறிவரும் சுற்றுச் சூழலை எதிர்கொள்ளநேரும் போது அது தாக்குதல் தொடுக்கக் கூடிய, அல்லது தன்னைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடிய உறுப்புகளைப் பயன்படுத்திக் கொள்கிறது. காங்கிரசின் அரைவேக்காட்டு தேசியவாத சித்தாந்தத்தின் திணரச் செய்யும் பிடியிலிருந்து தன்னைத்தானே விடுவித்துக் கொண்ட இந்து தேசமும் கூட, நவீன யுகத்தின் மாறியுள்ள சூழலில் உயிர் பிழைத்திருப்பதற்கான போராட்டத்தில் போரிடும் ஒரு புதிய அமைப்பை உருவாக்கியது. அதுதான் இந்து மகாசபை. தேசிய வாழ்வின் அடிப்படைத் தேவைகளினால் அது வளர்ந்ததேயன்றி, ஏதோ ஒரு திடீர் சம்பவத்தினால் அல்ல. அதனுடைய பணியே கூட தேசத்திற்கு ஏற்புடையதாக இருப்பதை அதன் நோக்கங்களின், குறிக்கோள்களின் ஆக்கப்பூர்வமான பகுதி மிகத்தெளிவாக விளக்குகிறது. இது ஒருபுறம் இருக்க எப்போதும் மாறிக் கொண்டிருக்கிற அரசியல் நீரோட்டத்தில் அன்றாடத் தேவைகளுக்கேற்பத் தனது கொள்கையை அன்றாடம் தகவமைத்துக் கொள்வதற்குக்கூட எந்தஒரு இந்து அல்லாத அமைப்பிற்கு அல்லது கூட்டுப் பிரிதிநிதித்துவ அமைப்பிற்கு தார்மிக ரீதியிலோ அறிவார்ந்த ரீதியிலோ கொத்தடிமையாக அடிபணிந்து செல்ல சுதந்திரமான ஒரு இந்து அமைப்பைக் கொண்டிருப்பதும், அவசியமாகிறது. இந்துஸ்தானம் இப்போது அரசியல் ரீதியாக அடிமைப்பட்டுக் கிடக்கும் நிலைமையில் மட்டுமன்றி, இந்துஸ்தானம் ஒரு பகுதியாகவோ அல்லது முழுமையாகவோ சுதந்திரமடைந்து அதன் அரசியல் வருங்காலத்தை ஒரு தேசிய நாடாளுமன்றம் நிர்ணயிக்கும் காலத்திற்குப் பின்னரும் கூட, அதாவது குறைந்த பட்சம் இன்னும் இரு நூற்றாண்டுகளுக்கேனும் இந்து அரசின் வாயில்களைப் பாதுகாக்கும் காவல் கோபுரங்களாக இருந்து செயல்படுத்துவதற்கு இத்தகைய தனித்தன்மையுடைய அமைப்புகள் இருந்து வருவது மிகவும் அவசியமாகும்.

''ஏனெனில், இன்றைய நிலைமையில் நடைமுறை அரசியலை முன்னறிந்து கூறமுடியாத அளவுக்கு உலகில் ஒட்டுமொத்த அரசியல் முறைமையையே தகர்த்துவிடக்கூடிய ஊழிப்பெருவெள்ளம் போன்ற ஒரு சம்பவம் நிகழாதவரை, ஆங்கிலேய அரசியல் சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ள அந்தஸ்துடன் இந்தியாவை சுயமாக - ஆட்சி செய்யும் ஓர் அமைப்பாக அங்கீகரிப்பதற்கு இங்கிலாந்தைக் கட்டாயப் படுத்தவோ அல்லது தூண்டவோ உடனடி வருங்காலத்தில் இந்துக்களாகிய நம்மால்தான் முடியும் என்று நியாயமான முறையில் எதிர்பார்க்கலாம். அத்தகைய ஒரு சுய-ஆட்சி அமைப்பையுடைய இந்தியாவில் ஒரு தேசிய நாடாளுமன்றம் தான் வாக்காளர்களின் - அவர்கள் இந்துக்களாகஇருந்தாலும் சரி, அல்லது முஸ்லீம்களாக இருந்தாலும் சரி, அவர்களுடைய உறவு ஓரளவுக்குச் சீரடைந்திருந்தாலும் சரி அல்லது ஒரு வேளை மோசமடைந்திருந்தாலும் சரி - எண்ணங்களைப் பிரதி பலிக்கமுடியும். இந்தியாவை ஒரு முஸ்லீம் அரசாக மாற்ற வேண்டுமென்று முஸ்லீம்களை அரித்துக் கொண்டிருக்கும் ரகசிய வெறி காரணமாகவும் நமது எல்லைகளுக்கு அப்பால் இருந்து செய்யப்பட்டு வரும் சூழ்ச்சிகள் காரணமாகவும் சுய ஆட்சியின் கீழ் கூட, உள்நாட்டுப்போர் மூளக்கூடிய சாத்தியக் கூறுகள் அல்லது அந்நிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு முஸ்லீம்கள் துரோகத்தனமாக ஆதரவளிக்கக் கூடிய சாத்தியக்கூறுகள் எப்போதும் உள்ளன என்பதை எந்த ஒரு யதார்த்தவாதியும் காணாமல் இருக்கமுடியாது. அடுத்ததாக, மதவெறிக் கல வரங்கள், சேவைத் துறைகளில் பதவிப் போட்டி, சட்டமன்ற இடங்கள் சம்பந்தமாகப் போட்டி, சிறுபான்மையினரின் தரப்பில் தங்களுடைய மக்களுக்கு அளவுக்கதிகமாக ஒதுக்கீடு கோருதல் போன்ற அபாயங்கள் குறைந்தபட்சம் அடுத்த ஒரு நூற்றாண்டு வரையிலேனும் தொடரும் சாத்தியக்கூறுகள் இருப்பதும் அதன் விளைவாக நிரந்தரமாக உள்நாட்டு அமைதி அச்சுறுத்தலுக்குள்ளாகும் அபாயம் இருப்பதும் தெளிவு. சுயமாக ஆட்சி புரியும் நாடு என்ற அந்தஸ்தை இந்துஸ்தான் பெற்றுவிட்டதற்குப் பின்னரும் கூட இத்தகைய சாத்தியக்கூறுகள் நேரக்கூடும் என்பதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். அப்போது இந்து மகாசபையைப் போன்றது இந்து அரசில் ஒரு பலம் வாய்ந்த பிரத்தியேக அமைப்பு

வலிமையின் ஊற்றுக்கண்ணாக நிச்சயம் இருக்கும். கூட்டு நாடாளுமன்றம் செய்ய முடிந்ததை விடவும், இந்துக்கள் தங்களது குறைகளை எதிர்த்துக் குரல் கொடுக்கும்போது அவர்களுக்கு ஆதரவளிக்கும் சக்தியாகவும், ஆபத்தை முன் கூட்டியே உணர்ந்தறிந்து அந்த ஆபத்தைப் பற்றி இந்துக் களுக்கு உரியநேரத்தில் எச்சரிக்கை செய்து கூட்டு அரசு தன்னையுமறியாமல் தேசத்துரோக சூழ்ச்சிகளுக்குப் பலியாகி விடாமல் பாதுகாப்பாகவும் இந்துமகாசபையினால் தான் முடியும்.

''இந்தியாவில் இந்துக்களும் முஸ்லீம்களும் அங்கங் களாக இருப்பதைப் போன்று இரண்டு அல்லது மூன்று முரண் பட்ட கூறுகள் இருக்கக்கூடிய ஒவ்வொரு நாட்டிலும், விவேக முள்ள பிரிவினர் தமது பிரத்தியேக அமைப்பை அப்படியே தக்க வைத்துக் கொண்டு துரோகத்தின் மூலம் தேசிய அரசைக் கைப்பற்றும் எதிர்தரப்பின் எந்த முயற்சியையும் தோற்கடிப் பதற்கு வலிமையுடனும் கவனமாகவும் இருக்கவேண்டும்; குறிப்பாக எதிர்த் தரப்பு நாட்டில் எல்லைகளுக்கு அப்பால் இன உறவுகளையும் அண்டை நாடுகளுடன் மத, கலாசார உறவுகளையும் கொண்டிருக்குமானால் இன்னும் கவனமாக இருக்கவேண்டும் என்பதை கனடா, பாலஸ்தீனம், இளம் துருக்கியர்களின் இயக்கம் போன்றவற்றின் வரலாறு நமக்குத் தெளிவுபடுத்துகிறது.''

இந்துஸ்தான் என்றால் என்ன, இந்துமகாசபை என்றால் என்ன என்று விளக்கிய திரு.சாவர்க்கர் சுயராஜ்யத்தைப் பற்றிய தமது கருத்தை அடுத்ததாக விளக்க முற்படுகிறார். திரு. சாவர்க்கரின் கருத்தின்படி:[1]

'' இந்துக்களுக்கு சுயராஜ்யம் என்பதற்கு பொருள் என்ன? இந்து மக்கள் அல்லாத, அவர்கள் இந்தியாவில் பிறந்தவர் களாக இருந்தாலும் இந்தியாவில் பிறந்த வெளிநாட்டவர் களாக இருந்தாலும் - சில ஆங்கிலேயர்கள் இந்தியாவில் பிறந்த வெளிநாட்டவர்களாகத் தொடர்ந்து இங்கு இருக்கக்கூடும் -

1. 1939 உரை. இதே நூல் பக்கம் 18.

அத்தகையவர்களின் ஆதிக்கம் இல்லாமல் தங்களுடைய "சுயராஜ்யம்", தங்களுடைய "இந்துத்துவம்" ஆகியவற்றைத் தாங்களாகவே அறுதியிட்டுக்கொள்ளும் ஓர் அமைப்பாகும் என்று மட்டுமே இதற்குப் பொருளாகும். ஆகவே இந்த ஆங்கிலோ-இந்தியர்களின் மேலாதிக்கம் இந்துக்களுடைய "சுயராஜ்யமாக" இருக்கமுடியுமா? அவுரங்கசீப் அல்லது திப்பு பரம்பரை இந்தியர்கள்தான், ஆனால் அவர்கள் மதமாற்றம் செய்யப்பட்ட இந்து அன்னையர்களுக்குப் பிறந்தவர்கள் அல்ல. ஆனால் இதைக் கொண்டு அவுரங்கசீப் அல்லது திப்புவின் ஆட்சிக் காலம் இந்துக்களுக்கு "சுயராஜ்யமாகத்" திகழ்ந்தது என்று பொருளாகுமா? இல்லை! அவர்கள் பிரதேச ரீதியாக இந்தியர்களாக இருந்தபோதிலும் இந்து ஆட்சிமைக்கு அவர்கள் மிகமோசமான எதிரிகளாகத் திகழ்ந்தார்கள். ஆகவே முஸ்லீம் ஆதிக்கத்தை எதிர்த்து ஒரு சிவாஜி, ஒரு கோவிந்த்சிங், ஒரு பிரதாப் அல்லது பிஷ்வாக்கள் போராடி இந்து சுயராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டியிருந்தது."

தமது சுயராஜ்யத்தின் ஒரு பகுதியாக திரு.சாவர்க்கர் இரு விஷயங்களை வலியுறுத்துகிறார். முதலாவதாக இந்தியாவுக்குப் பொருத்தமான பெயராக இந்துஸ்தானம் என்ற பெயரையே திரும்பவும் சூட்ட வேண்டும் என்பதாகும்.[1]

"நமது நாட்டுக்குப் பொருத்தமான பெயராக "இந்துஸ்தான்" என்பதே நீடிக்கவேண்டும். ஒரே மூலச் சொல்லாகிய சிந்துவிலிருந்து மருவிய இந்தியா, ஹிந்த் போன்ற இதர பெயர்களையும் கூட இந்துக்களின் பூமி, இந்து தேசத்தின் இருப்பிடமாக இருக்கக்கூடிய நாடு என்ற பொருளைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தலாம். ஆரிய வர்த்தம், பாரத்-பூமி போன்ற இதர பெயர்களும் கூட நமது தாய் நாட்டைக் குறிக்கும் பழமையான, நெஞ்சிற்கினிய அடைமொழிகளாகும். இப்பெயர்கள் தொடர்ந்து கலாசார ரீதியாகப் பண்பட்ட மக்களைக் கவர்ந்துவரும். இந்துக்களின் தாய்நாட்டை "இந்துஸ்தான்" என்று அழைக்கவேண்டும் என்று வலியுறுத்துவதில், இந்து மதத்தைச் சாராத நமதுநாட்டு மக்கள் சம்பந்தமாக எந்த

1. இதே நூல் பக்கம் 19-20.

ஒரு அத்துமீறலோ அல்லது சிறுமைப்படுத்துவதோ இருப்பதாக அர்த்தமாகாது. நமது நாட்டின் பார்சி இனத்தவரும் கிறித்தவர்களும் ஏற்கனவே கலாசார ரீதியாக நமக்கு இணையானவர்களாகவும் மிகுந்த தேசபக்தி கொண்டவர்களாகவும் உள்ளனர். ஆங்கிலோ- இந்தியர்களும் கூட இத்தகைய ஒரு நியாயமான காரணத்திற்காக இந்துக்களாகிய நம்முடன் ஒத்துப்போக மறுக்காத அளவுக்கு நேர்மையாகவே நடந்து கொள்கின்றனர். நமது நாட்டைச் சேர்ந்த முஸ்லீம்களைப் பொறுத்த வரை, அவர்களில் சிலர் இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கான பாதையில், இச்சிறிய தடையை, கடக்க முடியாத மலையென்று கருதுகிறார்கள் என்ற உண்மையை மறைப்பது அர்த்தமற்றது. இந்தியாவில் மட்டும் முஸ்லீம்கள் வாழவில்லை அல்லது இந்திய முஸ்லீம்கள் மட்டுமே இஸ்லாம் மீது நம்பிக்கை கொண்டவர்களில் வீராவேசமான மிச்ச சொச்சங்கள் அல்ல என்ற உண்மையையும் அவர்கள் மறந்துவிடக் கூடாது. சீனாவில் கோடிக்கணக்கான முஸ்லீம்கள் உள்ளனர். கிரீஸ், பாலஸ்தீனம், ஏன் ஹங்கேரி, போலந்து ஆகிய நாட்டு மக்களிடையே கூட பல்லாயிரக்கணக்கான முஸ்லீம்கள் இருக்கத்தான் செய்கின்றனர். அந்த நாடுகளில் சிறுபான்மையினராக, ஒரு சிறிய சமுதாயத்தினராக அவர்கள் வாழ்வது ஒன்றே, அறுதிப் பெரும்பான்மையினராக இருக்கும் அந்த நாடுகளில் சொந்த இனத்தவர்களின் பெயரைக் கொண்ட நாடுகளின் பண்டைய பெயர்களை மாற்றுவதற்குரிய மூல காரணமாக ஒருபோதும் முன் வைக்கப்பட்டதில்லை. போலிஷ் மக்களின் நாடு போலந்து என்றும் கிரேக்கர்களின் நாடு கிரீஸ் என்றும்தான் தொடர்ந்து அழைக்கப் படுகிறது. அங்குள்ள முஸ்லீம்கள் அந்நாட்டுப் பெயர்களை மாற்றியமைக்க முயன்றதில்லை, அவ்வாறு செய்யவும் முடியாது. ஆனால் அவர்கள் தேவைப்படும்போது தங்களை போலிஷ் முஸ்லீம்கள் அல்லது கிரேக்க முஸ்லீம்கள் அல்லது சீன முஸ்லீம்கள் என்று வேறுபடுத்திக் காட்டுவதில் திருப்தியடைந்து கொள்கின்றனர். அதே போல, நமது நாட்டு முஸ்லீம்களும் கூட அவர்கள் விரும்பும்போது தங்களது மதம் அல்லது கலாசாரத் தனித்தன்மையை விட்டுக் கொடுக்காது ''இந்துஸ்தானின் முஸ்லீம்கள்'' என்று வேறுபடுத்திக் கூறிக் கொள்ளலாம். ஆனால், தாங்களாகவே இந்தியாவில் அவர்கள் காலடி எடுத்து

வைத்தது முதல் முஸ்லீம்கள் தங்களை ''இந்துஸ் தானிகள்'' என்று ஒருபோதும் கூறிக் கொண்டதில்லை.

'' ஆனால் இவையெல்லாவற்றையும் மீறி நமது நாட்டு மக்களிடையே உள்ள சில மூர்க்கத்தனமான முஸ்லீம் பிரிவினர் நமது நாட்டின் இப்பெயரையே கூட ஆட்சேபிக்கின்றனர் எனும்போது, நமது சொந்த மனச்சாட்சிக்கே நாம் ஏன் விரோதமாக நடந்து கொள்ளவேண்டும். ருக் வேத காலத்தில் வாழ்ந்த இந்துக்கள் முதல் இன்றைய நமது தலைமுறையின ரான இந்துக்கள் வரை அனைவராலும் ஒப்புக்கொள்ளப் பட்ட 'இந்துஸ்தான்' என்ற நமது தாய்நாட்டுப் பெயரின் தொடர்ச்சியைத் துண்டாடவோ, அதற்குத் துரோகமிழைக் கவோ இந்துக்களாகிய நாம் ஒருபோதும் ஒப்புக்கொள்ளக் கூடாது. ஜெர்மானியர்களுடைய நாடு ஜெர்மனி, ஆங்கிலேயர் களுடைய நாடு இங்கிலாந்து, துருக்கியர்களின் நாடு துருக்கி, ஆப்கன் மக்களின் நாடு ஆப்கனிஸ்தான் என்பது போல் பூகோள வரைபடத்தில், இந்துக்களின் நாடு ''இந்துஸ்தான்'' என்பதை காலத்தால் அழியாதவாறு பதித்திட வேண்டும்.''

''இரண்டாவதாக சமஸ்கிருதத்தைப் புனித மொழியாக வும் இந்தியை தேசிய மொழியாகவும், நாகரியை இந்து ஆட்சி முறையின் எழுத்து வடிவமாகவும் தக்கவைத்துக் கொள்ளுதல்.[1]

''சமஸ்கிருதம் நமது ''தேவபாஷை''[2], நமது புனித மொழி. ''சமஸ்கிருத நிஷ்டா[3] வான இந்திமொழி, சமஸ்கிருதத்தை ஆதாரமாகக் கொண்டு அதிலிருந்து தனது மொழி வளத்தைப் பெருக்கிக் கொண்ட இந்திமொழிதான் நமது இப்போதைய ''ராஷ்ட்ர பாஷா''[4] - தேசிய மொழியாகும். உலகின் பண்டைய மொழிகளிலெல்லாம் மிகவும் வளமான, பண்பட்ட மொழி யாம் சமஸ்கிருதம் இந்துக்களாகிய நமக்கு மொழிகளிலேயே

1. உரை 1939 , பக்கம். 21, 22, 23.
2. கடவுளர்களின் மொழி
3. அடிப்படையில் சமஸ்கிருதம்
4. தேசிய மொழி.

மிகப்புனிதமான மொழியாகத் திகழ்கிறது. நமது வேதங்கள், வரலாறு, தத்துவம், கலாசாரம் ஆகியவை சமஸ்கிருத இலக்கியத்தில் மிக ஆழமாக வேரூன்றியுள்ளன. அதுவே நமது இனத்தின் மூளையாகவும் திகழ்கிறது. நமது தாய்மொழிகளில் பெரும்பான்மையானவற்றுக்குத் தாயான சமஸ்கிருதம் பிற மொழிகளைப் பாலூட்டி வளர்த்துள்ளது. இப்போது நடப்பிலுள்ள இந்து மொழிகள் அனைத்துமே அவை சமஸ்கிருதத்திலிருந்து தோன்றியவையாக இருந்தாலும், அல்லது அதை ஒட்டி உருவானவையாக இருந்தாலும் சமஸ்கிருதத்திலிருந்துதான் அவை தேவையான ஊட்டத்தைப் பெற்று வளர்ந்து மலர்ச்சியடைந்துள்ளன. ஆகவே சமஸ்கிருதமொழி இந்து இளைஞர்களுக்கு அவர்தம் முன்னேற்றப் பாதையில் ஓர் இன்றியமையாத அம்சமாக எப்போதும் திகழவேண்டும்.

''இந்து அரசு அமைப்பின் தேசிய மொழியாக இந்தியை ஏற்றுக்கொள்வதனால், இதர பிராந்திய மொழிகளை குறைத்து மதிப்பிடுவதாகவோ அல்லது மனக்கசப்பு ஏற்படும் விதத்தில் அதன் தனித்தன்மைக்கு ஊறு விளைவிப்பதாகவோ அர்த்தமாகாது. இந்தியைப் போலவே நமது பிராந்திய மொழிகளையும் நாம் மதிக்கிறோம். அவை தத்தமது துறைகளில் வளர்ந்து செழுமையடையும். உண்மையில் அவற்றுள் சில மொழிகள் இன்றைக்கு இலக்கியத் துறையில் மிகவும் முற்போக்குடையவையாக, வளமுடையவையாகத் திகழ்கின்றன. ஆனால் ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது இந்தியானது ஒரு தேசிய, அகில-இந்து மொழியாக சிறப்பாகப் பங்காற்றமுடியும். திடீரென்று இந்தி தேசிய மொழியாக்கப்படவில்லை என்பதை நினைவில் கொள்ளவேண்டும். ஆங்கிலேயர்களும், முஸ்லீம்களும் இந்தியாவில் அடியெடுத்து வைப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்னரே, இந்திமொழி, அதன் பொதுவான வடிவத்தில் இந்துஸ்தானம் முழுவதும் தேசிய மொழி என்ற அந்தஸ்தை ஏற்கனவே வகித்துவந்துள்ளது. இந்து யாத்திரீகர்கள், வர்த்தகப் பிரமுகர்கள், சுற்றுலாப்பயணிகள், ராணுவ வீரர்கள், பண்டிதர்கள் ஆகியோர் வங்காளத்திலிருந்து சிந்து வரையிலும் காஷ்மீரிலிருந்து ராமேஸ்வரம் வரையிலும் பயணம் செய்து இந்தி மொழிபேசி ஒவ்வொரு இடத்திலும் தம்மைப் புரிந்துகொள்ளச் செய்திருக்கின்றனர். அறிவார்ந்த

இந்து மக்களின் தேசிய மொழியாக சமஸ்கிருதம் இருந்ததைப் போலவே, குறைந்தபட்சம் ஓராயிரம் ஆண்டுகளாகவே இந்து சமுதாயத்தின் இந்திய தேசிய மொழியாக இந்தி இருந்து வருகிறது....

''இந்தி என்று சொல்லும்போது, உதாரணமாக மகரிஷி தயானந்த சரஸ்வதி எழுதிய ''சத்தியார்த்த பிரகாஷ்'' நூலில் குறிப்பிடப்பட்டிருப்பதுபோல் சுத்தமான''சமஸ்கிருத நிஷ்டா'' (அடிப்படையில் சமஸ்கிருதம்) இந்தி என்றுதான் நாம் பொருள் கொள்கிறோம். இந்தி என்ற மொழி எந்த ஒரு அந்நியச் சொல்லின் கலப்படமுமின்றி, நாம் எண்ணுவதை எல்லாம் எவ்வளவு எளிமையாக சொல்லில் வடிக்கிற மொழியாகத் திகழ்கிறது! இந்தியே இந்தியாவின் அகில-இந்து தேசிய மொழி யாகத் திகழ வேண்டும் என்று கூறிய முதலாவது இந்துத் தலைவர் சுவாமி தயானந்த அடிகள்தான் என்பதைக் குறிப் பிட வேண்டும். ''சமஸ்கிருத நிஷ்டா''வான இந்திக்கும் வார்தா சூழ்ச்சித் திட்டத்தின்படி உருவாக்கப்பட்டு வரும் இந்துஸ்தானி என்று அழைக்கப்படும் கலப்பட மொழிக்கும் எந்த சம்பந்தமுமில்லை. இது ஒரு மொழியைக் களங்கப் படுத்தும் மிகப்பெரும் கொடுமையைத் தவிர வேறில்லை. இக்கொடுமையை ஈவிரக்க மின்றி ஒடுக்க வேண்டும். அது மட்டுமின்றி ஒவ்வொரு இந்து மொழியிலிருந்தும் - அது பிராந்திய மொழியாக இருந்தாலும் அல்லது பேச்சு மொழியாக இருந்தாலும் - அரபு அல்லது ஆங்கிலச் சொற்கள் போன்ற தேவையற்ற அந்நியச் சொற்களை தயக்கமின்றி அகற்றுவது நமது தலையாய கடமையாகும்.

''... ஒலியியல் அடிப்படையில் அமைந்த நமது சமஸ்கிருத எழுத்துத் தொகுதிதான் இதுவரை உலகில் உருவாகியுள்ள மிகநேர்த்தியான எழுத்து வரிசையாகும். கிட்டத்தட்ட நடப்பி லுள்ள நமது இந்திய மொழிகள் அனைத்தும் அதையே பயன்படுத்துகின்றன. நாகரி எழுத்து வடிவமும் கூட இந்த முறையையே பின்பற்றுகிறது. இந்தி மொழியைப் போன்றே நாகரி எழுத்து வடிவமும் கூட கிட்டத்தட்ட இரண்டாயிரம் ஆண்டுகளாக இந்தியாவெங்கிலும் இந்து இலக்கிய வட்டாரங்

1. இதே நூல்: பக். 45

களில் ஏற்கனவே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது, அதற்கு ''சாஸ்திரி லிபி'' - நமது இந்து திருமண நூல்களின் எழுத்து என்ற பட்டப்பெயரும் இருந்தது. வங்காளி அல்லது குஜராத்தி மொழியை நாகரி எழுத்து வடிவில் அச்சிட்டால் அதை இதர பிராந்தியங்களைச் சேர்ந்த வாசகர்கள் எளிதில் புரிந்து கொள்ள முடியும் என்பது தெரிந்ததே. இந்துஸ்தானம் முழுவதற்கும் ஒரே ஒரு பொதுமொழியைக் கொண்டிருப்பது நடைமுறை சாத்திய மற்றது, அறிவுக்குப் புறம்பானது. ஆனால் இந்து அரசு அமைப்பு முழுமையிலும் ஒரே பொதுவான எழுத்து வடிவமாக நாகரி எழுத்துவடிவத்தைக் கொண்டிருப்பது முற்றிலும் சாத்தியமே. ஆயினும் நமது பல்வேறு மாகாணங்களில் நடைமுறையில் உள்ள பல்வேறு இந்து எழுத்து வடிவங்கள் தமக்கென ஓர் எதிர்காலத்தைக் கொண்டிருக்கின்றன. நாகரி எழுத்து வடிவத் துடன் அவையும் செழிப்படையும் என்பதையும் நாம் மனதில் கொள்ளவேண்டும். ஒட்டுமொத்தமாக இந்து.அரசு அமைப் பின் பொதுநலனைக்கருத்தில் கொண்டு, இந்துமாணவர் கள் விஷயத்தில் எல்லாப் பள்ளிகளிலும் இந்தி மொழியுடன் கூட நாகரி எழுத்து வடிவத்தையும் கட்டாயப் பாடமாக்க வேண்டியது இன்றியமையாத உடனடித் தேவையாகும்.''

திரு.சாவர்க்கர் காணும் சுயராஜ்யத்தில் இந்துக்கள் அல்லாத சிறுபான்மையினரின் நிலை என்னவாக இருக்கும்? இக் கேள்விக்கு திரு. சாவர்க்கர் அளிக்கும் பதில் வருமாறு:[1]

''ஒருவருக்கு ஒருவாக்கு'', தகுதியின் அடிப்படையில் மட்டுமே அரசுப்பதவிகள் வழங்கப்பட வேண்டும் என்ற கோட்பாடுகளை இனம் அல்லது மதத்தின் அடிப்படையில் பாகுபாடின்றி அனைத்துப் பிரஜைகளும் ஒப்புக்கொள்ளும் விதத்தில் அடிப்படை உரிமைகள் மற்றும் கடப்பாடுகளுடன் இணைக்கவேண்டும் என்று இந்துமகாசபை ஒப்புக் கொள்வ துடன் அதைப் பின்பற்றியும் வரும் அதே வேளையில்.... கோட்பாடுரீதியாக சிறுபான்மையினரின் உரிமைகள் என்ற கருத்தை இனியும் கூறுவது தேவையற்றது, முரண்பாடுடையது. ஏனெனில் அது திரும்பவும் சாதீய அடிப்படையில் பெரும் பான்மையினர், சிறுபான்மையினர் என்ற உணர்வைத் தூண்டி விடுகிறது என்று கருதுகிறது. நடைமுறை அரசியலில் தேவைப் படுவது போலவும் இந்துக்களல்லாத நமது நாட்டவ

1. இதே நூல்: பக். 4.

ரிடையே கிஞ்சித்தும் சந்தேகம் ஏற்படாதிருக்க வேண்டுமென்று இந்து சங்கடனவாதிகள் விரும்புவதாலும், தங்களது மதம், கலாசாரம், மொழி ஆகியவை சம்பந்தமாக சிறுபான்மையினரின் நியாயமான உரிமைகள் மிகத் தெளிவாக உத்தரவாதமளிக்கப்படும் என்பதை வலியுறுத்த நாங்கள் தயாராக இருக்கிறோம். அதில் ஒரு நிபந்தனை என்னவெனில் பெரும்பான்மை இன மக்களின் சமஉரிமைகள் எந்த வகையிலும் பாதிக்கப்படக் கூடாது அல்லது பறிக்கப்பட்டுவிடக்கூடாது. ஒவ்வொரு சிறுபான்மை இனப்பிரிவும் தங்களது சொந்த மொழியில் தங்கள் குழந்தைகளைப் பயிற்றுவிக்கும் சிறப்புப் பள்ளிகளையும் அவர்களது மதசம்பந்தமான அல்லது கலாசார சம்பந்தமான அமைப்புகளை ஏற்படுத்திக் கொள்ளலாம், அவற்றிற்கு அரசாங்க உதவியைக்கூடப் பெறலாம் - ஆனால் அந்த உதவி, பொதுவான அரசுநிதிக்கு அவர்கள் செலுத்தும் வரியின் விகிதாசார அடிப்படையில்தான் அமைந்திருக்கும். பெரும்பான்மை இனத்தவரின் விஷயத்திலும்கூட இதே கோட்பாடுதான் பின்பற்றப்படும்.

''இவை எல்லாவற்றிற்கும் மேலாக, ஒருவேளை அரசியல் சட்டமானது கூட்டு வாக்காளர்களையும், கலப்படமற்ற தேசியக் கொள்கையாலும் ஒரு நபருக்கு ஒரு வோட்டு என்பதையும் அடிப்படையாகக் கொண்டிராமல் வகுப்புவாரி அடிப்படையில் அமைந்திருக்கும்பட்சத்தில், அந்த சிறுபான்மை வகுப்பினர், தனிப்பட்ட வாக்காளர்களையோ அல்லது தனித் தொகுதிகளையோ விரும்பினால், அவ்வாறே அவர்களுக்கு ஒதுக்கப்படும், - அது அவர்களுடைய மக்கள் தொகையின் விகிதாசாரத்திற்கு ஏற்றபடியும் அதேசமயம் பெரும்பான்மையினரின் விகிதாசாரத்திற்கேற்ப அவர்களுக்குள்ள சம உரிமைக்குப் பாதகமில்லாமலும் இருக்கும்.''

சிறுபான்மையினரின் நிலையை விளக்கிய திரு. சாவர்க்கர் தமது சுயராஜ்யத் திட்டத்தின் கீழ் பின்வருமாறு கூறி நிறைவு செய்கிறார்:[1]

''இந்தியாவிலுள்ள முஸ்லீம் சிறுபான்மையினர், சம அந்தஸ்துள்ள பிரஜைகளாக நடத்தப்படும் உரிமைகளைப் பெற்றிருப்பர், தங்களது மக்கள்தொகையின் விகிதாசாரப்படி

1. இதே நூல்: பக்கம். 16.

சமபந்தோபஸ்தையும் சிவில் உரிமைகளையும் அனுபவிப்பர். இந்துக்களல்லாத எந்த ஒரு சிறுபான்மையினர் உரிமைகளின் வரம்பைப் பெரும்பான்மை இந்துக்கள் மீறமாட்டார்கள். ஆனால் அதேசமயம், எந்த ஒரு நியாயமான ஜனநாயக, அரசியல் சட்டத்தின்படியும், பெரும்பான்மையினர் என்ற முறையில் தங்களுக்குப் பாத்தியப்பட்ட உரிமைகளைப் பெரும்பான்மை இந்துக்கள் விட்டுத்தரமுடியாது. குறிப்பாக முஸ்லீம் சிறுபான்மையினராக இருந்து கொண்டே இந்துக்களுக்கு எதையும் விட்டுக் கொடுத்ததில்லை. ஆகவே விகிதாசார ரீதியாக அவர்களுக்குக் கிடைத்துள்ள குடியுரிமை மற்றும் அரசியல் உரிமைகளின் நியாயமான பங்கைக் கொண்டும் அவர்கள் வசிக்கும் அந்தஸ்தைக் கொண்டும் திருப்தி அடைந்து கொள்ள வேண்டும். பெரும்பான்மை மக்களின் நியாயமான உரிமைகளையும் சலுகைகளையும் நடைமுறையில் ரத்து செய்யும் அதிகாரத்தைப் பயன்படுத்தும் உரிமையைச் சிறுபான்மையினரான முஸ்லீம்களுக்குக் கொடுத்து அதைச் "சுயராஜ்யம்" என்று அழைப்பது பகுத்தறிவுக்கு ஒவ்வாததாகும். எஜமானர்கள் மாறவேண்டுமென்றோ எட்வர்டுக்குப் பதிலாக அவுரங்கசீப்பை ஆட்சிக்கட்டிலில் ஏற்றவேண்டுமென்றோ (பின்னவர் இந்திய எல்லைகளுக்குள் பிறந்தார் என்ற ஒரே காரணத்திற்காக) போராடி, போரிட்டு மடிய வேண்டுமென்றோ இந்துக்கள் விரும்பவில்லை. மாறாக, தங்களது சொந்த வீட்டில், தங்களது சொந்த நாட்டில் இனி தாங்களே எஜமானர்களாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்."

தமது சுயராஜ்யம், இந்துராஜ்யம் என்ற முத்திரையுடன் திகழ வேண்டுமென்று விரும்புவதனால்தான் திரு. சாவர்க்கர், இந்தியாவுக்கு இந்துஸ்தான் என்ற இருபெயர் இருக்கவேண்டுமென்று விரும்புகிறார்.

இந்தக் கட்டமைப்புக்கு ஆதாரமாக, அடிப்படையானவையாக தாம் கருதும் இரு கருத்துகளைத் திரு. சாவர்க்கர் முன்வைக்கிறார்.

முதலாவதாக, இந்துக்களே ஒரு தேசம் என்பதாகும். இக்கருத்தை அவர் மிக விளக்கமாகவும் துடிப்புடனும் முன்வைக்கிறார். திரு. சாவர்க்கர் கூறுகிறார்:[1]

"பிரதேச ஒற்றுமை, ஒருபொதுவான இருப்பிடம் ஆகியவை மட்டுமே ஒரு தேசத்தை உருவாக்குகிறது, உருவாக்கமுடியும்,

1. இதே நூல்: பக்கம். 14 -17

உருவாக்கவேண்டும் என்ற தனது கவனக்குறைவான யூகத்தின் மூலம் ஒட்டுமொத்த காங்கிரஸ் சித்தாந்தமே ஆரம்பம் முதல் நெறியற்றதாக இருந்து வந்துள்ளது என்பதை, நமது அண்மைக்கால அரசியல் வரலாற்றில் முதல் முறையாக நான் நாக்பூரில் ஆற்றிய தலைமை உரையில் சுட்டிக் காட்டினேன். ஐரோப்பாவிலிருந்து ஒட்டுமொத்தமாக இறக்குமதி செய்யப்பட்ட பிரதேச தேசிய இனம் என்ற இந்தக் கருத்து ஐரோப்பாவிலேயே கடும் அதிர்ச்சிக்குள்ளாகியது, இப்போதைய போர் அந்த மாயையை ஒட்டுமொத்தமாகத் தகர்த்து என்னுடைய கூற்றை நியாயப்படுத்தியுள்ளது. பிரதேச இனங்களை உருவாக்கி, எந்த ஒரு பொதுவான பிணைப்புகளும் இன்றி அவற்றை ஒரே தேசிய இனமாகக் காட்டும் எல்லா நாடுகளின் முயற்சிகளும் படுதோல்வியுற்றுத் தகர்ந்துவிட்டன. எந்த ஒரு கலாசார, இன, வரலாற்று ஒற்றுமைகளினாலும் பிணைக்கப் படாமல் தங்களை ஒரே தேசத்தினுள் இணைத்துக் கொள்ளும் பொதுவான உறுதியும் இல்லாமல் பிரதேச தேசிய இனம் என்ற கருத்தை மட்டுமே, மண்குதிரையை மட்டுமே நம்பி பலகலப்பு இன மக்களை ஒன்றிணைத்து ஒரு நாட்டை உருவாக்கும் எந்த முயற்சிகளுக்கும் எதிராக போலந்தும் செக்கோஸ்லோவாகியாவும் எப்போதும் கடுமையான எச்சரிக்கையாக அமையும். இந்த ஒப்பந்த-நாடுகள் தங்களுக்குக் கிடைத்த முதலாவது சந்தர்ப்பத்திலேயே உடைந்து சிதறின: ஜெர்மானியர்கள் வாழ்ந்த பகுதி ஜெர்மனிக்குச் சொந்தமானது; ரஷ்யர்கள் வாழ்ந்த பகுதி ரஷ்யர்களுக்கும், செக் மக்கள் வாழ்ந்த பகுதி செக் மக்களுக்கும் போலிஷ் மக்கள் வாழ்ந்த பகுதி போலந்துக்கும் சொந்தமாயின. கலாசார, மொழிசார்ந்த, வரலாற்றுரீதியான, இன்னபிற ஒற்றுமைகள் பிரதேச ஒற்றுமைகளை விட வலிமையானவை என்று நிரூபணமாயிற்று. இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, போர்சுகல் போன்ற நாடுகள்தான் கடந்த நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டுகளாக ஐரோப்பாவில் தங்களது தேசிய ஒற்றுமையை விடாப்பிடியாகப் பராமரித்து வருகின்றன. அவை இனம், மொழி, கலாசாரம் போன்ற இன்னபிற ஒற்றுமைகளையும் அத்துடன் தங்களது பிரதேச ஒற்றுமையையும் அல்லது சில சமயங்களில் ஒரேசீரான தேசிய அமைப்புகளையும் உருவாக்கி வந்துள்ளன.

''இத்தகைய ஒரேசீரான, கலப்பு இன தேசத்தை உருவாக்குவதற்குத் தனித்தனியாகவும் கூட்டாகவும் நடைபெற்ற எந்த

ஒரு சோதனையையும் அல்லது சோதனைகள் அனைத்தை யும் கருத்தில் கொண்டு பார்க்கும்போது இந்தியாவில் இந்துக் களாகிய நாம் ஒரு நிலையான தேசத்தை உருவாக்கிக் காட்டி யிருக்கிறோம். நமக்கென்று சொந்தமாக நாம் ஒரு பொதுவான தந்தையர் நாட்டை, ஒரு பிரதேச ஒற்றுமையைக் கொண் டிருப்பதுடன் மட்டுமன்றி, உலகில் வேறு எங்கும் காண்ப தற்கு அரிதான, நமது பொதுவான தந்தையர் நாட்டுடன் கூட நாம் ஒரு பொதுவான புண்ணிய பூமியையும் கொண்டிருக் கிறோம். இந்த பாரதபூமி, இந்த இந்துஸ்தானம் நமக்குத் தந்தையர் நாடாகவும் புண்ணியபூமியாகவும் திகழ்கிறது. ஆகவே நமது தேசபக்தி இரண்டு மடங்கு நிச்சயமாகிறது. அடுத்ததாக, நாம் கலாசாரம், மதம், வரலாறு, மொழி, இனம் போன்ற பொதுவான ஒற்றுமைகளைக் கொண்டிருக்கிறோம். எண்ணற்ற நூற்றாண்டுகளின் தோழமை, கிரகிக்கும் ஆற்றல் ஆகிய நிகழ்வுப் போக்குகளின் மூலமாக நாம் கலப்பான, ஒரேசீரான ஒன்றிணைந்த தேசமாக ஆகியுள்ளோம். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரே அமைப்பைக் கொண்ட பொதுவான தேசிய வாழ்க்கை நடத்தும் ஓர் நெஞ்சுரத்தையும் அது நமக்கு ஊட்டியுள்ளது. இந்துக்கள் ஒருபோதும் ஒப்பந்த நாடாக இருக்கவில்லை - மாறாக ஓர் ஒன்றிணைந்த தேசிய வாழ்வை மேற்கொண்டு வந்துள்ளனர்.

''குறிப்பாக நமது காங்கிரஸ் கட்சியின் சகோதரர்கள் அடிக்கடி தவறாகப் புரிந்து கொள்ளச் செய்யும் மற்றுமொரு பொருத்தமான விஷயத்தையும் பார்க்கவேண்டும். மக்களை ஒரே சீராக ஒன்றிணைந்த தேசிய வாழ்வில் பிணைக்கும் போது, எந்தவிதமான உள்நாட்டுக் கருத்துவேறுபாடுகளோ, மத, இன, மொழி வேறுபாடுகளோ அல்லது அவர்களிடையே இனப்பிரிவுகள், இனக் குழுக்களோ இல்லாதிருக்கும் என்று மட்டும் அர்த்தம் ஆகாது. அவர்கள் தங்களிடையே வேறு பட்டிருப்பதைவிட, ஒரு தேசிய அமைப்பு என்றமுறையில் இதரமக்களிடமிருந்தே அதிகமாக வேறுபடுகிறார்கள் என்று மட்டுமே அதற்குப் பொருளாகும். பிரிட்டன், பிரான்ஸ் போன்ற இன்றைக்கு தனியொரு மைய அரசை மட்டுமே கொண்டுள்ள நாடுகளில் கூட எந்த ஒரு மத, மொழி, கலாசார, இன அல்லது இதர வேறுபாடுகளோ இன உட்பிரிவுகள், இனக்குழுக்கள் அல்லது அவர்களிடையே சில வெறுப்புணர்வு களோ இல்லாதிருக்கமுடியாது. ஒட்டுமொத்தமாக எந்த ஒரு

மக்களிலிருந்தும் மாறுபட்டமுறையில் தேசிய ஓரினத் தன்மை யானது ஒரு மக்களின் ஒன்றுபட்ட தன்மையைக் குறிக்கிறது.

''இந்துவல்லாத எந்தஒரு மக்களுடனும் - உதாரணமாக, ஆங்கிலேயர்கள், ஜப்பானியர்கள் அல்லது இந்திய முஸ்லீம் களுடன் கூட ஒப்பிடும்பொழுது, இந்துக்களாகிய நாம், நம்மில் ஆயிரம் வேறுபாடுகள் இருந்தாலும், மதம், கலாசாரம், வரலாறு, இனம், மொழி போன்ற பொதுவான இதர ஒற்றுமைகளினால் பிணைக்கப்பட்டு ஓரினத்தன்மை கொண்ட மக்களாக நாம் நிச்சயமாகத் தனித்து நிற்கிறோம். ஆகவேதான் இன்றைக்குக் காஷ்மீரிலிருந்து சென்னை வரையிலும் சிந்துவிலிருந்து அஸ்ஸாம் வரையிலும் இந்துக்களாகிய நாம், நாமாகவே ஒரு தேசமாகத் திகழ வேண்டியுள்ளது...''

திரு.சாவர்க்கர் தமது திட்டத்திற்கு அடிப்படையாகக் கொண்டிருக்கும் இரண்டாவது கருத்தானது, இந்து என்ற சொல்லுக்கு விளக்கமளிப்பது சம்பந்தப்பட்டதாகும். திரு.சாவர்க்கரின் கருத்துப்படி ஓர் இந்து என்பவர்:

''... இந்த பாரத பூமிக்குச் சொந்தக்காரர், சிந்து சமவெளி யிலிருந்து கடல்கள் வரையிலுள்ள நிலப்பரப்பைத் தனது தந்தையர் நாடாகவும் தனது புண்ணிய பூமியாகவும் கருது பவர்; - அதாவது, தனது மதத்தின் பிறப்பிடமாகவும் தனது நம்பிக்கையின் தொட்டிலாகவும் கருதுபவர்.

ஆகவே, வைதீகம், சனாதன தர்மம், ஜைன மதம், புத்த மதம், லிங்காயத் மதம், சீக்கிய மதம், ஆரிய சமாஜ், பிரம்ம சமாஜ், தேவசமாஜ், பிராத்தன சமாஜ் போன்ற இந்தியாவைப் பிறப்பிடமாகக் கொண்ட மதங்களைப் பின்பற்றுபவர்கள் இந்துக்களேயாவர். அவர்களே இந்து அரசாக, அதாவது ஒட்டு மொத்தமாக இந்து மக்களாக அமைகிறார்கள்.

அதேபோல, பூர்வகுடியினர் அல்லது மலைவாழ் பழங்குடி யினரும் கூட இந்துக்களே: அவர்கள் எந்தவிதமான மதம் அல்லது வழிபாட்டு வடிவங்களைப் பின்பற்றினாலும் இந்தியாவே அவர்களது தந்தையர் நாடாகவும் புனித நாடாக வும் திகழ்கிறது. சமஸ்கிருதத்தில் இதற்கு விளக்கமாகத் தரப்படும் கவிதை வரிகள் கூறுவதாவது:

।। आसिंधु सिंध पर्यंता यस्म भारत भूमिका ।।
।। पितृभू : पुण्यभूश्चैव स वै हिंदुरितिस्मृतः ।। १ ।।

ஆகவே நடைபெறவிருக்கும் அரசாங்க மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் இந்து மக்கள் தொகையைக் கணக்கிடுவதில் இந்த விளக்கத்தை அரசாங்கம் அங்கீகரித்து ''இந்துத்துவா'' என்ற கருத்தைச் சோதித்துப் பார்க்க வேண்டும்.''

இந்து என்ற சொல்லைப்பற்றிய விளக்கம் மிகுந்த கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் உருவாக்கப்பட்டுள்ளது. திரு.சாவர்க்கரின் உள்ளக்கிடக்கையில் உள்ள இரு நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக அது உருவாக்கப்பட்டுள்ளது. முதலாவதாக, ஒரு இந்துவாக இருப்பதற்குரிய ஒரு தகுதியாக இந்தியாவை ஒரு புண்ணிய பூமி என்று அங்கீகரிப்பதன் மூலம் அதிலிருந்து முஸ்லீம்கள், கிறித்தவர்கள், பார்சிகள், யூதர்கள் போன்றவர்களைத் தவிர்த்தல். இரண்டாவதாக, இத்தகுதிகளில் ஒன்றாக வேதங்களின் புனிதத் தன்மையில் நம்பிக்கை கொள்ளவேண்டுமென்று வலியுறுத்தாமல் புத்தர்கள், ஜைனர்கள், சீக்கியர்கள் ஆகியோரைச் சேர்த்துக் கொள்ளுதல்.

இதுதான் திரு.சாவர்க்கரின், இந்து மகாசபையின் திட்டம். இத்திட்டத்தில் சில குழப்பமான அம்சங்கள் இருப்பதை நீங்கள் கவனித்திருக்கக்கூடும்.

இந்து மக்களே ஒரு தேசம் என்ற கருத்தை அறுதியிட்டுக் கூறுவது ஒன்று. முஸ்லீம்களைப் பொறுத்தவரை அவர்கள் ஒரு தனிதேசம் என்று இதற்குப் பொருளாகிறது. இதுவே தனது கருத்து என்று திரு.சாவர்க்கர் ஐயத்திற்கிடமின்றிக் கூறுகிறார். இக்கருத்தை அவர் தம்மால் முடிந்தவரை நிச்சயமாகவும் வலியுறுத்தியும் கூறுகிறார். 1937இல் அகமதாபாதில் நடைபெற்ற இந்து மகாசபைக் கூட்டத்தில் உரையாற்றிய திரு. சாவர்க்கர் கூறியதாவது:

''ஏற்கனவே இந்தியா ஓர் ஒன்றிணைந்த நாடாகப் பின்னிப் பிணைந்துள்ளது, அல்லது அவ்வாறு விரும்பினாலே கூட அது பின்னிப் பிணைந்திருக்கமுடியும் என்று கருதுவதில் பல சிறுபிள்ளைத்தனமான அரசியல்வாதிகள் பெரும் தவறு புரிகிறார்கள். இந்த நல்லெண்ணங்கொண்ட ஆனால் சிந்தனையற்ற நமது நண்பர்கள் தங்கள் கனவுகளையே நிஜமென்று நம்பிக்கொண்டிருக்கின்றனர். ஆகவேதான் அவர்கள் வகுப்பு சம்பந்தமான பிரச்சினைகளில் பொறுமையற்று இருக்கின்றனர். இவற்றிற்கெல்லாம் காரணம் வகுப்புவாத அமைப்புகளே என்று கூறுகின்றனர். ஆனால், இந்த வகுப்புப் பிரச்சினைகள் எனப்படுபவை, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே பலநூற்றாண்டுக்கால கலாசார, மத, தேசியப் பகைமையின் மிச்ச சொச்சங்களே என்பது முற்றிலும் உண்மை

யாகும். காலம் கனியும்பொழுது அப்பிரச்சினையைத் தீர்த்துக் கொள்ளலாம்; ஆனால் அவற்றை ஏற்றுக்கொள்ள மறுப்பதன் மூலம் மட்டுமே அடக்கி ஒடுக்கிவிட முடியாது. நோயை அசட்டை செய்வதை விட புரையோடிவிட்ட நோய்க் கான காரணமறிந்து சிகிச்சையளிப்பதே சிறந்தது. மனத்திற்கு ஒவ்வாத சில உண்மைகளை நாம் உள்ளது உள்ளபடி துணி வுடன் எதிர்கொள்ள வேணடும். இந்தியாவை ஒரு தனியொரு தேசமாகவோ, ஒன்றிணைந்த தேசமாகவோ இன்றைக்குக் கருதமுடியாது, மாறாக இந்தியாவில் இந்துக்கள், முஸ்லீம்கள் என்று இரு தேசங்கள் உள்ளன.''

ஒரு தேசமா அல்லது இரு தேசங்களா என்ற கருத்து சம்பந்தமாக ஒருவரையொருவர் எதிர்த்துக்கொள்வதற்குப் பதிலாக திரு. சாவர்க்கரும் திரு. ஜின்னாவும் அதுகுறித்து முற்றிலுமாக உடன் படுகின்றனர் என்பது விநோதமானதாகும். இந்தியாவில் இரு தேசங்கள் - ஒன்று முஸ்லீம் தேசம், மற்றது இந்துதேசம் - இருப்பதை இருவரும் ஒப்புக்கொள்வதுடன் வலியுறுத்தவும் செய் கின்றனர். இரு தேசங்களும் எந்த நிபந்தனைகளின் அடிப்படையில் வாழ வேண்டும் என்பது சம்பந்தமாகத்தான் இருவரும் கருத்து வேறுபடுகின்றனர். இந்தியாவை பாகிஸ்தான் என்றும் இந்துஸ்தான் என்றும் இரண்டாகப் பிரிக்கவேண்டும் என்றும் முஸ்லீம் இனத் தவர் பாகிஸ்தானிலும், இந்து இனத்தவர் இந்துஸ்தானத்திலும் வசிக்க வேண்டுமென்றும் திரு. ஜின்னா கூறுகிறார். மாறாக, இந்தியா வில் இரு மதப்பிரிவுகள் இருந்தபோதிலும் கூட இந்துக்களுக்காக வென்றும் முஸ்லீம்களுக்காக என்றும் இந்தியா இரண்டாகப் பிரிக்கப் படமாட்டாது; இந்த இரண்டு இனப்பிரிவுகளும் ஒரே தேசத்தில் தான் வசிக்கவேண்டும்; ஒரே அரசியல் சட்டத்தின் கீழ்தான் இணங்கி யிருக்கவேண்டும்; இந்து இனத்தவரின் நிலை மேலோங்கியிருக்கும் விதத்திலும் இந்து இனமக்களுக்குக் கட்டுப்பட்டு ஒத்துழைக்கும் நிலையில் முஸ்லீம் இனத்தவர் வாழும் விதத்திலும் அரசியல் சட்டம் அமைந்திருக்க வேண்டும் என்று திரு.சாவர்க்கர் வலி யுறுத்துகிறார். இந்த இரு இனமக்களுக்கிடையில் அரசியல் அதி காரத்திற்கான போராட்டத்தில், ஒருநபர் இந்துவாகவோ அல்லது முஸ்லீமாகவோ இருந்தாலும் ஒருநபருக்கு ஒரு வோட்டு என்ற நிலைதான் இருக்கும் என்று திரு.சாவர்க்கர் கூறுகிறார். அவருடைய திட்டத்தின்படி ஒரு இந்துவுக்கு இல்லாத சலுகை எதுவும் ஒரு முஸ்லீமுக்கு இராது. சிறுபான்மையினராக இருப்பதனால் சலுகை

கள் பெறுவதை நியாயப்படுத்துவதும், பெரும்பான்மையினராக இருப்பதனால் தண்டிக்கப்படவேண்டும் என்பதும் இராது. முஸ்லீம் மதம், முஸ்லீம் கலாசாரம் ஆகியவற்றின் வடிவத்தில் ஒரு குறிப் பிட்ட அளவு அரசியல் அதிகாரத்தை முஸ்லீம்களுக்கு அரசாங்கம் உத்தரவாதமளிக்கும். ஆனால் சட்டசபையிலோ அல்லது நிர்வாகத் திலோ அவர்களுக்கு நிரந்தரமான ஒதுக்கீட்டை வழங்க அரசாங்கம் உத்தரவாதமளிக்காது. அத்தகைய உத்தரவாதங்கள் வழங்கப்பட வேண்டும் என்று முஸ்லீம்கள்[1] வலியுறுத்துவார்களேயானால், அவ்வாறு உத்தரவாதமாக ஒதுக்கப்படும் இடங்கள் மொத்த மக்கள் தொகையில் அவர்களுடைய விகிதாசாரத்திற்கு மிகைப்படாது. இதுநாள்வரை அவர்கள் அனுபவித்துவந்த உரிமைகளைப் பறித்துக் கொள்ள விரும்பும் திரு.சாவர்க்கர் இதுவரை முஸ்லீம் இனமக்கள் பெற்றிருந்த அரசியல் சலுகைகளையும் கூட அவர்களிடமிருந்து பறித்துவிட முனைகிறார்.

பாகிஸ்தானுக்கான மாற்று ஏற்பாடுகளைத் திரு.சாவர்க்கர் வெளிப்படையாக, துணிவுடன், திட்டவட்டமான முறையில் கூறுகிறார். சிறுபான்மையினரின் உரிமைகளைப்பற்றிய காங்கிரசின் பிரகடனங்களோ அதிலிருந்து முற்றிலுமாக மாறுபட்ட முறையில் ஒழுங்கற்றவையாக தெளிவற்றவையாக, நிச்சயத் தன்மையற்றவை யாக உள்ளன. திரு.சாவர்க்கரின் திட்டம் முஸ்லீம்களுக்கு இவ்வளவு தான், இதற்குமேல் எதுவும் இல்லை என்று தெளிவுபடுத்திவிடு கிறது. இந்துமகாசபையைப் பொறுத்தவரை தங்களது நிலை என்ன என்பதை முஸ்லீம்கள் அறிவார்கள். மாறாக், காங்கிரசைப் பொறுத்த வரை தங்கள் நிலை என்ன என்பதை முஸ்லீம்கள் புரிந்து கொள்ள முடிவதில்லை. ஏனெனில் முஸ்லீம்கள் மற்றும் சிறுபான்மை யினரின் பிரச்சினைகளை காங்கிரஸ் இரட்டை வேடமாக இல்லா விட்டாலும் ஒரு ராஜதந்திர விளையாட்டாக அணுகிவருகிறது.

அதேசமயம், திரு. சாவர்க்கரின் அணுகுமுறை விநோத மானதாக இல்லாவிட்டாலும் முன்னுக்குப்பின் முரணானது என்பதைக் கூறத்தான் வேண்டும். முஸ்லீம்கள் தனியொரு இனமக்கள் என்று திரு.சாவர்க்கர் ஒப்புக்கொள்கிறார். கலாசார சுயாட்சிக்கான உரிமை

---

1. முஸ்லீம்களுக்கென்று தனித் தொகுதிகள் இருப்பதைத் திரு. சாவர்க்கர் எதிர்க்கவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டும். அவர்கள் பெரும்பான்மையினராக உள்ள இடங்களில் கூட முஸ்லீம்களுக்கென்று தனித் தொகுதிகள் இருப்பதை அவர் ஆதரிக்கிறாரா என்பது தெளிவாகத் தெரியவில்லை.

அவர்களுக்கு உண்டு என்பதையும் ஏற்றுக்கொள்கிறார். அவர்களுக் கென்று தனியாக ஒரு தேசியக்கொடி வைத்துக்கொள்ளவும் அவர் அனுமதிக்கிறார். ஆனாலும் கூட முஸ்லீம் இனமக்கள் தங்களுக் கென்று தனியாக ஒரு தேசிய இல்லம் வேண்டும் என்ற கோரிக்கையை எதிர்க்கிறார். இந்து இனத்தவருக்கென்று தனியாக ஒரு நாடு இருக்க வேண்டுமென்று கோரும் அவர், முஸ்லீம் இனத்தவர் தங்களுக் கென்று ஒரு தனிநாடு வேண்டுமெனக் கோருவதை எப்படி மறுக்க முடியும்?

முரண்பாடுகளே திரு.சாவர்க்கரின் ஒரே தவறாக இருக்கு மெனில் அது கவலைக்குரிய விஷயமாக இருந்திராது. ஆனால் தமது திட்டத்தை வெளிப்படையாகக் கூறுவதன் மூலம் திரு.சாவர்க்கர் இந்தியாவின் பாதுகாப்புக்கும் பந்தோபஸ்துக்கும் மிக ஆபத்தான ஒரு நிலைமையை உருவாக்கிவருகிறார். இருவேறு இன மக்கள் ஒரே நாட்டின் பிரஜைகளாகவும் ஒரே அரசியல்சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்ட வர்களாகவும் இருக்கும்போது, ஒரு சிறுபான்மை இனத் தவர்களுடன் பெரும்பான்மை இனத்தவர்கள் இணைந்து வாழ இரு வழிகள் இருப்பதை வரலாறு நமக்குக் காட்டியுள்ளது. சிறுபான்மை தேசத்தின் தேசிய இனத்தை அழித்து பெரும்பான்மை தேசத் துடன் ஈர்த்து கிரகித்துக் கொள்வது ஒருவழி, இதன்மூலம் இரு தேசங்களை ஒன்றாக்கிவிடமுடியும். சிறுபான்மை தேசத்திற்கு மொழி, மதம், கலாசாரம் ஆகியவற்றிற்கான எந்தவித உரிமைகளையும் மறுப்பதன் மூலமும், அதன்மீது பெரும்பான்மை தேசத்தின் மொழி, மதம், கலாசாரம் ஆகியவற்றைத் திணிக்க விழைவதன் மூலமும் இது செய்யப்படுகிறது. நாட்டைப்பிரித்து சிறுபான்மை தேசத்திற்கு பெரும்பான்மை தேசத்தைச் சார்ந்திராமல் ஒரு தனிப்பட்ட சுயாட்சி யுடன்கூடிய அரசுரிமையை வழங்குவது மற்றொரு வழி. ஆஸ்திரியா விலும் துருக்கியிலும் இந்த இரு வழிமுறைகளுமே பின்பற்றப் பட்டன. இரண்டாவது வழிமுறை தோல்வியடைந்ததால் முத லாவது வழிமுறை பின்பற்றப்பட்டது.

திரு.சாவர்க்கர் இந்த இரு வழிமுறைகளையும் பின்பற்ற வில்லை. முஸ்லீம் தேசத்தை அடக்கிஒடுக்கும் யோசனையையும் அவர் கூறவில்லை. மாறாக, ஒரு தேசத்தின் ஆன்மாவாக அமையக் கூடிய கூறுகளாம் அதன் மதம், மொழி, கலாசாரம் ஆகியவற்றைப் பேணுவதற்கு அனுமதிப்பதன் மூலம் அவர் அதைப் பாலூட்டி சீராட்டி வளர்க்க விரும்புகிறார். அதேசமயம் அவர் இரு தேசங்களையும்

தனித்தனியான, சுயாட்சி அரசுகளாக, தங்களது சொந்தப் பிரதேசத்தில் ஒவ்வொன்றும் அரசுரிமை கொண்டவைகளாகப் பிளவுபடுத்துவதற்குச் சம்மதிக்கவில்லை. ஒரே நாட்டில் இந்துக்களும் முஸ்லீம்களும் இரு தனித்தனியான தேசங்களாக, ஒவ்வொரு தேசமும் தத்தமது மதம், மொழி, கலாசாரம் ஆகியவற்றைப் பேணிக் கொண்டு வாழவேண்டுமென்று அவர் விரும்புகிறார். ஒரே தேசத்தை உருவாக்குவதுதான் இறுதி நோக்கம் என்பதனால் பெரும்பான்மை இனமக்கள் சிறுபான்மை இனத்தை அடக்கி ஒடுக்கும் தத்துவத்தின் சாரத்தை நம்மால் புரிந்துகொள்ளவும் பாராட்டவும் முடிகிறது. ஆனால், எப்போதுமே இரு தேசங்கள் இருக்க வேண்டும், ஆனால் அவர்களுக்குள் பிளவு இருக்கக்கூடாது என்று கூறும் ஒரு தத்துவத்தின் அனுகூலத்தை ஒருவராலும் ஏற்றுக்கொள்ள முடியாது. இரு தேசங்களும் நட்புமுறையில் பரஸ்பர மதிப்பு, ஒற்றுமையுடன் பங்காளிகளாக வாழும் பட்சத்தில் மட்டுமே இந்த அணுகுமுறையை நாம் நியாயப்படுத்தமுடியும். ஆனால் அவ்வாறு நடக்காது. ஏனெனில் முஸ்லீம் இனத்தவர்கள் அதிகாரத்தில் இந்து இனத்தவர்களுடன் சரிசமமாக இருப்பதைத் திரு. சாவர்க்கர் அனுமதிக்க மாட்டார். இந்து இனம் ஆதிக்கம் செலுத்தும் இனமாகவும் முஸ்லீம் இனம் சேவகம் புரியும் இனமாகவும் இருக்க வேண்டுமென்று அவர் விரும்புகிறார். இந்து இனத்தவருக்கும் முஸ்லீம் இனத்தவருக்கும் இடையில் பகைமை எனும் விதையைத் தூவிய பின்னர் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் ஒரே நாட்டில் வாழ வேண்டுமென்று திரு. சாவர்க்கர் விரும்புகிறார் என்பது விளக்குவதற்குக் கடினமானதாகும்.

ஒரு புதிய திட்டத்தை உருவாக்கியதற்கான பெருமையைத் திரு.சாவர்க்கருக்கு நம்மால் வழங்கமுடியாது. தமது திட்டமே மிகச் சரியான திட்டம் என்று அவர் கருதுவதைப் புரிந்துகொள்வது கடினமானதாகும். தமது சுயராஜ்யத் திட்டத்திற்கு பழைய ஆஸ்திரியா, பழைய துருக்கி ஆகியவற்றை முன்மாதிரியாக திரு.சாவர்க்கர் எடுத்துக் கொள்கிறார். ஆஸ்திரியாவிலும் துருக்கியிலும் ஒரு பெரும்பான்மை இனம் இதர சிறுபான்மை இனத்தவருடன் ஒரே அரசியல் சட்டத்தினால் பிணைக்கப்பட்டு அடுத்தடுத்து ஒற்றுமையாக வாழ்ந்தனர் என்று கூறுகிறார், சிறுபான்மை இனத்தவர் மீது பெரும்பான்மை இனத்தவர் ஆதிக்கம் செலுத்திவந்தனர் என்றும் கூறும் அவர், இந்த முறை ஆஸ்திரியாவிலும் துருக்கியிலும் சாத்தியம் என்றால் இந்தியாவிலும் அதேபோல இந்துக்களுக்கு ஏன் சாத்தியமாகாது என்றும் வாதிடுகிறார்.

தம்முடைய திட்டத்தை உருவாக்குவதற்குப் பழைய ஆஸ்திரியாவையும் பழைய துருக்கியையும் திரு. சாவர்க்கர் முன்மாதிரியாக எடுத்துக்கொண்டிருப்பது உண்மையிலேயே மிகவும் விநோதமானதாகும். பழைய ஆஸ்திரியாவும் பழையதுருக்கியும் இப்போது இல்லை என்பதைத் திரு.சாவர்க்கர் தெரிந்து கொள்ளவில்லை போல் தெரிகிறது. பழைய ஆஸ்திரியாவையும் பழைய துருக்கியையும் துண்டுதுண்டாக வெடித்துச் சிதறச் செய்த சக்திகளையும் அவர் தெரிந்துகொள்ளவில்லைபோல்தெரிகிறது. திரு.சாவர்க்கர் கடந்த காலத்தை ஆராய்ச்சி செய்வதை விடுத்து- அது அவருக்கு மிகவும் பிடித்தமானது - நிகழ்காலத்தை ஆய்வு செய்வதில் அதிக கவனம் செலுத்துவாரேயானால், தமது "இந்து அரசாட்சி" ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று திரு.சாவர்க்கர் அறிவுறுத்திவந்த அதே திட்டத்தை, அதாவது சிறுபான்மை இனமக்களைத் தங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கக்கூடிய விதத்தில் பெரும்பான்மை இனத்தவர்களுக்குச் சலுகை அளிக்கும் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் இரு தேசங்கள் இயங்கும் சுயராஜ்யத்தைப் போன்ற அதே திட்டங்களை வலியுறுத்தி வந்ததால்தான் பழைய ஆஸ்திரியாவும் பழைய துருக்கியும் அழிந்துபட்டன என்பதை அவர் தெரிந்து கொண்டிருப்பார்.

ஆஸ்திரியா, செக்கோஸ்லோவாகியா, துருக்கி ஆகிய நாடுகள் சீர்குலைந்ததன் வரலாறு இந்தியாவுக்கு மிக முக்கியமானதாகும். அதைத் தெரிந்து நடப்பது இந்துமகாசபை உறுப்பினர்களுக்கு நல்லது. அதைப்பற்றி இங்கு எதையும் நான் கூற விரும்பவில்லை, ஏனெனில் அவர்களுடைய துயரமான வரலாற்றிலிருந்து பெறவேண்டிய படிப்பினைகளின் பால் பிறிதொரு அத்தியாயத்தில் கவனத்தை ஈர்த்திருக்கிறேன்.

திரு.சாவர்க்கர் உருவாக்கிய சுயராஜ்யத் திட்டம், முஸ்லீம்களை அடக்கி ஆளும் ஒரு சாம்ராஜ்யத்தை இந்துக்களுக்கு வழங்கி அதன்மூலம் தாங்கள் ஒரு ஏகாதிபத்திய இனம் என்ற திருப்தியையும் பெருமையையும் அவர்களுக்கு வழங்கும். ஆனால் அது இந்துக்களுக்கு ஒரு நிலையான அமைதியான எதிர்காலத்தை வழங்க முடியாது, ஏனெனில் முஸ்லீம்கள் இத்தகைய ஒரு பயங்கரமான மாற்றுத் திட்டத்திற்கு ஒருபோதும் ஒப்புக்கொண்டு அடிமைகளாக மாட்டார்கள்.

# III

தமது திட்டம் குறித்து முஸ்லீம்களின் கருத்து என்ன என்பதைப் பற்றி திரு. சாவர்க்கர் கிஞ்சித்தும் கவலைப்படவில்லை. தமது திட்டத்தை உருவாக்கியுள்ள அவர், ''எடுத்துக் கொள்ளுங்கள் அல்லது விட்டு விடுங்கள்'' என்று கூறி அதை முஸ்லீம்களின் முகத்தில் விட்டெறிகிறார். சுயராஜ்யத்திற்கான போராட்டத்தில் முஸ்லீம்கள் கலந்து கொள்ள மறுப்பதை பற்றி அவர் சற்றும் சலனமடையவில்லை. இந்துக்களின், இந்துமகாசபையின் வலிமையை அவர் நன்கு உணர்ந்திருக்கிறார், இந்துக்கள் தன்னந்தனியாக, யாருடைய உதவியும் இன்றி தொடர்ந்து போராடி பிரிட்டிஷாரிடமிருந்து சுயராஜ்யத்தை அடையமுடியும் என்று உறுதிபட நம்புகிறார். முசல்மான்களுக்குப் பின்வருமாறு அறைகூவல் விடுக்கவும் திரு. சாவர்க்கர் தயாராக இருக்கிறார்:

> ''நீங்கள் வந்தால் உங்களுடன் சேர்ந்து போராடுவோம், நீங்கள் வரவில்லை என்றால் நாங்கள் தனித்து நின்று போராடுவோம்; நீங்கள் எதிர்த்தால், நீங்கள் இல்லாமலேயே, இந்துக்கள் தங்களால் இயன்ற அளவுக்குத் தங்களது தேச விடுதலைக்காகத் தொடர்ந்து போராடுவார்கள்.''

திரு. காந்தியின் நிலை அவ்வாறல்ல. இந்தியாவின் ஓர் அரசியல் தலைவராகத் தமது வாழ்வைத் தொடங்கிய சமயத்திலேயே திரு.காந்தி, ஆறுமாத காலத்திலேயே சுயராஜ்யத்தைப் பெற்றுத்தருவதாக இந்திய மக்களுக்கு உறுதியளித்தார்; சில நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டால் மட்டுமே இந்த அதிசயத்தை நிகழ்த்திக் காட்டமுடியும் என்றும் திரு.காந்தி கூறினார். இந்து-முஸ்லீம் ஒற்றுமையை எய்துவது இந்த நிபந்தனைகளில் ஒன்றாக இருந்தது. இந்து-முஸ்லீம் ஒற்றுமையின்றி சுயராஜ்யத்தை எய்துவது சாத்தியமில்லை என்று திரு.காந்தி ஓய்வுஒழிச்சல் இன்றிக் கூறிக் கொண்டிருந்தார். இந்திய அரசியலில் திரு.காந்தி இதை வெற்று முழக்கமாகமட்டும் செய்துகொண்டிருக்கவில்லை, அவர் மிகவும் சிரத்தையுடன் அதற்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். 1919 மார்ச் 2 ஆம் நாளன்று அறிக்கை வெளியிட்டதுடன் திரு.காந்தி இந்தியாவில் ஓர் அரசியல் தலைவராகத் தமது வாழ்வைத் துவக்கினார் என்று கூறமுடியும், அந்த அறிக்கையில் அவர் ரௌலட் சட்டத்தை எதிர்த்து சத்தியாக்கிரகத்தைத் துவக்கப்போவதாகவும்

அதில் சேர விரும்புவர்கள் சத்தியாக்கிரக உறுதிமொழியில் கையொப்பமிட வேண்டும் எனவும் பிரகடனப்படுத்தினார். சத்தியாக் கிரக இயக்கம் குறுகியகாலமே நீடித்த இயக்கமாக இருந்தது, 1919 ஏப்ரல் 18 அன்று திரு.காந்தி அந்த இயக்கத்தை நிறுத்திவைத்தார். 1919 மார்ச் 18 அன்று இந்தியா முழுவதும் ரௌலட் சட்டத்தை எதிர்க்கும் நாளாகக் கடைபிடிக்கப்படும் என்று திரு. காந்தி முடிவு செய்தார்.[1] அன்றைய தினம் பொதுக்கூட்டங்கள் நடைபெற வேண்டு மெனவும் அத்தகைய கூட்டங்களில் கலந்து கொள்ளும் மக்கள் பின்வரும் சூளுரையை மேற்கொள்ள வேண்டுமெனவும் திரு.காந்தி கூறினார்:

> ''கடவுள் சாட்சியாக இந்துக்களாகிய நாமும் முகமதியர் களும் ஒரே பெற்றோரின் குழந்தைகள் என்ற முறையில் ஒருவர்பால் ஒருவர் அன்புடன் நடந்து கொள்வது என்றும், நம்மிடையே எந்தவிதமான கருத்து வேறுபாடும் இல்லை என்றும் ஒருவருடைய துன்பங்கள் மற்றவருடைய துன்பங் களாகக் கருதப்படும் என்றும் அவற்றைக் களைய ஒருவர் மற்றவருக்கு உதவ வேண்டும் என்றும் பிரகடனம் செய் கிறோம். ஒருவர் மற்றவருடைய மதத்தையும் மத உணர்வு களையும் மதிக்கிறோம். சம்பந்தப்பட்ட மத நடைமுறைகளின் குறுக்கே நிற்க மாட்டோம், மதத்தின் பெயரால் ஒருவர் மற்றவர்மீது நாம் ஒருபோதும் வன்முறையைப் பிரயோ கிக்க மாட்டோம்.''

இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் எந்த விதமான மோதலுக்கும் இட்டுச் சென்றிருக்கமுடியாத ரௌலட் சட்டத்திற்கு எதிரான சத்தியாக்கிரக இயக்கத்தில் எந்த முக்கியத் துவமும் இருக்கவில்லை. ஆயினும் திரு.காந்தி தமது சீடர்களை அச்சூளுரை மேற்கொள்ளச் செய்தார். ஆரம்பம்முதலே இந்து-முஸ்லீம் ஒற்றுமையை எந்த அளவுக்கு அவர் வலியுறுத்தி வந்தார் என்பதை இது காட்டுகிறது.

1919இல் முகமதியர்கள் கிலாபத் இயக்கத்தை தொடங் கினர். அந்த இயக்கத்தின் குறிக்கோள் இரு வகைப்பட்டது: கிலாபத்தைப் பேணிக்காப்பது, துருக்கி சாம்ராஜ்யத்தின் ஒருமைப் பாட்டைப் பராமரித்தல். இந்த இரு குறிக்கோள்களுமே ஆதரிக்கத் தகுந்தவை அல்ல. யாருடைய நலன் கருதி இக் கிளர்ச்சி நடத்தப் பட்டதோ அந்தத் துருக்கியர்கள் சுல்தானை விரும்பவில்லை.

1. 1919 மார்ச் 23 தேதியிட்ட அவரது அறிக்கையைக் காணவும்.

எனவே கிலாபத்தை காப்பாற்ற முடியவில்லை. அவர்கள் விரும்பியது குடியரசைத்தான், துருக்கியை ஒரு குடியரசாக மாற்ற விரும்பிய துருக்கியர்களை முடியாட்சியின் கீழிருக்கும்படி கட்டாயப் படுத்துவது நியாயமற்றது. துருக்கிய சாம்ராஜ்யத்தின் ஒருமைப் பாட்டை வலியுறுத்துவது சிறந்ததல்ல, ஏனெனில் அவ்வாறு சொல்வது, துருக்கியர்களின் குறிப்பாக அரேபியர்களின் ஆட்சி களுக்குப் பல்வேறு தேசிய இனங்கள் இடையறாது அடிமைப்பட்டுக் கிடப்பதென்று பொருளாகும். அமைதி உடன்படிக்கையின் ஆதார அடித்தளமாக சுய-நிர்ணய சித்தாந்தம் ஆக்கப்பட வேண்டும் என்று எல்லாத் தரப்புகளும் ஒப்புக்கொண்டுள்ளன.

இந்த இயக்கத்தை முகமதியர்கள்தான் ஆரம்பித்தனர். ஆனால் முகமதியர்களே ஆச்சரியப்படுமளவுக்கு உறுதியுடனும் நம்பிக்கையுடனும் காந்தி அதில் ஈடுபாடு கொண்டிருந்தார். கிலாபத் இயக்கத்தின் அடிப்படை நெறிகளில் ஐயப்பாடு கொண்டிருந்த பலர் கேள்விக்குரிய அடிப்படை நெறிகளைக் கொண்டிருந்த ஒரு இயக் கத்தில் எந்த ஒரு பங்கும் வகிக்காதிருக்குமாறு திரு.காந்திக்கு அறி வுறுத்த முயன்றனர். ஆனால் திரு.காந்தியோ கிலாபத் கிளர்ச்சியின் நியாயத்தின் பால் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டதுடன் தமது நண்பர்களின் ஆலோசனைகளை ஏற்கவும் மறுத்துவிட்டார். அந்த நோக்கம் நியாயமானது, அதில் சேருவது தமது கடமை என்று அவர் திரும்பதிரும்ப வாதிட்டார். அவர் மேற்கொண்ட நிலை பாட்டை அவர் சொந்த வார்த்தைகளிலேயே கீழே தந்துள்ளோம்.[1]

"1.துருக்கியர்கள் உரிமை கொண்டாடுவது நெறி யற்றதோ, நியாயமற்றதோ அல்ல, மாறாக அது மிகவும் நேர்மை யானது என்பது எனது கருத்து. ஏனெனில் தனக்கு எது சொந்தமோ அதைத் தக்கவைத்துக் கொள்ள துருக்கி விரும்பு கிறது. துருக்கியர்களின் மேலாண்மையின் கீழ் கிறித்தவர்களுக் கும் அராபியர்களுக்கும் சுயாட்சி உரிமை வழங்கும் விதத்தில், முஸ்லீம் அல்லாத, துருக்கியர் அல்லாத இனத்தவருக்குப் பாது காப்பு வழங்கவும் தேவையான எல்லாவித உத்தரவாதங் களையும் முகமதியரின் அறிக்கை நிச்சயமாகப் பிரகடனம் செய்துள்ளது;

1. யங் இந்தியா, 1920 ஜூன் 2.

2. துருக்கியர்கள் பலவீனமானவர்கள் என்றோ, செயல்திறனற்றவர்கள் என்றோ, கொடூரமானவர்கள் என்றோ நான் கருதவில்லை. துருக்கியர்கள் நிச்சயமாக ஒழுங்குமுறை யற்றவர்களாக, ஒருவேளை நல்ல தலைமை இல்லாதவர் களாக இருக்கக்கூடும். யாரிடமிருந்து அதிகாரத்தைப் பறித்துக் கொள்ள வேண்டும் என்று அடிக்கடி நாம் செவிமடுக்கி றோமோ, அவர்கள் சம்பந்தமாக பலவீனம், செயலாற்றல் இன்மை, கொடூரம் போன்ற மேற்கோள்களையும் நாம் செவிமடுக்கிறோம். படுகொலைகள் நடந்ததாகக் கூறப்படும் கூற்றுகள் சம்பந்தமாக ஒரு முறையான விசாரணைக் கமிஷன் கோரப்பட்டுள்ளது. ஆனால் அந்த வேண்டுகோள் ஏற்கப்பட வில்லை. எது எப்படியாயினும் அடக்குமுறைக்கு எதிராக பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளமுடியும்;

3. இந்திய முகமதியர்களின் நலனில் நான் அக்கறை கொள்ளாதவனாக இருந்திருப்பேனாகில், ஆஸ்திரியர் கள், போலந்து நாட்டவர்களின் விஷயத்தைப் போலவே துருக்கியரின் வளவாழ்விலும் நான் அக்கறை கொண்டிருக்க மாட்டேன் என்று நான் ஏற்கனவே கூறியிருக்கிறேன். ஓர் இந்தியன் என்ற முறையில் இந்தியர்கள் துன்பங்களிலும் சோதனைகளிலும் பங்குகொள்ளும் கடப்பாடு எனக்கு உண்டு. முகமதியர் ஒருவரை எனது சகோதரனாக நான் கருதுவே னாகில் அவருக்குத் துன்பம் வருங்கால் எனது சக்திக்குட் பட்டு, அவரது லட்சியம் எனக்கு நியாயமாகப்படும்பட்சத் தில் அவருக்கு உதவுவது எனது கடமை;

4. முகமதியர்களுடன் இந்துக்கள் எந்த அளவுக்குக் கைகோத்துச் செல்லவேண்டும் என்பதாகும். ஆகவே இது உணர்வுகளும் கருத்துகளும் சம்பந்தப்பட்ட ஒரு விஷயம்! ஒரு நியாயமான லட்சியத்தில் எனது முகமதிய சகோதரனுக் காக அதிகபட்சம் துன்புறுவது உகந்ததேயாகும். ஆகவே அவரது இலக்கைப் போலவே அதை எய்தும் வழிமுறை களும் கௌரவமானவையாக இருக்கும் வரை அவருடன் தொடர்ந்து பயணம் செய்யவே நான் விரும்புவேன். முகமதி யர்களின் உணர்வுகளை என்னால் ஒழுங்குபடுத்த முடியாது. தனது உயிரைக் கொடுத்தேனும் இலக்கை எட்டும் விதத்தில் கிலாபத் தன்னை இணைத்துக்கொண்டுள்ளது என்ற அர்த்தத் தில் அது ஒரு மத சம்பந்தமான பிரச்சினை என்ற அவரது கூற்றை நான் ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும்.''

கிலாபத் லட்சியத்தில் திரு.காந்தி முஸ்லீம்களுடன் இணங்கிச் சென்றது மட்டுமன்றி அவர்களுடைய வழிகாட்டியாக வும் நண்பராகவும் திகழ்ந்தார். கிலாபத் கிளர்ச்சியில் திரு.காந்தி வகித்த பாத்திரமும் கிலாபத் கிளர்ச்சிக்கும் ஒத்துழையாமை இயக் கத்திற்கும் இடையிலான தொடர்பும் புரியாத புதிராக மாறி விட்டது. ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கியது காங்கிரஸ் தான், சுயராஜ்யத்தை அடையும் வழிமுறையாகத்தான் அது செய்யப் பட்டது என்று பெரும்பான்மையான மக்கள் கருதினர் என்ற உண்மையே அதற்குக் காரணம். அத்தகைய ஒரு கண்ணோட்டம் நிலவக் காரணம் எளிதில் புரிந்துக்கொள்ளக்கூடியதே. ஏனெனில் பெரும் பாலான மக்கள், ஒத்துழையாமை இயக்கத்திற்கும் 1920 செப்டம்பர் 7-8 தேதிகளில் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரசின் சிறப்புக் கூட்டத் தொடருக்கும் இடையில் உள்ள தொடர்பைப் புரிந்து கொண்டு திருப்தியடைந்தனர். ஆனால், 1920 செப்டம்பருக்குப் பின்னால் நிகழ்ந்த சம்பவங்களை அறிந்து கொள்வதில் அக்கறை யும் அப்போது நிலவிய நிலைமையை ஆய்வு செய்யவும் விரும்பினால் அக்கருத்து உண்மையல்ல என்பதைக் காண முடியும். கிலாபத் இயக்கத்திலிருந்துதான் ஒத்துழையாமை இயக்கம் தோன்றியதே அன்றி சுயராஜ்'யத்திற்கான காங்கிரஸ் இயக்கத்தி லிருந்து அல்ல என்பதே உண்மை: துருக்கிக்கு உதவுவதற்காக கிலாபத் இயக்கத்தினரால் அது தொடங்கப்பட்டு, கிலாபத் இயக் கத்தினருக்கு உதவுவதற்காக மட்டுமே காங்கிரசினால் ஏற்றுக் கொள்ளப்பட்டது: அதன் முக்கிய நோக்கம் சுயராஜ்யம் அல்ல. ஆனால் அதன் முக்கிய நோக்கம் கிலாபத்தே ஆகும். அதில் இந்துக் களையும் கலந்துகொள்ளத் தூண்டுவதற்காக சுயராஜ்யம் இரண் டாவது குறிக்கோளாகச் சேர்க்கப்பட்டது என்பதைப் பின்வரும் உண்மைகளிலிருந்து புரிந்து கொள்ளலாம்.

இந்தியாவெங்கிலும் கிலாபத் நாள் கடைப்பிடிக்கப்பட்ட 1919 அக்டோபர் 27 அன்றுதான் கிலாபத் இயக்கம் தொடங்கிய தாகக் கூறலாம். 1919 நவம்பர் 23 அன்று முதலாவது கிலாபத் மாநாடு டில்லியில் கூடியது. அக்கூட்டத் தொடரில்தான் கிலாபத் தவறுகளைப் போக்க பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கட்டாயப்படுத்தும் ஒருவழிமுறையாக ஒத்துழையாமை சாத்தியக்கூறை முஸ்லீம்கள் பரிசீலனை செய்தனர். 1920 மார்ச் 10 அன்று கல்கத்தாவில் கூடிய கிலாபத் மாநாடு, தங்களது போராட்டத்தின் நோக்கத்தை முன் னோக்கிக் கொண்டு செல்வதற்கு ஒத்துழையாமையே சிறந்த வழி என்று முடிவு செய்தனர்.

1920 ஜுன் 9 அன்று அலகாபதில் கூடிய கிலாபத் மாநாடு ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபடுவதென்ற அவர்களது தீர்மானத்தை ஒருமனதாக மீண்டும் உறுதிசெய்தது. அதைச் செயல் படுத்துவதற்காக ஒரு விரிவான திட்டத்தைத் தயாரித்தளிக்க ஒரு நிர்வாகக் கமிட்டியையும் நியமித்தது. 1920 ஆகஸ்டு 1 ஆம் தேதிக்கு முன்னர் துருக்கியர்களின் துயரங்களைப் போக்கவில்லை என்றால் தாங்கள் ஒத்துழையாமையில் ஈடுபடப்போவதாகக் கூறி வைஸ்ராய்க்கு முஸ்லீம்கள் செய்தி அனுப்பினர். வைஸ்ராய்க்குத் தாக்கீது அனுப்பிய ஒருமாதத்திற்குப்பின்னர், 1920 ஜுன் 30 அன்று அலகாபாதில் கூடிய கிலாபத் கமிட்டிக் கூட்டம் ஒத்துழையாமையைத் தொடங்குவதென்று தீர்மானித்தது. 1920 ஜுலை 1 அன்று அறிவிப்பு வெளியிடப்பட்டது. 1920 ஆகஸ்டு 1 அன்று ஒத்துழையாமை தொடங்கியது. இச்சுருக்கமான விளக்கம், கிலாபத் கமிட்டிதான் ஒத்துழையாமையைத் தொடங்கியது என்பதையும் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் சிறப்புக் கூட்டத் தொடர் செய்ததெல்லாம், கிலாபத் மாநாடு ஏற்கனவே செய்திருந்ததை அப்படியே ஏற்றுக்கொண்டது தான், அதுவும் சுயராஜ்யத்தின் நலன் கருதியல்ல கிலாபத் இயக்கத்தை முன்கொண்டு செல்வதில் முசல்மான்களுக்கு உதவும் நலன் கருதியே செய்யப்பட்டது. கல்கத்தாவில் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தொடரில் இயற்றப்பட்ட காங்கிரஸ் தீர்மானத்தை[1] பரிசீலனை செய்தாலே அது தெளிவாகத் தெரியும்.

---

1. "கிலாபத் பிரச்சினையில் இந்திய மற்றும் ஏகாதிபத்திய அரசுகள் இந்தியாவிலுள்ள முஸ்லீம்களின் பாலான தமது கடமையிலிருந்து தவறிவிட்டனர். அவர்களுக்கு அளித்த வாக்குறுதியிலிருந்து பிரதமர் வேண்டுமென்றே மீறிவிட்டார். ஆகவே முஸ்லீமல்லாத ஒவ்வொரு இந்தியரும், தமது முஸ்லீம் சகோதரருக்கு அவருக்கு ஏற்பட்டுள்ள மத சம்பந்தமான இடர்ப்பாடுகளை அகற்றும் அவரது முயற்சியில் நியாயமான முறையில் ஒத்துழைக்க வேண்டும்;

"1919 ஏப்ரலில் நடைபெற்ற சம்பவங்கள் தொடர்பான விஷயத்தில் மேற்கூறப்பட்ட இரு அரசாங்கங்களும் பஞ்சாபில் அப்பாவி மக்களைப் பாதுகாக்கத் தவறிவிட்டன அல்லது ஒட்டுமொத்தமாக அசட்டை செய்து விட்டன, அவர்களின்பால் போர் வீரனுக்குள்ள இயல்புகளுக்கு மாறாகவும் காட்டுமிராண்டித்தனமாகவும் நடந்து கொண்ட அதிகாரிகளைத் தண்டிக்கத் தவறிவிட்டன. பெரும்பான்மையான அதிகாரப்பூர்வக் குற்றச் செயல்களுக்கு நேரடியாகப் பொறுப்பாக இருந்தவர் என்றும், அவருடைய நிர்வாகத்தின்கீழ் இருந்த மக்கள் படும் துன்பங்களைப் பொருட்படுத்தாது அசட்டை செய்தார் என்றும் குற்றம் சாட்டப்பட்ட சர். மைக்கேல் ஓ டையர், குற்றமற்றவர் என்று விடுவித்து விட்டன, பிரபுக்கள் சபையில் நடைபெற்ற விவாதம் இந்திய மக்களின்பால் அனுதாபமே இல்லாததைக் காட்டியது, திட்டமிட்டு பஞ்சாபில் மேற்கொள்ளப்பட்ட பயங்கரவாதமும், திகிலுண்டாக்கும் சம்பவங்களும், அண்மையில் வெளியிடப்பட்ட வைஸ்ராயின் அறிக்கையும் கிலாபத், பஞ்சாப் போன்ற பிரச்சினைகளில் கிஞ்சித்தும் வருத்தம் தெரிவிக்கவில்லை என்பதை நிரூபிக்கின்றது.

கிலாபத் கமிட்டிதான் ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்கியது. கிலாபத் லட்சியத்திற்கு உதவுவதற்காக காங்கிரஸ் வெறுமனே அதை ஏற்றுக் கொண்டது என்ற போதிலும் அதை கிலாபத் கமிட்டிக்கு யோசனை கூறியவரும் அதற்குச் செயல் வடிவம் கொடுக்கும் பொறுப்பை மேற்கொண்டு கமிட்டியுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டவரும் அதைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளுமாறு செய்தவரும் திரு. காந்திதான்.

1919 நவம்பர் 23 அன்று டில்லியில் நடைபெற்ற முதலாவது கிலாபத் மாநாட்டில் திரு.காந்தியும் கலந்துகொண்டார். திரு.காந்தி அதில் கலந்து கொண்டது மட்டுமன்றி, கிலாபத் சம்பந்தமான அவர்களது கோரிக்கைகளுக்கு பிரிட்டிஷாரைக் கட்டாயமாக இணங்கச் செய்யும் ஒரு வழிமுறையாக முஸ்லீம்கள் ஒத்துழையாமையை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் அறிவுரை கூறினார். கிலாபத் இயக்கத்தில் திரு.காந்தி கலந்துகொண்டது மிகுந்த முக்கியத்துவம் கொண்டதாகும். கிலாபத் லட்சியத்தில் இந்துக்களின் ஆதரவைப் பெறுவதில் முஸ்லீம்கள் மிகுந்த ஆர்வத்துடனிருந்தனர். 1919 நவம்பர் 23 அன்று நடைபெற்ற மாநாட்டில் கலந்து கொள்ளுமாறு இந்துக்களுக்கு முஸ்லீம்கள் அழைப்புவிடுத்தனர். திரும்பவும் 1920 ஜூன் 3 அன்று அலகாபாதில் இந்துக்களும் கிலாபத் இயக்கத்தைச் சேர்ந்த முஸ்லீம்களும் கலந்துகொண்ட கூட்டுக் கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் மற்றவர்களுடன் சப்ரு, மோதிலால் நேரு,

---

(முன்பக்க அடிக்குறிப்புத் தொடர்ச்சி)

''மேற்கூறப்பட்ட இரு தவறுகளையும் திருத்திக் கொள்ளாதவரை இந்திய மக்கள் திருப்தியடைய மாட்டார்கள் என்றும், தேச கௌரவத்தைக் காப்பதற்கும், எதிர்காலத்தில் இத்தகைய தவறுகள் திரும்பவும் நடைபெறாமல் தடுப்பதற்கும் சுயராஜ்யத்தை ஏற்படுத்துவதுதான் ஒரே வழி என்றும் இந்தக் காங்கிரஸ் கருதுகிறது.''

''மேற்கூறப்பட்ட தவறுகள் திருத்திக்கொள்ளப்பட்டு சுயராஜ்யம் ஏற்படுத்தப்படும் வரை, மகாத்மா காந்தி தொடங்கி வைத்த கொள்கையான முற்போக்கான அகிம்சை, ஒத்துழையாமை ஆகியவற்றை ஏற்று செயல்படுத்துவதைத் தவிர இந்திய மக்களுக்கு வேறு வழி இல்லை என்றும் காங்கிரஸ் கருதுகிறது.''

திருமதி அன்னி பெசன்ட் கூறுகிறார்: ''1920 மார்ச்சில் திரு. காந்தி, இதர பிரச்சினைகளுடன் கிலாபத்தை ஆதரிப்பதில் ஒத்துழையாமையைக் கலப்பதைத் தடை செய்திருந்தார்; ஆனால் கிலாபத் போதுமான அளவுக்கு இந்துக்களைக் கவரவில்லை என்பது கண்டறியப்பட்டது. ஆகவே, மே 30 - 31 தேதிகளில் காசியில் நடைபெற்ற அகில - இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பஞ்சாப் படுபாதகச் செயல்களும் சீர்திருத்தச்சட்டத்திலுள்ள குறைபாடுகளும் ஆத்திரமூட்டும் காரணங்கள் என்ற பட்டியலில் சேர்க்கப்பட்டன.'' - 'இந்திய அரசியலின் வருங்காலம், பக்கம். 250.

அன்னி பெசன்ட் ஆகியோரும் கலந்துகொண்டனர். ஆனால் முஸ்லீம் களுடன் இணைவதற்கு இந்துக்கள் தயங்கினர். முஸ்லீம்களுடன் இணைந்த ஒரே இந்து திரு.காந்திதான். அவர்களுடன் சேருவதில் திரு.காந்தி துணிச்சலை வெளிப்படுத்தியது மட்டுமன்றி, அவர் களுடன் இணைந்து பணியாற்றினார். இல்லை, அவர்களுக்குத் தலைமை ஏற்றார். ஒத்துழையாமை சம்பந்தமாக ஒரு விரிவான திட்டத்தைத் தயாரித்து அதைச் செயல்படுத்துவதற்காக 1920 ஜூன் 9 அன்று அலகாபாதில் கூடிய மாநாடு, ஒரு நிர்வாகக் கமிட்டியை அமைத்தது. அந்த நிர்வாகக் குழுவில் இடம்பெற்றி ருந்த ஒரே இந்து திரு. காந்திதான். 1920 ஆகஸ்டு 1 ஆம் தேதிக்கு முன்னர் துருக்கியர்களின் துயர்கள் துடைக்கப்படவில்லை எனில் தாங்கள் ஒத்துழையாமையைத் தொடங்கப் போவதாக 1920 ஜூன் 22 அன்று முஸ்லீம்கள் வைஸ்ராய்க்கு ஒரு தகவல் அனுப்பினர். அதே நாளில் கிலாபத் லட்சியத்திலுள்ள நியாயத்தையும் அந்த லட்சியத்தில் தாமும் கலந்துகொள்வதற்கான காரணங்களையும், கிலாபத் இயக் கத்தவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யவேண்டியதன் அவசி யத்தையும் விளக்கி திரு.காந்தியும்கூட வைஸ்ராய்க்கு ஒரு கடிதம் எழுதினார். உதாரணமாக ஆகஸ்டு 1 அன்று ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பிக்கப்படும் என்று 1920 ஜூலை 1 அன்று வைஸ் ராய்க்குக் கொடுக்கப்பட்ட தாக்கீதை அனுப்பியவரே காந்திதான், கிலாபத் இயக்கத்தவர்கள் அல்ல. திரும்பவும் 1920 ஆகஸ்டு 31 அன்று கிலாபத் இயக்கத்தவர்கள் ஒத்துழையாமையைத் தொடங்கிய பொழுது தமது பதக்கத்தைத் திருப்பினுப்பியதன் மூலம் அந்த இயக்கத்திற்கு ஓர் உறுதியான வடிவம் கொடுத்த முதலாவது நபரும் திரு.காந்தியே. கிலாபத் கமிட்டியின் செயலார்வம் மிக்க ஓர் உறுப்பினர் என்ற முறையில் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கிவைத்த பின்னர் திரு.காந்தி அடுத்ததாக, ஒத்துழை யாமையை ஏற்றுக் கொண்டு கிலாபத் இயக்கத்தை காங்கிரஸ் பலப் படுத்த வேண்டும் என்று தூண்டுவதில் தமது சக்தியனைத்தை யும் திருப்பினார். அந்த நோக்கத்தைக் கருத்தில் கொண்டு, கிலாபத் இயக்கத்தைத் தோற்றுவித்தவர்களான அலி சகோதரர்களின் துணையுடன் திரு.காந்தி 1920 ஆகஸ்டு 1-க்கும் செப்டம்பர் 1-க்கும் இடையில் நாடெங்கிலும் பயணம் செய்து ஒத்துழையாமை இயக் கத்தின் அவசியத்தை எடுத்துரைத்தார். திரு.காந்தியின் கருத்துக்கும் அலி சகோதரர்களின் கருத்துக்கும் இடையில் இணக்கம் இல்லா திருந்ததை மக்கள் உணர்ந்தனர். மாடர்ன் ரெவ்யூ சஞ்சிகை இது குறித்துப் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தது: அவர்களுடைய உரை களின் உள்ளர்த்தத்தைப் பார்க்கும்போது, ஒருவருடைய உரையின்

மையக்கருத்து தொலைதூரத்திலுள்ள துருக்கியில் கிலாபத்தின் அவல நிலையைப் பற்றியதாக இருந்தது. மற்றவருடைய உரை இங்கு இந்தியாவில் சுயராஜ்யத்தை எய்தும் குறிக்கோளைக் கருத்தில் கொண்டிருந்தது.'' இந்த இருவேறு[1] அக்கறைகள் இறுதி இலக்கின் வெற்றிக்கு உகந்ததாக இல்லை. இருந்தபோதிலும் கிலாபத் லட்சியத்திற்கு ஆதரவாக காங்கிரசைத் தம்முடன் இணங்கச் செய்வதில் திரு. காந்தி வெற்றியடைந்தார்.[2]

நீண்ட காலமாகவே முஸ்லீம்களைத் தங்கள் பக்கம் இழுக்க இந்துக்கள் முயற்சித்து வந்தனர். முஸ்லீம்லீகிற்கும் தனக்கும் உள்ள இடைவெளியைப் போக்குவதற்குக் காங்கிரஸ் மிகவும் ஆவலாய் இருந்தது. இந்த நல்லமுடிவைக் கொண்டுவருவதற்காக 1919 இல் ஏற்றுக் கொள்ளப்பட்ட வழிமுறைகளையும், இதனால் காங்கிரசுக்கும் முஸ்லீம்லீகிற்கும் இடையில் லக்னோ உடன்படிக்கை கையெழுத்தானதையும் பற்றி லக்னோவில் அந்த ஆண்டில் நடைபெற்ற காங்கிரசைப் பற்றி தமது கருத்துக்களில் சுவாமி சிரத்தானந்தா மிகத் தெளிவாகக் கூறுகிறார். சுவாமி கூறுவதாவது :[3]

''மேடையில் அமர்ந்தபோது (லக்னோ காங்கிரஸ் மேடை) முதலில் நான் கவனித்தது என்னவெனில், முஸ்லீம் பிரதிநிதிகளின் எண்ணிக்கை 1893-இல் லாகூரில் இருந்ததைவிட நான்கு மடங்கு அதிகமாக இருந்தது என்பதுதான். பெரும்பாலான முஸ்லீம் பிரதிநிதிகள் தங்களது வழக்கமாக அணியும் கரடுமுரடான உடைகளை, தங்கம், வெள்ளி, பட்டுப் பின்னலால் ஆன சோகாஸ் எனப்படும் மேலங்கிகளையும் அணிந்திருந்தனர். காங்கிரஸ் தமாஷாவுக்காக பணம் படைத்த இந்துக்கள் இந்த மேலங்கிகளை அணிவித்திருந்தனர் என்ற

1. மாடர்ன் ரெவ்யூவினுடைய கருத்தை மறுதலித்த திரு. காந்தி அதை ''விஷமத் தனமான கருத்து'' என்று கூறினார். 1921 அக்டோபர் 20 அன்று யங் இந்தியாவில் எழுதிய கட்டுரையில் மாடர்ன் ரெவ்யூவின் விமர்சனத்தைப் பற்றிக் கூறும்போது, ''எங்கள் இருவருக்குமே மையக் கருத்தாக இருப்பது கிலாபத்தான் என்று உறுதிபடக் கூறுகிறேன், மவுலானா முகமது அலிக்கு அது அவரது மதம், எனக்கு, கிலாபத்துக்காக உயிரையும் துறப்பது என்பது முசல்மானின் கத்தியிலிருந்து எனது மதமான பசுவின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதாகும்.''

2. ஒத்துழையாமை பற்றிய தீர்மானத்திற்கு ஆதரவாக 1886 வாக்குகளும் எதிராக 884 வாக்குகளும் கிடைத்தன. பெரும்பான்மையான பிரதிநிதிகள் கல்கத்தாவின் டாக்சி ஓட்டுனர்களேயன்றி வேறுயாருமல்ல, ஒத்துழையாமை தீர்மானத்திற்கு வாக்களிப்பதற்காக அவர்களுக்குப் பணம் தரப்பட்டது என்று மறைந்த திரு. டைர்சீ ஒருமுறை கூறினார்.

3. லிபரேடர், 1926 ஏப்ரல் 22.

வதந்தி நிலவியது. கிட்டத்தட்ட 433 முஸ்லீம் பிரதிநிதிகளில் 30 பேர் மட்டுமே வெளி இடங்களிலிருந்து வந்திருந்தனர். மீதமுள்ள வர்கள் லக்னோ நகரைச் சேர்ந்தவர்கள். இவர்களில் பெரும் பாலானவர்கள் இலவச இருப்பிடம், உணவு, தங்கும் வசதி ஆகியவற்றுடன் அனுமதிக்கப்பட்டிருந்தனர். சர் சையது அகமதுவின் காங்கிரஸ் எதிர்ப்பு லீக் சார்பில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில், பிரதிநிதிகளாக காங்கிரசுக்கு யாரும் செல்லவேண்டாமென்று முஸ்லீம்களைக் கேட்டுக்கொள்ளப் பட்டது. அதற்கு எதிர் நடவடிக்கையாக காங்கிரஸ்காரர்கள் கூட்டத் தொடர் நடைபெறுவதற்கு நான்கு இரவுகளுக்கு முன்னரே காங்கிரஸ் முகாமை விளக்குகளால் அலங்கரித்த துடன் கூட்டம் நடைபெறும் இரவில் அனுமதி இலவசம் என்றும் விளம்பரம் செய்தனர். அதன்பயனாக லக்னோவில் ''சந்துல் கானா''க்கள் எல்லாம் காலி செய்யப்பட்டு கிட்டத் தட்ட முப்பதாயிரம் இந்து-முஸ்லீம் பார்வையாளர்கள் மத்தி யில் ஆறு மேடைகளிலிருந்து உரைகள் முழங்கப்பட்டன. அப்போது தான் முஸ்லீம் பிரதிநிதிகள் தேர்ந் தெடுக்கப்பட்டனர் அல்லது தெரிவு செய்யப்பட்டனர். இவையனைத்தையும் தனிப்பட்ட முறையில் என்னிடம் லக்னோ காங்கிரஸ் அமைப் பாளர்கள் ஒப்புக் கொண்டனர்.

''முஸ்லீம் பிரதிநிதிகளைக் கொண்டு ஒரு கண்காட்சியே நடத்தப்பட்டது. ஒரு தீர்மானத்தை வழிமொழிய முஸ்லீம் பிரதிநிதி எழுந்து ''ஹஸரத், நான் ஒரு முஸ்லீம் பிரதிநிதி'' என்று கூறுகிறார். இச்சமயம் ஒரு இந்துப் பிரதிநிதி எழுந்து முக மதியப் பிரதிநிதிகளுக்கு மூன்று முறை கரகோஷம் செய்யச் சொல்கிறார். கூட்டத்தில் அப்போது எழுந்த கரகோஷம் விளக்குவதற்கரியதாக மிக உற்சாகமாக இருந்தது.''

கிலாபத்தின் லட்சியத்தை சிரமேற்கொண்டு சென்றதில் திரு.காந்தி இரட்டை லாபம் எய்தினார். முஸ்லீம்களின் நம்பிக்கை யைப் பெறும் காங்கிரசின் திட்டத்தை அவர் நடைமுறைப் படுத்தினார். இரண்டாவதாக நாட்டில் காங்கிரசை ஒரு சக்தி வாய்ந்த இயக்கமாக திரு.காந்தி ஆக்கினார். இதில் முஸ்லீம்கள் கலந்து கொள்ளாமல் இருந்திருந்தால் இது சாத்தியமாயிராது. அர சியல் பாதுகாப்பைவிட முஸ்லீம்களுக்கு கிலாபத்தின் நோக்கம் நெஞ்சிற்கினியதாயிருந்தது. அதன் காரணமாக வெளியில் இருந்து

கவனித்துவந்த முஸ்லீம்களும்கூட காங்கிரசுக்குள் அணிவகுத்துச் சென்றனர். இந்துக்கள் அவர்களை வரவேற்றனர். தங்களது முக்கிய நோக்கமான பிரிட்டிஷாரை எதிர்க்கும் ஒரு பொதுவான அணி யாக இதனை அவர்கள் கண்டதே இதற்குக் காரணம். திரு.காந்தி யையே இப்பெருமைசாரும். ஏனெனில் அது பெரும்துணிச்சல் மிக்க செயல் என்பதில் ஐயமேதும் இருக்க முடியாது.

துருக்கிக்கும் கிலாபத்துக்கும் உதவுவதற்காக முஸ்லீம்கள் தொடங்கவிரும்பிய ஒத்துழையாமை இயக்கத்தில் கலந்துகொள்ளு மாறு 1919 இல் முசல்மான்கள் இந்துக்களை அணுகியபோது, இந்துக்கள் மூன்று அணிகளாகப் பிரிந்திருப்பது தெரியவந்தது. கொள்கையளவில் ஒத்துழையாமையை எதிர்த்தவர்கள் ஓர் அணி யினர். பசுவதையைக் கைவிட முசல்மான்கள் ஒப்புக் கொள்வ தானால் ஒத்துழையாமை இயக்கத்தில் முஸ்லீம்களுடன் கலந்து கொள்ளத் தயாராக இருந்த இந்துக்கள் இரண்டாவது அணியைச் சேர்ந்தவர்கள். ஆப்கனிஸ்தான் நாட்டவரை இந்தியாவின் மீது படையெடுக்குமாறு அழைப்பதற்குத் தங்களது ஒத்துழையாமையை முகமதியர்கள் விரிவுபடுத்தக்கூடும் என்றும், அவ்வாறு நடைபெறும் பட்சத்தில் இந்த இயக்கம் சுயராஜ்யத்தைக் கொண்டு வருவ தற்குப் பதிலாக முஸ்லீம் ராஜ்யத்திற்கு அடிமைப்படுவதில் போய் முடியக்கூடும் என்றும் அஞ்சிய இந்துக்கள் மூன்றாவது அணி யினராக இருந்தனர்.

ஒத்துழையாமை இயக்கத்தில் முஸ்லீம்களுடன் சேருவதை எதிர்க்கும் இந்துக்களைப் பற்றி திரு. காந்தி கவலைப்பட வில்லை. மற்றவர்களைப் பொறுத்தவரை அவர்களது அணுகுமுறை துரதிருஷ்டவசமானது என்று அவர்களிடமே திரு.காந்தி கூறினார். பசுவதையை முஸ்லீம்கள் கைவிட்டால் தங்களது ஆதரவைத் தரத் தயார் என்று கூறிய இந்துக்களுக்கு திரு. காந்தி கூறியதாவது:[1]

> "இங்கு கோரக்ஷா (பசுப் பாதுகாப்பு) பிரச்சினையை இந்துக் கள் கிளப்ப மாட்டார்கள் என்று எண்ணுகிறேன். ஆபத்துக் காலத்தில் உதவி செய்வது, அதுவும் நிபந்தனையற்ற உதவி செய்வதுதான் உண்மையான நட்புக்கு அடையாளம். லாபத்துக்காக ஒத்துழைப்பது என்பது வர்த்தகரீதியான ஒப்பந்த மாக இருக்குமேயன்றி நட்புறவாக இராது. நிபந்தனையுடன்

1. 'யங் இந்தியா', 1919 டிசம்பர் 10

கூடிய ஒத்துழைப்பு என்பது கலப்படம் செய்யப்பட்ட சிமெண்ட்டைப் போன்றது. அது ஒட்டாது. முகமதியர்களுடைய நோக்கத்தில் நியாயம் இருப்பதாக இந்துக்கள் எண்ணினால் அவர்களுடன் ஒத்துழைப்பது அவர்களது கடமையாகும். இந்துக்கள் ஒத்துழைத்தாலும் ஒத்துழைக்காவிட்டாலும் இந்துக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பது பசுவதையை நிறுத்த வேண்டுமென்று முகமதியர்கள் எண்ணினால் அவர்கள் அவ்வாறே செய்யலாம். ஆகவே பசுவை வழிபடுவதில் எந்த இந்துவுக்கும் நான் சளைத்தவனல்ல, ஆனால் ஒத்துழைப்புக்கு முன் நிபந்தனையாக பசுவதையை நிறுத்தவேண்டுமென்று நான் கூற மாட்டேன்.''

இந்தியாவின் மீது படையெடுக்க முஸ்லீம்கள் ஆப்கனியர்களை அழைக்கக்கூடும் என்பதனால் ஒத்துழையாமை இயக்கத்தில் சேருவதற்கு அஞ்சிய இந்துக்களைப் பற்றி திரு. காந்தி கூறியதாவது:[1]

''இந்துக்களின் எச்சரிக்கை உணர்வைப் புரிந்துகொள்வதும் அதனை நியாயப்படுத்துவதும் மிகவும் எளிதானது. எனது கருத்துப்படி, இஸ்லாமிய சக்திகளுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையில் ஒரு போர்க்களமாக மாறுவதிலிருந்து இந்தியாவைத் தடுப்பதற்கான மிகச்சிறந்தவழி, ஒத்துழையாமை இயக்கத்தை ஒரு முழுமையான இயக்கமாக, வெற்றிகரமான இயக்கமாக மாற்ற இந்துக்கள் உதவுவதுதான். அறிவிக்கப்பட்ட நோக்கங்களுக்கு முகமதியர்கள் உண்மையாக இருந்து பொறுமையைக் கடைப்பிடித்து தியாகங்கள் செய்ய முடிந்தால், இந்துக்களும் அதற்கேற்ப நடந்து கொண்டு ஒத்துழையாமையில் அவர்களுடன் கலந்து கொள்வர் என்பதில் எனக்கு ஐயமில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் அதன் கூட்டாளிகளுக்கும் ஆப்கனிஸ்தானுக்கும் இடையில் ஒரு ஆயுதமேந்திய மோதலை ஊக்குவிப்பதிலோ அல்லது ஏற்படுத்துவதிலோ இந்துக்கள் நிச்சயமாக முகமதியர்களுக்கு உதவமாட்டார்கள் என்று கருதுகின்றேன். இந்திய எல்லைகளைத் தாண்டி யாரும் வெற்றிகரமாகப் போர்தொடுப்பதை அனுமதிக்காத அளவுக்கு பிரிட்டிஷ் படைகள் வலிமை

1. 'யங் இந்தியா', 1920 ஜூன் 9.

மிக்கவை. ஆகவே இஸ்லாமின் கௌரவத்தைக் காப்பதற்கான ஓர்உறுதியான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதற்கு ஒரேவழி ஒத்துழையாமை இயக்கத்தை மனமார மேற்கொள்வதுதான். விரிவான அளவில் அது மக்களால் மேற்கொள்ளப்படுமானால் அது பெரிதும் பயனுறுதி கொண்டதாக இருப்பது மட்டுமன்றி தனிப்பட்ட மனச்சாட்சிக்கும் அது முழுமையான வாய்ப்பை வழங்கும். ஒரு தனிநபரோ அல்லது ஒரு நிறுவனமோ செய்யும் நியாயமற்ற காரியத்தை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது என்றால், அந்தத் தனிநபர் அல்லது நிறுவனத்தின் செயல்களை நியாயப்படுத்துவதில் நான் நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஈடுபட்டு இருப்பேனாகில் அதற்காக கடவுளுக்கு முன்னால் நான் பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்; எனக்குக் கெடுதல் செய்பவர்களுக்குகூட தீங்கு நினைக்க மறுக்கிற தார்மிக நெறிகளுடன் மனித சக்திக்குட்பட்ட அனைத்தையும் இடையறாது நான் செய்து வந்திருக்கிறேன். மேற்கூறப்பட்ட விதத்தில் அதர்மத்தை ஆதரிப்பதை நிறுத்திக் கொண்டிருக்கிறேன். ஆகவே, இவ்வளவு மகத்தான சக்தியைப் பிரயோகப்படுத்துவதில், அவசரம் கூடாது. கோபத்தை வெளிப்படுத்தக்கூடாது. ஒத்துழையாமை என்பது முற்றிலும் சுய விருப்பத்தினடிப்படையிலமைந்த முயற்சியாக இருக்கவேண்டும். அப்போது, எல்லாமே முகமதியர்களைப் பொறுத்துத்தான் அமையும். அவர்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொண்டால் இந்துக்களின் உதவியும் கிட்டும். அப்போது அரசாங்கம் அது எவ்வளவு மகத்தானதாகவும் பலம்வாய்ந்ததாகவும் இருந்தாலும் ஒரு ஒட்டுமொத்த நாட்டின் ரத்தம் சிந்தாத சாத்விக எதிர்ப்புக்கு முன்னால் தலைவணங்கித்தான் ஆகவேண்டும்.''

துரதிருஷ்டவசமாக , ''ஒரு ஒட்டுமொத்த தேசத்தின் ரத்தம் சிந்தாத எதிர்ப்பை எந்த ஒரு அரசாங்கமும் தாக்குப்பிடித்து நிற்க முடியாது'' என்ற திரு. காந்தியின் நம்பிக்கை பொய்யாயிற்று. ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கிய ஓராண்டிற்குள்ளாகவே முசல்மான்கள் பொறுமை இழந்தவர்களாகிவிட்டனர் என்பதை ஒப்புக்கொண்டு திரு.காந்தி கூறியதாவது:

''தங்களது பொறுமையற்ற கோபத்தில் முசல்மான்களும் காங்கிரசும் கிலாபத் அமைப்புகளும் அதிக செயலூக்கத்துடன் உடனடியாக கூடுதல் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டு

மென்று கோருகின்றனர். முசல்மான்களைப் பொறுத்தவரை சுயராஜ்யம் என்றால் கிலாபத் பிரச்சினையில் செயலூக்க மாகச் செயல்படும் இந்தியாவின் திறமை என்பதாகும். சுய ராஜ்யத்தை எய்துவது என்றால், ஐரோப்பியக் கடல் நீரில் துருக்கி அழிந்து விடுவதை பார்க்கும் கையாலாகாத நேரடி சாட்சியாக மாறுவதற்கு இந்தியாவின் முசல்மான்களுக்கு காலவரையின்றி தாமதமாகும் ஒரு திட்டம் என்பதால் முசல் மான்கள் பொறுத்திருக்க மறுக்கிறார்கள்.

''இந்த அணுகுமுறையின்பால் அனுதாபம் கொள்ளா திருப்பது கடினம். வேறு ஏதாவது பயனுறுதியான வழியைப் பற்றி என்னால் சிந்திக்க முடிந்தால் நான் அதை உடனடி யாகச் செயல்படுத்த பரிந்துரை செய்வேன். கிலாபத்தின் நலன்களை விரைவிலேயே எய்தமுடியுமானால் சுயராஜ்யம் சம்பந்தமான நடவடிக்கைகளை ஒத்திப்போடுமாறு மகிழ்ச்சி யுடன் கூறுவேன். கோடிக்கணக்கான முசல்மான்களுக்கு ஏற் பட்டுள்ள மனப்புண்ணை ஆற்றுவதற்காக, என்னால் ஏதேனும் செய்யமுடியுமானால், ஒத்துழையாமைக்கு அப்பாற்பட்ட நடவடிக்கைகளையும் நான் மகிழ்ச்சியுடன் மேற்கொள்வேன்.

''ஆனால், சுயராஜ்யத்தை எய்துவதுதான் கிலாபத் தவறு களைத் திருத்தும் அதிவிரைவான முறை என்பது எனது பணிவான கருத்து. ஆகவே, என்னைப் பொறுத்தவரை கிலாபத் **பிரச்சினையின் தீர்வுதான் சுயராஜ்யத்தை எய்துவதாகும்.** இன்னலுக்குள்ளாகியிருக்கும் துருக்கிக்கு உதவுவதற்கான ஒரே வழி, தனது நிலையை வலியுறுத்திக்கொள்ள முடிகிற அள வுக்குப் போதுமானசக்தியை இந்தியா உருவாக்கிக் கொள்வதாகத் தான் இருக்கும். உரிய காலத்தில் அந்த சக்தியை உருவாக்கிக் கொள்ள இந்தியாவால் முடியவில்லை எனில், இந்தியாவுக்கு உய்யும் மார்க்கம் ஏதும் கிடையாது. தவிர்க்க முடியாத விளைவுகளுக்குத் தயாராகிக் கொள்ளவேண்டியதுதான். தனது இளம்பிள்ளைவாத நோயைக் குணப்படுத்திக் கொள்ளாமல், பக்கத்திலிருப்பவனுக்கு உதவிக்கரம் நீட்டுவதானால் மட்டும் அவனால் என்ன செய்துவிடமுடியும்? அறியாமை, சிந்திக்கும் ஆற்றலின்மை, வன்முறை வேண்டுமென்று கோபவேசமாகப் பொரிந்துதள்ளுவது போன்றவை அடக்கிவைத்திருக்கும் ஆத்தி ரத்திற்கு வடிகாலாக அமையுமே தவிர துருக்கிக்கு எந்த விதமான நிவாரணத்தையும் கொணராது.''

திரு. காந்தியின் அறிவுரைகளை செவிமடுக்கும் மனநிலையில் முசல்மான்கள் இருக்கவில்லை. அகிம்சை எனும் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ள அவர்கள் மறுத்து விட்டனர். அவர்கள் சுயராஜ்யத்திற்காகக் காத்திருக்கவும் தயாராக இல்லை. துருக்கிக்கு உதவவும் கிலாபத்தைப் பாதுகாக்கவும் அதிவிரைவான வழிமுறையைக் கண்டறிவதில் அவர்கள் அவசரம் காட்டினர். பொறுமையிழந்த முஸ்லீம்கள், அவர்கள் என்ன செய்வார்கள் என்று இந்துக்கள் பயந்தார்களோ - அதாவது இந்தியா மீது படையெடுக்குமாறு ஆப்கன்களை அழைப்பது - அதையே செய்தார்கள். அது சம்பந்தமாக கிலாபத் இயக்கத்தவர்கள் ஆப்கனிஸ்தானின் அமீருடன் எந்த அளவுக்குப் பேச்சுவார்த்தைகள் நடத்தினர் என்பதை அறிவது கடினம். ஆனால் அவர்கள் அத்தகைய முயற்சியில் இறங்கினார்கள் என்பது சந்தேகத்திற்கு அப்பாற்பட்டது. இந்தியாவின் மீது படையெடுக்க வேண்டும் என்ற திட்டம் மிக ஆபத்தானது என்பதை சொல்ல வேண்டியதில்லை. சிந்திக்கும் திறன் கொண்ட ஒவ்வொரு இந்தியனும் அந்தப் பைத்தியக்காரத்தனமான திட்டத்தில் தன்னை இணைத்துக் கொள்ள மாட்டான். இத்திட்டத்தில் திரு.காந்தி எத்தகைய பங்காற்றினார் என்று கண்டறிவது கடினம். நிச்சயமாக அவர் இத்திட்டத்திலிருந்து ஒதுங்கியிருக்கவில்லை. மாறாக சுயராஜ்யத்தை எப்படியும் அடைந்து விடுவது என்ற அவரது அபரிமிதமான ஆர்வம், அதை அடைவதற்கு இந்து-முஸ்லீம் ஒற்றுமைதான் ஒரே வழி என்ற அவரது வெறி ஆகியவைதான் அவரை அத்திட்டத்திற்கு ஆதரவளிக்கச் செய்தன. பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் எந்த ஒரு ஒப்பந்தமும் செய்துகொள்ள வேண்டாம் என்று அமீருக்கு[1] அறிவுரை கூறியதுமட்டுமன்றி அவர் பின்வருமாறு பிரகடனமும் செய்தார்:

> ''பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக ஆப்கனிஸ்தான் அமீர் போர்தொடுப்பாரேயானால் நிச்சயமாக நான் அவருக்கு ஒத்துழைப்பைத் தருவேன். அதாவது நாட்டு மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்ட ஒரு அரசாங்கம் அதிகாரத்தில் இருப்பதற்கு உதவிசெய்வது ஒரு குற்றமாகும் என்று எனது நாட்டு மக்களுக்கு நான் பகிரங்கமாகக் கூறுவேன்.''

இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக, தெளிந்த சிந்தனையுள்ள எந்த ஒரு மனிதரும் இந்த அளவுக்கு போவாரா? ஆனால்

---

1. 'யங் இந்தியா', 1921 மே 4.

திரு.காந்திக்கு இந்து-முஸ்லீம் ஒற்றுமையின்மையின்பால் கொண்டிருந்த நாட்டம், இப்பைத்தியக்காரத்தனமான முயற்சிக்கு தாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை சற்றே நிதானமாக எண்ணிப் பார்க்கும்படிச் செய்யவில்லை. இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கான அடித்தளத்தை இடுவதில் அதிக அக்கறை கொண்டிருந்த திரு. காந்தி, இத்தேசிய நெருக்கடி சம்பந்தமாகத் தமது ஆதாரவாளர்களுக்கு அறிவுரை கூற மறக்கவில்லை. 1920 செப்டம்பர் 8 ஆம் தேதியிட்ட யங் இந்தியாவில் எழுதிய கட்டுரையில் திரு.காந்தி கூறியதாவது:

''மதராஸ் பயணத்தின்போது, பெஜவாடாவில், தேசிய நெருக்கடி சம்பந்தமாகக் கருத்துக் கூறும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது, மனிதர்களைவிட லட்சியங்களைப் பற்றிய முழக்கங்கள் நன்மை பயக்கும் என்று யோசனை கூறினேன். மகாத்மா காந்திக்கு ஜே, முகமது அலி, சவுகத் அலிக்கு ஜே என்று முழங்குவதற்குப் பதிலாக இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு ஜே என்று கூறுமாறு நான் பார்வையாளர்களைக் கேட்டுக் கொண்டேன். என்னைத் தொடர்ந்து பேசிய சகோதரர் சவுகத் அலி ஆக்கப்பூர்வமான விதிமுறைகளை முன்வைத்தார். இந்து-முஸ்லீம் ஒற்றுமையையும் மீறி இந்துக்கள் வந்தே மாதரம் என்று குரலெழுப்பினால் முஸ்லீம்கள் அல்லாஹோ அக்பர் என்று குரலெழுப்புகின்றனர் என்று அவர் குறிப்பிட்டார். இது காதுகளில் அபசுரமாக ஒலிக்கின்றது. மக்கள் ஒருமித்த கருத்துடன் இன்னும் செயல்படவில்லை என்று அவர் மிகச்சரியாகவே சொன்னார். ஆகவே மூன்று முழக்கங்கள் மட்டுமே அங்கீகரிக்கப்பட வேண்டும். கடவுளைத் தவிர வேறு எவரும் மகத்தானவர் அல்ல என்பதைக் கூறும் விதத்தில் இந்துக்களும் முஸ்லீம்களும் மகிழ்ச்சியுடன் அல்லாஹோ அக்பர் என்று பாடலாம். இரண்டாவது, வந்தேமாதரம் (தாய் மண்ணுக்கு வணக்கம்) அல்லது பாரத் மாதா-கி-ஜெய் (பாரத அன்னை வாழ்க) என்ற முழக்கம். மூன்றாவது, இந்து-முஸ்லீம் ஒற்றுமை வாழ்க என்ற முழக்கம். இந்த முழக்கம் இன்றி இந்தியாவுக்கு வெற்றி இல்லை. கடவுளின் மகத்துவத்தை இதைத்தவிர வேறுவழியில் வெளிப்படுத்தவும்முடியாது. பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளவர்களும் செய்தி ஏடுகளும் மவுலானாவின் இந்த யோசனைகளை ஏற்று இந்த மூன்று முழக்கங்களை மட்டுமே பயன்படுத்துமாறு மக்களைக் கேட்டுக்கொள்ளவேண்டும். அவை அர்த்தம் நிறைந்தவை.

1

முதலாவது ஒரு பிரார்த்தனை, நமது சிறுமையின் ஒப்புதல் வாக்குமூலம், ஆகவே அது நமது அடக்கத்தின் அறிகுறி, எல்லா இந்துக்களும் முஸ்லீம்களும் பக்தியுடனும் பிராத் தனை உணர்வுடனும் முழங்கவேண்டிய ஒரு முழக்கம் அது. அரேபியச் சொற்களின் பொருள் வெறுப்பூட்டாததாக, கண்ணியமானதாக இருக்கும்போது அவற்றை உச்சரிப் பதற்கு இந்துக்கள் வெட்கப்படவேண்டியதில்லை. எந்த ஒரு குறிப்பிட்ட மொழியையும் மதிப்பவரல்ல கடவுள். வந்தே மாதரம் - அந்த அற்புதமான சொல், தனது தோழமையைத் தவிர நமது ஒரே தேசிய விருப்பமாம், இந்தியா வானளாவ எழுந்து நிற்பதைத் தெரிவிக்கிறது. பாரத மாதாவுக்கு ஜே என்று சொல்வதைவிட வந்தே மாதரம் என்று சொல்வதையே நான் விரும்புகின்றேன், ஏனெனில் அது வங்காளத்தின் அறிவார்ந்த, உணர்வு பூர்வமான மேலாண்மையை கௌரவத்துடன் அங்கீ கரிப்பதாகும். இந்து-முஸ்லீம் இதயங்கள் இணையாமல் இந்தியா இல்லை என்பதால் இந்து-முசல்மான்-கி-ஜெய் என்ற முழக்கத்தை நாம் ஒருபோதும் மறக்கலாகாது.

''இந்த முழக்கங்களில் முரண்பாடுகள் இருத்தல் கூடாது. இந்த மூன்று முழக்கங்களையும் ஒருவர் கூறியவுடனே மற்ற வர்களும் அதைக் கூறவேண்டும். தங்களுக்குப் பிடித்தமானதை முழங்கிவிட்டு மற்றவற்றை விட்டுவிடக் கூடாது. இந்த முழக் கங்களை முழங்க விருப்பமல்லாதவர்கள் ஒதுங்கியே இருக்க லாம். ஆனால் ஏற்கனவே ஒரு முழக்கம் முழக்கப்படும் போது வேறு ஒரு முழக்கத்தை முழக்குவது நாகரிகமாகாது என்பதைக் கருதிப் பார்க்கவேண்டும். எப்போதுமே மேற் கூறப்பட்ட வரிசைப்படியே இந்த முழக்கங்களை எழுப்புவது நன்றாக இருக்கும்.''

இந்து-முஸ்லீம் ஒற்றுமையை உருவாக்குவதற்கு திரு.காந்தி செய்த விஷயங்கள் இவைமட்டுமே அல்ல. இந்துக்களுக்கு எதிராக முஸ்லீம்கள் குற்றம் புரிந்தபோது அவர் ஒருபோதும் அவர்களைக் குற்றவாளிகள் என்று கூறியதில்லை. தங்களது எழுத்துக்களின் மூலமும் அல்லது சுத்தி இயக்கத்தில் பங்கேற்றதன் மூலமும் முஸ்லீம்களின் மதஉணர்வுகளைப் புண்படுத்திய பல பிரபல இந்துப் பிரமுகர்கள் சில வெறித்தனமான முசல்மான்களால் கொலை செய்யப்பட்டனர் என்பது வேதனையான உண்மையாகும். முதலாவ தாகப் பலியானவர் சுவாமி சிரத்தானந்தர், 1926 டிசம்பர் 23 அன்று

நோய்வாய்ப்பட்டு படுக்கையில் இருந்த அவர் அப்துல் ரஷீத் என்பவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். அதைத் தொடர்ந்து டில்லி யில் பிரபல ஆரிய சமாஜவாதியாக இருந்த லாலா நானக்சந்த் கொலை செய்யப்பட்டார். **ரங்கிலா ரசூல்** நூலை எழுதிய ராஜ்பால் தமது கடையில் உட்கார்ந்திருந்த பொழுது 1929 ஏப்ரல் 6 அன்று இலம்தீன் என்பவனால் குத்திக் கொல்லப்பட்டார். நாதுர்மல் சர்மா என்பவர் 1934 செப்டம்பரில் அப்துல் கயூம் என்பவனால் கொலை செய்யப்பட்டார். அந்தக் கொலை மிகவும் துணிச்சல் நிறைந்த சம்பவமாக இருந்தது. இஸ்லாமின் வரலாறு சம்பந்தமாக ஒரு துண்டுபிரசுரத்தை வெளியிட்டதற்காக அவருக்கு அளிக்கப் பட்ட தண்டனையை எதிர்த்து முறையீடு செய்து தீர்ப்புக்காக சிந்து மாகாணத்தின் நீதித்துறைக் கமிஷரின் நீதிமன்றத்தில் அமர்ந்திருந்த போதுதான் சர்மா குத்திக் கொல்லப்பட்டார். இந்து சபையின் செய லாளரான கன்னா, அகமதாபாதில் நடைபெற்ற இந்து மகாசபையின் கூட்டத்தொடருக்குப் பின்னர் 1938 இல் கடுமையாகத் தாக்கப்பட்டு, மயிரிழையில் உயிர் பிழைத்தார்.

இது மிகவும் சிறிய பட்டியல்தான். இதை இன்னும் விரிவு படுத்திக் கொண்டே போகலாம். ஆனால் முஸ்லீம் மத வெறியர் களால் கொல்லப்பட்ட பிரபலமான இந்துக்களின் எண்ணிக்கை அதிகமா, குறைவா என்பது முக்கிய விஷயமல்ல. இதில் முக்கியம் என்னவெனில் இக்கொலைகாரர்களை நம்பிக் கொண்டிருப் பவர்களின் அணுகுமுறைதான். சட்டம் தனது கடமையை செய்த போது கொலைகாரர்கள் தண்டனை அனுபவித்தனர், ஆயினும் முன்னணி முஸ்லீம்கள் இக்குற்றவாளிகளை ஒருபோதும் கண்டித்த தில்லை. மாறாக அவர்கள் மத தியாகிகள் என்று போற்றப் பட்டனர். அவர்களுக்கு மன்னிப்பு வழங்கவேண்டுமென்று ஆர்ப் பாட்டமும் நடத்தப்பட்டது. இந்த அணுகுமுறையை விளக்க லாகூரைச் சேர்ந்த பாரிஸ்டர் திரு.பர்கத் அலியை மேற்கோள் காட்ட முடியும். அவர் அப்துல் கயூமின் மேல் முறையீட்டில் ஆஜராகி வாதாடினார். நாதுர்மல்லை கொலை செய்ததினால் கயூமைக் குற்றவாளி என்று கூறமுடியாது என்று வாதிட்டார். ஏனெனில் அவருடைய செயல் குர்ஆனின் கூற்றுப்படி நியாய மானதே ஆகும் என்றார் அவர். முஸ்லீம்களின் இந்த அணுகு முறை புரிந்து கொள்ளக் கூடியதே. இதில் புரிந்துகொள்ளமுடி யாதது திரு. காந்தியின் அணுகுமுறைதான்.

எந்த ஒரு வன்முறைச் செயலையும் கண்டனம் செய்யும் விஷயத்தில் திரு.காந்தி மிகவும் கண்டிப்பாக, உறுதியாக இருந்தார். இத்தகைய விஷயங்களில் வன்முறைச் செயல்களைக் கண்டிக்கு மாறு காங்கிரசை நிர்ப்பந்தம் கூடச் செய்தார். ஆனால் மேலே கூறிய கொலைகளை திரு.காந்தி ஒருபோதும் கண்டித்துப் பேசியதில்லை. முசல்மான்களும் கூட இக் கொலைகளைக் கண்டனம்[1] செய்ய வில்லை. ஆனால் திரு.காந்தியும் கூட இச்சம்பவங்களை முன்னணி முஸ்லீம்கள் கண்டனம் செய்யவேண்டும் என்று கூறியதில்லை. இந்த விஷயத்தில் அவர் மௌனம் சாதித்து வந்தார். இந்து-முஸ்லீம் ஒற்றுமையைப் பேணிக் காப்பதில்தான் திரு.காந்தி அக்கறை கொண் டிருந்தார். அவர்களுடைய உயிர்களைத் தியாகம் செய்வதன் மூலம் சுயராஜ்யம் கிட்டுமானால் ஒருசில இந்துக்கள் கொலை செய்யப் படுவதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை என்றுதான் அவ ருடைய அணுகுமுறையை விளக்க முடியும்.

ஒற்றுமை எனும் லட்சியத்தைப் பாதிக்கக்கூடாது என்பதற் காக முஸ்லீம்கள் செய்யும் எந்தத் தவறுகளையும் மன்னித்து விடும் இந்த அணுகுமுறை, மாப்ளா கலவரங்களின் விஷயத்தில் திரு.காந்தி கூறிய கருத்துகளினால் தெளிவாக விளக்கப்படுகின்றது.

இந்துக்களுக்கு எதிராக மலபாரில் மாப்ளாக்கள் பிரிந்த ரத்தத்தை உறைய வைக்கும் கொடூரச் செயல்கள் வார்த்தை களில் விளக்க வொண்ணாதவை. தென்னிந்தியாவெங்கிலும் எல்லா விதமான கருத்துக்களையும் கொண்ட இந்துக்களிடையே பயங்கர உணர்வுகள் கொந்தளித்தன. ''மதத்திற்காக மாப்ளாக்கள் நடத்திவரும் துணிச்சல் மிகுபோரில் அவர்களுக்குப் பாராட்டுக்கள்'' என்ற தீர்மானங்களை சில தவறான எண்ணம்கொண்ட கிலாபத் தலை வர்கள் இயற்றியபோது இந்துக்களுடைய வெறுப்பு அதிகமாயிற்று. இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு இது மிக அதிகமானவிலை என்று எவரும் கூறிவிடலாம். ஆனால், இந்து-முஸ்லீம் ஒற்றுமையை எப்படியும் ஏற்படுத்திடவேண்டும் என்ற ஒரே எண்ணத்தில் இருந்த திரு.காந்தி மாப்ளாக்களின் அடாத செயல்களையும் அவர்களைப் புகழ்ந்துரைத்த கிலாபத்துகளையும் பெரிது படுத்தாதிருக்க தயாராக இருந்தார். ''தாங்கள் மதம் என்றும் மதசம்பந்தமானது என்றும் நம்பும் நோக்கத்திற்காப் போராடிவரும் துணிச்சல்மிக்க கடவுள்

---

1. சுவாமி சிரத்தானந்தரைக் கொலை செய்த அப்துல் ரஷீதின் ஆத்மா அடுத்த உலகில் சாந்தி அடையும் பொருட்டு தியோபாந்திலுள்ள புகழ்பெற்ற இறைமை இயல் கல்லூரியின் மாணவர்களும் பேராசிரியர்களும் குரானை முற்றிலும் ஐந்து முறை ஓதினர்; நாள்தோறும் ஒன்றே கால் லட்சம் குரான் செய்யுள்களை ஓதுவதற் கும் திட்டமிட்டனர். ''சர்வ வல்லமை படைத்த ஆண்டவர் மர்ஹூனுக்கு (அதாவது ரஷீதுக்கு) 'அ' அலா-இ-இல்லீயனில் (ஏழாவது சுவர்க்கத்தில்) இடமருள வேண்டும் என்பதே அவர்களது பிரார்த் தனை'' - டைம்ஸ் ஆப் இந்தியா, 30.11.22, இந்தியர்களின் கண்ணோட்டத்தில்' எனும் பகுதி.

பக்தி கொண்ட மாப்ளாக்கள்'' என்று மாப்ளாக்களைப் பற்றி அவர் கூறினார். மாப்ளாக்களின் அடாவடிச் செயல்களைப் பற்றி முஸ்லீம்கள் மௌனம் சாதிப்பதைக் குறித்துப் பேசும்போது திரு.காந்தி இந்துக்களுக்குக் கூறியதவாது:

''இத்தகைய மதவெறிச் செயல்களையும் மீறி தங்களது மதத்தைத் தங்களால் பாதுகாத்துக் கொள்ளமுடியும் என்பதை உணர இந்துக்கள் மனோதிடத்தையும் நம்பிக்கையையும் கொண்டிருக்கவேண்டும். மாப்ளா கலவரத்திற்காக முசல்மான்களை வார்த்தைகளால் விமர்சனம் செய்வது என்பது முசல்மான்களின் நட்புறவை சோதிப்பதாகாது. கட்டாயமாக மதமாற்றம் செய்தல், சொத்துக்களை சூறையாடுதல் போன்ற மாப்ளாக்களின் நடவடிக்கைகளைக் கண்டு முசல்மான்கள் உண்மையிலேயே வெட்கப்பட வேண்டும், துன்பப்பட வேண்டும், தங்களிடையே உள்ள மிகமோசமான மதவெறிகொண்ட பகுதியினரிடையே கூட இத்தகைய சம்பவங்கள் சாத்தியமில்லை என்ற அளவுக்கு அவர்கள் அமைதியாகவும் உறுதியாகவும் செயல்படவேண்டும். மாப்ளாக்களின் அடாத செயலை ஓர் அமைப்பு என்ற முறையில் இந்துக்கள் அதைக் கொந்தளிப்பின்றி அணுகுகின்றனர், பண்பட்ட முசல்மான்கள் நபிகளின் போதனைகளிலிருந்து மாப்ளாக்கள் நெறி பிறழ்ந்து விட்டதாக வருத்தம் தெரிவிக்கின்றனர் என்பது எனது கருத்து.''

மாப்ளாக்களின் அடாதசெயல்கள் குறித்து காங்கிரஸ் செயல்கமிட்டி இயற்றிய தீர்மானம், [1] முசல்மான்களின் உணர்வுகளை பாதித்துவிடாமல் இருக்கவேண்டுமென்பதில் காங்கிரஸ் எவ்வளவு கவனமாக இருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

''மலபாரின் சில பகுதிகளில் மாப்ளாக்கள் நடத்திய வன்முறை வெறியாட்டங்களை ஆழ்ந்த வருத்தத்துடன் செயல் கமிட்டி கருத்தில் கொள்கிறது. காங்கிரஸ் மற்றும் மத்திய கிலாபத் கமிட்டியின் குறிக்கோளை சரிவரப்

1. மூன்று சந்தப்பங்களில் மட்டுமே கட்டாய மதமாற்றம் செய்யப்பட்டுள்ளது என்று தீர்மானம் கூறுகிறது!! மத்திய சட்டமன்றத்தில் ஒரு கேள்விக்கு பதிலளித்த (விவாதங்கள் 1922 ஜனவரி 16) சர் வில்லியம் வின்சென்ட் கூறியதாவது: ''கட்டாய மதமாற்றம் செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை ஆயிரக்கணக்கில் இருக்கக் கூடும். ஆனால் சில காரணங்களினால் சரியான புள்ளிவிவரங்களைப் பெறுவது எப்போதும் சாத்தியமில்லை என்று சென்னை அரசாங்கத்தின் அறிக்கை கூறுகிறது.''

புரிந்துகொள்ளாத மக்கள் இந்தியாவில் இன்னமும் இருக்கிறார்கள் என்ற உண்மைக்கு இச் சம்பவங்கள் சான்று பகருகின்றன, இந்தியாவெங்கிலும் மிக மோசமான ஆத்திரமூட்டும் சந்தர்ப்பத்திலும் கூட அகிம்சையை மேற்கொள்ள வேண்டுமென்ற செய்தியை ஒவ்வொரு காங்கிரஸ் மற்றும் கிலாபத் தொண்டரும் பரப்ப வேண்டும் என்றும் காங்கிரஸ் செயல் கமிட்டி கேட்டுக் கொள்கிறது.

''மாப்ளாக்களின் வன்முறைச் செயல்களைக் கண்டனம் செய்யும் அதே சமயம், தன்வசமுள்ள சாட்சியங்களின்படி மாப்ளாக்கள், அளவுக்கதிகமாக ஆத்திரமூட்டப்பட்டனர் என்றும், அரசாங்கத்தின் தரப்பிலிருந்தும் மாப்ளாக்கள் செய்த குற்றச் செயல்களைப்பற்றி ஒருதரப்பான மிகைப்படுத்தப்பட்ட செய்திகள் அறிக்கைகளாக வெளியிடப்பட்டன என்றும் அதேசமயம் அமைதியையும் ஒழுங்கையும் ஏற்படுத்துவது என்ற பெயரால் அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளினால் ஏற்பட்ட உயிர்ச் சேதங்கள் குறைத்து மதிப்பிடப்பட்டுள்ளன என்றும் செயல்கமிட்டி அனைவருக்கும் தெரிவிக்க விரும்புகிறது.

''மாப்ளாக்களிடையே உள்ள ஒருசில வெறியர்களினால் கட்டாய மதமாற்றங்கள் செய்யப்பட்டன என்று சொல்லப்படுவது உண்மை என்று அறிந்து செயல்கமிட்டி வருந்துகிறது. ஆனால் அரசாங்கத்தையும் இட்டுக்கட்டப்பட்ட செய்திகளையும் நம்பவேண்டாமென்றும் பொதுமக்களை எச்சரிக்கிறது. கமிட்டிக்கு முன்னால் உள்ள அறிக்கை கூறுவதாவது:

''கட்டாயமாக முகமதிய மதத்திற்கு மாற்றப்பட்டதாகக் கூறப்படும் குடும்பங்கள் மஞ்சேரிக்கு அருகாமையில் வசிக்கின்றன. எப்போதுமே கிலாபத்தையும் ஒத்துழையாமை இயக்கத்தையும் எதிர்த்து வந்த ஒரு மதவெறிக் கும்பலினால் இந்துக்கள் கட்டாயமாக மதமாற்றம் செய்யப்பட்டனர் என்பது தெளிவு. எங்களுக்குக் கிடைத்த தகவலின்படி இத்தகைய மூன்று சம்பவங்கள்தான் நடைபெற்றுள்ளன.''

'லிபரேட்டர்' என்ற தமது வார ஏட்டில் சுவாமி சிரத்தானந்தர் முஸ்லீம்களின் விட்டுக்கொடுத்து இணங்கிப்போகாத குணத்தையும் அதைக்கண்டு திரு.காந்தி வாய்மூடி மௌனியாக இருந்ததையும் பின்வரும் சம்பவங்களைக் கொண்டு விளக்குகிறார். 1926 செப்டம்பர் 30-ஆம் தேதியிட்ட இதழில் சுவாமிஜி குறிப்பிட்டிருப்பதாவது:

''தீண்டாமையை அகற்றுவது சம்பந்தமாக, தங்களது கடந்த காலப் பாவச் செயல்களுக்குக் கழுவாய் தேடிக்கொள்ள வேண்டியது இந்துக்களின் கடமை என்றும், இந்துக்கள் அல்லாத வர்களுக்கு இதில் யாதொரு சம்பந்தமும் இல்லை என்றும் பலமுறை அதிகாரப்பூர்வமாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் வைக்கத்திலும் இதர இடங்களிலும் திரு.காந்தியின் ஆணையைக் காங்கிரசைச் சேர்ந்த முகமதியர்களும் கிறித்தவர்களும் கடுமையாக எதிர்த்துள்ளனர். சென்னையில் நான் உரையாற்ற அழைக்கப்பட்ட ஒரு கூட்டத்திற்கு தலைமை வகித்த திரு.யாகூப் ஹசன் போன்ற நடுநிலையான ஒருதலைவர்கூட, இந்தியாவிலுள்ள தீண்டத்தகாத மக்களையெல் லாம் இஸ்லாமுக்கு மாற்றும் கடமை முசல்மான்களுக்கு உண்டு என்று பகிரங்கமாகக் கூறினார்.''

ஆனால் முஸ்லீம்களையோ அல்லது கிறித்தவர்களையோ கண்டிக்கும் விதமாக திரு. காந்தி எதையும் சொன்னதில்லை.

1926 ஜுலை இதழில் சுவாமி எழுதுகிறார்:

''நான் மகாத்மா காந்தியின் கவனத்தை ஈர்த்த மற்றுமொரு முக்கியமான விஷயமும் இருக்கிறது. நாகபுரியில் கிலாபத் காங் கிரசுக்கு ஒருநாள் இரவு நாங்கள் இருவரும் ஒன்றாகச் சென்றோம். அச்சந்தர்ப்பத்தில் மௌலானாக்கள் குரானிலிருந்து வாசித்த அயாத்து களில்(செய்யுள்வரிகள்) அடிக்கடி ஜிகாத் (புனிதப்போர்) பற்றியும் காஃபீர்களைக் கொல்வது பற்றியும் மேற்கோள்கள் அடங்கியிருந் தன. கிலாபத் இயக்கத்தின் இந்தக் கட்டத்தின்பால் நான் அவரது கவனத்தை ஈர்த்தபோது மகாத்மாஜி சிரித்துவிட்டு, 'அவர்கள் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தையே அவ்வாறு கூறுகிறார்கள்' என்றார். இதற்குப் பதிலளிக்கும் முறையில் இவையனைத்தும் அகிம்சை எனும் கருத்துக்குப் பாதகம் விளைவிப்பதாகும், இந்த உணர்வுகள் திசைமாறும்போது முகமதிய மௌலானாக்கள் இதே செய்யுள் வரிகளை இந்துக்களுக்கு எதிராகப் பயன்படுத்தாமல் இருக்கமாட்டார்கள் என்று நான் கூறினேன்.''

சுவாமியின் மூன்றாவது உதாரணம் மாப்ளா கலவரங்கள் சம்பந்தமானது. 1926 ஆகஸ்டு 26 ஆம் தேதியிட்ட லிபரேட்டரில் அவர் இவ்வாறு கூறுகிறார்:

''இந்துக்களின்மீது மாப்ளாக்கள் புரிந்துவரும் அட்டூழியங்களைக் கண்டிக்கும் பிரச்சினை விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் வந்தபோது முதலாவது எச்சரிக்கை ஒலிக்கப்பட்டது. இந்துக்களைக் கொலை செய்தமைக்காகவும் இந்து இல்லங்களை எரித்துச் சாம்பலாக்கியமைக்காகவும் இந்துக்களைக் கட்டாயமாக மதமாற்றம் செய்தமைக்காகவும் ஒட்டுமொத்தமாக மாப்ளாக்களைக் கண்டிக்கும் முறையில்தான் நகல் தீர்மானம் அமைந்திருந்தது. இத்தீர்மானத்திற்கு இந்து உறுப்பினர்களே சில திருத்தங்களைக் கொண்டு வந்தனர். அப்போது அத்தீர்மானம் மேற்கூறப்பட்ட குற்றச் செயல்களுக்கு ஒருசில தனிநபர்களை மட்டுமே பொறுப்பாக்கிக் கண்டனம் செய்யுமளவுக்கு சுருங்கிவிட்டது. ஆனால் சில முஸ்லீம் தலைவர்களுக்கு இதைக்கூட பொறுத்துக் கொள்ள முடியவில்லை. மௌலானா ஃபகீரும் மற்றும் இதர மௌலானாக்களும் அத்தீர்மானத்தை எதிர்த்ததில் விந்தையேதும் இல்லை. ஆனால் முழுக்கமுழுக்க தேசியவாதியான மௌலானா ஹஸ்ரத் மோஹினியைப் போன்ற ஒருவர், மாப்ளாக்களின் நாடு இப்போது தார்-உல்-அமான் ஆக இல்லை., தார்-உல்-ஹராப்-ஆக மாறிவிட்டது. மாப்ளாக்களின் பிரிட்டிஷ் எதிரிகளுடன் இந்துக்கள் கூட்டுசேர்ந்திருக்கிறார்கள் என்று தாங்கள் சந்தேகிப்பதாகவும் கூறி அத்தீர்மானத்தை எதிர்த்தது கண்டு நான் வியந்துபோனேன்.

> ஆகவே இந்துக்களுக்கு மாப்ளாக்கள் குரான் அல்லது வாள் பரிசாக வழங்கியது சரியே, சாவிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள இந்துக்கள் முசல்மான்களானால் அது சுயவிருப்பத்தின் அடிப்படையில் மதம்மாறிய செயலாகுமே தவிர கட்டாய மதமாற்றம் ஆகாது. சில மாப்ளாக்களை மட்டுமே கண்டனம் செய்த அந்த உப்புசப்பற்ற தீர்மானம்கூட ஒருமனதாக இயற்றப்படவில்லை, பெரும்பான்மை வாக்குகளினாலேயே அது ஏற்றுக்கொள்ளப்பட்டது. தங்களுடைய தயவினால் தான் காங்கிரஸ் உயிர் பிழைத்திருக்கிறது, தங்களுடைய தனிமனப்போக்கை அசட்டைசெய்வதற்கு எந்த சிறுமுயற்சி மேற்கொள்ளப்பட்டாலும் மேலோட்டமான ஒற்றுமை குலைந்துவிடும் என்று முசல்மான்கள் கருதுவதைக் காட்டும் இதர அறிகுறிகளும் தென்பட்டன.''

இறுதி உதாரணம் திரு.காந்தி தொடங்கிய அன்னியத் துணிகளை எரிப்பது சம்பந்தமானது. 1926 ஆகஸ்டு 31 ஆம் தேதியிட்ட லிபரேட்டரில் சுவாமிஜி இவ்வாறு எழுதுகிறார் :

''அன்னியத் துணிகளைத் தீயிட்டுக் கொளுத்துவது இந்தியர்களின் புனிதக் கடமை என்று மக்கள் முடிவுக்கு வந்தனர். திருவாளர்கள் தாஸ், நேரு மற்றும் இதர பெருந் தலைவர்கள் பல்லாயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள துணி களைத் தீக்கிரையாக்கினர். ஆனால் அப்போது கிலாபத் முசல்மான்கள் அன்னியத் துணிகள் அனைத்தையும் துருக்கி யிலுள்ள தங்களது சகோதரர்களின் உபயோகத்திற்கு அனுப்பி வைக்க மகாத்மாஜியிடமிருந்து அனுமதி பெற்றனர். இது மீண்டும் எனக்குப் பெரும் அதிர்ச்சியை அளித்தது. ஒரு கொள்கைப் பிரச்சினை என்று வரும்போது பிடிவாதமாகவும், இந்துஉணர்வுகளுக்கு சற்றும் மதிப்பளிக்காதவராகவும் இருக் கிறார் மகாத்மாஜி, ஆனால் முஸ்லீம்கள் கடமையிலிருந்து தவறும்போது அவரது உள்ளத்தில் அவர்கள்பால் எப்போதும் ஒரு தனிப்பாசம் இருந்து வரவே செய்கிறது.''

இந்து-முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கான அவரது முயற்சியின் வரலாற்றில் இரு சம்பவங்களைக் குறிப்பிட்டாக வேண்டும். ஒன்று, 1924 ஆம் ஆண்டில் திரு.காந்தி மேற்கொண்ட உண்ணாவிரதம். அந்த உண்ணாவிரதம் 21 நாட்கள் நீடித்தது. அந்த உண்ணாவிரதத்தை மேற்கொள்ளுமுன் திரு.காந்தி அதற்கான கார ணங்களை ஓர் அறிக்கையில் விளக்கியிருந்தார். அந்த அறிக்கை யிலிருந்து பின்வரும் பகுதிகள் எடுக்கப்பட்டன:

''இரண்டாண்டுகளுக்கு முன்பு வரை நண்பர்களாக ஒன்றாகப் பாடுபட்டுவந்த இந்துக்களும் முசல்மான்களும் இப்போது சில இடங்களில் பூனைகளைப் போலவும் நாய் களைப் போலவும் சண்டையிட்டு வருகின்றனர் என்ற உண்மை, அவர்கள் முன்வந்து ஏற்றுக்கொண்ட ஒத்துழை யாமை, வன்முறையற்றது அல்ல என்பதை அறுதியிட்டுக் காட்டுகின்றது. பம்பாயிலும் செளரிசெளராவிலும் இன்னும் பல இடங்களில் நடைபெற்ற சம்பவங்களிலும் அந்த அறிகுறிகளை நான் கண்டேன். அப்போது நான் கழுவாய் தேடினேன். அந்த அளவு வரையில் அதற்குப் பயன் கிடைத்தது. ஆனால் இந்த இந்து-முஸ்லீம் பதட்டம் நினைத்தும் பார்க்க முடியாதது. கோஹாத் துயரசம்பவத்தைக் கேள்விப்பட்டபோது எனக்கு நெஞ்சு பொறுக்கவில்லை. சபர்மதியிலிருந்து நான் டில்லிக்கு புறப்படுவதற்கு முன்னதாக, அமைதியைப்பற்றிய உரை களும் போதனை மட்டுமே போதாது என்று சரோஜினிதேவி

எனக்கு எழுதினார். நான் ஒரு பயனுள்ள தீர்வைக் காண வேண்டும். அப்பொறுப்பை மிகச் சரியாகவே அவர் என்மீது சுமத்தியிருக்கிறார். மக்கள் சக்தியை ஒன்று திரட்டுவதற்கு நான் காரணமாக இருந்தேன் அல்லவா? அந்த சக்தி தானாகவே அழிந்து விடக்கூடியது என்று தெரிந்தபின்னர் அதற்கு ஒரு மாற்றையும் நான் கண்டாக வேண்டும்''

⋆ ⋆ ⋆

''அமேதி, சம்பல், குல்பர்கா ஆகிய இடங்களில் நடைபெற்ற சம்பவங்கள் என்னைப் பெரும் அதிர்ச்சியில் ஆழ்த்திவிட்டன. இந்து மற்றும் முஸ்லீம் நண்பர்கள் அமேதி, சம்பல் சம்பவங்களைப் பற்றித் தயாரித்த அறிக்கைகளைப் படித்தேன். குல்பர்காவுக்குச் சென்ற இந்து மற்றும் முசல்மான் நண்பர்கள் கூட்டாகக் கண்டறிந்த உண்மைகளை அறிந்து கொண்டேன். நான் பெரும் வேதனையில் உழன்றேன். ஆயினும் அதற்கு ஒரு தீர்வு காண என்னால் முடியவில்லை. கொஹாட் சம்பவங்களைப் பற்றிய செய்தி புகைந்து கொண் டிருந்த என் உள்ளத்தை எரிமலையாக்கிவிட்டது. ஏதாவது செய்தாகவேண்டும். இரு இரவுகளைத் தூக்கமன்றி வேதனை யில் கழித்தேன். புதனன்று எனக்கு வழி தெரிந்தது. நான் பிராயச்சித்தம் செய்ய வேண்டும்.

''என்மீது அன்பு வைத்திருப்பதாகக் கூறும் இந்துக் களுக்கும் முஸ்லீம்களுக்கும் இது ஓர் எச்சரிக்கை. உண்மை யிலேயே அவர்கள் என்னை நேசித்திருப்பார்களேயானால், அவர்களுடைய அன்புக்கு நான் பாத்திரமாக இருந்திருப் பேனேயானால் அவர்களுடைய உள்ளத்தில் கடவுளுக்கு இடமளிக்க மறுத்த பாவத்திற்காக என்னுடன் சேர்ந்து அவர் களும் கழுவாய் தேட வேண்டும்.

''இந்துக்கள் மற்றும் முஸ்லீம்கள் கழுவாய் தேடுவது என்பது உண்ணாவிரதம் இருப்பதல்ல. மாறாக, தங்களது தவறுகளைத் திருத்திக் கொள்ளுதல் ஆகும். தனது இந்து சகோ தரன்பால் பகைமைஉணர்வு கொள்ளாதிருத்தலே ஒரு முசல் மானுக்கு உண்மையான பிராயச்சித்தமாகவும் அதே போன்று தனது முஸ்லீம் சகோதரன்பால் எந்தஒரு பகைமை உணர்வை யும் வளர்த்துக்கொள்ளாதிருத்தலே ஒரு இந்துவுக்கு உண்மை யான பிராயச்சித்தமாக இருக்கும்.

''நான் எனது நண்பர்களைக் கலந்தாலோசிக்கவில்லை - புதனன்று என்னுடன் வெகுநேரம் தனியாக இருந்த ஹக்கீம் சாகிபை யும் கூட நான் கலந்தாலோசிக்கவில்லை - யாருடைய வீட்டில் விருந்தாளியாகத் தங்கியிருக்கிறேனோ அந்த மௌலானா முகமது அலியையும்கூட நான் கலந்தாலோசிக்கவில்லை.

''ஒரு முசல்மானின் வீட்டில் தங்கிக்கொண்டு உண்ணா விரதம் இருப்பது சரிதானா? (அச்சமயத்தில் டில்லியில் காந்தி திரு.முகமது அலியின் வீட்டில் விருந்தினராக இருந்தார்.) ஆம் சரி தான். எந்த ஒரு தனிமனிதருக்கும் எதிரான பகைமை உணர்வின் காரணமாக எழுந்ததல்ல என் உண்ணாநோன்பு. ஒரு முசல்மானின் வீட்டில் நான் இருப்பது அத்தகைய கூற்றுக்கள் எழாமல் உறுதி செய்கிறது. இந்த உண்ணாநோன்பு ஒரு முசல்மானின் வீட்டில் மேற்கொள்ளப்பட்டு அங்கேயே நிறைவு செய்வது தான் மிகச் சரியாக இருக்கும்.

''முகமது அலி யார்? இரண்டுநாட்களுக்கு முன்னர்தான் ஒரு சொந்த விஷயத்தைப்பற்றிய ஒரு விவாதத்தின்போது அவரிடம் நான், எனக்குச் சொந்தமானதெல்லாம் அவருடையது என்றும் அவருக்குச் சொந்தமானதெல்லாம் என்னுடையது என்றும் கூறி னேன். முகமது அலியின் வீட்டில் எனக்குக் கிடைத்த விருந்தோம் பலை விட வேறுஎங்கும் எனக்கு மனமுவந்த, சிறந்த உபசரிப்பு கிடைக்கவில்லை என்பதை நன்றியுடன் கூறிக்கொள்கிறேன். என் தேவைகள் முன்கூட்டியே உணரப்பட்டு எனக்குப் பணிவிடைகள் செய்யப்பட்டன. அவருடைய வீட்டிலிருந்த ஒவ்வொருவருடைய மேலான சிந்தனையும் என்னை மகிழ்ச்சியுடனும் வசதியுடனும் வைத்திருப்பதாகவே இருந்தது. மருத்துவ நிபுணர்களான அன்சாரியும் அப்துர் ரஹ்மானும் அவர்களாகவே என்னுடைய மருத்துவ ஆலோ சகர்களாகச் செயல்பட்டனர். அவர்கள் தினமும் என்னைப் பரி சோதிப்பார்கள். என்னுடைய வாழ்நாளில் பல மகிழ்ச்சிகரமான சம்பவங்களைச் சந்தித்திருக்கிறேன். அத்தகைய முந்தைய சம்பவங் களைவிட இது எந்தவகையிலும் குறைந்ததல்ல. வாழ்க்கை என்பது வெறும் உணவுமட்டும் அன்று. இங்குநான் மிகஉயர்ந்த அன்பை அனுபவித்து வருகிறேன். இது எனக்கு உணவை விடவும் மேலானது.

''முசல்மான் நண்பர்களுடன் நான் இவ்வளவு நெருக்கமாக இருப்பதனால் இந்துக்களின் உள்ளக் கிடக்கையை அறிந்து கொள்வதற்கு தகுதியற்றவனாகிறேன் என்று கிசுகிசுக்கப்

படுகிறது. இந்துக்களின் உள்ளக்கிடக்கை என்பதே நான்தான். என்னுடைய நரம்புகள் ஒவ்வொன்றும் இந்துவாக இருப்பதால் இந்துவின் உள்ளக்கிடக்கையைத் தெரிந்து கொள்வதற்காக நான் இந்துக்கள் மத்தியில் வாழுவதில்லை என்பது உண்மைதான். மிகவும் பாதகமான சூழல்களில் எனது இந்து உணர்வு பரிமளிக்கவில்லை என்றால் அது மிகவும் மோசமாகத் தான் இருக்கவேண்டும். இந்து மதத்திற்கு என்ன தேவை என்பதை உணர்வுபூர்வமாக நான் அறிவேன். ஆனால் முசல்மானின் மனதில் என்ன இருக்கிறது என்பதைக் கண்டறிய நான் பாடுபட்டாகவேண்டும். மிகச்சிறந்த முசல்மான்களுடன் நான் எவ்வளவு நெருக்கமாக இருக்கின்றேனோ, அந்த அளவுக்கு முசல்மான்களைப் பற்றியும் அவர்களது நடவடிக்கைகளைப் பற்றியும் என்னால் ஒரு நேர்மையான, மதிப்பீடு செய்ய முடியும். இரு சமுதாயங்களுக்கிடையில் மிகச் சிறந்த பாலமாக மாற விழைகிறேன். தேவைப்பட்டால் எனது ரத்தத்தைச் சிந்தியேனும் இந்த இரு சமுதாயங்களையும் இணைக்க வேண்டுமென்பதுதான் எனது அவா. அதைச் செய்வதற்கு முன்னால் இந்துக்களை நேசிப்பது போலவே நான் முசல்மான்களையும் நேசிக்கிறேன் என்பதை அவர்களுக்கு நான் நிரூபித்துக் காட்டவேண்டும். அனைவரையும் சமமாக நேசிக்க வேண்டும் என்று எனது மதம் எனக்குப் போதித்துள்ளது. அவ்வாறு செய்வதற்குக் கடவுள் எனக்குத் துணைநிற்பாராக! இதர விஷயங் களுக்கிடையில், அந்த சமதையான சுயநலமற்ற நேசத்தை எய்துவதற்கு என்னைத் தகுதிப்படுத்திக் கொள்வதற்காகத்தான் நான் உண்ணாநோன்பு மேற்கொள்கிறேன்.''

உண்ணாவிரதத்தின் பயனாகப் பல ஒற்றுமை மாநாடுகள் நடத்தப்பெற்றன. ஆனால், வெறும் தீர்மானங்கள் இயற்றியதை தவிர அந்த ஒற்றுமை மாநாடுகள் எதையும் சாதிக்கவில்லை, அத்தீர்மானங்களும்கூட அவை அறிவிக்கப்பட்ட உடனேயே மறக்கப் பட்டு விட்டன.

இந்து-முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்துவதில் திரு.காந்தி வகித்த பாத்திரத்தைப்பற்றிய இந்தச் சிறு வரலாற்றுக் குறிப்பை, வகுப்பத்தீர்வு சம்பந்தமான பேச்சுவார்த்தைகளில் திரு.காந்தியின் அணுகுமுறையை மேற்கோள் காட்டி முடித்துக் கொள்ளலாம். முஸ்லீம்களுக்கு அவர்களே பூர்த்தி செய்துகொள்ளக்கூடிய வெற்றுக்

காசோலையை வழங்கினார்; அதாவது அவர்கள் விரும்பிய சலுகைகளை எல்லாம் வழங்கினார். அதை ஒரு தட்டிக் கழிக்கும் செயல் என்று முஸ்லீம்கள் கருதிய காரணத்தால் அச் சலுகைகள் அவர்களைக் கோபமடையச் செய்தன. வட்டமேசை மாநாட்டில் தனிவாக்காளர் தொகுதிகளை அவர் எதிர்த்தார். வகுப்புவாரித் தீர்ப்பு முஸ்லீம்களுக்குத் தனித் தொகுதிகளை வழங்கியபோது திரு.காந்தியும் காங்கிரசும் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் அது சம்பந்தமாக வாக்கெடுப்பு என்று வந்தபோது, அதை ஏற்றுக்கொள்ளவோ அல்லது மறுக்கவோ செய்யாமல் ஒரு விநோத மான அணுகுமுறையை மேற்கொண்டனர்.

இந்து - முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்தும் திரு.காந்தியின் முயற்சிகளுடைய வரலாறு இதுதான். இந்தமுயற்சிகளினால் கிட்டிய பலன் என்ன? இக்கேள்விக்குப் பதிலளிக்க வேண்டுமெனில் 1920-40 ஆண்டுகளில், அதாவது இந்து-முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்தவேண்டும் என்று திரு.காந்தி கடினமாக உழைத்துவந்த அந்த ஆண்டுகளின்போது இரு சமூகங்களுக்கும் இடையில் நிலவிய உறவை ஆராய்வது அவசியம். பழைய இந்திய அரசாங்கச் சட்டத்தின் படி இந்திய அரசாங்கத்தினால் நாடாளுமன்றத்திற்கு ஆண்டு தோறும் சமர்ப்பிக்கப்படும் இந்திய விவகாரங்கள் குறித்த ஆண்டு அறிக்கைகளில் இந்த உறவுமிக நன்றாக விளக்கப்பட்டுள்ளது. இந்த அறிக்கைகளிலிருந்து[1] பின்வரும் உண்மைகளை மேற்கோள் காட்டுகிறேன்:

1920 ஆம் ஆண்டு தொடங்கியதுடன், அதே ஆண்டில் மலபாரில் மாப்ளா கலவரம் என்று அறியப்படும் கலவரம் நடை பெற்றது. இரு முஸ்லீம் அமைப்புகளான குத்தம்-இ-கபா(மெக்கா ஆலயத்தின் பணியாளர்கள்). மத்திய கிலாபத் கமிட்டி ஆகியவை மேற்கொண்ட கிளர்ச்சிகளின் காரணமாகத்தான் அக்கலவரம் நடை பெற்றது. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் உள்ள இந்தியா தார்-உல்-ஹராப் என்றும் அதை எதிர்த்து முஸ்லீம்கள் போராட வேண்டும் என்றும் அவர்கள் கூறினர். அவ்வாறு செய்யமுடியாவிடில் **ஹிஜ்ரத்** என்ற மாற்றுக் கொள்கையை மேற்கொள்ளவேண்டும் என்ற சித்தாந்தத்தைக் கிளர்ச்சிக்காரர்கள் போதித்தனர். இந்தக் கிளர்ச்சி மாப்ளாக்களைத் திடீரென்று உணர்ச்சிவயப்படச் செய்தது. இக்

1. ''1920 இல் இந்தியா'' என்று இத்தொடர் அறியப்படுகிறது.

கிளர்ச்சி வெடித்தது முக்கியமாக பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்து தான். பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தூக்கி எறிந்துவிட்டு இஸ்லாமிய அரசை நிலைநாட்டுவதுதான் அதன் நோக்கம். கத்திகள், வாள்கள், ஈட்டிகள் ஆகியவை ரகசியமாக உற்பத்தி செய்யப்பட்டன. வெறி கொண்ட கும்பல்கள் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின்மீது தாக்குதல் தொடுப்பதற்குத் தயாரரகக் கூடின. ஆகஸ்டு 20 அன்று பிருனங்காடி என்ற இடத்தில் மாப்ளாக்களுக்கும் பிரிட்டிஷ் படைகளுக்கும் இடையில் கடுமையான மோதல் நிகழ்ந்தது. பல இடங்களில் சாலை களில் தடைகள் ஏற்படுத்தப்பட்டன, தந்திக் கம்பங்கள் அறுக்கப் பட்டன, இருப்புப்பாதைகள் அழிக்கப்பட்டன. நிர்வாகம் ஸ்தம்பித்துப் போனவுடன், தாங்கள் சுயராஜ்யத்தை ஏற்படுத்தி விட்டதாக மாப்ளாக்கள் பிரகடனம் செய்தனர். அலி முதலியார் என்பவர் ராஜாவாக அறிவிக்கப்பட்டார். எங்கும் கிலாபத் கொடிகள் பறக்க விடப்பட்டன. எர்நாடு, வல்லுரனா ஆகியவை கிலாபத் அரசு களாக அறிவிக்கப்பட்டன. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கெதிரான கலகம் என்றமுறையில் அது புரிந்துகொள்ளக்கூடியதே. ஆனால் மலபார் இந்துக்களை மாப்ளாக்கள் நடத்திய விதம்தான் அனை வரையும் திகைப்படையச் செய்தது. மாப்ளாக்களின் வெங்கொடுமை களுக்கு இந்துக்கள் உள்ளானார்கள். படுகொலைகள், கட்டாய மதமாற்றங்கள், கோயில்களின் புனிதத்தைக் கெடுத்தல், கர்ப்ப மடைந்த பெண்களை வயிற்றைக் கிழித்தல் போன்ற பெண்களின் மீது புரிந்த பாதகச் செயல்கள், கொள்ளை, சூறையாடல், அழிவு - சுருக்க மாகச் சொன்னால் கொடூரத்தின் ஒட்டுமொத்த உருவமாக, தங்கு தடை யற்ற காட்டுமிராண்டித்தனத்தை இந்துக்களின் மீது மாப்ளாக்கள் கட்டவிழ்த்து விட்டனர். அந்தக் கடினமான பரந்த பகுதிகளில் ஒழுங்கை நிலைநாட்டுவதற்கு ராணுவத்தினர் வந்து சேரும் வரை யிலும் இக்காட்டுமிராண்டித்தனம் நீடித்தது. அது இந்து-முஸ்லீம் கலவரமல்ல. அது மற்றுமொரு பார்த்தலோமியோ அவ்வளவுதான். கொல்லப்பட்ட, காயமடைந்த அல்லது மதமாற்றம் செய்யப்பட்ட இந்துக்களின் எண்ணிக்கை நமக்குத் தெரியாது. ஆனால் அது பெரும் எண்ணிக்கையாகவே இருக்க வேண்டும்.

1921-22 ஆம் ஆண்டில் வகுப்பு மாச்சரியங்கள் குறைய வில்லை. வங்காளத்திலும் பஞ்சாபிலும் முகரம் கொண்டாட்டங் களின்போது மிக மோசமான கலவரங்கள் நடைபெற்றன. குறிப்பாக பஞ்சாபில் முல்தானில் மதவெறி உணர்வுகள் உச்சக்கட்டத் துக்குப் போய்விட்டன, அதில் இறந்தவர்களின் எண்ணிக்கை

குறைவாக இருந்தபோதிலும் சொத்துக்களுக்குப் பெருத்த சேதம் ஏற்படுத்தப்பட்டது.

1922-23 ஆம் ஆண்டு அமைதியாக இருந்தபோதிலும் கூட இரு வகுப்புகளுக்கிடையிலான உறவுகள் 1923-24ம் ஆண்டு வரையிலும் பாதிக்கப்பட்ட நிலையிலேயே இருந்தன. **கொஹாத்** நகரைப் போல வேறு எங்கும் இந்தப் பதட்டம் இவ்வளவு சோகமான விளைவுகளை ஏற்படுத்தவில்லை. நச்சுத்தன்மைகொண்ட இஸ்லாமிய-எதிர்ப்புக் கவிதை ஒன்று ஒரு துண்டுப்பிரசுரத்தில் இடம் பெற்றிருந்ததே அங்கு பிரச்சினை வெடிப்பதற்கு உடனடிக் காரணமாகும். 1924 செப்டம்பர் 9 மற்றும் 10 ஆகிய நாட்களில் பயங்கரக் கலவரங்கள் மூண்டன; மொத்தம் இறந்தவர்கள், காயமடைந்தவர்களின் எண்ணிக்கை 155 ஆக உயர்ந்தது. ரூபாய் 9 லட்சம் மதிப்புள்ள சொத்துக்கள் சேதமடைந்ததாகவும், பெருமளவில் பொருள்கள் சூறையாடப்பட்டன என்றும் மதிப்பிடப்பட்டது. அந்தப் பயங்கர கலவரம் நீடித்ததன் காரணமாக **கொஹாத் நகரி**லிருந்து இந்துக்கள் ஒட்டுமொத்தமாக வெளியேறினர். நீடித்த பேச்சுவார்த்தைகளுக்குப் பின்னர் இரு வகுப்பினருக்குமிடையில் சமரச உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது, சில சம்பவங்களில் சம்பந்தப்பட்டவர்களைத் தவிர கலவரத்தில் ஈடுபட்டவர்கள் மீது நடந்துவரும் வழக்குகள் கைவிடப்படும் என்று அரசாங்கம் உறுதியளித்தது. கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்கள் தங்களது வர்த்தகங்களை மீண்டும் தொடங்கவும், தங்களது வீடுகளைக் கட்டிக்கொள்ளவும் அரசாங்கம் வட்டியில்லாக் கடன் வழங்கியது. சிலருடைய விஷயங்களில் ரூபாய் ஐந்து லட்சம் வரை வழங்கப்பட்டது. தீர்வு எட்டப்பட்டு வெளியேறிவர்கள் எல்லாம் **கொஹாத்துக்குத்** திரும்பி வந்த பின்னரும் கூட அமைதி ஏற்படவில்லை. 1924-25 ஆண்டு முழுவதும் இந்து-முஸ்லிம் மக்களிடையே நாட்டில் பல்வேறு பகுதிகளில் கவலைப்படும் அளவுக்குப் பதட்டம் அதிகரித்தது. கோடையில் அபாயகரமான எண்ணிக்கையில் கலவரங்கள் நடைபெற்றன. ஜூலையில் டில்லியில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் கடும் சண்டை வெடித்தது. அதைத் தொடர்ந்து பெருமளவில் உயிர்ச் சேதம் ஏற்பட்டது. அதே மாதத்தில் நாகபுரியிலும் மோசமான கலவரம் வெடித்தது. ஆகஸ்டு மாதம் இன்னும் மோசமாக இருந்தது. பிரிட்டிஷ் இந்தியாவில் லாகூர், லட்சுமணபுரி, மொராதாபாத், பாகல்பூர், நாகபுரி ஆகிய இடங்களிலும் கலவரங்கள் நடைபெற்றன; நிஜாமினுடைய ஆளுகைக்குட்பட்ட குல்பர்காவில் பெரும் கலவரம் மூண்டது. செப்டம்பர்-அக்டோபர் மாதங்களில் லட்சுமணபுரி,

ஷாஜகான்பூர், கன்கினாரா, அலகாபாத் ஆகிய இடங்களில் கவலை யளிக்கும் விதத்தில் சண்டைகள் நடைபெற்றன. அந்த ஆண்டில் நடைபெற்ற மிகமோசமான கலவரம் **கொஹாத்தில்** நடைபெற்றது. அதைத் தொடர்ந்து கொலை, கொள்ளை, தீவைப்பு ஆகியவும் நிகழ்ந்தன.

1925-26 இல் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடை யிலான பகைமை மேலும் பரவலாயிற்று. இந்த ஆண்டில் நடை பெற்ற இந்து-முஸ்லீம் கலவரத்தின் குறிப்பிடத்தக்க அம்சம் என்ன வெனில் சின்னஞ்சிறு கிராமங்கள் உட்பட அது மிகப்பரவலாக நடைபெற்றது என்பதுதான். கல்கத்தா, ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள், பம்பாய் மாகாணம் ஆகிய இடங்களிலெல்லாம் கல வரங்கள் நடைபெற்றன. சில இடங்களில் உயிர்சேதம் வருந்தத்தக்க அளவுக்கு ஏற்பட்டது. கல்கத்தா, பெரார், குஜராத், பம்பாய் மாகாணம், ஐக்கிய மாகாணங்கள் போன்ற இடங்களில் ஆகஸ்டு மாத இறுதி யில் நடைபெற்ற சில இந்துத் திருவிழாக்கள் இத்தகைய கலவரங் களுக்குக் காரணமாயின. இந்த இடங்கள் சிலவற்றில் இந்த இரு வகுப்பினர்களுக்கிடையில்தான் மோதல்கள் நடைபெற்றன. ஆனால் வேறு சில இடங்களில், குறிப்பாக, கல்கத்தாவின் சணல் ஆலைகள் நிறைந்த ஜனப்பெருக்கம் அதிகமாகவுள்ள கன்கினாராவில் நடை பெறவிருந்த பெரும் கலவரம் காவல்துறையின் முன்நடவடிக்கை யின் காரணமாகத் தடுத்து நிறுத்தப்பட்டது. இந்த மாதங்களில் குஜராத்தில் இந்து-முஸ்லீம் பகையுணர்வு அதிகரித்தது, குறைந்த பட்சம் ஒரு கோவிலின் புனிதத்தன்மைக்குப் பங்கம் விளைவிக்கப் பட்டது. செப்டம்பர் இறுதியில் நடைபெற்ற முக்கிய இந்துத் திரு விழாவான ராம்லீலாவின்போது பல இடங்களில் நடைபெற்ற சம்பவங்கள் கவலையளிப்பதாக இருந்தன. ஐக்கிய மாகாணங் களில் ஒரு முக்கிய நகரமான அலிகாரில் அத்திருவிழாவின்போது நடைபெற்ற கலவரங்கள் அந்த ஆண்டில் நடைபெற்ற சம்பவங் களிலேயே மிக மோசமானவையாகும். கவலையளிக்கும் விதத்தில் பெருமளவில் நடைபெற்ற கலவரங்களை ஒடுக்கி, ஒழுங்கை நிலைநாட்ட, போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்த வேண்டிய தாயிற்று. போலீசாரின் நடவடிக்கை காரணமாகவோ அல்லது கல வரங்களினாலோ ஐவர் கொல்லப்பட்டனர். லட்சுமணபுரியில் அத்திருவிழா நடைபெற்றபோது ஒரு சமயத்தில் அச்சுறுத்தக்கூடிய ஒரு நிலைமை தோன்றியது. ஆனால், உள்ளூர் அதிகாரிகள் கலவரம் நடைபெறாமல் தடுத்து விட்டனர். அக்டோபரில் பம்பாய் மாகா ணத்தைச் சேர்ந்த ஷோலாபூரில் மற்றுமொரு மோசமான கலவரம்

நடந்தது. அங்கு இந்துக்களின் தேர்த்திருவிழா நடைபெற்றது. தேர் ஒரு மசூதிக்கு அருகாமையில் வந்தபோது இந்துக்களுக்கும் முஸ்லீம் களின் ஒரு பிரிவினருக்கும் ஏற்பட்ட தகராறு கலவரமாக வெடித்தது.

முஸ்லீம்களுக்கும் ஆரிய சமாஜவாதிகள் சிலருக்கும் இடையே ஒரு மசூதிக்கு வெளியில் ஏற்பட்ட தகராறின் காரணமாக ஏப்ரல் தொடக்கத்தில் கல்கத்தாவில் தொடங்கிய மோசமான கலவரம் ஏப்ரல் 5- வரையில் நீடித்தது. ஒரே ஒரு சந்தர்ப்பத்தில்தான் அதாவது ஏப்ரல் 5-அன்று மாலையில் கோபாவேசமடைந்த ஒரு கும்பலை போலீஸ் அல்லது ராணுவம் எதிர்கொண்டது. அப்போது துப்பாக்கிச் சூடும் நடத்தப்பட்டது. பெருமளவில் தீவைப்புச் சம்பவங்களும் நடைபெற்றன. முதல் மூன்று நாட்களில் மட்டும் தீயணைப்புப் படையினர் 110 தீ விபத்துகளை சமாளிக்க வேண்டியிருந்தது. அக்கல வரங்களில் முன்னெப்போதும் இல்லாத அம்சமாக இந்துக் கோயில் கள் மீது முஸ்லீம்களும், மசூதிகளின்மீது இந்துக்களும் தாக்குதல் தொடுக்க ஆரம்பித்தனர். அதன்காரணமாக தீவிரக்கசப்புணர்வு தோன்றியது. மொத்தம் 44 பேர் இறந்தனர். 584 பேர் காயமடைந் தனர். ஓரளவுக்கு சூறையாடல் சம்பவங்களும் நடைபெற்றதால் வர்த்தகம் ஸ்தம்பித்துப்போயிற்று. கல்கத்தாவுக்கு இதனால் பெரும் பொருளாதார இழப்பு ஏற்பட்டது. 5 ஆம் தேதிக்குப் பின்னர் கடைகள் மீண்டும் திறக்கப்பட்டன. ஆனால் ஏப்ரல் 13 ஆம் நாள் ஒரு இந்துத் திருவிழாவும் 14 ஆம் நாள் ஈத் பெருவிழாவும் நடைபெற விருந்ததால் பதற்றம் நீடித்தது. 13 ஆம் தேதியன்று சீக்கியர்கள் ஒரு ஊர்வலம் நடத்தவிருந்தனர். அதற்குத் தேவையான அனுமதி யளிக்க இயலா நிலையில் அரசாங்கம் இருந்தது. ஏப்ரல் 13 அன்றும் 14 அன்றும் என்ன நடக்குமோ என்றிருந்த கவலைக்குமாறாக அதிருஷ்டவசமாக எந்த அசம்பாவிதமும் நடக்கவில்லை. ஏப்ரல் 22 வரை மேலோட்டமான அமைதி நிலவியது. பின்னர் ஒரு சிறிய தெருச்சண்டையின் காரணமாக திடீரென்று மீண்டும் கலவரம் ஆரம்பித்துவிட்டது. பொதுவாக, சிறிய அளவில் இரு வகுப்பாருக்கு மிடையில் ஏற்பட்ட மோதலுடன் ஆங்காங்கே நடைபெற்ற தாக்குதல் களும் கொலைகளும் ஆறு நாட்களுக்குத் தொடர்ந்தன. அந்தக் காலகட்டத்தில் கோயில்கள், மசூதிகளின் மீது தாக்குதல்கள் நடை பெறவில்லை. தீவைப்புச் சம்பவங்களும் சூறையாடலும் நடைபெற வில்லை. ஆனால் பல சந்தர்ப்பங்களில் கோபாவேசமாகக் கூடிய கும்பல்கள் போலீசைக் கண்டதும் கலைந்து செல்லாததால் 12 முறை துப்பாக்கிச்சூடு நடத்த வேண்டியது அவசியமாயிற்று. கலவரத்தின் இந்த இரண்டாவது கட்டத்தின்போது 66 பேர் இறந்தனர். 391 பேர் காயமடைந்தனர். முதலாவது கலவரங்களின்போது வர்த்தகம் பெரு

மளவுக்கு பாதிக்கப்பட்டது. மார்வாரிகளின் வர்த்தக நிறுவனங்கள் மூடப்பட்டதால் ஐரோப்பிய வர்த்தக நிறுவனங்களும் பெரிதும் பாதிப்புக்குள்ளாயின. அச்சம் காரணமாக பல சந்தைகள் ஒட்டு மொத்தமாகவோ அல்லது ஒரு பகுதியோ மூடப்பட்டு விட்டன. அநேகமாக இரண்டு நாட்கள்வரை இறைச்சி வினியோகம் நிறுத்தப் பட்டது. பெரும்பீதி நிலவியதன் காரணமாக கலவரப் பகுதிகளில் குப்பைகளை அகற்றும் பணியும் நிறுத்தப்பட்டது. நகராட்சி கோரியபடி போலீஸ் பாதுகாப்பு கிடைத்த உடனேயே சப்ளைகளைப் பாதுகாக்க வும் நகராட்சி துப்புரவுப் பணியாளர்களை வேலைக்குத் திரும்பச் செல்லவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கலவரப் பகுதிகள் சிறிதளவு அதிகரித்த போதிலும் கல்கத்தாவைச் சுற்றியுள்ள ஆலைப் பகுதிகளில் எந்த அசம்பாவிதங்களும் நடைபெறவில்லை. கலவரப் பகுதிகளில் முறையான காவல் துறை நடவடிக்கைகள், போக்கிரி களைக் கைதுசெய்தல், ஆயுதங்களைக் கைப்பற்றுதல், சிறப்புக் காவல் அதிகாரிகளாக பிரிட்டிஷ் ராணுவ வீரர்களை நியமித்து போலீஸ் படையைப் பெருக்கியது போன்ற நடவடிக்கைகள் விரும்பிய பலனைத் தந்தன. இங்கொன்றும் அங்கொன்றுமாக தாக்கு தல்களும் கொலைகளும் நடந்ததையும் மீறி கடைசி மூன்று நாட் களில் நிலைமை சீராக மேம்படுவதைக் காணமுடிந்தது. ஆங்காங்கே நடைபெற்ற கொலைகளைச் செய்பவர்கள் இரு வகுப்பினரையும் சேர்ந்த காலிகள்தான் என்று கூறப்பட்டது. முதலாவது, இரண்டாவது கலவரங்களின்போது இத்தகைய தனித்தனியான சம்பவங்கள் நடை பெறுவதற்கு இந்தக் காலிகள் கைக்கூலிகளாகச் செயல்பட்டனர் என்ற பொதுவான அபிப்பிராயமும் தோன்றியது. ஆத்திரமூட்டும் விதத்தில் இரு தரப்பினராலும் அச்சிடப்பட்டு வினியோகிக்கப் பட்ட துண்டுப் பிரசுரங்களின் வினியோகமும், கூலிக்கு அமர்த்தப் பட்ட ரவுடிகளின் அட்டகாசமும், இக் கலவரங்கள் தொடர்ந்து நடைபெற பெருமளவில் பணம் செலவிடப்படுகிறது என்ற எண்ணம் பலமடைந்ததும் இக்கலவரத்தின் மற்றுமொரு அம்ச மாகும்.

1926-27 ஆம் ஆண்டு தொடர்ந்து இனக்கலவரம் நடை பெறும் ஆண்டாக இருந்தது. 1926 ஏப்ரல் முதல் ஒவ்வொரு மாதமும் இரு சமூகத்தையும் சேர்ந்த பகைமையாளர்களிடையே ஏறக்குறைய கடுமையான தெருச்சண்டைகள் நடந்தன. இரு மாதங்கள் மட்டுமே கலவரம் நடைபெறாத மாதங்களாக இருந்தன. இந்த எண்ணற்ற கலவரங்களும் தெருச் சண்டைகளும் நடைபெற்ற சூழ்நிலைகளை ஆராயும்போது அவை இரு தனிநபர்களுக்கிடை யில், உதாரணமாக இந்து கடைக்காரர் ஒருவருக்கும் ஒரு முகமதிய

வாடிக்கையாளருக்கும் இடையில் ஏற்படும் அற்பமான, மிகச் சாதாரண வாக்குவாதங்களிலிருந்து தோன்றி பெரிதானவை என்றும், அல்லது பிரச்சினைக்கு உடனடிக்காரணம் ஏதோ ஒரு மதத் திருவிழா கொண்டாடப்பட்டதனால் அல்லது முகமதியர்களின் தொழுகை நடைபெறும் இடங்களுக்கு அருகில் இந்துக்கள் ஊர் வலத்தில் இசைநிகழ்ச்சிகளுடன் வருதல் போன்ற காரணங்களி னால் தோன்றியவை என்றும் தெரிகிறது. உண்மையில் ஒன்றிரண்டு கலவரங்கள் கோபாவேசத்திலும் பொதுவான உணர்ச்சி வேகத்திலும் நடைபெற்றவையேயன்றி வேறல்ல. ஜூன் 24 அன்று டில்லியில் நடைபெற்ற ஒரு சம்பவம் இதற்கு மிகத் தெளிவான உதாரணமாகும். சந்தடிமிகுந்த ஒரு தெருவில் மட்டக் குதிரை வேகமாக ஓடிவந்த பொழுது கலவரம் ஆரம்பித்து விட்டது என்ற எண்ணத்தை ஏற் படுத்தியது. உடனே இரு தரப்பினரும் ஒருவரையொருவர் கற்க ளாலும் கையில் கிடைத்த ஆயுதங்களாலும் தாக்கிக் கொண்டனர்.

1926 ஏப்ரல் மற்றும் மே மாதங்களின்போது கல்கத்தாவில் வெடித்த இரு கலவரங்கள் உள்ளிட்டு, 1927 ஏப்ரல் 1 ஆம் தேதி முடிய 12 மாதகாலத்தில் 40 கலவரங்கள் நடைபெற்றன, அதனால் இறந்தவர் எண்ணிக்கை 197 ஆகவும், பலத்த காயமடைந்தவர் களின் எண்ணிக்கை 1598 ஆகவும் ஆயிற்று. இந்தக் குழப்பமும் கொந்தளிப்பும் பரவலாக நடைபெற்றன. ஆனால், வங்காளம், பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள் ஆகிய இந்தியப் பகுதிகள்தாம் அதிக பாதிப்புக்குள்ளாயின. கலவரத்தினால் மிகவும் பாதிக்கப் பட்டது வங்காளம்தான். ஆனால் ஆண்டின் பல சந்தர்ப்பங்களில் பம்பாய் மாகாணம் சிந்து ஆகிய பகுதிகளில்தான் இந்துக்களுக் கும் முகமதியர்களுக்கும் இடையில் பதட்டம் அதிகமாக இருந்தது. கோடைகாலம் முழுவதும் கல்கத்தா அமைதியின்றி இருந்தது. ஜூன் 1 அன்று நடைபெற்ற ஒரு சிறிய வாக்குவாதம் பெருங்கலவர மாக மாறி நாற்பதுபேர் காயமடைந்தனர். அதற்குப் பின்னர் ஒரு முக்கிய இந்துமதத் திருவிழா நடைபெறவிருந்த ஜூலை 15 வரையில் மேலோட்டமான வன்முறையில் ஒரு தேக்கநிலை தெரிந்தது. அந்தக் கொண்டாட்டங்களின்போது பாண்டு வாத்தியங்கள் முழங்க அந்த ஊர்வலம் சில மசூதிகளைக் கடந்து சென்றபோது ஏற்பட்ட மோதலில் 14பேர் கொல்லப்பட்டனர். 116 பேர் காயமடைந்தனர். அடுத்த நாள் முக்கிய முகமதியப் பெருநாளான முகரம் தொடங் கியது. அந்த நாளில் கலவரங்கள் வெடித்தன; பின்னர் ஓரளவுக்கு அமைதி ஏற்பட்டது; 19, 20, 21, 22, 23, 24, 25 தேதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாக தாக்குதல்களும், கத்திக்குத்து சம்பவங்களும் நடைபெற்றன. கலவரத்தின் இந்தக் கால கட்டத்தில் 28பேர் இறந் தனர். 226பேர் காயமடைந்தனர் என்று கணக்கிடப்பட்டது. செப்

டம்பர் 15 மற்றும் அக்டோபர் 16 அன்று கல்கத்தாவில் மேலும் அதிகக் கலவரங்கள் நடைபெற்றன. அக்டோபர் 16 அன்று அருகாமையில் உள்ள நகரமான ஹௌராவில் நடைபெற்ற கலவரங்களின்போது ஒன்று அல்லது இரண்டுபேர் கொல்லப்பட்டனர். 30க்கும் அதிக மானவர்கள் காயமடைந்தனர். ஏப்ரல், மே மாதங்களில் நடைபெற்ற கலவரங்களின்போது திடீர் தீ விபத்துகள் ஏற்பட்டன. இந்த அம்சம் பின்னர் நடைபெற்ற குழப்பங்களின் போதும் ஜூலை கலவரங் களின்போதும் அநேகமாக முற்றிலுமாக இல்லாதிருந்தது, உதா ரணமாக நான்கு திடீர் தீ விபத்துக்களின் போது மட்டுமே தீயணைப்புப் படை அழைக்கப்பட்டது.

1927-28 ஆம் ஆண்டிற்கு வரும்போது பின்வரும் புள்ளி விவரங்கள் முகத்திலறைந்தாற்போன்ற உண்மைகளை நமக்குக் காட்டுகின்றன. 1927 ஏப்ரல் மாதத் தொடக்கத்திற்கும் செப்டம்பர் இறுதிக்கும் இடையில் 25க்கும் குறையாத கலவரங்கள் நடைபெற்ற தாக அறிவிக்கப்பட்டது. அவற்றில் ஐக்கிய மாகாணங்களில் 10 கலவரங்களும், பம்பாய் மாகாணத்தில் 6 கலவரங்களும், பஞ்சாப், மத்திய மாகாணங்கள், வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய இடங் களில் தலா இரண்டும், டெல்லியில் ஒரு கலவரமும் நடைபெற்றன. இரு சமூகத்தினரில் ஏதேனும் ஒரு சமூகத்தினர் கலந்து கொண்ட மதசம்பந்தமான கொண்டாட்டங்களின்போதுதான் பெரும் பான்மையான கலவரங்கள் நடைபெற்றன. அதேசமயம் சில இடங் களில் மசூதிகளுக்கு அருகாமையில் இந்துக்கள் இசைக் கருவிகள் வாசித்ததாலும் அல்லது முஸ்லீம்களின் பசு வதையினாலும் கலவரங் கள் நடைபெற்றன. மேற்கூறப்பட்ட சம்பவங்களில் கிட்டத் தட்ட 103 பேர் கொல்லப்பட்டனர், 1084 பேர் காயமடைந்தனர்.

அந்த ஆண்டில் நடைபெற்றதாகக் கூறப்பட்ட மிக மோசமான கலவரம் 1927 மே 4 ஆம் தேதிக்கும் 7 ஆம் தேதிக்கும் இடையில் லாகூரில் நடைபெற்றது. இரு சமூகங்களுக்கிடையில் கலவரம் வெடிப்பதற்கு முன்னர் சிறிது காலமாகவே பதற்ற நிலை நீடித்துவந்தது, ஒரு முகமதியருக்கும் இரு சீக்கியர்களுக்கும் இடையில் ஏற்பட்ட ஏதேச்சையான மோதல் பூதாகரமாக உரு வெடுத்தது. மின்னல் வேகத்தில் பரவிய அக்கலவரம் காவு கொண்ட வர்களின் பட்டியல் மிக நீளமானதாகும். அதாவது 27பேர் கொல்லப் பட்டனர், 272பேர் காயமடைந்தனர். தனிநபர்களின் மீது நடத்தப் பட்ட எதிர்பாராத தாக்குதல்களினால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாயிற்று. போலீசும் ராணுவமும் கலவரப் பகுதி களுக்கு உடனடியாக அனுப்பப்பட்டதனால் இரு குழுக்களுக்கு மிடையில் பெரிய அளவில் மோதல்கள் நடைபெறமுடியாத நிலை

ஏற்பட்டது. தற்செயலாக நடைபெற்ற படுகொலைகளும் தாக்குதல் களும் இரண்டு மூன்று நாட்கள் நீடித்தன. பின்னர் லாகூரின் தெருக் களும் சந்துகளும் தனிமையில் நடந்து செல்பவருக்குக் கூடப் பாதுகாப்பானவையாக இருந்தன.

மே-யில் நடைபெற்ற லாகூர் கலவரத்துக்கு பின்னர், பீகாரிலும் ஒரிசாவிலும் ஜூன் மத்தியவாக்கில் நடைபெற்ற ஒரு சிறிய சம்பவத்தைத் தவிர, இரு சமூகங்களுக்குமிடையில் நடைபெற்ற கலவரத்தில் இரண்டு மாத காலம் அமைதி நிலவியது; ஆனால் ஜூலையில் எட்டுக்கும் குறையாத கலவரங்கள் நடைபெற்றன. பஞ்சாபில் உள்ள முல்தானில் முகரம் கொண் டாட்டங்களின்போது மிக மோசமான கலவரம் நடைபெற்றது. அக்கலவரத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 13. காயமடைந் தவர்கள் 24 பேர். ஆனால் ஆகஸ்டு மாதத்தில் இதை விடவும் மோசமான கலவரங்கள் நடைபெற்றன. அந்த மாதத்தில் ஒன்பது கலவரங்கள் நடைபெற்றன. அதில் இரு கலவரங்களில் பலத்த உயிர்ச் சேதம் ஏற்பட்டது. பீகார் மற்றும் ஒரிசாவில் உள்ள பெட்டியா என்ற நகரில், ஒரு மத ஊர்வலம் சம்பந்தமாக ஏற்பட்ட பிரச் சினையின் காரணமாக தோன்றிய கலவரத்தில் 11 பேர் கொல்லப் பட்டனர். நூற்றுக்கும் அதிகமானவர்கள் காயமடைந்தனர். ஐக்கிய மாகாணங்களில் உள்ள பரேலியில் ஒரு மசூதிக்கு முன்பு ஓர் ஊர்வலம் சென்றபோது ஏற்பட்ட கலவரத்தில் 14 பேர் கொல்லப் பட்டனர். 165பேர் காயமடைந்தனர். அதிருஷ்டவசமாக அந்த ஆண்டில் வகுப்பு குழப்பங்களில் இது ஒரு திருப்புமுனையாக அமைந்தது. செப்டம்பர் மாதத்தில் நான்கு கலவரங்கள் மட்டுமே நடைபெற்றன. இவற்றில்ஒன்று மத்திய மாகாணங்களிலுள்ள நாக புரியில் செப்டம்பர் 4 அன்று நடைபெற்ற கலவரமாகும். அது கடுமையிலும் சரி, ஏற்படுத்திய சேதத்திலும் சரி லாகூர் கலவரத்திற்கு அடுத்தபடியாக இருந்தது. இந்த நெருப்பு மூள்வதற்குக் காரணமாக இருந்த தீப்பொறி ஒரு முஸ்லீம் ஊர்வலம் சம்பந்தப்பட்ட குழப்பம் தான்; ஆனால் இதற்கான தயாரிப்புகள் சிறிதுகாலமாகவே நடை பெற்றுவந்தன. இக்கலவரத்தின் காரணமாக 19 பேர் கொல்லப் பட்டனர். காயமடைந்த 123பேர் மருத்துவமனைகளில் சேர்க்கப் பட்டனர். கலவரம் நடைபெற்றபோது முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த பலர் தங்கள் வீடுகளைத் துறந்து நாகபுரியிலிருந்து வெளியேறினர்.

அந்த ஆண்டில் இந்து-முஸ்லீம் உறவுகள் கலவரங்களின் போது இருந்ததைவிட எந்தவகையிலும் மேம்படவில்லை. அதற்கு ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் மற்றொரு சமூகத்தினர் மீது நடத்திய கொலைகாரத்தனமான அட்டூழியங்கள் அதிக எண்ணிக்கையில் இருந்ததே காரணம். முகமது நபியைத் தாக்கி தரக்குறைவாக எழுதப்

பட்ட கட்டுரைகளைத் தாங்கிவந்த ராங்கிலா ரசூல், ரிசலா **வர்த்தமான்** என்ற இரு பிரசுரங்கள் சம்பந்தமாக நடைபெற்ற குழப்பம் தொடர்பாக மிகமோசமான அக்கிரமங்கள் அரங்கேறின. எண்ணற்ற அப்பாவிமக்கள் உயிரிழந்தனர். சில சூழ்நிலைகளில் அக்கலவரங்கள் காட்டுமிராண்டித்தனத்தின் உச்சக்கட்டத்தையே எட்டின. தனி நபர்களுக்கெதிராக லாகூரில் தொடர்ச்சியாக நடைபெற்ற அட்டூழியங்கள் மக்களிடையே பெரும் பீதியையும் பாது காப்பற்ற உணர்வையும் ஏற்படுத்தின.

ரங்கிலா ரசூல்[1] வழக்கு சம்பந்தமாக ஏற்பட்ட பீதி ஜூலை வாக்கில் ஆரம்பித்த இடத்திலிருந்து வெகு தொலைவுக்கு அப்பால், வடமேற்கு எல்லைகளிலும், எல்லைகளுக்கு அப்பாலும் விரும்பத் தகாத விளைவுகளை ஏற்படுத்தத் தொடங்கின. இப்பிராந்தியத்தில் பிரச்சினைகளின் முதல் அறிகுறிகள் ஜூன் ஆரம்பத்திலேயே தென் படலாயின, ஜூலை பிற்பகுதியில் குழப்பங்கள் உச்சகட்டத்தை அடைந்தன. எல்லையின் பிரிட்டிஷ் பகுதியில் உள்ளூர் அதிகாரிகள் நிலைமையைத் திறமையுடன் உறுதியாகக் கையாண்டதன் காரணமாக அமைதிக்கு பெருமளவுக்குப் பங்கம் ஏற்படுவது தவிர்க்கப்பட்டது. பிரிட்டிஷ் எல்லைப்புற மாகாணங்களில் குறிப் பாக பெஷாவரில், பொருளாதாரரீதியாக இந்துக்களைப் புறக்கணிக் கும் இயக்கம் அவ்வளவாக வெற்றி பெறவில்லை, ஒன்றிரண்டு கிராமங்களில் இந்துக்கள் மிக மோசமாக நடத்தப்பட்டபோதிலும் கூட, குற்றவியல் சட்டத்தின்படி மேற்கொள்ளப்பட்ட உரிய நடவடிக்கைகள் விரைவில் ஒழுங்கை நிலைநாட்டின. ஆயினும், முகமது நபியை சிறுமைப்படுத்தியது தொடர்பாக எல்லைக்கு அப்பால் தோன்றிய கசப்புணர்வு மிகமோசமான விளைவுகளைத் தோற்றுவித்தன. எல்லைப்புறப் பழங்குடியினர் மதச் சம்பந்தமான விஷயங்களில் மிகவும் ஆத்திரப்படக்கூடியவர்கள். கைபர் கண வாயின் அருகாமையில் உள்ள அஃப்ரிடிகள், ஷின்வாரிகள் என்ற இனத்தவரிடையே ஒரு பிரபல முல்லா இந்துக்களுக்கு எதிராக போதனைகள் செய்யத் தொடங்கியபோது, அவருடைய சொற்கள் வளமான நிலத்தில் விதைக்கப்பட்டவிதைகளைப்போல, மக்க ளுடைய மனதில் ஆழமாகப் பதிந்தன. எல்லைக்கு அப்பால் உள்ள நாட்டில் தங்களது சகமதத்தவர்களின் செயல்களுக்கும் தங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்று எழுத்துப்பூர்வ மாக உறுதியளிக்காத எல்லா இந்துக்களையும் அங்கிருந்து

1. ராமாயணத்தின் கதாநாயகனான ராமரின் மனைவி சீதை ஒரு விபசாரி என்று முஸ்லீம் ஒருவன் எழுதிய 'சீதாகசினாலா' எனும் துண்டுப் பிரசுரத்திற்குப் பதிலளிக்கும் வகையி லேயே 'ரங்கிலா-ரசூல்' எனும் துண்டுப் பிரசுரம் வெளியிடப்பட்டது.

வெளியேற்றுமாறு அஃப்ரிடிகளுக்கும் ஷின்வாரிகளுக்கும் அவர் அறைகூவல் விடுத்தார். ஜூலை 22 அன்று கைபர் அஃப்ரிடிகளைச் சேர்ந்து குய்கெல், ஜக்கேகல் என்றழைக்கப்படும் இரு இனக் குழுக் கள்தான் தங்களது அண்டை அயலார்களான இந்துக்களை முதலில் வெளியேற்றினர். அதைத் தொடர்ந்து அந்த வெறித்தனம் ஷின்வாரி களிடையேயும் பரவிற்று. சில நாட்களில் வெளியேறி விடுமாறு இந்துக்களுக்குக் கட்டளையிட்டனர். ஆயினும் இந்துக்களில் சிலர் வெளியேறியபின்னர் மீதமிருப்பவர்கள் தொடர்ந்து அங்கேயே தங்கியிருக்க ஷின்வாரிகள் ஒப்புக்கொண்டனர். கைபர் பகுதியை விட்டு வெளியேறிய இந்துக்கள் மிக மோசமாக நடத்தப்பட்டனர். இரு சந்தர்ப்பங்களில் அவர்கள் மீது கற்கள் வீசப்பட்டன. அதிருஷ்ட வசமாக எந்த சேதமும் ஏற்படவில்லை. மூன்றாவது சந்தர்ப்பத் தில் இந்து ஒருவர் காயமடைந்தார், பெரிய அளவில் உடமைகள் அபகரித்துச் செல்லப்பட்டன. ஆனால் அவை அஃப்ரிடி கஸ்ஸதார் களினால் மீண்டும் முழுமையாகக் கைப்பற்றப்பட்டு அதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டனர். அதற்குப் பின்னர் பழங்குடியினர் பிரதேசத்திலிருந்து இந்துக்கள் வெளியேறு வதைத் தடுக்க சாலை மறியலில் ஈடுபடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. **ரிசாலா வர்த்தமான்** வழக்கில் தீர்ப்புவரும் வரை இந்துக்களைப் புறக்கணிக்கும் முடிவை ஒத்திவைக்குமாறு அரசியல் ஏஜென்ட் நெருக்குதல் கொடுத்ததைத் தொடர்ந்து ஜூலை இறுதிவாக்கில் அஃப்ரிடி ஜீர்கா அவ்வாறே முடிவுசெய்தது. அதற்கு அடுத்த வாரத்தில், கைபர் கணவாயின் தோற்றுவாயில் உள்ள லாண்டி கோடால் என்ற இடத்தில் வாழ்ந்துவந்த பல இந்துக் குடும்பங்கள், மலைவாழ்மக்களின் தலைவர்கள் அளித்த உறுதி மொழியை ஏற்கமறுத்து, பெஷாவருக்குக் குடிபெயர்ந்தனர். ஆனால் அவர்களுடைய ஆஸ்திபாஸ்திகளைக் கவனித்துக் கொள்வதற் காக ஒவ்வொரு குடும்பமும் ஒருவரை அங்கே விட்டுச் சென்றது. குழப்பங்கள் நிச்சயமாக மறையத் தொடங்கிய ஆகஸ்டு மத்திவாக்கில் ஆண், பெண், குழந்தைகள் அடங்கிய மொத்தம் 450 இந்துக்கள் பெஷாவரில் குடியேறினர். இந்துக்களில் சிலர் நிச்சயமாக வெளி யேற்றப்பட்டனர். அச்சுறுத்தல்கள் வாயிலாக சிலர் தங்களது வீடு களைக் காலிசெய்து போகுமாறு தூண்டப்பட்டனர். சிலர் பயந்து வெளியேறினர், தங்களுடைய அண்டை அயலார்கள் மீது பரிவு கொண்டு சிலர் வெளியேறினர். இந்த கட்டாய வெளியேற்றங் களும் பழங்குடியினரின் பிரதேசத்திலிருந்து சுயவிருப்பத்தினடிப் படையில் வெளியேறிய நிகழ்ச்சிகளும் முன்பின் நடந்திராதவை யாக இருந்தன. நினைவுக்கெட்டாத காலந்தொட்டே பல தலைமுறை களாக இந்துக்கள் அங்கு மதிப்பு மிக்கவர்களாக கௌரவமாக

வாழ்ந்து வந்துள்ளனர். உண்மையில் மலைவாழ் சமூக அமைப்பில் ஓர் இன்றியமையாத உறுப்பினர்களாகவே இருந்தனர். இந்துக் களுக்கு வழங்கப்பட்டு வந்த பாதுகாப்பு மலைவாழ் மக்களிடையே பொறாமையை ஏற்படுத்தியிருந்தது. அவர்களுடைய ரத்தப் பகையை அவர்கள் பொதுவாகத் தங்களுடையதாகக் கருதிக் கொண்டனர். அந்தப் பீதி நிலவிய சமயத்தில் மொத்தம் 450 இந்துக்கள் கைபரை விட்டு வெளியேறினர். அவர்களில் 330 பேர் 1927ஆம் ஆண்டின் இறுதியில் பழங்குடியினர் பிரதேசத்தில் உள்ள தங்களது வீடு களுக்குத் திரும்பினர். மீதமுள்ளவர்களில் பெரும்பாலனவர்கள் பிரிட்டிஷ் இந்தியாவின் மிகவும் பாதுகாப்பான சூழ்நிலைகளில் தங்கிவிட முடிவு செய்தனர்.

1927-28 ஆம் ஆண்டைவிட 1928-29 ஆம் ஆண்டு ஓரளவு அமைதியாக இருந்தது. இரு சமூகங்களுக்குமிடையில் உறவு கள் பாதிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்த அரசியல் முக்கியத் துவம் வாய்ந்த பிரச்சினைகளுக்கு உடன்பாடு காண்பதற்கு ஏதேனும் ஓர் அடிப்படையை உருவாக்கும் முயற்சிகளுக்கு, மேதகு இர்வின் பிரபு மத்திய சட்டமன்றத்திலும், வெளியிலும் ஆற்றிய தமது உரைகளின்மூலம் பலமான உந்து விசையளித் திருந்தார். அதிருஷ்டவசமாக 1929 இல் நியமனம் செய்யப்பட்ட சைமன் கமிஷன் விசாரணைகளினால் எழுந்த பிரச்சினைகள், பல்வேறு சமூகங்களின் கவனத்தையும் சக்தியையும் கிரகித்துக் கொண்டன. அதன் காரணமாக மோதலுக்கான உள்ளூர் காரணங் களுக்கு குறைந்த முக்கியத்துவமும் அரசியல்சட்டசம்பந்தமான கொள்கை என்ற விரிவான பிரச்சினைக்கு அதிக முக்கியத்துவமும் தரப்பட்டது. மேலும் 1927இல் நடைபெற்ற இந்திய சட்டமன்றத்தின் இலையுதிர்காலக் கூட்டத்தொடரின்போது இயற்றப்பட்ட மசோதா வானது, சமூகங்களுக்கிடையில் பகைமையைத் தூண்டிவிடும் பத்திரிகைகளைத் தண்டிக்க வகை செய்தது. அது சமூகங்களுக் கிடையிலான குழப்பங்களைத் தீர்ப்பதில் உதவிசெய்தது. 1929 மார்ச் 31 முடிய 12 மாத காலத்தில் ஏற்பட்ட கலவரங்களின் எண்ணிக்கை 22. கலவரங்களின் எண்ணிக்கை சிறியதாக இருந்தபோதிலும் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை - பம்பாய் கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்கள் ஏராளம் - எண்ணிக்கை மிக அதிகமாக இருந்தது. 204 பேர் கொல்லப்பட்டனர், ஏறத்தாழ ஓராயிரம் பேர் காயமடைந்தனர். அவற்றில் பம்பாயில் நடைபெற்ற பதினைந்து நாள் கலவரத்தில் 149 பேர் கொல்லப்பட்டனர், 739 பேர் காய மடைந்தனர். மொத்தம் நடைபெற்ற 22 கலவரங்களில் ஏழு கலவரங்கள் அல்லது மூன்றிலொரு பங்கு கலவரங்கள், மேமாத இறுதியில் வருடாந்திர முஸ்லீம் திருநாளான பக்ரீத் கொண்டாட்

டங்கள் நடைபெற்ற நாளிலேயே நடந்தது. இத்திருநாள் கொண் டாட்டங்கள் எப்போதுமே இந்து-முஸ்லீம் உறவுகளுக்கு ஆபத்தான காலமாகும். அந்த நாளை முஸ்லீம்கள் பிராணிகளை பலி கொடுக்கும் நாளாக கருதுகின்றனர். பலிக்கான பிராணியாக அநேகமாக எப்போதும் பசு தேர்வு செய்யப்படுவதால், இரு சமுதாயங் களுக்குமிடையில் ஏற்படும் சிறிதளவு பதற்றமும் கூட எரிமலை யாய் வெடிக்கும் அபாயத்தை ஏற்படுத்துகிறது. பக்ரித் கலவரங் களில் இரண்டு மட்டுமே மிக மோசமானவையாக இருந்தன. அவை இரண்டுமே பஞ்சாபில் நிகழ்ந்தன. முதலாவது கலவரம் அம்பாலா மாவட்டத்திலுள்ள ஒரு கிராமத்தில் நடந்தது. அதில் 10 பேர் கொல்லப்பட்டனர். ஒன்பதுபேர் காயமடைந்தனர். தெற்கு பஞ்சாபில் குர்காவோன் மாவட்டத்தில் உள்ள சோப்டா என்ற கிராமத்தில் நடைபெற்ற மற்றொரு கலவரம், சில வினோதமான அம்சங்கள் காரணமாக கணிசமான அவப்பெயரையும் பெற்றது. டில்லியிலிருந்து தெற்கே 27 மைல் தொலைவில் உள்ள சோப்டா கிராமத்தில் முஸ்லீம்களே வசித்துவந்தனர். அந்த கிராமத்தைச் சுற்றிலும் உள்ள கிராமங்களில் இந்து விவசாயிகள் உள்ளனர். ''ஈத் பெரு நாளன்று'' சோப்டா முஸ்லீம்கள் ஒரு பசுவை பலியிடப்போகிறார்கள் என்று கேள்விப்பட்ட இந்து விவசாயிகள் அந்தக் குறிப்பிட்ட பசு தங்களுக்குச் சொந்தமான வயல்களில் புல் மேய்வது வழக்கம் என்றும் அதை பலியிடுவதை எதிர்ப்பதாகவும் கூறினர். இது சம்பந்த மான பூசல் அச்சுறுத்துவிதமாக வளர்ந்து வந்ததைக் கண்ட மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் 25 பேர் கொண்ட போலீசாருடன் அமைதியை நிலைநாட்டுவதற்காக அங்கு சென்றார். பிரச்சினைக்குரிய அப்பசுவைப்பிடித்து பத்திரமாக அடைத்து வைத்தார் அந்த அதிகாரி. இருந்தபோதிலும் அருகாமையில் உள்ள கிராமங்களைச் சேர்ந்த இந்து விவசாயிகள் கிட்டத்தட்ட ஆயிரம் பேர் ஆயுதங்களுடன் சோப்டாவுக்குச் செல்வதற்காகத் திரண்டனர். அந்த கிராமத்தில் முகாமிட்டிருந்த காவல்துறைக் கண்காணிப் பாளரும் ஒரு இந்திய நிதித்துறை அதிகாரியும், பிரச்சினைக்குரிய அப்பசு பலியிடப்படமாட்டாது என்று திரண்டிருந்த கும்பலிடம் உறுதியளித்தனர். திருப்தியடையாத அவர்கள் எந்தப்பசு பலியிடப் பட்டாலும், அந்த கிராமத்தையே தீக்கிரையாக்கிவிடுவதாகவும், சம்பந்தப்பட்ட அப்பசு தங்கள்வசம் ஒப்படைக்கப்படவேண்டும் என்றும் கூறினர். அக்கோரிக்கையை காவல்துறைக் கண்காணிப்பாளர் ஏற்கமறுத்தபோது, அக்கும்பல் வன்முறையில் இறங்கியது. காவல் துறையினர் மீது கற்களை வீசி அக்கிராமத்தினுள் நுழையமுயன்றது. கும்பலைக் கலைந்து செல்லுமாறு காவல்துறைக் கண்காணிப்பாளர்

விடுத்த எச்சரிக்கை பலனளிக்கவில்லை. தம்முடைய கைத்துப்பாக்கியைக் கொண்டு எச்சரிக்கை செய்வதற்காக ஒருமுறை சுட்டார்; அதையும் பொருட் படுத்தாது கும்பல் முன்னேறத் தொடங்கியது; அப்போது கண்காணிப்பாளர் தமது காவலர்களுக்கு கூட்டத்தை நோக்கிச் சுடும்படி உத்தர விட்டார். முதலில் ஒரு முறை துப்பாக்கிச் சூடு நடைபெற்றபின்னரும் கூட கும்பல் பின்வாங்கவில்லை. பின்னர் மீண்டும் இருமுறை துப்பாக்கிச்சூடு நடைபெற்றபோது கும்பல் மெல்லப் பின்வாங்கத் தொடங்கியது. அப்போது அந்த கிராமத்தவருக்குச் சொந்தமான சில கால்நடைகளையும் அவர்கள் ஓட்டிச் சென்றனர்.

இந்த விவகாரத்தில் காவல்துறையினர் ஈடுபட்டிருந்த போது வேறொரு வழியாக சில இந்து விவசாயிகள் சோப்டா கிராமத்திற்குள் நுழைந்து அந்த கிராமத்தைத் தீக்கிரையாக்க முயன்றனர். ஆயினும் அவர்கள் மூன்று அல்லது நான்கு பேரைக் காயப்படுத்திய பின்னர் அவர்களைப் போலீசார் விரட்டியடித்தனர். மொத்தத்தில் 14 பேர் கொல்லப்பட்டனர். 33 பேர் காயமடைந்தனர். இந்த விவகாரம் குறித்து விசாரணை மேற்கொள்ள பஞ்சாப் அரசாங்கம் ஒரு நீதித்துறை அதிகாரியை நியமித்தது. ஜுலை 6 அன்று பிரசுரிக்கப்பட்ட அவரது அறிக்கை, கும்பலின்மீது துப்பாக்கிச் சூடு நடத்திய போலீசாரின் நடவடிக்கையை நியாயப்படுத்தியதுடன் துப்பாக்கிச்சூடு அத்துமீறிய செயல் என்று கருதுவதற்கோ அல்லது அந்தக் கும்பல் சட்டவிரோதமான ஆக்கிரமிப்பிலிருந்து பின்வாங்கியபின்னர் போலீசாரின் நடவடிக்கை கும்பலின் மீது தொடர்ந்தது என்று கருதுவதற்கோ இடமில்லை என்ற கருத்தையும் பதிவுசெய்தது. போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தாதிருந்தால் அவர்களது உயிருக்கும், சோப்டா கிராமத்து மக்களின் உயிருக்கும் உடனடி அபாயம் ஏற்பட்டிருக்கும் என்றும் அந்த அறிக்கை தொடர்ந்து கூறியது. சோப்டா கிராமம் அழிக்கப்பட்டிருக்குமானால், சுற்றியுள்ள கிராமப்பகுதி முழுவதிலும் 24 மணிநேரத்திற்குள் ஒரு பயங்கரமான சமூகப் பேரழிவு நிச்சயமாக நடந்திருக்கும் என்றும் அந்த அறிக்கையை எழுதிய அதிகாரி இறுதியாக கருத்துத் தெரிவித்திருந்தார்.

கல்கத்தாவுக்கு அருகாமையில் உள்ள ஒரு முக்கிய ரயில்வே மையமான காரக்பூரில் நடைபெற்ற கலவரங்களும் கூட பெருத்த உயிர் சேதத்தை ஏற்படுத்தின. காரக்பூரில் இரு கலவரங்கள் நடைபெற்றன. முதலாவது கலவரம் ஜுன் மாத இறுதியில் முகரம் கொண்டாட்டங்களின்போது நடைபெற்றது; இரண்டாவது கலவரம் 1928

செப்டம்பர் 1 ஆம் தேதி ஒரு பசு கொல்லப்பட்டதைக் காரணமாகக் கொண்டு நடைபெற்றது. முதலாவது கலவரத்தில் 15 பேர் கொல்லப் பட்டனர். 21 பேர் காயமடைந்தனர். இரண்டாவது கலவரத்தில் 9 பேர் கொல்லப்பட்டனர். 35 பேர் காயமடைந்தனர். ஆனால் இந்தக் கலவரங்களில் எவற்றையும் பிப்ரவரி முதல் தேதியிலிருந்து 15 ஆம் தேதிவரை பம்பாயில் பரவிய கலவரங்களுடன் ஒப்பிட முடியாது. ஏற்கனவே நாம் கூறியபடி இக்கலவரத்தில் 149 பேர் கொல்லப்பட்டனர். 700க்கும் அதிகமானோர் காயமடைந்தனர்.

முந்தைய ஆண்டுகளில் பகிரங்கமாகவும் பொதுவாழ்வின் கண்டிக்கத்தக்க ஓர் அம்சமாகவும் விளங்கிய வகுப்புக் கலவரங்கள் 1929-30 ஆம் ஆண்டில் மிகக் குறைவாகவே காணப்பட்டன. 12 கலவரங்கள் மட்டுமே இந்திய அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்தும் அளவுக்கு முக்கியத்துவமுடையவையாக இருந்தன. இவற்றில் பம்பாய் நகரில் நடைபெற்ற கலவரங்கள் மட்டுமே மோசமானவை யாக இருந்தன. ஏப்ரல் 23 அன்று தொடங்கிய அக்கலவரங்கள் மே மாதம் மத்தி வரையில் பரவலாக நடைபெற்று, 35 மரணங்களுக் கும் கிட்டத்தட்ட 200 பேர் காயமடைவதற்கும் காரணமாக இருந்தன. லாகூரில் ராஜ்பால் கொலை செய்யப்பட்ட சம்பவம் ஏப்ரலில் கணிசமான பதற்றத்திற்கும் காரணமாக இருந்தது. ரங்கீலா ரசூல் என்ற அவரது துண்டுப்பிரசுரம் முகமது நபியை இழிவுபடுத்தும் வாசகங்களைக் கொண்டிருந்ததானது முந்தைய ஆண்டுகளில் பெரும் பாலான வகுப்புப் பிரச்சினைகளுக்குக் காரணமாக இருந்ததுடன் பலவிதமான அரசியல் மற்றும் சட்டரீதியான சிக்கல்களையும் தோற்றுவித்தது. அவர் கொலை செய்யப்பட்ட சமயத்திலும் அவரைக் கொலை செய்தவர் தூக்கிலிடப்பட்டு அவரது இறுதி ஊர்வலத்தின் போதும் இருசாரரும் கொதிப்படைந்திருந்த போதிலும் கூட அதிருஷ்ட வசமாக இரு சமூகத்தினரும் பாராட்டத்தக்க விதத்தில் பொறுமை யைக் கடைப்பிடித்ததனால் பெரிய பிரச்சினைகள் ஏதும் எழ வில்லை.

1930-31 ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கம் வெடித்தது. நாடெங்கிலும் அது கலவரங்களையும் குழப்பங்களையும் தோற்று வித்தது. அவை பெரும்பாலும் அரசியல் தன்மையைக் கொண் டிருந்ததால் அவற்றில் சம்பந்தப்பட்டவர்கள் போலீசாரும் காங்கிரஸ் தொண்டர்களும்தான். ஆனால் இந்தியாவில் வழக்கம்போல் நிகழு வதைப் போன்றே அரசியல் குழப்பங்கள் மதங்களுக்கிடையிலான குழப்பங்களாகவும் மாறின. ஒத்துழையாமை இயக்கத்தில் சேருமாறு

காங்கிரஸ் தொண்டர்கள் கட்டாயப்படுத்தி அதற்கு முஸ்லீம்கள் மறுத்துவிட்டதுதான் இதற்குக் காரணமாகும். இதன் காரணமாக, அந்த ஆண்டு அரசியல் கலவரங்களுடன் ஆரம்பித்த போதிலும் அது எண்ணற்ற மிக மோசமான வகுப்புக் கலவரங்களில் முடிந்தன. இந்த வகுப்புக் கலவரங்களில் மிக மோசமான கலவரம் சிந்துவில் உள்ள சுக்கூரிலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் ஆகஸ்டு 4 ம் தேதிக்கும் 11 ஆம் தேதிக்குமிடையில் நடை பெற்று, நூற்றுக்கும் அதிகமான கிராமங்களைப் பாதித்தது. வங்காளத்தின் மைமன்சிங் மாவட்டத்தில் கிஷோர்கஞ்ச் பகுதியில் ஜூலை 12-15க்கிடையில் வெடித்த கலவரம்கூட மிகப் பெரிய அளவில் நடைபெற்றது. அத்துடன் பால்லியாவில் (ஐக்கிய மாகாணங்கள்) ஆகஸ்டு 3 அன்றும், நாகபுரி யில் செப்டம்பர் 6 அன்றும், செப்டம்பர் 6-7 தேதிகளில் பம்பாயிலும் வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன; அக்டோபர் 31 அன்று திருச்செந்தூருக்கு அருகாமையில் (தமிழ்நாடு) இந்து- கிறித்தவர் களிடையே கலவரம் வெடித்தது. பிப்ரவரி 12 அன்று அமிர்தசரசில் மறியல் செய்பவர்களின் எச்சரிக்கையை மீறி கடையைத் திறந்து வைத்திருந்த ஓர் இந்து துணி வியாபாரியைக் கொல்ல முயற்சி நடைபெற்றது, இதே போன்று ஒருநாள் முன்னதாக காசியில் நடை பெற்ற ஒரு சம்பவம் மிகமோசமான விளைவுகளை ஏற்படுத்தியது. அச்சம்பவத்தில் பாதிக்கப்பட்டவர் ஒரு முஸ்லீம் வர்த்தகர். அவர் மீது நடத்தப்பட்ட தாக்குதல் அவரது மரணத்தில் முடிந்தது; அதன் விளைவாக, அநேகமாக வட இந்தியா முழுவதிலும் ஏற்கனவே மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருந்த இந்து- முஸ்லீம் உறவுகள் மேலும் சீர்குலைந்து மிகக் கோரமான கலவரமாக வெடித்து ஐந்து நாட்கள் நீடித்தது; பெருமளவில் சொத்துக்களுக்கும் உயிர்களுக்கும் சேதம் ஏற்படுத்தப்பட்டது. இதே காலகட்டத்தில் நடைபெற்ற இதர மோதல் களில் ஜனவரி 25 அன்று நில்பமாரியிலும் (வங்காளம்) 31 அன்று ராவல் பிண்டியிலும் நடைபெற்ற கலவரங்களும் அடங்கும். 1931 ஆம் ஆண்டின் முதல் இருமாதங்களில் வடஇந்தியா முழுவதிலும் வகுப்பு உறவுகள் குறிப்பிடத்தக்க அளவுக்குப் பாதிப்படைந்தன. ஏற்கனவே பிப்ரவரியில் காசியில் மோசமான வகுப்புக்கலவரங்கள் நடை பெற்றன. காங்கிரசின் நடவடிக்கைகளினால் வர்த்தகம் முடங்கி அமைதியின்மையும் குழப்பமும் நிறைந்த ஒரு பொதுவான சூழ்நிலை நிலவியதனால் முஸ்லீம்களிடையே அதிகரித்த அளவில் எரிச்சல் ஏற்பட்டதுதான் இத்தகைய நிலவரத்திற்கு முக்கியக் காரணமாகும். அரசாங்கத்துடன் பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டதன் காரணமாக காங்கிரசுக்கு அதிக முக்கியத்துவம் ஏற்படுவதுபோல் தோன்றிய நிலைமை முஸ்லீம்களிடையே மோசமான ஐயப்பாடுகளைத்

தோற்றுவித்ததுடன், இரு வகுப்புகளுக்குமிடையில் பதற்றங்கள் மோசமடையவும் வழிவகுத்தது. மார்ச் மாதத்தின்போது ஐக்கிய மாகாணங்களில் இந்தப் பதற்றம் பெருமளவில் அதிகரித்தது. 14-16 தேதிகளுக்கிடையில் மிர்சாபூர் மாவட்டத்தில் மோசமான கலவரங்கள் நடைபெற்றன. 17 ஆம் தேதி ஆக்ராவில் வெடித்த குழப்பங்கள் 20 ஆம் தேதிவரை நீடித்தன. 28ஆம் தேதி தன்பாதில் (வங்காளம்) வகுப்புக் கலவரம் வெடித்தது. 30 ஆம் தேதி அமிர்தசரசிலும் கலவரம் நடை பெற்றது. நாட்டின் இதர பல பகுதிகளில் இரு வகுப்பாருக்கும் இடையில் உறவுகள் பெருமளவுக்கு பாதிப்படைந்தன.

அஸ்ஸாமின் லக்கிம்பூர் மாவட்டத்திலுள்ள திக்பாயில் நடைபெற்ற மதக் கலவரங்களில் ஓர் இந்துவும் மூன்று முஸ்லீம்களும் கொல்லப்பட்டனர். வங்காளத்தில் அசன்சால் பகுதியில் முகரம் திருவிழாவின்போது வகுப்புக் கலவரம் நடைபெற்றது. பீகாரிலும் ஒரிசாவிலும் குறிப்பாக சாரன் பகுதியில் அந்த ஆண்டின் போது ஓரளவுக்கு வகுப்புப் பதற்றம் நிலவியது. மொத்தத்தில் 16 வகுப்புக்கலவரங்கள் நடைபெற்றன. சட்டவிரோதக் கும்பல்கள் கூடின. ஷகாபாதின் பபுவா பிரிவில் பக்ரித் பெருநாள் கொண்டாட்டங்களின்போது ஒரு மோதல் ஏற்பட்டது. ஒரு பசு பலியிடப் பட்டது என்ற தவறான எண்ணத்தின் அடிப்படையில் கிட்டத்தட்ட 300 இந்துக்கள் திரண்டனர் அவர்களை அமைதிப்படுத்துவதில் உள்ளூர் அதிகாரிகள் வெற்றிபெற்றனர். அப்போது 200 முகமதியர்களைக் கொண்ட கும்பல் ஒன்று லத்திகள், வேல், வாள் போன்ற ஆயுதங்களைக் கொண்டு இந்துக்களைத் தாக்கியதில் ஒருவர் இறந்தார். உரியகாலத்தில் போலீசார் மேற்கொண்ட நடவடிக்கைகளும், அமைதிக்குழு நியமிக்கப்பட்டதும் குழப்பங்கள் பரவாமல் தடுத்தன. முகரம் திருநாளின்போது மோங்கிரில் இரு சிறிய கலவரங்கள் நடைபெற்றன. ஒரு கலவரத்திற்கு இந்துக்களும் மற்றொன்றுக்கு முஸ்லீம்களும் காரணமாக இருந்தனர். சென்னை மாகாணத்திலும் கூட அந்த ஆண்டில் பலவகுப்புக்கலவரங்கள் நடைபெற்றன. இரு வகுப்பாரிடையிலான உறவுகள் பல இடங்களில் மிகப்பெருமளவில் பாதிக்கப்பட்டிருந்தன. ஜுன் 8 ஆம் தேதியன்று ஒரு இந்துக் கோயிலுக்கு அருகாமையில் தஸியாக்களுடன் முஸ்லீம் ஊர்வலம் ஒன்று சென்றதையடுத்து வேலூரில் அந்த ஆண்டின் மிகமோசமான குழப்பங்கள் நடைபெற்றன; இரு சமூகத்தவருக்குமிடையில் மோதலின் உக்கிரத்தைக் கண்ட போலீஸ் ஒழுங்கை நிலைநாட்டுவதற்காக துப்பாக்கிச் சூடு நடத்த வேண்டிய கட்டாயத்திற்குத்

தள்ளப்பட்டனர்; அடுத்த இரண்டு அல்லது மூன்று நாட்களின்போது ஆங்காங்கே சண்டைகள் தொடர்ந்தன. சேலம் நகரில் செவ்வாய்ப் பேட்டையில் நடைபெற்ற இந்து-முஸ்லீம் மல்யுத்தப்போட்டியைக் காணத் திரண்டிருந்த பெருங்கூட்டத்தில் யார் வெற்றி பெற்றவர் என்ற பிரச்சினை எழுந்ததனால் ஜூலை 13 அன்று இந்து-முஸ்லீம் பதற்றம் ஏற்பட்டது. சேலம் நகருக்கு அருகாமையில் உள்ள கிச்சிபாளையத்தில் அக்டோபரில் மற்றுமொரு கலவரம் நிகழ்ந்தது; சில இந்து இளைஞர்கள் கலந்துகொண்ட ஒரு தெருவிளையாட்டைச் சில முஸ்லீம்கள் குலைக்க முயன்றதைத் தொடர்ந்து அக் குழப்பம் எழுந்தது. ஓர் இந்து ஊர்வலம் செல்லும் பாதை சம்பந்தமாக எழுந்த பிரச்சினை காரணமாக மார்ச் 15 அன்று கர்நூல் மாவட்டத்தைச் சேர்ந்த பொலிகல் கிராமத்தில் கூட இந்து-முஸ்லீம் குழப்பங்கள் தோன்றின. ஆனால் ஒரு சிறிய போலீஸ்படை கலவரக்காரர்களை எளிதில் கலைந்து செல்லச் செய்தது. 1929இல் நடைபெற்ற 813 கலவரங்களுடன் ஒப்பிடும்பொழுது அந்த ஆண்டில் பஞ்சாப் மொத்தம் 907 கலவரச் சம்பவங்களைச் சந்தித்தது. அவற்றில் பல சம்பவங்கள் வகுப்புவாதத்தன்மை கொண்டவையாக இருந்தன. மாநிலத்தின் பல பகுதிகளில் இரு முக்கிய வகுப்புகளுக்கும் இடையில் பதற்றங்கள் மிகக் கடுமையானவையாக இருந்தன. ஐக்கிய மாகாணங்களில் 1930 ஆம் ஆண்டின் போது, 1931 ஆம் ஆண்டின் முதல் மூன்று மாதங்களில் இருந்த அளவுக்கு வகுப்புப்பதற்றங்கள் அவ்வளவு மோசமானவையாக இருக்கவில்லை என்றாலும்கூட, ஒத்துழையாமை இயக்கம் தோற்றுவித்த பரபரப்பு அதை ஓரளவுக்கு மறைத்து வைத்திருந்த போதிலும், பதற்றங்களுக்கான அறிகுறிகள் ஏராளமாக இருந்தன. கருத்து வேறுபாடுகளுக்கான காரணங்கள் எப்போதும் போல வெடிக்கும் தன்மையுடையனவாகவே இருந்தன. டேராடூனிலும் புலந்சாகரிலும் வழக்கமான பாணியில் வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. ஓர் இந்து ஊர்வலம் சென்ற பாதை சம்பந்தமாக எழுந்த சர்ச்சையைத் தொடர்ந்து பால்லியா நகரில் மிக மோசமான கலவரம் ஏற்பட்டதை அடுத்து போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தவேண்டியதாயிற்று. முட்ரா, ஆஜம்கார்க், மணிபுரி மற்றும் பல இதர இடங்களிலும் கூட கலவரங்கள் நடைபெற்றன.

1931-32 ஆம் ஆண்டின் சம்பவங்களைப் பார்க்கும்போது பெரும்பான்மைக் கோட்பாட்டின்படிச் செயல்படும் ஓர் அரசியல் சட்டத்தின் கீழ் தங்களது நிலைமை சம்பந்தமாக முஸ்லீம் மற்றும் இதர சிறுபான்மை சமூகங்களிடையே ஓரளவுக்கு சினத்தை ஏற்படுத்தியது என்ற உண்மை வட்டமேசை மாநாட்டில் நடைபெற்ற அரசியல்

சட்டம் சம்பந்தமான விவாதங்களில் பிரதிபலித்தது. வட்டமேசை மாநாட்டின் முதலாவது கூட்டத்தொடர் அரசியல் சட்டத்தின் வருங் காலம் குறித்த மிக அணித்தான சித்திரத்தை முதல்முறையாக காணும் வாய்ப்பை வழங்கியது. அதுவரையில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற லட்சியம் ஒரு தெளிவற்ற, பொதுவான உருவமைப்புக்கு அப்பால் செல்லவில்லை, ஆனால் மாநாட்டின் துவக்கத்தில் சுதேச மன்னர்கள் விடுத்த பிரகடனம் ஒரு குறிப்பிட்ட கட்டுக் கோப்பினுள், ஒரு அமர்வு அரசாங்கம் அமைக்கும் யோசனையை முன்வைத்தது. இதனால் முஸ்லீம்கள் தங்களது நிலைமையைப் பரி சீலனை செய்ய வேண்டிய தருணம் வந்துவிட்டது என்பதை உணர்ந் தனர். இர்வின்-காந்தி உடன்பாட்டினால் இந்த அமைதியற்ற சூழல் மேலும் தீவிரமடைந்தது; இந்த உடன்பாடு காங்கிரசின் கை மேலாங்கியிருப்பது போன்ற ஒரு தோற்றத்தை ஏற்படுத்தியிருந்தது. காங்கிரஸ் தரப்பில் ஏற்பட்ட மகிழ்ச்சியும் அரசாங்கத்தின்மீது வெற்றி கொண்டுவிட்ட தோற்றமும் முஸ்லீம்களுடைய நம்பிக்கை யின்மையைத் தளர்த்தவில்லை. இந்த ''ஒப்பந்தம்'' ஏற்பட்ட மூன்று வாரங்களுக்குள், மார்ச் 23 அன்று தூக்கிலிடப்பட்ட பகத்சிங்கின் நினைவாக அர்த்தால் அனுஷ்டிக்கக் கோரி முகமதிய கடைக்காரர் களைக் கட்டாயப்படுத்தும் முயற்சிகளில் காங்கிரஸ் தொண்டர்கள் இறங்கியதன் விளைவாக கான்பூரில் காட்டுமிராண்டித்தனமான வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. மார்ச் 24 அன்று இந்துக்களின் கடைகள் சூறையாடப்படுவது தொடங்கியது. 25 ஆம் தேதியன்று பெரும் தீ விபத்து ஏற்பட்டது. கடைகளும் கோயில்களும் தீக்கிரை யாக்கப்பட்டன. கலகம், குழப்பம், தீவைத்தல், கொள்ளை, கொலை ஆகியவை காட்டுத்தீயைப் போல் பரவின. ஐந்நூறு குடும்பங்கள் தங்கள் வீடுகளைக் காலிசெய்துவிட்டு கிராமங்களில் குடியேறினர். மோசமாகப் பாதிக்கப்பட்டவர்களில் டாக்டர் ராமச்சந்திராவும் ஒருவர். அவருடைய துணைவியார், வயதான பெற்றோர்கள் உள் ளிட்ட அவரது குடும்பத்தவர் அனைவரும் கொல்லப்பட்டு அவர்க ளுடைய உடல்கள் சாக்கடையில் வீசப்பட்டன. அதே படுகொலையில் திரு. கணேஷ் சங்கர் வித்தியார்த்தியும் உயிர்நீத்தார். அக்கலவரம் முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு வன்முறையும் வருணிக்க வொண்ணாத கொடூரத்தன்மையும் கொண்டிருந்தது. கலவரம் நகரம் முழுவதிலும், அதற்கு அப்பாலும் எதிர்பாராத வேகத்தில் பரவியது என்று கான்பூர் கலவரங்கள் விசாரணைக் கமிட்டி தனது அறிக்கை யில் கூறுகிறது. கொலைகள், தீயிடுதல், கொள்ளை போன்ற சம்பவங்கள் மூன்றுநாட்கள் வரை தொடர்ந்தபின்னர் கலவரம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது. பின்னர் படிப்படியாக

அது குறைந்தது. இறந்தவர்களின் அதிகாரப்பூர்வ எண்ணிக்கை 300. ஆனால் இறந்தவர்களின் உண்மையான எண்ணிக்கை நானூறுக்கும் ஐந்நூறுக்கும் இடையில் இருக்கும் என்று கூறப்பட்டது. பெரும் எண்ணிக்கையிலான கோயில்களின், மசூதிகளின் புனிதத்தன்மை களங்கப்படுத்தப்பட்டது. அல்லது அவை எரியூட்டப் பட்டன அல்லது அழிக்கப்பட்டன. பெரும் எண்ணிக்கையிலான வீடுகள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. சூறையாடப்பட்டன.

காங்கிரஸ் ஆதரவாளர்களின் ஆத்திரமூட்டும் நடத்தை யினால் அன்றி வேறு எந்தக் காரணத்தினாலும் நடைபெற்றி ருக்காத இந்த வகுப்புக்கலகம் பல்லாண்டுகளாக இந்தியா கண்டிராத அளவுக்கு மிகமோசமானதாக இருந்தது. மேலும் இக்கலகம் நகரி லிருந்து அருகாமையில் உள்ள கிராமங்களுக்கும் பரவி பலநாட்கள் வரை நீடித்தது.

1932-33 ஆம் ஆண்டு அநேகமாக வகுப்புப் போராட்டங் களும் குழப்பங்களும் இன்றி இருந்தது. புதிய அரசியல் சட்டத்தின் படி முஸ்லீம்களின் நிலைபாடு சம்பந்தமான ஸ்திரமற்றதன்மை அகற்றப்பட்டதும், பொதுவாக நிலவிய அமைதியின்மையும் குழப் பமும் அடக்கப்பட்டதும்தான் ஓரளவுக்கு நிலைமையை மேம்படச் செய்தது என்பதில் ஐயமில்லை.

ஆனால் 1933-34 இல் நாடெங்கிலும் வகுப்புவாதப் பதற் றங்கள் அதிகரித்துவந்தன. ஹோலி, முகரம், ஈத் போன்ற திருவிழாக் காலங்களில் மட்டுமன்றி அன்றாட வாழ்வின் சாதாரணநிகழ்ச்சி களின் விளைவாகவும் ஏற்பட்ட பல குழப்பங்கள், ஆண்டு தொடங் கியதுமுதல் வகுப்புஉறவுகள் மோசமடைந்துள்ளதைச் சுட்டிக் காட்டின. ஹோலிப்பண்டிகையின்போது ஐக்கியமாகாணங்களில் காசியிலும் கான்பூரிலும், பஞ்சாபில் லாகூரிலும், பெஷாவரிலும் வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. ஐக்கிய மாகாணங்களில் அயோத்தியில் பக்ரீத்தின்போது பசுவதை சம்பந்தமாக மிக மோச மான கலவரங்கள் நடைபெற்றன. அதேபோன்று பீகாரில் பகல் பூரிலும் ஒரிசாவிலும் சென்னை மாகாணத்தில் கன்னனூரிலும் கலவரம் நடைபெற்றது. ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த காஜிப்பூர் மாவட்டத்தில் ஏற்பட்ட மிகமோசமான கலவரத்தில் பலர் இறந் தனர். ஏப்ரல்- மே மாதங்களில் பீகார், ஒரிசா, வங்காளம், சிந்து, டில்லி போன்ற பல இடங்களில் இந்து-முஸ்லீம் கலவரங்கள் நடைபெற்றன. அவற்றில் சிலகலவரங்கள் மிகச் சாதாரண சம்ப வங்களால் தூண்டப்பட்டவை. உதாரணமாக டில்லியில் நடந்து

சென்ற ஓர் இந்துவின் மீது ஒரு முஸ்லீம் கடைக்காரர் துப்பிய எச்சில் விழுந்ததினால் ஒரு கலவரம் ஏற்பட்டது. பிரிட்டிஷ் இந்தியாவில் வகுப்புவாத சச்சரவுகள் அதிகரித்து வந்துள்ளது. சில சமஸ்தானங்களிலும் பிரதிபலித்து அதே போன்ற சம்பவங்கள் நடைபெற்றன.

ஜுனிலிருந்து அக்டோபர் வரையிலான மாதங்களில் சமூகப் பதற்றம் சம்பந்தமான நிலைமை, இரு முக்கிய சமூகங்களுக்கிடையில் வழக்கமாக பகைமை ஆழவேரூன்றியிருப்பதைச் சுட்டிக் காட்டியது. எந்தவித முக்கியமான இந்து அல்லது முகமதியத் திருவிழாக்களும் நடைபெறாத ஜுன் ஜுலை மாதங்களில் அநேகமாகக் கலவரங்களே நடைபெறவில்லை எனலாம். ஆயினும் பீகாரின் சில பகுதிகளில் ஏற்பட்ட நிலைமையினால் கூடுதல் போலீஸ் படை அனுப்பப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆக்ராவில் ஒரு பூசல் தொடங்கி பலநாட்கள் நீடித்தது. இந்து தனியார் வீடுகளில் நடைபெறும் சமயக் கொண்டாட்டங்களின் காரணமாக ஏற்படும் இரைச்சல் அருகாமையில் உள்ள ஒரு மசூதியில் தொழுகையில் ஈடுபட்டிருப்போரின் அமைதியைக் குலைக்கிறது என்று அந்நகரின் முஸ்லீம்கள் ஆட்சேபம் தெரிவித்தனர். அந்தப்பூசல் தீர்க்கப்படுமுன்னர் ஜுலை 20 அன்றும், மீண்டும் செப்டம்பர் 2 அன்றும் கலவரங்கள் நடைபெற்றன. அவற்றில் நான்கு பேர் கொல்லப்பட்டனர். 80க்கும் அதிகமானோர் காயமடைந்தனர். இந்துக்கள் பிரசுரித்த ஒரு நூலில் முகமது நபியைப் பற்றி தரக்குறைவான வாசகங்கள் அடங்கியிருந்ததைக் கண்டித்து சென்னையில் செப்டம்பர் 3 அன்று ஏற்பட்ட ஒரு கலவரம் ஒருவரின் மரணத்திலும் 13 பேர் காயமடைந்ததிலும் முடிந்தது. அதே மாதத்தில் பஞ்சாபிலும் ஐக்கிய மாகாணங்களிலும் பல இடங்களில் சிறு கலவரங்கள் நடைபெற்றன.

1934-35 இல் லாகூரில் ஒரு கடுமையான பிரச்சினை எழுந்தது. ஷாகித்கஞ்ச் குருதுவாரா என்ற ஒரு சீக்கிய ஆலயத்தின் எல்லைகளுக்குள் அமைந்திருந்த ஒரு மசூதி சம்பந்தமாக முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் இடையில் ஜுன் 29 அன்று சச்சரவு ஆரம்பித்தது. சிறிதுகாலமாகவே குழப்பம் நிலவிவந்தது. முஸ்லீம்களின் எதிர்ப்பையும் மீறி சீக்கியர்கள் அந்த மசூதியை இடிக்கத் தொடங்கிய போது பகையுணர்வு தீவிரமடைந்தது. அக்கட்டிடம் பலகாலமாக நீதிமன்ற வழக்கு விசாரணையில் இருந்துவந்தது. சீக்கியர்களின் சொத்துரிமையை நீதிமன்றம் உறுதிப்படுத்தியது.

*ஜூன் 23 அன்று இரவில் குருதுவாராவுக்கு முன்பாக மூன்று அல்லது நான்காயிரம் முஸ்லீம்கள் திரண்டனர். அக்கும்பலுக்கும் குருதுவாரா உள்ளிருந்த சீக்கியர்களுக்கும் இடையில் நடைபெற விருந்த போராட்டம் உள்ளூர் அதிகாரிகளின் உரிய நடவடிக்கை காரணமாகத் தவிர்க்கப் பட்டது. அவர்கள், மேலும் மசூதியை இடிப்ப தில்லை என்ற வாக்குறுதியை சீக்கியர்களிடமிருந்து பெற்றனர். அடுத்த வாரத்திலேயே இணக்கமான தீர்வை பெறுவதற்கு தலைவர் களை ஒப்புக்கொள்ளச் செய்யும் கடினமான முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டிருந்த சமயத்தில், தீவிரவாதிகளின் நெருக்குதல் காரணமாக சீக்கியர்கள் திரும்பவும் மசூதியை இடிப்பதில் ஈடு பட்டனர். இது அதிகாரிகளை மிகவும் இக்கட்டான நிலைமைக்குத் தள்ளியது. மேலும் மசூதி இடிக்கப்படுவதை உறுதியுடன் தடுக்கும் ஒரே வழி துப்பாக்கிச்சூடு நடத்துவதாகத்தான் இருந்திருக்கும். அக்கட்டிடம் முழுவதிலும் சீக்கியர்கள் இருந்ததினாலும், அது சீக்கியர்களின் வழிபாட்டுத் தலத்தின் எல்லைகளுக்குள் இருந்தநி னாலும், துப்பாக்கிச்சூடு நடத்தப்பட்டிருக்குமானால் பெரும் ரத்தக் களரியை ஏற்படுத்தி யிருக்கும். மதக் காரணங்களுக்காக, மாகாணம் முழுவதிலும் சீக்கிய மக்கள் மீது கடுமையான பாதிப்பையும் ஏற்படுத்தியிருக்கும். மறுபுறத்தில் அரசாங்கம் செயல்படாதிருக்கு மானால் முஸ்லீம் களிடையே மதக்காரணங்களுக்காக பெரும் சீற்றம் ஏற்படும். அதனால் சீக்கியர்களின் மீதும், அரசாங்கப் படைகளின் மீதும் கூட அவ்வப்போது தாக்குதல் நடைபெறும் என்று எதிர்ப் பார்க்கப்பட்டது.*

*இரு சமூகங்களின் தலைவர்களுக்கு இடையிலான பேச்சு வார்த்தைகள் நல்லிணக்கத்தை ஏற்படுத்தும் என்று நம்பப்பட்டது. ஆனால் குழப்பவாதிகள் தங்களது சக மதத்தவர்களின் மனங் களைக் கிளர்ந்தெழச் செய்தனர். பிரதானக் குற்றவாளிகள் கைது செய்யப்பட்டதையும் மீறி கொந்தளிப்பு அதிகரித்தது. பல ஆண்டு களுக்கு முன்னர் முஸ்லீம்கள் விலைக்கு வாங்கிய மற்றொரு மசூதியைப் புதுப்பித்துத் தர அரசாங்கம் முன்வந்தபோதிலும் அது பதற்றத்தைத் தணிக்கவில்லை. ஜூலை 19 அன்று நிலைமை மேலும் மோசமடைந்தது. அடுத்த இரண்டு நாட்களில் நிலைமை மிகவும் ஆபத்தானதாக மாறிற்று. மத்தியக் காவல் நிலையத்தைப் பெருங் கூட்டம் ஒன்று முற்றுகையிட்டது. அது மிகவும் ஆபத்தான நிலைமை யைத் தோற்றுவித்தது. ஆயுதங்களைப் பிரயோகிக்காமல் கூட் டத்தைக் கலைந்து செல்லச் செய்யும் பல முயற்சிகள் தோல்வியில் முடிந்தன. ஜூலை 20 அன்று இருமுறையும் 21 ஆம் தேதியன்று 8*

முறையும் ராணுவம் துப்பாக்கிச்சூடு நடத்தியது. மொத்தத்தில் 23 குண்டுகள் சுடப்பட்டன. 12பேர் கொல்லப்பட்டனர். எண்ணற்ற ராணுவத்தினரும் போலீசாரும் லேசாகக் காயமடைந்தனர்.

துப்பாக்கிச் சூட்டின் பயனாக கும்பல்கள் கலைந்தன. அவர்கள் திரும்பவும் கூடவில்லை. இதர மாகாணங்களிலிருந்து கூடுதல் போலீசார் கொண்டுவரப்பட்டனர். ராணுவக் கொத்தளங்கள் பலப்படுத்தப்பட்டன. நிர்வாகக் கட்டுப்பாடு திரும்பவும் வேகமாக நிலைநாட்டப்பட்டது. ஆனால் மதத்தலைவர்கள் தொடர்ந்து எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றி வளர்த்துக் கொண்டிருந்தனர். சிவில் வழக்கு புதுப்பிக்கப்பட்டது. சில முஸ்லீம் அமைப்புகள் சில விசித்திரமான கோரிக்கைகளை முன்வைத்தன.

அந்த ஆண்டு முடியும் வரை லாகூரில் நிலைமை தொடர்ந்து கவலையளிப்பதாகவே இருந்தது. நவம்பர் 6 அன்று முஸ்லீம் ஒருவரால் ஒரு சீக்கியர் உயிருக்கு அபாயம் ஏற்படும் விதமாகக் காயப்படுத்தப்பட்டார். மூன்று நாட்களுக்குப் பின்னர் மிகப்பெரிய சீக்கியர்-இந்துப் பேரணி ஒன்று நடத்தப்பட்டது. அதன் அமைப்பாளர்கள் மோதலைத் தவிர்க்கவேண்டுமென்பதில் அக்கறையுடன் இருந்தனர். ஆனாலும் ஒரு மிகமோசமான மோதல் ஏற்பட்டது. அடுத்த நாளே மேலும் கலவரம் தொடர்ந்தது. போலீசாரும் ராணுவத்தினரும் சண்டைகளுக்கு விரைவில் முற்றுப்புள்ளி வைத்திராவிடில் மிகப் பெரிய சேதம் விளைந்திருக்கும்.

முகமது நபியைப்பற்றி அவதூறாக ஒரு துண்டுப் பிரசுரத்தை எழுதியவர் என்று ஏற்கனவே குறிப்பிடப்பட்ட ஓர் இந்துவான நாதுராமல் என்பவரைக் கொலைசெய்த முஸ்லீம் அப்துல் காயூம் என்பவர் தூக்கிலிடப்பட்ட பின்னர் 1935 மார்ச் 19 அன்று கராச்சியில் ஒரு மோசமான சம்பவம் நிகழ்ந்தது. ஒரு போலீஸ் படை உடன்வர அப்துல் காயூமின் உடலை நகருக்கு வெளியே அடக்கம் செய்வதற்காக அவருடைய குடும்பத்தாரிடம் ஒப்படைப்பதற்கு மாவட்ட நீதிபதி சென்றார். அடக்கம் செய்யப்படவிருந்த இடத்தில் கிட்டத்தட்ட 25,000 பேர் அடங்கிய பெருங்கூட்டம் திரண்டிருந்தது. அப்துல் காயூமின் உறவினர்கள் கல்லறையிலேயே உடலை அடக்கம் செய்யவிரும்பியபோதிலும் அக்கும்பலில் இருந்த பெரும்பாலான வன்முறையாளர்கள் நகரெங்கிலும் அந்த உடலை

ஊர்வமாக எடுத்துச் செல்லத் தீர்மானித்தனர். இது வகுப்புக் கலவரங்களுக்கு இட்டுச் செல்லும் என்பதனால் கல்லறைக்குள் அக்கும்பல் நுழைவதைத் தடுப்பது என்று உள்ளூர் அதிகாரிகள் முடிவுசெய்தனர். ஊர்வலத்தைத் தடுத்து நிறுத்தும் போலீசாரின் எல்லா முயற்சிகளும் தோல்வியைத் தழுவின. ஆகவே ராயல் சஸ்ஸெக்ஸ் ரெஜிமென்ட்டைச் சேர்ந்த ராணுவப் பிரிவு ஒன்று அமைதியை நிலைநாட்டுவதற்காக கொண்டு வரப்பட்டது. வெறி கொண்ட கும்பல் முன்னேறுவதைத் தடுக்கவும் தாக்குதலிலிருந்து தங்களை தற்காத்துக் கொள்ளவும் குறுகிய தூரத்திலிருந்து துப்பாக்கிச் சூடு நடத்தும் கட்டாயத்திற்கு ராணுவம் தள்ளப்பட்டது. 47 குண்டுகள் சுடப்பட்டதில் 47 பேர் கொல்லப்பட்டனர். 134பேர் காயமடைந் தனர். மேலும் அதிக அளவில் ராணுவம் குவிக்கப்பட்டதால் கும்பலின் முன்னேறும் முயற்சிகள் தடுக்கப்பட்டன. காயமடைந் தவர்கள் சிவில் மருத்துவமனைக்கு எடுத்துச்செல்லப்பட்டனர். அப்துல் காயூமின் உடல் குழப்பங்கள் ஏதுமின்றி அடக்கம் செய்யப்பட்டது.

1935 ஆகஸ்டு 25 அன்று செகந்தராபாதில் ஒரு வகுப்புக் கலவரம் நடைபெற்றது.

1936 ஆம் ஆண்டில் நான்கு வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. ஏப்ரல் 14 அன்று ஆக்ரா மாவட்டத்திலுள்ள பிரோஜாபாத்தில் மிகப் பயங்கரமான கலவரம் நிகழ்ந்தது. முக்கிய பஜார் வழியாக ஒரு முஸ்லீம் ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. அப்போது இந்துக்களின் வீட்டு மாடிகளிலிருந்து செங்கற்கள் வீசப் பட்டதாகக் கூறப்பட்டது. ஊர்வலத்தில் சென்ற முஸ்லீம்களை இது ஆத்திரமூட்டியது. அவர்கள் ஓர் இந்துவான டாக்டர் ஜீவாராமின் வீட்டுக்குத் தீ வைத்தனர். அருகாமையில் இருந்த ராதாகிருஷ்ணர் ஆலயத்தையும் தீக்கிரையாக்கினர். டாக்டர் ஜீவாராமின் வீட்டிலிருந் தவர்களும் அத்துடன் 11 இந்துக்களும் 3 குழந்தைகளும் தீயில் வெந்து மாண்டனர். 1936 ஏப்ரல் 24 அன்று பம்பாய் மாகாணத்தில் உள்ள புனாவில் இரண்டாவது இந்து-முஸ்லீம் கலவரம் வெடித்தது. ஏப்ரல் 27 அன்று மோங்கிர் மாவட்டத்திலுள்ள ஜாமல்பூரில் ஓர் இந்து-முஸ்லீம் கலவரம் நடைபெற்றது. 1936 அக்டோபர் 15 அன்று பம்பாயில் அந்த ஆண்டின் நான்காவது இந்து-முஸ்லீம் கலவரம் நிகழ்ந்தது.

1937 ஆம் ஆண்டு முழுவதும் வகுப்புக் குழப்பங்கள் நிறைந்த ஆண்டாக இருந்தது. 1937 மார்ச் 27அன்று பாணிபட்டில் ஹோலி ஊர்வலம் நடைபெற்றபோது ஏற்பட்ட இந்து-முஸ்லீம் கலவரத்தில் 14 பேர் கொல்லப்பட்டனர். 1937 மே 1 அன்று சென்னையில் நடைபெற்ற ஒரு சமூகக் கலவரத்தில் 50 பேர் காயமடைந்தனர். மேமாதம் முழுவதிலும் கலவரங்கள் நடந்த வண்ணம் இருந்தன. பெரும்பாலும் அவை மத்திய மாகாணங்களிலும் பஞ்சாபிலும் நடைபெற்றன. சிந்துவில் ஷிகார்பூரில் நடைபெற்ற கலவரம் பெரும் பீதியை ஏற்படுத்தியது. ஜுன் 18 அன்று அமிர்த சரசில் சீக்கியர்-முஸ்லீம் கலவரம் நடைபெற்றது. ஒழுங்கை நிலைநாட்டுவதற்கு பிரிட்டிஷ் ராணுவத்தை வரவழைக்கவேண்டிய அளவுக்கு கலவரத்தின் உக்கிரம் தீவிரமடைந்திருந்தது.

1938 ஆம் ஆண்டில் இரு வகுப்புக் கலவரங்கள் நடை பெற்றன. ஒன்று மார்ச் 26 அன்று அலகாபாதிலும், மற்றொன்று ஏப்ரலில் பம்பாயிலும் நடைபெற்றது.

1939 இல் ஆறு இந்து-முஸ்லீம் கலவரங்கள் நடைபெற்றன. ஜனவரி 21 அன்று அசன்சாலில் நடைபெற்ற ஒரு கலவரத்தில் ஒருவர் கொல்லப்பட்டார். 18 பேர் காயமடைந்தனர். அதைத் தொடர்ந்து பிப்ரவரி 11 அன்று கான்பூரில் நடைபெற்ற ஒரு கலவரத்தில் 42 பேர் கொல்லப்பட்டனர், 200 பேர் காயமடைந்தனர். 800 பேர் கைது செய்யப்பட்டனர். மார்ச் 4 அன்று காசியில் ஒரு கலவரம் ஏற்பட் டதைத் தொடர்ந்து மார்ச் ஐந்தாம் நாள் கல்கத்தாவிற்கு அருகில் உள்ள காசிம்பூரில் கலவரம் நடைபெற்றது. ஜுன் 19 அன்று ரதயாத்திரை ஊர்வலத்தின்போது கான்பூரில் மீண்டும் கலவரம் வெடித்தது.

சிந்து மாகாணத்திலுள்ள சுக்கூரில் 1939 நவம்பர் 20 அன்று மிக மோசமான கலவரம் நடைபெற்றது. அரசாங்கத்திற்குச் சொந்த மான சொத்தாக அரசாங்கத்தின் வசம் இருந்த மன்ஸில்கா என்ற கட்டிடத்தை பலவந்தமாகவேனும் தங்கள்வசம் எடுத்துக்கொள்ள முஸ்லீம்கள் மேற்கொண்ட போராட்டத்தின் விளைவாக அக்கலவரம் நடைபெற்றது. அக்கட்டிடத்தை முஸ்லீம்களுக்குக் கொடுப்பதை இந்துக்கள் ஆட்சேபித்திருந்தனர். அக்குழப்பங்கள் குறித்து விசாரணை செய்ய நியமிக்கப்பட்ட திரு.இ.வில்சன் - இப்போது அவர் பம்பாய் உயர்நீதிமன்றத்தில் ஒரு நீதிபதியாக இருக்கிறார் - கொலை செய்யப்

பட்டவர்களையும் காயமடைந்தவர்களையும் பற்றி பின்வரும் புள்ளி விபரங்களை அளிக்கிறார்.[1]

| தாலுகா | கொலைசெய்யப் பட்டவர்கள் | | காயமடைந் தவர்கள் | | காயமடைந்து பின்னர் இறந்தவர்கள் | |
|---|---|---|---|---|---|---|
| | இந்துக் கள் | முஸ்லீம் கள் | இந்துக் கள் | முஸ்லீம் கள் | இந்துக் கள் | முஸ்லீம் கள் |
| சுக்கூர் நகரம் | 20 | 12 | 11 | 11 | 1 | - |
| சுக்கூர் தாலுகா | 2 | 2 | 23 | - | 5 | - |
| ஷிகார்பூர் தாலுகா | 5 | - | 11 | - | 2 | - |
| கார்ஹியாசின் தாலுகா | 24 | - | 4 | - | - | - |
| ரோஷ்ரி தாலுகா | 10 | - | 3 | - | - | - |
| பனோ அகில் தாலுகா | 6 | - | 1 | - | - | - |
| கோர்கி தாலுகா | 1 | - | 1 | - | - | - |
| மிர்பூர் மாதெலோ தாலுகா | - | - | 1 | - | - | - |
| உபாவுரோ தாலுகா | 4 | - | 3 | 1 | 1 | - |
| | 142 | 14 | 58 | 12 | 9 | - |

அவர் பதிவு செய்துள்ள பல கோரமான சம்பவங்களில் பின்வருவனவற்றை மேற்கோள் காட்டலாம்.

''சுக்கூரிலிருந்து எட்டுமைல் தொலைவிலும் ஷிகார்பூரி லிருந்து 16 மைல் தொலைவிலும் உள்ள கோசர்ஜி கிராமத்தில் 20 ஆம் தேதி இரவு குழப்பங்களிலெல்லாம் மிகப் பயங்கரமான

1. 1939ல் சுக்கூரில் நிகழ்ந்த கலவரங்கள் குறித்து விசாரணை மேற்கொள்ள இந்து பொது விசாரணை சட்டத்தின் பிரிவு 3ன் கீழ் நியமிக்கப்பட்ட விசாரணை நீதிமன்றத்தின் அறிக்கை, பக். 65. ''கொலை செய்யப்பட்டவர்கள்'' பட்டியலில் மொத்தம் 142 இந்துக்கள் என்பது தவறுபோல தெரிகிறது. அது 72 என்றிருக்க வேண்டும்.

குழப்பம் நிகழ்ந்தது. முற்றுப் பெறாதது என்று ஒப்புக்கொள்ளப் பட்ட, அரசாங்கத்திற்கு மாவட்ட நீதிபதி அனுப்பிய ஆரம்ப அறிக்கையின்படி அன்றையஇரவில் அங்கு 27 இந்துக்கள் கொலை செய்யப்பட்டனர்.

''சத்யாகிரகத்தின்போது கோசர்ஜி கிராமத்தைச் சேர்ந்த முன்னணி இந்துக்கள், அப்போது சுக்கூரில் இருந்த அப்பகுதி யின் முன்னணி ஜமீன்தாரான கான்சாகிப் அமீர்பக்ஸிடம் முறையிடுவதற்காகச் சென்றாக கோசர்ஜியைச் சேர்ந்த ஒரு காண்ட்ராக்டரான பமன்மால் கூறுகிறார். அவர்களுடைய பாதுகாப்புக்குத் தாமே பொறுப்பேற்பதாக ஜமீன்தார் அவர் களிடம் உறுதியளித்தார். 20 ஆம் தேதியன்று கான்சாகிப் அமீர் பக்ஸ், கோசர்ஜி கிராமத்தில் இருந்தார். அன்று காலையில் அங்கு முகி மஹ்ருமல் கொலைசெய்யப்பட்டார். இந்துக்கள் மீண்டும் கான்சாகிப் அமீர்பக்ஸிடம் சென்று தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டுமென முறையிட்டனர். அவ்வாறே செய் வதாக அவர் மீண்டும் உறுதியளித்தார். ஆனால் அன்று இரவே ஒட்டுமொத்தமாகக் கொலைகளும் கொள்ளையும் நடந்தன. கொலை செய்யப்பட்ட 37 பேரில் ஏழுபேர் பெண்கள். அடுத்த நாள் காலை தாம் கோசர்ஜியிலிருந்து ஒருமைல் தொலைவில் உள்ள பாகெர்ஜியின் சப்-இன்ஸ்பெக்டரிடம் சென்றதாகவும் ஆனால் தாம் இகழ்ந்துரைக்கப்பட்டு காவல் நிலையத்திலிருந்து விரட்டப்பட்டதாகவும் பமன்மால் கூறுகிறார். பின்னர் அவர் ஷிகார்பூர் சென்று பஞ்சாயத்திடம் புகார் செய்தார். ஆனால் அவர் அங்கு எந்த ஒரு அதிகாரியிடமும் புகார் செய்யவில்லை. கோசர்ஜியில் நிகழ்ந்த கொலைகள் தொடர்பாக எவரையும் கைது செய்யத் தவறியதற்காக பின்னர் பாகர்ஜியின் சப்-இன்ஸ் பெக்டர் மீது இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 211 ஆவது பிரிவின்கீழ் வழக்கு தொடரப்பட்டு அவருக்குத் தண்டனை யும் வழங்கப்பட்டது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன்.

"பாகெர்ஜியின் இந்துக்களுக்குப் பாதுகாப்பு வழங்குவதாக உறுதியளித்ததாகக் கூறப்படும் ஜமீன்தார் கான்சாகிப் அமீர் பக்ஸ் நீதிமன்றத்தில் ஆஜராகி வருவதாகக் கூறப்பட்டதால், நீதிமன்றத்தில் சாட்சியாக அழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டார். கோசர்ஜி கிராமத்தில் இருந்து அரை மைல் தூரத்தில் தாம் வசிப்பதாக அவர் கூறுகிறார். மஹ்ருமல் கொலை செய்யப் பட்டபின்னர் 20 ஆம் தேதியன்று பாகெர்ஜியின் சப்-இன்ஸ் பெக்டர் கோசர்ஜிக்கு வந்தார். அவர் ஒரு மாஹிர் போன்று

செயல்பட்டார். இந்துக்கள் உதவிகோரவில்லை என்றும் குழப்பம் ஏற்படும் என்ற அச்சம் இருக்கவில்லை என்றும் அவர் கூறுகிறார். 20 ஆம் தேதி இரவு தமக்கு உடல்நிலை சரியாக இல்லை என்றும், கொலைகளைப் பற்றிய எந்தத் தகவலும் தமக்குக் கிடைக்கவில்லை என்றும் கூறுகிறார். மன்ஜில்கா காலிசெய்யப்பட்டதைத் தாம் கேள்விப்பட்டதாக அவர் ஒப்புக்கொள்கிறார். சுக்கூரில் குழப்பம் ஏற்பட்டுள்ளதைத் தொடர்ந்து கோசர்ஜி கிராம மக்கள் விழிப்புடன் இருக்க வேண்டுமென்று தாம் அவர்களிடம் கூறியதாகவும் பின்னர் தமது வாக்குமூலத்தில் அவர் ஒப்புக்கொள்கிறார். 19 ஆம் தேதி மாலையில் தாம் பஞ்சாயத்தைக் கூட்டியதாகவும் அவர் கூறுகிறார். 21 ஆம் தேதி அதிகாலையில் கொலைகள் நடந்து முடிந்த பின்னர் அவர் கோசர்ஜி கிராமத்திற்குச் சென்றார். கோசர்ஜியின் பாதுகாவலராகத் தாம் கருதப்படுவதாக அவர் ஒப்புக்கொள்கிறார்.''

திரு.வெஸ்டன் தொடர்ந்து கூறுகிறார்:[1]

''இந்த சாட்சியின் வாக்குமூலத்தை நம்புவது இயலாது என்பதை உணர்ந்தேன். 20 ஆம் தேதி இரவில் கோசர்ஜியில் குழப்பம் ஏற்படும் என்பதை அவர் முழுமையாக உணர்ந்திருந்தார் என்பதிலும், அவர் அப்போது தமது வீட்டிலேயே இருக்க விரும்பினார் என்பதிலும் எனக்கு எந்தவித ஐயமுமில்லை.''

கலவரத்தைப்பற்றிய இந்த ஆவணம் கொடுமையான விளைவுகளையும் துயரம் நிரம்பிய சூழலையும் படம்பிடித்துக் காட்டுகிறது என்பதை யார்தான் மறுக்கமுடியும்? ஆனால் கால வரிசைப்படி அமைந்துள்ள இந்த ஆவணம், எந்த ஒரு குறிப்பிட்ட மாகாணத்திலும் அந்தக் கலவரங்களால் ஏற்பட்ட பேரழிவையும், சமூக பொருளாதார வாழ்வில் அது ஏற்படுத்தியுள்ள முடக்க நிலையையும் பற்றிய ஒரு கருத்தை வழங்க அது தவறக்கூடும். ஒரு மாகாணத்தில் திரும்பத் திரும்ப நடந்த கலவரங்களினால் ஏற்பட்ட முடக்கநிலையைப் பற்றிய ஒரு கருத்தை வழங்க பம்பாய் மாகாணத்திற்கான கலவரங்களைப் பற்றிய ஆவணத்தை நான் புதிய வடிவில் தயாரித்திருக்கிறேன். புதுவடிவில் வழங்கும்போது பொதுவான சித்திரம் பின்வருமாறு தோன்றுகிறது:

1. அதே அறிக்கை. பக்கம் 66-67

*மாகாணத்தை விட்டுவிட்டு பம்பாய் நகர் சம்பந்தமான விபரங்களை மட்டும் பாாக்கும்போது, அந் நகரைப் பற்றிய ஆவணம் மிகவும் துயரார்ந்ததாக உள்ளது. 1893 இல் முதலாவது இந்து முஸ்லீம்-கலவரம் நிகழ்ந்தது. அதைத் தொடர்ந்து 1929 வரை ஒரு நெடிய காலகட்டம்வரை சமூக அமைதி நிலவிவந்தது. ஆனால் அதற்குப் பின்னர் வந்த ஆண்டுகள் பிரமிக்கச் செய்யும் சம்பவங்கள் நிறைந்தவையாக இருந்தன. 1929 பிப்ரவரியிலிருந்து 1938 ஏப்ரல் வரை - ஒன்பது ஆண்டுகள் - 10க்கும் குறையாத வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. 1929 இல் இரு வகுப்புக் கலவரங்கள் நடைபெற்றன. 36 நாட்கள் நீடித்த முதலாவது கலவரத்தில் 149 பேர் கொல்லப்பட்டனர். 739 பேர் காயமடைந்தனர். 22 நாட்கள் நீடித்த இரண்டாவது கலவரத்தில் 35 பேர் கொல்லப்பட்டனர், 109 பேர் காயமடைந்தனர். 1930 இல் இரு கலவரங்கள் நடைபெற்றன. அவற்றில் உயிர்ச்சேதம் எவ்வளவு, எத்தனை நாட்கள் கலவரங்கள் நீடித்தன என்பன போன்ற விபரங்கள் கிடைக்கப்பெறவில்லை. 1932 இல் மீண்டும் இரு கலவரங்கள் நிகழ்ந்தன. முதலாவது கலவரம் சிறிய அளவில் நடைபெற்றது. இரண்டாவது கலவரத்தில் 217 பேர் கொல்லப்பட்டனர். 2713 பேர் காயமடைந்தனர், அது 49 நாட்கள் நீடித்தது. 1933 இல் ஒரே ஒரு கலவரம்தான் நடைபெற்றது. ஆனால் அது சம்பந்தமான விபரங்கள் கிடைக்கப்பெறவில்லை. 1936 இல் ஒரு கலவரம் நடந்தது. அதில் 94 பேர் கொல்லப்பட்டனர், 632 பேர் காயமடைந்தனர். அப் பேரழிவு 65 நாட்கள் நீடித்தது. 1937 இல் நடைபெற்ற கலவரத்தில் 11 பேர் கொல்லப்பட்டனர். 85பேர் காயமடைந்தனர். அது 21 நாட்கள் நீடித்தது. 1938 ஆம் ஆண்டின் கலவரம் இரண்டரை மணிநேரமே நீடித்தது என்றாலும் அக்குறுகிய காலத்தில் 12பேர் கொல்லப்பட்டனர். நூற்றுக்கும் அதிகமானோர் காயமடைந்தனர். 1929 பிப்ரவரியிலிருந்து 1938 ஏப்ரல் வரையிலான மொத்தம் 9 ஆண்டுகள் இரண்டு மாதக் காலகட்டத்தில் பம்பாய் நகரின் இந்துக்களும் முஸ்லீம்களும் மட்டுமே 210 நாட்கள் ரத்தவெறி கொண்டபோரில் ஈடுபட்டிருந்தனர். அதில் மொத்தம் 550 பேர் கொல்லப்பட்டனர். 4500 பேர் காயமடைந்தனர். தீயிடல் கொள்ளை ஆகியவற்றின் காரணமாக சொத்துக்களுக்கு ஏற்பட்ட இழப்பை இது கருத்தில் எடுத்துக்கொள்ளவில்லை.*

## IV

*1920 ஆம் ஆண்டிலிருந்து 1940 வரை இந்து-முஸ்லீம் உறவுகளின் நிலைமை இவ்வாறுதான் உள்ளது. இந்து - முஸ்லீம்*

ஒற்றுமையை ஏற்படுத்துவதற்காக திரு.காந்தி மேற்கொண்ட தீவிர முயற்சிகளை அருகில் வைத்துப் பார்க்கும்போது இந்த ஆவணம் துயரம்மிக்க, மனதை உருக்கும் சம்பவங்களை உள்ளடக்கியதாக உள்ளது. இந்தியாவில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையில் இருபதாண்டுகள் நடைபெற்ற உள்நாட்டுப்போர் பற்றிய ஆவணமே அது என்று கூறுவது மிகைப்பட்டதாக இராது. இக்கால கட்டத்தில் ஆயுதமேந்திய அமைதி நிலவிய சிறிய இடைவெளிகளும் நிலவின.

அந்த உள்நாட்டுப்போரில் பிரதானமாகப் பலியானவர்கள் ஆண்களே, ஆனால் பெண்கள் ஒட்டுமொத்தமாகத் தொல்லைகளிலிருந்து தப்பிவிடவில்லை. வகுப்புவாத வன்முறைகளில் பெண்கள் எந்த அளவுக்குப் பாதிக்கப்பட்டார்கள் என்ற போதுமான விபரம் ஒருவேளை நமக்குத் தெரியாமல் இருக்கக்கூடும். இந்தியா முழுவதற்கான புள்ளி விபரங்கள் கிடைக்கவில்லை. ஆனால் வங்காளம் சம்பந்தமான சில புள்ளிவிபரங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன.

1932 செப்டம்பர் 6 அன்று பழைய வங்காள சட்டமன்ற மேலவையில், வங்காள மாகாணத்தில் பெண்கள் கடத்திச் செல்லப் பட்டது சம்பந்தமான கேள்விகள் கேட்கப்பட்டன. அதற்குப் பதிலளித்த அன்றைய அரசாங்கம், 1922க்கும் 1927க்கும் இடையில் கடத்திச் செல்லப்பட்ட பெண்களின் மொத்த எண்ணிக்கை 568 என்று தெரிவித்தது. அவர்களில் 101 பெண்கள் திருமணமாகாதவர்கள், திருமணமானவர்கள் 467 பேர். கடத்திச்செல்லப்பட்ட பெண்கள் எந்த சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறுமாறு கேட்கப்பட்டதற்கு, திருமணமாகாத 101 பெண்களில் 64 பேர் இந்துக்கள், 29 பெண்கள் முஸ்லீம்கள், 4 கிறிஸ்தவர்கள், 4 பேர் எந்த மதத்தவர்கள் என்று தெரியவில்லை என்று தெரிவிக்கப்பட்டது: கடத்திச் செல்லப்பட்ட திருமணமான 467 பெண்களில் 331 பேர் இந்துக்கள், 122 பேர் முஸ்லீம் பெண்கள், 2 கிறித்தவர்கள், 12 பேரின் மதம் என்ன என்பது தெரியவில்லை. இப்புள்ளி விபரங்கள் புகார் செய்யப்பட்ட அல்லது புகார் செய்யப்பட்டும் துப்புத் துலங்காதவைகள் சம்பந்தப்பட்டவையாகும். வழக்கமாக சுமார் 10 சதவிகிதம் சம்பவங்களே புகார் செய்யப்படுகின்றன. அல்லது துப்புத்துலக்கப்படுகின்றன, 90 சதவிகிதம் புகார்கள் துப்புத்துலங்காமலே போய்விடுகின்றன. வங்காள அரசாங்கம் தெரிவித்த இப்புள்ளி விபரங்களுக்கு இந்த விகிதாசாரத்தைப் பிரயோகிக்கும்போது, 1922-27க்கிடையிலான

குறுகிய ஐந்தாண்டுக் காலகட்டத்தின்போது வங்காளத்தில் கிட்டத் தட்ட 35,000 பெண்கள் அபகரித்துச் செல்லப்பட்டனர் என்று எளிதில் கூறமுடியும்.

பெண்களின் பாலான இந்த அணுகுமுறையானது இந்த இரு வகுப்புகளுக்கிடையில் நட்புமுறையிலான அல்லது நடபற்ற முறை யிலான அணுகுமுறைக்கு ஒரு சரியான குறியீடாகும். ஆகவே 1936 ஜூன் 27 அன்று வங்காளத்தில் உள்ள கோவிந்த்பூர் கிராமத்தில் நடந்த ஒரு சம்பவம் மிகவும் சுவையானதாக உள்ளது. 1936 ஆகஸ்டு 10 அன்று தொடங்கிய, குற்றம்சாட்டப்பட்ட 40 முகமதி யர்களின் வழக்கு விசாரணையின்போது அரசாங்க வக்கீல் ஆற்றிய துவக்க உரையிலிருந்து[1] பின்வரும் சம்பவத் தொகுப்பு எடுக்கப் பட்டுள்ளது. அரசுத் தரப்பு வக்கீல் கூறியிருப்பதாவது:

''கோவிந்த்பூர் என்ற ஊரில் இந்துமதத்தைச் சேர்ந்த ராதா வல்லப் என்பவர் வசித்து வந்தார். அவருக்கு ஹரேந்திரா என்ற மகன் இருந்தார். அதே கோவிந்த்பூரில் பால்விற்றுப் பிழைத்து வந்த ஒரு முஸ்லீம் பெண்மணியும் இருந்தார். அந்த முஸ்லீம் பால்காரியுடன் ஹரேந்திரா தகாத உறவு வைத்திருப் பதாக அந்தக் கிராமத்து முசல்மான்கள் சந்தேகப்பட்டனர். ஓர் இந்துவின் காதலியாக ஒரு முஸ்லீம் பெண் இருப்பதை அவர்கள் வெறுத்தனர். இந்த அவமதிப்புக்காக ராதாவல் லபின் குடும்பத்தின் மீது பழிதீர்க்க அவர்கள் முடிவு செய் தனர். கோவிந்த்பூர் முசல்மான்களின் கூட்டம் கூட்டப்பட்டது. அக்கூட்டத்திற்கு வருமாறு ஹரேந்திராவிற்குத் தகவல் அனுப்பப் பட்டது. கூட்டத்திற்கு ஹரேந்திரா சென்ற உடன் ஹரேந்திராவின் கூக்குரல் கேட்டது. தாக்கப்பட்ட ஹரேந்திரா, அக்கூட்டம் நடைபெற்ற வயலிலேயே சுயநினைவின்றி விழுந்து கிடந்தது கண்டுபிடிக்கப்பட்டது. அத்தாக்குதலுடன் கோவிந்த்பூர் முசல்மான்கள் திருப்தியடையவில்லை. ராதா வல்லப், அவரது மனைவி, அவரது குழந்தைகள் இஸ்லாம் மதத்தைத் தழுவிக் கொள்ளாதவரை தங்களுக்கு அவரது மகன் இழைத்த தீமைக்காக முசல்மான்கள் திருப்தி யடைய மாட்டார்கள் என்று அவர்கள் ராதாவல்லபிடம் தெரி வித்தனர். தமது மனைவியையும் குழந்தைகளையும் வேறொரு

1. சாவதான் என்ற மராத்திய வார ஏட்டின் 1936 ஆகஸ்டு 25 ஆம் நாள் இதழில் பிரசுரமான செய்தியின் ஆங்கில வாசகம்தான் இது.

இடத்திற்கு அனுப்பி வைக்க ராதா வல்லப் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். அத்திட்டம் முசல்மான்களுக்குத் தெரிய வந்தது. அடுத்த நாள், ராதா வல்லபின் மனைவி குசும் தமது வீட்டின் முற்றத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தபோது, அங்கு வந்த சில முகமதியர்கள் ராதாவல்லபைப் பிடித்துக் கொண் டனர். சிலர் குசுமை பலவந்தமாகத் தூக்கிச் சென்றனர். அவளைச் சிறிது தொலைவுக்குக் கொண்டு சென்றபின்னர், லேகர், மஹஜார் என்ற பெயருடைய இரு முகமதியர்கள் அவளைக் கற்பழித்ததுடன் அவளுடைய நகைகளையும் பறித்துக் கொண் டனர். சிறிது நேரம் கழித்து சுயநினைவு திரும்பிய அவள் தனது வீட்டை நோக்கி ஓடினாள். அவளைத் தாக்கியவர்கள் அவளைப் பின்தொடர்ந்து சென்றனர். வீட்டை அடைந்து கதவைத் தாழிட்டுக் கொண்டாள். அவளைப் பின்தொடர்ந்து வந்த முஸ்லீம்கள் கதவை உடைத்து, அவளைப் பிடித்து மீண்டும் சாலை வழியே தூக்கிச் சென்றனர். அவளைத் தெரு விலேயே திரும்பவும் கற்பழிக்கவேண்டும் என்று அவளைத் தாக்கியவர்கள் யோசனை கூறினர். ஆனால் ரஜனி என்ற பெயருடைய வேறொரு பெண்ணின் உதவியுடன் தப்பித்த குசும் ரஜனியின் வீட்டிலேயே அடைக்கலம் புகுந்தாள். அவள் ரஜனியின் வீட்டில் இருந்தபொழுது கோவிந்த்பூரின் முசல்மான் கள் அவளது கணவன் ராதா வல்லபை நிர்வாணமாக்கித் தெருக்களில் நடத்திச் சென்றனர். ராதா வல்லபும் குசுமும் தங்களுக்கேற்பட்ட சோகத்தைப் போலீசிடம் சொல்வதைத் தடுப்பதற்காக, அடுத்த நாள் கோவிந்த்பூரிலிருந்து போலீஸ் ஸ்டேஷன் செல்லும் சாலைகளை முசல்மான்கள் கண்காணித் துக் கொண்டிருந்தனர்.''

கிஞ்சித்தும் ஈவிரக்கமின்றி, கொஞ்சமேனும் வெட்கமின்றி தங்களது சக சமூகத்தவர்களின் கண்டனத்திற்கு ஆளாகாமல் பெண் களுக்கெதிராக இழைக்கப்பட்ட இந்த காட்டுமிராண்டித்தனமான செயல்கள், இரு சமூகங்களையும் பிரித்திருந்த பகைமையின் உக்கி ரத்தைக் காட்டுகின்றன. ஒவ்வொரு தரப்பிலும் நிலவிய கோபா வேசம், போரிடும் இரு நாடுகளின் கோபவேசத்தை ஒத்திருந்தது. படுகொலைகள், கொள்ளைகள், வழிபாட்டுத் தலங்களின் புனிதத் தன்மையை மாசுபடுத்தல் போன்ற சகலவிதமான அட்டூழியங் களையும் முஸ்லீம்களுக்கெதிராக இந்துக்களும், இந்துக்களுக் கெதிராக முஸ்லீம்களும் - முசல்மான்களுக்கெதிராக இந்துக்கள் மேற்கொண்டவற்றைவிட இந்துக்களுக்கெதிராக முசல்மான்கள் மேற்கொண்ட அட்டூழியங்கள் அதிகம் - மேற்கொண்டிருந்தனர்.

இந்துக்களின் வீடுகளை முசல்மான்கள் தீயிட்டுக் கொளுத்தி அதில் இந்துக்களின் ஒட்டுமொத்தக் குடும்பமும், ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் உயிருடன் எரிக்கப்பட்டுத் தீக்கிரை யாக்கப்பட்ட சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. அதைக்கண்டு முஸ்லீம்கள் புளகாங்கிதம் அடைந்தனர். ஈவிரக்கமின்றி வேண்டுமென்றே மேற் கொள்ளப்பட்ட இக்கொடூரச் செயல்கள் வன்மையாகக் கண்டிக்கப் பட வேண்டிய அட்டூழியங்களாக அல்லாமல், மன்னிப்புக் கோருவ தற்கு அவசியமற்ற நியாயமான போர் நடவடிக்கைகளாகக் கருதப் பட்டது விந்தையிலும் விந்தை. இந்த அட்டூழியங்களைக் கண்டு ஆத்திரமடைந்த, காங்கிரஸ் செய்தி ஏடான இந்துஸ்தானின் ஆசிரியர், இந்து-முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்தும் திரு.காந்தி யின் முயற்சிகள் படுதோல்வி அடைந்துவிட்டன என்ற வேதனை கலந்த உண்மையைத் தெரிவிக்கப் பின்வரும் வாசகங்களைப் பயன்படுத்தினார். மிகுந்த சோகம் பீறிடும் சொற்களில் அந்த ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார் :[1]

''இன்றைய இந்தியாவுக்கும், ஒருதேசம் என்றமுறை யில் இந்தியாவுக்கும் இடையிலும் கொலை, கொள்ளையில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிற அசிங்கமான ஒரு யதார்த் தத்திற்கும், தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளும் தேச பக்தக் கற்பனையில் உள்ளவர்களுக்கு இடையில் உள்ள இடைவெளி மிகப்பெரியது. ஓராயிரம் மேடைகளில் இருந்து இந்து-முஸ்லீம் ஒற்றுமையைப்பற்றி முழங்குவதும், அல்லது அவற்றைப் புகழுரைகளுடன் கூடிய தலைப்புச் செய்திகளாக வெளியிடுவதும் செங்கற்களை வீசிக் கொள்வதிலும் கல்லறை களையும் கோயில்களையும் புனிதம் கெடச் செய்வதிலும் கரைந்து விடக்கூடிய ஒரு மாயையைத் தோற்றுவிப்பதாகும். சரோஜினி நாயுடுவைப்போல் அமைதியையும் நல்லெண் ணத்தையும் போற்றும் ஒரு சில பாடல் வரிகளாகப் படுவது நாட்டுக்கு நலம் பயக்காது... காங்கிரசின் தலைவர், தமது நெஞ்சிற்கினிய கவிதைப் பொருளான இந்து - முஸ்லீம் ஒற்றுமையைப் பற்றி அறிவார்ந்த விதத்தில் திடீர் கவிதைகள் இயற்றுவது அவரது அறிவாற்றலுக்குப் பெருமை சேர்க்கிறதே

1. 16.8.1926 தேதியிட்ட 'டைம்ஸ் ஆப் இந்தியா'வின் ''இந்தியனின் பார்வையில்'' என்ற பகுதியில் மேற்கோள் காட்டப்பட்டது.

யன்றி, பிரச்சினைக்குத் தீர்வு காணவில்லை. ஒற்றுமைப் பாடல்கள் தலைவர்களின் வாயசைவுகளாக மட்டுமன்றி அவர்களது கோடிக்கணக்கான நாட்டு மக்களின் நெஞ்சங் களிலும் இடம்பெறும் போதுதான் இந்தியாவிலுள்ள கோடானு கோடி மக்கள் அதைச் செவிமடுக்க முடியும்.''

இந்து-முஸ்லீம் ஒற்றுமையைப் பற்றிய எந்த நம்பிக்கையும் பயனற்றது என்பதை நான் சொல்லக்கூடிய எதுவும் இவ்வளவு சிறப்பாகத் தெளிவுபடுத்த முடியாது. இதுவரையில் இந்து-முஸ்லீம் ஒற்றுமை கானல் நீர் போல இருந்தாலும் கூட காணக் கூடிய தூரத்தில் இருந்தது. ஆனால் இன்று பார்வைக்கு அப்பால் மனதிற்கு அப்பால் இருக்கிறது. திரு. காந்தியும் கூட அது இயலாத காரியம் என்று உணர்ந்து கைவிட்டு விட்டார்.

ஆனால் கடந்த இருபதாண்டுகளின் வரலாற்றை பொருட் படுத்தாமல் இந்து-முஸ்லீம் ஒற்றுமை சாத்தியம் என்று கருது பவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். அவர்களுடைய இந்த நம்பிக்கை இரண்டு விஷயங்களை ஆதாரமாகக் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது. முதலாவதாக, பலவகைப்பட்ட மக்களை ஒரேதேசமாக உருவாக்குவதில் மைய அரசின் திறமையில் அவர்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். இரண்டாவதாக, முஸ்லீம்களின் தேவைகளைப் பூர்த்திசெய்தல் இந்து-முஸ்லீம் ஒற்றுமையை எய்தும் நிச்சயமான வழிமுறை என்று அவர்கள் கருதுகின்றனர்.

அரசாங்கம் ஓர் ஒருங்கிணைக்கும் சக்தி என்பதும், ஒரே அரசாங்கத்தின் கீழ் இருக்கும் ஒரே காரணத்திற்காக பலதரப்பட்ட மக்கள் ஒரேமக்களாக இணைக்கப்பட்டுள்ள பல சம்பவங்கள் உள்ளன என்பதும் உண்மைதான். ஆனால், ஓர் ஒன்றிணைக்கும் சக்தி என்ற முறையில் அரசாங்கத்தையே நம்பி இருக்கும் இந்துக் கள் ஓர் ஒருங்கிணைக்கும் சக்தி என்ற முறையில் செயல்படும் அர சாங்கத்திற்குச் சில வரையறைகள் உள்ளன என்பதை மறந்து விடுவது போல் தெரிகிறது. இணைப்புக்கான வழியில் இனம்,மொழி, மதம் ஆகியவை குறுக்கே நிற்காத ஒரு நாட்டில் அரசாங்கம் ஓர் உறுதியான ஒருங்கிணைக்கும் சக்தியாகத் திகழ்கிறது. மறுபுறத்தில் இனம், மொழி, மதம் ஆகியவை ஒற்றுமைக்குத் தடையாக இருக்கக் கூடிய ஒரு நாட்டில் அரசாங்கம் ஓர் ஒருங்கிணைந்த சக்தியாகச் செயல்படமுடியாது. பிரான்ஸ், இங்கிலாந்து, இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளில் உள்ள பல்வேறு வகையான மக்கள் ஒரு

பொதுவான அரசாங்கத்தினால் ஒருங்கிணைந்த தேசங்களாக மாறி யுள்ளன என்றால் அதற்குக் காரணம் இனம், மொழி, மதம் போன்ற எவையும் அரசாங்கத்தின் ஒருங்கிணைக்கும் செயல்பாட்டைத் தடுக்க வில்லை என்பதே ஆகும். மறுபுறத்தில் ஆஸ்திரியா, ஹங்கேரி, செக்கோஸ்லோவாகியா, துருக்கி ஆகிய நாடுகளில் உள்ள மக்கள் ஒரு பொதுவான அரசாங்கத்தின் கீழ் ஒருங்கிணைக்கப்படவில்லை என்றால் அதற்குக் காரணம் இனம், மொழி, மதம் ஆகியவை அர சாங்கத்தின் ஒருங்கிணைக்கும் சக்தியை எதிர்க்கவும், ஆற்றல் கெடச் செய்யவும் போதுமான பலம் பெற்றிருந்ததேயாகும். ஒருபொதுவான அரசாங்கத்தின் ஒருங்கிணைக்கும் சக்தியின் வாயிலாக இந்திய மக்களை ஒரேதேசமாக இணைக்கமுடியாத அளவுக்கு இந்தியா வில் இனம், மொழி, மதம் ஆகியவை மேலோங்கி வந்துள்ளன என்பதை எவரும் மறுக்கமுடியாது. இந்தியாவின் மத்திய அரசாங்கம் இந்திய மக்களை ஒரே தேசமாக வடித்துள்ளது என்று கூறுவது ஒரு மாயையாகும். கட்டுக்கடங்காத பிராணிகள் வைத்துள்ள ஒருவர் அவற்றைக் கயிற்றால் கட்டி ஒரே லாயத்தில் அடைத்து வைத்திருப்பது போல இந்தியமக்களை ஒரே சட்டத்தினால் ஒன்றாகப் பிணைத்து ஒரே இடத்தில் அவர்களைக் குடியமர்த்தி வைத்திருக்கும் பணியைத்தான் மத்திய அரசாங்கம் செய்துள்ளது. மத்திய அரசு செய் திருப்பதெல்லாம் இந்தியர்களிடையே ஒருவகையான அமைதியை ஏற்படுத்தியிருப்பதுதான். அது அவர்களை ஒரே தேசமாக ஆக்க வில்லை.

ஒருங்கிணைப்பு நடைபெறுவதற்குக் கால அவகாசம் மிகக்குறைவு என்று சொல்லமுடியாது. ஒரு மத்திய அரசாங்கத்தின் கீழ் 150 ஆண்டுக்கால வாழ்வு போதாதென்றால் பேரூழிக் காலமே போதாது. இத்தோல்விக்கு இந்தியர்களின் மனப்போக்கு மட்டுமே காரணம். இந்தியர்களிடையே ஒற்றுமைக்கான ஆர்வம் இல்லை. ஒருங்கிணைப்புக்கான விருப்பம் இல்லை. ஒரு பொதுவான உடை அணியும் விருப்பம் இல்லை. ஒருபொதுவான மொழியைக் கொண்டிருக்கும் விருப்பம் இல்லை. ஒரு பொதுவான, தேசத் திற்குத் தேவையான ஏதோ ஒன்றுக்காக, குறிப்பிடத்தக்க எதையும் விட்டுக் கொடுக்கும் நெஞ்சுரம் இல்லை. ஒரு குஜராத்தியர் குஜராத்திக்காரராகவும், ஒரு மகாராஷ்டிரக்காரர் மகாராஷ்டிரிய ராக இருப்பதிலும், ஒரு பஞ்சாபி பஞ்சாபியராக இருப்பதிலும் ஒரு மதராசி மதராஸ்காரராக இருப்பதிலும், ஒரு வங்காளி வங்காளி யாகவே இருப்பதிலும்தான் பெருமைகொள்கிறார். இந்துக்களின் மனப்பாங்கு இவ்வாறுதான் உள்ளது. இவர்கள் ''நான் முதலில் ஒரு

முசல்மான், பின்னர்தான் இந்தியன்'' என்று கூறும் முசல்மானை தேசிய உணர்வற்றவர் என்று குற்றம் சாட்டுகின்றனர். பொதுவான, ஒருங்கிணைக்கும் அம்சத்திற்கு ஆதரவாக, குறிப்பிட்ட, ஸ்தல அம்சங்களைத் தியாகம் செய்வதன் மூலம் தார்மீக வகுப்பு ஒற்றுமையை வெளிப்படுத்தும் ஆர்வத்தின் மிகச்சிறிய அறிகுறியேனும் தங்கள் ''சிவிஸ் இண்டியானுஸ் சம்'' என்ற பிரகடனத்தின் பின்னால் இருப்பதற்கான தோற்றத்தை ஏற்படுத்தக்கூடிய ஓர் உள்ளுணர்வை அல்லது ஆர்வத்தை இந்தியாவில் எங்கேனும், இந்துக்களிடையேயும் கூட காணமுடிகிறது என்று எவரேனும் கூறமுடியுமா? அத்தகைய எண்ணமோ அல்லது ஆர்வமோ இல்லை. எண்ணமோ அல்லது ஆர்வமோ இன்றி ஒற்றுமையை ஏற்படுத்த அரசாங்கத்தை நம்பியிருப்பது என்பது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகும்.

இரண்டாவது அம்சத்தைப் பொறுத்த வரையில் அதுவே சைமன் கமிஷனின் கருத்தாகவும் இருந்தது என்பதில் ஐயமில்லை:

> ''இந்தியாவின் அரசியல் வருங்காலத்திற்கான வாய்ப்புகள் குறித்து இரு சமூகங்களிலும் நிலவும் கவலைகளின் பேராசைகளின் வெளிப்பாடுதான் வகுப்புக் கலவரங்கள். பிரிட்டிஷ் கரங்களில் அதிகாரம் உறுதியாக இருக்கும்வரை, சுயாட்சி என்ற சிந்தனை இல்லாதவரை இந்து-முஸ்லீம் பகைமை ஒரு குறுகிய துறையில் மட்டுமே முடங்கிக் கிடக்கும். ஒரு நடுநிலையான அதிகார வர்க்கம் இருக்கும் காரணத்தினால் மட்டும் பகைமை ஊக்குவிக்கப்படாதிருந்தது என்பது மட்டுமல்ல, மற்றுமொரு காரணம் என்ன வெனில், ஒரு சமூகத்தின் எண்ணிக்கை மேலோங்கியிருந்ததைக் கண்டு மற்றொரு சமூகம் அச்சம் கொள்வதற்கு அவசியமில்லாமல் இருந்ததும்தான். அதேபோல இன்றைக்கு இந்திய மாகாணங்களில் வகுப்புப்பகைமை இல்லாதிருப்பதையும் விளக்கலாம். ஒரு தலைமுறைக்கு முன்னர் பிரிட்டிஷ் இந்தியாவில் நிலவிய சூழலைப்பற்றித் தெரிந்தவர்கள் அக்காலகட்டத்தில் பொதுஅமைதிக்கு சமூகப் பதற்றங்கள் மிகமிகக் குறைந்த அளவிலேயே அச்சுறுத்தலாக இருந்தன என்பதையும், இருதரப்புகளுக்கிடையில் நல்லுணர்வுகள் வளர்க்கப்பட்டு வந்தன என்பதையும் ஒப்புக்கொள்வார்கள். ஆனால் சீர்திருத்திருத்தங்கள் வந்ததும், அவற்றைத் தொடர்ந்து என்ன நடக்கும் என்ற எதிர்ப்பார்ப்பும் இந்து-முஸ்லீம் போட்டிக்குப் புதுப்

பரிமாணத்தைக் கொடுத்தது, இயற்கையாகவே ஒரு சமூகம் பெரும்பான்மையினருக்கான உரிமைகளைக் கோருகிறது. சிறந்தகல்வி, பெரும் செல்வம் ஆகிய தனது தகுதிகளை அதற்கு ஆதாரமாகக் கொள்கிறது; மற்றொரு சமூகமோ தனது உறுப்பினர்களுக்குச் சிறந்த, உறுதியான பாதுகாப்பைப் பெற உறுதிபூண்டுள்ளது. அதே சமயம் நாட்டை முன்பு படையெடுத்து வெற்றிகண்டவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தவும் அது மறந்துவிடவில்லை. அது தனக்குப் போதுமான பிரதிநிதித்துவத்தையும், அரசாங்கப் பதவிகளில் முழுமையான பங்கையும் உறுதியளிக்க வேண்டுமென்று விரும்புகிறது.''

இதுவே உண்மையான நிலைமை என்று வைத்துக் கொண்டாலும், முஸ்லீம்களுடைய கோரிக்கை நியாயமானது என்று கொண்டாலும், அக்கோரிக்கைகளுக்கு இந்துக்கள் ஒப்புக்கொள்வதாகக் கொண்டாலும் - இவையெல்லாம் மிகப்பெரிய ஊகங்களே முஸ்லீம்களுடைய அரசியல் கோரிக்கைகளை நிறைவேற்றுவதிலிருந்து விளையக்கூடிய அரசியல் ஒற்றுமையின் மூலமாக இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையில் உண்மையான ஒற்றுமை ஏற்பட முடியுமா என்பது கேள்விக்குறியே. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடை யில் அரசியல் ஒற்றுமை இருந்தாலே போதும் என்று சிலர் எண்ணுவதுபோல் தோன்றுகிறது. இது ஒரு மிகப்பெரிய மாயை என்றே நான் கருதுகின்றேன். நிலைமைக்குத் தகுந்தாற்போல் குடியேற்ற நாட்டு அந்தஸ்து பெறவோ அல்லது சுதந்திரம் பெறவோ பிரிட்டிஷாரிடம் வைத்துள்ள தங்களது கோரிக்கைகளில் இந்துக்களுடன் முஸ்லீம்களையும் எவ்வாறு இணையச்செய்வது என்று இத்தகைய கருத்துக்கொண்டவர்கள் சிந்திப்பது போல் தெரிகிறது. இது மிகவும் குறுகியநோக்குடைய கண்ணோட்டம் என்பதில் ஐயமில்லை. பிரிட்டிஷாரிடம் இந்துக்கள் வைத்துள்ள கோரிக்கைகளில் முஸ்லீம்களையும் இணைந்து கொள்ளச்செய்வது எங்ஙனம் என்பது மிகச் சிறிய பிரச்சினைதான். எத்தகைய உணர்வுடன் அவர்கள் அரசியல் சட்டத்தை உருவாக்குவார்கள்? ஒரு தேவையற்ற உறவினால் தங்களை அன்னியர்களாகக் கருதிக்கொண்டு அவர்கள் அதில் கலந்து கொள்வார்களா அல்லது உண்மையான உறவு கொண்டவர்களாகக் கருதி அதில் கலந்து கொள்வார்களா என்பது மிகமுக்கியக் கேள்வி. உண்மையான உறவு கொண்டவர்களாக அதில் கலந்துகொள்வதற்குத் தேவையானது அரசியல் ஒற்றுமை மட்டுமல்ல, மாறாக உள்ளமும் ஆன்மாவும் உண்மையாக ஒன்றுபடுதலேயாகும். வேறுவிதமாகச் சொன்னால் வகுப்பு ஒற்றுமையே

யாகும். உண்மையான இணக்கம் வெளிப்படவில்லையெனில் அரசியல் ஒற்றுமையினால் பலனேதும் இல்லை. நண்பர்களாக இல்லாமல் ஒருவருக்கொருவர் கூட்டாளியாக இருப்பது போன்ற நபர்களுக்கிடையிலான ஒற்றுமை நிலையற்றதாகவே இருக்கும். அது எந்த அளவுக்கு நிலையற்றதாக இருக்கும் என்பதற்கு ஜெர்மனிக்கும் ரஷியாவுக்குமிடையில் என்ன நடந்தது என்பது மிகச் சிறந்த உதாரணமாகும். வெறும் பொருளாதார நலன்களைத் திருப்திப்படுத்துவதை மட்டும் சார்ந்திருக்க ஒரு நிரந்தர இணைப்பை உருவாக்கமுடியும் என்று தனிப்பட்ட முறையில் நான் கருதவில்லை. உடன்படிக்கைகள் ஒற்றுமையை ஏற்படுத்தலாம். ஆனால் அந்த ஒற்றுமை ஒருபோதும் ஐக்கியமாகப் பரிணமிக்காது, ஐக்கியத்திற்கு ஆதாரமாக ஓர் உடன்படிக்கையைச் செய்துகொள்வதென்பது பயனற்றது என்பதை விடவும் மோசமானது. அதனுடைய தன்மையே சுட்டிக்காட்டுவது போல ஓர் ஒப்பந்தமானது தனிமைப்படுத்தும் தன்மையுடையது. ஓர் ஒப்பந்தமானது விட்டுக் கொடுக்கும் ஆர்வத்தை ஏற்படுத்தமுடியாது, தியாக உணர்வை அது ஊட்ட முடியாது, பிரதான குறிக்கோளை எய்துவதற்கு தரப்புக்களைப் பிணைக்கமுடியாது. ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுப்பதற்குப் பதிலாக உடன்படிக்கையில் கையெழுத்திட்டுள்ள தரப்புகள் ஒருவர் மற்றவரிடமிருந்து முடிந்த அளவுக்குச் சலுகைகள் பெறவே விழைகின்றனர். பொதுவான லட்சியத்திற்காகத் தியாகங்கள் புரிவதற்காக உடன்படிக்கையில் கையெழுத்திடுபவர்கள், ஒருவர் புரியும் தியாகத்தை மற்றவர் தனது நலனுக்காக பயன்படுத்தாமல் இருக்க வேண்டுமென்று எப்போதும் கண்காணிக்கின்றனர். பிரதானக் குறிக்கோளுக்காகப் போராடுவதற்குப் பதிலாக உடன்படிக்கையில் சம்பந்தப்பட்ட தரப்புகள், இலக்கை எட்டுவதற்கான போராட்டத்தில் தரப்புகளுக்கு இடையிலான அதிகாரச் சமநிலை பாதிக்கப்படாமல் இருக்க வேண்டுமென எப்போதுமே கண்காணிப்பதில் ஈடுபட்டுள்ளனர். ரெனான் மிக ஆழமான உண்மையைப் பேசினார். அவர் கூறியதாவது:

> ''மனிதர்களுக்கிடையே நலன்களின் ஒருமைப்பாடு என்பது நிச்சயமாக ஒரு சக்திவாய்ந்த பிணைப்புதான். ஆயினும் நலன்கள் மட்டுமே ஒரு தேசத்தை உருவாக்கப் போதுமானவைதானா? நான் அவ்வாறு கருதவில்லை. நலன்களின் ஒருமைப்பாடு வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொள்ள உதவும். தேசியத் தன்மைக்கு ஓர் உணர்ச்சிகரமான பரிமாணமும் உண்டு; அது உடலும் உள்ளமும் போல; ஒரு ஜோல்வெரின் ஒரு தந்தையர் நாடாகிவிடாது.''

மற்றுமொரு வரலாற்றியலாளரான ஜேம்ஸ் பிரைஸின் கண்ணோட்டமும் கூட கருத்தைக் கவருவதாக அமைந்துள்ளது. பிரைய்ஸ் கூறுகிறார்:

''ஓர் அமைப்பின் நிரந்தரத்தன்மையானது அதனை ஆதரிக்கும் பொருளாயத நலன்களை மட்டும் நம்பியிருப்ப தில்லை. மாறாக, அது யாருக்காக உருவாக்கப்பட்டதோ அந்த மனிதர்களின் ஆழவேரூன்றிய உணர்வுகளுக்கும் ஏற்புடை யதாக இருக்கிறது. அதன்பால் தன்னை ஈர்த்துக் கொண்டு அந்த உணர்வுகளுக்கு உகந்த வெளிப்பாட்டை வழங்கும்போது, அந்த உணர்வானது அதன்மூலம் அதிகமாக வெளிப்படுத்தப் படுகிறது. உண்மையிலேயே பலமடைகிறது. அது தனது பங்காக அந்த அமைப்பிற்கு முழுமையான வீரியத்தை அளிக்கிறது.''

ஜெர்மன் சாம்ராஜ்யத்தை பிஸ்மார்க் தோற்றுவித்தது சம்பந்தமாக பிரைஸ் இக்கருத்துகளைக் கூறினார். பிரைஸின் கூற்றுப்படி பிஸ்மார்க் நீடித்த சாம்ராஜ்யத்தை உருவாக்குவதில் வெற்றி கண்டார், ஏனெனில் அது ஓர் உணர்வை ஆதாரமாகக் கொண்டிருந்தது. அந்த உணர்வு ஊட்டி வளர்க்கப்பட்டதாக இருந்தது.

''...... எல்லாவற்றிற்கும் மேலாக தேசியத் தன்மைக்கான உள்ளுணர்வு அல்லது ஆர்வம் என்று நாம் அழைக்கும் மக்க ளின் விருப்பமானது ஏற்கனவே தார்மீக, சமூக ஒற்றுமையை உணர்ந்துள்ளது. ஒரே அரசாங்கத்தின்கீழ் அத்தகைய ஒற்றுமை வெளிப்படுவதையும் நனவானதையும் காண்பதென்பது நாகரிக நாடுகளிடையே அதற்கு ஓர் இடத்தையும் பெயரையும் பெற்றுத்தரும்.''

நிரந்தரத் தன்மையை வழங்கும் தார்மீக, சமூக ஒற்றுமையை ஏற்படுத்தவது எது? ஒரே அரசாங்கத்தின் கீழ் அத்தகைய ஒற்றுமை வெளிப்படுவதையும் நனவாவதையும் காண மக்களைத் தூண்டுவது எது? நாகரிக நாடுகளிடையே அதற்கு ஓர் இடத்தையும் பெயரை யும் வழங்குவது எது?

ஜேம்ஸ் பிரைஸைத் தவிர வேறு எவரும் இக்கேள்விக்குப் பதிலளிக்கத் தகுதியானவர் அல்ல. ரோம சாம்ராஜ்யத்துடன் ஒப்பிடும்

பொழுது புனித ரோம சாம்ராஜ்யத்தின் வீரியத்தன்மையை விவா திப்பதில் அத்தகைய ஒரு கேள்வியைத்தான் அவர் கருத்தில் கொள்ள வேண்டியிருந்தது. தனது பலவகைப்பட்ட மக்களிடையே அரசியல் ஒற்றுமையை ஏற்படுத்துவதில் ஏதேனும் ஒரு சாம்ராஜ்யம் வெற்றி யடைந்தது என்றால் அது ரோம சாம்ராஜ்யமாகத்தான் இருக்க வேண்டும். பிரைஸின் கருத்துக்களை எளிமையாகவும் சுருக்க மாகவும் பின்வருமாறு கூறலாம்: ஏற்படுத்தப்பட்ட காலனிகள் மூலமாக முதலாவதாக இத்தாலி முழுவதிலும் பின்னர் மாநிலங் களிலும் ரோமானியப் பிரஜாஉரிமை படிப்படியாக விஸ்தரிக்கப் பட்டது. அனைவருக்கும் சமமாக்கப்பட்ட, சமமாக்கும் ரோமானியச் சட்டம் செயல்படுத்தப்பட்டது. எல்லாப் பிரஜைகளின் மீதும் அரசாங் கத்தின் ஒரே மாதிரியான நெருக்குதல், வர்த்தகத்தினாலும் அடிமைகள் போக்குவரத்தினாலும் மக்களின் நடமாட்டங்கள் போன்றவை பல்வேறு வகையான மக்களைத் தன்னுள் சீராகக் கிர கித்துக் கொண்டது. பெரும்பாலும் அந்தந்த மாநிலங்களைச் சேர்ந்த வர்களே பேரரசர்களாக இருந்ததால், இத்தாலியை அவ்வளவாக நேசிக்கவில்லை, அல்லது ஆன்டொனன்களின் காலத்திற்குப் பின்பும் கூட ரோமையே நட்பாகக் கருதவில்லை. ஒவ்வொரு பிரஜைக்கும் வேலைவாய்ப்பு வழங்குவது அவர்கள் கொள்கை யாக இருந்தது. அந்த சுதந்திரத்தினால் தான் அவர்கள் மகத்தான நிலைக்கு உயர்ந்தனர். சுதந்திர மனிதர்களிடையே சட்டரீதியான அந்தஸ்தில் வேறுபாடுகளைக் களைந்த அது தனது பணியை நிறைவு செய்து கொண்டது. வர்த்தகம், இலக்கியம் ஒன்றைத் தவிர எல்லா மதநம்பிக்கைகளையும் சகித்துக் கொள்ளுதல் ஆகியவை ஏற் கெனவே செய்யப்பட்டன. இனம் அல்லது மதங்களிடையே எந்த சச்சரவுகளும் இல்லாதிருந்தது, ஏனெனில் ஒரு பொதுவான சாம்ராஜ்யம் என்ற கருத்தில் எல்லா தேசிய வேறுபாடுகளும் ஒன்றாகக் கலந்துவிட்டன.

ரோமானிய சாம்ராஜ்யம் ஏற்படுத்திய இந்த ஒற்றுமை ஓர் அரசியல் ஒற்றுமையாக மட்டுமே இருந்தது. இந்த அரசியல் ஒற்றுமை எவ்வளவு காலம் நீடித்தது? பிரைஸ் கூறுவதாவது:

> ''மெதுவாகச் செயல்படும் இந்தச் செல்வாக்குகள் இந்த ஒற்றுமையை ஏற்படுத்தத் தொடங்கியபோது, இதர செல் வாக்குகள் அதனை அச்சுறுத்தத் தொடங்கின. புதிய எதிரிகள் எல்லைகளைத் தாக்கினர்; அக்கட்டமைப்பு உள்ளுக்குள் ளேயே தளர்வு அடைந்தது என்பதை அடுத்தடுத்து வந்த

ஒவ்வொரு பேரரசரும் இறந்ததை அல்லது பதவி நீக்கம் செய்யப்பட்டதைத் தொடர்ந்து அதிகாரத்தைப் பிடிப்பதற்கான நெடிய போராட்டங்கள் காட்டின. குழப்பம் நிலவிய கால கட்டத்தில் வலேரியன் வீழ்ந்த பின்னர், பேரரசின் ஒவ்வொரு பகுதியிலும் ராணுவங்கள் ஜெனரல்களை உருவாக்கிக் கொண்டன. அவர்கள் முடிமன்னர்களைப் போல பெரும் நிலப்பகுதிகளை ஆண்டனர். தலைநகரை ஆண்டவருக்கு அவர்கள் கட்டுப்பட்டு நடக்கவில்லை. அந்த சாம்ராஜ்யத்தின் மேற்கத்திய பகுதி தனித்தனி முடியாட்சிகளாகப் பிரிவதை இருநூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே எதிர்ப்பார்த்திருக்க முடியும், ஆனால் அவை எல்லாவிதமான ஒற்றுமையை இழப்பதற்கு முன்னரே துண்டுதுண்டாகக் கிடந்த சாம்ராஜ் யத்தை செயலூக்கமாகவும் திறமையாகவும் பிணைப்பதற்கு டையோகி லோடியன் என்ற இளவரசன் தோன்றினான். அவனுடைய புதிய பரிகாரங்களினால் நிலைமை மாற்ற மடைந்தது. அதிகாரத்தைப் பிரித்து ஸ்தலப்படுத்தும் கொள்கையை அவன் ஏற்றுக் கொண்டதானது, பலவீன மடைந்த இருதயம் உடலின் தீவிரத்தேவைகளுக்கேற்ப இனி துடிக்க முடியாது என்ற உண்மையை எடுத்துக்காட்டியது. நான்கு தலைநகர்களில் கூட்டு முடிமன்னர்களாக ஆண்டு வந்த நான்கு முடி மன்னர்களிடமிருந்து அதிகாரத்தைப் பிடுங்கி பின்னர் அதற்கு அவனது முன்னோர்கள் இருந்திருந் தால் அவனை வெறுத்து ஒதுக்கியிருக்கக்கூடிய விதத்தில் அதனைச் சூழ்ந்து கொண்டு அதற்கு ஒரு கற்பனையான பலத்தைக் கொடுக்க விழைந்தான். நிகோமெடியாவுக்கும் மிலானின் மகத்துவத்திற்கும் இடையில் நிலவிய பகைமை யினால் ரோமினுடைய தனியுரிமைக்கு அச்சுறுத்தல் ஏற்பட்டது.''

ஆகவே ரோம சாம்ராஜ்யத்திற்கு நிரந்தரத் தன்மையை யும் ஸ்திரத்தன்மையையும் வழங்குவதற்கு அரசியல் ஒற்றுமை மட்டும் போதாது என்பதற்கு இது சான்று பகர்கிறது. பிரைஸ் சுட்டிக்காட்டுவதுபோல, எல்லைப் பகுதிகளில் வாழ்ந்த காட்டு மிராண்டிக் குடியினர் துணிச்சலுடன் இருந்திருந்தால், அல்லது ரோம சாம்ராஜ்யத்தின் மேற்கத்தியப் பகுதி எல்லாவிதமான ஒற்றுமை யையும் இழப்பதற்கு முன்னரே மாறிய நிலைமைகளைப் புதிய பரிகாரங்கள் மூலம் சமாளித்து துண்டு துண்டாகக் கிடந்த சாம்ராஜ் யத்தை செயலூக்கமாகவும் திறமையுடனும் பிணைப்பதற்கு

டையோகிலோடியன் எனும் ஓர் இளவரசன் தோன்றாதிருந்தால் அந்த மேற்கத்திய பகுதி உடைந்து நொறுங்குவது 200 ஆண்டு களுக்கு முன்பே நிகழ்ந்திருக்கும்''. ஆனால் உண்மை என்ன வெனில் நிலையின்றி, துண்டுதுண்டாக உடைந்து கொண் டிருந்த ரோம சாம்ராஜ்யம், அதனை ஒன்றாகப் பிணைப் பதற்கு அதனுடைய அரசியல் ஒற்றுமை போதுமானதாக இருக்கவில்லை. ஆயினும் அது புனித ரோமசாம்ராஜ்யமாக மாறியபின்னர் ஒரே ஒருங்கிணைந்த அமைப்பாகப் பலநூறு ஆண்டுகள் நீடித்தது. பேராசிரியர் மார்வின் சுட்டிக்காட்டுவது போல :[1]

ரோம சாம்ராஜ்யத்தின் ஒற்றுமை முக்கியமாக அரசியல் மற்றும் ராணுவ ஒற்றுமையாக இருந்தது. அது நானூறு முதல் ஐந்நூறு ஆண்டுகள் வரை நீடித்தது. கத்தோலிக்கத் திருச்சபை யின் செல்வாக்குப் பெற்ற அந்த ஒற்றுமை மதசம்பந்தமான, தார்மீக ரீதியானதாக இருந்ததுடன் ஓராயிரம் ஆண்டுகள் நீடித்தது.

ரோமசாம்ராஜ்யம் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவுக்கு அதைவிட புனித ரோம சாம்ராஜ்யம் நிலையானதாக இருக்கச் செய்தது எது என்பதுதான் இப்போதைய கேள்வி. பிரைஸின் கூற்றுப்படி கிறித்தவ மதத்தின் உருவில் ஒரு பொதுவான மதமும் கிறித்தவ திருச்சபையின் உருவில் ஒரு பொதுவான மத அமைப்பும் தான் புனித ரோம சாம்ராஜ்யத்திற்கு உரமாக அமைந்தது. அது ரோம சாம்ராஜ்யத்திற்கு இல்லாதிருந்தது. இந்த உரம்தான் சாம்ராஜ்யத்தின் மக்களுக்கு தார்மீக, சமூக ஒற்றுமையைக் கொடுத்தது. ஒரே அரசாங்கத்தின் கீழ் அத்தகைய ஒற்றுமை வெளிப் படுவதையும் நனவாவதையும் காணச்செய்தது.

ஒரு பொதுவான மதம் என்றமுறையில் கிறித்தவ மதத்தின் ஒன்றிணைக்கும் ஆற்றலைப் பற்றிக் கூறும்போது பிரைஸ் சொல்வதாவது:

''ஒரு தேசத்தின் உள்ளார்ந்த, ஆழவேரூன்றிய வாழ்க்கை மதத்தையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. ஏனெனில் தெய்வத் தன்மை பிளவுபட்டிருந்த காரணத்தினால் மானுட இனமும் பிளவுபட்டிருந்தது. அதேபோன்று; கடவுளின் ஒற்றுமை என்ற சித்தாந்தம் இப்போது மனிதனின் ஒற்றுமையை நிலை நாட்டியது. ஏனெனில் கடவுளுடைய தோற்றத்தில்தான்

1. மேற்கத்திய நாகரிகத்தின் ஒற்றுமை (நான்காவது பதிப்பு) பக். 27.

*மனிதன் உருவாக்கப்பட்டிருந்தான். கிறித்தவ மதத்தின் முதலாவது படிப்பினையே அன்புதான். இதுவரை இனத்தைப் பற்றிய ஒருதலைப்பட்சமான கருத்தும் பெருமிதமும், ஐயப்பாடுகளும் பிரித்து வைத்திருந்த மனிதர்களை ஒரே அமைப்பாக இணையச் செய்தது அன்புதான். அவ்வாறு நம்பிக்கையுள்ளவர்களைக் கொண்ட ஒரு சமூகத்தின் புதிய மதத்தினால் ஒரு புனித சாம்ராஜ்யம் உருவாக்கப்பட்டது. தன்னுள் எல்லோரையும் அரவணைத்துக்கொள்ளும் விதத்தில் அது வடிவமைக்கப்பட்டிருந்தது. பழைய உலகின் பலவிதமான தெய்வ வழிபாடுகளை எதிர்த்து நின்றது. எண்ணற்ற பேரரசுகளும் நகரக் குடியரசுகளும் அதற்கு முன்னர் இருந்ததற்கு மாறுபட்ட விதத்தில் சீசர்கள் தங்களது ஆளுகையை எங்கும் பரவச் செய்ததுபோல் அது இருந்தது..''*[1]

ரோம சாம்ராஜ்யத்தின் ஸ்திரமற்ற நிலை சம்பந்தமாகவும் அதனுடன் ஒப்பிடுகையில் அதற்குப் பின்வந்த புனித ரோம சாம்ராஜ்யத்தின் ஸ்திரத்தன்மை சம்பந்தமாகவும் பிரைஸ் கூறியது இந்தியாவுக்கு ஒரு படிப்பினையாக இருக்குமானால், ரோமசாம்ராஜ்யம் ஸ்திரமற்றதாக இருப்பதற்குக் காரணம் அது அரசியல் ஒற்றுமையை மட்டுமே ஆதாரமாகக் கொண்டிருந்ததும், ஆனால் புனித ரோம் சாம்ராஜ்யம் கூடுதல் ஸ்திரத்தன்மையுடன் இருந்ததற்குக் காரணம், ஒரு பொதுவான மதநம்பிக்கை கொண்டிருந்ததனால் ஏற்பட்ட தார்மீக, சமூக ஒற்றுமை எனும் பாதுகாப்பான அடித்தளத்தை அது ஆதாரமாகக் கொண்டிருந்ததுதான் என்பது நியாயமான காரணமாகவும் மானுட அனுபவத்தை உட்கொண்டுள்ளது என்பது உண்மையானால் அப்போது இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் ஒற்றுமை ஏற்படுவதற்கான சாத்தியக்கூறு இருக்கமுடியாது என்பது தெளிவாகும். இங்கு ஒரு பொதுவான மதம் என்கிற பிணைக்கும் சக்தி இல்லாதிருக்கிறது. ஓர் ஆன்மீகக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்

---

1. ''புனித ரோம சாம்ராஜ்யத்தை ஒன்றுபடுத்தும் நிகழ்வுப் போக்கில் கிறித்தவத் திருச்சபை ஒரு முனைப்பற்ற பாத்திரம் வகிக்கவில்லை. மாறாக அது மிகவும் முனைப்பான பாத்திரத்தையே வகித்தது. தன்னைச் சுற்றிலும் அமைப்புகள் ஒன்றுக்குப் பின் ஒன்றாக சுக்கு நூறாகத் தகர்ந்ததைக் கண்டும், விநோதமான பழங்குடியினர் திடீரெனத் தோன்றி நாடுகளும் நகரங்களும் ஒன்றிலிருந்து மற்றொன்று எவ்வாறு துண்டாக்கப்பட்டன என்றும், தகவல் தொடர்பு சம்பந்தமான சிரமங்கள் அதிகரித்து வந்ததையும் கண்ட கிறித்தவ திருச்சபை தனது திருச்சபை அமைப்புக்களைப் பலப்படுத்தி மேலோட்டமான ஒற்றுமையின் ஒவ்வொரு பிணைப்பையும் இறுக்கி மத ஒற்றுமையைக் காக்கவும் விழைந்தது. கடவுள் நம்பிக்கைக்கான தேவைகள் மிகச் சக்தி வாய்ந்தவையாக இருந்தன. உண்மை என்பது ஒன்றே. உண்மையானவர்களெல்லாம் ஒரே அமைப்பினுள் கட்டுப்பட வேண்டும் என்று கூறப்பட்டது. ஆகவே அந்த அமைப்பில் தொடர்ந்து இருந்துவந்தால்தான் அதைப் பேணிக் காக்க முடியும். ஒரே ஆட்டு மந்தையும் ஒரே மேய்ப்பரும்தான் இருக்க முடியும்'' என்று பிரைஸ் கூறுகிறார்.

போது, இந்துக்களும் முசல்மான்களும் வெறும் இரு வர்க்கங்களோ அல்லது புரொட்டஸ்டாண்டுகள் மற்றும் கத்தோலிக்கர்கள் அல்லது சைவர்கள் மற்றும் வைஷ்ணவர்கள் போன்று இரு பிரிவினரோ அல்ல, அவர்கள் இரு மாறுபட்ட இனங்கள். இந்தக் கண்ணோட்டத்தில் ஓர் இந்துவோ அல்லது ஒரு முஸ்லீமோ தங்களிடத்தில் மானுடம் என்ற ஓர் அத்தியவசியமான குணம் இருப்பதாகவோ அவர்கள் பலர் அல்ல ஒருவரே என்றோ, அவர்களுக்கிடையே உள்ள கருத்து வேறுபாடுகள் தற்செயலானவைகளே தவிர வேறு அல்ல என்றோ ஒப்புக்கொள்வார்கள் என்று எதிர்ப்பார்க்கமுடியாது. அவர்களைப் பொறுத்தவரை தெய்வத்தன்மை பிளவுபட்டுள்ளது. தெய்வத் தன்மை பிளவுப்பட்டுள்ளதால் அவர்களுடைய மானுடத் தன்மை யும் பிளவுப் பட்டுள்ளது. மானுடத்தன்மை பிளவுப்பட்டிருப்பதால் அவர்களும் பிளவுபட்டுத்தான் இருக்கவேண்டும். அவர்களை ஒரே தாய்மடியில் கொணருவதற்கு எதுவும் இல்லை.

சமூக ஒற்றுமையின்றி அரசியல் ஒற்றுமையை எய்துவது கடினம். அப்படியே எய்தினாலும் கூட அது கோடைகால மரக் கன்றைப்போன்று நிலையற்றதாக, பெருங்காற்றடித்தால் வேருடன் சாயக்கூடியதாக இருக்கும். வெறும் அரசியல் ஒற்றுமையுடன் இந்தியா ஒரு அரசாகத்தான் இருக்கமுடியும். ஆனால் ஒரு அரசு ஒரு தேசமாகாது. ஆகவே ஒரு தேசமல்லாத ஒரு அரசு, உயிர் வாழ்வதற்கான போராட்டத்தில் உயிர் பிழைத்திருக்கும் வாய்ப் புகள் மிகக்குறைவே ஆகும். எல்லாக் கலப்பு நாடுகளின் அழிவி லிருந்தும், தகர்விலிருந்தும் எல்லா இடங்களிலும் தன்னை விடு வித்துக் கொள்ள தேசியத்தன்மை நவீன காலத்தின் மிக இயக் காற்றல் மிக்க சக்தி... விழைந்து கொண்டிருக்கிறது. ஆகவே ஒரு கலப்பான, ஒன்றிணைந்த அரசுக்கு வெளியிலிருந்து வரும் ஆக்கிர மிப்பினால் ஏற்படும் அபாயத்தைவிட, உள்நாட்டில் துண்டு துண்டாக்கப்பட்ட, அடக்கிஒடுக்கி ஒரே கொட்டடியில் தங்களது விருப்பத்துக்கு மாறாக அடைத்து வைக்கப்பட்டிருக்கும் தேசிய இனங்கள் புத்தெழுச்சி பெறுவதில் உள்ள ஆபத்தே அதிகம். பாகிஸ்தானை எதிர்ப்பவர்கள் இந்த ஆபத்தை மனதில் கொள்வ துடன் மட்டுமல்லாது ஒடுக்கப்பட்ட தேசிய இனங்கள் ஒருகலப்பு அரசைக் குலைத்து தங்களுக்கென்று தனியாக ஒரு தூயஅரசு உருவாக்கிக் கொள்வதைக் கண்டிப்பதற்குப் பதிலாக, அது சுய நிர்ணயக் கோட்பாட்டின் அடிப்படையில் நியாயமானது என்பதை யும் உணர வேண்டும்.



# இயல் 8

# பாகிஸ்தானுக்கு முஸ்லீம் மாற்று ஏற்பாடு

## I

பாகிஸ்தானுக்கு ஒரு மாற்று ஏற்பாடு தங்கள்வசம் இருப்பதாக இந்துக்கள் சொல்கிறார்கள். பாகிஸ்தானுக்கு ஒரு மாற்று ஏற்பாடு முஸ்லீம்கள் வசமும் உள்ளதா? இந்துக்கள் ஆம் என்றும் முஸ்லீம்கள் இல்லை என்றும் கூறுகிறார்கள். வகுப்புவாரித் தீர்ப்பின் படி ஏற்கெனவே தாங்கள் பெற்றுள்ள ஆதாயங்களைத் தவிர மேலும் சில ஆதாயங்களைப் பெறும் நோக்குடன் முன்வைக்கப்பட்டுள்ள ஒரு பேரம் பேசும் சூழ்ச்சிதான் பாகிஸ்தான் உருவாக்கப்பட வேண்டுமென்ற முஸ்லீம் யோசனை என்று இந்துக்கள் கருதுகின்றனர். இக்கருத்தை முஸ்லீம்கள் மறுதலிக்கின்றனர். பாகிஸ்தானுக்கு ஈடுஇணை எதுவும் கிடையாது, ஆகவே நாங்கள் பாகிஸ்தானை அடைந்தே தீருவோம், பாகிஸ்தானைத் தவிர வேறு எதற்கும் ஒப்புக் கொள்ளமாட்டோம் என்று அவர்கள் கூறுகின்றனர். முசல்மான்கள் பாகிஸ்தானுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டுள்ளனர்; அதைத் தவிர வேறு எதற்கும் ஒப்புக்கொள்ளப்போவதில்லை; எனவே, ஒரு மாற்று ஏற்பாட்டில் நம்பிக்கை கொண்டுள்ள இந்துக்கள் வெறுமனே கற்பனை செய்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது. முஸ்லீம்களின் திட்டம் என்ன என்பதைக் கண்டறியும் அளவுக்கு இந்துக்கள் புத்திசாலிகள் என்று வைத்துக்கொண்டாலும்கூட, பாகிஸ்தானுக்கு முஸ்லீம் மாற்று ஏற்பாட்டை வரவேற்க இந்துக்கள் தயாராக இருப்பார்களா? இக்கேள்விக்கான பதில் முஸ்லீம் மாற்று ஏற்பாடு என்ன என்பதைப் பொறுத்தே இருக்கும்.

பாகிஸ்தானுக்கு முஸ்லீம் மாற்று ஏற்பாடு என்ன? யாருக்கும் தெரியாது. அப்படி ஏதேனும் இருந்தாலும் முஸ்லீம்கள் அதைத் தெரிவிக்கவில்லை. வருங்காலத்தில் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவர் மற்றவருடன் இணைவதற்கான நிபந்தனைகளை மறு பரிசீலனை செய்யவும் ஒப்புக்கொள்ளவும் சம்பந்தப்பட்ட தரப்புகள்

சந்திக்கும் நாள்வரை அதை முஸ்லீம்கள் தெரிவிக்கவும் மாட்டார்கள். முன்கூட்டியே எச்சரிக்கையாயிருப்பது என்பது முன்கூட்டியே அதைச் சமாளிக்கத் தயாராக இருப்பதுமாகும். ஆகவே உத்தேச முஸ்லீம் மாற்று ஏற்பாட்டைப் பற்றிய கருத்தை இந்துக்கள் கொண்டிருப்பது அவசியம்; அப்போதுதான் அதனால் ஏற்படும் அதிர்ச்சியை அவர்கள் தாங்கிக்கொள்ளமுடியும்; ஏனெனில் அந்த மாற்று ஏற்பாடு வகுப்பு வாரித் தீர்ப்பைவிடச் சிறந்ததாக இருக்க முடியாது. மாறாக அது பலமடங்கு மோசமானதாக இருக்கும் என்பது நிச்சயம்.

நிச்சயமான மாற்று ஏற்பாட்டுத்திட்டம் இல்லாத நிலைமையில் நம்மால் யூகிக்க மட்டுமே முடியும். ஒருவருடைய யூகம் மற்றவருடையதைப் போன்றே சிறந்ததாக இருக்கும். ஆகவே சம்பந்தப்பட்ட நபர்தான் அந்த யூகங்களில் எதை நம்புவது என்று முடிவு செய்யவேண்டும். அந்த உத்தேச யூகங்களில், முஸ்லீம்கள் தங்களது மாற்று ஏற்பாடாக பின்வருவன போன்ற ஒரு யோசனையை முன்வைப்பார்கள் என்பது எனது யூகமாகும்:

இந்தியாவின் வருங்கால அரசியல் சட்டம் இதற்கு வகை செய்யும்.

I. தனித்தொகுதிகள் மூலமாக, மத்திய மாநில சட்ட சபைகளில் முஸ்லீம்கள் 50% பிரதிநிதித்துவம் பெற்றிருப்பர்.

II. மத்தியிலும் மாநிலத்திலும் நிர்வாகத்தினரில் 50% முஸ்லீம்களாக இருப்பர்.

III. படைத் துறை சாராத ஆட்சிப்பணியில் 50% பதவிகள் முஸ்லீம்களுக்கு ஒதுக்கப்படும்.

IV. ஆயுதப்படைகளில், அடிமட்டத்திலும் உயர் பதவிகளிலும் முஸ்லீம்களுடைய விகிதாசாரம் சரிபாதியாக இருக்கும்.

V. பொதுநோக்கங்களுக்காக அமைக்கப்படும் கவுன்சில்கள் கமிஷனர்கள் போன்ற எல்லாப் பொது அமைப்புகளிலும் முஸ்லீம்கள் 50% பிரதிநிதித்துவம் பெற்றிருப்பர்.

VI. இந்தியா பங்கெடுத்துக் கொள்ளக்கூடிய எல்லா

சர்வதேச ஸ்தாபனங்களிலும் முஸ்லீம்கள் 50% பிரதிநிதித்துவம் பெற்றிருப்பர்.

VII. பிரதமர் ஓர் இந்துவாக இருப்பாரேயானால் துணைப் பிரதமர் முஸ்லீமாக இருப்பார்.

VIII. தலைமைத் தளபதி ஓர் இந்துவாக இருப்பாரேயானால் துணைத் தலைமைத் தளபதி ஒரு முஸ்லீமாக இருப்பார்.

IX. சட்டமன்றத்தின் முஸ்லீம் உறுப்பினர்களில் 66% பேரின் ஒப்புதல் இன்றி மாகாண எல்லைகளில் எந்த மாற்றமும் செய்தல் கூடாது.

X. சட்டமன்றத்தின் முஸ்லீம் உறுப்பினர்களில் 66% பேரின் சம்மதமின்றி, ஒரு முஸ்லீம் நாட்டுக்கு எதிரான நடவடிக்கையோ அல்லது ஒப்பந்தமோ செல்லுபடியாகாது.

XI. சட்டமன்றத்தின் முஸ்லீம் உறுப்பினர்களில் 66% பேரின் சம்மதமின்றி முஸ்லீம்களின் கலாசாரம், சமயம், மற்றும் சமய மரபுகள் ஆகியவற்றைப் பாதிக்கும் எந்த ஒரு சட்டத்தையும் இயற்றக்கூடாது.

XII. இந்தியாவின் தேசியமொழியாக உருது இருக்கும்.

XIII. சட்டசபையின் முஸ்லீம் உறுப்பினர்களில் 66% பேரின் ஒப்புதலின்றி, பசுவதை, இஸ்லாமைப் பரப்புதல், இஸ்லாமுக்கு மாறச்செய்தல் போன்றவற்றைத் தடைசெய்யும் அல்லது கட்டுப் படுத்தும் எந்த ஒரு சட்டமும் செல்லுபடியாகாது.

XIV. அரசியல் சட்டத்தில் மாற்றங்களை ஏற்படுத்துவதற்குத் தேவையான பெரும்பான்மையில், சட்டமன்றத்தின் முஸ்லீம் உறுப்பினர்களின் 66% பெரும்பான்மையும் அடங்கியிருக்க வேண்டும், அவ்வாறு இல்லாதபட்சத்தில் அந்த மாற்றம் செல்லாது.

எனது இந்தயூகம் தறிகெட்டுப்போன கற்பனையின் விளைவு அல்ல; விருப்பமின்றி அவசரமாகப் பாகிஸ்தானை ஏற்றுக் கொள்ளச் செய்வதற்காக இந்துக்களைப் பயமுறுத்தும் ஆர்வத்தின்

விளைவும் அல்ல இது. முஸ்லீம் தரப்பிலிருந்து கிடைத்துள்ள புள்ளி விபரங்களை ஆதாரமாகக் கொண்டு அறிவார்ந்த முறையில் வருமுன் உரைக்கும் ஒரு செயலாகும் இது.

மேதகு ஹைதராபாத் நிஜாமின் ஆட்சிப்பகுதிகளுக்காக, உத்தேசிக்கப்பட்டுள்ள அரசியல்சட்ட சீர்திருத்தங்களிலிருந்து, முஸ்லீம் மாற்று ஏற்பாடு எவ்வாறு அமைந்திருக்கக்கூடும் என்பதை அறியலாம்.

சீர்திருத்தங்களுக்கான ஹைதராபாத் திட்டம் ஒரு புதுமை யான திட்டமாகும். பிரிட்டிஷ் இந்தியாவில் நிலவிய வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத் திட்டத்தை அது நிராகரிக்கிறது. அதற்குப் பதிலாக, செயல்படும் பிரதிநிதித்துவம் என்று அழைக்கப்படும் திட்டம் முன்வைக்கப்பட்டுள்ளது. அதாவது, வர்க்கங்கள் மற்றும் தொழில்களின் பிரதிநிதித்துவம். 70 பேரை உள்ளடக்கிய சட்ட மன்றத்தின் அமைப்பு பின்வருமாறு அமைந்திருக்கும்:

**தேர்ந்தெடுக்கப்படுபவர்கள்**

| | | |
|---|---|---|
| விவசாயம் (பட்டிதார்கள் - 8, குடியானவர்கள் - 4) | ... | 12 |
| பெண்கள் | ... | 1 |
| பட்டதாரிகள் | ... | 1 |
| பல்கலைக்கழகம் | ... | 1 |
| ஜாகிர்தார்கள் | ... | 2 |
| மாஷ்தார்கள் | ... | 1 |
| சட்டத்துறை | ... | 2 |
| மருத்துவத்துறை (மேற்கத்திய மருத்துவம் - 1, கீழைநாட்டு மருத்துவம் - 1) | ... | 2 |
| கல்வித்துறை | ... | 1 |
| வர்த்தகம் | ... | 1 |
| தொழில்துறை | ... | 2 |
| வங்கி (உள்நாட்டு வங்கி - 1, கூட்டுறவு மற்றும் கூட்டுப் பங்கு கழகம் - 1) | ... | 2 |
| ஸ்தாபனரீதியான தொழிலாளர்கள் | ... | 1 |
| அரிஜன் | ... | 1 |
| மாவட்ட நகராட்சிகள் | ... | 1 |
| நகர சபைகள் | ... | 1 |
| கிராமப்புற வாரியங்கள் | ... | 1 |
| மொத்தம் | | 33 |

**நியமிக்கப்படுபவர்கள்**

| | | |
|---|---|---|
| இலாகாக்கள் | ... | 8 |
| சர்ஃப்-இ-காஸ் - 2, பைகாஸ் - 3, பெஷ்காரி - 1, சாலர்ஜங் - 1, சமஸ்தானங்கள் - 1 | | |
| அதிகாரிகள் | ... | 18 |
| கிராமப்புறக் கலைகள் மற்றும் கைவினைத்தொழில்கள் | ... | 1 |
| பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் | ... | 1 |
| பிரதிநிதித்துவப்படுத்தாத சிறுபான்மை இனத்தவர் | ... | 3 |
| மற்றவர்கள் | ... | 6 |
| மொத்தம் | | 37 |

இந்தச் செயல்படும் பிரதிநிதித்துவம் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை விட பல்வேறு வர்க்கங்கள் மற்றும் பிரிவினரிடையே சிறந்த இணக்கத்தை ஏற்படுத்துமா என்பது சந்தேகமே. இப்போதுள்ள சமூக, மதப் பிரிவினைகளை நீடிக்கச் செய்வதுடன் கூட அது வர்க்கஉணர்வுகளை வலியுறுத்தி மிக எளிதில் வர்க்கப் போராட்டத்தைத் தீவிரப்படுத்திவிடும். இத்திட்டம் கேடுவிளைவிக்காதது போல் தோற்றமளிக்கலாம். ஆனால் அதனுடைய உண்மையான இயல்பு ஒவ்வொரு வர்க்கமும் தனது எண்ணிக்கைக்கேற்ற விகிதாசாரத்தில் பிரதிநிதித்துவத்தைக் கோரும்போதுதான் வெளிப்படும். அது ஒருபுறமிருக்க, செயல்படும் பிரதிநிதித்துவமானது ஹைதராபாத் சீர்திருத்தத் திட்டத்தின் மிகக் குறிப்பிட்ட சிறப்பம்சம் அல்ல; புதிய ஹைதராபாத் சட்டமன்றத்தில் இந்துக்களுக்கும் முசல்மான்களுக்குமிடையில் தொகுதிகள் பிரித்துத் தரும் உத்தேச ஏற்பாடு இத்திட்டத்தின் மிகக் குறிப்பிடத்தக்க சிறப்பம்சமாகும். மேதகு நிஜாம் அங்கீகரித்த அத்திட்டத்தின்படி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஒட்டுமொத்தமாக அகற்றப்பட்டுவிடவில்லை. அது செயல்முறைப் பிரதிநிதித்துவத்துடன் கூட தக்கவைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. கூட்டு வாக்காளர் தொகுதிகளின் மூலமாக அது செயல்படுத்தப்படும். சட்டமன்றம் உள்ளிட்ட[1] ஒவ்வொரு தேர்ந்தெடுக்கப்படும் அமைப்பிலும் "இரு பிரதான வகுப்புகளுக்கும்" சரிசமமான பிரதிநிதித்துவம் இருக்கும். தனது சமூகத்தின் 40 சதவிகித வாக்குகளைப் பெறாவிடில் எந்த வேட்பாளரும் வெற்றி பெறமுடியாது. இந்த இரு சமூகங்களையும் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை[2] எவ்வளவாக இருந்தாலும் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சமமான பிரதிநிதித்துவம் வழங்கும் இக்கோட்பாடு ஒவ்வொரு தேர்ந்தெடுக்கப்படும் அமைப்புக்கும் மட்டுமல்லாது அந்த அமைப்பின் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களுடன் நியமனம் செய்யப்படும் உறுப்பினர்களுக்கும் பொருந்தும்.

---

1. மத்திய சட்டமன்றத்தைத் தவிர சீர்திருத்தத் திட்டத்தின்படி பஞ்சாயத்துக்கள், கிராமப்புற வாரியங்கள், நகராட்சி மன்றங்கள், டவுன் கமிட்டிகள் போன்ற இதர பொதுஜன அமைப்புகளும் நிறுவப்படவிருந்தன.

2. ஹைதராபாத் அரசின் (பெரார் தவிர) மக்கள் தொகை வினியோகம் 1931 ஆம் ஆண்டின் புள்ளிவிவரக் கணக்கிட்டின்படி வருமாறு:

| இந்துக்கள் | தீண்டத்தகாதவர்கள் | முஸ்லீம்கள் | கிறித்தவர்கள் | மற்றவர்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 96,99,615 | 24,73,230 | 15,34,666 | 1,51,382 | 5,77,255 | 1,44,36,148 |

சமமான பிரதிநிதித்துவம் என்ற இத்தத்துவத்தை நியாயப் படுத்தும் விதத்தில் கூறப்படுவதாவது:

''தனது வரலாற்றுரீதியான நிலையினாலும் அரசியல் அமைப்பில் அதனுடைய அந்தஸ்தையும் வைத்துப் பார்க்கும்போது சமஸ்தானத்தில் முஸ்லீம் சமுதாயத்தின் முக்கியத்துவத்தினால், சட்ட மன்றத்தில் சிறுபான்மை அந்தஸ்துக்கு அதைக் குறைத்து விட முடியாது என்பது தெளிவு.''

பிரிட்டிஷ் இந்தியாவில் இந்து-முஸ்லீம் பிரச்சினையைத் தீர்க்கும் வழிமுறையாக தேசிய கட்சியின் தலைவர் என்று தன்னைக் கூறிக்கொள்ளும் திரு.மிர் அக்பர் அலிகான் என்பவர் உருவாக்கிய பிரேரணைகள் அண்மையில் பத்திரிகைகளில்[1] வெளியாயின. அவை பின்வருமாறு:

1) நாட்டிற்குப் போதிய ராணுவப் பாதுகாப்புக்கான விரிவான அடித்தளத்தையும் மக்களை நியாயமான அளவுக்கு ராணுவ மனப்பான்மை கொண்டவர்களாக ஆக்குவதை ஆதார மாகக் கொண்டும்தான் இந்தியாவின் வருங்கால அரசியல் சட்டம் அமைந்திருக்கவேண்டும். முஸ்லீம்களைப்போலவே இந்துக்களும் அதே அளவுக்கு ராணுவ மனப்பான்மை கொண்ட வர்களாக இருத்தல் வேண்டும்.

2) இந்தியாவின் பாதுகாப்புக்கான பொறுப்பைத் தங்கள் வசம் ஒப்படைக்க வேண்டும் என்று இரு சமூகங் களும் கேட்கும் மகத்தான வாய்ப்பை இக்கணம் வழங்கு கிறது. இந்திய ராணுவத்தில் சம எண்ணிக்கையில் இந்துக் களும் முஸ்லீம்களும் இருக்க வேண்டும். எந்த ராணுவப் பிரிவும் வகுப்பு மற்றும் பிராந்திய அடிப்படையில் வேறு பட்டிருக்கக் கூடாது.

3) மாகாணங்களிலும் மத்தியிலும் உள்ள அரசாங் கங்கள் முழுமையான தேசிய அரசாங்கங்களாக இருக்க வேண்டும். அவற்றை வழிநடத்திச் செல்பவர்கள் நியாயமான அளவுக்கு ராணுவ மனப்பான்மையுடையவர்களாக இருத்தல் வேண்டும். மத்திய, மாகாண மந்திரிசபைகளில் இந்து மற்றும் முஸ்லீம் அமைச்சர்கள் சம எண்ணிக்கையில் இருக்க வேண் டும்; இதர முக்கிய சிறுபான்மையினருக்குத் தேவைப்படும்

1. 1940 ஜூன் 22-ந் தேதியிட்ட பாம்பே சென்டினல் ஏட்டைக் காணவும். தமது பிரேரணைகளை காங்கிரசின் முன்னாள் தலைவர் திரு. சீனிவாச அய்யங்காருடன் விவாதித்ததாகவும் தாம் வெளியிட்டுள்ள பிரேரணைகள் உண்மையில் திரு. அய்யங்கார் அங்கீகரித்த பிரேரணைகளே என்றும் திரு. மிர் அக்பர் அலிகான் கூறுகிறார்.

இடங்களில் சிறப்புப் பிரதிநிதித்துவம் வழங்கலாம். இத்திட்டம் கூட்டுவாக்காளர் தொகுதிகளுடன் மிகவும் திருப்திகரமாகச் செயல்படும். ஆனால் நாட்டில் இப்போது நிலவும் மன நிலையில் தனிவாக்காளர் தொகுதிகளே தொடரலாம். இந்து மந்திரிகளை சட்டமன்றத்தின் இந்து உறுப்பினர்களும், முஸ்லீம் மந்திரிகளை முஸ்லீம் உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கலாம்.

4) நம்பிக்கை இன்மை வாக்கெடுப்பின் மூலமாக மட்டுமே மந்திரிசபையைப் பதவி நீக்கம் செய்யமுடியும். அந்த நம்பிக்கையில்லா தீர்மானம் மந்திரிசபை முழுவதற்கும் எதிராக மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையின் மூலமாக மட்டுமே நிறைவேற்றப்படும். அந்தப் பெரும்பான்மை தனித்தனியாக இந்து உறுப்பினர்களையும் முஸ்லீம் உறுப்பினர்களையும் கொண்டிருக்க வேண்டும்.

5) சட்டமன்றத்தில் ஒரு சமூகத்தின் பெரும்பான்மை உறுப்பினர்கள் அந்த சமூகத்தைப் பாதிக்கும் எந்த ஒரு சட்டத்தையும் அல்லது இதர நடவடிக்கைகளையும் ரத்து செய்ய வகைசெய்யும் ஒரு நிரந்தர அரசியல் சட்டத் தடை ஒன்றை ஏற்படுத்தி, ஒவ்வொரு சமூகத்தின் மதம், மொழி, எழுத்துவடிவம் மற்றும் தனிப்பட்ட உரிமைகள் ஆகியவற்றைப் பாதுகாக்க வேண்டும். எந்த ஒரு சமூகத்தின் பொருளாதார வளவாழ்வையும் பாதிக்கும் விதத்தில் ஏற்படுத்தப்படும் எந்த ஒரு நடவடிக்கைகளுக்கு எதிராகவும் இதே போன்ற ரத்து அதிகாரம் வழங்கப்பட வேண்டும்.

6) நிர்வாகத்திலும் மானியங்களை வழங்குவதிலும் நடைமுறை சாத்தியமான அளவுக்கு நியாயமான விதத்தில் அரசுப் பணிகள் போதுமான அளவுக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

ஹைதராபாத் மாநிலத்தில் தேசியக் கட்சியின் ஒரு முஸ்லீம் தலைவர் முன்வைத்த பிரேரணைகளை பிரிட்டிஷ் இந்தியாவில் முஸ்லீம்களின் மனப்பான்மைகள் எத்திசையில் செல்லுகின்றன என்பதற்கு ஓர் உதாரணமாக எடுத்துக்கொள்வோமானால், பாகிஸ்தானுக்கு மாற்று ஏற்பாடு எப்படி இருக்கக்கூடும் என்று நான் செய்த யூகம் கூடுதல் ஆதரவைப் பெறுகிறது.

# II

"ஆஜாத் முஸ்லீம் மாநாடு" என்ற பகட்டான பெயரில் டில்லியில் 1940 ஏப்ரல் மாதத்தில் முஸ்லீம்களின் ஒரு மாநாடு நடைபெற்றது. முஸ்லீம் லீகையும் தேசிய முஸ்லீம்களையும் எதிர்க்கும் முஸ்லீம்கள்தான் ஆஜாத் மாநாட்டில் கூடினர். முதலாவதாக அவர்கள் முஸ்லீம்லீகை எதிர்த்ததற்குக் காரணம் அவர்கள் பாகிஸ்தானின்பால் கொண்டிருந்த பகைமை, இரண்டாவதாக தங்களுடைய உரிமைகளின்[1] பாதுகாப்புக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தை அவர்கள் நம்பியிருக்கவில்லை. அவர்கள் தேசிய முஸ்லீம்களையும் எதிர்த்தனர். (இவர்கள், முழுக்க முழுக்க காங்கிரசைச் சேர்ந்த முஸ்லீம்கள்); ஏனெனில் முஸ்லீம்களின்[2] கலாசாரம், மதம் சம்பந்தமான உரிமைகளின்பால் அவர்கள் ஆர்வமின்றி இருந்ததாக அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டதேயாகும்.

இவ்வாறெல்லாம் இருந்தும்கூட ஆஜாத் முஸ்லீம் மாநாட்டை, நண்பர்களின் மாநாடு என்று இந்துக்கள் பாராட்டினர். ஆனால் அம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் அதற்கும் லீகிற்கும் அதிக வித்தியாசமில்லை என்பதைக் காட்டின. ஆஜாத் முஸ்லீம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் பின்வரும் மூன்று தீர்மானங்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினை மீது நேரடித் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன.

முதலாவது தீர்மானம் இவ்வாறு கூறுகிறது:

---

1. மாநாட்டின் ஒரு பிரதான உறுப்பினரான முப்தி கிபாயத் உல்லா பேசும்போது "சுதந்திரத்திற்கான போராட்டத்தில் நாங்கள் எந்த ஒரு வகுப்பின், சமூகத்தின் பின்னாலும் இல்லை" என்று குறிப்பிட்டார். தங்களது உரிமைகளைப் பாதுகாப்பதற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தாங்கள் நம்பியிருக்கவில்லை என்பதை அவர் தெளிவுபடுத்த விரும்பினார். "எங்களது சமய உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கு அவசியமான நடவடிக்கைகளை நாங்களே வகுத்துக் கொள்வோம், சுதந்திரத்திற்காக அரசாங்கத்துடன் போராடுவது போலவே இந்தப் பாதுகாப்பு நடவடிக்கைகளை ஏற்க மறுக்கும் எந்தக் கட்சியையும், அது எவ்வளவு சக்தி வாய்ந்ததாக இருந்தாலும் அதனை எதிர்த்துப் போராடுவோம்" என்றும் அவர் கூறினார் (நீண்ட கரவொலி). ஹிந்துஸ்தான் டைம்ஸ், ஏப்ரல் 30, 1940.

2. மௌலானா ஹபிஜுர்ல் ரெஹ்மானும் டாக்டர் கே.எம். அஷ்ரபும் நிகழ்த்திய சொற்பொழிவுகளை ஹிந்துஸ்தான் டைம்ஸின் இதே இதழில் காண்க.

''நாட்டிற்கு முழுமையான சுதந்திரம் பெற்றுத் தர விரும்பும் இந்திய முஸ்லீம்களின் பிரதிநிதிகளினால் நடத்தப்படும் இந்தமாநாட்டில் ஒவ்வொரு மாநிலத்தின் தூதுக் குழுவினரும் பிரதிநிதிகளும் கலந்து கொள்கின்றனர். முஸ்லீம் சமுதாயத்தின் நலன்களையும் நாடு முழுவதையும் பாதிக்கும் எல்லா ஜீவாதார பிரச்சினைகளையும் முழுமையாகவும் கவனமாகவும் பரிசீலனை செய்த இந்த மாநாடு பின்வருமாறு பிரகடனம் செய்கிறது:

''இந்தியா ஓர் ஒட்டுமொத்தமான தனிப்பட்ட நாடு என்ற முறையில் பூகோள ரீதியான, அரசியல் ரீதியான எல்லைகளைக் கொண்டிருக்கும். ஆகவே அது இனம் அல்லது மதம் என்பதையெல்லாம் மீறி எல்லாப் பிரஜை களின் பொதுவான தாய்நாடாக இருக்கும். அதனுடைய செல்வாதாரங்களுக்கு நாட்டு மக்களே கூட்டு உடமையாளராக இருப்பர். தங்களது உயிரைவிட மேலான தங்களது மதம், கலாசாரம் ஆகியவற்றின் வரலாற்றுச் சிறப்பை நேசிக்கும் முஸ்லீம்களின் இல்லமாக நாட்டின் மூலை முடுக்குகளெல் லாம் அமைந்திருக்கும். தேசியக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது ஒவ்வொரு முஸ்லீமும் ஓர் இந்தியனே. வாழ்வின் எல்லாத் துறைகளிலும், மானுட நடவடிக்கைகளின் எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டிருக்கும் எல்லாப் பிரஜை களின் பொதுவான உரிமைகளும் கடப்பாடுகளும் ஒரே மாதிரி யானவையே, இத்தகைய உரிமைகளையும் கடப்பாடுகளையும் கொண்டிருக்கும். இந்திய முஸ்லீம் ஐயத்திற்கிடமின்றி ஓர் இந்திய நாட்டவரே, எல்லா இந்திய பிரஜையையும் போலவே அரசாங்க, பொருளாதார மற்றும் இதர தேசிய நடவடிக்கைகள், அரசுப் பணிகள் ஆகியவற்றில் நாட்டின் எல்லாப்பகுதி களிலும் அவருக்கு சமமான சலுகைகள் பெற உரிமையுண்டு. அக்காரணத்திற்காகவே இதர இந்திய மக்களைப் போலவே முஸ்லீம்களுக்கும் நாட்டின் சுதந்திரத்தை எய்துவதற்காகப் பாடுபடவும் தியாகங்கள் புரியவும் சமமான பொறுப்புகள் உள்ளன. இதில் ஐயத்திற்கிடமேதுமில்லை. இந்த உண்மை யைச் சரியான சிந்தனையுள்ள எந்த முஸ்லீமும் மறுக்கமாட்டார். ஒவ்வொரு இந்திய முஸ்லீமின் இலக்கும் முழுமையான சுதந் திரத்துடன் தங்களது மதத்தையும் சமூக உரிமைகளையும் பெறுவதேயாகும் என்பதை ஐயத்திற்கிடமின்றி இந்த மாநாடு வலியுறுத்துகிறது. மேலும் முஸ்லீம்கள் இந்த இலக்கைக் கூடிய விரைவில் அடைவதில் ஆர்வமாக உள்ளனர். இக்குறிக் கோளினால் உத்வேகம் பெற்ற அவர்கள் கடந்தகாலத்தில்

மகத்தான தியாகங்கள் புரிந்துள்ளனர். மேலும் மகத்தான தியாகங்கள் புரிவதற்கு எப்போதும் தயாராக உள்ளனர்.

''இந்திய சுதந்திரத்திற்கான பாதையில் அவர்கள் ஒரு தடையாக இருப்பதாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் மற்ற வர்களும் இந்திய முஸ்லீம்களுக்கு எதிராகத் தொடுக்கப் படும் ஆதாரமற்ற குற்றச்சாட்டுக்களை இந்த மாநாடு வன்மையாக மறுக்கிறது. தங்களுடைய பொறுப்புகளை முஸ்லீம்கள் முழுமையாக உணர்ந்துள்ளனர். சுதந்திரத்திற் கான போராட்டத்தில் மற்றவர்களுக்குப் பின்தங்கியிருப்பது தங்களது கௌரவத்திற்கு இழுக்கு என்றும் தங்களுடைய மரபுகளுக்கு மாறானது என்றும் முஸ்லீம்கள் கருதுகின்றனர்.''

இத்தீர்மானத்தின் மூலம் அவர்கள் பாகிஸ்தானின் திட்டத் திற்குப் பதிலடி கொடுத்தனர். அவர்களது இரண்டாவது தீர்மானம் பின்வரும் விதமாக இருந்தது:

''வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற விதத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களினால் உருவாக்கப்பட்ட, வருங்கால இந்திய அரசாங்கத்திற்கான அரசியல் சட்டத்தை மட்டுமே இந்திய மக்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று இந்த மாநாடு உறுதியாகக் கருதுகிறது. ஒருங்கிணைந்த சட்ட மன்றத்தின் முஸ்லீம் உறுப்பினர்களுடைய பரிந்துரைகளுக் கேற்ப முஸ்லீம்களின் எல்லா நியாயமான நலன்களையும் அந்த அரசியல் சட்டம் முழுமையாகப் பாதுகாக்கவேண்டும். இப்பாதுகாப்பு நெறிகளைத் தீர்மானிப்பதில் தலையிடும் உரிமை இதர சமூகங்களின் பிரதிநிதிகளுக்கோ அல்லது வெளிசக்திக்கோ இருத்தல் கூடாது.''

இத்தீர்மானத்தின் மூலம், முஸ்லீம்களுக்கான பாதுகாப்பு நெறிகளை முஸ்லீம்கள் மட்டுமே தீர்மானிக்கவேண்டும் என்பதை அம்மாநாடு அறுதியிட்டும் கூறியது.

மூன்றாவது தீர்மானம் வருமாறு:

''அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மையை உறுதிப்படுத்தவும் பந்தோபஸ்தைப் பேணிக்காக்கவும் வருங்கால இந்திய

அரசியல் சட்டத்தில் எல்லாப் பிரஜைகளும் சமூகங்களும் திருப்தி கொள்ள வேண்டும் என்பதால், முஸ்லீம்களைத் திருப்திபடுத்தும் விதத்தில் கீழே தரப்படும் ஜீவாதார விஷயங்கள் சம்பந்தப்பட்ட, பாதுகாப்பு நெறிகளுக்கான ஒரு திட்டத்தை இந்த மாநாடு அவசியமென்று கருதுகிறது.

''27 நபர்களடங்கிய ஒரு வாரியத்தை இந்த மாநாடு நியமிக்கிறது. இந்த வாரியம் முழுமையான விசாரணைகள், கலந்தாலோசனைகள், பரிசீலனைகள் ஆகியவற்றை மேற்கொண்டபின்னர் இம்மாநாட்டின் அடுத்த கூட்டத்தொடரில் விவாதிப்பதற்காகத் தனது பரிந்துரைகளைச் சமர்ப்பிக்கும். அப்போது மாநாடு, வகுப்புப்பிரச்சினைகளுக்கு ஒரு நிரந்தரத் தேசியத் தீர்வு காணும் ஒரு வழிமுறையாக அந்தப் பரிந்துரைகளைப் பயன்படுத்திக் கொள்ளும். இரண்டு மாத காலத்திற்குள் அப்பரிந்துரைககள் சமர்ப்பிக்கப்படவேண்டும். அந்த வாரியம் ஆய்வு செய்ய வேண்டிய விஷயங்கள் வருமாறு:

1. முஸ்லீம் கலாசாரம், தனிநபர் சட்டம், மதஉரிமைகள் ஆகியவற்றின் பாதுகாப்பு.

2. முஸ்லீம்களின் அரசியல் உரிமைகளும் அவற்றின் பாதுகாப்பும்.

3. இந்தியாவினுடைய வருங்கால அரசியல் சட்டம் ஏக அரசாங்கம் அமைக்கப்படுவதாக அன்றி சமஷ்டி அரசாங்கம் அமைக்கப்படக் கூடியதாக இருக்க வேண்டும்; சமஷ்டி அரசாங்கத்திற்கு முற்றிலும் அத்தியாவசியமான, தவிர்க்க முடியாத அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டும்.

''முஸ்லீம்களின் பொருளாதார, சமூக, கலாசார உரிமைகளை பேணிக்காக்கவும் அரசுப்பணிகளில் அவர்களுடைய பங்கேற்புக்கும் வகை செய்யப்பட வேண்டும்.

''எந்த ஒரு காலியிடத்தையும் உரிய விதத்தில் நிரப்பிக் கொள்ளும் அதிகாரம் வாரியத்திற்கு உண்டு. இதர உறுப்பினர்களை நியமனம் செய்து கொள்ளவும் வாரியத்திற்கு அதிகாரம் உண்டு. இதர முஸ்லீம் அமைப்புகளையும், அது தேவை என்று கருதினால் நாட்டிலுள்ள வேறு எந்தப்

பொறுப்புள்ள அமைப்பையும் கலந்தாலோசிக்கவும் கூட அதற்கு அதிகாரம் உண்டு. அந்த வாரியத்தின் 27 உறுப்பினர்களையும் தலைவரே நியமிப்பார்.

''வாரியத்தின் கூட்டத்தைக் கூட்டுவதற்குத் தேவையான குறைந்தபட்ச உறுப்பினர்களின் எண்ணிக்கை ஒன்பது.

''இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் குறிப்பிட்டுள்ளபடி பல்வேறு வகுப்புகளின் உரிமைகள் அரசியல் நிர்ணயசபையில் தீர்மானிக்கப்படவிருப்பதால், இந்த சபையின் முஸ்லீம் உறுப்பினர்களை முஸ்லீம்களே தேர்ந்தெடுப்பார்கள் என்று பிரகடனப்படுத்துவது அவசியம் என்று இம்மாநாடு கருதுகிறது.''

முஸ்லீம்களின் பாதுகாப்புக்கும் பந்தோபஸ்துக்கும் ஆஜாத் முஸ்லீம் மாநாடு எத்தகைய பாதுகாப்பு நெறிகளை உருவாக்கும் என்பதை அறிய இந்தவாரியத்தின் அறிக்கை[1] வரும்வரை நாம் காத்திருக்க வேண்டும். பாகிஸ்தானுக்கான மாற்று ஏற்பாடு எப்படி இருக்கும் என்று நான் யூகித்தேனோ, அதற்கு ஆதரவாக இந்த அறிக்கை இருக்காது என்று நம்புவதற்கான காரணங்கள் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆஜாத் முஸ்லீம் மாநாடு, முஸ்லீம் லீகை மட்டுமன்றி, தேசிய முஸ்லீம்களையும் எதிர்க்கும் முஸ்லீம் அமைப்பு என்பதை நாம் கருத்தில் கொள்ளாதிருக்க முடியாது. ஆகவே அவர்கள் லீக் இதுவரை இருந்ததைவிட, இனி இருக்கப் போவதை விட இந்துக்களின்பால் கூடுதல் இரக்ககுணம் உள்ளவர்களாக இருப்பார்கள் என்று நம்புவதற்கான ஆதாரம் எதுவும் இல்லை.

ஒருவேளை எனது யூகம் சரியாக இருந்துவிட்டால், இந்துக்களின் பதில் என்னவாக இருக்கும் என்று அறிந்துகொள்வது சுவையாக இருக்கும். பாகிஸ்தானுக்கு அத்தகையதொரு மாற்று ஏற்பாட்டை அவர்கள் விரும்புவார்களா? அல்லது அத்தகையதொரு மாற்று ஏற்பாட்டைவிட பாகிஸ்தானையே அவர்கள் விரும்புவார்களா? இக்கேள்விகளுக்கு இந்துக்களும் அவர்தம் தலைவர்களும் பதில் சொல்லட்டும் என்று விட்டுவிடுகிறேன். இக்கேள்வியின் பாலான தங்களது அணுகுமுறையைத் தீர்மானிப்பதற்கு முன்னர்

1. அந்த அறிக்கை இதுவரை வெளியிடப்படவில்லை.

இந்துக்கள் இது தொடர்பாக சில முக்கியமான கருத்துகளைக் குறித்துக் கொள்ளவேண்டுமென்று கூற விரும்புகின்றேன். குறிப்பாக அவர்கள் மாச்ட் பாலிடிக்[1]கிற்கும் கிரவாமின் பாலிடிக்[2] கிற்கும் இடையில் ஒரு வேறுபாடு இருப்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். கம்யூனிடாஸ் கம்யூனிடாடம் மற்றும் தேசங்களின் தேசம் ஆகியவற்றுக்கிடையிலான வேறுபாட்டையும், மெலிந்தவர்களின் ஐயப்பாடுகளைப் போக்குவதற்கான பாதுகாப்பு நெறிகளுக்கும் வலியவர்களின் அதிகாரத்திற்கான பேராசையைப் பூர்த்தி செய்யும் சூழ்ச்சிகளுக்கும் இடையில் வேறுபாடு உள்ளதையும்; பாதுகாப்பு நெறிகளை வழங்குவதற்கும் நாட்டையே ஒப்படைப்பதற்கும் இடையில் உள்ள வேறுபாட்டையும் அவர்கள் அறிந்து கொள்ளவேண்டும். மேலும் கிரவாமின் பாலிடிக்கிற்குப் பாதுகாப்புடன் விட்டுக்கொடுக்கப்படும் எதுவும் மாச்ட் பாலிடிக்கிற்கு விட்டுக் கொடுக்கப்படமாட்டாது என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு சமூகத்துக்குப் பாதுகாப்புடன் விட்டுக் கொடுக்கப்படும் ஒரு உரிமையை ஒரு தேசத்திற்கு விட்டுக் கொடுக்க முடியாது, தற்காப்பு ஆயுதமாகப் பயன்படுத்திக் கொள்வதற்காக பாதுகாப்புடன் வலுவற்றவருக்கு விட்டுக் கொடுக்கப்படும் உரிமையை, வலுவானவருக்கு விட்டுக் கொடுக்க முடியாது. ஏனெனில் அவர் அதைத் தாக்குதலுக்கான ஓர் ஆயுதமாகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடும்.

இவையெல்லாம் மிகமுக்கியமான, கருத்தில் கொள்ளப் படவேண்டிய விஷயங்கள், இந்துக்கள் இவற்றை அசட்டை செய்வார்களேயானால் அவர்கள் தங்களது ஆபத்தைத் தாங்களாகவே தேடிக் கொள்வதாகும். ஏனெனில் முஸ்லீம் மாற்று ஏற்பாடு உண்மையிலேயே அச்சந்தரக்கூடிய ஆபத்தான மாற்று ஏற்பாடாகும்.



1. மாச்ட் பாலிடிக் என்றால் அதிகார அரசியல் என்று பொருள்.
2. கிரவாமின் பாலிடிக் என்றால், குறைகளைச் சொல்லியே அதிகாரத்தைப் பெறும் முக்கியத் திட்டம் என்று பொருள்.

## இயல் 9

# வெளிநாடுகளிலிருந்து கிடைக்கும் படிப்பினைகள்

இந்தியாவைப் பாகிஸ்தான் என்றும் இந்துஸ்தான் என்றும் பிரிப்பதற்கான முஸ்லீம்களின் கோரிக்கைக்கு இணங்க மறுக்கும் விளைவுகளைப் பொருட்படுத்தாது இந்தியாவின் பூகோள ரீதியான ஒற்றுமையைத் தக்க வைப்பதை வலியுறுத்தும் இந்துக்களுக்கு, இந்தியாவைப் போன்றே பல தேசங்களை உள்ளடக்கி அவற்றை இணக்கமுடன் வாழச்செய்ய விழைந்த இதர நாடுகளுக்கு ஏற்பட்ட கதியை இங்கு எடுத்துரைப்பது நலம் பயக்கும்.

அத்தகைய எல்லா நாடுகளின் வரலாற்றையும் புரட்டிப் பார்க்க வேண்டிய அவசியமில்லை. துருக்கி, செக்கோஸ்லோவாகியா ஆகிய இரு நாடுகளின் கதையைப் பார்த்தாலே போதுமானது.

## I

முதலில் துருக்கியைப் பற்றித் தெரிந்து கொள்வோம். கி.பி. 1230-40 ஆண்டுகளுக்கிடையில் தங்களது இல்லமான மத்திய ஆசியாவில் இருந்து மங்கோலியர்களால் துரத்தப்பட்ட காரணத்தினால்தான் வரலாற்றில் துருக்கியர்கள் தோன்றினர். அதனால் அவர்கள் வட-மேற்கு அனடோலியாவில் குடியேறினர். 1326 இல் புருசாவை வெற்றி கொண்டதிலிருந்து துருக்கிய சாம்ராஜ்யத்தை உருவாக்கியவர்கள் என்ற அவர்களுடைய வாழ்க்கை தொடங்கியது. 1360-61 இல் ஏஜியனிலிருந்து கருங்கடல் வரை திரேசை அவர்கள் வென்றனர்; 1361-62 இல் கான்ஸ்டான்டிநோபிளின் பைஸான்டைன் அரசாங்கம் அவர்களுடைய மேலாண்மையை ஏற்றுக்கொண்டது. 1369 இல் பல்கேரியாவும் அதேபோலச் செய்தது. 1371-72 இல் மாசிடோனியா வெற்றி கொள்ளப்பட்டது. 1373 இல் ஆட்டோமான் அரசுரிமையை கான்ஸ்டான்டிநோபிள் நிச்சயமாக ஒப்புக்கொண்டது. 1389 இல் செர்வியா கைப்பற்றப்

பட்டது. 1430 இல் சலோனிகாவும், 1453 இல் கான்ஸ்டான்டிநோபிளும், 1461 இல் டிரெபிசோண்டும், 1465 இல் குரமானும், 1475 இல் கஃப்பாவும் தனாவும் கைப்பற்றப்பட்டுத் துருக்கியுடன் இணைத்துக் கொள்ளப்பட்டன. சிறிய இடைவெளிக்குப் பின்னர் 1514 இல் அவர்கள் மோசுல்லைக் கைப்பற்றினர். 1516-17 இல் சிரியா, எகிப்து, ஹியாஸ், ஏமன், ஆகியவற்றையும் 1521 இல் பெல்கிரேடை யும் கைப்பற்றினர். அதைத் தொடர்ந்து 1526 இல் மொஹக்சில் ஹங்கேரியர்களை வெற்றி கொண்டனர். 1554 இல் பாக்தாத் தின் மீது முதலாவது படையெடுப்பும் 1639 இல் இரண்டாவது படையெடுப்பும் நடைபெற்றன. முதல்முறையாக 1529 இலும் பின்னர் 1683 லுமாக இருமுறை அவர்கள் வியன்னாவை முற்றுகை யிட்டனர். தங்களுடைய நாடு பிடித்தலை அதற்கப்பாலும் கொண்டு செல்வதே அவர்களது நோக்கம். ஆனால் அந்த இரு சந்தர்ப்பங்களிலும் அவர்கள் பின்வாங்கச் செய்யப்பட்டனர். அதன் விளைவாக ஐரோப்பாவில் அவர்களது விஸ்தரிப்பு நிரந்தரமாகத் தடுத்து நிறுத்தப்பட்டது. இருந்தபோதிலும் 1326க்கும் 1683க்கும் இடையில் அவர்கள் கைப்பற்றிய நாடுகள் ஒரு பரந்த சாம்ராஜ்ய மாக உருவாயிற்று. அதற்குப் பின்னர் இப்பிரதேசங்களில் சில வற்றைத் துருக்கியர்கள் தங்களது எதிரிகளிடம் இழந்தனர். ஆயினும் பிரெஞ்சுப் புரட்சி ஏற்பட்ட தருணத்தில் 1789 இல் துருக்கிய சாம்ராஜ் யத்தின் பரப்பைப் பார்க்கும்போது அதில் 1. டான்யூப் நதிக்குத் தெற்கே பால்கன்கள், 2. ஆசியா மைனர், லெவான்ட் மற்றும் அருகாமையிலுள்ள தீவுகள் (அதாவது சைப்ரஸ்), 3. சிரியா மற்றும் பாலஸ்தீனம் 4. எகிப்து, 5. எகிப்திலிருந்து மொராக்கோ வரையி லான வடக்கு ஆப்பிரிக்கா ஆகியவை அடங்கியிருந்தன.

துருக்கிய சாம்ராஜ்யம் சிதைந்த கதையை சுவையாகக் கூறலாம். அதிலிருந்து முதலாவதாக 1769 இல் பிரிந்து சென்ற நாடு எகிப்து. அடுத்ததாக பால்கன்களில் உள்ள கிறித்தவர்கள் பிரிந்து சென்றனர். துருக்கியுடன் ஏற்பட்ட ஒரு போருக்குப் பின்னர் 1812இல் பெஸ்ஸரேபியாவை ரஷ்யா கைப்பற்றிக் கொண்டது. 1812 இல் ரஷ்யாவின் உதவியுடன் செர்பியா கலகம் செய்த காரணத்தினால் செர்பியாவை ஒரு தனி அரசாங்கமாக துருக்கியர் கள் அறிவிக்கவேண்டிய கட்டாயமேற்பட்டது. 1829 இல் மேலும் இரு டான்யூபியப் பிரதேசங்களான மோல்தாவியாவுக்கும் வல்லாச்சியாவுக்கும் அதேபோன்ற சலுகைகள் வழங்கப்பட்டன. 1822-29 ஆம் ஆண்டுகளுக்கிடையில் நடைபெற்ற கிரேக்க விடுதலைப் போரின் விளைவாக துருக்கியர்களின் ஆட்சி

யிலிருந்து கிரீஸ் முற்றிலுமாக விடுவிக்கப்பட்டது. கிரேக்கர்களின் சுதந்திரத்தை 1832 இல் இதர அரசுகள் அங்கீகரித்தன. 1875-77 ஆம் ஆண்டுகளுக்கிடையில் பால்கன் நாடுகளிடையே கொந்தளிப்பு ஏற்பட்டது. போஸ்னியாவிலும் ஹெர்ஜெகோவினாவிலும் புரட்சி ஏற்பட்டது. பல்கேரியர்கள் துருக்கியர்களின் மீது வன்முறை களைக் கட்டவிழ்த்துவிட்டனர். அதற்குத் துருக்கியர்களும் சம அளவில் வன்முறையினாலேயே பதிலடி கொடுத்தனர். அதன் விளைவாக செர்பியாவும் மான்டிநீக்ரோவும் துருக்கியின் மீது போர்ப்பிரகடனம் செய்தன. ரஷ்யாவும் அவ்வாறே செய்தது. பெர்லின் ஒப்பந்தத்தையடுத்து பல்கேரியாவுக்குத் துருக்கியின் கீழ் சுயாட்சி வழங்கப்பட்டது. கிழக்கு ருமேனியாவை ஒரு கிறித்தவ கவர்னரின் கீழ் துருக்கி ஆண்டது. ரஷ்யாவுக்கு கார்ஸ்ம் பாடூமும் கிடைத்தன. ருமேனியாவுக்கு தோப்ருட்ஜா கொடுக்கப்பட்டது. போஸ்னியாவும் ஹெர்ஜெகோவினாவும் ஆஸ்திரியாவின் நிர்வாகத்தின் கீழ் கொண்டுவரப்பட்டன. சைப்ரஸை இங்கிலாந்து ஆக்கிரமித்துக் கொண்டது. 1881 இல் கிரீஸ் தெஸ்ஸாலியை யும் பிரான்ஸ் ரூனிசையும் ஆக்கிரமித்துக் கொண்டன. 1885 இல் பல்கேரியாவும் கிழக்கு ருமேனியாவும் ஒரே நாடாக இணைக்கப் பட்டன. 1906 ஆம் ஆண்டுவரை துருக்கிய சாம்ராஜ்யத்தின் எழுச்சி யையும் வீழ்ச்சியையும் பற்றிய விபரங்களை திரு.லேன்பூலே மிகத் தெளிவாகப் பின்வரும் சொற்களில் விவரிக்கிறார். :[1]

> ''அதனுடைய பழைய பரப்பளவில், போர்ட்டே ஆண்ட பொழுது, ஐரோப்பாவில் இப்போது துருக்கி என்றழைக்கப் படும் குறுகிய பிரேதேசம் மட்டுமன்றி கிரீஸ், பல்கேரியா கிழக்கு ருமேனியா, ருமேனியா, செர்பியா, போஸ்னியா, ஹெர்ஜகோவினா, கிரிமியாவுடன் தெற்கு ரஷ்யாவின் ஒரு பகுதி, எகிப்து, திரிபோலி, டூனிஸ், அல்ஜியர்ஸ், மத்தியத் தரைக்கடல் பகுதியில் எண்ணற்ற தீவுகள், அரேபியாவின் பரந்த ஆனால் முக்கியமாக பாலைவனப் பகுதிகள், ஆகியவை துருக்கி சாம்ராஜ்யத்தில் அடங்கியிருந்தன. அவற்றின் மொத்தமக்கள் தொகை (இப்போது) ஐந்து கோடிக்கும் அதிகமாக அல்லது ரஷ்யா இல்லாத ஐரோப்பா வின் மக்கள் தொகையை விட இருமடங்கு அதிகமாக இருக்கும். துருக்கியின் பிரதேசங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் பிடுங்கப்பட்டுவிட்டன. அல்ஜியர்சும் டூனிசும் பிரான்சுடன் இணைக்கப்பட்டுவிட்டது. இந்த 1,75,000 சதுரமைல் பரப்

1. துருக்கி. பக்கம். 363 - 64.

பளவும் 50 லட்சம் மக்களும் தங்கள் விசுவாசத்தை மாற்றிக் கொண்டனர். எல்லா விதத்திலும் எகிப்து சுதந்திரமாகி விட்டது. அதனால் 5,00,000 சதுர மைல் பரப்பளவையும் 60 லட்சம் மக்களையும் துருக்கி இழந்தது. துருக்கியின் ஆசியப் பகுதி மட்டுமே ஓரளவுக்கு சிறிய இழப்பைச் சந்தித்தது. துருக்கியின் இப்போதைய ஆட்சிப் பகுதிகளின் பெரும் பான்மையாக இது அமைகிறது. இதன் பரப்பு 6,80,000 சதுர மைல்கள், மக்கள் தொகை 1.6 கோடி. ஐரோப்பாவில் துருக்கி யின் இழப்பு ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட இழப்புகளைப் போலவே மிக மோசமாக இருந்தது. ஆப்பிரிக்காவில் திரிபோலி மட்டுமே அதன்வசம் இருந்தது. செர்பியாவும் போஸ்னியாவும் ஆஸ்திரியாவின் நிர்வாகத்தின் கீழ் வந்தன. அதன்மூலம் கிட்டத் தட்ட 40,000 சதுர மைல் பரப்பளவும் 35 லட்சம் மக்களும் ஆஸ்திரியப் பிரஜைகளாயினர். வல்லாச்சியாவும் மோல்தாவி யாவும் சுதந்திர ருமேனிய முடியாட்சியின் கீழ் இணைக்கப் பட்டன. ஆனால் பரப்பளவு கிட்டத்தட்ட 40,000 சதுர மைல் களாகவும் மக்கள் தொகை ஐம்பது லட்சத்திற்கும் சற்றே அதிகமாகவும் சுருங்கி விட்டது. பல்கேரியா ஒரு சார்பு நாடாகத் தான் இருந்தது. ஆனாலும் போர்ட்டுகள் அதன்மீது உண்மை யான கட்டுப் பாட்டைச் செலுத்த முடியவில்லை. கிழக்கு ருமேனியா உண்மையில் பல்கேரியாவின் ஓர் அங்கமாகி விட்டது. இந்த இரண்டும் சேர்ந்து கிட்டத்தட்ட 40,000 சதுர மைல் பரப்பளவையும் 30 லட்சம் மக்கள் தொகையையும் கொண்டிருந்தன. கிரீஸ் முடியரசு தனது 25,000 சதுரமைல் பரப்பளவுடனும் 20 லட்சம் மக்கள் தொகையுடனும் வெகு காலத்திற்கு முன்பே பிரிந்து விட்டது. ஐரோப்பாவில் ஒரு காலத்தில் 2 லட்சத்து 30 ஆயிரம் சதுர மைல் பரப்பளவுட னும் கிட்டத்தட்ட இரண்டு கோடி மக்கள் தொகையுடனும் இருந்த துருக்கியின் இப்போதைய பரப்பளவு வெறும் 66,000 சதுர மைல்களாகவும், மக்கள் தொகை கிட்டத்தட்ட 45 லட்ச மாகவும் குறைந்துவிட்டது. ஏறத்தாழ தனது பரப்பில் முக்கால் பங்கையும் அதே வீதாசாரத்தில் தனது மக்கள் தொகையையும் இழந்து விட்டது.''

1907 இல் துருக்கியின் நிலைமை இதுதான். அதுமுதல் துருக்கிக்கு நேர்ந்த கதிதான் துரதிருஷ்டவசமாக அந்நாட்டின் வரலாற்றில் மிகமோசமான பகுதியாகும். 1908 இல் இளம் துருக்கி யர்கள் ஏற்படுத்திய புரட்சியைச் சாதகமாக்கிக் கொண்டு, ஆஸ்திரியா போஸ்னியாவையும், ஹெர்ஜகோவினாவையும் இணைத்துக் கொண்டது. பல்கேரியா சுதந்திரத்தைப் பிரகடனம்

செய்தது. 1911 இல் இத்தாலி திரிபோலியைத் தனதாக்கிக் கொண்டது. 1912 இல் பிரான்ஸ் மொராக்கோவை ஆக்கிரமித்தது. 1912இல் இத்தாலியின் வெற்றிகரமான தாக்குதலால் உந்தப்பட்டு பல்கேரியா, கிரீஸ், செர்பியா மற்றும் மான்டி நீக்ரோ ஆகியவை தாங்களாகவே பால்கன்லீக் ஒன்றை அமைத்துக் கொண்டு துருக்கியுடன் போர்ப்பிரகடனம் செய்தன. முதலாவது பால்கன் போர் என்று அறியப்படும் இப்போரில் துருக்கி படுதோல்வியடைந்தது. லண்டன் ஒப்பந்தத்தின் வாயிலாக (1913) ஐரோப்பாவில் துருக்கியப் பிரதேசம் கான்ஸ்டான்டிநோபிளைச் சுற்றிலும் ஒரு குறுகிய நிலப்பரப்பாகக் குறைக்கப்பட்டது. ஆனால் அந்த ஒப்பந்தம் செயல்படுத்தப்படவில்லை. ஏனெனில் வெற்றியால் கிடைத்த லாபத்தைப் பகிர்ந்து கொள்வதில் வெற்றி பெற்றவர்கள் உடன்பாடு காணவில்லை. 1913இல் பல்கேரியா பால்கன் லீகின் மீதமுள்ள நாடுகள் மீது போர்ப் பிரகடனம் செய்தது. தனது பிரதேசத்தை விரிவுபடுத்திக் கொள்ளும் எண்ணத்துடன் பல்கேரியா மீது ருமேனியா போர் தொடுத்தது. துருக்கியும் அவ்வாறே செய்தது. இரண்டாவது பால்கன் போரில் முடிந்த புகாரெஸ்ட் ஒப்பந்தத்தின் (1913) வாயிலாக துருக்கி அட்ரியநோபிளைத் திரும்பப் பெற்றது. பல்கேரியாவிலிருந்து திரேஸைப் பெற்றது. செர்பியா வடக்கு மாசிடோனியாவையும், கிரீஸ் தெற்கு மாசிடோனியாவையும் (சலோனிகா உட்பட) அபகரித்துக் கொண்டன. அதேசமயம் மான்ட்டிநீக்ரோ துருக்கிக்குப் பாதகமேற்படுத்தித் தனது பிரதேசத்தை விரிவுபடுத்திக்கொண்டது. 1914 இல் மாபெரும் உலகப் போர் வந்தபோது பால்கன் நாடுகள் துருக்கியிடமிருந்து தங்களது சுதந்திரத்தை வென்றன. துருக்கிய சாம்ராஜ்யத்தின் கீழ் ஐரோப்பிய நிலப்பகுதி கான்ஸ்டான்டிநோபிளை சுற்றியுள்ள சிறிய நிலப்பகுதியும் ஆசியாவில் துருக்கியின் வசமிருந்த பிரதேசங்களுமே எஞ்சியிருந்தன. ஆப்பிரிக்கக் கண்டத்தைப் பொறுத்தவரையில் எகிப்தின்மீதும் வடக்கு ஆப்பிரிக்காவின் இதரபகுதிகளின் மீதும் சுல்தானின் அதிகாரம் மிகக்குறைவாகவே இருந்தது; ஏனெனில் அச்சமயத்தில் ஐரோப்பிய வல்லரசுகள் அவற்றின்மீது முழுமையான கட்டுப்பாட்டை ஏற்படுத்தியிருந்தன. 1914 ஆம் ஆண்டின் மாபெரும் போரில் துருக்கி முற்றிலுமாகத் தோற்கடிக்கப்பட்டது. மத்தியத் தரைக்கடல் பகுதியிலிருந்து பாரசீக வளைகுடா வரை எல்லாப் பிரதேசங்களும் மீட்கப்பட்டன. மாபெரும் நகரங்களான பாக்தாத், ஜெருசலேம், டமாஸ்கஸ், அல்லெப்டோ, ஆகியவை கைப்பற்றப்பட்டன. ஐரோப்பாவில் நேசநாடுகளின் படைகள் கான்ஸ்டான்டி நோபிளை ஆக்கிரமித்துக் கொண்டன. துருக்கியுடனான போரை முடிவுக்குக் கொண்டுவந்த சேவ்ரெஸ் ஒப்பந்தம், துருக்கியின் எல்லாத் தொலைதூரப் பிரதேசங்களையும், ஆசியாமைனரின்

வளமான சமவெளிகளையும் கவர்ந்து கொள்ள விழைந்தது. தனது நிலப்பகுதிகளை கிரீஸ் உரிமை கொண்டாடியபடியே அதற்கு மாசிடோனியா, திரேஸ், ஆசியாமைனர் ஆகியவற்றில் துருக்கிக்குப் பாதகமாக மிகத் தாராளமாக பெரும் நிலப்பகுதிகள் வழங்கப் பட்டன. இத்தாலி அடாலியாவையும் தெற்கில் ஒரு பெரும் நிலப் பகுதியையும் பெற்றது. ஆசியாவில் ஈராக், சிரியா, பாலஸ்தீனம், ஹெட்ஜாஸ், நெஜெத் போன்ற தனது அரபுப் பிரதேசங்களனைத் தையும் துருக்கி இழந்தது. துருக்கிக்கு மீதமிருந்தது அதன் தலை நகரான கான்ஸ்டான்டிநோபிளும், இந்நகரிலிருந்து "ஜலசந்திகளின் நடுநிலை மண்டலத்தினால்" பிரிக்கப்பட்ட, அனடோலியா வின் வறண்ட மேட்டுநிலங்களின் ஒருபகுதியும்தான். அந்த ஒப்பந் தத்தை சுல்தான் ஒப்புக்கொண்டபோதிலும் அதை தேசியக் கட்சியின் தலைவரான கெமால் பாஷா கடுமையாகத் தாக்கினார். தங்களது புதிய பிரதேசத்தை ஆக்கிர மிப்பதற்காக கிரேக்கர்கள் முன்னேறிச் சென்றபோது அவர்கள் கடுமையாகத் தாக்கப்பட்டு தோற்கடிக்கப்பட்டனர். 1920 முதல் 1922 வரை தொடர்ந்த கிரீசுட னான போரின் முடிவில் துருக்கியர்கள் மீண்டும் ஸ்மிர்னாவை ஆக்கிரமித்துக் கொண்டனர். கிரேக்கர்களுக்கு உதவ நேச நாடுகள் ராணுவங்களை அனுப்பத் தயாராக இல்லாத காரணத்தால், அவர்கள் தேசியவாதத் துருக்கியர்களுடன் உடன்பாடு செய்துகொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. முடியானியாவில் நடைபெற்ற மாநாட்டில் கிரேக்கர்கள் சேவ்ரெஸ் ஒப்பந்தத்தின் விதிமுறை களை மாற்றியமைக்க ஒப்புக் கொண்டனர். 1923இல் லாசன்னேயில் ஏற்பட்ட உடன்படிக்கையில் அவ்வாறு ஒப்புக்கொள்ளப்பட்டது. அந்த உடன்படிக்கை மேற்கு திரேசைத் தவிர துருக்கியர்களின் இதர கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டது. சேவ்ரெஸ் ஒப்பந்தத்தில் உள்ள இதர நிபந்தனைகளைத் துருக்கியர்கள் ஏற்றுக்கொண்டனர். ஆகவே அவர்கள் ஆசியாவிலுள்ள தங்களது அரபுப் பிரதேசங்களை இழந்தனர். 1914 ஆம் ஆண்டின் போருக்கு முன்னர் ஐரோப்பா விலுள்ள தனது பிரதேசங்கள் அனைத்தையும் துருக்கி இழந்தது. போருக்குப் பின்னர் ஆசியாவிலுள்ள தனது பிரதேசங்களை இழந்தது. பழைய துருக்கிய சாம்ராஜ்யம் தகர்ந்ததன் விளைவாக, இப்போது இருப்பதெல்லாம் துருக்கிக் குடியரசு என்று அழைக்கப் படும் ஒரு சிறிய நாடு தான் இருக்கிறது. பழைய சாம்ராஜ்யத்துடன்[1] ஒப்பிடும்பொழுது அது ஒரு சிறு துரும்புதான்.

1. துருக்கியின் நிலப்பரப்பு 2,94,492 சதுர மைல்களாகும். அதில் 3708 சதுரமைல் பரப்பை ஏரிகளும் சதுப்பு நிலங்களும் ஆக்கிரமித்துக் கொண்டுள்ளது சேராது. ஐரோப்பாவில் துருக்கியின் நிலப்பரப்பு 9257 சதுர மைல்கள் மட்டுமேயாகும்.

# II

*இனி செக்கோஸ்லோவாகியாவின் விஷயத்தைப் பார்ப்போம். 1914 ஆம் ஆண்டின் ஐரோப்பியப் போரைத் தொடர்ந்து டிரையனான் ஒப்பந்தத்தினால் உருவானதுதான் செக்கோஸ்லோவாகியா. டிரையனான் ஒப்பந்தத்தைப் போன்று வேறு எந்த அமைதி ஒப்பந்தங்களும் இவ்வளவு மோசமான நிபந்தனைகளைக் கொண்டிருக்கவில்லை. பேராசிரியர் மக்கார்ட்னி கூறுகிறார்: ''அந்த ஒப்பந்தத்தினால் ஹங்கேரி சிதைக்கப்பட்டதை விடப் பெருமளவிற்குத் துண்டிக்கப்பட்டது எனலாம். புனித முடியாட்சியின் இதர நிலப்பரப்புகளுடன் சமஷ்டி உறவுமட்டுமே கொண்டிருந்த குரேஷியா, ஸ்லாவோனியா ஆகியவற்றை நாம் தவிர்த்துவிட்டாலும் கூட - இவை 800 ஆண்டுகளாக இருந்து வந்துள்ளன. ஹங்கேரியின் நிலப்பரப்பு போருக்கு முன்பு இருந்ததைவிட மூன்றிலொரு பங்கிற்கும் (32.6 சதவிகிதம்) குறைவாகக் குறைக்கப்பட்டது. அதன் மக்கள் தொகை ஐந்தில் இரண்டுபங்கிற்கும் சற்றே அதிகமாகக் குறைந்தது (41.6 சதவிகிதம்). முன்னர் ஹங்கேரிக்கு உட்பட்டிருந்த பிரதேசங்களும் மக்களும் ஏழுக்கும் குறையாத நாடுகளிடையே வினியோகிக்கப்பட்டன.'' இந்த நாடுகளில் இதற்கு முன் இருந்திராத நாடு ஒன்றும் உண்டு. அது புதிதாக உருவாக்கப்பட்டது. அதுதான் செக்கோஸ்லோவாகியா.*

*செக்கோஸ்லோவாகியக் குடியரசின் பரப்பு 54,244 சதுர மைல்களாகவும் மக்கள்தொகை 13,613,172 ஆகவும் இருந்தது. முன்னர் பொஹீமியா, மொராவியா, ஸ்லோவாகியா, ருத்தேனியா என்று அறியப்பட்ட பிரதேசங்கள் அதில் அடங்கியிருந்தன. மூன்று முக்கிய தேசிய இனங்களை உள்ளடக்கிய கலப்பு அரசாக இருந்தது.* (i) *பொஹீமியாவிலும் மொராவியாவிலும் செக் இனத்தவர் ஆக்கிரமித்திருந்தனர்.* (ii) *ஸ்லோவாகியாவில் ஸ்லோவாகியர்களும்* (iii) *ருத்தேனியாவில் ருத்தேனியர்களும் இருந்தனர்.*

*செக்கோஸ்லோவாகியா ஓர் அற்பாயுள் கொண்ட நாடாக இருந்தது. மிகச்சரியாக 20 ஆண்டுகளே அது நீடித்திருந்தது. 1939 மார்ச் 15 அன்று அது சுதந்திர நாடாக இருப்பதிலிருந்து மறைந்தது அல்லது அழிக்கப்பட்டது. ஜெர்மனியின் ஆதிக்கத்திற்குள் அது*

கொண்டுவரப்பட்டது. அதனுடைய மறைவுக்கான சூழ்நிலைகள் மிகவும் குழப்பமான தன்மையுடையனவாய் இருந்தன. அதைத் தோற்றுவித்த வல்லரசுகளே அதன் முடிவுக்கும் காரணமாக இருந்தன. 1938 செப்டம்பர் 30 அன்று மூனிக் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டதன் மூலம் அதன்மீது ஜெர்மனியின் ஆதிக்கம் இன்றியமையாததாகிவிட்டது. உலகப் பெரும்போரில் தங்களது எதிரியாக இருந்த ஜெர்மனிக்கு, தங்கள் முன்னாள் கூட்டாளியான செக்கோஸ்லோவாகியாவை வெற்றிக் கொள்வதில் கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி ஆகிய நாடுகள் உதவின. சுதந்திரத்தைப் பெறுவதற்காக செக்மக்கள் கடந்த நூற்றாண்டில் புரிந்த சாதனைகளனைத்தும் துடைத்தெறியப்பட்டன. செக் மக்கள் மீண்டுமொரு முறை தங்களது முன்னாள் எஜமானர்களின் அடிமைகளாக்கப்பட்டனர்.

## III

### துருக்கி தகர்ந்து பட்டதற்கான காரணங்கள் யாவை?

தமது **துருக்கிய சாம்ராஜ்யம்**[1] என்ற நூலில் எவெர்ஸ்லி பிரபு துருக்கியின் சீரழிவிற்கான காரணங்களை கூறமுற்பட்டிருக்கிறார். அவற்றில் சில உள்நாட்டுக் காரணங்கள், சில வெளிநாட்டுக் காரணங்களாகும். உள்நாட்டுக் காரணங்களில் முக்கியமானவை இரண்டு. முதலாவதாக ஓட்டோமான் வம்சத்தின் சீரழிவு. உயர் அதிகாரம் ஒன்று சுல்தான்களின் வாஸிர்களின் கையில் இருந்தது அல்லது அடிக்கடி சுல்தானின் அந்தப்புரப் பெண்டிரின் கரங்களில் இருந்தது. சுல்தானின் கட்டளைகளுக்கேற்ப நாட்டைப் பகட்டாக நிர்வகித்து வந்த போர்ட்டேயின் அதிகாரப்பூர்வமான நிர்வாகத்திற்கும் அந்தப்புரத்திற்கும் எப்போதும் பகைமை நிலவி வந்தது. அதிகவிலை கொடுப்பவர்களுக்கு எல்லாவிதமான சிவில் மற்றும் ராணுவப் பதவிகளை விற்பதில் உயர் பதவியிலிருந்து அடிமட்டப் பணியாளர்கள் வரை எல்லாமட்டங்களிலும் உள்ள அதிகாரிகள் மிகுந்த ஆர்வத்துடன் இருந்தனர். தங்களுடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள அந்தப்புர அழகிகளுக்கு லஞ்சம் கொடுத்து அதன்மூலம் சுல்தானின் ஒப்புதலைப் பெறுவது தகுந்த வழிமுறையாக இருப்பதை அவர்கள் கண்டனர். இவ்வாறு துருக்கிய சாம்ராஜ்யம் முழுவதும் லஞ்சலாவண்யம் பரவுவதற்கு அந்தப்புரம்

1. ஷேக் அப்துர் ரஷீதின் சுருக்கத்தைக் காண்க.

மையக் காரணமாக இருந்தது. அது துருக்கியின் சீரழிவுக்கான முக்கியக் காரணங்களில் ஒன்றாக இருந்தது. துருக்கிய ஸாம்ராஜ் யத்தின் சீரழிவுக்கான இரண்டாவது முக்கிய காரணம் அதன் ராணுவங்கள், இரு காரணங்களினால் தரங்குறைந்ததும் ஆகும். தங்களது வாழ்வின் ஆரம்பக் கட்டத்தில் ஓட்டோமான்களுக்குப் பல வெற்றிகளைப் பெற்றுத்தந்த ராணுவம் கடந்த 300 ஆண்டுகளின் போது அதன் உத்வேகத்தையும் துணிச்சலையும் இழந்துவிட்டது. இந்தத் துணிச்சலும் உத்வேகமும் துருக்கிய ராணுவத்திடம் இல்லாது போனதற்கு அதன் கலப்பான அமைப்பேயாகும். துருக்கியரும் அரபுகளும் மட்டுமே ராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். சாம்ராஜ்யத்தின் பிந்தைய காலகட்டத்தில் புதிதாக நாடு பிடிக்கும் முயற்சிகளை மேற்கொள்ளாமல் ஏற்கெனவே வெற்றி கொண்ட பகுதிகளைத் தக்க வைத்துக் கொள்வதிலேயே கவனம் செலுத்தி யதால், வெற்றிக்கும் வீரத்திற்கும் ஓர் ஊக்குவிப்பாக படைவீரர் களிடையே ஆக்கிரமிக்கப்பட்ட நிலங்களைப் பகிர்ந்து கொள்ளவும் கொள்ளையடிக்கவுமான வாய்ப்புகளும் குன்றிவிட்டன.

துருக்கியின் சீரழிவிற்கான வெளிநாட்டுக் காரணங்களில் முக்கியமானது ஐரோப்பிய நாடுகளின் ஆதாயவேட்கையே என்று கூறப்படுகிறது. ஆனால் இக்கண்ணோட்டம் உண்மையான காரணத்தைக் கருத்தில் கொள்ளத் தவறுகிறது. துருக்கியின் சீர் குலைவிற்கு உண்மையான, தலையாய காரணம் அதன் பிரஜை களிடையே தேசிய உணர்வு வளர்ந்ததேயாகும். துருக்கிய அதிகாரத் திற்கெதிராக கிரேக்கர்கள் கலகம் செய்ததும், செர்பியர்கள், பல்கேரியர்கள் மற்றும் இதரபால்கன் மக்களின் கலகங்கள் கிறித்தவ மதத்திற்கும் இஸ்லாத்துக்கும் இடையில் ஒரு மோதல் நிலவி யதையே காட்டுகிறது என்பதில் ஐயமேதும் இல்லை. இது அப்பிரச்சினையை அணுகும் ஒரு வழிமுறைதான். ஆனால் அது மேலோட்டமான அணுகுமுறையாகும். இக்கலகங்கள் தேசிய உணர் வினால் உருவானதற்குரிய வெளிப்பாடுகளேயாகும். இக்கலவரங் களின் உடனடி விளைவுகளாக துருக்கிய ஆட்சி மோசமடைந்தது. இஸ்லாமின்பால் கிறித்தவர்களுக்கு வெறுப்பும் ஐரோப்பிய நாடு களின் சூழ்ச்சிகளும் நிகழ்ந்தன என்பதில் ஐயமில்லை. ஆனால் அவர்களைத் தூண்டிய உண்மையான சக்தி எது என்பதை இது விளக்கவில்லை. உண்மையான உந்துசக்தி தேசிய உணர்வே, அக்கல கங்கள் அந்த உணர்வினால் உண்டான இந்த உள்ளார்வத்தின் வெளிப்பாடேயாகும். துருக்கியின் சீர்குலைவிற்குத் தேசியவாதமே காரணம் என்பதைக் கடந்த போரில் அரபுகள் நடத்திய கலகமும்

சுதந்திரம் பெறவேண்டுமென்ற அவர்களது உறுதியும் நிரூபிக்கின்றன. இங்கு இஸ்லாமுக்கும் கிறித்தவமதத்திற்கும் மோதல் இருக்கவில்லை. அதேபோல அந்த இருமக்களுக்கும் இடையில் அடக்கியாள்பவர், ஒடுக்கப்பட்டவர் என்ற உறவும் இருக்கவில்லை. ஆயினும் அரபுகள் துருக்கிய சாம்ராஜ்யத்திலிருந்து விடுதலை வேண்டுமென்று கோரினர். ஏன்? ஏனெனில் அரபு தேசியவாதம் அவனுக்கு நெஞ்சிற்கினியதாக இருந்தது. அவன் ஒரு துருக்கியப் பிரஜையாக இருப்பதைவிட ஓர் அரபு தேசியவாதியாக இருப்பதையே விரும்பினான்.

*செக்கோஸ்லோவாகியாவின் அழிவுக்குக் காரணம் என்ன?*

ஜெர்மன் ஆக்கிரமிப்பினால்தான் அது நேர்ந்தது என்பது பொதுவான கருத்து. இது ஓரளவுக்கு உண்மையும்கூட. ஆனால் அதுவே முழுமையான உண்மையல்ல. செக்கோஸ்லோவாகியாவின் ஒரே எதிரியாக ஜெர்மனி இருந்திருக்குமானால் சுடேடன் ஜெர்மானியர்கள் வாழ்ந்து வந்த எல்லைப்புறப் பகுதிகளின் விளிம்பில் உள்ள நிலப்பகுதிகளை மட்டுமே அது இழந்திருக்கும். ஜெர்மனியின் ஆக்கிரமிப்பினால் வேறு எந்த இழப்பும் ஏற்பட்டிருக்காது. உண்மையைச் சொன்னால் தனது சொந்த எல்லைகளுக்குள் இருந்த ஓர் எதிரிதான் செக்கோஸ்லோவாகியாவின் அழிவுக்குக் காரணமாகும். அந்த எதிரி ஸ்லோவாக்குகளின் வளைந்து கொடுக்காத தேசியவாதமேயாகும். அவர்கள் நாட்டின் ஒற்றுமையைத் தகர்க்கவும் ஸ்லோவாகியாவுக்குச் சுதந்திரம் பெறவும் துடித்தனர்.

ஒரே அரசின் இரு பிரிவுகளாக் ஸ்லோவாக்குகளும் செக்குகளும் இணைந்தது சில ஊகங்களின் அடிப்படையில் அமைந்திருந்தது. முதலாவதாக, இந்த இரு இனத்தவரும் ஒரே மக்களாக இருக்குமளவுக்கு மிகவும் நெருக்கமானவர்கள் என்றும், செக்கோஸ்லோவாக்குகளின் ஒரு பிரிவுதான் ஸ்லோவாக்குகள் என்றும் கருதப்பட்டது. இரண்டாவதாக இந்த இருவரும் செக்கோஸ்லோவாக் என்ற ஒரே மொழியைப் பேசினர். மூன்றாவதாக தனிப்பட்ட ஸ்லோவாக் உணர்வு என்பது இல்லாதிருந்தது. இந்த ஊகங்களை அச்சமயத்தில் எவரும் ஆராயவில்லை. ஏனெனில் ஸ்லோவாகியர்களே இந்த இணைப்பை விரும்பினர். 1918 இல் அமைதி மாநாட்டில் தங்களது இந்த விருப்பங்களைத் தெரிவித்தனர். பேராசிரியர் மக்கார்ட்னி[1] பின்வருமாறு சுட்டிக் காட்டுகிறார்.

---

1. சி.ஏ. மக்கார்ட்னி - ஹங்கேரியும் அதன் வழித்தோன்றல்களும் (ஆக்ஸ்போர்டு) 1937 பக்.. 136.

''......'தற்கால உபயோகத்திற்காக இந்த வரலாற்றினைப் (செக்குகளுக்கும் ஸ்லோவாக்குகளுக்கும் இடையிலான உறவுகளின் வரலாற்றில்) பரிசீலனை செய்யும்போது தோன்றும் மையமான உண்மை என்னவெனில் ஸ்லோவாக் தேசிய உள்ளுணர்வு இறுதி வடிவம் பெற்றதுதான்...' ஒரே பிரிக்க முடியாத செக்கோஸ் லோவாக் மொழி மற்றும் மக்களில் உண்மையான, விட்டுக் கொடுக்காத நம்பிக்கை கொண்டிருந்தவர்கள் ஒருபோதும் நிச்சயமாக மிக அதிகமாக இருந்ததில்லை. ஸ்லோவாகியாவில் அத்தகை யவர்கள் மிக அதிகமாக இருப்பதுபோன்ற தோற்றம் ஏற்படுத்தப் பட்டது. செக்குகளுக்கும் ஸ்லோவாக்குகளுக்கும் இடையில் கணிசமான வேறுபாடுகள் நிலவின என்ற உண்மையான அனு பவத்தின் செல்வாக்கின் கீழ் அத்தகையவர்கள் இன்றைக்கு விரல் விட்டு எண்ணக்கூடிய அளவுக்குக் குறைந்துவிட்டனர். தற்போது ஸ்லோவாகியாவின் அரசுமொழியாக செக்குகளாலேயே நடை முறையில் ஸ்லோவாக் மொழி அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அரசியல் மற்றும் தேசிய எதிர்ப்பின் தீவிரம் எள்ளளவும் குறையவில்லை. இன்றைக்குச் ''செக்கோஸ்லோவாகியா'' என்ற பெயர் அதிகாரபூர்வ தஸ்தாவேஜுகளிலும் வெளிநாட்டவருக்கென வெளியிடப்படும் பிரசுரங்களிலும் மட்டுமே இடம் பெற்றுள்ளது. அந்த நாட்டில் நான் தங்கியிருந்த பலவாரங்களில் ஒரே ஒருவர்தான் அப்பெயரைப் பயன்படுத்தியது என் நினைவுக்கு வருகிறது; அவர் பாதி ஜெர்மானி யரும் பாதி ஹங்கேரியருமான ஒரு பெண்மணி, அதை ஓர் அரசியல் உணர்வில், அந்தந்த மொழி பேசும் பகுதிகள் அந்தந்த நாட்டைச் சேர வேண்டும் என்பது தவறானது என்று அவர் கருதும் அர்த்தத்தில் பயன்படுத்தினார். எந்த ஒரு செக் அல்லது ஸ்லோவாக் இனத் தவரோ இயல்பாகப் பேசும்போது தம்மை செக் என்றோ ஸ்லோ வாக்கியர் என்றோதான் கூறிக் கொள்கிறாரேயன்றி வேறுவிதமாக அல்ல.''

ஸ்லோவாக்குகளின் இந்தத் தேசிய உணர்வு எப்போதுமே கனன்று கொண்டிருந்தது. சுயாட்சிக்காக செக்கோஸ்லோவாகியா சுடேடன் ஜெர்மானியர்கள் சில கோரிக்கைகளை முன்வைத்துள்ளனர் என்பதைக் கண்ட ஸ்லோவாக்குகளின் அந்த உணர்வு எரிமலை யாக வெடித்தது. சர்வதேச அரசியலில் கொள்ளைக்காரர்களின் தார்மீக நெறிகளைப் பிரயோகித்து ''நாங்கள் கேட்பதைக் கொடுத்து விடு, இல்லாவிடில் உனது கடையை அடித்து நொறுக்கி

விடுவோம்'' என்பதுபோல தங்களது குறிக்கோளை எய்த ஜெர்மானியர்கள் விழைந்தனர். ஸ்லோவாக்குகளும் அதேபோன்று சற்றே வேறுவிதமாக, சுயாட்சிக்கான தங்களது கோரிக்கையை முன்வைத்தனர். கொள்ளைக்காரத்தனமான வழிமுறைகளில் அவர்கள் ஈடுபடவில்லை, தங்களுடைய சுயாட்சிக்கோரிக்கை களுடன் அவர்கள் நிறுத்திக் கொண்டனர். சுதந்திரம் எனும் கருத்தையே அவர்கள் தவிர்த்தனர், ஸ்லோவாகியாவில் சுயாட்சி இயக்கத்தில் முன்னணி நபராக இருந்த டாக்டர் டிசோ அக்டோபர் 8 அன்று வெளியிட்ட அறிவிப்பில் ''நமது குறிக்கோளின் உணர் வில் கடவுளுக்காகவும், நாட்டுக்காகவும் உண்மையான கிறித்தவ, தேசிய உணர்வில் நாம் முன்னேறிச் செல்வோம்'' என்று கூறப் பட்டிருந்தது. தங்களது நியாயமான கோரிக்கைகளில் நம்பிக்கை கொண்டிருந்த அவர்கள் செக்குகளுக்கும் ஸ்லோவாக்குகளுக்கும் இடையில் உள்ள நேச உறவுகளைக் குலைப்பதற்கு ஸ்லோவாக்குகள் முழுமையாகப் பயன்படுத்திவந்த 'கிரவாமின் பாலிடிக்கிற்கு' இடம் தராமலிருக்க வேண்டும் என்ற விருப்பத்தினாலும் பிராகிலுள்ள தேசியசட்டமன்றம் 1938 நவம்பரில் -மூனிக் உடன்பாடு ஏற்பட்ட உடனேயே - ''ஸ்லோவாகியாவின் சுயாட்சி குறித்த அரசியல் சட்ட நடவடிக்கை'' என்ற ஒரு சட்டத்தை இயற்றியது. அதனுடைய ஷரத்துக்கள் பரந்த தன்மையுடையனவாய் இருந்தன. ஸ்லோவாகியா வுக்கென்று தனியாக ஒரு நாடாளுமன்றம் ஏற்படுத்தவும் செக் கோஸ்லோவாகியக் குடியரசின் சட்ட அமைப்பின் கட்டுக் கோப்பினுள் ஸ்லோவாகியாவின் அரசியல் சட்டத்தை இந்த நாடாளுமன்றம் தீர்மானிக்கவும் அதில் வகை செய்யப்பட்டிருந்தது. ஸ்லோவாகியாவின் பிரதேசத்தில் ஏதேனும் மாற்றம் செய்ய வேண்டுமானால் ஸ்லோவாக் நாடாளுமன்றத்தின் மூன்றிலிரண்டு பங்குப் பெரும்பான்மையுடன்தான் செய்யமுடியும். பிரத்யேகமாக ஸ்லோவாகியா சம்பந்தப்பட்ட சர்வதேச ஒப்பந்தங்களுக்கு ஸ்லோ வாக் நாடாளுமன்றத்தின் ஒப்புதல் அவசியமாக்கப்பட்டது. ஸ்லோ வாகியாவில் மைய அரசு நிர்வாகத்தின் அதிகாரிகள் ஸ்லோவாக்கி யர்களாகத்தான் இருத்தல் வேண்டும். எல்லா மைய அமைப்புகள், கவுன்சில்கள், கமிஷன்கள் மற்றும் இதர ஸ்தாபனங்களில் விகிதாசார அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும். அதே போன்று செக்கோஸ்லோவாக் குடியரசு கலந்து கொள்ள அழைக்கப்படும் எல்லா சர்வதேச ஸ்தாபனங்களிலும் ஸ்லோ வாகியாவிற்கு வீதாசார அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்

படவேண்டும். ஸ்லோவாகியப் படைவீரர்கள், அமைதி காலத்தில் முடிந்தவரை ஸ்லோவாகியாவிலேயே நிறுத்திவைக்கப்பட வேண்டும். சட்டமியற்றும் அதிகாரத்தைப் பொறுத்தவரை பொதுவான அக்கறையுள்ள எல்லா விஷயங்களும் செக்கோஸ்லோவாகிய நாடாளுமன்றத்திற்கு ஒப்படைக்கப்படுகின்றன. ஸ்லோவாக்குகளின் இந்த உரிமைகளுக்கு உத்தரவாதமளிக்கும் விதமாக, இத்தகைய மாற்றங்களுக்கு அரசியல் சட்டரீதியான பெரும்பான்மையில் ஸ்லோவாகியாவில் தேர்ந்தெடுக்கப்பட்ட தேசிய சட்டமன்ற உறுப் பினர்களில் விகிதாசாரரீதியாகப் பெரும்பான்மையினரையும் உள் ளடக்கியிருந்தால் மட்டுமே அரசியல் சட்டமாற்றங்கள் செய்யும் தேசிய சட்டமன்றத்தின் முடிவு செல்லுபடியாகும் என்று அரசியல் சட்டவிதி வகை செய்தது. அதேபோன்று குடியரசின் ஜனாதிபதி யைத் தேர்ந்தெடுப்பதற்கு நாடாளுமன்ற உறுப்பினர்களின் அரசியல் சட்ட ரீதியாக நிர்ணயிக்கப்பட்ட பெரும்பான்மையினரின் ஒப்புதல் மட்டுமன்றி ஸ்லோவாக் உறுப்பினர்களின் விகிதாசார ரீதியான பெரும்பான்மையினரின் ஒப்புதலும் அவசியமாகும். மேலும் ஸ்லோ வாக்குகளின் நம்பிக்கையை மத்திய அரசு பெற்றிருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காக நாடாளுமன்றத்தின் ஸ்லோவாக் உறுப்பினர்களில் மூன்றிலொரு பங்கினர் ''நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை'' முன்மொழியலாம் என்று அரசியல் சட்டத்தில் வகை செய்யப்பட்டது.

இந்த அரசியல்சட்ட மாற்றங்கள் செக்குகளின் விருப்பத் திற்கு எதிராக அறிமுகப்படுத்தப்பட்ட காரணத்தினால், இதற்கு முன் இருந்திராத அளவுக்குச் செக்குகளுக்கும் ஸ்லோவாக்கியர் களுக்கும் இடையில் ஒரு இணைப்புக் குறி அறிமுகப்படுத்தப் பட்டது. இந்த இரு தரப்பினருக்கும் இடையில் சிறிய சச்சரவுகள் தீர்க்கப்பட்டுவிட்டால் ஸ்லோவாக்குகளின் தேசியவாதமே அவர் களை செக்மக்களுக்கு நெருக்கமாக்கிவிடும் என்ற நம்பிக்கையில் தான் அவ்வாறு செய்யப்பட்டது. ஸ்லோவாகியாவுக்கு ஒரு தற் சார்புடைய அந்தஸ்தை அரசியல் சட்டரீதியான மாற்றங்கள் உத்தரவாதம் செய்யும் நிலையில் அவ்வாறு உத்தரவாதம் செய்யப்பட்ட அந்தஸ்தை ஸ்லோவாக் மக்களின் சம்மதமின்றி மாற்றமுடியாது என்ற நிலையில் செக் மக்களின் ஆதிக்கத்தின் மூலம் ஸ்லோவாக் மக்கள் தங்களுடைய தேசியத்தனித்தன்மையை எப்போதேனும்

இழந்துவிடும் பிரச்சினைக்கே இடமில்லை. இணைப்புக் குறி யீட்டினால் அறிமுகப்படுத்தப்பட்ட சுயாட்சி கலாசார நீர்ப் பரப்பைப் பிரித்தது, ஸ்லோவாக் மக்கள் தங்களது நிஜத் தன்மையை இழப்பதிலிருந்து காப்பாற்றியது.

புதிய அரசியல் சட்டத்தின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட முதலாவது ஸ்லோவாக் நாடாளுமன்றம் 1939 ஜனவரி 18 அன்று தொடங்கியது. அப்போது நாடாளுமன்றத்தின் தலைவர் டாக்டர் மார்டின் சொகோல், ''ஸ்லோவாக்கின் விடுதலைக்கான போராட்ட காலகட்டம் முடிந்துவிட்டது. தேசிய மறுமலர்ச்சிக்கான காலகட்டம் இப்போது தொடங்குகிறது,'' என்று பிரகடனம் செய்தார். தனது சுயாட்சியை ஸ்லோவாகியா அடைந்துவிட்டதால் ஸ்லோவாக்கி யர்கள் செக்குகளின்பால் பகைமை கொள்ளமாட்டார்கள் என்றும், இருவரும் செக்கோ- ஸ்லோவாக் அரசுக்கு உண்மையாக நடந்து கொள்வார்கள் என்றும் அச்சந்தர்ப்பத்தில் ஆற்றப்பட்ட இதர உரைகள் சுட்டிக் காட்டின.

ஸ்லோவாக் நாடாளுமன்றம் தொடங்கப்பட்டு ஒரு மாத காலம் கூட ஆகவில்லை. அதற்கு முன்னர் ஸ்லோவாக் அரசியல்வாதிகள் அந்த இணைப்புக் குறியீட்டுக்கெதிராகவும், முழுமையான பிரிவுக்காகவும் தங்களது போராட்டத்தைத் தொடங் கினர். அவர்கள் உணர்ச்சிப் பீறிடும் உரைகளை ஆற்றினர். அவற்றில் அவர்கள் செக் மக்களைத் தாக்கிப் பேசினர். செக் அடக்குமுறையைப் பற்றிப் பேசினர். முற்றிலும் சுதந்திர ஸ்லோ வாக்கியா வேண்டுமென்றனர். மார்ச் ஆரம்பத்தில் ஸ்லோவாகியா வில் பிரிவினை வாதத்தின் பல்வேறு வடிவங்கள் செக்கோஸ் லோவாகிய அரசின் ஒருமைப்பாட்டையே மிக மோசமாக அச்சுறுத்திக் கொண்டிருந்தன. ஸ்லோவாக் பிரதமரான டிசோ ஸ்லோவாகியாவின் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்ய முடிவு செய்திருக்கிறார் என்பது மார்ச் 9 அன்று தெரியவந்தது. இத்தகைய ஒரு நடவடிக்கையை எதிர்பார்த்து ஸ்லோவாகியாவிற் குள் ராணுவம் அனுப்பப்பட்டது. பிரதமர் டிசோவையும் இதர ஸ்லோவாக் அமைச்சர்களையும் குடியரசின் ஜனாதிபதி டாக்டர் ஹச்சா பதவிநீக்கம் செய்தார். அடுத்தநாள் போலீஸ் காவலில் இருக்கவேண்டிய டிசோ, பெர்லினுக்குத் தொலைபேசியில் பேசி உதவி கோரினார். திங்களன்று டிசோவும் இட்லரும் பெர்லினில் சந்தித்து ஒன்றரைமணிநேரம் பேசினார்கள். இட்லருடன் பேச்சு

வார்த்தை முடிந்த உடனேயே பிராகுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்ட டிசோ ஜெர்மனியின் உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

அவையாவன:

i) ஸ்லோவாகியாவிலிருந்து அனைத்து செக் துருப்புகளையும் திரும்பப் பெறவேண்டும்;

ii) ஜெர்மனியின் பாதுகாப்பின் கீழ் ஸ்லோவாகியா ஒரு சுதந்திர அரசாகச் செயல்படும்;

iii) இந்த சுதந்திரப் பிரகடனத்தைச் செவிமடுப்பதற்காக ஜனாதிபதி ஹச்சா, ஸ்லோவாக் நாடாளுமன்றத்தைக் கூட்ட வேண்டும்.

ஸ்லோவாகியாவின் நலன்கருதி அதனுடைய தூண்டுதலின்பேரில் ஜெர்மனி முன்வைத்த கோரிக்கைகள் ஏற்க மறுக்கப்படுமானால் செக்கோஸ்லோவாகியாவின் பாதுகாப்பற்ற எல்லைகளைச் சுற்றிலும் குவித்து வைக்கப்பட்டுள்ள ஜெர்மன் ராணுவத்தின் டஜன் கணக்கான பிரிவுகள் உள்ளே நுழைந்துவிடும் என்பதை நன்கு அறிந்திருந்ததனால் ''சரி'' என்பதைத் தவிர ஜனாதிபதி ஹச்சாவுக்கும் பிராக் அரசாங்கத்திற்கும் வேறுவழி இல்லாதிருந்தது. இவ்வாறு செக்கோஸ்லோவாகியாவின் புதிய அரசு முடிவுக்கு வந்தது.

## IV

இந்த இருநாடுகளின் வரலாற்றிலிருந்து கிடைக்கும் படிப்பினைகள் யாவை?

இந்த விஷயங்களை எவ்வாறு அணுகுவது என்பதில் சில கருத்துவேறுபாடுகள் உள்ளன. இப்பிளவுப் போர்களுக்கான காரணம் தேசியவாதமே என்று திரு.சிட்னி புரூக்ஸ் கூறுகிறார். அவருடைய கூற்றுப்படி தேசியவாதமே சர்வதேச அமைதியின் எதிரியாகும். மறுபுறத்தில் திரு. நார்மன் ஏஞ்சல் என்பவர் தேசியவாதத்தை விட தேசிய வாதத்திற்கு ஏற்பட்டிருக்கும் அச்சுறுத்தல்தான் முக்கியக் காரணம் என்கிறார். திரு. ராபர்ட்சனின் கூற்றுப்படி, தேசியவாதமானது, ஓர் ஆக்கப்பூர்வமான மாயக்காட்சியாக இல்லாவிட்டாலும் அறிவுக்குப் பொருந்தாத உள்ளுணர்வாகும். மானுட இனம் அதை

எவ்வளவு விரைவில் ஒழித்துக்கட்டுகிறதோ அந்தஅளவுக்கு அது அனைவருக்கும் நன்மை பயக்கும்.

இந்த விஷயத்தை எந்தவழியில் முன்வைத்தாலும், தேசிய வாதத்தை ஒழிக்க ஒருவர் எவ்வளவுதான் விரும்பினாலும் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினைகள் மிகத் தெளிவானவை: தேசியவாதம் என்பது ஓர் உண்மை, அதை நம்மால் தவிர்க்கவோ மறுக்கவோ முடியாது. அதை அறிவுக்குப் பொருந்தாத உள்ளுணர்வு என்றோ அல்லது ஆக்கப்பூர்வமான மாயை என்றோ அழைத்தாலும் அது சாம்ராஜ்யங்களையே கவிழ்த்துவிடும் இயக்காற்றல் மிக்க சக்தி கொண்ட ஒரு வீரியசக்தி என்பது முற்றிலும் உண்மை. தேசிய வாதம்தான் காரணமா அல்லது தேசியவாதத்திற்கான அச்சுறுத்தல் தான் காரணமா என்பது வலியுறுத்தப்படும் வேறுபாடு மட்டுமே. திரு.டோயன்பி கூறுவது போல அதை அங்கீகரிக்கப்பது தான் உண்மையான விஷயம். ''நம்மையும் மீறி போரை உருவாக்கும் வல்லமை தேசியவாதத்துக்கு உண்டு. அது காலாவதியாகிவிட்ட கோட்பாடு அல்ல, மாறாக அது நம்பிக்கை வைக்குமளவுக்கு ஒரு ஜீவாதார சக்தி என்பதை அது அழுத்தந்திருத்தமாக நிரூபித்துக் கொண்டுள்ளது''. அவர் சுட்டிக்காட்டியதைப் போல், ''தேசிய வாதத்தைச் சரியாகப் புரிந்துகொள்வது ஜீவமரணப் போராட்ட விவகாரமாகிவிட்டது.'' அது ஐரோப்பாவுக்குப் பொருந்துவது மட்டு மல்ல, துருக்கிக்கும் அது பொருந்திற்று. செக்கோஸ்லோவாகி யாவுக்கும் அது பொருந்திற்று. அவர்களுக்கு வாழ்வா, சாவா என்றிருந்த பிரச்சினை இந்தியாவுக்கும் ஒரு ஜீவமரணப் போராட்ட மாக இருப்பதைத் தவிர வேறு எப்படி இருக்கமுடியும்? அவருக்கு முன்னர் குய்ஸோட் செய்ததுபோலவே பேராசிரியர் டோயன்பி யும், தேசிய இனத் தன்மையை அங்கீகரிப்பது ஐரோப்பிய அமைதிக்கு அவசியமான அடித்தளமாக இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இந்தியா அக்கோரிக்கையை அங்கீகரிக்கத் தவறுமா? அவ்வாறு தவறினால் இந்தியாவுக்குத்தான் இடர் ஏற் படும். தேசியவாதம் ஒரு குந்தகம் விளைவிக்கும் சக்தி என்பதை மட்டுமே இந்த இருநாடுகளின் வரலாறும் நமக்கு காட்டும் படிப் பினையல்ல. அந்நாடுகளின் அனுபவம் நமக்கு அதிக முக்கியத் துவம் இல்லாவிடினும் குறைந்தபட்சம் சமமான முக்கியத்துவத்தை யாவது உள்ளடக்கியுள்ளதைக் காட்டுகிறது. சில உண்மைகளை நினைவுபடுத்திப் பார்ப்பதன் மூலம் அது என்ன என்பது நமக்குத் தெரியவரும்.

மற்றவர்கள் சித்தரிப்பதுபோல துருக்கியர்கள் எந்த வகையிலும் குறுகிய மனப்பான்மையுடையவர்களாக இருந்த தில்லை. தங்களுடைய சிறுபான்மை மக்களுக்கு பெருமளவில் சுயாட்சியை அவர்கள் அனுமதித்திருந்தனர். வேறுபட்ட சமூகப் பாரம்பரியங்களைக் கொண்ட, பல்வேறு சமூகங்கள் பூகோள ரீதியாக ஒருவருடன் ஒருவர் கலந்து எவ்வாறு இணக்கத்துடன் வாழ்வது என்ற பிரச்சினையைத் தீர்ப்பதில் துருக்கியர்கள் மிகவும் முன்னேற்றமடைந்திருந்தனர். தனது எல்லைகளுக்குள் வாழ்ந்து வந்த முஸ்லீம்கள் அல்லாத, துருக்கியர் அல்லாத சமூகத்தினருக்கு பிரதேச, அதேபோன்று கலாசார சுயாட்சியையும் ஒட்டோமான் பேரரசு வழங்கியிருந்தது. மேற்கத்திய நாடுகளின் அரசியல் தத்துவத்தில் இத்தகைய விஷயங்களைக் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாது. இத்தகைய சலுகைகளினால் கிறித்தவப் பிரஜைகள் திருப்தியடைந்திருக்க முடியாதா? யார் என்ன சொன்னாலும் கிறித்தவச் சிறுபான்மையினரின் தேசியவாதம் இந்த ஸ்தல சுயாட்சியினால் திருப்தியடையவில்லை. அது முழுமை யான விடுதலைக்காகப் போராடியது; அப்போராட்டத்தில் துருக்கி வெட்டிப் பிளக்கப்பட்டது.

மதத்தினால் துருக்கியர்களும் அரேபியர்களும் பிணைக்கப் பட்டிருந்தனர். இஸ்லாமின் மதப்பிணைப்புதான் மானுட இனம் அறிந்திருக்கும் மிக வலுவான பிணைப்பாகும். ஒற்றுமை என்று பார்க்கும்போது எந்த ஒரு சமூகக் கூட்டமைப்பும், இஸ்லாமிய சகோதரத்துவத்திற்கு ஈடாகமுடியாது. துருக்கியர்கள், கிறித்தவப் பிரஜை களைத் தங்களை விடக் கீழானவர்களாக நடத்திய அதே சமயத்தில் அரேபியர்களை மட்டும் தங்களுக்குச் சமமானவர் களாக நடத்தினர் என்ற உண்மையிலிருந்து இது தெளிவாகிறது. ஒட்டோமான் ராணுவத்தில் முஸ்லீம்கள் அல்லாதவர்கள் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஆனால் அரபுப் படைவீரர்களும் அதிகாரி களும் துருக்கியர்களுடனும் இந்தியர்களுடனும் தோளோடு தோள் நின்று பணிபுரிந்தனர். அரபு அதிகாரிகள் துருக்கிப் பள்ளிகளில் கல்விகற்று ராணுவத்திலும் சிவில்பணிகளிலும் துருக்கியர்களுக்குச் சமமான அந்தஸ்துடன் பணிபுரிந்தனர். துருக்கியருக்கும் அரபு களுக்குமிடையில் இழிவான வேறுபாடுகள் எதுவும் இருக்க வில்லை. ஒட்டோமான் அரசுப்பணிகளில் மிகஉயர்ந்த பதவியில் அரபுகள் அமர்வதற்குத் தடையேதும் இருக்கவில்லை. அரசியல் ரீதியாக மட்டுமன்றி சமூகரீதியாகவும் கூட அரேபியர்களைத் தங்களுக்குச் சமமானவர்களாகவே துருக்கியர்கள் நடத்தினர்.

அரேபியர்கள் துருக்கியப் பெண்களையும் துருக்கியர்கள் அரேபியப் பெண்களையும் மணம் செய்து கொண்டனர். சோதரத்துவம், விடுதலை, சமத்துவம் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்ட அரேபியர்கள் மற்றும் துருக்கியரின் இந்த இஸ்லாமிய சகோதரத்துவத்துடன் ஏன் அரேபியர்கள் திருப்தியடையவில்லை? யார் என்ன சொன்னாலும் அரேபியர்கள் திருப்திகொள்ளவில்லை. அரபு தேசியத் தன்மை இஸ்லாமின் பிணைப்புகளைத் தகர்த்தெறிந்து தங்களது சுதந்திரத்திற்காகத் தனது சக முஸ்லீமான துருக்கியரை எதிர்த்துப் போராடச் செய்தது. அதில் வெற்றியும் பெற்றது. ஆனால் துருக்கி முற்றிலுமாகத் துண்டாடப்பட்டது.

செக்கோஸ்லோவாகியாவைப் பொறுத்தவரை செக்குகளும் ஸ்லோவாக்குகளும் ஒரே மக்கள் என்ற அங்கீகாரத்துடன் அது தொடங்கியது. ஒரு சில ஆண்டுகளுக்குள்ளேயே ஸ்லோவாக்குகள் தங்களை ஒரு தனித் தேசமாகக் கூறிக்கொண்டனர். செக்குகளைப் போல அவர்களும் ஒரே மரத்தின் கிளைதான் என்பதைக்கூட ஒப்புக் கொள்ளவில்லை. அவர்களுடைய தேசியத்தன்மை அவர்களை ஒரு மாறுபட்டமக்கள் என்பதை அங்கீகரிக்குமாறு செக்குகளைக் கட்டாயப்படுத்திற்று. அந்த வேறுபாட்டைக் குறிக்கும் வகையில் ஓர் இணைக்குறியீட்டை வரைந்து ஸ்லோவாக்குகளின் தேசியத் தன்மையை சாந்தப்படுத்த செக்குகள் விழைந்தனர். செக்கோஸ் லோவாகியா என்பதை செக்கோ-ஸ்லோவாகியா என்று திருத்த அவர்கள் ஒப்புக்கொண்டனர். அந்த இணைக்குறியீட்டிற்குப் பின்னரும் கூட ஸ்லோவாக்குகளின் தேசியத்தன்மை திருப்தியடையவில்லை. சுயாட்சி குறித்த சட்டம் தங்களைச் செக்குகளிடமிருந்து பிரிக்கும் ஒரு இணைக்குறியீடாகவும் அவர்களை செக்குகளுடன் பிணைக்கும் ஒரு சங்கிலியாகவும் இருந்தது. எந்த இரு இனங்களையும் பிரிப்பதைக் குறிக்கும் இணைக் குறியீடாக அது இருப்பதை ஸ்லோவாக்குகள் வரவேற்றனர். ஆனால் அதே இணைக் குறியீடு செக்குகளுடன் தங்களைப் பிணைப்பதைக் குறிப்பது அவர்களுக்கு எரிச்சலூட்டுவதாக இருந்தது. இணைக்குறியீட்டுடன் கூடிய சுயாட்சியை மிகுந்த மனநிறைவுடன் ஏற்றுக்கொண்ட ஸ்லோவாக்குகள் அத்துடன் திருப்தியடைவதாகவும் அரசுக்கு உண்மையாக இருப்பதாகவும் உறுதியளித்தனர். ஆனால் இது ஒரு தந்திரமாகவே இருந்தது. இதையே இறுதிமுடிவாக அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இதை அவர்கள் ஏற்றுக்கொண்டதற்குக் காரணம், அவர்களது முக்கியநோக்கமாக இருந்த அந்த இணைக் குறியீட்டை அகற்றிவிடுவதற்கு ஒரு முக்கியக் கருவியாக

அதைப் பயன்படுத்தமுடியும் என்றும், சுயாட்சியை சுதந்திரமாக மாற்றமுடியும் என்றும் அவர்கள் கருதியதேயாகும். ஸ்லோவாக்கு களின் தேசியத்தன்மை ஓர் இணைக்குறியீட்டுடன் திருப்தி யடைந்துவிடவில்லை. அந்த இணைக்குறியீடு இருந்த இடத்தில் ஒரு கோடு இருக்கவேண்டுமென்று அவர்கள் விரும்பினர். அந்த இணைக்குறியீடு அறிமுகப்படுத்தப்பட்ட உடனேயே, செக்கு களுக்கும் ஸ்லோவாக்குகளுக்கும் இடையில் இருந்த இணைக் குறி யீட்டை ஒரு கோடு கொண்டு மாற்றும் போராட்டத்தை அவர்கள் தொடங்கினர். அதற்கு என்ன வழிமுறைகளைப் பயன்படுத்துவது என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. அவர்களுடைய தேசியத்தன்மை வெறிகொண்டதாகவும் தீவிரமானதாகவும் இருந்தது. ஆகவே அவர்கள் தோல்வியடைந்தபோது ஜெர்மானியர்களை உதவிக்கு அழைக்க அவர்கள் தயங்கவில்லை.

துருக்கியும் செக்கோஸ்லோவாகியாவும் சீரழிந்ததைப் பற்றி தீவிரமாக ஆய்வு செய்யும்போது, ஸ்தல சுயாட்சியோ அல்லது மதப்பிணைப்போ தேசியவாதம் தலை தூக்கி விட்டால் அதன் தீவிரவாதத்தைத் தாக்குப்பிடித்து நிற்கப் போதுமானவையல்ல.

இப் படிப்பினையைக் கற்றுக்கொள்வது இந்துக்களுக்கு நன்மை பயக்கும். அவர்கள் தங்களைத் தாங்களே இவ்வாறு கேட்டுக் கொள்ளவேண்டும்: கிரேக்க, பால்கன் மற்றும் அரபு தேசியவாதம் துருக்கிய அரசைத் தகர்க்கமுடியுமானால் ஸ்லோ வாக் தேசியவாதம் செக்கோஸ்லோவாகியாவை தகர்க்க முடியு மென்றால் இந்திய அரசைச் சீர்குலைப்பதிலிருந்து முஸ்லீம் தேசிய வாதத்தை எதனால் தடுத்துவிட முடியும்? குமைந்து கொண்டிருக் கும் தேசியவாதத்தின் தவிர்க்க முடியாத விளைவுதான் இது என்பதை இதரநாடுகளின் அனுபவம் நமக்குக் காண்பிக்கும் போது அவர்களது அனுபவத்திலிருந்து நாம் ஏன் பயனடையக் கூடாது? இந்தியாவைப் பாகிஸ்தானென்றும் இந்துஸ்தான் என்றும் பிரிப்பதற்கு ஒப்புக்கொள்வதன் மூலம் பேரழிவை நாம் ஏன் தவிர்க்கக்கூடாது? ஒரு சுதந்தர மக்களாக வாழ்க்கைப்பாதையில் நடைபோடுவதற்கு முன்னர் இந்தியாவை இரண்டாகப் பிரிப்ப தற்கு இந்துக்கள் ஒப்புக்கொள்ள மறுப்பார்களேயானால் அவர்கள் துருக்கி, செக்கோஸ்லோவாகியா மற்றும் பல இதர நாடுகள் அடைந்த நிலைக்கே தள்ளப்படுவார்கள் என்ற எச்சரிக்கையை அவர்கள் மனதில் கொள்ளட்டும். நடுக்கடலில் கப்பல் கவிழ்ந்து விடுவதைத் தவிர்க்க அவர்கள் தேவையற்ற சரக்குகளை கடலில் வீசிஎறிந்து கப்பலின் எடையைக் குறைக்கவேண்டும். அவர்கள்

-பேராசிரியர் டோயன்பியின் சொற்களில் கூறுவதெனில் - தேவையற்ற , எளிதில் தீப்பற்றக்கூடிய சரக்குகளை எறிந்துவிடுவதன் மூலம் தங்களது கடல்பயணத்தின் போக்கை எளிதாக்கிக் கொள்ள முடியும்.

## V

இந்தியாவைப் பாகிஸ்தான் என்றும் இந்துஸ்தான் என்றும் இரண்டாகப் பிரிப்பதற்கு இந்துக்கள் ஒப்புக்கொள்வார்களேயானால் அவர்களுக்கு இழப்பு ஏற்படுமா?

மூனிக் உடன்படிக்கையின் காரணமாகத் தங்களது பிரதேசத்தை இழந்தது குறித்து செக்கோஸ்லோவாகியா அரசாங்கத்தின் உண்மையான உணர்வுகளை மனதில் கொள்வது நலம் பயக்கும். செக்கோஸ்லோவாகிய மக்களுக்கு விடுக்கப்பட்ட செய்தியில் செக்கோஸ்லோவாகியப் பிரதமர் கூறிய கருத்துகளில் அவை மிகத் தெளிவாகப் புலப்படுகின்றன. அச்செய்தியில் அவர் கூறியதாவது[1]:

> ''பிரஜைகளே, போர்வீரர்களே... எனது வாழ்வின் மிகக் கடினமான காலகட்டத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். மிகத் துயரமளிக்கும் கடமையை நான் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறேன். அதை ஒப்பிடுகையில் மரணமே எளிதானதாக இருக்கும்போல் தெரிகிறது. நான் யுத்த களத்தில் போரிட்டிருக்கிறேன், எத்தகைய சூழ்நிலைகளில் போரில் வெற்றி கொள்ள முடியும் என்பதை நானறிவேன். ஆகையால் மனந்திறந்து உங்களுக்குக் கூற விரும்புவதெல்லாம்.... இத்தருணத்தில் நமக்கு எதிராக உள்ள சக்திகள் நம்மை அவர்களுடைய மேலான பலத்தை அங்கீகரிக்கவேண்டும் என்றும், அதற்கேற்றபடி செயல்பட வேண்டும் என்றும் நம்மைக் கட்டாயப் படுத்துகின்றன.....
>
> ''மூனிக்கில் நான்கு ஐரோப்பிய வல்லரசுகள் சந்தித்து புதிய எல்லைகளை ஏற்றுக்கொள்ளுமாறு நம்மைக் கோரமுடிவு

1. அலெக்சாண்டர் ஹென்டர்சன் - செக்கோஸ்லோவாகியாவில் நேரடி சாட்சி (ஹர்ராப், 1939) பக். 229 - 230.

செய்துள்ளன. அதன்படி நமது அரசின் ஜெர்மன் பகுதிகள் நம்மிடமிருந்து பறிக்கப்படும். மூர்க்கத்தனத்திற்கும் நம்பிக்கை யற்ற தற்காப்புக்கும் இடையில் நாம் தேர்வு செய்துகொள்ள வேண்டியதாயிற்று. இல்லாவிடில் நாம் வயதுவந்த தலைமுறை யினரை மட்டுமன்றி பெண்களையும் குழந்தைகளையும் பலி கொடுத்திருப்போம். ஆகவேதான் ஈவுஇரக்கமற்ற நிபந்தனை களை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. ஏனெனில் அவை போரின்றி நம்மீது நெருக்குதல் மூலமாகத் திணிக்கப்பட்டது. இச்செயலுக்கு வரலாற்றில் ஈடுஇணையே கிடையாது. நாம் அமைதிக்குப் பங்களிப்பாற்ற விரும்பினோம்: நாம் மகிழ்ச்சி யுடன் அதை ஏற்றுக்கொண்டிருப்போம். ஆனால் நம்மீது கட்டாயமாகத் திணிக்கப்பட்டவிதத்தின் வகையிலும் அதை நாம் ஏற்றுக்கொண்டிருக்க மாட்டோம்.

''ஆனால் நாம் அனைவராலும் கைவிடப்பட்டு தனிமைப் படுத்தப்பட்டோம்... உணர்ச்சிவசப்பட்ட உங்கள் தலைவர்கள் அனைவரும், ராணுவத்துடனும் குடியரசின் ஜனாதிபதியுடனும் கலந்தாலோசித்து நம்வசமுள்ள எல்லா சாத்தியக்கூறுகளை யும் ஆய்வு செய்தோம். குறுகிய எல்லைகளுக்கும் தேசத்தின் மரணத்திற்கும் இடையில் தேர்வு செய்யும்போது நமது மக்களின் உயிர்களைக் காப்பது தங்களது புனிதக் கடமை என்பதை அவர்கள் அங்கீகரித்தனர், கடந்த காலத்தில் அடிக்கடி நிகழ்ந்ததுபோல், மீண்டும் நமது நாடு பலம்பெற்று நிமிர்ந்து நிற்கும் என்று நிச்சயமாக நம்புகிறோம். தனது புதிய எல்லை களுக்குள் நமது அரசு புத்துயிர் பெற்று எழுவதைக் காணவும், நமது மக்களுக்குப்புதிய அமைதியான வாழ்வையும் பயனுள்ள உழைப்பையும் உறுதிசெய்யப்படுவதைக் காணவும் நாம் பாடுபடுவோமாக. உங்களுடைய உதவியுடன் நாம் முன்னேறு வோம். நாங்கள் உங்களை நம்புகிறோம். நீங்கள் எங்கள் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள்.''

வரலாற்று ரீதியான உணர்ச்சிகளின் சக்தியால் வழிநடத்திச் செல்லப்படுவதற்குச் செக்குகள் மறுத்துவிட்டனர் என்பது தெளி வாகிறது. தங்களது மக்கள் அழிக்கப்படுவதற்குப் பதிலாக அவர்கள் குறுகிய எல்லைகளையும் அளவில் சிறிய செக்கோஸ்லோவாகி யாவையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தனர்.

செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கில் பிரிட்டிஷ் தூதருடன் உரையாடிக் கொண்டிருக்கையில் ஜார்முதலாம்நிக்கொலாஸ் 1883ல் தெரிவித்த

கருத்துதான் துருக்கி சம்பந்தமாக அப்போது நிலவிவந்த கருத்தாக இருந்தது. ஜார் மன்னர் கூறியதாவது: ''நம்மிடம் ஒரு நோயாளி. பெருநோயாளி இருக்கிறார்... அவர் திடீரென்று நம் கரங்களிலேயே உயிரை விடக்கூடும்.'' அந்த நாள் முதல் துருக்கியின், ஐரோப்பாவின் நோயாளியின் மரணத்தை அதன் அண்டை நாடுகளெல்லாம் எதிர்பார்த்துக்கொண்டிருந்தன. அதன் பிரதேசங்கள் ஒவ்வொன்றாகக் குறைந்து கொண்டிருந்தது. ஓர் இறந்த மனிதன் வலிப்பைப் போன்றும், அவர் சேவ்ரெஸ் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு விட்டு மரணடைந்தது போன்றும் கருதப்பட்டது.

இத்தகைய கலைப்பு நிகழ்வுப்போக்கில் துருக்கியைப் பற்றி மேற்கொள்ளும் ஒரு சரியான கண்ணோட்டமாக இது இருக்குமா? இக்கருத்து குறித்து அர்னால்டு டாயின்பியின் கருத்தைத் தெரிந்து கொள்வது உபயோகமாக இருக்கும். துருக்கியை ஒரு நோயாளி என்றும் அவர் திடீரென்று மரணமடையக் கூடும் என்றும் விவரித்த ஜார் மன்னரின் கூற்றைப் பற்றி அவர் கூறுவதாது;[1]

> ''தமது நோயறிதல் முயற்சியின் இந்த இரண்டாவது மற்றும் கூடுதல் பரபரப்பான பகுதியில் ஜார் மன்னர் நிக்கொலாஸ் வழிதவறிச் சென்றுவிட்டார். ஏனெனில் அவர் அறிகுறிகளின் தன்மையை புரிந்து கொள்ளவில்லை. இயற்கையின் வரலாற்றை முற்றிலும் அறியாத ஒரு நபர் ஒரு பாம்பு அதன் தோலை உரித்துக் கொள்ளும் காட்சியைப் பார்த்தாரேயானால், அப்பிராணி உயிர் பிழைக்காது என்று வரட்டுத்தனமாகக் கூறத்தான் செய்வார். ஒரு மனிதனுக்கு (அல்லது இதர பாலூட்டி) தனது தோலை இழக்கும் துர்பாக்கியம் நேரும்போது அவன் உயிர்பிழைத்ததாகத் தெரியவில்லை என்றும் அவர் சுட்டிக்காட்டலாம். ஆயினும் ஒரு சிறுத்தைப் புலி தனது தோலில் உள்ள புள்ளிகளை மாற்றவோ அல்லது எதியோப்பிய நாட்டவர் தனது தோலின் நிறத்தை மாற்றிக் கொள்ளவோ முடியாது என்பது முக்காலும் உண்மையாக இருக்கும். அதேவேளையில் அவர் தீவிரமாக ஆய்வு செய்திருந்தால் நமது அமெச்சூர் இயற்கையியலாளருக்கு ஒரு பாம்பு தோலை உரித்துக்கொண்டு உயிர்வாழவும், வழக்கமாக இரண்டையும் செய்யவும் அதனால் முடியும் என்பது தெரிய

1. அர்னால்டு டாயின்பி - 'துருக்கி', பக்கம். 141.

வந்திருக்கும். ஒரு பாம்புக்குக் கூட இந்த நிகழ்வுப் போக்கு அருவருப்பான, மகிழ்ச்சியற்ற நிகழ்வுப்போக்குதான் என்பதில் ஐயமில்லை. அது தற்காலிகமாக உணர்ச்சியற்றுப் போகிறது. இந்த நிலைமையில் அது ஆபத்தானமுறையும் தனது எதிரி களின் தயவில் இருக்கிறது. ஆயினும் அது தனது உருமாற்றம் முழுமையடையும் வரை பருந்துகளிடமிருந்தும் காகங்களிட மிருந்தும் தப்பிக்குமானால் அது தனது உடல் நலத்தைத் திரும்பப் பெறுவதுடன் தனது இளமையையும் புதுப்பித்துக் கொள்கிறது, தனது அழியக்கூடிய தோலையும் திரும்பப் பெறுகிறது. இதுதான் துருக்கியர்களின் அண்மைக்கால அனுபவம், 'தோலுரிக்கும் பாம்பு'' என்பது நோயாளி மனிதன் என்பதைவிட சிறந்த உதாரணமாகும்.''

இக்கண்ணோட்டத்தில் துருக்கியின் இந்த நிலப்பகுதி களின் இழப்பானது தேவையற்ற கழிவுத்தோல் உரிந்து புதிய தோலைப் பெறுவது போன்றதாகும். நிச்சயமாக துருக்கி ஒரே சீரான தாக இருக்கும். உள்ளிருந்து சீர்குலைக்கப்படும் எந்த பயமும் இல்லை.

முஸ்லீம் பகுதிகள் இந்துஸ்தானத்தின் களையப்பட வேண்டிய கழிவுப்பொருள் போன்றதாகும். அதேபோன்று இந்துஸ் தானமும் அவர்களுக்கு தேவையற்றதுதான். அந்த இரண்டும் இணைந்துள்ள நிலையில் அவை இந்தியாவை ஆசியாவின் நோயாளியாக ஆக்கிவிடும். இரண்டும் ஒன்றாக இணைக்கப்பட் டிருக்குமானால் அது இந்தியாவை ஒரு முரண்பட்ட அமைப்பாக்கி விடும். பாகிஸ்தான் இந்தியாவின் சிலபகுதிகளைத் துண்டித்து விடும் குறையைக் கொண்டிருந்தாலும் அது மோதலுக்குப் பதில் இணக்கத்தை அறிமுகப்படுத்தும் குணத்தையும் கொண்டுள்ளது.

இரண்டாகப் பிரிக்கப்படும்போது ஒவ்வொன்றும் ஒரு கூடுதல் முரணற்ற அமைப்பாக மாறிவிடுகின்றன. இந்த இரு பகுதி களின் முரணற்றதன்மை மிகத் தெளிவானது. ஒவ்வொன்றும் ஒரு கலாசார ஒற்றுமையைக் கொண்டிருக்கிறது. ஒவ்வொன்றும் ஒரு மத ஒற்றுமையைக் கொண்டிருக்கிறது. பாகிஸ்தான் ஒரு மொழி சார்ந்த ஒற்றுமையைக் கொண்டுள்ளது. இந்துஸ்தானில் அத்தகைய ஒற்றுமை இல்லாதிருக்குமானால், பொதுவான மொழியாக இருக்கப் போவது இந்துஸ்தானியா, ஹிந்தியா அல்லது உருதுவா என்பதை எந்த ஒரு கருத்து வேறுபாடுமின்றி ஒற்றுமையை ஏற்படுத்திக்

கொள்வது சாத்தியமே. தனித்தனியாக இருக்கும்போது ஒவ்வொன்றும் ஒரு வலுவான நன்கு பிணைக்கப்பட்ட அரசுகளாக மாறமுடியும். இந்தியாவுக்கு ஒரு வலுவான மத்திய அரசு வேண்டும். ஆனால் இந்தியாவின் ஒருபகுதியாகப் பாகிஸ்தான் இருக்கும்வரை இந்தியா ஒரு வலுவான மத்திய அரசைக் கொண்டிருக்க முடியாது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் பொறிக்கப்பட்டுள்ளபடி சமஷ்டி அரசாங்கத்தின் கட்டமைப்பை ஒப்பிட்டுப் பார்த்தால், அதன்படி உருவாக்கப்பட்ட மத்திய அரசாங்கம் வலுவிழந்த கலகலத்துப் போன, ஜீவனற்ற அரசாங்கம் என்பது தெரியவரும்.[1] ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பட்டது போல மத்திய அரசாங்கத்தை வலுவிழக்கச் செய்வது, தன்மையிலும் அமைப்பிலும் மத்திய அரசாங்கமானது பெரும்பான்மையினராக இந்துக்களைக் கொண்டிருக்கும் என்ற அடிப்படையில் மத்திய அரசாங்கத்தின் அதிகார வரம்பிலிருந்து விடுபட்டு சுதந்திரமாக இருக்க விரும்பும் முஸ்லீம் பிரதேசங்களை இணைக்கச் செய்யும் ஆர்வத்தினால் ஏற்பட்டதாகும். பாகிஸ்தான் உருவாகும்போது இந்தக் கருத்துக்கள் வலுவிழந்துபோகும். அப்போது இந்துஸ்தான் ஒரு வலுவான மத்திய அரசாங்கத்தையும் இணக்கமான மக்களையும் கொண்டிருக்க முடியும். இது அரசின் ஸ்திரத்தன்மைக்கு அத்தியாவசியமான கூறுகளாகும். இந்துஸ்தானிலிருந்து பாகிஸ்தானை பிரிக்காத வரையில் இந்த இரண்டுமே சாத்தியமில்லை.



1. இந்த விஷயம் குறித்து மேலும் விபரங்களுக்குச் 'சமஷ்டியும் சுதந்திரமும்' என்ற எனது ஆய்வுக் கட்டுரையைக் காண்க.

## பகுதி IV

# பாகிஸ்தானும் நாட்டைப் பீடித்துள்ள பிணியும்

இந்து-முஸ்லீம் பிரச்சினை இரண்டு அம்சங்களைக் கொண்டது. முதல் அம்சத்தில் அடங்கியுள்ள பிரச்சினை என்ன? இரு தனித்தனி சமூகங்கள் ஒருபுறம் ஒன்றையொன்று எதிர்த்து வரிந்து கட்டிக்கொண்டு நிற்கின்றன; இன்னொருபுறம் அவ்விரு சமூகங்களும் தத்தமது உரிமைகளையும் தனிச் சலுகைகளையும் சரி செய்து கொள்வதில் தீவிர மும்முரம் காட்டி வருகின்றன; இதுதான் முதல் அம்சத்தில் தொக்கி நிற்கும் பிரச்சினை. சரி, இனி அடுத்த அம்சத்தில் பொதிந்துள்ள பிரச்சினை என்னவென்று பார்ப்போம். இந்த இரு சமூகங்களிடையே நிலவும் பிளவும், முரண்பாடுகளும், மோதல்களும் பரஸ்பரம் இரு சமூகங்களையுமே பாதிக்கின்றன; இதுவே இதிலுள்ள பிரச்சினை. முந்தைய பக்கங்களில் நாம் மேற்கொண்ட விவாதத்தில், இந்த முதலாவது அம்சத்தின் பின்னணியில் பாகிஸ்தான் கோரிக்கையைப் பரிசீலித்தோம். ஆனால் இந்தப் பிரச்சினையின் இரண்டாவது அம்சத்தின் பகைப்புலனில் பாகிஸ்தான் கோரிக்கையை நாம் ஆராயவில்லை. இத்தகைய ஆய்வு அவசியம் என்பதில் ஐயமுமில்லை; ஏனென்றால் இந்து-முஸ்லீம் பிரச்சினையின் இந்த அம்சம் எவ்வகையிலும் குறைந்த முக்கியத்துவமுடையதன்று. இவ்விரு சமூகங்களும் தமது கோரிக்கைளைச் சீரமைவு செய்து கொள்ளும் பிரச்சினையைப் பரிசீலிப்பதோடு நின்றுகொண்டுவிடலாம் என்று சிலர் கருதுகின்றனர். இதனை அரைகுறையான கருத்து என்று கூறுவதற்கில்லை என்றாலும், ஆழமற்ற மேம்போக்கான கருத்து என்று நிச்சயமாகக் கூறலாம். இந்த இரு சமூகங்களின் நிலைமையில் கதிப்போக்கும் பின்னி பிணைந்துள்ளன. இத்தகைய நிலைமையில் அவை விரும்பினாலும் விரும்பா விட்டாலும் குறிப்பிட்ட பொதுநடவடிக்கைகளில் அவை ஈடுபட்டுத்தான் ஆகவேண்டியுள்ளது. இந்தப் பொது நடவடிக்கைகளில் அவை இரண்டு போர்வீரர்கள் போல் ஒன்றை ஒன்று எதிர்த்து நிற்குமாயின், அப்போது அவற்றின் செயல்களும் எதிர்ச்செயல்களும் ஆய்வுக்குரியவையாகிவிடுகின்றன; ஏனென்றால் அவை இரு தரப்புகளையுமே பாதிக்கின்றன; இது மரணக்

கட்டத்திற்குக் கொண்டுபோய் விடுமாயின், அதிலிருந்து தப்பும் பிரச்சினையை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். நிலைமையை ஆராயும்போது, இந்தச் செயல்களும் எதிர்ச்செயல்களும் ஓர் ஆரோக் கியமற்ற நிலையைத் தோற்றுவித்திருப்பது தெள்ளத்தெளிவாகப் புலனாகிறது; இது பின்வரும் மூன்று வழிகளில் தன்னை வெளிப் படுத்திக் கொண்டுள்ளது; 1. சமூகத் தேக்கநிலை, 2. வகுப்புவெறி, 3. அரசியல் எதிர்காலம் குறித்து தேசிய அளவில் ஏமாற்றம். இந்த நோய் மிகவும் கடுமையானது. பாகிஸ்தான் உருவாவது இந்த நோய்க்குப் பரிகாரமாக, மருந்தாக இருக்குமா? அல்லது இது நோயை மேலும் தீவிரமாக்குமா? பின்வரும் அத்தியாயங்களில் இந்தப் பிரச்சினைகள் ஆழமாக, விளக்கமாக, விரிவாக ஆராயப் பட்டுள்ளன.



# இயல் 10

# சமூகத் தேக்க நிலை

## I

இந்து சமுதாயத்தைப் பீடித்துள்ள தீங்குகள் எல்லோருக்கும் தெரிந்தவை. மிஸ் மேயோ எழுதியுள்ள **மதர் இந்தியா** என்னும் நூல் இந்தத் தீமைகளை மிகவும் வெளிச்சம் போட்டு காட்டியிருக்கிறது. இவ்வாறு **மதர் இந்தியா** இந்து சமுதாயத்தின் சீர்கேடுகளை அம்பலப் படுத்தி, அவற்றுக்குக் காரணமானவர்களை உலகக் குற்றக்கூண்டில் ஏற்றியிருந்த போதிலும், அது உலகெங்கும் ஒரு துரதிருஷ்டமான தப்பெண்ணத்தைத் தோற்றுவித்திருக்கிறது: அதாவது 'இந்துக்கள் தான் சமூகத்தீமைகள் என்னும் ஆழ்சேற்றில் அமிழ்ந்துபோயுள்ள கடைந்தெடுத்த மிதவாதிகள், ஆனால் முஸ்லீம்கள் அப்படியல்ல, இத்தகைய தீங்குகளிலிருந்து அவர்கள் விடுபட்டவர்கள், இந்துக் களுடன் ஒப்பிடும்போது அவர்கள் முற்போக்கு மனோபாவம் கொண்ட மக்கள் என்னும் தவறான எண்ணத்தை, மாயையை இந்த நூல் பரப்பியிருக்கிறது. இத்தகைய ஒரு பொய்த்தோற்றம் நிலவும் நிலைமையில், இந்தியாவிலுள்ள முஸ்லீம்களைப் பற்றி மிக நன்றாக, நெருக்கமாக, நுணுக்கமாகத் தெரிந்தவர்களை இது மிகுந்த வியப்புக்குள்ளாக்கி இருக்கிறது.

இந்துக்களிடம் காணப்படுகின்ற ஆனால் முஸ்லீம்களிடம் காணப்படாத சமூகத் தீமை ஏதேனும் உண்டா என்று எவரும் கேட்கக் கூடும்; முற்றிலும் நியாயமான கேள்வி.

பால்ய விவாகங்களை அதாவது உலகம் தெரியாத வயதிலேயே சின்னஞ்சிறு குழந்தைகளுக்குத் திருமணம் செய்துவைக்கும் கொடிய பழக்கத்தை எடுத்துக் கொள்வோம். இதில் நாம் என்ன காண்கிறோம்? அனைத்திந்திய மாதர் மாநாடு என்னும் பெண்கள் அமைப்பு குழந்தைகள் திருமணங்களைப் பற்றி விசாரித்தறிய ஒரு குழுவை அமைத்தது. குழந்தைத் திருமண எதிர்ப்புக் குழு என்பது அதன் பெயர். அக்குழுவின் செயலாளர் தகவல் அறிவிப்பு வெளியீடு ஒன்றை வெளியிட்டார். இந்தியாவில் பல்வேறு சமூகங்களிடையே குழந்தைத் திருமணம் என்னும் கொடுமை, சாபக்கேடு எந்த அள வுக்குப் பரவியிருக்கிறது என்பதை அந்தப் பிரசுரம் துலாம்பரமாக

அம்பலப்படுத்துகிறது. 1931ஆம் வருட குடிமதிப்புக் கணக்கு அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்ட புள்ளிவிபரங்களைக் கீழே தந்துள்ளோம்.

**அட்டவணை**

**ஒவ்வொரு 1000 பெண்பாலர்களில் 0-15 வயதில் திருமணமானவர்கள்**

| ஆண்டு | இந்துக்கள் | முஸ்லிம்கள் | ஜைனர்கள் | சீக்கியர்கள் | கிறித்தவர்கள் |
|---|---|---|---|---|---|
| 1881 | 208 | 153 | 189 | 170 | 33 |
| 1891 | 193 | 141 | 172 | 143 | 37 |
| 1901 | 186 | 131 | 164 | 101 | 38 |
| 1911 | 184 | 123 | 130 | 88 | 39 |
| 1921 | 170 | 111 | 117 | 72 | 32 |
| 1931 | 199 | 186 | 125 | 80 | 43 |

குழந்தைத் திருமணங்களைப் பொறுத்தவரையில் முசல்மான்களின் நிலைமை இந்துக்களின் நிலைமையைவிட மேம்பட்டு இருப்பதாகக் கருதமுடியுமா?

பெண்கள் நிலைமையை எடுத்துக்கொள்ளுங்கள். இது பற்றி முஸ்லீம்கள் என்ன சொல்லுகிறார்கள்? எங்கள் சமுதாயத்தில் பெண்களுக்கு சட்டரீதியான உரிமைகள் பலவற்றை வழங்கியிருக்கிறோம், இதர கிழக்கிந்திய பெண்களைவிடவும், உதாரணமாக இந்துப் பெண்களைவிடவும் அதிக சுதந்திரத்தை இந்த உரிமைகள் எங்கள் பெண்களுக்கு உத்தரவாதம் செய்கின்றன. இன்னும் சொல்லப்போனால் மேற்கத்திய நாடுகளில் உள்ள பெண்களைப் பார்க்கிலும் கூட எங்கள் பெண்கள் அதிக உரிமைகளை அனுபவிக்கின்றனர் என்று முஸ்லீம்கள் சாதிக்கிறார்கள், வலியுறுத்திக் கூறுகிறார்கள். முஸ்லீம் சட்டத்திலுள்ள சில விதிகள் இதற்கு ஆதாரமாகக் காட்டப்படுகின்றன.

முதலாவதாக, முஸ்லீம் சட்டம் திருமணத்துக்கு எத்தகைய வயது வரம்பையும் நிர்ணயிக்கவில்லை, ஓர் இளம்பெண் எந்த சமயத்திலும் திருமணம் செய்துகொள்ளும் உரிமையை அது அங்கீகரிக்கிறது. மேலும், தந்தையோ அல்லது பாட்டனாரோ முன்னின்று நடத்தும் திருமணங்கள் தவிர மற்றபடி ஒரு முஸ்லீம் கன்னிப்பெண் குழந்தைப் பருவத்தில் திருமணம் செய்யப்பட்டிருந்தால், பூப்புப் பருவம் எய்தியதும், அத்திருமணத்தை நிராகரிப்பதற்கு அவளுக்கு அதிகாரம் உண்டு.

இரண்டாவதாக, திருமணம் என்பது முஸ்லீம்களிடையே ஓர் ஒப்பந்தமாகக் கருதப்படுகிறது. இவ்வாறு திருமணம் ஓர் ஒப்பந்தமாக இருப்பதால், கணவன் தன்னுடைய மனைவியை விவாகரத்து செய்ய உரிமை பெற்றிருக்கிறான். அதே சமயம் முஸ்லீம் சட்டம் மனைவிக்கும் போதிய பாதுகாப்புகளை வழங்கியுள்ளது; அவற்றை அவள் பயன்படுத்திக்கொள்ளும் பட்சத்தில், விவாகரத்து விஷயத்தில் கணவனுக்குள்ள அதே உரிமை மனைவிக்கும் உண்டு. ஏனென்றால் முஸ்லீம் சட்டத்தின்படி திருமண சமயத்திலோ அல்லது சில சமயங்களில் அதற்குப் பின்னரோகூட மனைவி ஒரு வகையான ஒப்பந்தம் செய்து கொள்கிறார் என்றும், அதன்படி குறிப்பிட்ட சில சந்தர்ப்பங்களில் அவள் விவாகரத்து பெறமுடியும் என்றும் கூறப் படுகிறது.

மூன்றாவதாக, மனைவி தன்னை கணவனிடம் முழுக்க முழுக்க ஒப்படைத்துக் கொள்வதற்குப் பிரதியாக ஒரு குறிப்பிட்ட தொகையை அல்லது சொத்தை கணவனிடமிருந்து கோர மனைவிக்கு உரிமை உண்டு என்று முகமதிய சட்டம் கூறுகிறது. இது சீதனம் எனப்படுகிறது. இந்த சீதனத் தொகை திருமணத்திற்குப் பிறகும்கூட நிர்ணயிக்கப் படலாம். அவ்வாறு நிர்ணயிக்கப்படவில்லை என்றால் எப்படியும் உரிய சீதனம் பெற மனைவிக்கு உரிமைஉண்டு. சீதனத் தொகை பொதுவாக இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும்: ஒன்று ''உடனடியானது'', இத்தொகை உடனே தரப்படவேண்டும்; மற்றொன்று ''குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் தரப்படவேண்டியது'', அதாவது மரணத்தின் காரணமாகவோ அல்லது விவாகரத்து காரணமாகவோ மணஉறவு முறியும்போது இத்தொகை அளிக்கப்படவேண்டும். சீதன விஷயத்தில் மனைவிக்குள்ள உரிமை கணவரது சொத்தின்பேரில் வாங்கப்பட்ட கடனாகக் கருதப்படும். பொருளாதார விஷயத்தில் மனைவி தற்சார்புடையவளாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு உருவாக்கப்பட்ட இந்த சீதனச்சொத்தில் அவளுக்கு முழு அதிகாரம் உண்டு. அவள் அதை தள்ளுபடி செய்யலாம் அல்லது அதிலிருந்து கிடைக்கும் வருவாயை தன் விருப்பம்போல் பயன் படுத்திக் கொள்ளலாம்.

இத்தகைய அனுகூலமான சட்டவிதிகள் எல்லாம் இருந்த போதிலும் கூட, முஸ்லீம் பெண்மணி உலகிலேயே நிராதரவற்றவளாக இருந்து வருகிறாள். ஓர் எகிப்திய முஸ்லீம் தலைவர் பின்வருமாறு கூறுகிறார்:

''இஸ்லாம் தனது தாழ்வு முத்திரையை அவள்மீது பதித்துள்ளது; மதத்தின் ஆதரவு பெற்ற பழக்கவழக்கங்கள் காரணமாக

அவள் தனது உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் வெளியிடுவதற்கும், தனது ஆளுமையை வளர்த்துக்கொள்வதற்குமான முழு வாய்ப்பு அவளுக்கு அளிக்கப்படவில்லை.''

தான் குழந்தையாக இருந்தபோது தன்னுடைய பெற்றோர்களல்லாத மற்றவர்களால் ஏற்பாடு செய்து நடத்தப்பட்ட ஒரு திருமணத்தை நிராகரிக்கும் துணிவு எந்த முஸ்லீம் யுவதிக்கும் இல்லை. விவாகரத்து செய்யும் உரிமையைத் தனக்கு அளிக்கக்கூடிய ஒரு ஷரத்தை தனது திருமண ஒப்பந்தத்தில் சேர்ப்பது நலமாக இருக்குமே என்று எந்த முஸ்லீம் மனைவியும் நினைப்பதில்லை. இத்தகைய சந்தர்ப்பத்தில் அவளது கதிப்போக்கு ''ஒருமுறை திருமணம் செய்துகொண்டு விட்டால் என்றென்றைக்கும் திருமணமானவள்'' என்பதாக அமைந்துவிடுகிறது. எத்தகைய கடுமையாக இன்னல் இடுக்கண்கள், தாளமுடியாத கொடுமைக்கு உள்ளானாலும் திருமண பந்தத்திலிருந்து அவள் தப்பமுடியாது. அவள் திருமணத்தை நிராகரிக்க இயலாது; ஆனால் அதேசமயம் கணவனோ எத்தகைய காரணமுமின்றி, எப்போது வேண்டுமானாலும் விவாகரத்து செய்யலாம். இதற்கு அவன் செய்யவேண்டியதெல்லாம் ''தல்லாக்'' என்று கூறிவிட்டு, மூன்று வாரங்களுக்கு மனைவியுடன் உடலுறவு கொள்ளாதிருக்க வேண்டும். அவ்வளவுதான். அந்தப் பெண்ணைத் தூக்கியெறிந்து விடலாம். அவனது ஏறுமாறான நடத்தைக்கு குறுக்கே நிற்கும் ஒரே ஒரு விஷயம், சீதனத் தொகை தருவதற்கு அவன் கட்டுப்பட்டிருப்பதுதான். இந்தத் தொகை ஏற்கெனவே செலுத்தப்பட்டிருந்தால், எத்தகைய தடையுமின்றி தன் விருப்பம்போல் விவாகரத்து செய்துவிடலாம்.

கணவன் விவாகரத்து செய்யும் விஷயத்தில் காட்டப்படும் இந்தத் தாரளப்போக்கு ஒரு பெண்ணின் முழுநிறைவான, சுதந்திரமான, மனநிறைவு கொண்ட இன்பகரமான வாழ்க்கைக்குப் பெரிதும் ஆதார அடிப்படையாக அமைந்துள்ள பாதுகாப்பு உணர்வையே அழித்துச் சிதைத்துவிடுகிறது. அது மட்டுமல்ல, பலதார மணம் செய்துகொள்வதற்கும், இல்லக்கிழத்தி வைத்துக் கொள்வதற்கும் முஸ்லீம் சட்டம் கணவனுக்கு அளித்துள்ள உரிமையால் முஸ்லீம் பெண்ணின் நிலைமை மேலும் மோசமாகிறது; அவளது வாழ்க்கைக்குப் பாதுகாப்பின்மை முன்னிலும் பெரிதும் அதிகரிக்கிறது.

ஒரு முஸ்லீம் ஒரு சமயத்தில் நான்கு மனைவிகளைத் திருமணம் செய்துகொள்வதற்கு, வரித்துக் கொள்வதற்கு முகமதிய சட்டம் அனுமதிக்கிறது. ஒரு இந்து ஒரு சமயத்தில் எத்தனை மனைவி

களைக் கொண்டிருக்கலாம் என்று இந்துச் சட்டம் எவ்வகையிலும் வரையறுத்துக் கூறவில்லை. இதனுடன் ஒப்பிடும்போது முஸ்லீம் சட்டம் எவ்வளவோ மேல் என்று வாதிடப்படுகிறது. ஆனால் சட்டபூர்வமான நான்கு மனைவிகளுடன் மட்டுமன்றி தன்னுடைய பெண் அடிமைகளுடனும் ஒரு முஸ்லீம் கூடி வாழ்வதையும் முஸ்லீம் சட்டம் அனுமதிக்கிறது என்பதை இங்கு மறந்துவிடக்கூடாது. அதிலும் பெண் அடிமைகள் விஷயத்தில் அவர்களது எண்ணிக்கை எதுவும் குறிப்பிடப்படவில்லை என்பதையும் இங்கு கவனத்தில் கொள்ளவேண்டும். எத்தகைய கட்டுப்பாடுமின்றி, அவர்களைத் திருமணம் செய்துகொள்ள வேண்டு மென்ற நிர்ப்பந்தம் ஏதுமின்றி முஸ்லீமுடன் கூடிவாழ்வதற்கு அவர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள்.

பலதார மணமுறையாலும், சட்டபூர்வமாகக் காமக் கிழத்திகளை வைத்துக்கொள்ளும் முறையாலும் ஏற்படும் எத்தனை எத்தனையோ தீமைகளையும், மிகப்பெரும் பாதகங்களையும் விவரிப்பதற்குச் சொற்களே இல்லையெனலாம். அதுவும் ஒரு முஸ்லீம் பெண்ணுக்கு இதனால் ஏற்படும் இரங்கத்தக்க அவலநிலை சொல்லத் தரமன்று. பலதார மணமுறையும் காமக்கிழத்திகளை வைத்துக் கொள்ளும் முறையும் அனுமதிக்கப்பட்டிருப்பதால் விதி விலக்கின்றி எல்லா முஸ்லீம்களுமே இதில் ஈடுபட்டிருக்கின்றனர் என்று பொதுப் படையான முறையில் கூறிவிட முடியாது என்பது உண்மையே. எனினும் ஒரு முஸ்லீம் இந்த உரிமைகளை, சலுகைகளை சுலபமாகப் பயன்படுத்திக் கொண்டு தனது மனைவிக்கு துன்பத்தையும் துயரத்தையும் தொல்லைகளையும் அவலநிலையையும் ஏற்படுத்தும் வாய்ப்பு இருக்கவே செய்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது. திரு.ஜான் பூல் என்பவர் இஸ்லாமின் விரோதியல்ல. அவர் கூறுகிறார்.[1]

> ''விவாகரத்து விஷயத்தில் கடைப்பிடிக்கப்படும் இந்த வரம்பற்ற, கட்டுப்பாடற்ற போக்கை சில முகமதியர்கள் தங்கள் சுயநலத்துக்கு மிகப் பெருமளவுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இந்த விஷயம் குறித்து இஸ்லாமும் அதன் நிறுவகரும் எனும் தமது நூலில் கருத்துத் தெரிவித்துள்ள ஸ்டோபர்ட் பின்வருமாறு கூறுகிறார்: 'தொடர்ச்சியாக தங்கள் மனைவிமார்களை மாற்றுவதை சில முகமதியர்கள் ஒரு பழக்கமாகவே கொண்டுள்ளனர். இருபது, முப்பது மனைவிகளை ஏற்கெனவே

1. முகமதினிஸத்தைப் பற்றிய ஆய்வு. பக்கங்கள் 34-35

வரித்துக் கொண்டிருப்பதுடன் திருப்தி கொள்ளாமல், மூன்று மாதத்திற்கு ஒருமுறை ஒரு புதிய மனைவியை அடைகின்ற இளைஞர்களைப்பற்றி நாம் படிக்கிறோம். இவ்வாறு பெண்கள் வரைமுறையின்றி ஒருவனிடமிருந்து இன்னொருவனுக்கு மாறிக்கொண்டிருப்பதால் எங்கு ஒரு கணவனும் வீடும் கிடைத்தால் அவனை ஏற்றுக்கொள்ளும் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகிறார்கள் அல்லது விவாகரத்து செய்யப்பட்டுவிட்ட நிலைமையில் ஜீவனத்துக்கு வேறுவழியின்றி கீழ்த்தரமான வழிகளில் ஈடுபடும்படியான நிலைக்கு உள்ளாகிறார்கள். ஒரு முஸ்லீம் ஒரு சமயத்தில் நான்கு மனைவிகளைத் திருமணம் செய்துகொள்ள முகமதிய சட்டம் அனுமதிப்பதோடு, தான் விரும்பும் போதெல்லாம் விவாகரத்து செய்யலாம் என்றும் இருப்பதால் நடைமுறையில் அவன் தன் ஆயுட்காலத்திற்குள் எத்தனை மனைவிகளை வேண்டுமானாலும் அடைந்து இன்புற்றிருக்க முடியும்.

''ஒரு முகமதியன் முஸ்லீம் சட்டத்தை மீறாமல் நான்குக் கும் அதிகமான மனைவிகளை அடைவதற்கு வேறொரு வழியும் இருக்கிறது. அதுதான் இல்லக்கிழத்திகளுடன் கூடி வாழ்வதாகும். குரான் இதனை அனுமதிக்கிறது. நான்கு மனைவி களை திருமணம் செய்து கொள்ளலாம் என்று கூறப்பட்டிருக்கும் **சூரா**வில் ''இத்துடன் நீ அடிமைப்பெண்களுடனும் கூடி வாழ லாம்'' என்னும் சொற்கள் இடம் பெற்றிருக்கின்றன. அடிமை களுடன் சுகித்து வாழ்வது பாபமல்ல என்று 70 ஆவது **சூரா** வில் மிகத் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. பண்டை நாட்களைப் போலவே இன்றும் எண்ணற்ற முகமதிய குடும்பங்களில் அடிமைகள் காணப்படுகிறார்கள்; **முகமதின் வாழ்க்கை** என்ற தமது நூலில் முய்ர் பின்வருமாறு கூறுகிறார்: 'இவ்விதம் தங்களுடைய அடிமைகளுடன் கூடி வாழ்வதற்கு தங்கு தடையின்றி அனுமதி வழங்கப்படும்வரை முகமதிய நாடுகளில் அடிமைத்தனத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க எத்தகைய மனப் பூர்வமான முயற்சியும் மேற்கொள்ளப்படும் என்று எதிர்பார்க்க முடியாது. இவ்வாறு இந்த அடிமைத்தனம் விஷயத்தில் குரான் மனித குலத்தின் எதிரியாக இருந்து வருகிறது. இதனால் வழக்கம்போல் பெண்கள்தான் மிகப்பெரும் பாதிப்புக்கு உள்ளாகி இருக்கிறார்கள்.'

இனி அடுத்து சாதிமுறையை எடுத்துக்கொள்வோம். சகோதரத் துவத்தைப் பற்றி இஸ்லாம் பேசுகிறது. இதைக் கொண்டு, அடிமைத் தன முறையிலிருந்தும், சாதிமுறையிலிருந்தும் விடுபட்ட சமயமாக பலரும் இஸ்லாமைக் கருதுகிறார்கள். இவற்றில் அடிமைத்தனத்தைப் பற்றி எதுவும் சொல்ல வேண்டியதில்லை. இப்போது அது சட்ட ரீதியாக ஒழித்துக்கட்டப்பட்டுவிட்டது. ஆனால் அது நடைமுறை யிலிருந்து வந்தபோது இஸ்லாமிடமிருந்தும் இஸ்லாமிய நாடுகளிட மிருந்தும்தான் அதற்குப் பெரும் ஆதரவு கிடைத்துவந்தது.[1] அடிமை களை நியாயமாகவும், நேர்மையாகவும், மனிதாபிமானத்தோடும் நடத்தவேண்டும் என்று குரானில் கூறப்பட்டிருக்கிறது. இது பாராட்டு தற்குரியது என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த சாபக்கேட்டை, சாபத்தீட்டை ஒழித்துக்கட்டுவதற்கு ஆதரவளிக்கக்கூடிய எதுவும் இஸ்லாமில் காணப்படவில்லை. சர் டபிள்யூ. முய்ர் பின்வருமாறு கூறுகிறார்.[2]

'' .... இன்னும் சரியாகச் சொல்லப்போனால் பயங்கர மின்னல் வெட்டும் சமயத்தில் அவன் கால் விலங்கை மேலும் இறுக் கினான்... தன்னுடைய அடிமைகளை விடுதலை செய்யவேண்டும் என்ற கட்டாயம் ஏதும் ஒரு முஸ்லீமுக்கு இல்லை.''

ஆனால் பிற்காலத்தில் அடிமைத்தனம் மறைந்தொழிந்தாலும் முசல்மான்களிடையே சாதிமுறை நிலைத்துநின்றுவிட்டது. வங்க முஸ்லீம்களிடையே நிலவும் நிலைமையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். வங்காள மாகாணத்துக்கு 1901 ஆம் வருடம் குடிமதிப்புக் கணக்கெடுத்த கண்காணிப்பாளர் வங்காள முஸ்லீம்களைப் பற்றி பின்கண்ட சுவையான விவரங்களைக் கூறுகிறார்:

> ''பொதுவாக, முகமதியர்கள் ஷேக்குகள், சையத்துகள், மொகலாயர்கள், பட்டாணியர்கள் என நான்கு இன மரபுக் குழுக்களாகப் பிரிந்திருப்பதுதான் வழக்கம். ஆனால் இது வங்க மாகாணத்துக்குச் சிறிதும் பொருந்தாது. முகமதியர்கள் இரண்டு பிரதான சமூகப் பிரிவினைகளை ஒப்புக்கொள்கின் றனர்: 1. அஷ்ராஃப் அல்லது ஷராஃப் 2. அஜ்லாஃப் ஆகியவையே அவை. அஷ்ராஃப் என்பதற்கு ''உயர்குடிமகன்'' என்று பொருள்; ஐயத்துக்கிடமற்ற அயல்நாட்டு வழித்தோன்றல்களும், மேல்சாதி

1. மேற்படி நூல், அத்தியாயம் XXXIX
2. குரான் அதன் இயைபும், போதனையும், பக்கம்58

இந்துக்களிலிருந்து மதம் மாறியவர்களும் இப்பிரிவில் அடங்குவர். தொழில் புரிவோர் உட்பட இதர எல்லா முகமதியர்களும், கீழ்ச் சாதிகளிலிருந்து மதம் மாறியவர்களும் 'அஜ்லாஃபுகள்', 'ஈனர்கள்', 'இழிந்தவர்கள்', 'கடைகெட்டவர்கள்' என்பன போன்ற மிகவும் வெறுக்கத் தக்க பதங்களில் அழைக்கப்படுகின்றனர்; மேலும், காமினாக்கள், இதார்கள், கீழ்த்தரமானவர்கள், எத்தகைய தகுதியுமில்லாதவர்கள் என்றும் இவர்கள் அழைக்கப்படுவது உண்டு; ரசில் என்றும் இவர்களைக் கூறுவார்கள்; ரிஸால் என்னும் பதத்தின் மொழிச் சிதைவே ரசில் என்பது. சில இடங்களில் மூன்றாவது ஒரு பிரிவினர் இருக்கிறார்கள்; இவர்கள் அர்ஸால் எனப்படுகிறார்கள். 'அனைவரிலும் மிகத் தாழ்ந்தவர்கள்' என்று இதற்குப் பொருள். இவர்களுடன் எந்த முகமதியர்களும் சேர்ந்து பழகமாட்டார்கள்; இவர்கள் மசூதிகளில் நுழையவோ, பொது கல்லறைகளை அல்லது இடுகாடுகளை பயன்படுத்திக் கொள்ளவோ அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

"இந்துக்களிடையே காணப்படுவது போன்றே முஸ்லீம்களிடையேயும் சமுதாயத்தில் அவரவர்கள் வகிக்கும் அந்தஸ்தைப் பொறுத்து சாதி பாகுபாடுகள் தலைவிரித்தாடுகின்றன.

1. அஷ்ராஃப்கள் உயர்மட்டத்திலுள்ள முகமதியர்கள். இப்பிரிவைச் சேர்ந்தவர்கள் வருமாறு:

1. சையத்துகள்
2. ஷேக்குகள்
3. பட்டாணியர்கள்
4. மொகலாயர்கள்
5. மாலிக்குகள்
6. மிர்ஜாக்கள்

II. அஜ்லாஃப் என்பவர்கள் கீழ்மட்டத்திலுள்ள முகமதியர்கள். இவர்களில் பின்வரும் பிரிவினர் அடங்குவர்:

1) பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள ஷேக்குகளும் மற்றும் பூர்விகத்தில் இந்துக்களாக இருந்து மதம்மாறி அஷ்ராஃப் சமூகத்தில் இடம்பெறாத பிராலி, தக்ராய் போன்றவர்களும்.

2) தார்ஜி, ஜொலாஹா, பக்கீர், ரங்ரெஸ்

3) பர்ஹி, பாதியரா, சிக், சுரிஹார், தய், தவா, துனியா, காத்தி, கலால், கசய், குலா குஞ்சரா, லாஹரி, மஹிஃப்ரோஷ், மல்லா, நலியா, நிகாரி.

4) அப்தல், பாகோ, பெதியா, பாட், சாம்பா, தஃபாலி, தோபி, ஹஜ்ஜம், முச்சோ, நகர்ச்சி, நாத், பன்வாரியா, மதாரியா, துந்தியா.

III அர்ஸால் அல்லது மிகவும் கீழ்ப்படியில் இருக்கும் பிரிவினர்.
பனார், ஹலால்கோர், ஹிஜ்ரா, கஸ்பி, லால்பெகி, மௌக்தா, மெஹ்தார்.

முஸ்லீம் சமூக அமைப்பில் காணப்படும் மற்றோர் அம்சத்தையும் குடிமதிப்புக் கணக்குக் கண்காணிப்பாளர் குறிப்பிடுகிறார்; அவர்களிடம் மிகுந்த செல்வாக்கு பெற்றுள்ள ''பஞ்சாயத்து முறை'' தான் அது. அவர் கூறியதாவது:

''பஞ்சாயத்தின் அதிகாரம் சமூக விஷயங்களில் மட்டுமன்று வாணிகம் முதலான விஷயங்களிலும் செல்லுபடியாகும். இதர பிரிவுகளைச் சேர்ந்தவர்களுடன் திருமண உறவு கொள்வது ஒரு குற்றமாகக் கருதப்படுகிறது; பஞ்சாயத்து இதில் மிகுந்த கவனம் செலுத்தி உரியநடவடிக்கை எடுக்கிறது. இதன் விளைவாக இந்துக்களைப் போன்றே முஸ்லீம் பிரிவினரும் மிகப்பல சந்தர்ப்பங்களில் அகமணக் கட்டுப்பாட்டுக்கு மிகக் கண்டிப்பான முறையில் உட்படுத்தப்படுகின்றனர். இந்தக் கலப்பு மணத் தடை முஸ்லீம்களில் மேல்தட்டுப் பிரிவினருக்கும் அதே போன்று கீழ்த்தட்டுப் பிரிவினருக்கும் பொருந்தும். உதாரணமாக, ஒரு துமா இன்னொரு துமாவைத் தவிர வேறு எவரையும் திருமணம் செய்து கொள்ள முடியாது. இந்த விதி மீறப்படுமாயின் அவ்வாறு மீறும் குற்றவாளி உடனே வலுக்கட்டாயமாக பஞ்சாயத்தின் முன் கொண்டுவந்து நிறுத்தப்படுகிறான்; அவன் அவமானப் படுத்தப்பட்டு, அவமதிக்கப்பட்டு அவனது சமூகத்தில் இருந்து வெளியேற்றப்படுகிறான்; இத்தகையப் பிரிவைச் சேர்ந்த ஒருவன் சாதாரணமாக இன்னொரு பிரிவில் தன்னை இணைத்துக் கொள்ளமுடியாது; அவன் தனது வகுப்புக்குரிய தொழிலை கைவிட்டு, பிழைப்புக்காக வேறொரு தொழிலைக் கைக்கொண்டாலும், அவன் எந்தவகுப்பில் பிறந்தானோ அந்த வகுப்புக்குரிய சுட்டுப் பெயருடன்தான் இந்த சமுதாயத்தில் அவன்

நடமாடமுடியும். ஜொலாஹாக்கள் என்ற பதம் கசாப்புக் கடைக்காரர்களைக் குறிக்கும்; இவர்களில் ஆயிரக்கணக்கானோர் அந்தத் தொழிலை விட்டுவிட்டபோதிலும் இன்னமும் ஜொலாஹாக்கள் என்றே அழைக்கப்படுகின்றனர்.''

இந்தியாவின் இதர மாகாணங்களிலும் இதே போன்ற நிலையே நிலவுகிறது. இது சம்பந்தமான விவரங்களை அந்தந்த மாகாணங்களின் குடிமதிப்புக்கணக்கு அறிக்கைகளில் காணலாம். ஆர்வமுள்ளவர்கள் அவற்றைப் படிக்கலாம். இது எப்படியிருப்பினும் வங்காளம் நமக்கு என்ன உண்மையைப் புலப்படுத்துகிறது? முகமதியர்கள் சாதிமுறையைப் பின்பற்றுவதோடு தீண்டாமையையும் கைக்கொள்கின்றனர் என்பதையே அது காட்டுகிறது.

ஆக, இந்து சமுதாயத்தைப் பீடித்துள்ள அதே சமூகத் தீமைகள், கேடுகள் இந்தியாவிலுள்ள முஸ்லீம் சமுதாயத்தையும் பெரிதும் தொற்றிக்கொண்டுள்ளன என்பதில் எத்தகைய ஐயத்துக்கும் இடமில்லை. இன்னும் சொல்லப்போனால், முஸ்லீம்கள் இந்துக்களுக்குள்ள அனைத்துத் தீமைகளையும் வரித்துக்கொண்டிருப்பது மட்டுமல்லாமல், அதற்கும் அதிகமான ஒன்றையும் பெற்றிருக்கின்றனர்; அந்த அதிகமான ஒன்றுதான் முஸ்லீம் பெண்களிடையே நிலவும் பர்தா முறையாகும்.

இந்தப் பர்தா முறையின் காரணமாக முஸ்லீம் பெண்கள் தனிமைப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இப்பெண்மணிகள் முன்புற அறைகளுக்கோ, வெளி தாழ்வாரங்களுக்கோ, தோட்டங்களுக்கோ வருவார்கள் என்று எதிர்பார்க்கமுடியாது; புழக்கடைகளே பெரும்பாலும் அவர்களுடைய இருப்பிடங்களாக அமைந்துள்ளன. இளம் வயதினரும் சரி, வயதானவர்களும் சரி ஒரே அறையில் அடைந்து கிடக்கின்றனர். எந்த ஓர் ஆண் வேலையாளும் அவர்கள் முன்னிலையில் பணியாற்ற இயலாது. தன்னுடைய புதல்வர்கள், சகோதரர்கள், தந்தை, மாமன்மார்கள், கணவன் மற்றும் நம்பிக்கைக்குரிய மிகவும் நெருங்கிய உறவினர்கள் போன்றோரைப் பார்ப்பதற்கு மட்டுமே ஒரு முஸ்லீம் பெண்மணி அனுமதிக்கப்படுகிறாள். பிரார்த்தனைக்காக அவள் மசூதிக்குக் கூட செல்ல முடியாது. அவள் எங்கே வெளியில் சென்றாலும் எப்போதும் புர்கா (முகத்திரை) அணிந்தே செல்ல வேண்டும். இந்த புர்கா பெண்கள் தெருக்களில் நடந்துசெல்லும் காட்சி இந்தியாவில் ஒருவர் காணக்கூடிய மிகவும் அருவருப்பான காட்சிகளில் ஒன்றாகும். இத்தகைய ஒதுக்கல்முறை முஸ்லீம் பெண்களின்

உடலாரோக்கியத்தைப் பெரிதும் பாதிக்கிறது. ரத்தசோகை, காச நோய், பயோரியா போன்ற நோய்கள் அவர்களைச் சர்வசாதாரண மாகப் பீடிக்கின்றன. அவர்களுடைய உடலமைப்பு உருக்குலைகிறது; முதுகு வளைந்துவிடுகிறது; எலும்புகள் துருத்திக் கொள்கின்றன; கைகால்கள் உருக்கோணலாகிவிடுகின்றன. விலா எலும்புகளும், மூட்டெலும்புகளும், இன்னும் சொல்லப்போனால் அவர்களது எலும்புகள் அனைத்தும் வலியெடுக்கின்றன. அவர்களிடம் அடிக்கடி மிகுதியான நெஞ்சுத் துடிப்பு காணப்படுகிறது. இந்த இடுப்பெலும்பு உருத்திரிபு பிரசவத்தின்போது அகால மரணத்தில் கொண்டுபோய் விடுகிறது. பர்தா முறை முஸ்லீம் பெண்களின் மனவளர்ச்சிக்கும் தார்மிக வளர்ச்சிக்கும் ஒரு தடையாக உள்ளது. ஆரோக்கியமான சமூகவாழ்க்கை பறிக்கப்படுவதால் அது தார்மிக சிதைவுக்கு, சீர்கேட்டுக்கு இட்டுச் செல்கிறது. வெளி உலகிலிருந்து முற்றிலும் துண்டிக்கப்பட்டிருப்பதன் காரணமாக அவர்கள் தங்கள் மனத்தை சிறுசிறு குடும்பச் சண்டைகளில் செலுத்துகிறார்கள்; இதன் காரண மாக அவர்களது கண்ணோட்டம், மனப்பாங்கு மிகக் குறுகி யதாக, கட்டுப்படுத்தப்பட்டதாகி விடுகிறது.

முஸ்லீம் பெண்கள் ஏனைய சமூகங்களைச் சேர்ந்த தம் முடைய சகோதரிகளுக்குப் பலதுறைகளிலும் பின்தங்கி இருக்கின் றனர்; எத்தகைய வெளி நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்ள இயலாத வர்களாக இருக்கின்றனர்; அடிமைப் புத்தியும் தாழ்வுமனப்பான்மை யும் பெரும் பாறாங்கல்லாக அவர்களை அழுத்தி அமிழ்த்துகின்றன. அறிவாற்றல் பெறுவதில், மேலும் மேலும் கல்விகற்பதில் அவர் களுக்கு அவ்வளவாக ஆர்வம் இல்லை; ஏனென்றால் வீட்டின் நான்கு சுவர்களுக்கு அப்பால் உள்ள எதிலும் அக்கறை காட்டா திருக்கும்படி அவர்கள் போதிக்கப்படுகின்றனர். பர்தா பெண்கள் குறிப்பாக நிராதரவற்றவர்களாக, அபலைகளாக, மருட்சியும் பீதியும் அடைபவர்களாக, வாழ்க்கையில் எந்தப் போராட்டத்திலும் துணிந்து ஈடுபடுவதற்கு லாயக்கற்றவர்களாக, தகுதியற்றவர்களாகி விடு கின்றனர். இந்தியாவிலுள்ள முஸ்லீம்களிடையே பர்தாப் பெண்கள் மிகப் பெரும் எண்ணிக்கையில் இருப்பதைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது பர்தா பிரச்சினையின் பரந்த பரிமாணத்தையும் கடுமையையும் எளிதாகப் புரிந்து கொள்ளலாம்.[1]

பர்தா முறை தார்மிகரீதியில் ஏற்படுத்தியுள்ள விளைவு

1. முஸ்லீம் பெண்களின் நிலைமை குறித்து தெரிந்து கொள்ள சியாம் குமார் நேரு பதிப்பித்த 'நமது குறிக்கோள்' எனும் நூலைப் பார்க்கவும்.

களுடன் ஒப்பிடும்போது உடல்ரீதியிலும், அறிவுத்துறைரீதியிலும் அது தோற்றுவித்துள்ள விளைவுகள் அத்தனை கடுமையானவை அல்ல என்றே கூறவேண்டும். பர்தா முறை இருபாலரின் பால் ஈடுபாடு குறித்து, நாட்டம் குறித்து, வேட்கை குறித்து ஏற்பட்ட ஆழமான ஐயப்பாடே இந்த **பர்தா** முறை தோன்றியதற்கு அடிப் படை காரணம் எனலாம். இரு இனங்களையும் பிரித்து இதனைக் கட்டுப் படுத்துவது இதன் நோக்கம். ஆனால் இந்த நோக்கத்தை நிறைவேற்று வதற்குப் பதிலாக பர்தாமுறை முஸ்லீம் ஆண்களின் பழக்க நடை முறைகளைப் பெரிதும் பாதித்துள்ளது. **பர்தா** முறை காரணமாக ஒரு முஸ்லீமுக்கு தனது வீட்டுப் பெண்களைத் தவிர வெளியே உள்ள வேறு எந்த முஸ்லீம் பெண்ணுடனும் தொடர்பில்லாமல் போய் விடுகிறது. தனது வீட்டுப் பெண்களுடன் அவனுக்குள்ள தொடர்பும் கூட எப்போதேனும் நடைபெறும் உரையாடலுடன் நின்றுவிடுகிறது. ஒரு முஸ்லீம் ஆண் குழந்தைகளாகவும் வயதானவர்களாகவும் இருப்போரைத் தவிர வேறு எந்தப் பெண்பாலருடனும் தோழமை பூணவோ, ஒன்று கலந்து பழகவோ முடியாது. இவ்வாறு ஆண் களை பெண்களிடமிருந்து ஒதுக்கி வைக்கும் போக்கு ஆண்களின் பழக்க வழக்கங்கள்மீது மிக மோசமான விளைவுகளை ஏற்படுத்தும் என்பது நிச்சயம். ஆண் பெண் இருபாலரிடையேயும் உள்ள எல்லா தொடர்பையும் துண்டிக்கும் ஒரு சமூக அமைப்பு அதீத பாலுணர்ச்சி மீதும், இயற்கைக்கு மாறான இதர தீய பழக்கவழக்கங்கள்மீதும், வழிமுறைகள் மீதும் நாட்டம்கொள்ளும் ஓர் ஆரோக்கியமற்ற போக்கையே தோற்றுவிக்கும் என்று கூறுவதற்கு ஒருவர் மனோ தத்துவ நிபுணராக இருக்க வேண்டும் என்பதில்லை.

பர்தா முறையின் தீய விளைவுகள் முஸ்லீம் சமூகத்துடன் நின்றுவிடவில்லை. இந்துக்களை முஸ்லீம்களிடமிருந்து சமூக ரீதியில் ஒதுக்கிவைப்பதற்கும் இது ஒரு காரணமாக இருக்கிறது; இந்த ஒதுக்கல் இந்தியாவின் பொது வாழ்க்கையில் ஒரு சாபக் கேடாக இருந்துவருவது அனைவருக்கும் தெரியும். இந்த வாதம் வலிந்து பெறப்பட்டதாகத் தோன்றக்கூடும்; முஸ்லீம்களிடையே நிலவும் **பர்தா** முறையைக் காட்டிலும் இந்துக்களின் இணங்கிப் பழகாத போக்கே இந்தத் தனிமைப்படுத்தலுக்கு காரணம் என்று கூறக்கூடும். ஆனால் இந்துக்கள் இதை மறுக்கிறார்கள்; இந்துக்களுக் கும் முஸ்லீம்களுக்குமிடையே தொடர்பு ஏற்படுத்திக்கொள்வது சாத்தியமில்லை; ஏனென்றால் இத்தகைய தொடர்பு ஒருபுறம் பெண்களுக்கும் இன்னொரு புறம் ஆண்களுக்கும் இடையேயான தொடர்பையே குறிக்கும் என்பதால் இது சாத்தியமில்லை என்று அவர் கூறுவது நியாயமாகவே தோன்றுகிறது.

பர்தா முறையும் அதன் விளைவாக ஏற்படும் தீமைகளும் முஸ்லீம்களிடையே மட்டுமன்றி, நாட்டின் சில பகுதிகளில் இந்துக்களில் குறிப்பிட்ட சில பகுதியினரிடையேயும் காணப்படுகின்றன. ஆனால் இதில் ஒரு முக்கியமான வேறுபாடு இருக்கிறது; அதாவது முஸ்லீம்களிடையே காணப்படும் பர்தா முறை மதத்தின் ஆணையை ஆதாரமாக, அடிப்படையாகக் கொண்டது; இந்துக்களிடையே நிலவும் பர்தா முறை அப்படிப்பட்டதல்ல. இந்துக்களைவிட முஸ்லீம்களிடையேதான் பர்தா மிக ஆழமாக வேரோடிப் போயிருக்கிறது. மதத்தின் ஆணைகளுக்கும் சமூகத்தின் தேவைகளுக்கும் இடையேயான தவிர்க்கமுடியாத முரண்பாட்டை எதிர்கொண்டு வெற்றிபெறுவதன் மூலம்தான் இந்தத் தீமைக்கு முடிவு கட்டமுடியும். பர்தா பிரச்சினை - அதன் மரபுமூலம் ஒருபுறமிருக்க - முஸ்லீம்களுக்கு உண்மையிலேயே ஒரு சிக்கலான பிரச்சினை; ஆனால் இந்துக்களுக்கு அப்படியல்ல. இந்தத் தீமையைக் குழிதோண்டிப் புதைப்பதற்கு முஸ்லீம்கள் ஏதேனும் முயற்சி எடுத்துக் கொள்கிறார்களா என்பதற்குச் சான்று ஏதும் இல்லை.

இவ்வாறு இந்தியாவிலுள்ள முஸ்லீம் சமுதாயத்தின் அரசியல் வாழ்வில் மட்டுமன்றி, சமூக வாழ்விலும் ஒரு தேக்கநிலை ஏற்பட்டிருக்கிறது. முஸ்லீம்களுக்கு அரசியலில் அவ்வளவாக ஆர்வம் இல்லை. அவர்கள் பிரதானமாக அக்கறையும் ஆர்வமும் காட்டுவது மதத்திடம்தான். ஒரு முஸ்லீம் தொகுதியில் போட்டியிடும் ஒரு வேட்பாளருக்கு ஆதரவு அளிப்பதற்கு அந்தத் தொகுதி விதிக்கும் நிபந்தனைகளிலிருந்து இதனை எளிதாகத் தெரிந்து கொள்ளலாம். முஸ்லீம் வாக்காளர்கள் ஒரு வேட்பாளரின் தேர்தல் அறிக்கையைப் பற்றி கவலைப்படுவதில்லை. வேட்பாளரிடமிருந்து அவர்கள் எதிர்ப்பார்ப்பதெல்லாம் பள்ளிவாசலில் உள்ள பழைய விளக்குகளுக்கு பதில் புதிய விளக்குகளைத் தமது செலவில் வாங்கித் தர அவர் சம்மதிக்க வேண்டும், பழைய கம்பளம் கிழிந்து விட்டதால் பள்ளிவாசலுக்குப் புதிய கம்பளம் வழங்கவேண்டும், அல்லது பள்ளிவாசல் பாழடைந்த நிலையில் இருப்பதால் மராமத்து செய்து அதனைப் புதிப்பிக்கவேண்டும் என்பன போன்றவைதாம். சில இடங்களில், வேட்பாளர் பணத்தை வாரி இறைத்து முதல் தரமான விருந்தளித்தால் அத்துடன் திருப்தி அடைந்துவிடுவார்கள்; வேறு சில இடங்களில் வாக்குச்சீட்டுகளை விலைகொடுத்து வாங்க வேட்பாளர் தயாராக இருந்தால் மனநிறைவு அடைவார்கள். முஸ்லீம்களைப் பொறுத்தவரையில் தேர்தல் என்பது வெறும் பணம் சம்பந்தப்பட்ட விஷயம்; சமூக அபிவிருத்தித் திட்டங்கள் பற்றி

எல்லாம் அவர்கள் கவலைப்படுவதில்லை. பணக்காரனுக்கும் ஏழைக்கும், மூலதனத்துக்கும் உழைப்புக்கும், நிலப்பிரபுவுக்கும் குத்தகைத்தாரருக்கும், மத குருவுக்கும் சாமானியனுக்கும், பகுத்தறிவுக்கும் மூடநம்பிக்கைக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் போன்ற முற்றிலும் சமய சார்பற்ற விஷயங்களில் முஸ்லீம் அரசியல் ஆர்வம் காட்டுவதில்லை. முஸ்லீம் அரசியல் அடிப்படையில் சமயச் சார்புடையது; அதனையே ஆதார அடிப்படையாகக் கொண்டது; அது ஒரே வேறுபாட்டை மட்டுமே அதாவது இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே உள்ள வேறுபாட்டை மட்டும் ஏற்றுக் கொள்கிறது. வாழ்க்கையின் சமயச்சார்பற்ற அம்சங்கள் எவற்றிற்கும் முஸ்லீம் சமுதாயத்தின் அரசியலில் இடமில்லை; அப்படியே தவிர்க்க முடியாதபடி இடம் பெற்றாலும் அவை முஸ்லீம் அரசியலின் ஒரே ஒரு செயல்முறைக் கோட்பாட்டுக்கு உட்பட்டதாகவே, அடங்கியதாகவே இருக்கும். அந்தக் கோட்பாடுதான் மதம்.[1]

## II

முஸ்லீம்களிடையே இந்தத் தீமைகள் நிலவுவது வேதனை அளிப்பதாக இருக்கிறது. ஆனால் இந்தக் கேடுகளை எல்லாம் வேரோடு வேரடி மண்ணோடு அடிசாய்க்கக்கூடிய ஒரு சமூக சீர்திருத்த இயக்கம் முசல்மான்களிடையே உருவாகவில்லையே என்பது இதைவிடவும் வேதனை தருவாக இருக்கிறது. இந்துக்களிடையேயும் சமூகத் தீமைகள், தீங்குகள் இருந்துவரவே செய்கின்றன. ஆனால் இவற்றில் ஓர் ஆறுதல் அளிக்கும் அம்சம் இருக்கிறது. அது என்ன? இந்துக்களில் சிலர் இத்தீமைகள் இருந்துவருவதை உணர்ந்துள்ளனர்; தேர்ந்து தெளிந்துள்ளனர்; சிலர் இவற்றை ஒழித்துக்கட்டுவதற்கு முன்னின்று பாடுபட்டும் வருகின்றனர். ஆனால் அதே சமயம் முஸ்லீம்களின் நிலை என்ன? இவையெல்லாம் தீமைகள் என்பதை அவர்கள் உணர்வதே இல்லை; இதனால் அவற்றை அகற்றுவதற்கு அவர்கள் முயல்வதில்லை, கிளர்ச்சி செய்வதில்லை. உண்மையில்,

---

1. ஐரோப்பியப் பொழுதுபோக்கு மன்றங்களில் தாங்கள் அனுமதிக்கப்படுவதில்லை என்று இந்தியர்கள் குற்றம் சாட்டும்போது அந்தக் குற்றச்சாட்டுக்கு எதிராக ஐரோப்பியர்கள் முன்வைக்கும் வாதம் சுவையானது. அவர்கள் வாதம் வருமாறு: ''நாங்கள் எங்கள் பெண்களை எங்களுடன் மன்றங்களுக்கு அழைத்து வருகிறோம். அதேபோன்று நீங்களும் உங்கள் பெண்களை மன்றங்களுக்கு அழைத்துவர ஒப்புக்கொண்டால் உங்களை அனுமதிக்கத் தயாராக இருக்கிறோம். நீங்கள் உங்கள் பெண்களை அழைத்துவராதபோது நாங்கள் மட்டும் எங்கள் பெண்களை எப்படி அழைத்து வரமுடியும். ஐம்பது-ஐம்பதுக்கும் தயாராக இருக்கிறீர்களா அப்போது எங்கள் மன்றங்களுக்கு வருவதற்கு அனுமதி கேளுங்கள்.''

தங்களது நடைமுறைப் பழக்கவழக்கங்களில் அத்தகைய மாற்றம் ஏற்படுவதையும் அவர்கள் விரும்பவில்லை; அதனைக் கடுமையாக எதிர்க்கின்றனர். இதற்கு ஓர் எடுத்துக்காட்டை இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கும். பாலியவிவாக மசோதா ஒன்று 1930ல் மத்திய சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டது. இது ஒன்றும் புரட்சிகரமான மசோதா அல்ல. இம் மசோதாவில் மணமகளின் திருமண வயது 14 ஆகவும் மணமகனின் திருமண வயது 18 ஆகவும் உயர்த்தப் பட்டது, அவ்வளவுதான். இதையே கூட முஸ்லீம்கள் கடுமையாக எதிர்த்தனர்; முஸ்லீம் சட்டத்திற்கு இது முரண்பட்டிருப்பதாக வாதிட்டனர்; மசோதாவை ஒவ்வொரு கட்டத்திலும் எதிர்த்து வாக்களித்தனர். அவர்கள் அத்துடன் நிற்கவில்லை; மசோதா சட்டமானபோது அந்த சட்டத்தை எதிர்த்து ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினர். ஆனால் இந்தச் சட்டத்திற்கு எதிராக முஸ்லீம்கள் ஆரம்பித்த இந்த ஒத்துழையாமை இயக்கம் அதிருஷ்டவசமாக வலுவடையவில்லை; காங்கிரஸ் இதே சமயம் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் முஸ்லீம்களின் இயக்கம் அமிழ்ந்து போய்விட்டது. எனினும் சமூக சீர்திருத்தங்களை முஸ்லீம்கள் எவ்வளவு வன்மையாக எதிர்க்கிறார்கள் என்பதை அவர்களது இந்த இயக்கம் புலப்படுத்துகிறது.

முஸ்லீம்கள் இவ்வாறு சமூக சீர்திருத்தங்களை ஏன் எதிர்க்கிறார்கள் என்ற ஒரு கேள்வி இங்கு எழக்கூடும்.

உலகெங்கிலுமுள்ள முஸ்லீம்கள் முற்போக்கு கருத்துக்களில்லாத, மாறுதல் விரும்பாத மக்கள் என்பதே இதற்கு வழக்கமாக அளிக்கப்படும் பதிலாகும். இந்தக் கருத்து வரலாற்றுச் சான்றுகளுடன் ஒத்துப்போகிறது என்பதில் ஐயமில்லை. ஆரம்பத்தில் அவர்களது நடவடிக்கைகள் எரிமலை வெடிப்பதுபோல் ஆவேசத்தோடு, மிகுந்த உக்கிரத்தோடு பொங்கி எழுந்தன; அவற்றின் வேகமும், வீச்சும், பரிமாணமும் உண்மையிலேயே பிரமிக்கத் தக்கவையாக இருந்தன; இதனால் விரிந்து பரந்த பல சாம்ராஜ்யங்கள் ஆங்காங்கு உருவாயின. ஆனால் இதன்பின்னர் முஸ்லீம்கள் திடீரென்று ஒரு விசித்திரமான, விளக்க முடியாத ஓர் உணர்ச்சியற்ற, மரமரப்பு நிலைக்கு உள்ளாயினர்; அதிலிருந்து அவர்கள் விழித்துக் கொள்ளவே இல்லை. அவர்களது இத்தகைய மந்தத் தன்மையை, கழிமடிமையைப் பற்றி ஆராய்ந்தவர்கள் இதற்கு ஒரு காரணம் கூறுகிறார்கள்: இஸ்லாம் ஓர் உலகமதம், அனைத்து மக்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் எல்லா நிலைமைகளுக்கும் ஏற்ற மதம் என்று அவர்கள் அடிப்படையிலேயே கொண்டுள்ள கருத்தே அவர்களது இன்றைய தேக்க நிலைக்குக் காரணம் என்று கூறப்படுகிறது. இது சம்பந்தமாக பின்வருமாறு வாதிடப்படுகிறது:

''தனது மதத்தின்மீது அசையாத நம்பிக்கை கொண்ட முசல்மான் எவ்வகையிலும் முன்னேற்றம் காணவில்லை; நவீன சக்திகள் மின்னல் வேகத்தில் மாறிவரும் இந்த உலகில் அவன் இடம்பெயராது, இயங்காது, இருந்த இடத்தில் இருக்கிறான். தான் அடிமைப்படுத்திய இனங்களை அவற்றின் பழைய காட்டுமிராண்டித்தனமான நிலையிலேயே, நாகரிகமற்ற நிலையிலேயே, வைத்திருப்பது உண்மையிலேயே இஸ்லாமின் முக்கிய அம்சங்களில் ஒன்று என்பதில் ஐயமில்லை. அது பழக்கத்திற்குள் திணிக்கப்பட்டு செயலற்றதாக, ஊடுருவ முடியாததாக ஆக்கப்பட்டுள்ளது. அது மாறமுடியாதது; எத்தகைய அரசியல், சமூக, பொருளாதார மாற்றங்களுக்கும் அதன்மீது எவ்வித பிரதிபலிப்புகளையும் ஏற்படுத்த முடியாது.

இஸ்லாமுக்கு வெளியே எத்தகைய பாதுகாப்பும் இருக்க முடியாது; அதன் சட்டத்திற்கு அப்பால் உண்மை எதுவும் இருக்கமுடியாது; அதன் ஆன்மீக போதனைக்கு வெளியே நிலைத்த நல்வாழ்வைக் காணமுடியாது என்று போதிக்கப்பட்ட முஸ்லீம் தனது நிலையைத் தவிர வேறு எந்த நிலையையும், இஸ்லாமிய சிந்தனை முறையைத் தவிர வேறு எந்த சிந்தனையையும் எண்ணிப் பார்க்க இயலாதவனாகி விடுகிறான். பூரணத்துவத்தின் ஒப்பில்லாத, நேர்நிகரற்ற கொடுமுடியை எட்டிவிட்டதாக உறுதியாக நம்புகிறான்; உண்மையான சமயப்பற்று, உண்மையான சித்தாந்தம், உண்மையான மெய்யறிவு இவற்றின் ஏகபோக உரிமையாளன் என்று தன்னைக் கருதுகிறான்; நிலையான மெய்ம்மையை - அது பிறவற்றுடன் ஒப்பிடக்கூடிய, மாறக்கூடிய மெய்ம்மை அன்று - மாறாக அப்பழுக்கற்ற முழுமுதல் மெய்ம்மையை தான் மட்டுமே பெற்றிருப்பதாகப் பெருமிதம் கொள்கிறான்.

''முஸ்லீம்களின் சமயச் சட்டம் உலகிலுள்ள மிகப் பலதரப்பட்ட தனிமனிதர்களுடனும் சிந்தனை, உணர்வு, கருத்து, திறனாய்வு ஒற்றுமையைப் பகிர்ந்துகொள்ளும் செயல் திட்டத்தைப் பெற்றிருக்கிறது.''

இந்த ஏகத்துவம் மனிதனது ஆற்றலை மழுங்கடித்து அவனைச் செயலிழக்கச் செய்கிறது என்பதை இங்கு வலியுறுத்திக் கூறியாக வேண்டும்; இந்த ஏகத்துவம் முஸ்லீம்களுக்கு வெறுமனே போதிக்கப்படுவதில்லை; மாறாக, அணுவளவும் சகிப்புத் தன்மையற்ற உணர்வில் அது அவர்கள்மீது திணிக்கப்படுகிறது; கர்ணகடூர கொடுமைக்கும்

கொடிய வன்முறைக்கும் பெயர்போன இந்தச் சகிப்புத்தன்மை யற்ற போக்கு முஸ்லீம் உலகுக்கு வெளியே எங்கும் காணப்படாத ஒன்றாகும்; இஸ்லாமின் போதனைகளுக்கு முரண்படுகின்ற பகுத் தறிவு பூர்வமான அனைத்துச் சிந்தனைகளையும் அது அடக்கி ஒடுக்குகிறது. இது குறித்து ரேனன் கூறுவதாவது:[1]

''இஸ்லாம் என்பது ஆன்மிகம் மற்றும் உலகியலின் ஒரு கூட்டிணைப்பு; அது ஒரு தீவிர சமய சித்தாந்தத்தின் ஆட்சி, அது மனிதகுலம் இதுவரை பூண்டிராத மிகவும் கனமான சங்கிலி... இஸ்லாம் ஒரு சமயம் என்ற முறையில் அதற்குரிய வனப்புகளை, சிறப்புகளைப் பெற்றிருக்கிறது... ஆனால் மனி தனது பகுத்தறிவுக்கு அது ஊறுவிளைவிப்பதாகவே இருக் கிறது; எனினும் சுதந்திர சிந்தனையை ஏனைய சமயங்களை விட அது கடுமையாக ஒடுக்கிவிட்டது என்று கூறுவதற் கில்லை என்றாலும் இப் பணியை அது மிகவும் வலிமையோடு செய்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. அது போர் புரிந்து கைப்பற்றிய நாடுகளை பகுத்தறிவு கலாசார விதைகளை விதைக்க முடியாத வறண்ட தரிசு நிலங்களாக்கிவிட்டது. உண்மையில் ஒரு முசல்மானை ஏனையோரிடமிருந்து வேறு படுத்திக்காட்டுவது விஞ்ஞானத்திடம் அவன் கொண்டுள்ள வெறுப்பும், ஆராய்ச்சி என்பதெல்லாம் வீணானது, பயனற்றது, விளை யாட்டுத் தனமானது, இன்னும் சொல்லப் போனால் தீங்கு விளைவிக்கக் கூடியது என்று அவன் கொண்டுள்ள நம்பிக்கையும்தான்; இயற்கை விஞ்ஞானங்களை அவன் எதிர்க் கிறான்; கடவுளுக்கு எதிரான போட்டி முயற்சிகளாக அவற்றை அவன் கருதுவதே இதற்குக் காரணம். வரலாற்று விஞ்ஞா னங்களை அவன் எதிர்க்கிறான்; அவை இஸ்லாமுக்கு முந்தைய காலத்தைப் பற்றியதாக இருப்பதும், பண்டைய முரண்பட்ட சமயக் கருத்துகளுக்கு அவை புத்துயிரளிக்கக்கூடும் என்று அவன் அஞ்சுவதுமே இதற்குக் காரணம்.''

ரேனன் பின்வருமாறு முடிக்கிறார்:

''விஞ்ஞானத்தை ஒரு பகையாகக் கருதுவதில் இஸ்லாம் பிடிவாதமாக இருக்கிறது; ஆனால் ஒரே பிடிவாதம் காட்டுவது ஆபத்தானது. இஸ்லாமின் கெட்ட காலமோ என்னவோ

1. தேசிய இனம் மற்றும் இதர கட்டுரைகள்

*விஞ்ஞானத்தைப் பகைத்துக்கொள்வதில் அது வெற்றி கண்டிருக்கிறது. விஞ்ஞானத்தை அழிப்பதன் மூலம் அது தன்னையே அழித்துக் கொள்கிறது; உலகின் முற்றிலும் கீழ்நிலைக்குத் தள்ளப்படுகிறது.''*

சமூக சீர்திருத்தங்களை முஸ்லீம்கள் ஏன் எதிர்க்கிறார்கள் என்று நாம் முன்னர் குறிப்பிட்ட கேள்விக்கு இந்தப்பதில் தெளிவானதாக இருந்தாலும் உண்மையானதாக இருக்கமுடியாது. இது உண்மையான பதிலாக இருக்குமானால், இந்தியாவுக்கு வெளியே உள்ள அனைத்து முஸ்லீம் நாடுகளிலும் எழுச்சியும் கிளர்ச்சியும், கொந்தளிப்பும் குமுறலும் ஏற்பட்டிருக்கிறதே இதற்கு எப்படிச் சமாதானம் கூறமுடியும்? அதற்கெல்லாம் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் விவரம் ஆராயும் உணர்வு, மாற்றம் காண வேண்டுமென்ற உணர்வு, சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற உணர்வு, சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற ஆர்வம் தோன்றியிருக்கிறதே இதற்கு எப்படி விளக்கம் தரமுடியும்? உண்மையில், துருக்கியில் மேற்கொள்ளப்பட்டுள்ள சமூக சீர்திருத்தங்கள் மிகவும் புரட்சிகரமானவை, இந்த நாடுகளைச் சேர்ந்த முஸ்லீம்களின் பாதையில் இஸ்லாம் குறுக்கிடவில்லை என்றால், இந்திய முஸ்லீம்களின் பாதையில் மட்டும் அது ஏன் குறுக்கிடவேண்டும்? இந்தியாவிலுள்ள முஸ்லீம் சமுதாயத்தின் சமூக, அரசியல் தேக்கநிலைக்கு ஏதேனும் விசேடக் காரணம் இருக்க வேண்டும்.

அந்த விசேடக் காரணம் என்னவாக இருக்கமுடியும்? இந்திய முசல்மானிடம் மாறுதல் காணும் உணர்வு இல்லாமலிருப்பதற்கு இந்தியாவில் அவன்வகிக்கும் பிரத்தியேக நிலைமையே இதற்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்துக்கள் மிகப்பெரும்பான்மையினராக இருக்கும் ஒரு சமூகச் சூழலில் வசித்து வருகிறான். அந்த இந்துச் சூழல் எப்போதும் ஓசைப்படாமல், ஆனால் உறுதியாக அவன் மீது ஆக்கிரமிப்பு நடத்தி வருகிறது. அது தன்னை முசல்மானல்லாதவனாக்குவதாக அவன் எண்ணுகிறான். இவ்வாறு இந்துக்கள் தன்னைப் படிப்படியாகத் தங்கள் பக்கம் இழுக்கும் முயற்சியிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு அவன் தீவிரமாக முனைகிறான்; இஸ்லாம் சம்பந்தப்பட்ட அனைத்தையும் பேணிப்பாதுகாக்கும் உணர்வை இது அவனுக்கு ஏற்படுத்துகிறது; இது தனது சமுதாயத்துக்கு நலன் பயக்குமா, அல்லது தீங்கு விளைவிக்குமா என்பதை அவன் சற்றும் எண்ணிப் பார்ப்பதில்லை. இரண்டாவதாக, அரசியல் ரீதியிலும் இந்துக்களே

மேலாதிக்கம் செலுத்தும் ஒரு சூழ்நிலையில் இந்திய முஸ்லீம்கள் வைக்கப்பட்டிருக்கிறார்கள். இதனால் தான் ஒடுக்கப்படுவோம் என்று இந்திய முஸ்லீம் உணர்கிறான்; அந்த அரசியல் ஒடுக்குமுறை இந்திய முஸ்லீம்களை தாழ்த்தப்பட்ட வகுப்பினராக ஆக்கக்கூடும் என்று அவன் அஞ்சுகிறான். சமூகரீதியிலும் அரசியல்ரீதியிலும் இந்துக்களால் மூழ்கடிக்கப்படக்கூடிய நிலையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டுமென்ற அவனது இந்த உணர்வே வெளி நாடுகளிலுள்ள தங்களது தோழர்களுடன் ஒப்பிடும்போது சமூக சீர்திருத்தம் விஷயத்தில் இந்திய முஸ்லீம்கள் பின்தங்கியிருப்ப தற்குப் பிரதான காரணமாக இருக்கும் என்று என் மனத்துக்குப் படு கிறது. சட்டமன்ற, ஸ்தல ஸ்தாபன இடங்களுக்காகவும் அரசுப் பணிகளுக்காகவும் இந்துக்களுக்கு எதிரான இடையறாத போராட் டத்தில் தங்கள் சக்தியையும் ஆற்றலையும் சர்வசதாவும் ஈடுபடுத்த வேண்டியுள்ள நிலைமையில் சமூகசீர்திருத்தங்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் கவனம் செலுத்துவதற்கான எண்ணமோ, அவ காசமோ, சந்தர்ப்பமோ அவர்களுக்குக் கிட்டுவதில்லை. அப்படியே கிட்டினாலும், வகுப்புப் பதற்றம் உச்சநிலையை அடையும்போது தங்களது சமூக-சமய ஒற்றுமையை எவ்வகையிலேனும் பாதுகாப் பதன் மூலம் இந்துக்களதும் இந்து மதத்தினதும் அபாயத்துக்கு எதிராக தங்கள் அணிகளை ஒன்றுதிரட்டி, ஓர் ஒன்றுபட்ட முன்னணியை உருவாக்க வேண்டும் என்ற ஆர்வம், வேட்கை மேலோங்கி இவற்றை எல்லாம் பின்னுக்குத் தள்ளிவிடுகிறது.

இதே விளக்கம் இந்தியாவிலுள்ள முஸ்லீம் சமுதாயத் தின் அரசியல் தேக்கநிலைக்கும் பொருந்தும். முஸ்லீம் அரசியல் வாதிகள் மதச்சார்பற்ற வாழ்க்கை அம்சங்களை தங்கள் அரசியலுக்கு ஆதாரமாகக் கொள்வதில்லை; ஏனென்றால் இந்துக்களுக்கு எதிரான போராட்டத்தில் இது தங்கள் சமூகத்தைப் பலவீனப்படுத்தும் என்பது அவர்களது கருத்து. செல்வந்தர்களிடமிருந்து நியாயம் பெறுவதற்காக ஏழை முஸ்லீம்கள் ஏழை இந்துக்களுடன் சேரமாட்டார்கள். நிலப் பிரபுவின் கொடுங்கோன்மையைத் தடுத்துநிறுத்துவதற்கு முஸ்லீம் குத்தகைக்காரர்கள் இந்து குத்தகைக்காரர்களுடன் சேரமாட்டார் கள். உழைப்புக்கும் மூலதனத்துக்கும் நடைபெறும் போராட்டத் தில் முஸ்லீம் தொழிலாளர்கள் இந்து தொழிலாளர்களுடன் சேர மாட்டார்கள். இது ஏன்? இக்கேள்விக்கு மிக எளிதாகப் பதில் சொல்லி விடலாம். பணக்காரர்களுக்கு எதிராக ஏழைகள் நடத்தும் போராட் டத்தில் சேர்ந்தால் ஒரு முஸ்லீம் செல்வந்தரை எதிர்த்துத்தான் போராடவேண்டியிருக்கும் என்பதை ஓர் ஏழை முஸ்லீம் உணர்

கிறான். நிலப்பிரபுவுக்கு எதிரான இயக்கத்தில் சேர்ந்தால் ஒரு முஸ்லீம் நிலப்பிரபுவை எதிர்த்துத் தான் போராடவேண்டும் என்று முஸ்லீம் குத்தகைக்காரன் பார்க்கிறான். முதலாளித்துவத்துக்கு எதிராக தொழிலாளி வர்க்கம் நடத்தும் தாக்குதலில் தான் ஈடுபட்டால் ஒரு முஸ்லீம் மில் உரிமையாளருக்கு ஊறுசெய்யநேரிடும் என்று முஸ்லீம் தொழிலாளி நினைக்கிறான். ஒரு பணக்கார முஸ்லீமுக்கு, ஒரு முஸ்லீம் நிலப்பிரபுவுக்கு ஒரு முஸ்லீம் மில் முதலாளிக்கு எவ்வகையிலும் தீங்கு இழைப்பது முஸ்லீம் சமூகம் முழுவதுக்குமே செய்யப்படும் தீங்காக ஒரு முஸ்லீம் கருதுகிறான்; இந்து சமூகத்திற்கு எதிரான போராட்டத்தில் இது முஸ்லீம்களைப் பலவீனப் படுத்தும் என்று கருதுகிறான்.

முஸ்லீம் அரசியல் எவ்விதம் நெறிபிறழ்ந்து ஏறுமாறானப் போக்கில் செல்லுகிறது என்பதை சமஸ்தானங்களில் மேற்கொள் ளப்படும் அரசியல் சீர்திருத்தங்கள் சம்பந்தமாக முஸ்லீம் தலைவர் கள் நடந்துகொள்ளும் முறையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்து சமஸ்தானமான காஷ்மீரில் பிரதிநிதித்துவ ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்று கோரி முஸ்லீம்களும் அவர்களுடைய தலைவர் களும் பெரும் கிளர்ச்சி நடத்தினர். இதே முஸ்லீம்களும் அவர்களுடைய தலைவர்களும் இதர முஸ்லீம் சமஸ்தானங்களில் பிரதிநிதித்துவ அரசாங்கம் அமைக்கப்படுவதைக் கடுமையாக எதிர்த்தனர். இந்த விந்தையான, விபரீதமான போக்குக்கான காரணத்தைப் புரிந்து கௌ்ளவது மிகவும் சுலபம். இவை யாவற்றிலும் முஸ்லீம்களைப் பொறுத்தவரையில் தீர்மானமான அம்சம் இந்துக்களுடன் ஒப்பிடும் போது இது எந்த அளவுக்கு முஸ்லீம்களைப் பாதிக்கும் என்பது தான். பிரதிநிதித்துவ அரசாங்கம் அமைப்பது முஸ்லீம்களுக்கு அனுகூலமானது என்றால் அதை அவர்கள் கோருவார்கள், அதற் காகப் போராடுவார்கள். காஷ்மீர் சமஸ்தானத்தில் மன்னர் இந்து, ஆனால் பெரும்பான்மையான குடிமக்கள் முஸ்லீம்கள். காஷ்மீரில் பிரதிநிதித்துவ அரசாங்கம் அமையவேண்டும் என்று முஸ்லீம்கள் போராடினார்கள் என்றால் அதற்குக் காரணம் இருக்கிறது. அதாவது காஷ்மீரில் பிரதிநிதித்துவ அரசாங்கம் என்பது ஆட்சி அதிகாரம் இந்து மன்னரிடமிருந்து முஸ்லீம் மக்களுக்கு மாறுவதைக் குறிக்கும்; இதனாலேயே இங்கு அவர்கள் பிரதிநிதித்துவ அரசாங்கத்தைக் கோரினார்கள்; இதர முஸ்லீம் சமஸ்தானங்களில் மன்னர் முஸ்லீம், ஆனால் அவருடைய பெரும்பான்மையான குடிமக்கள் இந்துக்கள். இத்தகைய சமஸ்தானங்களில் பிரதிநிதித்துவ அரசாங்கத்தை நிறுவு வது என்பதற்கு முஸ்லீம் மன்னரிடமிருந்து இந்து மக்களுக்கு ஆட்சி

அதிகாரத்தை மாற்றுவது என்றே பொருள்படும். இதனால்தான் முஸ்லீம்கள் இரட்டை வேடம் போட்டார்கள். ஓரிடத்தில் பிரதி நிதித்துவ அரசாங்கம் அமைக்கப்படுவதை ஆதரித்தார்கள்; இன்னோ ரிடத்தில் அதை எதிர்த்தார்கள். இதில் முஸ்லீம்களின் தலையாய நோக்கம் ஜனநாயகமல்ல. பெரும்பான்மையினரின் கட்சியுடன் கூடிய ஜனநாயகம் இந்துக்களுக்கு எதிரான போராட்டத்தில் முஸ்லீம் களை எந்த அளவுக்குப்பாதிக்கும் என்பதுதான் அவர்களது பிரதான அக்கறை. இது அவர்களை வலுப்படுத்துமா அல்லது பலவீனப் படுத்துமா? ஜனநாயகம் அவர்களைப் பலவீனம்படுத்துமானால் ஜனநாயகம் அவர்களுக்கு வேண்டியதில்லை; அதை அவர்கள் விரும்பமாட்டார்கள். இந்துக் குடிமக்கள் மீது முஸ்லீம் மன்னருக் குள்ள பிடிதளர்வதைவிட முஸ்லீம் சமஸ்தானங்களில் சீரழிந்து போன ஊழல் ஆட்சி நீடிப்பதையே அவர்கள் விரும்புவார்கள்.

முஸ்லீம் சமூகத்தின் அரசியல், சமூகத் தேக்கநிலைக்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்கமுடியும். அந்தக் காரணம் இதுதான். இந்துக்களும் முஸ்லீம்களும் என்றைக்கும் போராடிக் கொண் டிருக்க வேண்டும் என்று முஸ்லீம்கள் நினைக்கிறார்கள்; இந்துக்கள் முஸ்லீம்கள்மீது தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிடவும், முஸ்லீம் கள் ஆளும் சமூகமென்ற தங்களது கடந்தகால வரலாற்று நிலையை உறுதிப்படுத்தவும் போராடுகிறார்கள் - இந்தப் போராட்டத்தில் வலிமைதான் வெற்றிபெறும்; இந்த வலிமையைப் பெறுவதற்கு அவர்கள் தங்கள் அணிகளில் பிளவு ஏற்படுத்தக்கூடிய சகலவற்றை யும் கட்டுப்படுத்தி வைக்க வேண்டும் அல்லது மூட்டை கட்டி வைக்க வேண்டும்.

ஏனைய நாடுகளிலுள்ள முஸ்லீம்கள் தங்கள் சமுதாயத் தைச் சீர்திருத்தம் செய்யும் பணியை மேற்கொண்டிருக்கும்போது, இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் அவ்வாறு செய்ய மறுக்கிறார்கள் என்றால், முன்னர் குறிப்பிட்டவர்கள் தங்கள் போட்டி சமூகங் களுடன் வகுப்புவாத மற்றும் அரசியல் சச்சரவுகளில் ஈடுபடும் நிலையிலிருந்து விடுபட்டிருப்பதும், பின்னர் குறிப்பிட்டவர்கள். அத்தகைய நிலையில் இல்லாதிருப்பதுமே இதற்குக் காரணம்.

## III

சமூகக் கட்டமைப்பைச் செம்மைப்படுத்துவதும், சீரமைப் பதும் அவசியம் என்பதை உணராத இந்தக் குருட்டுத்தனமான பிற்போக்கு உணர்வு முஸ்லீம்களை மட்டுமே பிடித்து ஆட்டி

வருவதாக எண்ணிவிடாதீர்கள். இந்துக்களையும் இந்த நோய் பீடித்திருக்கிறது. சமூக செயல்திறம் இல்லாமல் ஏனைய செயற்பாட்டுத் துறைகளில் நிரந்தர முன்னேற்றம் சாத்தியமில்லை என்பதையும், தீய பழக்கவழக்கங்கள் ஏற்படுத்திய கேடுகள் காரணமாக இந்து சமுதாயம் தனது செயல்திறனை இழந்து விட்டது என்பதையும், இந்தத் தீமைகளை ஒழித்துக்கட்டுவதற்கு அயராது, சோராது பாடுபட வேண்டும் என்பதையும் இந்துக்கள் ஒருசமயம் உணர்ந்திருக்கவே செய்தனர். இந்த உண்மையை ஏற்றுக்கொண்டதன் விளைவாகவே காங்கிரசின் தோற்றத்தைத் தொடர்ந்து சமூக மாநாட்டுக்கு அடித் தளமிடப்பட்டது. நாட்டின் அரசியல் அமைப்பிலுள்ள பலவீனமான அம்சங்களை இனங்காணுவதில் காங்கிரஸ் அக்கறை காட்டி வந்த போது, சமூக மாநாடு இந்து சமுதாயத்தின் சமூக அமைப்பில் புறை யோடிப் போயுள்ள பலவீனமான அம்சங்களைக் கண்டறிந்து அவற்றைக் களைவதில் ஈடுபட்டிருந்தது. சிறிதுகாலம்வரை, காங் கிரசும் சமூக மாநாடும் ஒரு பொது அமைப்பின் இரு அணிகளாகச் செயல்பட்டுவந்தன; தமது வருடாந்தரச் கூட்டத்தொடர்களை ஒரே பந்தலிலும் நடத்தி வந்தன. ஆனால் விரைவிலேயே இந்த இரு அணி களும் இரண்டு கட்சிகளாக உருவெடுத்தன; ஒன்று அரசியல் சீர்திருத்தக் கட்சியாகவும் மற்றொன்று சமூக- சீர்திருத்தக் கட்சியாகவும் இயங்கி வந்தன; அவற்றிடையே உக்கிரமான வாதப் பிரதிவாதங் களும் சர்ச்சைகளும் நடைபெற்றுவந்தன. அரசியல் சீர்த்திருத்தக்கட்சி தேசிய காங்கிரசை ஆதரித்தது. சமூக சீர்திருத்தக் கட்சியோ சமூக மாநாட்டை ஆதரித்தது. இவ்விரண்டு அமைப்புகளும் எதிரெதிர் முகாம்களாயின. அரசியல் சீர்திருத்தத்திற்கு முன்னர் சமூக சீர்திருத்தம் அவசியமா என்பது தான் சர்ச்சைக்குரிய பிரச்சினையாக இருந்தது. பத்தாண்டுக் காலம்வரை இவ்விரு சக்திகளும் சமநிலையில் இருந்தன; எந்தத் தரப்புக்கும் வெற்றியின்றிப் போராட்டம் நடைபெற்று வந்தது. எனினும் சமூக மாநாட்டின் வாய்ப்பு வளங்கள் துரிதமாக இறங்கு முகம் கண்டுவருவது தெளிவாகத் தெரிந்தது. கல்வி அறிவுபெற்ற இந்துக்களில் பெரும்பாலோர் அரசியல் முன்னேற்றத்துக்கே முன் னிடம் அளிக்கின்றனர் என்றும், சமூக சீர்திருத்தத்தை அலட்சியப் படுத்துகிறார்கள் என்றும் சமூக மாநாட்டுக் கூட்டத் தொடர்களுக்குத் தலைமை வகித்த பெருமான்கள் புலம்பித் தீர்த்தனர்; அது மட்டு மல்ல. காங்கிரஸ் மாநாட்டில் பங்குகொள்வோர் எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கிறது என்றும், மாநாட்டில் கலந்துகொள்ளாமல் அதற்கு ஆதரவளிப்போர் எண்ணிக்கை இதைவிடவும் அதிகம் என்றும், ஆனால் அதே சமயத்தில் சமூக மாநாட்டில் கலந்து கொண்டோர் எண்ணிக்கை மிக மிகக் குறைவு என்றும் அவர்கள்

பிரலாபித்தனர். காலஞ்சென்ற திலகர் போன்ற அரசியல்வாதிகளின் கடும் எதிர்ப்பால் அதன் அணிகள் நாளுக்கு நாள் குறைந்து வந்தன; அதன்பாலான அலட்சியப்போக்கும் அதிகரித்து வந்தது. நாளடைவில், அரசியல் சீர்திருத்தத்தை ஆதரிக்கும் கட்சி வெற்றி பெற்றது; சமூக மாநாடு படிப்படியாக மறைந்து, மறக்கப்பட்டு விட்டது.[1] அதோடு சேர்ந்து சமூக சீர்திருத்தத்திற்கான உந்துதலும் இந்து சமுதாயத்திடமிருந்து விடை பெற்றுக்கொண்டது. திரு.காந்தியின் தலைமையில் இந்து சமுதாயம் ஒரு மனநோய் மருத்துவமனை ஆகாவிட்டாலும் அரசியலுக்குப் பின்னால் பைத்தியம் பிடித்து ஓடிற்று என்று நிச்சயமாகக் கூறலாம். இந்துக்களின் மனத்தில் ஒரு சமயம் ஆதிக்கம் செலுத்திவந்த சமூக சீர்திருத்தத்தின் இடத்தை ஒத்துழையாமை, சட்டமறுப்பு போன்றவையும் சுயராஜ்யக் கோஷமும் ஆக்கிரமித்துக் கொண்டன. அரசியல் கிளர்ச்சியின் இரைச்சலில், சந்தடியில், குழப்பத்தில், தங்கள் சமுதாயத்தில் தீர்வு காணவேண்டிய, பரிகாரம் தேடவேண்டிய ஏதேனும் தீமைகள் இருக்கின்றனவா என்றுகூட அறியாதவர்களாக இருந்தனர். இதை அறிந்தவர்களோ அரசியல் சீர்திருத்தத்தைப் போன்றே சமூக சீர்திருத்தமும் முக்கிய மானது என்பதை நம்ப மறுத்தனர்; சமூக சீர்திருத்தத்தின் முக்கியத் துவத்தை ஒப்புக்கொள்ளும் நிர்ப்பந்தத்துக்கு ஆளானபோது, அர சியல் அதிகாரத்தை முதலில் பெற்றாலொழிய சமூக சீர்திருத்தம் சாத்தியமில்லையென வாதிட முற்பட்டனர். சமூக சீர்திருத்தப் பிரச்சார விஷயத்தில் கூட பொறுமை காட்டமுடியாத அளவுக்கு அரசியல் அதி காரத்தைப் பெறுவதில் அவர்கள் அடக்கமுடியாத ஆவல் கொண் டிருந்தனர்; சமூகப் பிரசாரத்திற்காக அரசியல் பிரசாரத்திலிருந்து நிறைய நேரத்தையும் சக்தியையும் ஒதுக்க வேண்டியிருக்குமே என்று அவர்களுக்கு ஆத்திரம்! இது விஷயத்தில் தேசியவாதிகளின் கருத்தைப் பி;திபலித்து ஒரு நண்பர் திரு.காந்திக்குப் பின்வருமாறு பட்டவர்த்தனமாகவும், உரியமுறையிலும் எழுதினார்:[2]

> ''அரசியல் அதிகாரத்தை வென்றடையாமல் எத்தகைய ஒரு மாபெரும் சீர்திருத்தத்தையும் சாதிப்பது சாத்தியமல்ல என்று நீங்கள் கருதவில்லையா? இன்றைய பொருளாதாரக் கட் டமைப்பை எதிர்த்துப் போராட வேண்டுமல்லவா? அரசியல் புனர்நிர்மாணமின்றி வேறு எந்த புனர்நிர்மாணமும் வெற்றிபெற

1. இது குறித்து மேலும் அதிகமான விவரங்களுக்கு சாதிஒழிப்பு எனும் எனது கட்டுரையைக் காண்க.

2. ஹரிஜன், ஜனவரி 11, 1936

முடியாது; அப்படியிருக்கும்போது, எந்திரத்தில் அரைக்கப் பட்ட அரிசி, கைக்குத்தல் அரிசியைப் பற்றியெல்லாம் பேசிக்கொண்டிருப்பது வீண்வெட்டிப்பேச்சு என்றே கருது கிறேன்.''

ரானடே தலைமையிலிருந்த சமூக சீர்திருத்தக் கட்சி காங்கிர சுக்கு விட்டுக் கொடுத்து விட்டு களத்திலிருந்து மறைந்தது. இந்துக்கள் மத்தியிலிருந்து காங்கிரசுக்குப் போட்டியாக மற்றொரு கட்சியும் தோன்றிற்று. அதுதான் இந்து மகாசபை. அதன் பெயரைக் கொண்டு, இந்து சமுதாயத்தில் சீர்திருத்தங்களைக் கொண்டுவரும் கட்சி என அதனைக் கருதக்கூடும். ஆனால் அப்படியல்ல. காங் கிரசுடனான அதன் போட்டி சமூக சீர்திருத்தமா, அரசியல் சீர் திருத்தமா என்ற பிரச்சினையை அடிப்படையாகக் கொண்டது அன்று. காங்கிரஸ் கடைப்பிடித்துவரும் முஸ்லீம் - ஆதரவுக் கொள்கையே இந்து மகாசபை தோன்றுவதற்குக் காரணம். இந்தப் பிரச்சினையால்தான் காங்கிரசுடன் அதற்கு மோதல். இந்துக் களின் உரிமைகளை முஸ்லீம்களின் அத்துமீறல்களிலிருந்து பாது காப்பதற்காக இந்த அமைப்பு உருவாக்கப்பட்டது. முஸ்லீம்களை எதிர்ப்பதற்கு இந்துக்களை அணிதிரட்டுவது அதன் திட்டம். இந்துக் களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகத் தொடங்கப்பட்ட கட்சி என்றமுறையில் அது அரசியல் போக்குகளில் ஒரு கண்வைத்தபடி, சட்டசபை இடங்கள், ஸ்தல ஸ்தாபன இடங்கள், அரசு உத்தியோ கங்கள் போன்றவற்றைப் பற்றியே எந்த நேரமும் சிந்தித்துக் கொண் டிருக்கிறது. இதனால் சமூக சீர்திருத்தம்பற்றி நினைத்துப் பார்ப் பதற்கு அதற்கு நேரம் இல்லை. மேலும், அனைத்து இந்துக்களையும் ஓர் அணியில் திரட்ட வேண்டுமென்பதில் ஆர்வம் கொண்ட ஓர் அமைப்பு என்ற முறையில் சமூக சீர்திருத்தங்கள் பற்றிப் பேசி அதன் அணிகளிடையே பிளவு உண்டுபண்ணவும் அது விரும்ப வில்லை. அனைத்து இந்துக்களையும் ஒன்றுதிரட்டும் பொருட்டு, இந்து சமுதாயத்தில் தற்போது நிலவும் தீமைகளைப் பொறுத்துக் கொள்ளவும் அது தயாராக இருக்கிறது. இவ்வாறே, இந்துக்களை ஓரணியில் ஒன்று திரட்டுவதற்காக, 1935 ஆம் வருடச் சட்டம் வகுத்தளித்த கூட்டாட்சிக் கோட்பாட்டையும் அதில் எத்தனையோ குறைபாடுகளும் முரண்பாடுகளும் இருந்தாலும், வரவேற்க அது சித்தமாக இருக்கிறது. இதே நோக்கத்திற்காக, இந்து சமஸ்தானங்கள் இப்போதுள்ளபடியே நீடிப்பதை அது ஆதரிக்கிறது. 'இந்து சமஸ் தானங்கள் மீது கை வைக்காதே!' என்பது அதன் தலைவரது போர்க்குரலாக ஒலிக்கிறது. இந்தப் போக்கு முஸ்லீம்களுடைய

போக்கைவிடவும் விந்தையாக இருக்கிறது. இந்து சமஸ்தானங்களில் பிரதிநிதித்துவ அரசாங்கம் அமைக்கப்படுவது இந்துக்களுக்கு எந்த வகையிலும் தீங்கு விளைவிக்காது. அப்படியிருக்கும்போது இந்து மகா சபையின் தலைவர் இதனை ஏன் எதிர்க்கவேண்டும். தன்னால் சகித்துக்கொள்ள முடியாத முஸ்லீம்களுக்கு இது உதவக் கூடும் என்பது இதற்குக் காரணமாக இருக்கலாம்.

## IV

இந்துக்களும் முஸ்லீம்களும் தங்களது அணிகளைப் பேணிப் பாதுகாப்பதில் எந்த அளவுக்கு அதீத அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பதை மத்திய சட்டமன்றத்தில் 1939 ஆம் வருட முஸ்லீம் திருமணச்சட்டம் VIII ரத்து செய்யப்பட்டது குறித்து நடைபெற்ற விவாதத்தைவிட வேறு எதுவும் மிகத் துலாம்பரமாக, தெள்ளத் தெளிவாக எடுத்துக்காட்டிவிடமுடியாது. முஸ்லீம் சட்டத்தின்படி திருமணம் செய்துகொண்ட ஓர் ஆணோ அல்லது பெண்ணோ மதம் மாறினால் அது செல்லுபடியற்றதாகி விடும் என்று 1939ஆம் ஆண்டுச் சட்டம் கூறியது. இதன் விளைவாக, ஒரு மணமான முஸ்லீம் பெண் தனது மதத்தை மாற்றிக் கொண்டால், அவளது புதிய மதத்தைப் பின்பற்றும் ஒருவரை திருமணம் செய்துகொள்ள அவளுக்கு உரிமை வழங்கப்பட்டது. இந்தியாவெங்கிலும் இந்தச் சட்ட விதியைத்தான் கடந்த 60 ஆண்டுகளாக நீதிமன்றங்கள் அமல் படுத்தி வந்திருக்கின்றன.[1]

இந்தச் சட்டம் 1939 ஆம் வருட சட்டம் VIIIன்படி ரத்து செய்யப்பட்டது. அச்சட்டத்தின் பிரிவு 4 கூறுவதாவது:

> ''திருமணமான ஒரு முஸ்லீம் பெண்மணி இஸ்லாமைத் துறந்தாலோ அல்லது இஸ்லாமல்லாத வேறொரு மதத்திற்கு மாறினாலோ இதைக் கொண்டு அவளது திருமணத்தை ரத்து செய்யமுடியாது.
>
> ''எனினும் இத்தகைய மதத்துறப்புக்கு அல்லது மதமாற்றத்திற்குப் பிறகு, பிரிவு 2ல் கூறப்பட்டிருக்கும் காரணங்களில் ஏதேனும் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு திருமணத்தை ரத்து செய்வதற்கு நீதிமன்றங்களிலிருந்து அந்தப்பெண்மணி ஆணை பெறமுடியும்.

''ஆனால் வேறு ஏதேனும் மதத்திலிருந்து இஸ்லாமுக்கு மதம்மாறிவந்து பிறகு அதைத் துறந்துவிட்டு தனது பழைய மதத்துக்கே மீண்டும் திரும்பும் பெண்ணுக்கு இந்தப் பிரிவைச் சேர்ந்த இந்த ஷரத்து பொருந்தாது.[1]''

திருமணமான ஒரு முஸ்லீம் பெண் வேறொரு மதத்திற்கு மாறுவதன் காரணமாக இந்தச் சட்டத்தின்படி அவளது திருமணம் ரத்தாகாது. அவளுக்குக் கிடைப்பதெல்லாம் விவாகரத்து செய்வதற்கான உரிமைதான். மதமாற்றத்தை அல்லது மதப்புறக்கணிப்பை விவாகரத்துக்கான ஒரு காரணமாக பிரிவு 2ல் குறிப்பிடப்படாதது மிகவும் விந்தையாக இருக்கிறது. மணமான ஒரு முஸ்லீம் பெண்ணின் மனச்சான்று சுதந்திரத்தை இச்சட்டம் பறிக்கிறது; தான் பெரிதும் வெறுக்கும் ஒரு சமயத்தைப் பின்பற்றும் தன்னுடைய கணவனுடன் அவளை என்றென்றைக்குமாக கட்டிப்போடுகிறது.

பழைய சட்டத்தை மாற்றவேண்டும் என்பதற்கு ஆதரவாக முன்வைக்கப்படும் காரணங்கள் இங்கு பெரிதும் குறிப்பிடத்தக்கவை. இது சம்பந்தமான மசோதாவை முன்மொழிந்த குவாஜி காஸ்மி எம்.எல்.ஏ. மாற்றத்திற்கு ஆதரவாக மிகவும் கூர்மதியுடைய ஒரு வாதத்தைக் கைக்கொண்டார். அவர் தமது உரையில்[2] குறிப்பிட்டதாவது:

''மதத்தைத் துறப்பதை வேறு எந்த மதத்தையும் போன்றே இஸ்லாமும் ஒரு மாபெரும் குற்றமாக கிட்டத்தட்ட அரசுக்கு எதிராக இழைக்கப்படும் குற்றமாகக் கருதிவந்திருக்கிறது. இந்த விதிமுறையைக் கொண்டிருப்பது இஸ்லாம் சமயத்திற்கு புதுமை ஒன்றுமல்ல. எந்த ஒரு தேசத்தின் பழைய சட்டங்களை எடுத்துக் கொண்டாலும் இதே போன்றதொரு விதி அந்த தேசத்தின் சட்டத் தொகுப்புகளில் இடம்பெற்றிருந்ததைக் காணலாம். இதன்படி ஆணுக்கு மிகக்கடுமையான தண்டனை அதாவது மரணதண்டனை விதிக்கப்பட்டுவந்தது. பெண்களுக்கு சிறைதண்டனை மட்டுமே விதிக்கப்பட்டது. மதத்தைத்

1. இது சம்பந்தமான தீர்ப்பு ஜுபரோஸ்த் கானுக்கும் அவனுடைய மனைவிக்கும் இடையேயான வழக்கில் 1870ல் வடமேற்கு எல்லைப்புற மாகாண உயர்நீதிமன்றத்தால் வழங்கப்பட்டது.

2. சட்டமன்ற விவாதங்கள், 1938, தொகுதி V, பக்கங்கள் 1098 - 1101.

> துறப்பது என்பது இந்தப் பிரதான விதியின்படி ஒரு பாபமாகக் கருதப்பட்டது; இதனால் அது ஒரு குற்றமாக்கப்பட்டு தண் டிக்கப்பட்டது; இவ்வகையில் பெண் இத்தகைய குற்றம் இழைத்தால் மனைவி என்ற தனது அந்தஸ்தை இழந்தாள். அவள் இந்த அந்தஸ்தை இழந்தது மட்டுமன்றி, சமுதாயத் தில் தனக்கிருந்த சகல அந்தஸ்தையும் இழந்தாள்; அவளிட மிருந்து சொத்துரிமையும் சிவில் உரிமைகளும் பறிக்கப் பட்டன. இவ்வாறிருந்து வந்தபோது, இங்கு 1850 ஆம் ஆண்டில் ஒரு சட்டம் இயற்றப்பட்டதைப் பார்க்கிறோம். சாதி தகுதி யின்மைகள் நீக்கச் சட்டம் XXI, 1850 என்று இச்சட்டம் அழைக்கப்பட்டது.....

''.... ஒரு பெண் தனது மதத்தை நிராகரித்தால் அவளது சிவில் உரிமைகள் பறிக்கப்படும் என்றிருந்த விதி இச் சட்டத்தின்படி ரத்து செய்யப்பட்டது. இதே போன்று அவளது சொத்தோ அல்லது வாரிசு உரிமை போன்ற எதுவுமே பறிக்கப்படமாட்டாது. இவ்வாறு சட்டமன்றம் அவளுடைய உதவிக்கு வந்திருக்கிறது; அது அவளுக்கு ஓரளவு சிந்தனா சுதந்தரத்தை அளித்திருக்கிறது; தான் விரும்பும் எந்த மதத்தையும் பின்பற்றுவதற்கு அவளுக்கு ஒரு வகையான மத சுதந்திரத்தை அளித்திருக்கிறது; அவளைப் பாதிக்கக்கூடியதும், மதம் மாறுவதற்கு ஒரு தடையாக இருக்கக்கூடியதுமான பறிமுதல் விதியை அகற்றியிருக்கிறது. இதற்குப் பிறகு மனைவி யென்ற அவளது அந்தஸ்தின் மீது தொடர்ந்து கட்டுப்பாடு விதிக்க நமக்கு எந்த அளவுக்கு உரிமை இருக்கிறது என்பதே இங்கு எழும் கேள்வி. மனைவி என்ற அவளது அந்தஸ்து சமுதாயத்தில் ஓரளவு முக்கியத் துவம் வாய்ந்தது. அவள் ஏதோ ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவளாக இருக்கிறாள்; அவளுக்குக் குழந்தைகள் இருக்கின்றன; அவளுக்கு இதர சில தொடர்புகளும் இருக்கின்றன. அவள் முற்போக்கான மனோபாவம் கொண்டவளாக இருந்தால் பழைய சமயத்தில் தொடர்ந்து நீடிக்க விரும்பாதிருக்கக்கூடும். அவள் மதம் மாறினால் அவளுடைய கணவனுக்கு இனியும் அவள் மனைவியாக இருக்க மாட்டாள் என்று மேற்கொண்டும் ஒரு தண்டனையை அவளுக்கு ஏன் வழங்க வேண்டும்? இன்று நாம் சிந்தனா சுதந்திரத்தைப் பற்றி வானளாவப் பேசி வருகிறோம். மத சுதந்திரத்தைப் பற்றி சண்டப் பிரசண்டம் செய்து வருகிறோம்; பல்வேறு சமூகங்களிடையே கலப்புத் திருமணங்கள் நடைபெற வேண்டும் என்று வாதாடி வருகிறோம்; அப்படியிருக்கும்போது மத நம்பிக்கையைக் கைவிடுவதோ அல்லது மதம் மாறுவதோ தன்னுடைய கணவனுக்கு மனைவியாக இருக்கும்

உரிமையை ஒரு பெண்ணிடமிருந்து பறிப்பதை அனுமதிக்கும் ஒரு சட்ட ஷரத்தை ஆதரிப்பது முற்றிலும் முரண்பாடானாது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

ஒரு பெண் தனது மதத்தைத் துறப்பதைக் காரணமாகக் கொண்டு, அவளுடைய கணவனுடன் அவளுக்குள்ள உறவை முடிவுக்குக் கொண்டுவரும் எதிர்மறையான ஒரு விதியை நாம் எவ்வகையிலும் ஆதரிக்க முடியாது என்று இன்றைய நவீன கண்ணோட்டத்திலிருந்து கூறுவதற்கு எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. ஆனால் இது வாதத்தின் ஒரு பகுதி மட்டுமே ஆகும்.

''பார்சி திருமண மற்றும் விவாகரத்துச்சட்டம், 1936-ன் 32ஆவது பிரிவு என்ன கூறுகிறது என்று இங்கு பார்ப்போம்; 'பிரதிவாதி இன்னமும் ஒரு பார்சி இல்லை' என்று காரணம் காட்டி ஒரு திருமணமான பெண் விவாகரத்து கோரி வழக்கு தொடரலாம் என்று அந்தப் பிரிவு கூறுகிறது.

''இதில் இரண்டு விஷயங்கள் தெளிவாகத் தெரிகின்றன. முதலாவதாக, எத்தகைய சமயக்கருத்தோ அல்லது சமய உணர்வோ ஒரு மண உறவு முறிவுக்கு ஆதாரமாக இருப்பதில்லை; ஏனென்றால், மதமாற்றத்திற்குப் பிறகு இரண்டு ஆண்டுகள் கடந்துவிட்டால், வாதி எத்தகைய ஆட்சேபமும் தெரிவிக்கவில்லை என்றால், அப்போது திருமண உறவை முறித்துக்கொள்வதற்கு வழக்கு தொடர கணவனுக்கும் சரி, மனைவிக்கும் சரி எந்த உரிமையும் இல்லை. இரண்டாவதாக, பிரதிவாதி மதத்தை மாற்றிக்கொண்டது சம்பந்தமான முறையீட்டைப் பெறும் வாதிக்குத்தான் மணஉறவை முறித்துக் கொள்ளச்செய்யும் உரிமை உண்டு. இந்தச்சட்டம் ஒருபுறமிருக்க, இதர சமூகங்களைப் பொறுத்தவரையில், மதமாற்றம் மண உறவில் எத்தகைய விளைவுகளை ஏற்படுத்துகிறது என்பதை 1886 ஆம் வருட சுதேசி மதமாறிகளின் திருமண உறவு முறிப்புச் சட்டம் XXIலிருந்து தெரிந்து கொள்ளலாம். இச் சட்டம் இந்தியாவிலுள்ள எல்லாச் சமூகங்களுக்கும் பொருந்தும். ஓர் இந்தியன் கிறித்தவ சமயத்துக்கு மாறியதைக் கொண்டு மட்டுமே மணஉறவை முறிக்க முடியாது என்பதை இச்சட்டம் ஒப்புக் கொள்கிறது; ஆனால் அவன் நீதிமன்றத்துக்குச் சென்று, மதம் மாறாத மற்றத் தரப்பு தனது தாம்பத்யக் கடமைகளைச் செய்யவேண்டுமென்று கோர உரிமை உண்டு. பின்னர்

அவர்களுக்கு ஒரு வருடக்கால அவகாசம் தரப்படுகிறது; கணவன் மனைவி உறவை மீண்டும் மேற்கொள்வதற்கு அவர்களைத் தூண்டும் நோக்கத்தோடு குறிப்பிட்ட சிலர் முன்னிலையில் அவர்கள் ஒருவருடன் ஒருவர் மனம் விட்டுப் பேசவேண்டும் என்று நீதிபதி ஆணையிடுகிறார்; இதில் அவர்களிடையே உடன்பாடு ஏற்படவில்லை என்றால், கடமை தவறிய அடிப்படையில் அவர்களது மணஉறவு முறிக்கப் படுகிறது. இவ்வாறு மண உறவு முறிக்கப்பட்டாலும், அது மதம் மாறிய காரணத்திற்காக அல்ல என்பது இங்கு குறிப்பிடத் தக்கது. ஆக, மற்றொரு மதத்துக்கு மாறுவது திருமண உறவு முறிவதற்கானக் காரணமாக இருக்கக்கூடாது என்ற கோட்பாட்டை இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சமூகமும் ஏற்றுக் கொண்டிருக்கிறது.''

சட்டமன்றத்தின் மற்றொரு முஸ்லீம் உறுப்பினரும் மசோதாவின் தீவிர ஆதரவாளருமான சையத் குலாம் பிக் நைராங் சிறிதும் அஞ்சாமல் ஒளிவு மறைவின்றி, மசோதாவின் கோட்பாட்டை ஆதரித்துப் பின்வருமாறு உரை நிகழ்த்தினார்.[1]

''மதத்தைத் துறந்து வேறு மதத்திற்கு மாறுவதானது எத்தகைய நீதிமன்ற நடவடிக்கைகளுமின்றி, எந்த நீதிமன்ற ஆணையுமின்றி அல்லது வேறு எந்தச் சட்டச் சடங்குகளுமின்றி, எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மண வாழ்க்கைக்கு தன்னிச்சையாகவும் உடனடியாகவும் முடிவுகட்டுகிறது என பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள நீதிமன்றங்கள் எத்தகைய வரையறையுமில்லாமல், விதிவிலக்குகள் இல்லாமல் மிக நீண்ட காலமாகவே வலியுறுத்தி வந்திருக்கின்றன. நீதிமன்றங்கள் இத்தகைய ஒரு நிலையைத்தான் மேற்கொண்டு வந்திருக்கின்றன. தற்போது இந்த விஷயம் குறித்து ஹனாஃபி சட்ட வல்லுநர்களிடையே மூன்று வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. இவற்றில் ஒன்று பொகாரா சட்ட அறிஞர்களின் கருத்தாகும்; இக்கருத்து அதன் முழுமையில்லாமல், அரைகுறையான சிதைக்கப்பட்டவடிவத்தில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த பொகாரா கருத்து என்ன என்பதை திரு.காஸ்மியும் ஏனைய பேச்சாளர்களும் ஏற்கெனவே விவரித்திருக்கிறார்கள். மதமாற்றம்

1. சட்டமன்ற விவாதங்கள், 1938, தொகுதி V, பக்கங்கள், 1953-55.

காரணமாக திருமண உறவு முடிவுக்குக் கொண்டுவரப் படுகிறது என்று பொகாரா சட்ட அறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால் உண்மையில், மிகத் துல்லியமாகக் கூறவேண்டுமானால் - இதற்கு என்னிடம் போதிய சான்று இருக்கிறது - பொகாரா கருத்துப் படி மண உறவு தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுகிறதே அல்லாமல் முற்றிலுமாக முறிக்கப்படுவதில்லை. இவ்வாறு மண உறவு தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டபிறகு மனைவி நடத்தைபற்றி வருந்தி மனந்திருந்தி மீண்டும் இஸ்லாமைத் தழுவும் வரை பாதுகாப்பில் அல்லது கட்டுப்பாட்டில் வைக்கப் படுகிறாள்; பின்னர், அவளது திருமண உறவு தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறதே அன்றி, ரத்து செய்யப்பட வில்லையாதலால், திரும்பவும் தன்னுடைய கணவனுடன் சேர்ந்து வாழ்க்கை நடத்தும்படித் தூண்டி ஊக்குவிக்கப்படு கிறாள். இரண்டாவது கருத்துப்படி, திருமணமான ஒரு முஸ்லீம் பெண் மதம் மாறினால் அவளுடைய கணவனின் மனைவி யாக இருக்கமுடியாது; ஆனால் அவனுடைய அடிமைப் பெண்ணாக இருக்கமுடியும். இந்தக் கருத்தின் பின் தொடர்பாக இன்னொரு கருத்தும் கூறப்படுகிறது; அவள் தன்னுடைய முன்னாள் கணவனின் அடிமைப்பெண்ணாக இருக்க வேண்டிய தில்லை; அதற்குப் பதிலாக அவள் முஸ்லீம் சமுதாயம் முழு வதன் அடிமைப் பெண்ணாகிறாள்; யாரும் அவளைத் தங்கள் அடிமைப் பெண்ணாக வைத்துக் கொள்ளலாம்; மூன்றாவது கருத்து சாமர்கண்ட் மற்றும் பால்கின் உலேமாக்களுடையது. இத்தகைய கருத்தின்படி, மத மாற்றத்தால் திருமண உறவு பாதிக்கப்படாது, சம்பந்தப்பட்ட பெண் தனது கணவனின் மனைவியாகத் தொடர்ந்து நீடித்துவரலாம். இவைதாம் இந்த மூன்று கருத்துகள். இவற்றில் முதலாவது கருத்தின் அதாவது பொகாரா கருத்தின் ஒரு பகுதியை இங்குள்ள நீதிமன்றங்கள் வரித்துக்கொண்டு, அந்தப் பகுதியின் அடிப்படையில் தீர்ப்பு கள் மேல் தீர்ப்புகளாக வழங்கிவருகின்றன.

''சட்டத்தின் மூலம் நீதித்துறை தவறு திருத்தப்பட வேண்டியது இந்த தனியொரு சம்பவத்தில் மட்டுமல்ல என்பதையும், இன்னும் எத்தனையோ விஷயங்களில் நீதித் துறைத் தவறுகளும், சட்டம் குறித்த முரண்பட்ட கருத்துகளும், நிச்சயமின்மையும், தெளிவின்மையும் இருந்து வருகின்றன என்பதையும் இந்த அவை நன்கு அறியும். நீதித்துறைத் தவறுகள் அடிக்கடி சட்டத்தால் திருத்தப்பட்டு வருகின்றன. இந்தக் குறிப்பிட்ட விஷயத்தில் தவறு மேல் தவறு நடந்திருக்கின்றன;

> தவறுகளின் ஒரு சோகக்கதையே நிகழ்ந்திருக்கிறது. என்னிடம் இந்தத் தீர்ப்புகளைக் காட்டுவது வாதமின்றியே இப்பிரச் சினையை ஒப்புக்கொள்வதைப் போன்றதாகும். உயர்நீதி மன்றங்கள் என் கருத்துக்கு எதிராகத் தீர்ப்பளித்திருப்பதால், இந்த அவைக்கு வந்து, இவ்வாறு சட்டம் இயற்ற வேண்டும் அல்லது அவ்வாறு சட்டம் இயற்ற வேண்டும் என்றெல்லாம் கேட்பதற்கு எனக்கு யோக்கியதை இல்லை என்று வாதிப்பது எனது மசோதாவுக்கு அளிக்கப்படும் சரியான பதிலாக இருக்க முடியாது என்பது உணரப்பட வேண்டும்.''

மாற்றத்தின் ஆழத்தைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது, அதற்கு ஆதரவாக முன்வைக்கப்பட்டுள்ள வாதங்கள் உண்மை யில் போதுமானவை அல்ல என்றே கூறவேண்டும். மதமாற்றம் உண்மையானது என்று நிலைநாட்டப்பட்டு விடுகையில், பார்சிகள், கிறித்தவர்கள், முஃஸ்லீம்களின் விவாகரத்துச் சட்டங்களில் வேறு பாடு இருக்குமாயின், அப்போது முஸ்லீம் சட்டம் பார்சி மற்றும் கிறித்தவ சட்டத்தை விட மேம்பட்டதாகிறது, எனவே முஸ்லீம் சட்டத்தை பிற்போக்கானது என்று காட்டுவதைப் பார்க்கினும் பார்சி மற்றும் கிறித்தவச் சட்டம் முற்போக்கானது என்று காட்டுவதே முறையானதாக இருந்திருக்கும் என்பதை திரு.காஸ்மி உணரத் தவறிவிட்டார். அடுத்து, திரு.நைராங்கை எடுத்துக் கொள்வோம். முஸ்லீம் சட்ட வல்லுநர்களிடையே வெவ்வேறு கருத்துகள் நிலவு மாயின், இந்தக் கருத்துகளில், ஒரு முஸ்லீம் பெண்ணை அடிமைப் பெண்ணாக்கும் காட்டுமிராண்டித்தனமான கருத்துக்குப் பதிலாக அவளது சுதந்திரத்தை அங்கீகரிக்கக்கூடிய ஒரு முற்போக்கான கருத்தை ஏற்பது நீதிக்கும் நியாயத்துக்கும் இசைந்ததாக, உகந்ததாக இருக்குமல்லவா என்பதை ஆராய அவர் முயற்சி எடுத்துக்கொள்ள வில்லை.

இது ஒருபுறமிருக்க, இந்த சட்ட வாதப்பிரதிவாதங்களுக் கும் இந்த மாற்றத்தின் அடிப்படை நோக்கத்துக்கும் எத்தகைய சம்பந்தமுமில்லை. பெண்கள் பிற சமயங்களுக்குத் தவறான முறை யில் மதமாற்றம் செய்யப்படுவதைத் தடுப்பதும், அவர் சேர்ந் துள்ள மதத்தைச் சேர்ந்த ஒருவருக்கு அவளை அவசர அவசரமாகவும் உடனடியாகவும் திருமணம் செய்துவைப்பதும், இதன் மூலம் புதிய சமூகத்தில் அவளை நிலைகொள்ளச் செய்வதும், அவள் தனது பழைய மதத்துக்குத் திரும்பிச் செல்லாதபடி அவளைத் தடுத்து நிறுத்துவதுமே இந்த மாற்றத்தின் உண்மையான நோக்கமாகும். முஸ்லீம் பெண்களை இந்து சமயத்துக்கும் இந்துப் பெண்களை முஸ்லீம் சமயத்துக்கும் மதமாற்றம் செய்வது சமூக, அரசியல்

கண்ணோட்டத்தில் பார்க்கும்போது பயங்கரமான விளைவுகளையே உண்டு பண்ணும். இரு சமூகங்களுக்கிடையேயான எண்ணிக்கைப் பலம் பாதிக்கப்படுவதை இது குறிக்கும். பெண்களைக் கடத்திச் செல்லுவதால் இந்த அமைதி குலைவு ஏற்படுவதால் இதனை அலட்சியப்படுத்தமுடியாது. ஏனென்றால் பெண்கள்தான் தேசியத்தின் நாற்றுப்பண்ணையாகவும் சேமப்பண்ணையாகவும் விளங்குகின்றனர்; இதில் அவர்கள் இடத்தை ஆண்களால் எட்டமுடியாது[1]. பெண்களை மதமாற்றம் செய்து அவர்களுக்குத் திருமணங்கள் செய்துவைக்கும் இந்த நடவடிக்கைகள் யாவும் தத்தமது எண்ணிக்கை பலத்தை அதிகரிக்கும் நோக்கத்தோடு இந்துக்கள் முஸ்லீம்களுக்கு எதிராகவும், முஸ்லீம்கள் இந்துக்களுக்கு எதிராகவும் கட்டவிழ்த்து விடும் அப்பட்டமான அட்டூழியங்கள், அக்கிரமங்கள் என்பதில் ஐயமேதுமில்லை. பெண்களைக் கடத்திச் செல்லும் இந்த வெறுக்கத் தக்க, அருவருக்கத்தக்க நடைமுறை ஆடுமாடுகளைக் கடத்திச் செல்லுவது போன்று சர்வ சாதாரணமாகிவிட்டது; வகுப்பு அமைதிக்கு இது மிகப்பெரும் குந்தகம் விளைவிக்கும்; எனவே இதனைத் தடுத்து நிறுத்த முயற்சிகள் மேற்கொள்வது அவசியம். இதுவே இச்சட்டம் கொண்டுவரப்படுவதற்கு உண்மையான காரணம் என்பதை இதன் 4 ஆவது பிரிவிலுள்ள இரண்டு விதிகளிலிருந்து தெள்ளத்தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். முதல் விதி பின்வருமாறு கூறுகிறது: ஒரு முஸ்லீம் பெண்ணைத் தாங்கள் மதமாற்றம் செய்தால், அவ்வாறு மதமாற்றம் செய்யப்பட்டபோதிலும் அவளுடைய முன்னாள் கணவனுடன் அவள் சேர்ந்து வாழ்வதற்குத் தாங்கள் சம்மதிப்பதாக முஸ்லீம்களுக்கு இந்துக்கள் வாக்குறுதி அளிக்கிறார்கள். இதே போன்று, இரண்டாவது விதி கூறுவதாவது: திருமணமான ஓர் இந்துப் பெண்ணை தாங்கள் மதமாற்றம் செய்து ஒரு முஸ்லீமுக்குத் திருமணம் செய்து வைத்த பிறகு, அவள் இஸ்லாம் மதத்தைத் துறந்தால் அவளது திருமண உறவை தள்ளுபடி செய்வதற்கும், அவள் இந்து மதத்திற்கு மீண்டும் திரும்பச் செல்வதற்கும் தாங்கள் இணங்குவதாக இந்துக்களுக்கு முஸ்லீம்கள் வாக்குறுதி அளிக்கிறார்கள். ஆக, இந்தச் சட்டத்திருத்தத்திற்கு அடிப்படையாக இருப்பது இந்து, முஸ்லீம் ஆகிய இரு சமூகத்தினரும் தத்தமது எண்

1. தேசியத்தைப் பேணி வளர்த்துப் பாதுகாப்பதில் பெண் ஆற்றியுள்ள பங்கு போதிய அளவு கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. இதுவிஷயமாக ரேனன் தமது தேசிய இனம் பற்றிய கட்டுரையில் குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கவும்.

ணிக்கைப் பலத்தை நிலைநாட்ட மிகுந்த ஆர்வம் கொண்டிருக் கிறார்கள் என்பதும், இந்த நோக்கத்திற்காகவே பெண்களின் உரிமைகள் பலியிடப்பட்டு வந்தன என்பதும் கண்கூடு.

நாட்டைப் பீடித்துள்ள இந்தப் பிணியில் போதிய அளவு கவனம் செலுத்தப்படாத வேறு இரண்டு அம்சங்களும் உள்ளன.

இவற்றில் ஒரு அம்சம், ஒரு சமூகம் தனது சமூக அமைப்பில் எத்தகைய சீர்திருத்தம் மேற்கொள்வதையும் மற்ற சமூகம் பொறாமை யோடும் ஐயுறவோடும் நோக்குவதாகும். இத்தகைய சீர்திருத்தம் அதன் எதிர்ப்புச் சக்தியை அதிகப்படுத்தக் கூடியதாக இருப்பின், உடனே அது பகைமைத் தீயை மேலும் கொழுந்துவிட்டெரியச் செய்கிறது.

இந்தப் போக்கைத் தெளிவாக எடுத்துக்காட்டும் மிகவும் விந்தையான ஒரு நிகழ்ச்சியை சுவாமி சிரத்தானந்தர் விவரித்திருக் கிறார். **லிபரேட்டர்** இதழில் எழுதும்போது இந்த நிகழ்ச்சியை நினைவு கூறுகிறார். அவர் கூறுகிறார்:

> ''தேசிய' என்னும் சிறப்புப் பெயரை முதல் தடவையாகவும் கடைசித் தடவையாகவும் சூட்டிக்கொள்ளும் சமூக மாநாடு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அம் மாநாட்டுக்கு வழி காட்ட திரு.ரானடே அங்கு வந்திருக்கிறார். வாழ்க்கையின் சகல துறைகளிலும் அது ஆரம்பம் முதலே ஓர் இந்து மாநாடாக இருந்துவருகிறது. இந்த தேசிய சமூக மாநாட்டில் தன்னை இணைத்துக் கொண்ட ஒரே முகமதியப் பிரதிநிதி பரேய்லியைச் சேர்ந்த முப்தி சாகேப் என்பவர்தான். நல்லது! மாநாடு ஆரம்ப மாயிற்று. குழந்தைப்பருவத்திலேயே விதவைகளாகி விட்ட வர்கள் மறுமணம் செய்துகொள்ள வகை செய்யும் தீர் மானத்தை ஓர் இந்துப் பிரதிநிதியும் நானும் முன்மொழிந் தோம். வைதிகர்களான பண்டிட்டுகள் அத்தீர்மானத்தைக் கடுமையாக எதிர்த்தனர். பின்னர் முப்தி எழுந்து நின்று பேசு வதற்கு அமைதி கோரினார். அப்போது பைஜ்நாத் இதற்கு ஆட்சேபம் தெரிவித்தார்; இந்தத் தீர்மானம் இந்துக்களுடன் மட்டுமே சம்பந்தப்பட்டதால் அவர் பேசவேண்டிய அவசியம் இல்லை என்று அவர் வாதிட்டார். அவ்வளவுதான் சீறியெழுந் தார். அவரது கோபாவேசம் அனைவரையும் திகைக்க வைத்தது.

''இந்நிலைமையில் தப்பித்துக்கொள்வதற்கு மாநாட்டுத் தலைவருக்கு வேறு வழியேதும் இல்லை. எனவே முப்தி சாகேப் பேசுவதற்கு அனுமதிக்கப்பட்டார். மறுமணத்தை இந்து சாஸ்திரங்கள் அனுமதிக்கவில்லையாதலால், அதை வலியுறுத்துவது மகாபாவம் என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்! இதேபோன்றுதான், கிறித்தவர்களாகவும் முகமதியர்களாகவும் மதம் மாறியவர்கள் மீண்டும் இந்து மதத்துக்குத் திரும்புவது பற்றிய தீர்மானம் வந்தபோதும் முப்தி சாகேப் ஆவேசமானார். ஒருவன் இந்துமதத்தை உதறிவிட்டுச் சென்றானானால் அவன் மீண்டும் வருவதற்கு அனுமதிக்கக்கூடாது என்று வாதாடினார்.''

தீண்டப்படாதோரின் பிரச்சினையின்பால் முஸ்லீம்கள் கடைப்பிடிக்கும் போக்கை இவ்வகையில் மற்றோர் உதாரணமாகக் கூறலாம். தாழ்த்தப்பட்ட மக்கள் மீது முஸ்லீம்களுக்கு எப்போதுமே ஒரு கண் உண்டு. இந்துக்கள் எங்கே தாழ்த்தப்பட்ட மக்களைத் தன்வயப்படுத்திக் கொள்வார்களோ, தங்கள் அரவணைப்பில் கொண்டு வந்துவிடுவார்களோ என்ற அச்சம் முஸ்லீம்களுக்கு எப்போதுமே இருந்து வந்திருக்கிறது. அவர்களின் பொறாமைக்கு இது முக்கிய காரணமாக இருக்கக்கூடும். தாழ்த்தப்பட்ட இன மக்களை குடிமதிப்புக்கணக்கில் இந்துக்களாகப் பதிவு செய்யக் கூடாது என்ற ஒரு துணிச்சலான நிலையை 1909ல் முஸ்லீம்கள் மேற்கொண்டனர். 1923ல் திரு.முகமது அலி காங்கிரஸ் மகா சபையின் தலைவர் என்ற முறையில் நிகழ்த்திய உரையில் 1909ல் முஸ்லீம்கள் மேற்கொண்ட நிலையையும் தாண்டிச் சென்றார். அவர் கூறியதாவது:

''ஆலமரங்கள், அரசமரங்கள் பற்றி இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கும் இடையே உள்ள சச்சரவுகளும் வாத்தியக் கோஷ்டிகளுடன் நடைபெறும் ஊர்வலங்கள் பற்றிய சண்டையும் உண்மையிலேயே சிறுபிள்ளைத்தனமானவை. மத சம்பந்தமான நடவடிக்கைகள் பற்றிச் சுமுகமாக தீர்வு காணப்படாவிடில் நட்புக்குப் புறம்பான நடவடிக்கை என்று முறையிடுவதற்கு அடிப்படையாக அமையும் ஒரு பிரச்சினை இருக்கிறது; ஒடுக்கப்பட்ட சாதியினரை இந்து சமுதாயம் விரைவாகத் தன்வயப்படுத்திக் கொள்ளாவிடில் அவர்கள் சமய மாற்றம் செய்யப்படும் பிரச்சினையே அது: கிறித்தவ சமயப் பிரசார சபைகள் இந்தப் பணியில் ஏற்கெனவே தீவிரமாக ஈடுபட்டு வருகின்றன; இதுபற்றி சச்சரவு எதுவும் ஏற்படுவதில்லை. ஆனால் ஒரு முஸ்லீம் மத போதனை அமைப்பு இதே பணிக்

காக திட்டமிட்டுச் செயல்பட்டால் மறுகணமே இந்து சமு தாயத்தைச் சேர்ந்த பத்திரிகைகள் வரிந்து கட்டிக்கொண்டு கூக்குரல் எழுப்புகின்றன. ஒடுக்கப்பட்ட சாதியினரைப் பெருமளவில் மதமாற்றம் செய்வதற்காக ஒரு மதபோதனை அமைப்பிற்கு ஏற்பாடு செய்யும் திறமைவாய்ந்த, செல்வாக் குள்ள செல்வந்தரான ஒரு பிரமுகர் என்னிடம் ஒரு யோசனையை முன்வைத்தார்: இது விஷயத்தில் பிரபல இந்து கனவான்களோடு ஓர் ஒப்பந்தத்துக்கு வரமுடியும் என்பது அவரது கருத்து. அதன்படி இந்து மதபோதனை அமைப்பு களும் இஸ்லாம் மத போதனை அமைப்புகளும் நம் நாட்டில் அவை செயல்பட வேண்டிய வட்டாரங்களைத் தனித்தனியே ஒதுக்கிக் கொள்ளலாம்; ஒவ்வொரு மத சமுதாயமும் தயாரிப்புப் பணிக்காக ஓர் வருடமோ அல்லது அவசியமாயின் அதற்கு அதிகமான அவகாசத்தையோ எடுத்துக் கொள்ளலாம். தங்கள் மதத்திற்கு ஈர்க்கப்படக்கூடிய அல்லது மதம் மாற்றம் செய்யப் படக்கூடியவர்களின் எண்ணிக்கை பற்றி மதிப்பீடு செய்ய லாம். ஒவ்வொரு மத சமுதாயமும் திரட்டக்கூடிய ஊழியர்கள், நிதி ஆகியவற்றின் அடிப்படை யிலும், முந்தைய காலகட்டத்தில் மதம் மாற்றம் செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை அடிப் படையிலும் இதை நிர்ணயிக்கலாம். இம்முறையில் ஒவ்வொரு சமுதாயமும் ஈர்த்துக் கொள்வது அல்லது மதமாற்றம் செய்வது அல்லது சீர்திருத்தம் செய்வது போன்ற பணிகளில் ஈடுபட முடியும்: இதனால் ஒரு சமூகத்தினர் மற்றொரு சமூகத்தின ருடன் மோதிக்கொள்வதற்கு சந்தர்ப்பங்கள் இருக்கமாட்டா. இதை என் இந்து சகோதரர்கள் என்ன அர்த்தத்தில் எடுத்துக் கொள்வார்கள் என்பதை என்னால் கூறமுடியாது; இந்த யோசனையை ஒரு பரீட்சார்த்த முறையாக எவ்விதத்திலும் கள்ளங்கபடமின்றி, நேர்மையான மனத்தோடு அவர்கள் முன்வைக்கிறேன். பரோடா சமஸ்தானத்தில் 'கலிபிரஜா' மக்களதும் மத்திய மாகாணங்களில் கோண்டுகளதும் இரத்தக் கண்ணீர் வடிக்கத்தக்க மிகப் பரிதாப நிலையை, கல்லும் கரையக்கூடிய அவல நிலையை நான் நேரில் பார்த்திருக் கிறேன். இது நம் அனைவருக்கும் பெருத்த அவமானம், பெரும் இழிவு என்பதை ஒப்புக் கொள்கிறேன். அவர்களை இந்துக்கள் தம் அரவணைப்பில் கொண்டுவராவிட்டால், தமது சொந்த சமுதாயத்திற்குள் ஈர்த்துக் கொள்ளாவிட்டால் மற்றவர்கள் அதைச் செய்வார்கள், செய்யவேண்டும்; அப்போது வைதிக இந்துக்களும் அவர்களைத் தீண்டத்தகாதவர்களாக நடத்து வதை நிறுத்திக் கொள்வார்கள். மதமாற்றம் என்பது கீழான

உலோகங்களை பொன்னாக்கும் ரசவாதம் போல் தோன்று கிறது. ஆனால் இது மதமாற்றத்தை ஊக்குவிப்பதாகாதா?''

நாட்டைப் பீடித்துள்ள நோயின் மற்றொரு அம்சம் முஸ்லீம் களும் இந்துக்களும் ஒருவருக்கெதிராக ஒருவர் சற்றும் தணியாத மின்னல் வேகத்தில் செய்துவரும் 'தயாரிப்புகளாகும்', இரு பகை தேசங்களிடையே நடைபெறும் ஒரு பயங்கரமான ஆயுதப் போட்டி போல் இது காட்சியளிக்கிறது. இந்துக்கள் காசி பல்கலைக் கழகத்தை ஆரம்பித்தால் முசல்மான்கள் உடனே அலிகார் பல்கலைக் கழகத் தைத் தொடங்குகிறார்கள். இந்துக்கள் சுத்தி இயக்கத்தைத் தொடங் கினால் முஸ்லீம்கள் தப்லிக் இயக்கத்தை ஆரம்பிக்கிறார்கள். இந்துக்கள் சங்கதன் செய்தால் முஸ்லீம்கள் அதற்குப் போட்டியாக தஞ்சிம் நடத்துகிறார்கள். இந்துக்களுக்கு ஆர்.எஸ்.எஸ். எஸ்.[1] இருந் தால், முஸ்லீம்களுக்கு காக்சார்கள் [2]இருக்கிறார்கள். சமூகத்துறை யில் இந்தப் படைக்கலப் போட்டியும் தயாரிப்பு நடவடிக்கைகளும் போரில் ஈடுபட்டிருக்கும் நாடுகளுக்குரிய ஆவேசத்துடனும் அச்சத்துடனும் திட உறுதியுடனும் நடைபெற்றுவருகின்றன. இந்துக் கள் தங்களை அடிமைப்படுத்துவதாக முஸ்லீம்கள் பயப்படுகிறார் கள். பழைய நாட்களைப் போல் தங்களை மீண்டும் வெல்வதில் முஸ்லீம்கள் ஈடுபட்டிருப்பதாக இந்துக்கள் நினைக்கிறார்கள். இரு தரப்பினருமே போருக்கு ஆயத்தமாகி வருவதுபோல் தோன்று கிறது; ஒரு தரப்பினர் மற்ற தரப்பினரின் 'தயாரிப்புகளை' மிக உன்னிப்பாகக் கவனித்து வருகின்றனர்.

இத்தகைய நிலைமை வரும் பேரிடரை முன்காட்டும் அறிகுறி யாகவே தோன்றுகிறது. நச்சுச்சுழலாக, விஷச் சக்கரமாகத் தென்படு கிறது. இந்துக்கள் தங்கள் வலிமையைப் பெருக்கிக் கொண்டால் முஸ்லீம்கள் மிகுந்த பீதியடைந்து விடுகின்றனர்; தங்களுக்கு பேரச்சுறுத்தல் ஏற்பட்டிருப்பதாக எண்ணுகின்றனர். எனவே இந்த அச்சுறுத்தலை, சவாலை சமாளிக்க முஸ்லீம்கள் தங்கள் சக்திகளைப் பெருக்கிக்கொள்வதில் முனைந்து ஈடுபடுகின்றனர்; சவாலுக்கு சவாலாக இந்துக்களும் இதேபோன்ற நடவடிக்கைகளை மேற் கொள்கின்றனர். இவ்விதம் தயாரிப்புகள் மும்முரமாகும்போது ஐயுறவும் இரகசியமும் சதியும் வளர்கின்றன. அமைதிபூர்வமாக உடன்பாடு காணும் நம்பிக்கை முளையிலேயே கிள்ளி எறியப்

1. ராஷ்ட்ரிய சுவயம் சேவக சங்கம் என்பதன் சுருக்கமே ஆர்.எஸ்.எஸ்.எஸ். என்பது; இது இந்துக்களின் தொண்டர்படை.

2. காக்சார் என்பது முஸ்லீம்களின் தொண்டர் படை.

படுகிறது; இத்தகைய முயற்சிகளுக்கு விஷம் வைக்கப்பட்டு விடுகிறது; ஏனென்றால் ஒவ்வொருவரும் பயந்து கொண்டிருக்கின்றனர்: இரண்டு போக்குகளுக்கிடையே 'போர்' தவிர்க்க முடியாதது என்ற முடிவில் அதற்கான தயாரிப்பில் ஈடுபட்டிருக்கின்றனர். இத்தகைய நிலைமையில், இந்துக்களும் சரி, முஸ்லீம்களும்சரி பரஸ்பரம் ஒருவர் சவாலை மற்றவர் ஏற்பதற்குத் தங்களைத் தயார் செய்து கொள்வதில் தவிர வேறு எதிலும் கவனம் செலுத்த முடியாதிருப்பது முற்றிலும் இயல்பே. இது ஜீவ-மரணப் போராட்டம்; இதில் பிரதானமான விஷயம் உயிர்பிழைப்பதே தவிர, எந்த அளவுக்கு உயிர் பிழைப்போம், எப்படி உயிர் பிழைப்போம் என்பதல்ல முக்கிய பிரச்சினை.

இந்த விவாதத்திலிருந்து இரண்டு விஷயங்கள் தெளிவாகியிருக்கும். ஒன்று, இந்துக்களும் முஸ்லீம்களும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் அபாயமானவர்களாகக் கருதுகின்றனர். இந்த அபாயத்தை எதிர்த்து நின்று சமாளிக்கும் பொருட்டு, தங்களைப் பீடித்திருக்கும் கேடுகளைக் களையும் லட்சியத்தை மூட்டை கட்டிவைத்து விட்டனர். இது விரும்பத்தக்கதொரு நிலையா? அப்படியில்லை என்றால் இத்தகைய நிலைக்கு எப்படி முடிவு கட்டுவது?

சமூக சீர்திருத்தம் சம்பந்தப்பட்ட விஷயங்களை ஒதுக்கி வைப்பது விரும்பத்தக்க நிலை என்று யாரும் கூறமாட்டார்கள். எங்கு சமூகத் தீமைகள் நிலவினாலும் அவை துன்ப துயரங்களின், அக்கிரமங்களின், அநீதியின் சின்னங்களாக மாறுவதற்குள் அவற்றை ஒழித்துக்கட்டவேண்டும்; அரசுச் சமுதாயத்தின் ஆரோக்கியத்துக்கு இது இன்றியமையாதது. ஏனென்றால் எங்கும் இந்த சமூக, பொருளாதார சீர்கேடுகள்தான் புரட்சியின் அல்லது சமுதாயச் சிதைவின் பிறப்பிடமாக, ஊற்றுக் கண்ணாக அமைந்துள்ளன. அரசியலில் சீர்திருத்தத்திற்கு முன்னர் சமூக சீர்திருத்தம் ஏற்பட வேண்டுமா அல்லது சமூக சீர்திருத்தத்திற்கு முன்னர் அரசியல் சீர்திருத்தம் ஏற்படவேண்டுமா என்பது ஒரு சர்ச்சைக்குரிய விஷயமாக இருக்கலாம். ஆனால் அரசியல் அதிகாரத்தின் முழுமுதல் குறிக்கோள் சமூக, பொருளாதார சீர்திருத்த லட்சியத்துக்கு அதனைப் பயன்படுத்த வேண்டும் என்பதில் இருவேறு கருத்துகள் இருக்க முடியாது. அரசியல் அதிகாரம் இல்லாததால்தான் அவசரமான, முக்கியமான சமூகத் தீமைகள் சமுதாயத்தின் ஜீவசக்தியை, உயிர் நிலையை அரித்துத் தின்று அதனை அழித்து வருகின்றன என்ற உணர்வால் நியாயப்படுத்தப்படாத, உறுதிப்படுத்தப்படாத

அரசியல் போராட்டம் முழுவதும் வெறுமையானதாக, பயனற்ற தாகவே இருக்கும். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது: இந்துக் களும் முஸ்லீம்களும் எப்படியோ அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றிவிடுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அந்த அதிகாரத்தை அவர்கள் சமூக சீர்திருத்த நோக்கத்துக்காகப் பயன் படுத்துவார்கள் என்று எப்படி நம்பமுடியும்? இத்தகைய நம்பிக்கை இருப்பதாகத் தோன்றவில்லை. ஏனென்றால் இந்துக்களும் முஸ்லீம் களும் ஒருவரையொருவர் ஆபத்தானவர்களாகக் கருதும்வரை, அவர்கள் கவனம் முழுவதும் இந்த ஆபத்தைச் சமாளிப்பதற்கு தயாரிப்புகள் செய்வதிலேயே ஈடுபட்டிருக்கும். முசல்மான்களுக்கு எதிராக இந்துக்களும், இந்துக்களுக்கு எதிராக முசல்மான்களும் பொது முன்னணி அமைத்திருப்பது சமூகத் தீமைகள் குறித்து மௌனம் சாதிக்கும் ஒரு சதி சூழ்நிலையையே உண்டுபண்ணும். இந்தத் தீமைகள் பல பத்தாகப் பெருகிச் சென்றாலும், அவற்றில் உடனடி யாகக் கவனம் செலுத்துவது அவசியமாக இருந்தாலும் முஸ்லீம் களும் சரி, இந்துக்களும் சரி அவற்றில் அக்கறை செலுத்தமாட்டார் கள். இதற்குக் காரணம் உண்டு. மற்ற சமுதாயத்தின் அபாயத்தைச் சமாளிப்பதற்கு ஒன்றுபட்டிருக்க வேண்டிய நேரத்தில், சமூக சீர்திருத் தத்தில் ஈடுபடுவது கருத்து வேறுபாடுகளையும், உட்பூசல்களை யும், உட்பிளவுகளையும் ஏற்படுத்தித் தங்களது அணிகளைப் பல வீனப்படுத்தும் என்று அவர்கள் கருதுவதே அந்தக் காரணம். ஒரு சமூகம் இன்னொரு சமூகத்தை ஆபத்தானதாகக் கருதும்வரை எத்தகைய சமூக முன்னேற்றமும் சாத்தியமில்லை; அதுமட்டுமல்ல, பிற்போக்கு உணர்வுதான் இரு சமூகங்களின் சிந்தனைகளிலும் செயற்பாடுகளிலும் ஆதிக்கம் செலுத்திவரும், கொட்டமடித்துவரும்.

இந்த அபாயம் எவ்வளவு காலம் நீடிக்கும்? இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ், ஒரே நாட்டு மக்களாக கூடிவாழும் நிலைமை ஏற்படும்வரை நிச்சய மாக இந்த அபாயம் இருந்துவரவே செய்யும். ஒரே அரசியலமைப்புச் சட்டம் இரு சமூகங்களிடையே நிலவும் பரஸ்பர நிலையை ஏதேனும் ஒரு பக்கம் சாய்க்கும் சாத்தியக்கூறு இருப்பதால், அந்தப் பயம் இந்துக்களை முஸ்லீம்களுக்கு அபாயகரமானவர்களாக வும் முஸ்லீம்களை இந்துக்களுக்கு ஆபத்தானவர்களாகவும் ஆக்கு கிறது. இது உண்மை என்றால் பாகிஸ்தான் தான் இதற்குப் பரிகார மாக இருக்கமுடியும். ஏனென்றால் இந்த ஆபத்துக்கான பிரதான காரணக்கூறை அது அகற்றுகிறது. ஒருவரையொருவர் அடிமைப்

படுத்தும், அடக்கியாளும் அச்சத்திலிருந்து இந்துக்களையும் முஸ்லீம் களையும் பாகிஸ்தான் விடுவிக்கிறது. அதுமட்டுமன்று, பாகிஸ் தானுக்கும் இந்துஸ்தானுக்கும் தனித்தனி அரசியலமைப்பை வழங்கு வதன் மூலம், அன்றாட வாழ்க்கையில் சமநிலை வலிமையை நிலை நாட்டுவதற்காக நடைபெறும் இந்த நிலையான போராட்டத்துக்கு வழிவகுக்கும் அடிப்படையையே அது அகற்றுகிறது; இப்போது இரு சமூகங்களும் ஒரு மூலையில் ஒதுக்கிவைக்க நிர்ப்பந்திக்கப் பட்டுள்ள மிக அவசரமான சமூக முக்கியத்துவம் வாய்ந்த ஜீவாதார மான பிரச்சினைகளைக் கையாள்வதற்கு வாய்ப்பையும் அவகாசத் தையும் அது தேடித் தந்திருக்கிறது; மேலும், தத்தமது மக்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் கவனம் செலுத்துவதற்கும் அது வகை செய்கிறது; என்னவிருந்தாலும் சுயராஜ்யத்திற்கான போராட் டத்தின் தலையாய குறிக்கோளே இதுதான்.

இத்தகைய ஏதேனும் ஓர் ஏற்பாடு செய்யப்படவில்லை என்றால், இந்துக்களும் முஸ்லீம்களும் தாங்கள் வெவ்வேறு தேசங் களைச் சேர்ந்தவர்களைப் போல் ஒருவருக்கு எதிராக ஒருவர் செயல்படுவார்கள்; மற்றவர் தங்களை வெற்றிகொண்டுவிடுவாரோ என்று அஞ்சிக் கொண்டிருப்பார்கள். சமூக சீர்திருத்தத்தைவிட ஆக்கிரமிப்புக்கான தயாரிப்புகளே எப்போதும் முன்னிடம்பெறும். இது முற்றிலும் இயல்பு, இது குறித்து எவரும் வியப்படையத் தேவையில்லை. இது சம்பந்தமாக பெர்னாட்ஷா பின்வருமாறு குறிப்பிட்டார்:

> ''வெற்றிக்கொள்ளப்பட்ட ஒரு தேசம் புற்றுநோய் கண்ட ஒரு மனிதனைப் போன்றது; அவனால் தனது நோயைத் தவிர வேறு எது பற்றியும் நினைக்கமுடியாது. ஓர் ஆரோக்கியமான மனிதன் தன்னுடைய எலும்புகளைப் பற்றிக் கவலைப் படாதது போன்றே ஓர் ஆரோக்கியமான தேசமும் தனது தேசிய இனப் பண்பு குறித்துக் கவலைப்படுவதில்லை. ஆனால் ஒரு தேசத்தின் தேசியப் பண்பை நீங்கள் சிதைத்தால், தகர்த்தால் அதனை மீண்டும் பெற வேண்டும் என்பதைத் தவிர அதுவேறு எதைப் பற்றியும் சிந்திக்காது. அந்த தேசியவாதியின் கோரிக்கை நிறைவேற்றப்படாதவரை அது எந்த சீர்திருத்தவாதி கூறுவதை யும் செவிமடுக்காது; எந்தத் தத்துவஞானி மொழியும் தத்துவத் தையும் அது ஏறெடுத்தும் பார்க்காது; எந்த சமய போதகரின் போதனையையும் அது காதில் வாங்கிக் கொள்ளாது. ஒருங் கிணைவும் விடுதலையும் பெறும் கடமையில் தவிர வேறு

எந்தக் கடமையிலும், அது எத்தனை முக்கியத்துவம் வாய்ந்த தாயினும், கவனம் செலுத்தாது, நாட்டம் கொள்ளாது.''

இந்துக்களிடமிருந்து பிரிந்து வாழ விரும்பும் முஸ்லீம் களிடையே ஒற்றுமை இருந்தாலொழிய, ஒருவர் மற்றவரது ஆதிக்கம் பற்றிய பயத்திலிருந்து விடுபட்டாலொழிய இந்த சமூகத் தேக்க நிலை என்னும் சீர்கேட்டை சரிசெய்ய முடியாது.



# இயல் 11

# வகுப்பு வெறி

இந்துக்கள் முஸ்லீம்களின்பால் கடைப்பிடிக்கும் போக்கிலும் சரி, அதேபோன்று முஸ்லீம்கள் இந்துக்களின்பால் கடைப்பிடிக்கும் போக்கிலும் சரி ஒருவித வெறி உணர்வு பொதிந்திருப்பதை எதையும் மேலெழுந்தவாரியாக நோக்கும் வழக்கமுடையவர் கூடக் கவனிக்காமல் இருக்கமுடியாது. இந்துவின் வெறி உணர்வு புதிதாகத் தோன்றியுள்ள ஒருநிலை; அது இப்போதுதான் வளர ஆரம்பித்துள்ளது. முஸ்லீமின் வெறி உணர்வு அப்படியல்ல. அது அவன் மரபுரிமையாகப் பெற்ற சொத்து; இந்துவின் வெறி உணர்வோடு ஒப்பிடும்போது அது பழமையானது. காலம் வரும் போது இதில் இந்துவும் முன்னேறி முஸ்லீமை எட்டிப்பிடிக்க மாட்டான் என்று சொல்லமுடியாது. எனினும் இப்போதுள்ள நிலைமையில், இந்த வெறிஉணர்வை வெளியிடுவதில் முஸ்லீம் இந்துவை வெகுதூரம் பின்னுக்குத் தள்ளிவிட்டான்.

வகுப்புக் கலவரங்களைப் பற்றி விவரிக்கும் அத்தியாயத்தில் முஸ்லீம்களின் சமூகவெறி உணர்வு பற்றிப் போதிய அளவு கூறி விட்டோம். இப்போது முஸ்லீம்களின் அரசியல் வெறிஉணர்வு குறித்துச் சுருக்கமாகக் கூறுவோம். ஏனென்றால் இந்த அரசியல் வெறியுணர்வு நாம் அலட்சியபடுத்த முடியாத ஒரு கடுமையான நோயைத் தோற்றுவித்துள்ளது.

முஸ்லீம்களின் இந்த அரசியல் வெறி உணர்வில் மூன்று விஷயங்கள் கவனிக்கத் தக்கவை.

முதலாவதாக, முஸ்லீம்களது அரசியல் கோரிக்கைகளின் பட்டியல் முடிவில்லாமல் நீண்டுகொண்டே போகிறது. 1892 ஆம் ஆண்டில்தான் அவர்கள் முதன்முதலாக அரசியல் கோரிக்கைகளை முன்வைத்தனர்.

1885ல் இந்திய தேசிய காங்கிரஸ் உதயமாயிற்று. முதலில் அது சுயாட்சி கோராமல் நல்ல அரசாங்கம் வேண்டுமென்று வலியுறுத்திற்று. 1861 ஆம் ஆண்டுச் சட்டப்படி அமைக்கப்பட்ட மத்திய

மற்றும் மாகாண சட்டமன்றங்களின் இயல்பை காங்கிரசின் இந்தக் கோரிக்கைக்கு இணங்க மாற்றுவது அவசியம் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதிற்று. காங்கிரஸ் கிளர்ச்சி ஆரம்பக்கட்டத்தில் இருந்த நிலையில், அந்த அமைப்புக்கு முழு அளவுக்கு மதிப்பு அளிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்பவில்லை. அதற்கு ஓரளவு மதிப்பு கொடுத்தால் போதும் என்று அது கருதிற்று. எனவே, பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இந்தியக் கவுன்சில்கள் சட்டம் என்பதான ஒரு சட்டத்தை 1892ல் இயற்றிற்று. இந்தச் சட்டத்தில்தான் இந்தியாவில் சட்டமன்றங்களின் அமைப்புக்கு அடிப்படையாக மக்கள் பிரதி நிதித்துவக் கோட்பாட்டை பிரிட்டிஷ் அரசாங்கம் முதல் தடவை யாக ஓரளவுக்கு ஒப்புக்கொண்டது. ஆனால் இது தேர்தல் சம்பந்தப் பட்ட கோட்பாடல்ல. நியமனம் சம்பந்தப்பட்ட கோட்பாடுதான். ஒருவர் இவ்வாறு நியமனம் செய்யப்படுவதற்கு முன்பாக நகரசபைகள், மாவட்ட மன்றங்கள், பல்கலைக்கழகங்கள், வணிகர் சங்கங்கள் போன்ற முக்கியமான பொது அமைப்புகளால் தெரிந்தெடுக்கப் பட்டிருக்க வேண்டும். இரண்டாவதாக, இச்சட்டத்தின்படி அமைக்கப்பட்ட சட்டமன்றங்களில்தான் முசல்மான்களுக்கு தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கும் கோட்பாடு இந்தியாவின் அரசியலமைப் பில் முதல் முறையாக அறிமுகப்படுத்தப்பட்டது.

இந்தக் கோட்பாட்டின் அறிமுகத்தில் மர்மம் நிலவுகிறது. மர்மம் என்று இங்கு கூறுவதற்குக் காரணம் இது அந்த அளவுக்குச் சந்தடியின்றி, கரவாய், மறைவாய் புகுத்தப்பட்டதே ஆகும். ஸ்தாபன ரீதியான எந்த முஸ்லீம் அமைப்பும் முன்வைத்த கோரிக்கையின் விளைவாய் இந்தத் தனிப் பிரதிநிதித்துவத் திட்டம் உருவாகி விட வில்லை. அப்படியானால் எவரிடமிருந்து இது தோன்றிற்று? வைசிராய் டஃபரின் பிரபுதான் இதன் மூலகர்த்தா என்று கூறப்படு கிறது.[1] 1888 ஆம் ஆண்டு வாக்கில், சட்டமன்றங்களில் பிரதிநிதித் துவம் குறித்த பிரச்சினை ஆராயப்பட்டது; அப்போது, இந்தியப் பிரதிநிதித்துவம் இங்கிலாந்தின் பிரதிநிதித்துவ முறையைப் போன் றல்லாமல், இங்குள்ள பல்வேறு நலன்களையும் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டும் என்று அவர் வலியுறுத்தியதாகச் சொல்லப் படுகிறது. அப்படியானால் இங்கு மற்றொரு சுவையான கேள்வி எழுகிறது: இத்தகைய ஒரு திட்டத்தை முன்வைக்கும்படி டஃபரின்

1. முதலாவது வட்டமேசை மாநாட்டின் சிறுபான்மையினர் துணைக் குழுவில் சர் முகமது ஷாபி நிகழ்த்திய உரையைக் காண்க. (இந்தியப் பதிப்பு) பக்கம். 57.

பிரபுவை எது தூண்டியிருக்கக் கூடும்? ஏற்கெனவே மூன்றாண்டு களுக்கு முன்னர் தொடங்கப்பட்ட காங்கிரசிலிருந்து முஸ்லீம் களைப் பிரிப்பதே[1] இத்திட்டத்தின் நோக்கமாக இருக்கக்கூடும் என்று கூறப்படுகிறது.[2] இது எப்படியிருந்தபோதிலும், முஸ்லீம்களுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் அளிப்பது என்பது இந்தச் சட்டத்தின் மூலம் தான் முதல் முறையாக இந்திய அரசியலமைப்பின் ஓர் அம்ச மாயிற்று என்பதில் ஐயமில்லை. எனினும் இந்த சட்டம் முஸ்லீம் சமூகத்துக்குத் தேர்வு செய்யும் எத்தகைய உரிமையையும் வழங்க வில்லை என்பதும், அதேபோன்று குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள இடங்களைக் கோரும் உரிமையையும் அது அச்சமூகத்திற்கு அளிக்க வில்லை என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. அந்தச் சட்டம் செய்த தெல்லாம் முஸ்லீம்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவ உரிமையை வழங்கியதுதான்.

இவ்வாறு தனிப்பிரதிநிதித்துவ யோசனை முதலில் பிரிட்டி ஷாரிடமிருந்து வந்த போதிலும், தனி அரசியல் உரிமைகளின் சமூக மதிப்பை முஸ்லீம்கள் உணரத் தவறவில்லை. சட்டமன்றங் களைச் சீர்திருத்துவது சம்பந்தமாக அடுத்த நடவடிக்கை எடுப்பது பற்றிப் பரிசீலிக்கப்பட்டு வருகிறதென்பது தெரியவந்ததும் முஸ்லீம் கள் தாங்களாகவே ஒரு தூதுக்குழுவாக[3] வைசிராய் மிண்டோ பிரபு விடம் சென்றனர்; அவரிடம் பின் கண்ட கோரிக்கைகளை முன் வைத்தனர்:

(i) மாவட்ட மன்றங்களிலும் நகர மன்றங்களிலும் தங்களது எண்ணிக்கை பலத்திற்கும், சமூக நிலைக்கும், ஸ்தல செல் வாக்குக்கும் ஏற்ப வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட வேண்டும்.

1. ராஜா நரேந்திரநாத்தின் உரையைப் பார்க்க. அதே நூல் பக்கம். 65.

2. 1887 டிசம்பர் 28ஆம் தேதி லக்னோவில் நிகழ்த்திய உரையிலும், 1888 மார்ச் 16ஆம் தேதி மீரட்டில் நிகழ்த்திய உரையிலும் காங்கிரசில் சேர வேண்டாமென்று முசல்மான்களுக்கு சர் சையத் அகமது ஏற்கெனவே கூறியிருக்கிறார். திரு. முகமது அலி தமது தலைமை உரையில் இவற்றை வரலாற்றுச் சிறப்புமிக்க சொற்பொழிவுகள் என்று பாராட்டியிருக்கிறார்.

3. காங்கிரஸ் மகா சபையின் தலைவர் என்ற முறையில் திரு.முகமது அலி நிகழ்த்திய தமது சொற்பொழிவில் இந்தத் தூதுக்குழு 'பிரிட்டிஷார் ஏற்பாடு செய்த ஒரு நாடகம்' என்று குறிப்பிட்டார்.

(ii) பல்கலைக்கழக ஆட்சி அமைப்புகளில் முகமதியர்களுக்குப் பிரதிநிதித்துவம் தருவதற்கு உத்தரவாதம் அளிக்கவேண்டும்.

(iii) மாகாண சட்டமன்றங்களில் வகுப்புவாரி அடிப்படையில் பிரதிநிதித்துவம் தரப்படவேண்டும்; முகமதிய நிலப் பிரபுக்கள், வழக்குரைஞர்கள், வணிகர்கள், இதர முக்கிய நலன்களைப் பிரதிநிதிப்படுத்துவோர், மற்றும் மாவட்டமன்ற நகரசபை உறுப்பினர்கள், குறிப்பிட்ட தகுதியுள்ள பல்கலைக்கழகப் பட்டதாரிகள் போன்றோர் அடங்கிய விசேஷ வாக்காளர் குழுமங்களால் முஸ்லீம் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

(iv) மத்திய சட்டமன்ற மேலவையில் முகமதியப் பிரதிநிதிகளின் எண்ணிக்கை அவர்களது மக்கட்தொகைப் பலத்தைச் சார்ந்திருக்கலாகாது; முகமதியர்கள் வினைப்பயனற்ற சிறுபான்மையினராக ஒருபோதும் இருக்கக்கூடாது. அவர்கள் (நியமிக்கப்படுவதற்குப் பதிலாக) கூடிய மட்டும் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; நிலக்கிழார்கள், வழக்குரைஞர்கள், வணிகர்கள், மாகாண சட்டமன்ற உறுப்பினர்கள், பல்கலைக்கழக ஆட்சி உறுப்பினர்கள் போன்றோர்களைக் கொண்ட வாக்காளர் குழுமத்தின் மூலம் இந்தத் தேர்தல் நடத்தப்படவேண்டும்.

இந்தக் கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, 1909 ஆம் வருட சட்டத்தில் அவற்றிற்கு சட்ட அங்கீகாரம் அளிக்கப்பட்டன. இந்தச் சட்டத்தின்படி (1) தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவும், (2) அதுவும் தனி வாக்காளர் தொகுதிகள் மூலம் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவும், (3) பொது தொகுதிகளிலும் வாக்களிக்கவும், (4) பிரதிநிதித்துவம் அளிப்பதில் அவர்களது சமூகத்துக்குள்ள முக்கியத்துவம் கணக்கிலெடுத்துக்கொள்ளவும் முஸ்லீம்களுக்கு உரிமைகள் வழங்கப்பட்டன. பின்வரும் அட்டவணை 1909 ஆம் ஆண்டு சட்டப்படி சட்டமன்றங்களில் முஸ்லீம்கள் பெறும் பிரதிநிதித்துவ விகிதாசாரத்தையும், இது சம்பந்தப்பட்ட விதிமுறைகளையும் காட்டுகின்றன.

## 1990-ஆம் வருடச் சட்டத்தின்படி இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் வகுப்புவாரி விகிதாசாரப்படி இடங்கள் ஒதுக்கப்படும் சட்டமேலவைகளின் இயைபு.

| மாகாணங்கள் | 1909ஆம் ஆண்டுச் சட்டப்படி நிர்ணயிக்கப் பட்ட அதிகபட்ச கூடுதல் உறுப்பினர்கள் | பத்திகள் 5 மற்றும் 12 விதிமுறைகளின்படி அனுமதிக்கப்பட்ட கூடுதல் உறுப்பினர்கள் | பதவி முறைப்பட்ட உறுப்பினர்கள் | விதிமுறைகளின்படி சட்ட மேலவைகளின் பலம் — தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் — மொத்தம் | முஸ்லீம் அல்லாதோர் | முஸ்லீம்கள் | அதிகாரிகள் — சட்டத்துறை அதிகாரிகள் | அதிகாரிகள் — மற்றவர்கள்* | உத்தியோக சார்பற்றவர்கள் | நிபுணர்கள் | மொத்தம் | மொத்தபலம் பத்திகள் 4, 5, 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| இந்தியா | 60 | 60 | 8 | 27 | 22 | 5 | ... | 28 | 5 | .. | 33 | 68 |
| சென்னை | 50 | 45 | 4 | 21 | 19 | 2 | 1 | 16 | 5 | 2 | 24 | 49 |
| பம்பாய் | 50 | 45 | 4 | 21 | 17 | 4 | 1 | 14 | 7 | 2 | 24 | 49 |
| வங்காளம் | 50 | 50 | 4 | 28 | 23 | 5 | ... | 16 | 4 | 2 | 22 | 54 |
| பீகார் | 50 | 41 | 4 | 21 | 17 | 4 | ... | 15 | 4 | 1 | 20 | 45 |
| ஐ.மா | 50 | 49 | 1 | 21 | 17 | 4 | ... | 20 | 6 | 2 | 28 | 50 |
| பஞ்சாப் | 30 | 26 | 1 | 8 | 8 | எவரும் இல்லை | ... | 10 | 6 | 2 | 18 | 27 |
| பர்மா | 30 | 17 | 1 | 1 | 1 | எவரும் இல்லை | ... | 6 | 8 | 2 | 16 | 18 |
| அசாம் | 30 | 25 | 1 | 11 | 9 | 2 | .. | 9 | 4 | 1 | 14 | 25 |

★ 9ஆம் பத்தியிலுள்ள எண்ணிக்கை விதிமுறைகளின்படி அனுமதிக்கப்படும் அதிகபட்ச அதிகாரபூர்வமான உறுப்பினர்களைக் குறிக்கிறது.

இந்த விதிமுறைகள் பஞ்சாபையும் மத்திய மாகாணங்களை யும் தவிர அனைத்து மாகாணங்களிலும் செயல்படுத்தப்பட்டன. பஞ்சாபில் இவை செயல்படுத்தப்படாததற்குக் காரணம் பஞ்சாப் முஸ்லீம்களுக்கு விசேடப் பாதுகாப்பு தேவையில்லை என்று கருதப்பட்டதே ஆகும். மத்திய மாகாணங்களில் அச்சமயம் மேலவை இல்லாததால்[1] அங்கு இவ்விதிமுறைகளைச் செயல்படுத்த முடிய வில்லை.

1916 அக்டோபரில் மத்திய சட்டமன்ற மேலவை உறுப் பினர்கள் 19 பேர் வைசிராய் செம்ஸ்போர்டிடம் மகஜர் ஒன்றைச் சமர்ப்பித்தனர்; அரசியலமைப்புச் சட்டத்தில் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று அந்த மகஜரில் அவர்கள் கோரியிருந்தனர். இது தெரியவந்ததும் முஸ்லீம்கள் முஸ்லீம் சமுதாயத்தின் சார்பில் பல கோரிக்கைகளை முன்வைத்தனர். அவற்றில் சில வருமாறு:

(i) தனிப்பிரதிநிதித்துவக் கோட்பாடு பஞ்சாபுக்கும் மத்திய மாகாணங்களுக்கும் விரிவுபடுத்தப்பட வேண்டும்.

(ii) மாகாண மற்றும் மத்திய சட்டமன்ற மேலவைகளில் முஸ்லீம் பிரதிநிதிகளின் எண்ணிக்கையை நிர்ணயம் செய்ய வேண்டும்.

(iii) முஸ்லீம்களையும் அவர்களுடைய மதத்தையும் சமய பழக்கவழக்கங்களையும் பாதிக்கும் சட்டங்களிலிருந்து பாதுகாப்பு அளிக்க வேண்டும்.

இந்தக் கோரிக்கைகள் சம்பந்தமாக இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இடையே பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. இதன் விளைவாய் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதுதான் லக்னோ ஒப்பந்தம் எனப்படுவது. இந்த ஒப்பந்தத்தில் இரண்டு விதிகள் இடம் பெற்றி ருந்தன. ஒரு விதி சட்டம் சம்பந்தப்பட்டது. அந்த விதியின்படி பின் வருமாறு ஒப்புக்கொள்ளப்பட்டது:

''இந்த இரு சமூகங்களில் ஏதேனும் ஒன்றைப் பாதிக்கக்கூடிய (சம்பந்தப்பட்ட மேலவையிலுள்ள அந்த சமூகத்தின் உறுப் பினர்கள் இதைத் தீர்மானிப்பார்கள்) எந்த ஒரு மசோதாவையோ

1. மத்திய மாகாண சட்டமேலவை 1914 ல் அமைக்கப்பட்டது.

அல்லது அதன் ஏதேனும் ஒரு விதியையோ தீர்மானத்தையோ உத்தியோக சார்பற்ற ஒருவர் முன்மொழியும்போது, அந்தக் குறிப்பிட்ட மேலவையிலும், மத்திய சட்டமன்ற மேலவை யிலும், மாகாண சட்டமன்றங்களின் மேலவைகளிலும் உள்ள உறுப்பினர்களில் நான்கில் மூன்று பங்கினர் அந்த மசோ தாவையோ அல்லது அதன் எந்த விதியையோ அல்லது தீர்மானத்தையோ எதிர்த்தால் அவை சம்பந்தமாக மேற் கொண்டு எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளலாகாது.''

மற்றொரு விதி முஸ்லீம் பிரதிநிதித்துவத்தின் விகிதாசாரம் சம்பந்தப்பட்டது. மத்திய சட்டமன்ற மேலவை சம்பந்தமாக ஒப்பந்தம் பின்கண்டவாறு வகை செய்கிறது:

''தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய உறுப்பினர்களில் மூன்றி லொரு பங்கினர் முகமதியர்களாக இருப்பார்கள்; பல்வேறு மாகாணங்களிலிருந்தும் தனி முகமதிய வாக்காளர் தொகுதி கள் மூலம் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்; தனி முகமதிய வாக்காளர் தொகுதியின் மூலம் தேர்ந்தெடுக்கப் பட்டு மாகாண சட்ட மேலவைகளில் அவர்கள் எந்த விகிதா சாரத்தில் பிரதிநிதித்துவம் வகிக்கிறார்களோ கிட்டத்தட்ட அதே விகிதாசாரத்தில் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.''

மாகாண சட்ட மேலவைகளில் முஸ்லீம்களின் பிரதிநிதித் துவத்தைப் பொறுத்தவரையில், முஸ்லீம்களின் விகிதாசாரம் பின்கண்டவாறு இருக்க வேண்டுமென்று ஒப்புக் கொள்ளப்பட்டது.:[1]

| | மாகாண சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய உறுப் பினர்களின் விழுக்காடு |
|---|---|
| பஞ்சாப் | 50 |
| ஐக்கிய மாகாணங்கள் | 30 |
| வங்காளம் | 40 |
| பீகார் மற்றும் ஒரிசா | 25 |

1. ஏதோ சிலகாரணங்களால், அஸ்ஸாமில் முஸ்லீம்களின் பிரதிநிதித்துவ விகிதாச்சாரத்தை ஒப்பந்தம் நிர்ணயிக்கவில்லை.

| | |
|---|---|
| மத்திய மாகாணங்கள் | 15 |
| சென்னை | 15 |
| பம்பாய் | 33 |

முஸ்லீம்களுக்கு இந்த விகிதாசாரப்படி இடங்கள் ஒதுக்கப் படும் அதே வேளையில், பொது வாக்காளர் தொகுதிகளில் தங்களது இரண்டாவது வாக்குச் சீட்டைப் பயன்படுத்த 1909ஆம் ஆண்டு ஏற்பாட்டின்படி அவர்களுக்கு இருந்த உரிமை ரத்து செய்யப் படுகிறது.

இந்த லக்னோ ஒப்பந்தத்தை மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கை கண்டித்தது. எனினும் இது சம்பந்தப்பட்ட தரப்புகளுக் கிடையேயான ஒப்பந்தமாக இருப்பதால் அதனை நிராகரிக்கவும், அதனிடத்தில் தனது சொந்த முடிவைப் புகுத்தவும் அரசாங்கம் விரும்பவில்லை. எனவே, ஒப்பந்தத்தின் இரு விதிகளுமே அர சாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டு 1919 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தில் அவை இடம் பெற்றன. சட்டம் சம்பந்தப் பட்ட விதி செயல்படுத்தப்பட்டபோதிலும், அது வேறு ஒரு வடி வத்தில் செயல்படுத்தப்பட்டது. சமூகங்களுக்குப் பாதிப்பை ஏற் படுத்தும் சட்டங்களை எதிர்ப்பதை சட்டசபை உறுப்பினர்களுக்கு விட்டுவிடுவதற்குப் பதிலாக வேறொரு ஏற்பாடு செய்யப்பட்டது.[1] அதாவது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழுள்ள குடிமக்களில் எந்த ஒரு பிரிவினரது சமயத்தையோ, சமய வினைமுறைகளையோ அல்லது பழக்க வழக்கங்களையோ பாதிக்கும் எந்தச் சட்டமும் கவர்னர் - ஜெனரலின் முன் அனுமதியின்றி, இந்திய சட்டமன்றங் களின் எந்த ஓர் அவையின் கூட்டத்திலும் கொண்டுவரப்படக் கூடாது என்று விதிக்கப்பட்டது.

பிரதிநிதித்துவம் சம்பந்தப்பட்ட விதி அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது; எனினும் பஞ்சாப் மற்றும் வங்காள முஸ்லீம் களுக்குப் போதிய அளவு நியாயம் வழங்கப்படவில்லை என்று அது கருதிற்று.

1919 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி அமைக்கப் பட்ட சட்ட மன்றங்களின் இயைபிலிருந்து இந்த சலுகைகளினால் கிட்டும் பலன்களைத் தெரிந்து கொள்ளலாம். அதுவருமாறு:

1. 1919 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டம், பிரிவு 67(2) (c.b.)

## சட்டமன்றங்களின் இயைபு

| | தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் | | | | நியமன உறுப்பினர்கள் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | சட்டப்படியான குறைந்தபட்சம் | மொத்தம் | முஸ்லீம்கள் | முஸ்லீம் அல்லாதோர் | அதிகாரிகள் | அதிகாரிகள் அல்லாதவர்கள் | உண்மையான மொத்தம் |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| சட்டப்பேரவை | 145 | 104 | 52 | 52 | 26 | 15 | 145 |
| மேலவை | 60 | 33 | 11 | 22 | 17 | 10 | 60 |
| சென்னை மாகாண மேலவை | 118 | 98 | 13 | 85 | 11 | 23 | 132 |
| பம்பய் மாகாண மேலவை | 111 | 86 | 27 | 59 | 19 | 9 | 114 |
| வங்க மாகாண மேலவை | 125 | 114 | 39 | 75 | 16 | 10 | 140 |
| ஐ.மா. மாகாண மேலவை | 118 | 110 | 29 | 71 | 17 | 6 | 123 |
| பஞ்சாப் மாகாண மேலவை | 83 | 71 | 32 | 39 | 15 | 8 | 94 |
| பீகார் மாகாண மேலவை | 98 | 76 | 18 | 58 | 15 | 12 | 103 |
| ம.மா.மாகாண மேலவை | 70 | 55 | 7 | 48 | 10 | 8 | 73 |
| அஸாம் மாகாண மேலவை | 53 | 39 | 12 | 27 | 7 | 7 | 53 |

**[1]லக்னோ ஒப்பந்தப்படி முஸ்லீம்கள் பெறும் பிரதிநிதித்துவத்தின் அளவை பின்கண்ட அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:-**

| சட்டமன்ற அமைப்பு | வாக்காளர் தொகுதியின் மொத்த மக்கள் தொகையில் முஸ்லீம்களின் விழுக்காடு (1921 சென்சஸ்) | மொத்த உறுப்பினர்களில் முஸ்லீம் உறுப். பினர்களின் விழுக்காடு | தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய உறுப்பினர்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட முஸ்லீம் உறுப்பினர்களின் விழுக்காடு | இந்திய பொது (வகுப்பு வாரி) தொகுதிகளிலிருந்து தேர்தல் மூலம் நிரப்பப்பட்ட இடங்களின் மொத்த உறுப்பினர்களில் முஸ்லீம் உறுப்பினர்களின் விழுக்காடு[2] | லக்னோ ஒப்பந்த விழுக்காடு |
|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) | (5) |
| பஞ்சாப் | 55.2 | 40 | 48.5 | 50 | 50 |
| ஐக்கிய மாகாணங்கள் | ... | 25 | 30 | 32.5 | 30 |
| வங்காளம் | 54.6 | 30 | 40.5 | 46 | 40 |
| பீகாரும் ஒரிசாவும் | 10.9 | 18.5 | 25 | 27 | 25 |
| மத்திய மாகாணங்கள் | 4.4 | 9.5 | 13 | 14.5 | 15 |
| சென்னை | 6.7 | 10.5 | 14 | 16.5 | 15 |
| பம்பாய் | 19.8 | 25.5 | 35 | 37 | 33.3 |
| அசாம் | 32.2 | 30 | 35.5 | 37.5 | வகை செய்யப்படவில்லை |
| சட்டப் பேரவை | 24.0 | 26 | 34 | 38 | 33.3 |

1. சட்டக் கமிஷன், 1929, அறிக்கை, தொகுதி 1. பக்.189

2. பத்தி 3ல் வணிகம் போன்ற விசேடத் தொகுதிகளில் தேர்ந்தெடுக்கப்படும் இந்திய உறுப்பினர்கள் அடங்குவர்; இவர்களின் வகுப்புவாரி விகிதாசாரம் அவ்வப்போது சிறிதளவு வேறுபடக்கூடும்; இதே போன்று அதிகாரிகளையும் அதிகாரிகளல்லாதவர்களையுமம் கொண்ட பத்தி 2-ம் வெவ்வேறு காலங்களில் சிறிதளவு வெவ்வேறு முடிவுகளைக் காட்டக்கூடும்.

இந்த அட்டவணை லக்னோ ஒப்பந்தப் பிரகாரம் முஸ்லீம்கள் பெறும் பிரதிநிதித்துவத்தை அத்தனைத் தெளிவாகக் காட்ட வில்லை. சவுத்பரோ பிரபுவைத் தலைவராகக் கொண்ட வாக் குரிமைக் கமிட்டியின் அறிக்கை குறித்த தனது தகவல் அறிக்கை யில்[1] இந்திய அரசாங்கம் இதனைத் தயாரித்து அளித்திருந்தது. பின்கண்ட அட்டவணை இத் தகவல் அறிக்கையிலிருந்து பெறப் பட்டதாகும்; 1909 ஆம் ஆண்டில் அரசாங்கம் அளித்ததைக் காட்டி லும் அதிகப் பிரதிநிதித்துவத்தை லக்னோ ஒப்பந்தப் பிரகாரம் முஸ்லீம்கள் பெற்றதை இந்த அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

| | மக்கட்தொகை யில் முஸ்லீம் விழுக்காடு | முன்மொழியப்பட்ட முஸ்லீம் இடங்களின் விழுக்காடு | விழுக்காடு (1) லிருந்து (2) |
|---|---|---|---|
| வங்காளம் | 52.6 | 40 | 76 |
| பீகாரும் ஒரிசாவும் | 10.5 | 25 | 238 |
| பம்பாய் | 20.4 | 33.3 | 163 |
| மத்திய மாகாணங்கள் | 4.3 | 15 | 349 |
| சென்னை | 6.5 | 15 | 231 |
| பஞ்சாப் | 54.8 | 50 | 91 |
| ஐக்கிய மாகாணங்கள் | 14 | 30 | 214 |

இந்திய அரசியலமைப்புச் சட்டம் செயல்படுவதை ஆராய் வதற்காகவும், மேற்கொண்டு செய்ய வேண்டிய சீர்திருத்தங்களைப் பரிந்துரைப்பதற்காகவும் சைமன் கமிஷன் அமைக்கப்படுவதை 1927ல் பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்தது. உடனே முஸ்லீம்கள் மேலும் பல அரசியல் கோரிக்கைகளை முன்வைக்க முன்வந்தனர். முஸ்லீம் லீக், அகில இந்திய முஸ்லீம் மாநாடு, அனைத்துக் கட்சி முஸ்லீம் மாநாடு, ஜமயத்-உல்- உலேமா, கிலாபத் மாநாடு முதலிய பல்வேறு முஸ்லீம் மேடைகளிலிருந்து இந்தக் கோரிக்கை கள் முன் வைக்கப்பட்டன. இந்தக் கோரிக்கைகள் யாவும் அடிப்

1. இந்திய அரசியலமைப்புச் சீர்திருததங்கள்(வாக்குரிமை) குறித்த ஐந்தாவது தகவல் அறிக்கை, ஏப்ரல் 23, 1919, பக்கம் 21.

படையில் ஒரே மாதிரியாக இருந்தன. இவை அனைத்தும் முஸ்லீம் லீக் சார்பில் திரு.ஜின்னாவால் வகுத்தளிக்கப்பட்டவை என்பதை இங்கு கூறினால் போதுமானது.[1]

இந்தப் பதினான்கு அம்சக் கோரிக்கைகள் வருமாறு:

1. எதிர்கால அரசியலமைப்பு கூட்டாட்சி (சமஷ்டி) வடிவில் அமைந்திருக்க வேண்டும்; கூட்டாட்சிக்கான அதிகாரங்கள் போக வரையறுக்கப்படாமல் எஞ்சியுள்ள அதிகாரங்கள் மாகாணங்களுக்கு வழங்கப்பட வேண்டும்.

2. அனைத்து மாகாணங்களுக்கும் ஒரே மாதிரியாக அமைந்த தன்னாட்சி உரிமை அளிக்கப்படவேண்டும்.

3. ஒவ்வொரு மாகாணத்திலும் சிறுபான்மையினருக்குப் போதிய அளவிலும் பயனுறுதியுள்ள முறையிலும் பிரதிநிதித்துவம் அளிக்கும் திட்டவட்டமான கோட்பாட்டின் அடிப்படையில் நாட்டிலுள்ள எல்லா சட்டமன்றங்களும் இதர தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்புகளும் திருத்தியமைக்கப்படவேண்டும்; அவ்வாறு செய்யும்போது எந்த ஒரு மாகாணத்திலும் சிறுபான்மையினரின் பெரும்பான்மையையோ அல்லது இன்னும் சொல்லப்போனால் சமத்துவத்தையோ குறைக்காதபடிப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

4. மத்திய சட்டமன்றத்தில் முஸ்லீம் பிரதிநிதித்துவம் மூன்றிலொரு பங்குக்குக் குறையாமல் இருக்க வேண்டும்.

5. தனிவாக்காளர் தொகுதிகள் மூலம் வகுப்புவாரிக் குழுவினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் தற்போதைய

1. இவை திரு. ஜின்னாவின் 14 அம்சக் கோரிக்கைகள் எனப் பெயர் பெற்றன. உண்மையில் இந்த எண்ணிக்கை 15 ஆக இருந்தது. பல்வேறு கருத்துகளைக் கொண்ட முஸ்லீம் தலைவர்களின் கூட்டம் 1927 மார்ச் மாதம் டில்லியில் நடைபெற்றபோது இக்கோரிக்கைகள் வகுக்கப்பட்டு, டில்லி பிரேரணைகள் என வழங்கப்பட்டன. தனது 14 அம்சக் கோரிக்கைகள் எப்படி உருவாயின என்பது குறித்த திரு.ஜின்னாவின் விளக்கத்தை அனைத்திந்திய பதிவேடு, 1929, தொகுதி 1, பக்கம் 367ல் பார்க்கவும்.

முறை தொடர்ந்து நீடிக்கவேண்டும்; ஆனால் எந்த சமயத்திலும் தனி வாக்காளர் தொகுதியைக் கைவிட்டுக் கூட்டுத் தொகுதியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள எந்த ஒரு சமூகத்திற்கும் உரிமை இருக்க வேண்டும்.

6. எந்தச் சமயத்திலும் பிரதேச மறு சீரமைப்பு அவசிய மாகும்போது அது பஞ்சாப், வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம் ஆகியவற்றில் முஸ்லீம் பெரும் பான்மையை எவ்வகையிலும் பாதிப்பதாக இருக்கக் கூடாது.

7. எல்லாச் சமூகங்களுக்கும் முழுச் சமய சுதந்திரம் உத்தர வாதம் செய்யப்படவேண்டும்; அதாவது எந்த மதத்தை யும் பின்பற்றும் சுதந்திரம், வழிபாட்டுச் சுதந்திரம், சமய வினைமுறைகளைப் கடைப்பிடிக்கும் சுதந்திரம், பிரசார சுதந்திரம், கூட்டம் கூடும் சுதந்திரம், கல்வி போதனை சுதந்திரம் வழங்கப்பட வேண்டும்.

8. எந்த ஒரு மசோதாவும் அல்லது தீர்மானமும் அல்லது அதன் எந்த ஒரு பகுதியும் எந்தச் சட்டமன்றத்திலும் அல்லது வேறு எந்தத் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பிலும் கொண்டு வரப்படும்போது, அத்தகைய மசோதா அல்லது தீர்மானம் அல்லது அதன் ஒரு பகுதி தங்களது சமூக நல னுக்கு ஊறு விளைவிப்பதாக இருக்கிறது என்று அந்தக் குறிப்பிட்ட அமைப்பில் அங்கம் வகிக்கும் எந்த ஒரு சமூகத்தின் உறுப்பினர்களிலும் நான்கில் மூன்று பங்கினர் எதிர்த்தால் அது நிறைவேற்றப்படக்கூடாது அல்லது இதற்கு ஒரு மாற்று ஏற்பாடாக இத்தகைய விஷயங் களைச் சமாளிப்பதற்கு காரிய சாத்தியமான, நடைமுறை சாத்தியமான வேறு வழிமுறைகளைக் காணவேண்டும்.

9. பம்பாய் ராஜதானியிலிருந்து சிந்து பிரிக்கப்படவேண்டும்.

10. ஏனைய மாகாணங்களைப் போன்றே வடமேற்கு எல்லைப் புற மாகாணத்திலும் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

11. அரசு மற்றும் தன்னாட்சி அமைப்புகளின் எல்லாப்

பணித் துறைகளிலும் திறமையை உரிய முறையில் கணக்கி லெடுத்துக் கொண்டு, இதர இந்தியர்களுடன் முஸ்லீம் களுக்குப் போதிய அளவு பங்களிப்பதற்கு அரசிய லமைப்புச் சட்டத்தில் வழிவகை ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

12. முஸ்லீம் சமயம், கலாசாரம், தனிமனித உரிமைகள் முதலியவற்றைப் பாதுகாப்பதற்கும், முஸ்லீம் கல்வி, மொழி, மதம், தனிநபர் சுதந்திரம், முஸ்லீம் அறக்கொடை அமைப்புகள் ஆகியவற்றை மேம்படுத்துவதற்கும், அரசு மற்றும் தன்னாட்சி அமைப்புகள் வழங்கும் மானியங் களில் முஸ்லீம் அறக்கொடை அமைப்புகளுக்கு உரிய பங்கு கிடைப்பதற்கும் அரசியலமைப்புச் சட்டத்தில் போதிய பாதுகாப்புகள் செய்யப்பட வேண்டும்.

13. குறைந்த பட்சம் மூன்றிலொரு பங்கு முஸ்லீம் அமைச்சர் கள் இடம் பெறாத எந்த அமைச்சரவையும் மத்திய அள விலோ, மாகாண அளவிலோ அமைக்கப்படலாகாது.

14. இந்தியக் கூட்டரசின் அங்கங்களாக அமைந்துள்ள அரசு களின் சம்மதமின்றி அரசியலமைப்புச் சட்டத்தில் மத்திய சட்டமன்றம் எத்தகைய மாறுதலையும் செய்யக்கூடாது.

15. இப்போதைய சூழ்நிலைமைகளில் தனி வாக்களர் தொகுதி கள் மூலம் நாட்டின் பல்வேறு சட்டமன்றங்களிலும் இதர தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்புகளிலும் முசல்மான்கள் பிரதிநிதித்துவம் பெறுவது தவிர்க்க முடியாதது என்ப தாலும், இந்த உரிமையை முசல்மான்களிடமிருந்து பறிப்ப தில்லை என்று அரசாங்கம் உறுதி அளித்திருப்பதாலும் அவர்களது ஒப்புதலின்றி இந்த உரிமையை அவர்களிட மிருந்து விலக்கிக்கொள்ள முடியாது; தவிரவும், மேலே (அல்லது இங்கு) குறிப்பிடப்பட்டுள்ள முறையில் தங்களது உரிமைகளும் நலன்களும் பாதுகாக்கப்படுவதாக முசல் மான்கள் திருப்தியடையாதவரை நிபந்தனைகளுடனோ அல்லது நிபந்தனைகளின்றியோ கூட்டு வாக்காளர் தொகுதி கள் அமைக்கப்படுவதற்கு அவர்கள் எவ்விதத்திலும் இணங்கமாட்டார்கள்.

குறிப்பு: முசல்மான்கள் சிறுபான்மையினராக உள்ள மாகாணங்களில் அவர்களது மக்கட்தொகை விகிதாசாரத்திற்கு அதிகமாக அவர்கள் பிரதிநிதித்துவம் பெற்றிருக்கும் பிரச்சினை பின்னர் பரிசீலிக்கப்படும்.

இதனை முஸ்லீம் கோரிக்கைகளின் ஓர் ஒன்றுபட்ட தொகுப்பு எனலாம். இவற்றில் சில கோரிக்கைகள் பழையவை; சில கோரிக்கைகள் புதியவை, பழைய கோரிக்கைகள் சேர்க்கப்பட்டிருப்பதற்கு அவற்றினின்று கிட்டியுள்ள ஆதாயங்களை, அனுகூலங்களைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்ற நோக்கம் காரணமாகும். முஸ்லீம் நிலையிலுள்ள பலவீனங்களை அகற்றும் பொருட்டே புதிய கோரிக்கைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. புதிய கோரிக்கைகளில் பின்வரும் ஐந்து கோரிக்கைகள் அடங்கும்: 1. பஞ்சாபிலும் வங்கத்திலும் முஸ்லீம் பெரும்பான்மையினருக்கு அவர்களது மக்கட்தொகை விகிதாசாரத்திற்கு ஏற்ப பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும்; 2. மத்திய மற்றும் மாகாண அமைச்சரவைகளில் முஸ்லீம்களுக்கு மூன்றிலொருபங்கு இடங்கள் வழங்கப்பட வேணடும். 3. பணித்துறைகளில் முஸ்லீம்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் தரப்படவேண்டும். 4. பம்பாய் ராஜதானியிலிருந்து சிந்துவைப் பிரிக்க வேண்டும்; வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தையும் பலுச்சிஸ்தானையும் தன்னாட்சி படைத்த மாகாணங்கள் அந்தஸ்துக்கு உயர்த்த வேண்டும் 5. வரையறுக்கப்படாமல் எஞ்சியுள்ள அதிகாரங்களை மத்திய அரசாங்கத்துக்கு அளிக்காமல் மாகாணங்களுக்கு வழங்க வேண்டும்.

புதிய கோரிக்கைகளில் 1,4,5 தவிர மற்றவற்றுக்கு விளக்கம் தேவையில்லை. வகுப்புவாரியாக மட்டுமே பெரும்பான்மையாக உள்ள நான்கு மாகாணங்களிலும் முஸ்லீம் சமூகத்தை சட்டரீதியான பெரும்பான்மை நிலையில் வைப்பதும், இந்து சமூகம் பெரும்பான்மையாக உள்ள ஆறு மாகாணங்களுக்கு ஈடுகொடுக்கும் வலிமையை, சக்தியை இதன் மூலம் பெறுவதுமே 1 ஆவது, 4 ஆவது கோரிக்கைளின் நோக்கம். இரு சமூகங்களுமே தமது சிறுபான்மையினரை நல்லமுறையில் நடத்துவதற்கு இது உத்தரவாதமாக இருக்கும் என்றும் வலியுறுத்துப்பட்டது. 5 ஆவது கோரிக்கையின் நோக்கம் சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், வங்காளம் ஆகியவற்றில் முஸ்லீம் ஆட்சி ஏற்பட வழிசெய்வதாகும். ஆனால் இந்த முஸ்லீம் மாகாணங்கள் இந்துக்கள் ஆதிக்கம் செலுத்தக் கூடிய மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தால் இம்

மாகாணங்களில் முஸ்லீம் பெரும்பான்மை ஆட்சி ஆற்றல் வாய்ந்ததாக இருக்க முடியாது என்று அஞ்சப்பட்டது. எனவே, மத்தியிலுள்ள இந்து அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலிருந்து முஸ்லீம் மாகாணங்களை விடுவிக்கும் நோக்கத்துடனேயே 5 ஆவது கோரிக்கை முன்வைக்கப்பட்டது என்பது தெளிவு.

இந்தக் கோரிக்கைகளுக்கு இந்துக்கள் எதிர்ப்பு தெரிவித்தார்கள். இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. ஆனால் சைமன் கமிஷனாலும் இந்தக் கோரிக்கைகள் நிராகரிக்கப்பட்டதுதான் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். சைமன் கமிஷனை முஸ்லீம்களிடம் விரோத மனோ பாவமுடையது என்று எவ்வகையிலும் கூற முடியாது. அத்தகைய கமிஷன் முஸ்லீம்களின் கோரிக்கைகளை நிராகரிப்பதற்கு சில நம்பத் தகுந்த காரணங்களைத் தெரிவித்தது. கமிஷன் கூறியதாவது:[1]

''இந்த ஆறு மாகாணங்களிலும் தற்போது முஸ்லீம்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் பிரதிநிதித்துவத்துக்கான முழு உத்தரவாதத்தையும் பாதுகாப்பதற்கும், அதேசமயம் வங்காளத்திலும் பஞ்சாபிலும் அவர்களது மக்கட்தொகைக்கு ஏற்ப தனி வாக்காளர் தொகுதிகள்மூலம் அச்சமூகத்திற்குக் கிடைத்து வரும் இடங்களின் இன்றைய விகிதாசாரத்தை விரிவுபடுத்துவதற்கும் முயலும் அளவுக்கு இந்தக் கோரிக்கை செல்லுகிறது. இவ்விரு மாகாணங்களிலுள்ள பொதுத்தொகுதி இடங்களில் ஒரு நிர்ணயமான, மாற்றமுடியாத பெரும்பான்மையை இது முகமதியர்களுக்குப் பெற்றுத்தரும். நாம் இந்த அளவுக்குச் செல்ல முடியாது. இந்த ஆறு மாகாணங்களிலும் இப்போதைய பிரதிநிதித்துவ விகிதாசாரம் தொடர்வதை - இரு சமூகங்களுக்கும் இடையில் இது சம்பந்தமாக ஒரு பொது உடன்பாடு இல்லாத நிலைமையில் - வங்காளத்திலும் பஞ்சாபிலும் இப்போது நிலவும் ஒதுக்கீட்டிலிருந்து பெருமளவுக்கு விலகிச் செல்லும் ஓர் ஏற்பாட்டுடன் நேர்மையான முறையில் இணைப்பது சாத்தியமல்ல.

''இந்த ஆறு மாகாணங்களிலும் முஸ்லீம்கள் அனுபவித்து வரும் மிகக் கணிசமான பிரதிநிதித்துவத்தை நீட்டிக்கச் செய்வதும் அதேசமயம் இந்துக்கள் மற்றும் சீக்கியர்களின் எதிர்ப்புக்கு இடையே, பஞ்சாபிலும் வங்காளத்திலும் வாக்காளர்

1. அறிக்கை, தொகுதி II, பக் 71.

களின் கருத்திசைவால் மாற்றமுடியாத ஒரு திட்டவட்டமான முஸ்லீம் பெரும்பான்மையைத் திணிப்பதும் நியாயமாகாது....''

இவ்வாறு இந்துக்களும் சீக்கியர்களும் எதிர்த்தபோதிலும் சைமன் கமிஷன் நிராகரித்தபோதிலும், மத்தியஸ்த பொறுப்பை ஏற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் முஸ்லீம்களது பழைய, புதிய கோரிக்கைகள் அனைத்தையும் ஏற்றது. 1916 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்தின் 52 ஏ பிரிவின் உட்பிரிவு 2-ன்படி வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தி இந்திய அரசாங்கம் 1932 ஜனவரி 25 ஆம் தேதி இந்தியா கெஜட்டில் வெளியிட்ட ஓர் அறிவிப்பில்[1] வடமேற்கு எல்லைப்புற மாகாணம் இனிமேல் ஓர் ஆளுநர் மாகாணமாகக் கருதப்படும் என்று பிரகடனம் செய்தது.[2] இதேபோன்று, 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டம் 289 ஆவது பிரிவின் (1) உப-பிரிவில் அடங்கியுள்ள விதிமுறைகளின் பிரகாரம் கவுன்சில் பிறப்பித்த ஓர் ஆணையின்படி 1936 ஏப்ரல் 1 ஆம் தேதி முதல் பம்பாயிலிருந்து சிந்து பிரிக்கப்பட்டு, ஓர் ஆளுநர் மாகாணமாக அறிவிக்கப்பட்டது; இனி அது சிந்து மாகாணம் என்ற பெயரில் வழங்கிவரும் என்றும் கூறப்பட்டது. இந்தியா மந்திரி வெளியிட்டு 1934 ஜூலை 7 ஆம் தேதி பிரசுரிக்கப்பட்ட தீர்மானத்தின்படி, மத்தியிலும் மாகாணங்களிலும் அரசுப் பணிகளுக்கான எல்லா நியமனங்களிலும் முஸ்லீம்களின் பங்கு 25 சதவிகிதமாக நிர்ணயிக்கப்பட்டது. வரையறுக்கப்படாத எஞ்சிய அதிகாரங்களைப் பொறுத்தவரையில், இந்த அதிகாரங்கள் மாகாணங்களிடம் ஒப்படைக்கப்படவேண்டும் என்ற முஸ்லீம் கோரிக்கை ஏற்கப்படவில்லை. ஆனால் அதே சமயம் இது சம்பந்தமான முஸ்லீம் கோரிக்கை வேறொரு அர்த்தத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவே கருத வேண்டும். எஞ்சிய அதிகாரங்கள் மத்திய

1. அறிவிப்பு எண் ஃ எப். 173/31- ஆர் இந்தியா விசேட கெஜட், ஜனவரி 25, 1932

2. கோரிக்கையை நிராகரித்து சைமன் கமிஷன் பின்வருமாறு குறிப்பிட்டது:'' வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் அரசியலமைப்புச் சட்ட முன்னேற்றத்திற்கு இப்போது ஏற்பாடு செய்யவேண்டும் என்ற பிரே குழுவின் கருத்தை நாங்கள் முற்றிலும் ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் அதே சமயம் இம் மாகாணத்திலுள்ள நிலைமையும் இந்தியப் பாதுகாப்புடன் அதற்குள்ள நெருங்கிய தொடர்பும் அங்கு விசேட ஏற்பாடுகள் செய்வதை அவசியமாக்குகின்றன. எனவே, இந்தியாவின் ஏனைய பகுதிகளிலுள்ள மாகாண பிரதேசங்களுக்கு ஏற்புடைய திட்டங்களை இங்கு அப்படியே செயல்படுத்துவது சாத்தியமல்ல. இதனை நியாயப்படுத்த கமிஷன் பின்கண்ட கருத்தை வெளியிட்டது: '' புகை பிடிப்பது ஒரு மனிதனது உள்ளார்ந்த உரிமையாக இருக்கலாம். ஆனால் வெடிமருந்துக் கிடங்கில் வசிப்பவனாக அவன் இருந்தால் இந்த உரிமையை அவசியம் கட்டுப்படுத்தித்தான் ஆகவேண்டும்'' அறிக்கை, தொகுதி II, பக். 120-121

அரசிடம் ஒப்படைக்கப்படக்கூடாது என்ற முஸ்லீம் கோரிக்கையின் சாராம்சத்தை வேறுவிதமாகக் கூறுவதானால் அவை இந்துக்களின் கையில் இருக்கக்கூடாது என்பதையே குறிக்கும். 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் 104 ஆவது பிரிவு இதைத்தான் செய்தது; கவர்னர்- ஜெனரல் தமது உசிதம் போல் பயன்படுத்திக் கொள்வதற்கு எஞ்சிய அதிகாரங்களை இந்தப் பிரிவு அவரிடம் ஒப்படைக்கிறது. மத்திய, மாகாண அமைச்சரவைகளில் முஸ்லீம்களுக்கு 33 1/3 விழுக்காடு இடங்கள் ஒதுக்கவேண்டும் என்ற கோரிக்கையைப் பொறுத்த வரையில் சட்டத்தில் அதற்கு வகை செய்யப்படவில்லை எனினும் அமைச்சரவைகளில் தங்களுக்கு இடம் ஒதுக்கவேண்டும் என்ற முஸ்லீம்களின் கோரிக்கை ஏற்கப்பட்டு, ஆளுநர்களுக்கும் கவர்னர்-ஜெனரலுக்கும் பிறப்பிக்கப்பட்ட செயல்துறைக் கட்டளை களில் அதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பஞ்சாபிலும் வங்காளத் திலும் சட்டரீதியான பெரும்பான்மை தங்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்ற முஸ்லீம்களின் எஞ்சிய கோரிக்கையைப் பொறுத்த வரையில் வகுப்புவாரித் தீர்ப்பின் மூலம் இது செயல்படுத்தப் பட்டது. முழு அவையிலும் முஸ்லீம்களுக்கு சட்ட ரீதியான பெரும் பான்மை அளிக்கப்படவில்லை; அளிக்கப்படவும் முடியாது; இதர நலன்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிப்பது அவசியம் என்பதே இதற்குக் காரணம். எனினும் லக்னோ ஒப்பந்தப்படி முஸ்லீம் சிறுபான்மையினர் பெற்ற பிரதிநிதித்துவத்துக்குக் குந்தகம் ஏற்படாத வகையில் வங்காளத்திலும் பஞ்சாபிலுமுள்ள முஸ்லீம்களுக்கு இந்துக்களுக்கு எதிராக சட்டரீதியான பெரும்பான்மை வழங்கப் பட்டது.

முஸ்லீம் சமுதாயத்துக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்த இந்த அரசியல் சலுகைகள் உத்தரவாத மற்றவையாக இருந்தன. முஸ்லீம்களுக்குப் பாதகமான முறையில் இந்தச் சலுகைகளில் மாற்றங்கள் செய்யும்படி தங்கள் மீதோ அல்லது மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கத்தின் மீதோ இந்துக்கள் நிர்ப்பந்தம் கொண்டுவரக்கூடும் என்று முஸ்லீம்கள் அஞ்சினர். இந்த அச்சத்துக்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது காரணம் சாகும் வரை உண்ணாவிரதம் என்ற நிர்ப்பந்த ஆயுதத்தைப் பிரயோகித்து, வகுப்பு வாரித் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தப்பட்ட பகுதியைத் திருத்துவதில் திரு. காந்தி வெற்றி பெற்றதாகும்.[1] இந்த

1. இந்த உண்ணாவிரதத்தின் விளைவாக புனா ஒப்பந்தம் உருவாக்கப்பட்டு 1932 செப்டம்பர் 24 ஆம் தேதி கையெழுத்திடப்பட்டது.

வெற்றியால் ஊக்கமும் உத்வேகமும் பெற்ற சிலர் தீர்ப்பிலுள்ள முஸ்லீம்கள் சம்பந்தப்பட்ட பகுதியையும் திருத்தவேண்டும் என்று கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். இது சம்பந்தமாகப் பேச்சுவார்த்தைகள் நடத்தப்படுவதை சில முஸ்லீம்கள் கூட ஆதரிக்க முற்பட்டனர்.[1] இது முஸ்லீம் சமூகத்தைப் பெரிதும் பீதி கொள்ளச் செய்தது. முஸ்லீம்கள் தங்களுக்கு அளிக்கப்பட்ட அரசியல் சலுகைகள் மாற்றப் படுமோ என்று அச்சம் கொண்டதற்கு இரண்டாவது காரணம் குறிப்பிட்ட சில நிபந்தனைகளுடன் இந்த மாற்றத்தைச் செய்வதற்கு அனுமதிக்கும் சில திருத்தங்கள் இந்திய அரசாங்க மசோதாவின் விதிகளுக்கு காமன்சபையில் கொண்டுவரப்பட்டதேயாகும். இந்தப் பயத்தை அகற்றுவதற்காகவும், முஸ்லீம்களுக்கு வழங்கப்பட் டிருக்கும் அரசியல் சலுகைகள் எவ்வகையிலும் அவசர கோலமாக மாற்றப்படமாட்டா என்ற முழு உத்தரவாதத்தை அவர்களுக்கு அளிப்பதற்காகவும் பின்கண்ட அறிக்கையை வெளியிட மன்னர் பிரான் அரசு இந்திய அரசாங்கத்துக்கு அதிகாரம் அளித்தது:[2]

''அரசாங்கத்தின் வகுப்புவாரித் தீர்ப்பு எனப் பொதுவாக அழைக்கப்படும் தீர்ப்புக்கு அடிப்படையாக அமைந்துள்ள அரசியல் சட்ட விதிகளை தாங்கள் உசிதமெனக் கருதும் எந்தச் சமயத்திலும் மாற்றுவதற்கு வரம்பற்ற அதிகாரத்தை மன்னர் பிரான் அரசுக்கு வழங்கும் விதத்தில் இந்திய அரசாங்க மசோதாவில் இப்போதுள்ள 304ஆவது விதி (இந்த மசோதா முதலில் முன்மொழியப்பட்டபோது இந்த எண். 285 ஆகவும், பின்னர் காமன்ஸ் சபை கமிட்டியால் திருத்தப்பட்ட மசோதாவில் 299 ஆகவும் இருந்து) காமன் சபையில் திருத்தப்பட்டிருப்பதாக ஒரு கருத்து நிலவுவது மன்னர் பிரான் அரசின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது.

''வகுப்புத் தீர்ப்பில் எத்தகைய மாற்றமும் செய்வது சம்பந்தமாக 304 ஆவது விதி நடைமுறையில் உண்டுபண்ணும் விளைவுகளையும் இத்தகைய மாற்றம் குறித்த தங்களது சொந்தக் கொள்கை

1. தீர்ப்பில் முஸ்லீம்கள் சம்பந்தமாக உள்ள பகுதியைத் திருத்தும் முயற்சிகள் பற்றித் தெரிந்து கொள்ள அனைத்திந்திய பதிவேட்டைப் பார்க்க, 1932, தொகுதி II, பக்.281-315.

2. இந்த அறிக்கை சிம்லா ஜூலை 2, 1935 எனத் தேதியிடப்பட்டுள்ளது.

யையும் பின்கண்டவாறு சுருக்கமாக விளக்குவது உசிதமென மன்னர் பிரான் அரசு கருதுகிறது.

''இந்த விதியின்படி, பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஏற்பாடுகளில் மாற்றம் செய்வதற்கும், வகுப்புத் தீர்ப்பில் இடம் பெற்றிருக்கும் பிரச்சினைகள் உட்பட சட்டமன்ற அமைப்பு சம்பந்தப்பட்ட பல்வேறு விஷயங்களை ஒழுங்குபடுத்துவதற்கு மான திட்டத்தை முன்வைக்கும் உரிமை இந்தியாவிலுள்ள அரசாங்கங்களுக்கும் சட்டமன்றங்களுக்கும் வழங்கப் படுகிறது.

''உத்தேச திருத்தம் குறித்தும், முக்கியமாக அது எந்த ஒரு சிறுபான்மையினரின் நலன்களையும் எந்த அளவுக்குப் பாதிக் கிறது என்பது குறித்தும் கவர்னர்-ஜெனரல் அல்லது ஆளுநர் தெரிவித்துள்ள கருத்தை நாடாளுமன்றத்தின் முன் வைப்பதை யும், இது சம்பந்தமாக தாம் எடுக்க உத்தேசித்திருக்கும் எந்த ஒரு நடவடிக்கையையும் நாடாளுமன்றத்துக்குத் தெரிவிக்க வேண்டும் என்பதையும் இந்த விதி ராஜாங்க மந்திரியின் ஒரு கடமையாகப் பணிக்கிறது.

''இந்த நடைமுறையின் விளைவாக அரசியலமைப்பு விதிகளில் செய்யப்படும் எந்த மாற்றத்தையும் ஆட்சி மன்றக் குழுவின் ஆணையின் பேரிலேயே செயல்படுத்தமுடியும்; ஆனால் இந்த ஆணை நாடாளுமன்றத்தின் இரு அவைகளி லும் ஒரு தீர்மானத்தின் மூலம் உறுதிசெய்யப்பட வேண்டும். மசோதாவின் 305 ஆவது விதி இதற்கு வழிவகை செய்கிறது.

''பத்து ஆண்டுகள் பூர்த்தியடைவதற்கு முன்னதாக இத் தகைய முன்முயற்சி எடுத்துக்கொள்ளும் அதிகாரம் இந்தியா விலுள்ள அரசாங்கங்களுக்கோ, சட்டமன்றங்களுக்கோ இல்லை. எனினும் பத்தாண்டுகள் முடிவதற்கு முன்னதாகவே ஆட்சிமன்ற ஆணையின் பேரில் (எப்போதுமே நாடாளுமன் றத்தின் இரு அவைகளது ஒப்புதலுடன்) இத்தகைய மாற்றம் செய்யும் அதிகாரத்தை இந்த விதி வழங்குகிறது. ஆனால் ஆட்சிமன்றக் குழுவின் எந்த ஆணையும் நாடாளுமன்றத்தின் ஒப்புதலுக்கு முன்வைக்கப்படுவதற்கு முன்னர், இத்தகைய மாற்றத்தால்(அந்த மாற்றம் சிறிய அளவில் இருந்தா லொழிய) பாதிக்கப்படும் சாத்தியக்கூறுகள் இந்தியாவி

லிருக்கும் அரசாங்கங்களையும் சட்டமன்றங்களையும் முதல் பத்தாண்டுகளுக்குள்ளாக (இந்தியாவிலுள்ள சட்டமன்றங்கள் முன்முயற்சி எடுத்துக்கொள்ளவில்லையென்றால் அதற்குப் பிறகோ) கலந்தாலோசிப்பது ராஜாங்க அமைச்சரின் கடமையாகும்.

''முந்திய பத்தியில் குறிப்பிடப்பட்டிருக்கும் அதிகாரங்கள் அவசியமானவை என்பதற்கான காரணங்களாக கீழே தந்துள்ளோம்:

a) ''வாக்குரிமை மற்றும் சட்டமன்றங்களின் அமைப்பு சம்பந்தப்பட்ட சிறுசிறு விவரங்களைத் திருத்தக்கூடிய அவசியம் எப்போது எழும் என்பதை முன்கூட்டியே அறிவது சாத்தியமல்ல; இத்தகைய திருத்தம் செய்வதற்கு நாடாளுமன்றத்தின் சட்டத்தைத் திருத்துவதைத் தவிர வேறு மார்க்கம் இல்லாதிருப்பதும், இத்தகைய விவரங்களை வகுப்புத் தீர்ப்பு போன்ற முக்கியமான விஷயங்களிலிருந்து சட்டரீதியாகத் தனியாகப் பிரிப்பது நடைமுறை சாத்தியமற்றிருப்பதும் மிகவும் பிரதிகூலமான ஒரு நிலையாகும்;

b) ''இந்தியாவிலுள்ள சமூகங்களிடையே ஒருமித்த உடன்பாடு ஏற்படும் பட்சத்தில், வகுப்புத் தீர்ப்பு அடிப்படையில் சட்டவிதிகளில் மாற்றம் செய்வது விரும்பத்தக்கது என்பதில் ஐயமில்லை; ஆனால் இத்தகைய ஒன்றுபட்ட மாற்றம் செய்வதற்கும் கூட நாடாளுமன்றத்தின் சட்டத்தைத் திருத்துவதைத் தவிர வேறு மார்க்கம் இல்லாதிருப்பதும் ஒரு பிரதிகூலமான நிலையே ஆகும்.

''வகுப்புத் தீர்ப்பின் கட்டுக்கோப்புக்குள், சம்பந்தப்பட்ட சமூகங்கள் உடன்பாடு காணும் மாற்றங்களைத் தவிர வேறு எந்த மாற்றத்தையும் செய்யும்படி மன்னர்பிரான் அரசாங்கம் இந்த விதி வழங்கும் அதிகாரத்தைப் பயன்படுத்தி நாடாளுமன்றத்துக்குப் பரிந்துரைக்காது.

''முடிவாக, நாடாளுமன்றத்தின் இரு அவைகளும் உடன்பாடான ஒரு தீர்மானத்தின் மூலம் அனுமதி அளித்தாலன்றி, 304 ஆவது விதி வழங்கும் அதிகாரங்களில் எதுவும் 305 ஆவது பிரிவில் கூறப்பட்டிருக்கும் விஷயங்களைக் கருத்திற்கொண்டு,

பயன்படுத்தப்பட மாட்டாது என்பதை மன்னர்பிரான் அரசு மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறது.''

வட்டமேசை மாநாட்டில் முஸ்லீம்கள் என்ன கோரிக்கைகளை முன்வைத்தார்கள் என்பதையும், அவற்றில் எந்தக் கோரிக்கைகள் ஏற்கப்பட்டன என்பதையும் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது, முஸ்லீம் கோரிக்கைகளின் வரம்புக்குட்பட்டு விட்டது என்றும், 1932 ஆம் வருட உடன்பாடே இறுதி உடன்பாடாக இருக்கும் என்றும் எவரும் எண்ணக்கூடும். ஆனால் இத்துடன் கூட முசல்மான்கள் திருப்தியடையவில்லை என்றே தோன்றுகிறது. முஸ்லீம்களின் நிலையைப் பாதுகாப்பதற்கு புதிய கோரிக்கைகள் அடங்கிய மேலும் ஒரு பட்டியல் தயாராக இருப்பதாக தோன்றுகிறது. 1938 ஆம் ஆண்டில் திரு. ஜின்னாவுக்கும் காங்கிரசுக்கும் இடையே ஒரு பலத்த சர்ச்சை நடைபெற்று வந்தது. அப்போது முஸ்லீம்களின் கோரிக்கைகளை திட்டவட்டமாக வெளியிடும்படி திரு.ஜின்னாவிடம் வலியுறுத்தப்பட்டது. அவ்வாறு செய்ய அவர் மறுத்து விட்டார். எனினும் இந்தச் சர்ச்சையின்போது பண்டிட் நேருவுக்கும் திரு.ஜின்னாவுக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்தில் இந்தக் கோரிக்கைகள் வெளிச்சத்துக்கு வந்தன; திரு.ஜின்னாவுக்கு எழுதிய கடிதங்களில் ஒன்றில் பண்டிட் நேரு அவற்றைப் பட்டியலிட்டு வெளிப்படுத்தியிருந்தார். பின்கண்டவை உடன்பாடு காணவேண்டிய சர்ச்சைக்குரிய விஷயங்கள் என்பதை அவை பட்டியலிட்டுக் காட்டிற்று:[1]

1. 1929ல் முஸ்லீம் லீக் வகுத்தளித்த 14 அம்சக் கோரிக்கைகள்

2. வகுப்புத் தீர்ப்புக்கு காங்கிரஸ் காட்டிவரும் அனைத்து எதிர்ப்பையும் விலக்கிக் கொள்ள வேண்டும்; அதனை தேசியத்துக்கு எதிரானது என்று வருணிப்பதை நிறுத்திக் கொள்ள வேண்டும்.

3. அரசுப் பணிகளில் முஸ்லீம்களுக்குள்ள பங்கு அரசியலமைப்புச் சட்டத்திலேயே திட்டவட்டமாக நிர்ணயிக்கப்பட வேண்டும்; இதற்குரிய சட்டம் இயற்றப்படவேண்டும்.

1. இந்திய வருடாந்திரப் பதிவேடு, 1938, தொகுதி 1, பக்கம் 369.

4. முஸ்லீம்களின் தனிநபர் சுதந்திரமும் கலாசாரமும் சட்ட ரீதியாக உத்தரவாதம் செய்யப்படவேண்டும்.

5. சாஹித்கஞ்ச் மசூதி சம்பந்தப்பட்ட கிளர்ச்சியில் காங்கிரஸ் பங்கு கொள்ளவேண்டும்; அந்த மசூதி முஸ்லீம்கள் வசம் வருவதற்குக் காங்கிரஸ் தனது தார்மிக நிர்ப்பந்தத்தைப் பயன்படுத்த வேண்டும்.

6. அஜான் அழைப்பதற்கும், தங்களது சமய வினைமுறைகளை ஆற்றுவதற்கும் முஸ்லீம்களுக்குள்ள உரிமை எவ்வகையிலும் தடை செய்யப்படக்கூடாது.

7. இறைச்சிக்காகப் பசுவதை செய்வதற்கு முஸ்லீம்களுக்குச் சுதந்திரம் இருக்கவேண்டும்.

8. முஸ்லீம்கள் தற்போது பெரும்பான்மையினராக உள்ள மாகாணங்களில் எத்தகைய பிரதேச மறுசீரமைப்பு மூலமோ, எல்லை சீரமைவு மூலமோ அவர்களது பெரும்பான்மை எவ்விதத்திலும் பாதிக்கப்படக்கூடாது.

9. 'வந்தே மாதர' கீதம் பாடுவது நிறுத்தப்பட வேண்டும்.

10. உருது இந்தியாவின் தேசிய மொழியாக இருக்க வேண்டும் என்று முஸ்லீம்கள் விரும்புகின்றனர்; உருது பயன்படுத்தப்படுவது கட்டுப்படுத்தப்பட மாட்டாது, அதற்கு எத்தகைய ஊறும் விளைவிக்கப்படமாட்டது என்பதற்கு சட்டரீதியான உத்தரவாதம் அளிக்கப் பட வேண்டும்.

11. ஸ்தல ஸ்தாபன அமைப்புகளில் முஸ்லீம் பிரதிநிதித்துவம் வகுப்புத் தீர்ப்புக் கோட்பாடுகளின் அடிப்படையில், அதாவது தனிவாக்காளர் தொகுதிகள், மக்கட்தொகை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும்.

12. மூவர்ணக் கொடி மாற்றப்படவேண்டும், இல்லையென்றால் முஸ்லீம் லீக் கொடிக்குச் சமத்துவ முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.

13. முஸ்லீம் லீக் இந்திய முஸ்லீம்களின் ஒரே அதிகாரப்பூர்வ மான, பிரதிநிதித்துவம் வாய்ந்த அமைப்பாக அங்கீகரிக்கப்பட வேண்டும்.

14. கூட்டு மந்திரிசபைகள் அமைக்கப்படவேண்டும்.

இந்தப் புதிய பட்டியலுடன், முஸ்லீம்கள் தங்கள் கோரிக்கை களில் எங்கு போய் நிற்பார்கள் என்று தெரியவில்லை. ஒரே ஆண் டிற்குள் அதாவது 1938 க்கும் 1939 க்கும் இடையே மேலும் ஒரு கோரிக்கை, அதிலும் கணிசமான தன்மையுடைய ஒரு கோரிக்கை, அதாவது எல்லாவற்றிலும் 50 விழுக்காடு பங்கு வேண்டுமென்ற கோரிக்கை முன்வைக்கப்பட்டது. இந்தப் புதிய கோரிக்கைகளின் பட்டியலில், எடுத்த எடுப்பில் நோக்கினால்கூட, மேலெழுந்த வாரியாகப் பார்த்தால்கூட அதீதமானவையான, வரம்புமீறியவை யான, காரியசாத்தியமற்றவையான சில கோரிக்கைகள் இடம் பெற்றி ருப்பதைக் காணலாம். ஐம்பது-ஐம்பது என்ற கோரிக்கையையும், உருதுவை இந்தியாவின் தேசிய மொழியாக்க வேண்டுமென்ற கோரிக்கையையும் இதற்கு உதாரணமாகக் கூறலாம். சட்டமன்றங்களில் இடம் ஒதுக்குவதில் ஒரு பெரும்பான்மையை சிறுபான்மையாகவோ அல்லது சமபான்மையாகவோ ஆக்கிவிடக் கூடாது என்று 1929 ஆம் ஆண்டில் முஸ்லீம்கள் வலியுறுத்தினர்.[1] அவர்களே வகுத்துத் தந்த இந்தக் கோட்பாட்டைக் கைவிடவேண்டும் என்று இப்போது கோரு கின்றனர்; பெரும்பான்மை சமபான்மையாகக் குறைக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்துகின்றனர். ஏனைய சிறுபான்மையின ருக்கும் தங்களைப் போன்றே பாதுகாப்பு தேவை என்பதை 1929ல் முஸ்லீம்கள் ஒப்புக் கொண்டனர். ஆனால் இந்த விஷயத்தில் முஸ்லீம்களுக்கும் இதர சிறுபான்மையினருக்குமிடையே இருந்த ஒரே வித்தியாசம் இந்தப் பாதுகாப்பின் அளவில்தான் அடங்கி யிருந்தது. தாங்கள் அரசியல் ரீதியில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த வர்களாதலால், மற்ற சிறுபான்மையினரைவிடத் தங்களுக்கு அதிகப் பாதுகாப்பு வேண்டும் என்று முஸ்லீம்கள் கோரினர். பிற சிறுபான்மை யினருக்குப் போதிய பாதுகாப்பு அளிக்கவேண்டியதன் அவசியத்தை முஸ்லீம்கள் ஒருபோதும் மறுத்ததில்லை. ஆனால் முஸ்லீம்கள் 50 விழுக்காடு என்ற இந்தப் புதிய கோரிக்கையை முன்வைத்ததன் மூலம் இந்துக்களின் பெரும்பான்மையைச் சிறுபான்மையாக்க முயல்வதோடு,

1. திரு. ஜின்னாவின் 14 அம்சக் கோரிக்கைகளில் 3 ஆவது அம்சக் கோரிக்கையைக் காண்க.

இதர சிறுபான்மையினரின் அரசியல் உரிமைகளிலும் கைவைக்க முனைகின்றனர்; முஸ்லீம்கள் இட்லரின் மொழியில் பேசி வருகின்றனர்; ஜெர்மனிக்காக இட்லர் வாதாடியதைப் போன்றே தங்களுக்கு உன்னத நிலை வேண்டுமென்று கோரிவருகின்றனர். **டியூட்ஸ்லேண்ட் உபர் அல்லஸ்** மற்றும் **லெபன்ஸ்ரம்** என்று இட்லர் கொக்கரித்தான். அதாவது என் நாடு வளர்ச்சியுறுவதற்கு இப்போதுள்ள நிலப்பரப்பு போதாது என்று ஆர்ப்பரித்தான். அவனது கோரிக்கையின் மறுபதிப்பாகவே இருக்கிறது முஸ்லீம்களின் 50 விழுக்காடு கோரிக்கையும். மற்ற சிறுபான்மையினருக்கு என்ன நேரிடினும் கவலைப்படாமல் தங்களது சுயநலத்திலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் கோரிக்கையே இது.

இதே போன்று அசாதாரணமானதும், அதீதமானதும்தான் உருதுவை இந்தியாவின் தேசிய மொழியாக்க வேண்டுமென்று முஸ்லீம்களின் கோரிக்கையும், உருது இந்தியா முழுவதும் பேசப்படாத மொழி மட்டுமல்ல, அது எல்லா இந்திய முஸ்லீம்களாலும் பேசப்படும் மொழியும்கூட அல்ல. 6 கோடி 80 லட்சம் முஸ்லீம்களில்[1] 2 கோடி 80 லட்சம் பேர்தான் உருது மொழி பேசுகின்றனர். உருதுவை இந்தியாவின் தேசிய மொழியாக்க வேண்டுமென்று கோருவது 2 கோடி 80 லட்சம் முஸ்லீம்கள் பேசும் மொழியை குறிப்பாக 4 கோடி முசல்மான்கள் மீது அல்லது பொதுவாக 32 கோடி 20 லட்சம் இந்தியர்கள் மீது வலுக்கட்டாயமாகத் திணிக்க முயல்வதையே குறிக்கும்.

ஆக, அரசியலமைப்பில் ஏதேனும் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற யோசனை முன்வைக்கப்படும் ஒவ்வொரு சமயமும், ஏதேனும் புதிய அரசியல் கோரிக்கையுடன் அல்லது கோரிக்கைகளுடன் முஸ்லீம்கள் அங்கு தயாராக இருக்கும் காட்சியைத் தவறாமல் காணலாம். இவ்விதம் முஸ்லீம் கோரிக்கைகள் வரைமுறையற்று மேலும் மேலும் விஸ்தரித்துக் கொண்டே போவதற்கு, பெருகிக் கொண்டே போவதற்குப் பிரிட்டிஷ் வலிமை ஒன்றால் மட்டும்தான் தடை போடமுடியும்; இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான எந்தத் தகராறிலும் அவர்கள்தான் இறுதியான மத்தியஸ்தர்களாக இருக்கமுடியும். இந்தப் புதிய கோரிக்கைகள்

1. இந்தப் புள்ளிவிவரங்கள் 1921 ஆம் வருட குடிமதிப்புக்கணக்கிலிருந்து எடுக்கப்பட்டவை.

சம்பந்தமான பிரச்சினை பிரிட்டிஷாரின் மத்தியஸ்தத்துக்கு விடப் படும்போது பிரிட்டிஷ்முடிவு முஸ்லீம்களுக்குச் சாதகமாக இருக்காது என்று யார்தான் உறுதியாக, நிச்சயமாகக் கூறமுடியும்? முஸ்லீம் களின் கோரிக்கைகள் அதிகரித்துச் செல்லச் செல்ல அவர்களுக்கு உதவி செய்யும் பிரிட்டிஷ் போக்கும் அதிகரித்து வருவதாகவே தோன்றுகிறது. இது எப்படியிருந்தபோதிலும், முஸ்லீம்கள் கேட்பதை விடவும் அவர்களுக்கு அதிகமாகக் கொடுக்கும் மனச்சார்பை, மனநாட்டத்தைப் பிரிட்டிஷார் கைக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதை கடந்தகால அனுபவம் காட்டுகிறது. இத்தகைய சம்ப வங்கள் இரண்டை இங்கு இதற்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்.

இவற்றில் ஒரு நிகழ்ச்சி லக்னோ ஒப்பந்தம் சம்பந்தப் பட்டது. இந்த ஒப்பந்தத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் ஆதரிப்பதா, கூடாதா என்ற பிரச்சினை எழுந்தது. மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையைத் தயாரித்தவர்கள் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள விருப்பமில்லாதவர்களாக இருந்தனர்; கடும் சுமையை ஏற்படுத்து வதாக அது இருந்ததே இதற்குக் காரணம். லக்னோ ஒப்பந்தப்படி முஸ்லீம்களுக்கு அளிக்கப்படும் பிரதிநிதித்துவத்தைப் பற்றிப் பேசும் போது இந்தக் கூட்டறிக்கையைத் தயாரித்தவர்கள் பின்கண்டவாறு குறிப்பிட்டனர்:[1]

> ''இம்மாதிரி தனிச்சலுகை அளிக்கும் போக்கு ஆட்சேபத் துக்குரியது; ஏனெனில் இனிமேல் வேறு எந்த சமூகமும் இதே போன்று தனிப்பிரதிநிதித்துவக் கோரிக்கையை முன்வைக்கு மானால் அப்போது முஸ்லீமல்லாதோரின் இடங்களைக் குறைப்பதன் மூலமோ அல்லது முஸ்லீம் மற்றும் முஸ்லீ மல்லாதோர் ஆகிய இரு தரப்பினரின் இடங்களைக் குறைப்பதன் மூலமோதான் அந்தக் கோரிக்கையை நிறைவேற்றமுடியும். இவற்றில் எந்த நடைமுறையைப் பின்பற்றுவது என்பதில் இந்து, முஸ்லீம் கருத்து ஒரே மாதிரியாக இருப்பது சாத்திய மல்ல. எனவே, பின்னால் நாங்கள் விளக்கப்போகும் கார ணங்களுக்காக முகமதியர்களின் தனிப்பிரதிநிதித்துவம் தொடர் வதற்கு நாங்கள் இசைவு தெரிவிக்கும் அதே சமயம் எங்கள் முன் வைக்கப்பட்டிருக்கும் குறிப்பிட்ட பிரேரணைகள் மற்ற நலன்களை எந்த அளவுக்குப் பாதிக்கும் என்பதை உறுதிப்

1. மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை, 1918, பத்தி 163

படுத்திக் கொள்ளும் வரையிலும், அவற்றிற்கு நியாயமான வழிவகை ஏற்பாடுகள் செய்யும் வரையிலும் இந்தப் பிரேரணைகளுக்கு எங்கள் ஒப்புதல அளிப்பதைத் தள்ளிவைப்பதற்கு நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம்.''

லக்னோ ஒப்பந்தத்தில் இந்தக் கடுமையான குறைபாடு இருந்தபோதிலும், வங்காள முஸ்லீம்கள் சம்பந்தமாக ஒப்பந்தத்திலுள்ள விதிமுறைகள் மேம்படுத்தப்பட வேண்டும் என்று இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் அரசுக்கு அனுப்பிய தனது அறிக்கையில் பரிந்துரைத்திருந்தது. இதற்கு அது தெரிவித்த காரணங்கள் விந்தையான முறையில் அமைந்திருந்தன. அதன் வாதம் பின்வருமாறு அமைந்திருந்தது:

''அவர்கள் (ஒப்பந்த கர்த்தாக்கள்) வங்காளத்துக்கு முன்மொழிந்துள்ள முகமதிய பிரதிநிதித்துவம் போதுமானதல்ல என்பது தெள்ளத்தெளிவு.[1] காங்கிரஸ்-லீக் ஒப்பந்தம் உருவாகி வந்தபோது கிழக்கு வங்காள முகமதிய மக்களின் கோரிக்கைகள் போதுமான அளவு வலியுறுத்தப்பட்டனவா என்பது ஐயத்துக்கிடமானதாக இருக்கிறது. அவர்கள் மிகவும் பின்தங்கிய சமூகத்தினர், வறுமையில்வாடும் சமூகத்தினர், 1912 ல் அந்த ராஜதானி மீண்டும் பிரிவினை செய்யப்பட்டதானது அவர்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது; அவர்களுடைய நலன்கள் இப்போது பரந்த மனோபாவத்துடன் பாதுகாக்கப்படவேண்டும். இதில் தவறுவது நமக்கு மிகுந்த வெறுப்பையே தரும். வங்காள முஸ்லீம்களுக்கு அவர்களது எண்ணிக்கையின் விகிதாசாரத்துக்கு ஏற்ப பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு (ஒப்பந்தத்தில் கண்டுள்ளபடி) 34 இடங்களுக்குப் பதிலாக 44 இடங்கள் வழங்கப்பட வேண்டும்.

வங்க முஸ்லீம்கள்பால் இந்திய அரசாங்கம் காட்டிய உற்சாகத்தையும் பரிவையும் பிரிட்டிஷ் அரசாங்கம் பகிர்ந்து கொள்ளவில்லை. வங்க முஸ்லீம்களுக்குக் கிடைத்துள்ள இடங்கள் ஓர் ஒப்பந்தத்தின் மூலம் கிட்டியிருப்பவை; இந்த ஒப்பந்தத்தின் அடிப்படை பற்றி எந்தச் சர்ச்சையும் இல்லை, அப்படியிருக்கும்போது வங்காள முஸ்லீம்களுக்கு ஆதரவாக பேரம் பேசுவது பிரிட்டிஷ் அரசாங்கம் ஏதோ உள்நோக்கத்தோடு, ஏதோ விசேடக் காரணங்

1. பஞ்சாபுக்கும் அநீதி இழைக்கப்பட்டிருப்பதாகவே இந்திய அரசாங்கம் கருதிற்று. பிரிவினை காரணமாக வங்கத்தில் குழப்பம் நிலவிற்று; இதுபோன்ற விசேட காரணம் பஞ்சாபில் இல்லாததால் லக்னோ ஒப்பந்தத்தில் நிர்ணயிக்கப்பட்டிருப்பதைவிடவும் கூடுதலான பிரதிநிதித்துவத்தை அவர்கள் பஞ்சாபுக்குப் பரிந்துரைக்க முடியாமற் போயிற்று.

களுக்காக முஸ்லீம்களின் நண்பனாக இருக்கிறது என்ற எண்ணத்தைத்தான் தோற்றுவிக்கும் என்று அது கருதிற்று. இந்த இடங்கள் அதிகப்படுத்தப்படவேண்டும் என்று இந்திய அரசாங்கம் பரிந்துரைப்பதில், பஞ்சாப் முஸ்லீம்களுக்கும் வங்க முஸ்லீம்களுக்கும் லக்னோ ஒப்பந்தம் அவர்களது எண்ணிக்கைகளுக்கு ஏற்ற பிரதிநிதித்துவத்தை அளிக் காததற்கான காரணத்தை அது கவனத்திற் கொள்ள மறந்துவிட்டது. ஒரு சமூகம் என்ற முறையில் அரசியல் பாதுகாப்புப் பெற அதற்கு உரிமை இல்லை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்ததுதான் லக்னோ ஒப்பந்தம் - இந்தக் கோட்பாடு இப்போது காற்றில் பறக்கவிடப்பட்டுவிட்டது. ஒரு சமூகம் சிறுபான்மையாக இருந்தால் தான் பாதுகாப்புப் பெற அதற்கு உரிமை உண்டு. இதுதான் லக்னோ ஒப்பந்தத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ள கோட்பாடு. பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம் சமூகம் சிறுபான்மை சமூகமல்ல. எனவே முஸ்லீம் சமூகம் சிறுபான்மையாக உள்ள மற்ற மாகாணங்களில் பெறும் அதே பாதுகாப்பைப் பஞ்சாபிலும் வங்காளத்திலும் பெறுவதற்கு அதற்கு உரிமை இல்லை. தாங்கள் பெரும்பான்மையினராக இருந்தபோதிலும் பஞ்சாப், வங்க முஸ்லீம்கள் தனி வாக்காளர் தொகுதிகள் இருக்கவேண்டிய அவசியத்தை உணர்ந்திருந்தனர். லக்னோ ஒப்பந்தத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ள கோட்பாட்டின்படி, இவர்கள் சிறுபான்மையினராக இருக்க சம்மதித் தால்தான் தனிவாக்காளர் தொகுதிகளைப் பெறுவதற்குத் தகுதி உடையவர்களாவார்கள். எனவே சிறுபான்மையினருக்கான இடங்களைப் பெறுவதற்கு அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். மக்கட் தொகை அடிப்படையில் வங்க முஸ்லீம்களும் பஞ்சாப் முஸ்லீம் களும் தங்களுக்குரிய பெரும்பான்மை இடங்களைப் பெறாததற்கு இதுவே காரணம்.[1]

---

1. ஒப்பந்தத் தரப்பினர்களாக இருந்த முஸ்லீம்கள் இதை நன்கு புரிந்து கொண்டிருந்தனர் என்பதில் ஐயமில்லை. 1919ஆம் வருட இந்திய அரசாங்க மசோதா சம்பந்தமாக நாடாளு மன்றம் நியமித்திருந்த கூட்டுப் பொறுக்குக் கமிட்டி முன்னர் திரு.ஜின்னா சாட்சியம் அளித்தார். அப்போது 3808 எண்ணுள்ள கேள்விக்கு அவர் அளித்த பதிலாவது: ''வங்கத்திலுள்ள நிலைமை இதுதான்: வங்கத்தில் முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ளனர். எனினும் பெரும்பான்மையினராக உள்ள எந்த ஒரு பிரிவினரும் அல்லது சமூகத்தினரும் தனி வாக்காளர் தொகுதிகள் தங்களுக்கு வேண்டுமென்று கோர முடியாது: தனி வாக்காளர் தொகுதி சிறுபான்மையினரைப் பாதுகாப்பதற்குத்தான் என்று வாதிடப்பட்டது. ஆனால் இதற்கான எதிர்வாதமும் சரியானதுதான்: வங்கத்தில் மக்கட்தொகை எண்ணிக்கையில் நாங்கள் பெரும்பான்மையினராக இருக்கிறோம்; ஆனால் வாக்காளர்களாக அங்கு நாங்கள் சிறுபான்மையினராகவே இருக்கிறோம். பின்தங்கிய நிலையும், வறுமையும், ஏனையவையும்தான் இதற்குக் காரணம். இவ்வாறு கூறப்பட்டது. நல்லது, அப்படியானால் 40 விழுக்காடு நிர்ணயுங்கள்; ஏனென்றால் உண்மையிலேயே நீங்கள் களத்தில் இறங்கினால் 40 விழுக்காடு வாங்கமாட்டீர்கள்; காரணம் நீங்கள் தகுதிபெற்ற வாக்காளர்கள் அல்ல. எனினும் மற்ற மாகாணங்களில் நாங்கள் அனுகூலமான நிலைமையில் உள்ளோம்.''

வங்க முஸ்லீம்களுக்கு அவர்கள் கோரியதைவிட அதிகம் தரும் இந்திய அரசாங்கத்தின் யோசனை ஏற்கப்படவில்லை. எனினும் இதை அவர்கள் செய்ய விரும்பினார்கள் என்பது முஸ்லீம்களிடம் அவர்கள் கொண்டுள்ள பரிவுக்கு சான்றாக காட்சியளிக்கிறது.

முஸ்லீம்கள் கேட்டதைவிட மத்தியஸ்தர் என்ற முறையில் பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகமாக அளித்த சம்பவம் 1932ல் வகுப்புத் தீர்ப்பு அறிவிக்கப்பட்டபோது நிகழ்ந்தது. வட்டமேசை மாநாட்டில் சிறுபான்மையினர் துணைக்குழுவில் சர் முகமது ஷாபி இரண்டு வேறுபட்ட பிரேரணைகளை முன்வைத்தார். 1931 ஜனவரி 6ஆம் நாளன்று தாம் நிகழ்த்திய சொற்பொழிவில் சர் முகமது ஷாபி வகுப்புத் தீர்வுக்கு அடிப்படையாக பின்கண்ட யோசனையை முன்வைத்தார்:

> ''இங்கு நான் முன்வைக்கும் நிபந்தனைகளின் அடிப்படையில் கூட்டு வாக்காளர் தொகுதிகளை ஏற்க நாங்கள் தயாராக இருக்கிறோம்: முதலாவதாக, சிறுபான்மை மாகாணங்களில் முசல்மான்கள் தற்போது அனுபவித்துவரும் சலுகைகள் அவர்களுக்குத் தொடரவேண்டும்; பஞ்சாபிலும் வங்கத்திலும் அவர்களுக்கு இரண்டு கூட்டு வாக்காளர் தொகுதிகளும் மக்கட் தொகை அடிப்படையில் பிரதிநிதித்துவமும் அளிக்கப்பட வேண்டும்; மௌலானா முகமதலியின் நிபந்தனைகளுடன் இணைந்த இட ஒதுக்கீட்டுக் கொள்கை கடைப்பிடிக்கப்பட வேண்டும்.''[1]

இதே குழுவின்முன் 1931 ஜனவரி 14ல் நிகழ்த்திய தமது உரையில் அவர் வேறுபட்டதொரு யோசனையை முன்வைத்தார். அப்போது அவர் கூறியதாவது:[2]

---

1. முதல் வட்டமேசை மாநாட்டின் சிறுபான்மை துணைக்குழுவின் அறிக்கை, (இந்தியப் பதிப்பு) பக்கம் 196.

2. திரு. முகமதலி சமர்ப்பித்த யோசனையின்படி கூட்டு வாக்காளர் தொகுதிகளும் தனி இடங்களும் இருக்க வேண்டும். எந்தவொரு வேட்பாளரும் தமது சொந்த சமூகத்தைச் சேர்ந்த வாக்குகளில் குறைந்தபட்சம் 40 விழுக்காட்டையும் ஏனைய சமூகத்தினரின் வாக்குகளில் குறைந்தபட்சம் 5 அல்லது 10 விழுக்காட்டையும் பெற்றாலொழிய அவர் தேர்ந்து எடுக்கப் பட்டதாக அறிவிக்கப்படக் கூடாது.

''இன்று பின்கண்ட யோசனையை முன்வைக்க எனக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. பஞ்சாபில் அவை முழுவதிலும் மொத்தமுள்ள இடங்களில் 49 விழுக்காடு வகுப்புவாரி வாக்காளர் தொகுதியின் மூலம் முசல்மான்களுக்கு வழங்கப்பட வேண்டும்; அந்த மாகாணத்தில் ஏற்படுத்த உத்தேசித்துள்ள விசேடத் தொகுதிகளில் போட்டியிடும் சுதந்திரமும் அவர்களுக்கு இருக்கவேண்டும்; வங்காளத்தைப் பொறுத்த வரையில் வகுப்புவாரித் தொகுதிகள் மூலம் அவையில் 46 விழுக்காடு பிரதிநிதித்துவம் முசல்மான்களுக்கு அளிக்கப்பட வேண்டும்; மேலும், அந்த மாகாணத்தில் உருவாக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் விசேடத் தொகுதிகளில் போட்டியிடும் உரிமையும் அவர்களுக்கு இருக்கவேண்டும்; சிறுபான்மை மாகாணங்களைப் பொறுத்தமட்டில், தனிவாக்காளர் தொகுதிகள் மூலம் இப்போது முஸ்லீம்கள் பெற்றுவரும் பிரதிநிதித்துவம் தொடர வேண்டும்; இதே போன்ற பிரதிநிதித்துவம் சிந்துவிலுள்ள எங்கள் இந்து சகோதரர்களுக்கும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலுள்ள எங்கள் இந்து மற்றும் சீக்கிய சகோதரர்களுக்கும் வழங்கப்படவேண்டும். வருங்காலத்தில் எந்த சமயத்திலும் மாகாண சட்ட மேலவையிலோ, அல்லது மத்திய சட்ட மேலவையிலோ உள்ள எந்த ஒரு சமூகத்தினரின் பிரதிநிதிகளில் மூன்றிலிரண்டு பங்கினர் வகுப்புவாரி வாக்காளர் தொகுதிகளைக் கைவிட்டு கூட்டுத்தொகுதிகளை ஏற்க முன்வந்தால் அப்போதிருந்து கூட்டு வாக்காளர் தொகுதி முறை நடைமுறைக்கு வரவேண்டும்.''

இந்த இரு யோசனைகளுக்கும் இடையேயான வேறுபாடு தெளிவானது: '' சட்டரீதியான பெரும்பான்மை ஏற்கப்படுமானால் கூட்டுவாக்காளர் தொகுதிகள்; அவ்வாறின்றிச் சட்டரீதியான பெரும்பான்மை மறுக்கப்பட்டால், தனி வாக்காளர் தொகுதிகளுடன் கூடிய சிறுபான்மை இடங்கள்.'' முதல் கோரிக்கையிலிருந்து சட்டரீதியான பெரும்பான்மையையும் இரண்டாவது கோரிக்கையிலிருந்து தனி வாக்காளர் தொகுதிகளையும் முஸ்லீம்கள் கேட்காமலேயே அவர்களுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் வழங்கிற்று.

முஸ்லீம்களிடம் காணப்படும் இரண்டாவது விஷயம் இந்துக்களின் பலவீனங்களைத் தங்கள் சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும் போக்காகும். இந்துக்கள் எதையேனும் ஆட்சே

பித்தால் அதுதான் தங்களுக்கு வேண்டும் என்று அடம்பிடிப்பது முஸ்லீம் கொள்கை; இதற்கு விலையாக வேறு ஏதேனும் சலுகைகள் அளிக்க இந்துக்கள் முன்வந்தால் அப்போது முஸ்லீம்கள் தங்கள் கோரிக்கையைக் கைவிட்டுவிடுவார்கள். தனித்தொகுதிகள், கூட்டுத் தொகுதிகள் பிரச்சினையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். முக்கியமாக முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாகாணங்களில் கூட்டுத் தொகுதிகளுக்காக இந்துக்கள் போராடுவது சுத்த முட்டாள்தனமானது என்று என் மனதிற்குத் தோன்றுகிறது. கூட்டுவாக்காளர் தொகுதிகள் தேசியத்துக்கு ஒரு போதுமான அடிப்படையாக ஒருபோதும் இருக்கமுடியாது. தேசியம் என்பது அரசியல் இணைவோ பணத்தொடர்போ சம்பந்தப்பட்ட விஷயமன்று. ஏனென்றால் வெறும் வெளி அம்சங்களைக் கணக்கிட்டு கூட்டிணைப்பை ஏற்படுத்தி விட முடியாது. ஐந்தாண்டுக் காலத்துக்குத் தங்களைச் சுற்றிவேலி எழுப்பிக்கொண்டு ஒதுங்கிய வாழ்க்கையை இரு சமூகத்தினர் வாழ்ந்துவரும்போது, அவர்கள் ஒன்றிணைந்து இருக்கமுடியாது; ஏனென்றால் ஐந்து ஆண்டு காலத்தில் ஏதோ ஒரு நாளன்று வாக்களிப்பதற்காக மட்டுமே அவர்கள் ஒருசேரக் காணப்படுகிறார்கள். பெரும்பான்மையினர் சிறுபான்மையினரைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க கூட்டுத்தொகுதிகள் வழிவகுக்கக்கூடும். ஆனால் அவர்கள் தாங்களாகவே தேசியத்தைத் தோற்றுவித்து விட முடியாது. இது எப்படியிருப்பினும், இந்துக்கள் கூட்டுத் தொகுதிகளை வலியுறுத்தி வருவதால்தான் முஸ்லீம்கள் தனித்தொகுதிகள் வேண்டுமென வலியுறுத்தி வருகிறார்கள். இந்த வலியுறுத்தல் ஒருவகையான பேரம்தான் என்பதை திரு.ஜின்னாவின் 14 அம்சக் கோரிக்கைகளிலிருந்தும்,[1] 1927 டிசம்பர் 30ல் கல்கத்தாவில் நடைபெற்ற அனைத்திந்திய முஸ்லீம் லீக் மாநாட்டுத் தீர்மானத்திலிருந்தும் தெரிந்துகொள்ளலாம்.[2] சிந்துவைப் பிரிப்பதற்கும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைத் தன்னாட்சி படைத்த மாகாண அந்தஸ்துக்கு உயர்த்துவதற்கும் இந்துக்கள் இணங்கினால்தான் தனி வாக்காளர் தொகுதிகளைக் கைவிட முசல்மான்கள்

1. திரு. ஜின்னாவின் கோரிக்கைகளில் 15 ஆவது கோரிக்கையைக் காண்க.

2. இந்தத் தீர்மானத்தையும் அதன்பேரில் திரு.பர்கத் அலி ஆற்றிய உரையையும் இந்தியக் காலாண்டு பதிவேட்டில் பார்க்க, 1927, தொகுதி II, பக்கங்கள் 447-48.

இசைவார்கள் என்று அச்சமயம் பேரம் பேசப்பட்டது.[1] முசல்மான்கள் தனிவாக்காளர் தொகுதிகளை மிக முக்கியமானவையாகக் கருத வில்லை என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். தங்களது இதர கோரிக்கைகளைப் பெறுவதற்கு ஒரு சிறந்த பேரமாகவே அவர்கள் தனித்தொகுதிகளைக் கருதினர் என்பது கண்கூடு.

இந்துக்களின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் முஸ்லீம்களின் போக்குக்கு பசுவதையை அனுமதிக்கவேண்டும், மசூதிகளின் முன்னால் வாத்திய இசை கூடாது என்ற அவர்களது கோரிக்கைகளை மற்றொரு உதாரணமாகக் கூறலாம். சமயவினை முறைகளைச் செய்வதற்குப் பசுக்களை உயிர்ப்பலி கொடுக்க வேண்டும் என்று இஸ்லாமிய சட்டம் எங்கும் வலியுறுத்தவில்லை; ஹஜ் யாத்திரை மேற்கொள்ளும் எந்த முசல்மானும் மெக்காவிலோ, மெதினாவிலோ பசுக்களைப் பலியிடுவதில்லை. ஆனால், இந்தியா விலோ முசல்மான்கள் பசுக்களைப் பலியிடுவதைத் தவிர வேறு எந்தப் பிராணிகளையும் பலியிடுவதில் திருப்தியடைய மாட்டார்கள். எல்லா முஸ்லீம் நாடுகளிலும் மசூதி முன்னால் வாத்திய இசை இசைக்கலாம்; அங்கெல்லாம் இதற்கு எந்த எதிர்ப்பும் இல்லை. மதச்சார்பற்ற நாடல்லாத ஆப்கனிஸ்தானில் கூட மசூதிமுன் வாத்திய இசை இசைப்பதற்கு எத்தகைய ஆட்சேபமும் கிடையாது. ஆனால் இந்தியாவில் மட்டும் மசூதி முன்னால் வாத்திய இசை கூடாது என்று முசல்மான்கள் பிடிவாதம் பிடிக்கின்றனர். இதற்கு வேறு எந்த நியாயமான காரணமுமில்லை; இந்துக்கள் அதனை ஓர் உரிமையாகக் கோருவதே காரணம்.

இங்கு நாம் கவனத்திற் கொள்ளவேண்டிய மூன்றாவது விஷயம் குண்டர்கள் முறையை முஸ்லீம்கள் அரசியலில் கைக் கொள்வதுதான். குண்டாத்தனம் அவர்களது அரசியல் போர்த் தந்திரத்தில் ஒரு நிலையான இடத்தைப் பெற்றுவிட்டது என்பதற்கு அவர்கள் அடிக்கடி கிளர்த்திவிடும், தூண்டிவிடும் கலகங்கள் கண்கூடான சான்றாக அமைந்துள்ளன. செக்குகளுக்கு எதிராக சூடட்டன் ஜெர்மானியர்கள் கையாண்ட முறைகளை இந்திய முஸ்லீம்கள் தெரிந்தே, திட்டமிட்டே பின்பற்றுவதாகத்

1. இந்துக்களைப் பொறுத்தவரையில் துரதிருஷ்டமான விஷயம் என்னவென்றால் அவர்களால் கூட்டு வாக்காளர் தொகுதிகளைப் பெற முடியவில்லை; ஆனால் அதே சமயம் முகமதியர்கள் அந்த சலுகையைப் பெற்றனர்.

தோன்றுகிறது.[1] முஸ்லீம்கள் வெறிபிடித்தலையும்போது இந்துக்கள் சாத்விகத்தைக் கடைபிடித்து வந்தனர்; இந்த மோதலில் அவர்கள் தான் முஸ்லீம்களைவிட மிகுந்த பாதிப்புக்குள்ளாகி வந்தனர். ஆனால் இப்போது அப்படியல்ல. அடிக்கு அடி, குத்துக்கு குத்து என்று பதிலடிக் கொடுக்க இந்துக்கள் கற்றுக் கொண்டுவிட்டனர்; இப்போ தெல்லாம் ஒரு முசல்மானைக் கத்தியால் குத்துவதற்கு அவர்கள் எத்தகைய மனச் சான்றின் உறுத்தலோ, தயக்கமோ கொள்வதில்லை. இந்தப் பழி வாங்கும் போக்கும் குண்டாத்தனத் துக்குப் பதில் குண்டாத்தனம் எனும் அருவருக்கத்தக்க காட்சியைத் தோற்றுவித் திருக்கிறது.

இந்தப் பிரச்சினைக்கு எப்படித்தீர்வு காண்பது? இந்தக் கேள்வி சம்பந்தப்பட்ட எல்லோருடைய மனங்களையும் அலைக் கழித்து வருகிறது. முசல்மான்களைப் பூண்டோடு ஒழித்துக்கட்ட இந்துக்கள் முடிவுசெய்துவிட்டால் போதும், முஸ்லீம்கள் தாமாகவே வழிக்கு வந்துவிடுவார்கள் என்று சூதுவாதற்ற இந்து மகாசபை தேச பக்தர்கள் கருதுகின்றனர். ஆனால் அதே சமயம் காங்கிரஸ் இந்து தேசிய வாதிகளோ அரசியல் சலுகைகளையும் வேறு சலுகைகளையும் அளித்து முஸ்லீம்களைச் சரிகட்டும் கொள்கையை, சகித்துக் கொள்ளும் கொள்கையைக் கடைப்பிடித்தனர்; ஏனென்றால் முஸ்லீம்களின் ஆதரவு இல்லாமல், தாங்கள் போற்றிப்பேணும் புனிதமான சுதந்திர லட்சி யத்தை அடைய முடியாது என்று அவர்கள் கருதினர். இந்து மகா சபையின் திட்டம் எவ்வகையிலும் ஒற்றுமைக்கு வழிவகுக்கக் கூடிய தல்ல. மாறாக, முன்னேற்றத்திற்கு அது ஒரு பெரும் தடைக்கல் என்றே கூறவேண்டும். இந்துஸ்தான் இந்துக்களுக்கே என்று இந்து மகா சபை தலைவர் முன்வைத்த கோஷம் தான்தோன்றித்தன மானது மட்டுமல்ல, பெரும் கேடுவிளைவிக்கும் அறிவீனமான கோஷமாகும். அப்படியானால் காங்கிரஸ் பின்பற்றிய பாதை சரியானதா? காங்கிரஸ் இரண்டு விஷயங்களை உணரத் தவறி விட்டதாக எனக்குத் தோன்றுகிறது. இதில் காங்கிரஸ் முறை தவறி விட்ட முதல் விஷயம் எதிர்த்தரப்பினருக்கு சலுகை வழங்கி திருப்திப் படுத்தி அவர்களைச் சரிக்கட்டுவதற்கும், பிரச்சினைக்கு ஆக்கப் பூர்வமாக உடன்பாடு காணுவதற்கும் வேறுபாடு இருக்கிறது;

---

1. அகில இந்திய முஸ்லீம் லீகின் கராச்சி மாநாட்டில் உரையாற்றிய திரு. ஜின்னாவும் சர் அப்துல்லா ஹரூனும் இந்திய முஸ்லீம்களை முஸ்லீம் உலகின் "சூடட்டன்" என்று வருணித்தனர்; சூடட்டன் ஜெர்மானியர்கள் செக்கோஸ்லோவாகியாவுக்குச் செய்த அதே காரியத்தை இங்கு செய்யும் வல்லமை படைத்தவர்கள் என்று போற்றிப் புகழ்ந்தனர்.

அதிலும் அடிப்படையான, முக்கியமான வேறுபாடு இருக்கிறது; விட்டுக் கொடுத்துச் சரிகட்டுவது என்பது வீம்புச் சண்டைக்காரன் தனது சினத்துக்கு ஆளான நிரபராதிகளுக்கு எதிராக கொலை, கொள்ளை, கொள்ளி, கற்பழிப்பு போன்ற அட்டூழியங்களைச் செய்யும்போது அவற்றைக் கண்டும் காணாதிருக்கும் போக்கைக் குறிக்கும். ஆனால் அதேசமயம் உடன்பாடு என்பது எந்த ஒரு தரப்பும் மீறமுடியாத வரம்புகளை, வரையறைகளைக் குறிக்கும். வீம்பு செய்பவனை தகாத முறைகளில் திருப்திப்படுத்தி சரிக்கட்டிச் செல்லும் போக்கால் அவனது கோரிக்கைகளுக்கும் நப்பாசைகளுக்கும் வரம்புகட்டமுடியாது. ஆனால் உடன்பாடு இதைச் செய்ய முடியும். காங்கிரஸ் உணரத் தவறிவிட்ட இரண்டாவது விஷயம் மேன்மேலும் சலுகைகளை அளித்துக் கொண்டே செல்லும் கொள்கை முஸ்லீம் வெறித்தனத்தை அதிகப்படுத்தியிருக்கிறது என்பதும், இதைவிட மோசம் என்னவென்றால், முஸ்லீம்கள் இந்தச் சலுகைகளை இந்துக்களது தோல்வி மனப்பான்மையின் சின்னமாக, அவர்களிடம் எதிர்ப்புசக்தி இல்லாததன் அறிகுறியாக அர்த்தப்படுத்திக் கொள்கிறார்கள் என்பதுமாகும். இட்லர் விஷயத்தில் சலுகைகள் மேல் சலுகைகள் அளித்து, மேன்மேலும் விட்டுக்கொடுத்து அவனை சரிக்கட்டும் கொள்கையை நேச நாடுகள் கடைப்பிடித்ததால் அவை எத்தகைய அவல நிலைக்கு, இக்கட்டான நிலைக்கு உள்ளாயினவோ அதே நிலையில்தான் இன்று இந்துக்களின் சரிக்கட்டும் கொள்கையும் அவர்களைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறது. இது மற்றொரு வகையான நோய்; சமூகத் தேக்க நிலை என்னும் நோயை விட இது கடுமையில் எவ்வகையிலும் குறைந்ததல்ல. சலுகைகள் அளித்துத் திருப்திப்படுத்தும் போக்கு இந்நோயை மேலும் தீவிரமாக்கவே செய்யும். உடன்பாடு காணுவது ஒன்றுதான் இதற்கு ஒரே பரிகாரம். பாகிஸ்தான் ஓர் உடன்பாடு என்றால் அது பரிசீலனைக்குரிய ஏற்பாடேயாகும். உடன்பாடு என்ற முறையில், அடிக்கடி சலுகைகள் அளித்துத் திருப்திப்படுத்தி சரிக்கட்ட வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு அது முடிவு கட்டும்; இந்துக்களுடனான நடைமுறைத் தொடர்புகளில் முஸ்லீம்கள் அதீதமான அரசியல் வெறியார்வத்தைக் காட்டி வருவதால் ஏற்பட்டு வரும் பாதுகாப்பற்ற நிலைக்குப் பதிலாக உடன்பாட்டின் மூலம் குழப்பமற்ற நிலைமையும் அமைதியும் நிலைபெறுவதை விரும்புவோர் இதனை நிச்சயமாக வரவேற்பார்கள்.



# இயல் 12

# தேசிய அளவிலான ஏமாற்றம்

## I

உங்கள் நாட்டுக்கு நீங்கள் விரும்பும் மிக உன்னதமான எதிர்காலம் என்ன என்று ஓர் இந்தியனைக் கேட்டால் அவனுடைய பதில் என்னவாக இருக்கும்? கேள்வி எவ்விதம் முக்கியமோ, அவ்விதமே அதன் பதிலும் சிந்தையைக் கவராமல் இருக்க முடியாது.

இதர விஷயங்கள் எப்படியிருப்பினும், தனது நாட்டைப் பற்றிப் பெருமையும், பெருமிதமும், விழுமிய உணர்வும் கொண்ட நூறு விழுக்காடுள்ள ஓர் இந்தியன் " ஒன்றுபட்ட, ஒருங்கிணைந்த சுதந்திர இந்தியாவே என் நாட்டின் எதிர்காலம் குறித்த எனது மிக உயரிய லட்சியம்" என்று பதிலளிப்பான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஆனால் அதேசமயம் இந்த ஒளிமயமான எதிர்காலத்தை இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய இரு சாராருமே ஏற்றுக் கொண்டா லொழிய அந்த லட்சியம் வெறும் இனிய கனவாகவே, சொல்லளவில் அமைந்த விருப்பமாக மட்டுமே இருக்கும்; அது ஒருபோதும் ஸ்தூலமான வடிவத்தைப் பெறாது. இது ஒரு சிலரது ஆர்வ விருப்பம் மட்டும்தானா அல்லது அனைவரும் பின்பற்ற வேண்டிய லட்சியமா?

அரசியல் குறிக்கோள்களைப் பொறுத்தவரையில் எல்லாக் கட்சிகளுமே ஒருமித்த கருத்து கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது; இந்தியாவின் அரசியல் பரிணாமத்தின் லட்சியம் சுதந்திரமே என்பதை அவை பிரகடனம் செய்துள்ளன. காங்கிரஸ்தான் இந்தியா வுக்கு அரசியல் சுதந்திரம் பெற்றுத் தருவது தனது குறிக்கோள் என முதன் முதலில் பறைசாற்றிற்று. 1927 டிசம்பரில் சென்னையில் நடைபெற்ற மாநாட்டில் ஏற்கப்பட்ட ஒரு விசேடத் தீர்மானத்தில் காங்கிரசின் கொள்கை வரையறுத்துக் கூறப்பட்டது; பரிபூரண தேசிய சுதந்திரமே இந்திய மக்களின் குறிக்கோள் என அதில் தெளிவுபடுத்தப் பட்டது.[1] இந்துமகா சபையைப் பொறுத்தவரையில் மக்கள் பிரதி

---

1. காங்கிரசின் குறிக்கோள் சென்னையில் மாற்றப்படவில்லை. லாகூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில்தான், 1929 டிசம்பர் 31 ஆம் தேதி ஏற்கப்பட்ட ஒரு தீர்மானத்தின் மூலம் அது மாற்றப்பட்டது. சென்னை மாநாட்டில் சுதந்திரத்திற்கு ஆதரவாக ஒரு தீர்மானம் மட்டும்தான் நிறைவேற்றப்பட்டது. 1928 டிசம்பரில் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் 1929 டிசம்பர் 31 ஆம் தேதி நள்ளிரவுக்குள் இந்தியாவுக்கு குடியேற்ற நாட்டு அந்தஸ்து வழங்க பிரிட்டன் முன்வந்தால் அதைத் தாங்கள் ஏற்றுக்கொள்வதாக திரு. காந்தியும் காங்கிரஸ் மகாசபை தலைவரும் அறிவித்தனர்.

நிதித்துவ அரசாங்கமே இந்தியாவின் குறிக்கோள் என 1932 ஆம் ஆண்டு வரை கூறிவந்தது. 1937 வரை தனது அரசியல் குறிக்கோளில் எந்த மாற்றமும் செய்யவில்லை. பிறகு அதே ஆண்டில் ஆமதாபாத்தில் நடைபெற்ற மாநாட்டில் பூரண சுயராஜ்யமே அதாவது பரிபூரண சுதந்திரமே இந்து மகாசபையின் குறிக்கோள் என அறிவிக்கப்பட்டது. முஸ்லீம் லீக் 1912 ஆம் ஆண்டில் தனது அரசியல் குறிக்கோளை வெளியிட்டது; இந்தியாவில் மக்கள் பிரதிநிதித்துவ அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்று அது கோரிற்று. 1937ல் மேலும் முன்னேறி தனது குறிக்கோளை மக்கள் பிரதிநிதித்துவ அரசாங்கம் என்பதை சுதந்திரம் என மாற்றிக்கொண்டது; இதன் மூலம் காங்கிரசும் இந்து மகாசபையும் மேற்கொண்ட அதே நிலையைக் கைக்கொண்டது.

இந்த மூன்று அரசியல் கட்சிகளும் விவரித்த சுதந்திரம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடமிருந்து விடுதலை பெறுவதையே குறித்தது. ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நுகத்தடியிலிருந்து விடுபடுவது குறித்து கருத்தொற்றுமை மட்டும் போதாது. சுதந்திர இந்தியாவைப் பேணிப் பாதுகாப்பதிலும் கருத்தொற்றுமை நிலவ வேண்டும். எனவே, இந்தியா, பிரிட்டனிடமிருந்து விடுதலையும் சுதந்திரமும் பெறுவதில் மட்டுமல்லாது அந்த விடுதலையையும் சுதந்திரத்தையும் வேறு எந்த அந்நிய சக்தியிடமிருந்தும் பாதுகாப்பதிலும் உடன்பாடு ஏற்படுவது அவசியம். உண்மையில் பிரிட்டனிடமிருந்து சுதந்திரம் பெறுவதை விடவும் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காப்பது அதைவிடவும் முக்கியமான கடமை என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த மிக முக்கியமான கடமை விஷயத்தில் முன்போல் ஒருமித்த கருத்து நிலவுவதாகத் தோன்றவில்லை. எது எப்படியிருந்தபோதிலும் இந்த விஷயத்தில் முகமதியர்களின் போக்கு அத்தனை நம்பிக்கையளிப்பதாக இல்லை. இந்தியாவின் சுதந்திரத்தைப் பேணிக்காக்கும் பொறுப்பைத் தாங்கள் ஏற்க முடியாது என்று முஸ்லீம் தலைவர்கள் பல சந்தர்ப்பங்களில் வெளியிட்ட கருத்துகளிலிருந்து இதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். இத்தகைய இரண்டு கூற்றுகளைக் கீழே தந்துள்ளேன்.

1925ல் லாகூரில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் டாக்டர் கிச்சுலு பின்வருமாறு பேசினார்:[1]

1. ''இந்தியர்களின் பார்வையில்'', டைம்ஸ் ஆப் இந்தியா, 14.3.25

''காங்கிரஸ் உயிரற்றிருந்தபோது, கிலாபத் கமிட்டிதான் அதற்கு உயிர்ப்பிச்சை அளித்தது. கிலாபத் கமிட்டி அதனுடன் இணைந்தபோது இந்து காங்கிரஸ் 40 ஆண்டுகளில் செய்ய முடியாததை அது ஒரே ஆண்டில் சாதித்தது. ஏழு கோடி தீண்டப்படாதவர்களைக் கைதூக்கிவிடும் பணியில் காங்கிரஸ் ஈடுபட்டது. உண்மையில் இது முற்றிலும் இந்துக்கள் செய்ய வேண்டிய பணி. அப்படியிருந்தும் காங்கிரசின் பணம் இதன் பொருட்டு செலவிடப்பட்டது. என்னுடையவையும் எனது முஸ்லீம் சகோதரர்களுடையவும் பணமும் தண்ணீர் போல் வாரி இறைக்கப்பட்டது. எனினும் தீரமிக்க முஸ்லீம் சகோதரர்கள் அதனைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அப்படியிருக்கும்போது, முசல்மான்களாகிய நாங்கள் டான்ஸிம் பணியை மேற்கொண்டு, அதன் பொருட்டு இந்துக்களுக்கோ, காங்கிரசுக்கோ சொந்தமாக இல்லாத எங்கள் பணத்தைச் செலவிடும்போது இந்துக்கள் ஏன் எங்களுடன் சச்சரவு செய்ய வேண்டும்?

''இந்த நாட்டை பிரிட்டிஷ் ஆட்சியிடமிருந்து விடுவித்து சுயராஜ்யம் அடைந்த பிறகு ஆப்கனியர்களோ வேறு முஸ்லீம்களோ இந்தியா மீது படையெடுப்பார்களேயானால், முஸ்லீம்களாகிய நாங்கள் அவர்களை வீரத்தோடு எதிர்த்துப் போரிடுவோம், அந்நியப் படையெடுப்பிலிருந்து நாட்டை பாதுகாக்கும் பொருட்டு எங்கள் புதல்வர்கள் அனைவரையும் பலிகொடுக்கச் சற்றும் தயங்கமாட்டோம். ஆனால் ஒரு விஷயத்தை நான் பட்டவர்த்தனமாக, தெள்ளத்தெளிவாக கூறியாக வேண்டும். என்னுடைய அன்பான இந்து சகோதரர்களே, நான் சொல்லுவதை மிகக் கவனமாகக் கேளுங்கள். எங்களது டான்ஸிம் இயக்கப் பாதையில் தட்டுத்தடைகளை ஏற்படுத்துவீர்களேயானால், எங்களுக்குள்ள உரிமைகளை வழங்க மறுப்பீர்களேயானால் ஆப்கனிஸ்தானுடனோ அல்லது வேறு எந்த முஸ்லீம் நாட்டுடனோ நெருங்கிய உறவு பூண்டு, அவர்களது ஒத்துழைப்புடன் இந்த நாட்டில் எங்கள் ஆட்சியை நிறுவுவோம்''.

1939 ஜனவரி 27 ஆம் தேதி சில்ஹட்டில் மௌலானா ஆஸாத் சோபானி நிகழ்த்திய உரை நமது கவனத்திற்குரியதாகும். ஒரு

மௌலானாவின் கேள்விக்குப் பதிலளித்து மௌலானா ஆஸாத் சோபானி பேசியபோது கூறியதாவது:[1]

''ஆங்கிலேயர்களை இந்த நாட்டைவிட்டு விரட்டுவதை ஆதரிக்கும் தேர்ந்த, தெளிந்த, சிறந்த தலைவன் இந்தியாவில் யாரேனும் இருக்கக் கூடுமானால் அது நானாகத்தான் இருக்க முடியும். எனினும் முஸ்லீம் லீக் சார்பில் ஆங்கிலேயர்களுடன் எத்தகைய போராட்டமும் இருக்கக் கூடாது என்றே விரும்புகிறேன். நமது மாபெரும் போராட்டம் பெரும்பான்மையினராக உள்ள நமது 22 கோடி இந்துப் பகைவர்களுடன்தான். ஆங்கிலேயர்கள் 4½ கோடிப் பேர்தான். அப்படியிருந்தும் அவர்கள் கிட்டத்தட்ட இந்த உலகம் முழுவதையுமே விழுங்கி ஏப்பமிட்டு, மகா வலிமை மிக்கவர்களாகி விட்டார்கள். அந்த ஆங்கிலேயர்களைப் போன்றே கல்வி கேள்வியிலும், அறிவுத்திறத்திலும், தரத்திலும், செல்வத்திலும், எண்ணிக்கையிலும் முன்னேறியுள்ள இந்த 22 கோடி இந்துக்கள் ஆற்றல் மிக்கவர்களானால் முஸ்லீம் இந்தியாவையும் படிப்படியாக எகிப்து, துருக்கி, காபூல், மெக்கா, மெதினா மற்றும் யஜூஜ், மஜூஜ் போன்ற சிற்றரசுகளையும் விழுங்கி விடுவார்கள். (உலகம் அழிவதற்கு முன்னர் அவர்கள் இந்தப் பூமியில் தோன்றி தங்கள் முன்னால் எதிர்ப்பட்டதை எல்லாம் விழுங்கி விடுவார்கள் என்று குரானிலும் கூறப்பட்டிருக்கிறது).

''ஆங்கிலேயர்கள் மெல்ல மெல்ல பலவீனமடைந்து வருகிறார்கள்..... அண்மை வருங்காலத்தில் அவர்கள் இந்தியாவை விட்டுச் சென்று விடுவார்கள். எனவே, இஸ்லாமின் மிகப் பெரிய விரோதிகளான இந்துக்களை எதிர்த்து இப்போதே போராட்டத்தைத் தொடங்கி அவர்களைப் பலவீனப்படுத்தவில்லை என்றால், அவர்கள் இந்தியாவில் ராமராஜ்யத்தை நிறுவுவதோடு படிப்படியாக உலகெங்கும் வியாபித்து விடுவார்கள். அவர்களை (இந்துக்களை) பலப்படுத்துவதும் அல்லது பலவீனப்படுத்துவதும் 9 கோடி இந்திய முஸ்லீம்களின் கையில்தான் இருக்கிறது. ஆகவே, முஸ்லீம் லீகில் தன்னை இணைத்துக் கொண்டு போராடுவது ஆழ்ந்த சமயப்பற்றுள்ள

1. ஆனந்த பஜார் பத்ரிகாவில் வங்காளி மொழியில் பிரசுரமான உரை. இங்கு பிரசுரமாகியுள்ள இவ்வுரையின் ஆங்கில வடிவம் இந்துஸ்தான் ஸ்டாண்டர்டு ஆசிரியர் எனக்காக மொழிபெயர்த்துத் தந்ததாகும்.

ஒவ்வொரு முஸ்லீமின் இன்றியமையாத கடமையாகும். அப்போதுதான் இந்துக்கள் இங்கு காலூன்றிக் கொள்ள முடியாது, தங்களை நிலைநாட்டிக் கொள்ள முடியாது; ஆங்கிலேயர்கள் வெளியேறியதும் இந்தியாவில் முஸ்லீம் ஆட்சியை நிறுவ முடியும்.

''ஆங்கிலேயர்கள் முஸ்லீம்களின் பகைவர்களாயினும் இப்போதைக்கு நம்முடைய போராட்டம் ஆங்கிலேயர்களுடனல்ல. முதலில் முஸ்லீம் லீகின் துணை கொண்டு இந்துக்களுடன் ஏதேனும் ஓர் உடன்பாட்டிற்கு வரவேண்டும். பின்னர் ஆங்கிலேயர்களை எளிதாக விரட்டிவிட்டு, இந்தியாவில் முஸ்லீம் ஆட்சியை நிலைநாட்ட முடியும்.

''எச்சரிக்கையாக இருங்கள்! காங்கிரஸ் மௌல்விக்கள் விரிக்கும் வலையில் விழுந்துவிடாதீர்கள்; ஏனென்றால் 22 கோடி இந்துப் பகைவர்களின் கரங்களில் முஸ்லீம் உலகம் ஒருபோதும் பாதுகாப்பாக இருக்க முடியாது.''

மௌலானா ஆஸாத் சோபானியின் உரையின் சுருக்கத்தை மேற்கண்டவாறு தந்திருக்கும் **ஆனந்த பஜார்** பத்திரிகையின் நிருபர் காங்கிரஸ் மாகாணங்களில் முஸ்லீம்கள் கொடூரமாக ஒடுக்கப்பட்டதாக அநேக கற்பனையான நிகழ்ச்சிகளையும் மௌலானா விவரித்ததாகக் கூறுகிறார்:

''மாகாண சுயாட்சித் திட்டம் செயல்படுத்தப்பட்டபோது, காங்கிரஸ் மந்திரிசபைகள் அமைக்கப்பட்டன, இந்துக்களின் ஆதிக்கத்திலுள்ள காங்கிரசின் கரங்களில் முஸ்லீம் நலன்கள் பாதுகாப்பாக இருக்க மாட்டா என்று தாம் உணர்ந்ததாக அவர் கூறினார்; ஆனால் இந்துத் தலைவர்கள் இதில் வேறுபட்ட கருத்து கொண்டிருந்தனர்; எனவே, தாம் காங்கிரசை விட்டு வெளியேறி லீகில் சேர்ந்ததாகக் குறிப்பிட்டார். அவரது பயத்தை காங்கிரஸ் அமைச்சர்கள் உண்மையாக்கி விட்டனர். எதிர்காலத்தை இவ்வாறு முன்கூட்டியே கணிப்பதற்குப் பெயர்தான் அரசியல் என்பது. எனவே, தாம் ஒரு மாபெரும் அரசியல்வாதி என்று தம்மை வருணித்துக் கொண்டார். இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்னதாக வலுக்கட்டாயமாகவோ, நேசபூர்வமான முறையிலோ இந்துக்களுடன் ஏதேனும் ஓர் உடன்பாட்டிற்கு வரவேண்டும் என்ற தமது கருத்தை அவர் மீண்டும் உறுதிப்

படுத்தினார். இல்லையென்றால் 700 ஆண்டுக்காலம் முஸ்லீம் களிடம் அடிமைகளாக இருந்துவந்த இந்துக்கள் முஸ்லீம்களை அடிமைப்படுத்தி விடுவார்கள் என்று அவர் எச்சரித்தார்.''

முஸ்லீம்களின் மனத்தில் எத்தகைய எண்ணங்கள் அலை மோதிக் கொண்டிருக்கின்றன என்பதை இந்துக்கள் அறிவார்கள்; நாட்டின் சுதந்திரத்தைத் தங்களை அடிமைப்படுத்துவதற்குப் பயன்படுத்திக் கொள்வார்களோ என்றும் அவர்கள் அச்சம் கொண் டிருக்கிறார்கள். எனவே, சுதந்திரம் அடைவதை இந்தியாவின் அரசியல் லட்சியமாக ஆக்கும் விஷயத்தில் அவர்கள் அத்தனை ஆர்வமில்லாதவர்களாக, அக்கறையில்லாதவர்களாக இருந்து வரு கிறார்கள். எதையும் சரிவர நிர்ணயிக்கக்கூடிய தகுதியில்லாதவர் களது அச்சங்கள் அல்ல இவை. மாறாக, சுதந்திரப் போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தும் விவேகம் குறித்து தமது அச்சங்களை வெளியிட்டிருக்கும் இந்த இந்துக்கள் தங்களுக்கு முஸ்லீம்களுட னுள்ள தொடர்பு காரணமாக எந்த ஒரு கருத்தையும் கூறுவதற்கு முற்றிலும் தகுதியுடையவர்கள் என்பதில் ஐயமில்லை.

திருமதி அன்னி பெசன்ட் கூறுகிறார்:[1]

''இந்தியாவின் முகமதியர்கள் சம்பந்தமாக, மற்றொரு கடுமையான பிரச்சினை எழுந்துள்ளது. முஸ்லீம்களுக்கும் இந்துக்களுக்குமிடையேயான உறவு லக்னோ நாட்களில் இருந்தது போன்று இருந்திருந்தால் இந்தப் பிரச்சினை இத்தனை அவசரமானதாக இருந்திருக்காது. அந்த லக்னோ நாட்களில் கூட இந்தப் பிரச்சினை ஏறத்தாழ நிச்சயமாக எழுந்திருக்கவே செய்யும்; சுதந்திர இந்தியாவிலும் முன்னோ பின்னோ எப்போதேனும் எழவும் கூடும். கிலாபத் கிளர்ச் சிக்குப் பிறகு நிலைமை பெரிதும் மாற்றமடைந்துள்ளது. கிலாபத் கிளர்ச்சியை ஊக்குவித்ததன் மூலம் இந்தியா எண் ணற்ற இன்னல்களுக்கு, அல்லல்களுக்கு உள்ளாகியிருக்கிறது; இவற்றில் ஒன்று முஸ்லீம் அல்லாதவர்களுக்கு எதிராக முஸ்லீம் களின் உள் மனத்தில் கனன்று கொண்டிருக்கும் பகைமை உணர்வு கடந்த காலத்தைப் போன்றே அப்பட்டமாக, கூச்ச நாச்சமின்றி பீறிட்டெழுந்திருப்பதாகும். வாளேந்தும் பழைய

1. இந்திய அரசியலின் எதிர்காலம், பக்கங்கள். 301 - 305.

முஸ்லீம் மதம் மீண்டும் புத்துயிர் பெற்று வருவதைப் பார்க்கிறோம்; நூற்றாண்டுக் காலமாக மறந்து போயிருந்த தனித்து ஒதுங்கி நிற்கும் பழைய போக்கு மீண்டும் தலையெடுத்து வருவதைக் காண்கிறோம்; ஜஸ்ருத்-அரபை, அரபிய தீவை முஸ்லீமல்லாதவர்களின் மாசு படிந்த பாதங்கள் படாத புனித பூமி என்று உரிமை கொண்டாடுவதை நோக்குகிறோம்; ஆப்கனியர்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தால் நாங்கள் எங்களுடைய சக மதத்தினருடன் சேர்ந்து கொள்வோம், தங்கள் தாயகத்தைப் பகைவர்களுக்கு எதிராகப் பாதுகாக்கும் இந்துக்களின் தலைகளை கொய்தெறிவோம் என்று முஸ்லீம் தலைவர்கள் பிரகடனம் செய்து வருவதைக் கேட்கிறோம்; முஸ்லீம்களின் பிரதான விசுவாசம் இஸ்லாமிய நாடுகளின் மீதிருக்கிறதே அன்றி தங்கள் தாய்நாட்டின் மீது இல்லை என்பதைக் காண்கிறோம்; அவர்களது அத்யந்த ஆசை 'ஆண்டவனின் ராஜ்யத்தை' ஏற்படுத்துவதுதான் என்பதை அறிகிறோம்; ஆனால் அந்த ஆண்டவன் உலகுக்கெல்லாம் தந்தையல்ல, அனைத்து ஜீவராசிகளையும் நேசிப்பவரல்ல, தங்களுடைய தீர்க்கதரிசி என்னும் முசல்மான்களின் மூக்குக் கண்ணாடிகள் வழியாகத் தெரிபவரே அந்த ஆண்டவன்; முஸ்லீமல்லாதவர்களைப் பொறுத்தவரையில், ஆரம்பகால முஸ்லீம்களைப் போலவே மோசஸ் வழிப்பட்ட எகோவாவைக் கடவுளாகக் கொண்ட எபிரேயர்களும் தங்களுடைய தீர்க்கதரிசி தங்களுக்கு அருளிய மதத்தைக் கடைப்பிடிக்கும் சுதந்திரத்திற்காகப் போராடியதை வரலாற்று ஏடுகளில் காண்கிறோம். கடவுளின் கட்டளைகளை மனிதன் மூலம் தரும் இத்தகைய சமய தத்துவங்களை எல்லாம் கடந்து உலகம் முன்னேறிவிட்டது. அவ்விதமிருக்கும்போது, தங்களது தீர்க்கதரிசி வகுத்துத்தந்த சட்டங்களுக்கு தாங்கள் வாழும் நாட்டின் சட்டங்களுக்கும் மேலாகக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்று முசல்மான்களின் தலைவர்கள் இப்போது முன்வைத்திருக்கும் கோரிக்கை குடிமையியல் மரபொழுங்கையும் நாட்டின் ஸ்திரத்தன்மையையும் சீர்குலைக்கக் கூடியதேயாகும்; இது அவர்களை மோசமான குடிமக்களாக்குகிறது; ஏனென்றால் அவர்களது விசுவாச மையம் நாட்டுக்கு வெளியே இருக்கிறது; மௌலானா முகமது அலி, சௌகத் அலி போன்ற பிரபல முஸ்லீம் தலைவர்களின் கருத்துகளைக் கொண்டிருந்த போதிலும் தங்களுடைய சக பிரஜைகளின் நம்பிக்கைக்கு அவர்கள் பாத்திரமாக முடியாது. இந்தியா சுதந்திரமடைந்தால்

மக்கள் தொகையில் முஸ்லீம் பகுதியினர் - அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் இவர்கள் தங்களது தீர்க்கதரிசியின் பெயரால் பேசுபவர்களைத்தான் பின்பற்றுவார்கள் - இந்தியாவின் சுதந்திரத்திற்கு உடனடி அபாயமாக மாறிவிடுவார்கள். ஆப்கனிஸ்தான், பலுச்சிஸ்தான், பெர்சியா, ஈராக், அரேபியா, துருக்கி, எகிப்து போன்ற நாடுகளைச் சேர்ந்த முஸ்லீம்களுடனும் மத்திய ஆசியாவைச் சேர்ந்த ஏனைய முஸ்லீம்களுடனும் கூட்டுச் சேர்ந்து இஸ்லாமின் ஆட்சியின் கீழ் இந்தியாவைக் கொண்டுவர முனைந்து ஈடுபடுவார்கள் - இந்திய சமஸ்தானங்களிலுள்ள முஸ்லீம்களின் துணை கொண்டு பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் - இங்கு முஸ்லீம் ஆட்சியை நிறுவுவார்கள். இந்திய முசல்மான்கள் தங்கள் தாயகத்திடம் விசுவாசம் கொண்டிருப்பார்கள் என்று நாம் நம்பினோம்; முஸ்லீம்களில் சில படித்த வர்க்கத்தினர் இத்தகைய முசல்மான்களின் எழுச்சியைத் தடுத்து நிறுத்த முயல்வார்கள் என்று இன்னமும் நம்பிக் கொண்டுதான் இருக்கிறோம்; ஆனால் இப்படிப்பட்டவர்கள் மிகச்சிலரே ஆவார்கள், வெறி கொண்ட முஸ்லீம்களின் எதிர்ப்பை அவர்களால் தாக்குப் பிடித்து நிற்க முடியாது, இந்த முயற்சியில் அவர்கள் சமயப் பகைவர்கள் என்று முத்திரை குத்தப்பட்டு படுகொலை செய்யப்படவும் கூடும். இஸ்லாமிய ஆட்சி என்றால் என்ன என்பதை மலபார் நமக்குக் காட்டியுள்ளது; இந்தியாவில் 'கிலாபத் ஆட்சியின்' மற்றொரு சுயரூபத்தைக் காண நாம் விரும்பவில்லை. மாப்ளாக்களிடம் மலபாருக்கு வெளியே உள்ள முஸ்லீம்கள் எத்தகைய பரிவும் பாசமும் அனுதாபமும் வைத்துள்ளனர் என்பதை தங்களுடைய சக சமயத்தாருக்கு அவர்கள் ஓடோடி வந்து உதவியதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவர்கள் என்ன செய்யவேண்டும் என்று அவர்களது சமயம் போதிப்பதாக அவர்கள் நம்புகிறார்களோ அதையே அவர்கள் செய்திருக்கிறார்கள் என்று திரு. காந்தியே கூடக் கூறியிருக்கிறார். இது உண்மை என்றே அஞ்சுகிறேன். ஆனால் கொலையும் கொள்ளியும் கொள்ளையும் கற்பழிப்பும் செய்யும்படியும் அல்லது வழிவந்த தங்களது பழைய சமய நம்பிக்கைகளைக் கைவிட மறுப்பவர்களை நாட்டைவிட்டுத் துரத்தும்படியும் தங்களுடைய மதம் தங்களுக்குப் போதிப்பதாக நம்புவர்களுக்கு நாகரிகமடைந்த ஒரு நாட்டில் இடமில்லை. முற்காலத்துக் கொள்ளைக் கூட்டத்தினர் மக்களை அதிலும் மடியில் பணத்துடன் செல்லும் வழிப்போக்கர்களைக் குரல்வளை நெரித்துக் கொல்லும்படி தங்களது கடவுள் தங்களுக்குக்

கட்டளையிட்டிருப்பதாக நம்பிவந்தார்கள். இத்தகைய ''கடவுளின் சட்டங்கள்'' ஒரு நாகரிக நாட்டின் சட்டங்களைக் காலில் போட்டு மிதித்துத் துவைப்பதற்கு அனுமதிக்க முடியாது; இந்த இருபதாம் நூற்றாண்டில், வாழும் மக்கள் இத்தகைய பத்தாம் பசலியான, மத்தியகாலக் கருத்துக்களை நம்புபவர்களை ஒன்று திருத்தி நல்வழிக்குக் கொண்டு வர வேண்டும், அல்லது அவர்களை நாடு கடத்த வேண்டும். அவர்களுக்குரிய இடம் அவர்களது கருத்துகளைப் பகிர்ந்து கொள்ளும் நாடுகள்தான்; தங்களுடன் கருத்து வேறுபாடு கொண்டவர்களுக்கு எதிராக அங்கு இதேபோன்ற வாதங்களை அவர்கள் முன்வைக்கமுடியும் - நீண்டகாலத்துக்கு முன்னதாக பெர்சியாவில் பார்சிகள் விஷயத்திலும், நம் காலத்தில் பாஹைஸ்டுகள் விஷயத்திலும் இவ்வாறுதான் நடைபெற்றது. உண்மையில், தீவிர சமயவெறி கொண்ட முஸ்லீம்கள் ஆட்சி செய்யும் ஒரு நாட்டில் முஸ்லீம் சமய உட்பிரிவினர் பாதுகாப்பாக இருக்க முடியாது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முஸ்லீம்களில் எல்லாப் பிரிவுகளது சுதந்திரத்தையும் பாதுகாத்துள்ளது; இவற்றில் எந்த ஒரு பிரிவும் சிறுபான்மையாக இருக்கும் பகுதியில் சமூகப் பகிஷ்காரத்திலிருந்து அதனைப் பாதுகாத்துவிடமுடியாது என்றாலும் மற்றபடி ஷியாக்கள், சன்னிகள், சபிகள், பாஹைஸ்டுகள் போன்ற பல்வேறு முஸ்லீம் பிரிவினரும் பிரிட்டிஷ் அரசாணையின் கீழ் பாது காப்பாகவே வாழ்ந்து வருகிறார்கள். முஸ்லீம் ஆட்சியாளர்கள் ஆட்சி புரியும் நாடுகளை விட பிரிட்டிஷ் ஆட்சியில் முகமதியர்கள் அதிக சுதந்திரத்துடன் இருக்கிறார்கள். சுதந்திர இந்தியாவைப் பற்றிச் சிந்திக்கும்போது முகமதியர்கள் ஆளும் அபாயத்தையும் கருத்திற் கொள்வது அவசியம்.''

திரு. சி.ஆர். தாஸுக்கு லாலா லஜபதிராய் எழுதிய கடிதத்திலும்[1] இதே போன்ற அச்சத்தை வெளியிட்டுள்ளார்:

''ஒரு விஷயம் அண்மைக் காலத்தில் எனக்கு மிகுந்த கவலையை அளித்துவருகிறது; நீங்களும் அதைப் பற்றிக் கவனமாக சிந்திக்க வேண்டும் என்று விரும்புகிறேன்; அதுதான்

1. இந்திர பிரகாஷ் எழுதியுள்ள சாவர்க்கரின் வாழ்க்கையில் இக்கடிதம் மேற்கோள் காட்டப் பட்டிருக்கிறது.

இந்து-முஸ்லீம் ஒற்றுமைப் பிரச்சினை. கடந்த ஆறு மாதங்களில் என் நேரத்தில் பெரும்பகுதியை முஸ்லீம் வரலாற்றையும் முஸ்லீம் சட்டத்தையும் ஆராய்வதில் செலவிட்டேன்; முஸ்லீம் சட்டம் சாத்தியமானதோ, நடைமுறைக்கு உகந்ததோ அல்ல என்ற முடிவுக்கே என்னால் வரமுடிந்தது. ஒத்துழையாமை இயக்கத்தில் முகமதிய தலைவர்களின் நேர்மையை ஏற்றுக்கொண்டாலும், இவ்வகையான விஷயத்தில் அவர்களது மதம் ஒரு பெரும் தடையாக இருக்கிறது என்றே கருதுகிறேன். ஹக்கீம் அஜ்மல்கானுடனும் டாக்டர் கிச்சுலுவுடனும் நான் நடத்திய உரையாடலைப் பற்றி கல்கத்தாவில் உங்களிடம் கூறியது நினைவிருக்கலாம். ஹக்கீம் சாகேபை விடவும் மிகச்சிறந்த ஒரு முகமதியரை இந்துஸ்தானில் காணமுடியாது. எனினும் எந்த முஸ்லீம் தலைவரும் குரானைப் புறக்கணித்து விட முடியுமா? இஸ்லாமிய சட்டத்தை நான் புரிந்துகொண்டது தவறாக இருக்கக்கூடும் என்று நம்பவே விரும்புகிறேன்; இத்தகைய நம்பிக்கையைவிட எனக்கு ஆறுதல் அளிக்கக்கூடியது வேறு எதுவும் இருக்கமுடியாது. ஆனால் இஸ்லாமிய சட்டத்தை நான் சரியாகவே புரிந்து கொண்டிருக்கிறேன் என்றால் அப்போது பின்கண்ட முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது: ஆங்கிலேயர்களை எதிர்ப்பதில் நாம் ஒன்றுபட்டாலும் பிரிட்டிஷ் விதிமுறைகளில் இந்துஸ்தானை ஆள்வதில், ஜனநாயக முறையில் இந்துஸ்தானில் ஆட்சி நடத்துவதில் நாம் ஒன்றுபட முடியாது. அப்படியானால் இதற்குப் பரிகாரம் தான் என்ன? இந்தியாவிலுள்ள ஏழு கோடி முஸ்லீம்களைப் பற்றி நான் அஞ்சவில்லை; ஆனால் இந்த ஏழு கோடியுடன் ஆப்கனிஸ்தான், மத்திய ஆசியா, அரேபியா, மெசபோட்டோமியா, துருக்கி போன்ற நாடுகளின் ஆயுதப்படைகளும் சேர்ந்து கொண்டால் வெல்லற்கரிய வலிமை பெற்றுவிடுமே என்றுதான் அஞ்சுகிறேன். இந்து-முஸ்லீம் ஒற்றுமை அவசியமானது, விரும்பத்தக்கது என்று உண்மையாகவே, மனப்பூர்வமாகவே நம்புகிறேன். முஸ்லீம் தலைவர்களை முற்றிலும் நம்புவதற்கும் தயாராக இருக்கிறேன். ஆனால் குரான் மற்றும் ஹாதிஸ்களின் கட்டளைகள் இருக்கின்றனவே, அதற்கு என்ன செய்வது? முஸ்லீம் தலைவர்கள் இவற்றை மீறமுடியாது. அப்படியானால் நம் கதி அதோகதி தானா? அவ்வாறு நடைபெறாது என்றே நம்புகிறேன். நன்கு கற்றறிந்தவர்களும் விவேக மிக்கவர்களும் இந்த இக்கட்டிலிருந்து விடுபட ஏதேனும் வழி காணுவார்கள் என்றே நம்புகிறேன்.''

1924ல் ஒரு வங்காளி இதழின் ஆசிரியர், புகழ்பெற்ற கவிஞரான டாக்டர் ரவீந்திரநாத் தாகூரைப் பேட்டி கண்டார். அந்தப் பேட்டியில் கூறப்பட்டிருப்பதாவது:[1]

> ''கவிஞரின் கருத்துப்படி, இந்து-முஸ்லீம் ஒற்றுமையைக் கிட்டத்தட்ட அசாத்தியமாக்கும் மற்றொரு முக்கியமான காரணக்கூறு முகமதியர்கள் தங்கள் தேசபக்தியை எந்த ஒரு குறிப்பிட்ட நாட்டுடனும் நிலைநிறுத்திக் கொள்ள முடியாததேயாகும். எந்த ஒரு முகமதிய நாடாவது இந்தியாவின் மீது படையெடுக்குமாயின் உங்கள் தாய்நாட்டைப் பாதுகாப்பதற்கு உங்களது இந்து சகோதரர்களுடன் தோளோடு தோள் இணைந்து நின்று போரிடுவீர்களா என்று பல முகமதியர்களைத் தாம் ஒளிவுமறைவின்றி, மனம் திறந்து கேட்டதாக கவிஞர் தெரிவித்தார். ஆனால் அவர்களிடமிருந்து கிடைத்த பதில் அவருக்குத் திருப்தியளிக்கக் கூடியதாக இல்லை. ''எந்தச் சந்தர்ப்பத்திலும் ஒரு முகமதியன் அவன் எந்த நாட்டைச் சேர்ந்தவனாயினும் இன்னொரு முகமதியனை எதிர்த்து நிற்பது என்பது அனுமதிக்க முடியாதது என்று முகமது அலி போன்றவர்களே தம்மிடம் கூறினார்கள் என்பதைத் தம்மால் நிச்சயமாகக் கூறமுடியும்''? என்றும் அவர் குறிப்பிட்டார்.

## II

சுதந்திரம் கிட்டுவது சாத்தியமில்லை என்றால் நூறு விழுக்காடு இந்தியன் ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்து - மிகச்சிறந்த ஏற்பாடு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் இந்தியா குடியேற்ற நாட்டு அந்தஸ்து பெறுவதே ஆகும். ஆனால் இத்தகைய ஏற்பாட்டில் யார் திருப்தியடைவார்கள்? முசல்மான்களைப் பொறுத்தவரையில் குடியேற்ற நாட்டு அந்தஸ்து பெறுவதுடன் திருப்தியடையமாட்டார்கள். ஆனால் இந்துக்கள் நிச்சயமாகத் திருப்தியடைவார்கள் என்பதை என்னால் உறுதியாகக் கூறமுடியும். இவ்வாறு நான் கூறுவது இந்தியர்கள் மற்றும் ஆங்கிலேயர்களின் செவிகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல நாராசமாக இருக்கலாம். சுதந்திரம் வேண்டும் என்று மிக உரத்த குரலில் காங்கிரஸ் ஆர்ப்பரித்து வருவதைக் காணும் எவருக்கும் இந்துக்கள்தான் சுதந்திரத்திற்காக நிற்கிறார்கள், முஸ்லீம்கள்

1. 18.4.24 தேதியிட்ட டைம்ஸ் ஆப் இந்தியாவின் ''இந்தியர்களின் பார்வையில்'' என்ற கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோள்.

குடியேற்ற நாட்டு அந்தஸ்து கிடைத்தால் போதுமென்று இருக்கிறார்கள் என்றுதான் எண்ணத் தோன்றும். இந்த எண்ணம் ஆங்கிலேயர் மனத்தில் எவ்வளவு ஆழமாகப் பதிந்துள்ளது என்பதையும், சுதந்திரம் வேண்டுமென்றும் இந்தியாவின் பெயரால் வாங்கப் பட்டுள்ள கடன்கள் மறுதலிக்கப்படவேண்டுமென்றும் காங்கிரஸ் எழுப்பிய இரட்டைக்குரல்கள் காரணமாக இந்துக்களின் கோரிக்கைகளும் நலன்களும் எவ்விதம் பாதிக்கப்பட்டன என்பதையும் வட்ட மேசை மாநாட்டில் கலந்துகொண்ட யாரும் உணராமல் இருந்திருக்க முடியாது. காங்கிரசின் இந்தக் கூக்குரல்களைக் கேட்ட ஆங்கிலேயர்கள் இந்துக்கள்தான் பிரிட்டிஷாரின் பகைவர்கள் என்றும், சுதந்திரம் கேட்காததோடு கடன் பிரச்சினையையும் எழுப்பாத முஸ்லீம்கள் தங்களுடைய நண்பர்கள் என்றும் கருதினர். காங்கிரசின் படாடோபமான திட்டங்களின் பகைப்புலனில் பார்க்கும்போது இத்தகைய எண்ணம் உண்மையானதாகத் தோன்றினாலும் இது தவறான பிரசாரத்தின் விளைவாகத் தோற்றுவிக்கப் பட்ட ஒரு தவறான கருத்து என்பதில் ஐயமில்லை. இதற்கு எத்தனை எத்தனையோ சான்றுகளைக் காட்டமுடியும்.

சுதந்திரம் குறித்த பிரச்சினை முதன்முதலில் 1921ல் எழுந்தது. அந்த ஆண்டு இந்திய தேசிய காங்கிரஸ், அகில இந்திய கிலாபத் மாநாடு, அனைத்திந்திய முஸ்லீம் லீக் ஆகிய மூன்றுமே தங்கள் வருடாந்திர மாநாடுகளை ஆமதாபாத் நகரில் கூட்டின. இந்த அமைப்புகள் ஒவ்வொன்றும் சுதந்திரத்திற்கு ஆதரவான தீர் மானத்தை தத்தமது மாநாட்டில் முன்மொழிந்தன. காங்கிரஸ், கிலாபத் மாநாடு, முஸ்லீம் லீக் ஆகிய மூன்று அமைப்புகளின் மாநாடுகளிலும் இந்தத் தீர்மானத்திற்கு நேர்ந்த கதியை இங்கு குறிப்பிடுவது சுவையானதாக இருக்கும்.

அச்சமயம் திரு.சி.ஆர்.தாஸ்தான் முறைப்படி காங்கிரஸ் மகாசபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். மாநாடு ஆரம்பிப்பதற்கு முன்னால் அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டதால் அவரால் மாநாட்டுக்குத் தலைமை வகிக்க முடியவில்லை. எனவே அவருக்குப் பதிலாக ஹக்கீம் அஜ்மல்கான் தலைமை வகித்தார். இந்த மாநாட்டில், காங்கிரசின் குறிக்கோளில் மாற்றத்தை வலியுறுத்தும் தீர்மானம் ஒன்றை மௌலானா ஹஜரத் மோகனி முன்மொழிந்தார். இந்தத் தீர்மானம் பற்றிய நடவடிக்கைகளின்[1] சுருக்கம் வருமாறு:

1. இந்திய வருடாந்திர பதிவேடு, 1922, பின் இணைப்பு காண்க, பக்கங்கள் 64-66.

''மௌலானா ஹஜரத் மோகனி பரிபூரண சுதந்திரத்தை வலியுறுத்தும் தமது தீர்மானத்தை முன்மொழிந்து உருதுவில் ஒரு நீண்ட, உணர்ச்சிகரமான சொற்பொழிவை நிகழ்த்தினார். அவர் கூறியதாவது:

சுயராஜ்யம் தருவதாக சென்ற வருடமே அவர்கள் வாக்குறுதி தந்திருந்தபோதிலும், கிலாபத் , மற்றும் பஞ்சாப் சம்பந்தப் பட்ட அநீதிகளுக்கு, தவறுகளுக்கு பரிகாரம் செய்யப்படும் என்று உறுதியளித்திருந்தபோதிலும் இதுவரை எதுவும் செய்யப் படவில்லை. எனவே, வேலைத்திட்டத்தை விடாது பற்றிக் கொண்டிருப்பதில் பயனில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் துக்குள்ளோ, பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்குள்ளோ இருந் தால் நாம் சுதந்திரமடையப் போவதில்லை. அவசியமானால் அவற்றிலிருந்து வெளியேற நாம் தயங்கக்கூடாது. 'சுயராஜ்யம் எங்கள் பிறப்புரிமை' என்று திலகர் கூறினார். இந்த அடிப் படையான பேச்சு சுதந்திரத்தையும், செயல் சுதந்திரத்தையும் மறுக்கும் எந்த அரசாங்கமும் மக்களது விசுவாசத்தை, நம் பிக்கையைப் பெறுவதற்குத் தகுதியற்றது. குடியேற்ற நாட்டு அந்தஸ்து அடிப்படையில் அமைந்த தன்னாட்சியோ அல்லது காலனி சுயாட்சியோ எங்களது பிறப்புரிமையான சுதந்திரத் திற்கு ஈடாகமுடியாது. திரு. சித்ரஞ்சன் தாஸ், பண்டிட் மோதி லால் நேரு, லாலா லஜபதி ராய் போன்ற மக்களின் ஈடு இணை யற்ற தலைவர்களை வெஞ்சிறையில் தள்ளும் ஓர் அரசாங்கம் மக்களின் நன்மதிப்பைப் பெறும் உரிமையை இழந்துவிட்டது. இந்த ஆண்டு எங்களுக்கு சுயராஜ்யத்தைக் கொண்டுவராத தால், அனைத்து அந்நியக் கட்டுப்பாட்டிலிருந்தும் விடுபட்ட சுதந்திரத்தை வென்று பெறுவதே எங்களுக்குள்ள ஒரே மார்க்கம், இந்த ஒரே மார்க்கத்தை நாங்கள் கைக்கொள்வதிலிருந்து எங்களை எதாலும் யாராலும் தடுக்க முடியாது. இங்கு நான் முன்மொழியும் தீர்மானம் வருமாறு:

''எல்லா அந்நியக் கட்டுப்பாட்டிலிருந்தும் சகல சட்டப் பூர்வமான, அமைதிபூர்வமான முறைகளில் இந்திய மக்கள் சுயராஜ்யத்தை அல்லது பரிபூரண சுதந்திரத்தை அடைவதே இந்திய தேசிய காங்கிரசின் குறிக்கோள்.''

*பல பிரதிநிதிகள் இதை ஆதரித்துப் பேசிய பிறகு திரு.காந்தி தீர்மானத்தை எதிர்க்க முன்வந்தார். தீர்மானத்தை எதிர்த்து அவர் பேசியதாவது:*

*''நண்பர்களே, திரு.ஹஜரத் மோகனியின் தீர்மானம் குறித்து ஒரு சில சொற்களே இந்தியில் கூறினேன். நான் ஆங்கிலத்தில் சொல்ல விரும்புவதெல்லாம் இதுதான்: இந்த தீர்மானத்தை உங்களில் சிலர் மிக அலட்சியமாக, ஏனோதானோ என்றமுறையில் எடுத்துக் கொண்டிருப்பது எனக்கு மிகுந்த வேதனை அளிக்கிறது. நான் வேதனை அடைவதற்குக் காரணம் இது பொறுப்பின்மையைக் காட்டுகிறது என்பதுதான். பொறுப்பு மிக்கவர்கள் என்ற முறையில், நாகபுரி மற்றும் கல்கத்தா நாட்களுக்கு நாம் செல்லவேண்டும்; ஒரு மணி நேரத்துக்கு முன் நாம் என்ன செய்தோம் என்பதை நினைவு கூரவேண்டும். ஒரு மணிநேரத்திற்கு முன்னர் தான் நாம் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினோம்; கிலாபத், பஞ்சாப் கொடுமைகளுக்கு ஓர் இறுதி தீர்வு காணுவதற்கும், சில திட்டவட்டமான வழிமுறைகள் மூலம் அதிகார வர்க்கத்திடமிருந்து மக்கள் கரங்களுக்கு அதிகாரத்தை மாற்றுவதற்கும் அதில் யோசனை கூறப்பட்டிருந்தது. ஒரு தவறான பிரச்சினையை எழுப்புவதன் மூலமும் இந்திய சூழ்நிலையில் ஒரு வெடிகுண்டை வீசுவதன் மூலமும் இத்தகைய ஒரு நிலை முழுவதையும் உங்கள் மனத்திலிருந்து துடைத்தெறியப் போகிறீர்களா? முந்தைய தீர்மானத்துக்கு வாக்களித்தவர்கள் இந்த தீர்மானத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டு அதற்கு வாக்களிப்பதற்கு முன்னர் ஐம்பது தடவை சிந்தித்துப் பார்ப்பீர்கள் என்று நம்புகிறேன். உண்மையில் நாம் எங்கு இருக்கிறோம் என்பதை நாம் அறியாதவர்களாக இருக்கிறோம் என்று உலகில் சிந்திக்கும் ஆற்றலுடையவர்கள் நம்மீது குற்றம் சாட்டுவார்கள். நமக்குள்ள வரையறைகளையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே முழுமையான, பிரிக்கமுடியாத, உறுதியான ஒற்றுமை நிலவுவது மிகவும் அவசியம். ஆம். இந்து - முஸ்லீம் ஒற்றுமை இந்திய தேசியத்தின் ஒரு பிரிக்கமுடியாத அம்சமாக விளங்குகிறது என்று நம்பிக்கையோடு கூறக்கூடியவர்கள் இங்கு யார் இருக்கிறார்கள்? இன்று பிற்பகலில் யாரைப் பற்றிக் கூற நீங்கள் கேட்டீர்களோ அதைப் பார்சிகளும், சீக்கியர்களும், கிறித்தவர்களும், தீண்டப்படாதவர்களும் இத்தகைய கருத்துக்கு எதிராகக் கிளர்ந்தெழமாட்டார்கள் என்று இங்குள்ளவர்களில்*

யார் கூறமுடியும்? ஆதலால் உங்கள் நன்மதிப்புக்கும் நன்மைக்கும் உதவாமல் உங்களுக்குச் சீர்செய்யமுடியாத ஊறு விளைவிக்கக்கூடிய ஒரு நடவடிக்கையை எடுக்கும் முன்னர் ஐம்பது தடவை யோசியுங்கள். முதலில் நமது வலிமையை ஒருங்குதிரட்டுவோம்; முதலில் நம்மை நாமே ஆழம் பார்ப்போம். ஆழம் தெரியாமல் ஆற்றில் இறங்குவது ஆபத்தானது. திரு. ஹஜரத் மோகனியின் முன்மொழிவு ஆழம் காணமுடியாத ஆழ்கசத்தில் உங்களைக் கொண்டுபோய் விடுகிறது. ஒரு மணி நேரத்திற்கு முன்னர்தான் நீங்கள் நிறைவேற்றிய தீர்மானத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமானால் இந்தத் தீர்மானத்தை நிராகரிக்குமாறு உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் முன்னால் இப்போதுள்ள தீர்மானம் சற்று நேரத்திற்கு முன்னர் நீங்கள் நிறைவேற்றிய தீர்மானத்தின் முழுப்பலனையும் சிதைத்துச் சீர்குலைத்து விடுகிறது. குறிக் கோள்கள் என்பவை சாதாரண விஷயங்களா? அவை ஒரு மனிதன் விரும்பும்போது மாற்றிக் கொள்ளும் உடைகள் போன்றவையா? காலம் காலமாகவே லட்சியங்களுக்காக மக்கள் தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்து வந்திருக்கிறார் கள்; அவற்றிற்காகவே வாழ்ந்து வந்திருக்கிறார்கள். ஆழ்ந் தாராய்வுகளுக்கும் மாபெரும் விவாதங்களுக்கும் பிறகு நாகபுரி யில் நீங்கள் ஏற்றுக்கொண்ட குறிக்கோளை நீங்கள் மாற்றப் போகிறீர்களா? அந்தக் குறிக்கோளை நீங்கள் ஏற்றுக் கொண்ட போது ஒரு வருடத்திற்குள் அது நிறைவேற்றப்படவேண்டும் என்ற எந்த வரையறையையும் நிர்ணயிக்கப்படவில்லை. இது மிக விரிவான குறிக்கோள்; பலவீனமானவர்களையும் சரி, பலம் வாய்ந்தவர்களையும் சரி அனைவரையுமே அது அர வணைத்துக் கொள்கிறது. ஹஜரத் மோகனி முன்வைத்துள்ள குறிக்கோள் வரையறைக் குட்பட்டது, முழுமையானதல்ல. உங்கள் சோதரர்களில் பலவீனமானவர்களை ஆதரிக்க அவரது இத்தகைய குறிக்கோளை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களே யானால் உங்களிலேயே பலவீனமானவர்களுக்குப் பாதுகாப்பு கிட்டாமல் போகும். ஆகவே, இந்தத் தீர்மானத்தை நிராகரிக்கும் படி உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்பட்டு தோல்வியடைந்த தாக அறிவிக்கப்பட்டது.

அகில-இந்திய கிலாபத் மாநாட்டுக் கூட்டத் தொடருக்கு ஹக்கீம் அஜ்மல்கான் தலைமை தாங்கினார். இந்த மாநாட்டின் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் இந்திய சுதந்திரத்திற்கு

ஆதரவான தீர்மானம் ஒன்றும் முன்மொழியப்பட்டது. அந்தத் தீர்மானத்துக்கு என்ன நேர்ந்தது என்பதை கமிட்டியின் கூட்ட நடவடிக்கைகளது சுருக்கத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். கூட்ட நடவடிக்கைகள் குறித்த அறிக்கை கூறுவதாவது:[1]

''மாநாடு இரவு பதினோரு மணிக்கு ஒத்திவைக்கப்பட்டு அடுத்த நாள் மீண்டும் கூடும் என்று அறிவிக்கப்பட்டது. இவ்வாறு மாநாடு ஒத்திவைக்கப்படுவதற்கு முன்னால் ஹக்கீம் அஜ்மல்கான் ஓர் அறிவிப்பை வெளியிட்டார். திரு. ஆசாத் சோபானி முன்மொழிந்தும் திரு. ஹஸ்ரத் மோகனி வழி மொழிந்தும் கொண்டுவரப்பட்ட தீர்மானத்தை விஷயாலோ சனைக் கமிட்டி பரிசீலித்து, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை அழித்தொழிப்பதற்கும், பரிபூரண சுதந்திரத்தைப் பெறுவதற் கும் முயற்சி மேற்கொள்ளும்படி அனைத்து முகமதியர்களை யும் ஏனைய சமூகத்தினரையும் கேட்டுக் கொள்வதென பெரும்பான்மை வாக்குகள் மூலம் முடிவு செய்யப்பட்டது என அவர் தெரிவித்தார்.

அந்தத் தீர்மானம் வருமாறு: பிரிட்டிஷ் அரசாங்கம் பிடிவாதமாகக் கடைப்பிடித்துவரும் கொள்கையையும், அதன் போக்கையும் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது, ஜஸிரத்-அல்-அரபும் இஸ்லாமிய உலகமும் முஸ்லீமல்லா தோரின் செல்வாக்கிலிருந்தும் கட்டுப்பாட்டிலிருந்தும் விடு படுவதற்கு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அனுமதிக்கும் என்று எதிர்பார்க்கமுடியாது. ஷரியத் கோரிக்கைகள் பாதுகாப்பாக இருக்கும் அளவுக்கு கிலாபத் கோரிக்கையை நாடிப் பெற முடியாது; கிலாபத்தின் நிரந்தரப் பாதுகாப்பை முன்னிட்டும் இந்தியாவின் நல்வாழ்வை முன்னிட்டும் பிரிட்டிஷ் ஏகாதி பத்தியத்தை அழித்தொழிப்பதற்கு முயற்சிப்பது அவசியம். இந்த முயற்சியில் வெற்றிபெறுவதற்கு முஸ்லீம்களுக்குள்ள ஒரே வழி இந்தியாவின் ஏனைய குடிமக்களுடன் சேர்ந்து இந்தியாவின் பரிபூரண சுதந்திரத்தை ஈட்டுவதுதான் என்று இம்மாநாடு நம்புகிறது; சுயராஜ்யத்தைப் பற்றி முஸ்லீம் கருத்து ஒன்றேதான். அதாவது பரிபூரண சுதந்திரம்தான் என்று இம் மாநாடு கருதுகிறது; இந்தியாவின் ஏனைய குடிமக்களும் இதே கருத்தை கொண்டிருக்கவேண்டும் என்றும் அது எதிர்ப் பார்க்கிறது.

1. இந்திய வருடாந்திர பதிவேடு, 1922 பின் இணைப்பு காண்க, பக்கங்கள் 133-34

''மாநாடு 1921 டிசம்பர் 27 ஆம்தேதி இரண்டாவது நாளாக மீண்டும் கூடியபோது சுதந்தரம் குறித்த இந்தத் தீர்மானம் பற்றி பிரதிநிதிகளிடையே கருத்து வேறுபாடு தோன்றியிருப்பது தெரிய வந்தது. சுதந்திரம் பெறுவதும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை நிர்மூலம் செய்வதும்தான் முஸ்லீம்களின் குறிக்கோள் என்று அறிவிக்கும் தீர்மானத்தை திரு. ஹஸ்ரத் மோகனி முன் மொழியவிருந்த சமயத்தில் கிலாபத் விஷயாலோசனைக் கமிட்டியின் உறுப்பினர் ஒருவர் ஆட்சேபத்தை எழுப்பினர்; கிலாபத் மாநாட்டு விதிமுறைகளின்படி, அதன் குறிக்கோளில் மாற்றம் செய்ய உத்தேசிக்கும் எந்த ஒரு தீர்மானமும் விஷயாலோசனைக் கமிட்டியில் மூன்றிலிரண்டு பெரும்பான்மை வாக்குகளுடன் நிறைவேற்றப் பட்டால்தான் அது ஏற்றுக் கொள்ளப்பட்டதாகக் கருதப் படும் என்று அவர் வாதிட்டார்:

''தலைவர் ஹக்கீம் அஜ்மல்கான் இந்த ஆட்சேபத்தை ஏற்று, சுதந்திரம் குறித்த தீர்மானம் விதிகளுக்குப் புறம்பானது என்று கூறித் தள்ளுபடி செய்தார்.

''திரு. ஹஸ்ரத் மோகனி இதனை வன்மையாக ஆட்சேபித்தார்; விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் இதே உறுப்பினர் தெரிவித்த ஆட்சேபணையை ஏற்க மறுத்த தலைவர் பகிரங்க மாநாட்டில் அதனை அனுமதித்ததைச் சுட்டிக் காட்டினார். தாங்கள் குறிப்பிடும் சுயராஜ்யம் என்பது பரிபூரண சுதந்திரமே என்று மாநாடு பிரகடனம் செய்வதற்கு இடையூறு செய்யும் வகையில் தம்முடைய தீர்மானத்தை விதிகளுக்குப் புறம்பானது என்று கூறி தலைவர் நிராகரித்து விட்டார் என்றும் அவர் புகார் கூறினார்.''

அச்சமயம் அனைத்திந்திய முஸ்லீம் லீகின் தலைவராக இருந்தவர் இதே மௌலானா ஹஸரத் மோகனிதான். சுதந்திரத் தீர்மானம் சம்பந்தமான லீகின் நடவடிக்கைகள் குறித்த அறிக்கை கூறுவதாவது:[1]

''1921 டிசம்பர் 31 ஆம் தேதி இரவு 9 மணிக்கு முஸ்லீம் லீக் கூடியது. சர்ச்சைக்கிடமற்ற சில தீர்மானங்கள் நிறைவேற்றப்

1. அதே நூல், பின் இணைப்பு, பக்.78.

பட்ட பிறகு மாநாட்டுத் தலைவர் ஹஸரத் மோகனி பலத்த கையொலிக்கிடையே ஓர் அறிவிப்பை வெளியிட்டார்: சுதந்திரம் அடைவது சம்பந்தமாகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழித்துக்கட்டுவது சம்பந்தமாகவும் தாம் வழிமொழிந்த தீர்மானத்தை நிராகரிப்பது என்று விஷயாலோசனைக் கமிட்டியின் முடிவு இறுதியானது என்றும், லீகிலுள்ள பெரும்பான்மையோரின் கருத்தை அது பிரதிபலிக்கிறது என்றும் கூறினார். எனினும் இந்த விஷயம் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது என்பதைக் கருத்திற்கொண்டும், எத்தகைய வாக்கெடுப்பும் நடத்தாமல் இது பற்றிய ஒரு விவாதத்தைத் தாம் அனுமதிப்பதாகவும் அவர் குறிப்பிட்டார்.

''விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் இத் தீர்மானத்தைக் கொண்டுவந்த திரு. ஆசாத் சோபானியே அதனை லீக் கூட்டத்திலும் முன்மொழிந்தார். இந்து-முஸ்லீம் ஒற்றுமை மிகவும் அத்தியாவசியமானது என்றும், அகிம்சாபூர்வமான ஒத்துழையாமையே தங்கள் போராட்டத்திற்கான ஒரே வழி என்றும், காங்கிரஸ் அளிக்க முன்வந்துள்ள சர்வாதிகாரப் பொறுப்புக்கு திரு.காந்தி முற்றிலும் தகுதியானவர் என்றும் அவர் கூறினார். மேலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்தியாவுக்கும் முஸ்லீம் உலகுக்கும் மிகப்பெரும் அபாயம் என்றும், சுதந்திர லட்சியத்தை முன்வைத்து அது அழிக்கப்படுவது அவசியம் என்றும் தாம் நம்புவதாகவும் அவர் தெரிவித்தார்.

''திரு. ஆசாத் சோபானிக்குப் பிறகு பேசிய பல பேச்சாளர்களும் அவரை ஆதரித்து அதே தோரணையில் பேசினர்.

''காங்கிரஸ் மேற்கொள்ளாத ஒரு நடவடிக்கையை லீக் மேற்கொள்ள விரும்பாததே தீர்மானத்தைத் தலைவர் நிராகரித்ததற்குக் காரணம் என்று மாண்புமிகு திரு.ராஸா அலி அறிவித்தார். எந்தப் பெரிய விஷயங்களையும் அவற்றைப் புரிந்து கொள்ளாமல் பேசவேண்டாம் என்று அவர் பிரதிநிதிகளை எச்சரித்தார். இந்தியா சுதந்திரம் அடைந்தால் கூட அதனை நிலைநாட்டும் நிலையில் தற்போது அது இல்லை என்பதையும் அவையினரின் கவனத்திற்கு அவர் கொண்டு வந்தார்.

''நாளையே பிரிட்டிஷார் நாட்டை விட்டு வெளியேறி விடுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது யார்

நமது பிரதம தளபதியாக இருப்பார் என்று அவர் கேட்டார் (கூட்டத்தில் ஒரு குரல்: 'என்வர் பாஷா'.)

''எந்த அயல்நாட்டவரையும் தாம் ஏற்கமுடியாது என்று பேச்சாளர் திட்டவட்டமாக, உறுதியாக அறிவித்தார். ஓர் இந்தியரே தலைமைத் தளபதியாக இருக்கவேண்டுமென்று தாம் விரும்புவதாகவும் குறிப்பிட்டார்.''

1924 மார்ச்சில் காகினாடாவில் காங்கிரஸ் மாநாட்டிலும் சுதந்திரம் சம்பந்தப்பட்ட பிரச்சினை எழுப்பப்பட்டது. ஆனால் பலன் ஏதும் இல்லை.

1924ல் பெல்காமில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த திரு. காந்தி பின்வருமாறு கூறினார்:

''எனது அபிப்பிராயத்தில், பிரிட்டிஷ் அரசாங்கம் கூறுவது உண்மை என்றால், சமத்துவம் பெறுவதற்கு நேர்மையான முறையில் அது உதவுகிறது என்றால், பிரிட்டிஷ் தொடர்பை அடியோடு துண்டிப்பதைவிட இது ஒரு மாபெரும் வெற்றியாகும். எனவே, சாம்ராஜ்யத்திற்குள் சுயராஜ்யம் பெற நான் பாடுபடுவேன்; ஆனால் அதேசமயம் பிரிட்டனின் தவறு காரணமாக அவசியமானால் எல்லாத் தொடர்புகளையும் துண்டித்துக்கொள்ளத் தயங்கமாட்டேன். அப்போது பிரிந்து செல்வதற்கான பொறுப்பை பிரிட்டிஷ் மக்கள்மீது சுமத்துவேன்.''

1925ல் திரு.சி.ஆர்.தாஸ் மீண்டும் இப்பிரச்சினையை எழுப்பினார். அந்த ஆண்டு மே மாதம் நடைபெற்ற வங்க மாகாண மாநாட்டில் அவர் பேசும்போது, சுதந்திரம் குறித்த கருத்துக்கு மரண அடி கொடுக்கும் திட்டவட்டமான நோக்கத்தோடு, குடியேற்ற நாட்டு அந்தஸ்துடன் ஒப்பிடும்போது சுதந்திரம் கீழானது என்பதைக் காட்டுவதற்கு மிகுந்த முயற்சி எடுத்துக் கொண்டார். அவர் கூறினார்:

''..... சுதந்திரம் என்பது சுயராஜ்யத்தைவிடக் குறுகிய குறிக்கோள் என என் மனத்துக்குப்படுகிறது. சார்புநிலையின் எதிர் மறையை அது குறிக்கிறது என்பது உண்மையே; ஆனால் அது தன்னளவில் ஆக்கரீதியான குறிக்கோளை நமக்கு அளிக்கவில்லை. சுதந்திரம் என்பது சுயராஜ்யத்துக்கு உடன்பாடானதல்ல என்று இங்கு நான் கூறவரவில்லை. ஆனால் இங்கு தேவையானது வெறும் சுதந்திரமல்ல, மாறாக சுயராஜ்யம் ஏற்படுத்தப்படவேண்டும். நம்

கதிப்படி நடக்கட்டும் என்று பிரிட்டிஷார் நம்மைவிட்டுச் சென்று நாளைய தினமே இந்தியா சுதந்திரம் பெறலாம். ஆனால் சுயராஜ்யம் என்று எதை நான் புரிந்துகொண்டிருக்கிறேனோ அதை நமக்கு அது வழங்காது. கயா காங்கிரசில் என் தலைமை உரையில் நான் சுட்டிக் காட்டியதுபோல், இந்திய மக்களை உருவாக்கக் கூடிய மேலீடாக முரண்பட்டதாகத் தோன்றும் பல அம்சங்களை ஒன்று படுத்தும் மிக முக்கியமான, சிக்கலான பிரச்சினை இந்தியாவை எதிர்நோக்கியுள்ளது. இந்த ஒன்றுபடுத்தும் பணி ஒரு நீண்ட நடைமுறையாகும்; இது சோர்வும் சலிப்பூட்டும் நடைமுறையாக வும் இருக்கக் கூடும்; எனினும் இது இல்லாமல் சுயராஜ்யம் சாத்தியமில்லை....

''இரண்டாவதாக, சுதந்திரம் என்பது சுயராஜ்யத்தின் சத்தும் சாரமுமாக உள்ள ஒழுங்கு முறை பற்றிய ஒரு படப்பிடிப்பினை உங்களுக்கு வழங்கவில்லை. நான் முன்னர் குறிப்பிட்ட ஒன்றுபடுத்தும் பணி இந்த ஒழுங்குமுறையை உருவாக்குவதையே குறிக்கிறது. ஆனால் நாம் எதை நிலைநாட்டப்பாடுபடுகிறோமோ அது இந்திய மக்களின் சிறப்புத் தன்மைக்கும், உளப்பாங்குகளுக்கும், பாரம்பரி யங்களுக்கும் இசைந்ததாக இருக்க வேண்டும் என்பதை நாம் தெளி வாகப் புரிந்து கொள்ள வேண்டும். என் அபிப்பிராயத்தில், சுயராஜ்யம் என்பது முதலாவதாக, இந்திய மக்களிடையே நிலவும் பல்வேறு அம்சங்களை ஒன்றுபடுத்தும் சுதந்திரம் நமக்கு இருக்க வேண்டும் என்பதைக் குறிக்கிறது; இரண்டாவதாக, இந்தப் பணியே தேசிய அளவில் நாம் மேற்கொள்ளவேண்டும். இரண்டாயிரம் ஆண்டு களுக்குப் பின்னோக்கிச் செல்லாமல், நமது தேசிய மேதகைமை, உணர்ச்சிப்பாங்குகளின் பகைப்புலனில் முன்னோக்கிச் சென்று இப்பணியைச் செய்ய வேண்டும்.

''மூன்றாவதாக, நம் முன்னுள்ள பணியில் எந்த அந்நிய சக்தியும் நமக்கு இடையூறாக இருக்கக்கூடாது. லட்சியம் விஷயத் தில் நாம் எதை அறுதி செய்யவேண்டும், உறுதிசெய்யவேண்டும் என்று வருகிறபொழுது, இவ்வகையில் சுயராஜ்யத்தையே குறிப் பிடுவேனேயல்லாமல் சுயராஜ்யத்துக்கு எதிர்மறையாக இருக்கக் கூடிய வெறும் சுதந்திரத்தைக் குறிப்பிடமாட்டேன். விடுதலை குறித்து நமது தேசியக் குறிக்கோள் என்னவென்று நம்மிடம் வினவப் பட்டால் நாம் அதற்கு அளிக்கக்கூடிய ஒரே பதில் சுயராஜ்யம் என்பதாகத்தான் இருக்கவேண்டும். தன்னாட்சியையோ அல்லது சுயாட்சியையோ நான் விரும்பவில்லை. நான் வருணித்த சுய ராஜ்யம் என்ற கட்டுக்கோப்புக்குள் அவை வரக்கூடும். ஆனால் எனது

மனப்பாங்கு எப்படியோ 'ஆட்சி' என்னும் சொல்லுக்கு - அது தன்னாட்சியாக இருந்தாலும்சரி, சுயாட்சியாக இருந்தாலும் சரி - எதிரானதாக இருக்கிறது.

★ ★

''அடுத்து இந்தக் குறிக்கோளை சாம்ராஜ்யத்திற்குள் எய்த வேண்டுமா அல்லது வெளியில் எய்தவேண்டுமா என்ற கேள்வி எழுகிறது. நமது உரிமையை சாம்ராஜ்யம் ஏற்குமானால் சாம் ராஜ்யத்திற்குள்ளேயே அதை அடைவோம்', 'அது நம் உரிமையை அங்கீகரிக்கவில்லையென்றால் சாம்ராஜ்யத்திற்கு வெளியே அதை அடைவோம்' என்ற பதிலையே காங்கிரஸ் எப்போதும் கூறி வந்தி ருக்கிறது. நமது சொந்த வாழ்க்கையை வாழ்வதற்கு நமக்கு வாய்ப்பு இருக்கவேண்டும்; - ஆன்மபோதம் பெறுவதற்கும், சுய வளர்ச்சிக் கும், சுயதேவை பூர்த்திக்கும் நமக்கு வாய்ப்பு இருக்கவேண்டும். இது நமது சொந்த வாழ்க்கையை வாழும் பிரச்சினை'. நமது தேசிய வாழ்க்கையின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்கும் சாம்ராஜ்யம் நமக்கு தங்குதடையற்ற செயல் உரிமை அளிக்குமாயின் சாம்ராஜ் யத்துக்குள்ளிருந்து கொண்டு நமது குறிக்கோளை அடையும் மார்க் கத்தை ஏற்றுக்கொள்வோம். இதற்கு மாறாக, சாம்ராஜ்யம் தனது ஏகாதிபத்தியப் பாதையை மேற்கொண்டு ஜகன்னாதர் ஆலயரதம் போல நம்மை நசுக்குமானால், அப்போது சாம்ராஜ்யத்துக்கு வெளியே சுயராஜ்யத்தை நிறுவும் திட்டம் நியாயமனாதாக இருக்கும்.

''உண்மையில் சாம்ராஜ்யத்திற்குள் நமது குறிக்கோளை அடையும் திட்டம் நமக்குப் பல அனுகூலங்களை அளிக்கிறது. குடி யேற்ற நாட்டு அந்தஸ்து என்பது எவ்வகையிலும் அயலாட்சிக்கு உட்பட்ட ஒரு நிலை அல்ல. சாம்ராஜ்யத்தின் கட்டுக்கோப்புக்குள் இருக்கும் நாடுகள் உலகாயத அனுகூலங்களுக்காக உண்மையான ஒத்துழைப்பு உணர்வில் பரஸ்பர இணக்கத்தோடு உருவாக்கப்பட்ட ஒரு சுதந்திரமான கூட்டணியேயாகும் இது. சுதந்திரமான கூட்டணி' என்று கூறுகிறபொழுது, பிரிந்து செல்லும் உரிமையையும் அது உள்ளடக்கி இருக்கிறது. சாம்ராஜ்யமோ அல்லது அதில் உள் ளடங்கிய பகுதிகளோ ஒரு மாபெரும் நேசக் கட்டமைப்பாகத்தான் வாழ முடியும் என்று போருக்கு முன்னர் பொதுவாகக் கருதப்பட்டது. இன்றைய நிலைமையில எந்த ஒரு தேசமும் ஒதுங்கி வாழமுடியாது என்பது உணரப்பட்டுள்ளது. குடியேற்ற நாட்டு அந்தஸ்து தேசங் களின் மகத்தான கூட்டமைப்பாகத் திகழும் பிரிட்டிஷ் சாம்ராஜ்

யத்தில் அடங்கியுள்ள ஒவ்வொரு பகுதிக்கும் முழுப் பாதுகாப்பு அளிக்கிறது; அதுமட்டுமல்ல, ஒவ்வொரு பகுதியும் தானே சாதனை புரிவதற்கும், தானே வளர்ச்சியுறுவதற்கும், தானே தனது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கும் வாய்ப்பளிக்கிறது; எனவே, நான் குறிப்பிட்ட சுயராஜ்யத்தின் சகல அம்சங்களையும் இது அர்த்தப் படுத்துகிறது; பிரதிபலிக்கிறது.

''இத்திட்டம் அதன் ஆழமான ஆன்மீக முக்கியத்துவம் காரணமாக என்னைப் பெரிதும் கவர்கிறது. உலக சமாதானத்திலும் முடிவான மாபெரும் உலகக் கூட்டமைப்பிலும் நம்பிக்கைக் கொண்டவன் நான்; பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் எனும் தேசங்களின் மாபெரும் நேசக் கூட்டமைப்பு பல்வேறு இனங்களைத் தன்னுள் கொண்டது; இந்த இனங்கள் ஒவ்வொன்றும் தனக்கே உரிய தனித் தன்மை வாய்ந்த வாழ்க்கையும், தனிச் சிறப்பு வாய்ந்த நாகரிகத்தையும், மேம்பட்ட தனி மனநிலைச் சார்பையும் பெற்றிருப்பவை; திறமை வாய்ந்த அரசியல் வல்லுநர்கள் தலைமை தாங்கி முறையாக வழிநடத்தினால், அரசியல் நிபுணர்கள் எதிர்நோக்கும் மிகப் பெரிய பிரச்சினைக்கு, மனிதமனம் இதுவரை எண்ணிப் பார்த்திராத அளவு உலகை ஒரணியாக ஒன்று திரட்டும் பிரச்சினைக்கு மாபெரும் மனிதகுலக் கூட்டமைப்பை உருவாக்கும் பிரச்சினைக்கு ஒரு நிலையான தீர்வு காணமுடியும். ஆனால் தலைமைஏற்கும் அரசியல் அறிஞர்கள் தக்க உகந்த முறையில் வழிகாட்டுவது அவசியம்: ஏனென்றால் இத்திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு இக் கூட்டமைப்பைச் சேர்ந்த நாடுகள் தியாகங்கள் செய்ய வேண்டியிருக்கும்; சாம்ராஜ்யமும் தனது அருவருக்கத்தக்க ஆதிக்கப்போக்கை கைவிட வேண்டியிருக்கும். காமன்வெல்த்துக்குள் சுதந்திரம் பெற முயல்வது இந்தியாவின் நன்மைக்கும் உலகின் நன்மைக்கும் உகந்ததாக இருக்கும்; இதன் மூலம் தூய மனிதகுல லட்சியத்திற்கு அரும் பெரும் பங்காற்ற முடியும்.''

சுதந்திரத்தைவிட குடியேற்ற நாட்டு அந்தஸ்து மேலானது என்று திரு.தாஸ் வலியுறுத்தியதுடன் நிற்கவில்லை; இந்தியாவின் அரசியல் குறிக்கோளை வரையறுத்துக்கூறும் பின்கண்ட தீர்மானத்தையும் மாநாடு நிறைவேற்றும்படியும் செய்தார்:

1. ''சுயராஜ்யம் எனும் தேசியக் குறிக்கோள் இந்திய தேசம் தனது சொந்த வாழ்க்கையை வாழ்வதைக் குறிக்கிறது; அது ஆன்மபோதம் பெறுவதற்கும், சுய வளர்ச்சியுறுவதற்கும்,

சுயதேவை பூர்த்திக்கும் வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும் என்பதைக் குறிக்கிறது; இந்திய தேசத்தில் அடங்கியுள்ள பல்வேறு சக்திகளையும் ஒன்றுதிரட்டி வலுப்படுத்துவதற்குப் பாடுபடத் தங்குதடையற்ற, எத்தகைய தலையீடுமற்ற சுதந்திரம் தரப்படவேண்டும் என்பதைக் குறிக்கிறது என இம்மாநாடு அறிவிக்கிறது.

2. ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இத்தகைய உரிமையை அங்கீகரிக்குமானால், சுயராஜ்யம் பெறுவதைத் தடுக்காது இருக்குமானால், இத்தகைய வாய்ப்பை அளிக்கச் சித்தமாக இருக்குமானால், இந்த உரிமைகளை நடைமுறைப்படுத்துவதற்குத் தேவையான தியாகம் செய்ய முன்வருமானால், சுதந்திரத்தை காமன்வெல்த்துக்குள் அடையுமாறு இந்த மாநாடு இந்திய தேசத்தைக் கேட்டுக் கொள்கிறது.''

மாநாடு முடிவடையும் வரை திரு.காந்தி மேடையில் இருந்தார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆனால் தீர்மானத்துக்கு அவரிடமிருந்து எத்தகைய எதிர்ப்போ, மறுப்போ வரவில்லை. மாறாக, திரு.தாஸ் மேற்கொண்ட நிலையை அவர் அங்கீகரித்தார்.

இந்த விவரங்களை எல்லாம் கொண்டு பார்க்கும்போது, இந்துக்கள் குடியேற்ற நாட்டு அந்தஸ்தையும் முஸ்லீம்கள் சுதந்திரத்தையும் ஆதரிக்கிறார்கள் என்பது குறித்து யார் ஐயம் கொள்ள முடியும்? அப்படி ஏதேனும் ஐயம் இருக்குமானால், 1928ல் சமர்ப்பிக்கப்பட்ட நேரு கமிட்டியின் அறிக்கை முஸ்லீம் வட்டாரங்களில் ஏற்படுத்திய பிரதிபலிப்புகள், எதிரொலிகள் இந்த ஐயத்தை அறவே அகற்றிவிடும். இந்தியாவுக்கு ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக காங்கிரஸ் நியமித்த நேரு கமிட்டி குடியேற்ற நாட்டு அந்தஸ்தை இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டத்திற்கான அடிப்படையாக ஏற்றுக்கொண்டது; சுதந்திரத்தை நிராகரித்தது. நேரு அறிக்கை குறித்து காங்கிரஸ் கடைப்பிடித்த போக்கையும் முஸ்லீம் அரசியல் நிறுவனங்கள் மேற்கொண்ட போக்கையும் இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கும்.

1928ல் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் வருடாந்திர மாநாட்டில் திரு.காந்தி முன்மொழிந்த பின்வரும் தீர்மானம் ஏற்கப்பட்டது:

''அனைத்துக் கட்சி கமிட்டி அறிக்கை பரிந்துரைத்த அரசியலமைப்புச் சட்டத்தை இந்த காங்கிரஸ் பரிசீலனை செய்ததன் பேரில் இந்தியாவின் அரசியல் மற்றும் வகுப்புப் பிரச்சினைகளின் தீர்வுக்கு இதனை ஒரு மாபெரும் பங்களிப்பாக வரவேற்கிறது; தனது பரிந்துரைகளை வழங்குவதில் நடைமுறைரீதியான ஒருமித்த போக்கைக் கடைப்பிடித்தமைக்காகக் கமிட்டியைப் பாராட்டுகிறது; சென்னை காங்கிரசில் ஏற்கப்பட்ட பரிபூரண சுதந்திரம் குறித்த தீர்மானத்தை ஆதரிக்கும் அதேசமயத்தில் கமிட்டி வகுத்தளித்திருக்கும் அரசியலமைப்புச் சட்டத்தை ஒரு மாபெரும் அரசியல் முன்னேற்ற நடவடிக்கையாகவும், அதிலும் குறிப்பாக நாட்டின் முக்கியமான கட்சிகளிடையே ஏற்பட்ட ஒரு மிகப்பெரும் உடன்பாடு நடவடிக்கையாகவும் இந்த காங்கிரஸ் ஏற்கிறது.

''இந்த அரசியலமைப்புச் சட்டத்துக்கு பிரிட்டிஷ் நாடாளுமன்றம் 1929 டிசம்பர் 31 ஆம் தேதிக்குள் ஒப்புதல் அளிக்குமாயின் தற்போதைய அரசியல் நிலைமையைக் கருத்திற்கொண்டு காங்கிரஸ் இதனை முழுமையாக ஏற்கும்; ஆனால் இந்தத் தேதிக்குள் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இதற்கு ஒப்புதலளிக்காது போனாலோ அல்லது இதனை நிராகரித்தாலோ காங்கிரஸ் ஓர் அகிம்சாபூர்வமான ஒத்துழையாமை இயக்கத்தை மேற்கொள்ளும்; அரசாங்கத்திற்கு வரி செலுத்தாதிருக்குமாறும் அல்லது இது போன்ற வேறு எந்த நடவடிக்கையையும் கைக்கொள்ளுமாறும் நாட்டுக்கு ஆலோசனைகூறும்; மற்றபடி பரிபூரண சுதந்திரத்திற்காக காங்கிரஸ் பெயரால் நடத்தப்படும் எத்தகைய பிரசாரத்திற்கும் இத்தீர்மானத்துக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை.''

இந்துக்களின் கருத்து சுதந்திரத்திற்கு ஆதரவாக இல்லை, குடியேற்ற நாட்டு அந்தஸ்துக்குத்தான் ஆதரவாக இருக்கிறது என்பதை இது காட்டுகிறது. இவ்வாறு கூறுவதை சிலர் ஆட்சேபிக்கலாம். 1927 ஆம் வருட காங்கிரசின் தீர்மானத்தைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள் என்று வினவலாம். 1927ல் சென்னையில் கூடிய காங்கிரஸ் மகாசபை பண்டிட் ஜவஹர்லால் நேரு முன்மொழிந்த பின்வரும் தீர்மானத்தை ஏற்றுக்கொண்டது என்பது உண்மையே.

''பரிபூரண தேசிய சுதந்திரமே இந்திய மக்களின் லட்சியம் என்பதை இந்த காங்கிரஸ் பிரகடனம் செய்கிறது.''

ஆனால் இந்தத் தீர்மானம் காங்கிரசிலுள்ள இந்துக்களின் உண்மையான கருத்தைப் பிரதிபலிக்கவில்லை என்ற வாதத்திற்கு ஆதரவாக போதுமான சான்றுகள் உள்ளன.

இந்தத் தீர்மானம் வியப்பூட்டுவதாக இருந்தது. 1927 ஆம் வருட காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த டாக்டர் அன்சாரியின்[1] உரையில் இது குறித்து எத்தகைய பிரஸ்தாபமும் இல்லை. வரவேற்புக் குழுத் தலைவரும்[2] இதனைப் போகிறபோக்கில் குறிப்பிட்டாரே தவிர ஒரு முக்கியமான நடவடிக்கையாக குறிப்பிடவில்லை.

மேலும், இத்தீர்மானம் பற்றி முன்கூட்டி எவ்வகையிலும் சிந்திக்கப்படவில்லை. ஒரு திடீர் திட்டத்தின் விளைவாகவே இந்தத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. மூன்று காரணக்கூறுகளால் இத்திட்டம் வெற்றியடைந்தது.

முதலாவதாக, பண்டிட் மோதிலால் நேரு மற்றும் திரு.காந்தி ஆகிய இருவரின் அதிலும் முக்கியமாக முன்னர் குறிப்பிட்டவரின் ஆதிக்கத்தை எதிர்த்துவந்த ஒரு பிரிவினர் அச்சமயம் காங்கிரசில் இருந்து வந்தனர். பண்டிட் மோதிலாலின் அரசியல் போட்டியாளரான

---

1. இந்த விஷயம் குறித்து டாக்டர் அன்சாரி கூறியதெல்லாம் இதுதான்: ''அரசியலமைப்பின் இறுதி வடிவம் எவ்வாறு இருந்தபோதிலும் ஒரு விஷயத்தை ஓரளவு திட்டவட்டமாகக் கூறலாம்: அதாவது அது கூட்டரசு பாணியில் ஓர் ஐக்கிய இந்திய அரசுகளின் அமைப்பாக இருக்கும்; தற்போதுள்ள இந்திய சமஸ்தானங்கள் அக்கூட்டமைப்பில் தன்னாட்சி உரிமை படைத்த யூனிட்டுகளாக இருந்துவரும். நாட்டின் பாதுகாப்பிலும் , வெளிவிவகாரங்களை ஒழுங்குபடுத்துவதிலும், இது கூட்டு நலன்களையும் பொது நலன்களையும் பாதுகாப்பதிலும் அவை தமக்குரிய பங்கை ஆற்றிவரும்.'' இந்தியக் காலாண்டு பதிவேடு, 1927, தொகுதி II, பக்கம் 372.

2. திரு. முத்துரங்க முதலியார் பின்வருமாறு கூறினார்:

''நாடாளுமன்றம் அதன் இப்போதைய இறுமாப்பான, அவமதிக்கும் போக்கைத் தொடர்ந்து கடைப்பிடிக்குமானால் சாம்ராஜ்யத்திலிருந்து இந்தியா துண்டித்துக் கொள்வதற்கான பிரசாரத்தை நாம் ஆரம்பிப்போம் என்பதைத் தெளிவுபடுத்தியாகவேண்டும். இந்திய தேசியத்தை உறுதியாக நிலைநாட்டும் தருணம் வரும்போதெல்லாம் இங்கிலாந்து மன்னரது பெயரளவிலான மேலாதிக்கத்தில்கூட கட்டுண்டிராத ஒரு சுதந்திரமான தேசிய அமைப்பை நிறுவுவதே இந்திய மக்களின் ஆர்வவிருப்பமாக இருக்கும் என்பதை நாம் கூறியாகவேண்டும். இந்த விஷயத்தை மிகக் கவனமாகக் கருத்திற்கொள்வது ஆங்கிலேய அரசியல் சான்றாண்மையின் கடமையாகும். அவர்கள் நம்மை மனக்கசப்பு அடையவும், நம்பிக்கை இழக்கவும் விடக்கூடாது.'' மேற்படி நூல், பக்கம் 356.

திரு. சீனிவாச அய்யங்கார்தான் இக்கோஷ்டியின் தலைவர். பண்டிட் மோதிலால், திரு.காந்தி ஆகிய இவ்விருவரின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் அழிக்கக்கூடிய திட்டம் ஒன்றை அவர்கள் தேடிக் கொண்டிருந்தனர். மிகத் தீவிரமான ஒரு நிலையை மேற்கொள்வதும், மிதவாதம் ஒரு தீமையாக அந்நாட்களில் காங்கிரஸ்காரர்களால் கருதப்பட்டுவந்ததால், தங்கள் போட்டியாளர்கள் உண்மையிலேயே மிதவாதிகள் என்று படம் பிடித்துக் காட்டுவதும்தான் மக்களைத் தங்கள் பக்கம் ஈர்ப்பதற்கு, அவர்களது பேராதரவைப் பெறுவதற்கு ஒரு வழி என்பதை அவர்கள் நன்கு தெரிந்திருந்தனர்; தங்களது இந்தத் திட்டம் நிச்சயமாக வெற்றிபெறும் என்றும் திட நம்பிக்கை கொண்டிருந்தனர். எனவே, இந்தியாவின் குறிக்கோளைத் தங்களது போர்க்களமாகக் கொண்டு போரில் குதித்தனர்; பண்டிட் மோதிலாலும் திரு.காந்தியும் குடியேற்ற நாட்டு அந்தஸ்தின் ஆதரவாளர்கள் என்பது தெரிந்திருந்ததால், சுதந்திரத்தை இந்தியாவின் குறிக்கோளாக முன்வைத்தனர். இரண்டாவதாக, திரு. வித்தல் பாய் பட்டேல் தலைமையில் மற்றொரு பிரிவினரும் அச்சமயம் காங்கிரசில் இருந்து வந்தனர். இப்பிரிவினர் அயர்லாந்தின் சின் ஃபெயின் கட்சியினருடன் தொடர்பு கொண்டு இந்தியாவின் லட்சியத்துக்கு அவர்களது உதவியை நாடிவந்தனர். சுதந்திரம் பெறுவது தான் தங்களது குறிக்கோள் என்று இந்தியர்கள் அறிவிக்காதவரை அவர்களுக்கு எவ்வகையிலும் உதவிசெய்ய சின்ஃபெயின் கட்சியினர் தயாராக இல்லை. எனவே, அயரிஷ்காரர்களின் உதவியைப் பெறும் பொருட்டு இந்தியாவின் குறிக்கோள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்பதை சுதந்திரம் என்று மாற்றுவதில் இந்தப் பிரிவினர் மிகுந்த ஆர்வம் காட்டிவந்தனர். இந்த இரண்டு காரணக் கூறுகளுடன் மூன்றாவது காரணக்கூறு ஒன்றும் சேர்ந்து கொண்டது: அதுதான் அச்சமயம் இந்திய மந்திரியாக இருந்த பிர்கன்ஹெட் பிரபு நிகழ்த்திய மிகவும் ஆத்திரமூட்டும் சொற்பொழிவாகும். சைமன் கமிஷன் நியமிக்கப்பட்டபோது, ஓர் அரசியல் சட்டத்தை முறையாக வகுப்பதற்குக்கூட இந்தியர்கள் திராணியற்றவர்கள் என்று கேலியாகவும் ஏளனமாகவும் இடித்துரைத்தார். அவரது இந்தப் பேச்சை மிகப்பெரிய நிந்தையாக, அவமதிப்பாக இந்திய அரசியல்வாதிகள் கருதி வெகுண்டெழுந்தனர். இந்த மூன்று காரணக்கூறுகளின் இணைப்புதான் இத்தீர்மானம் நிறைவேற்றப்படுவதற்கு அடிப்படையாக அமைந்திருந்தது எனலாம். உண்மையில், நாட்டின் அரசியல் குறிக்கோளை வகுத்தளிக்கவேண்டும் என்ற நோக்கத்தை

விடவும் பிர்கன்ஹெட் பிரபுவின் திமிரான, அகம்பாவமான பேச்சுக்கு தக்க பதிலடி கொடுக்க வேண்டும்[1] என்ற கோபாவேசமே இந்த தீர்மானம் ஏற்கப்படுவதற்குக் காரணமாக இருந்தது. அச்சமயம் திரு.காந்தியும் பண்டிட் மோதிலால் நேருவும் வேண்டுமென்றே மௌனம் சாதித்தனர். இந்தியர்களுக்கு எதிராக பிர்கன்ஹெட் பிரபு பயன்படுத்திய தன்னடக்கமற்ற, வரம்புகடந்த வசைமொழி உக்கிர மிக்க ஒரு பெரும் சூறாவளியை எழுப்பிவிட்டிருந்த நிலைமையில் அதனை அலட்சியப்படுத்தி மக்களின் சீற்றத்துக்கு ஆளாவதை விட அதற்கு அடிபணிந்துபோவதே விவேகம் என்று அந்த இரு தலைவர்களும் கருதியதே அவர்களது மௌனத்துக்குப் பிரதான காரணம்.

இந்தத் தீர்மானம் காங்கிரசிலுள்ள இந்துக்களின் உண்மை யான கருத்தைப் பிரதிபலிக்கவில்லை என்பது ஐயத்துக்கிடமற்ற விஷயம். இல்லையென்றால்[2] நேரு கமிட்டி 1927 ஆம் வருட சென்னைத் தீர்மானத்தைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, குடி யேற்ற நாட்டு அந்தஸ்தை தான் வகுத்திருக்கும் அரசியலமைப் புக்கு அடிப்படையாக கொண்டதற்கு வேறு சமாதானம் எதுவும் கூறுவது சாத்தியமல்ல. இதேபோன்று, 1927 ஆம் ஆண்டில் காங் கிரஸ் உண்மையிலேயே சுதந்திரத்தைத் தனது குறிக்கோளாக ஏற்றிருந்தால் 1928ல் அது குடியேற்ற நாட்டு அந்தஸ்தை எவ்வாறு தனது குறிக்கோளாக ஏற்றது என்பதற்கு சமாதானம் கூறுவதும் கடினம். 1929 டிசம்பர் 31க்குள் வழங்கப்பட்டால் குடியேற்ற நாட்டு அந்தஸ்தை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளும், அவ்வாறு இல்லை யென்றால் தனது குறிக்கோளை குடியேற்ற நாட்டு அந்தஸ்தி லிருந்து சுதந்திரத்திற்கு மாற்றிக்கொள்ளும் என்று தீர்மானத்தில் அடங்கியுள்ள வாசகம் அவமானத்திலிருந்து தப்பித்துக்கொள்ளும் ஒரு தந்திரமே தவிர, உண்மையான மனமாற்றத்தை அது எவ்வகை யிலும் குறிக்கவில்லை. நாட்டின் எதிர்காலம் போன்ற ஆழமான பிரச்சினையில் காலம் ஒருபோதும் அதன் உள்ளுறை சாரமாக இருக்கமுடியாது.

1. திரு.சாம்பமூர்த்தி தீர்மானத்தை வழிமொழிந்து பின்வருமாறு பேசினார்: ''இந்தத் தீர்மானம் தான் பிர்கன்ஹெட் விடுத்த இறுமாப்பு மிக்க சவாலுக்கு சரியான எதிர் சவாலாகும்.'' - இந்தியக் காலாண்டு பதிவேடு, 1927, தொகுதி II, பக்கம். 381.

2. தீர்மானத்தை முன்மொழிந்து பண்டிட் ஜவஹர்லால் நேரு கூறியதாவது:

''காங்கிரஸ் இன்று பரிபூரண சுதந்திரத்தை ஆதரித்து நிற்கிறது என்று இத்தீர்மானம் கூறுகிறது. எனினும் இதைவிடவும் குறைந்த குறிக்கோளுடன் திருப்தியடைபவர்களுக்கும் காங்கிரசின் கதவுகள் திறந்தே வைக்கப்பட்டிருக்கின்றன!'' அதே நூல், பக்.381

1927 ஆம் வருடத்தில் சுதந்திரத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருந்த போதிலும் காங்கிரஸ் குடியேற்ற நாட்டு அந்தஸ்தில் நம்பிக்கை வைத்திருந்ததே அன்றி சுதந்திரத்தில் நம்பிக்கை வைக்க வில்லை; காங்கிரசின் 'வேதவாக்கு' எனப் போற்றப்பட்டு வந்த திரு.காந்தி அவ்வப்போது வெளியிட்டு வந்த அறிவிப்புகளிலிருந்தே இதனைத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். 1929 ஆம் ஆண்டுக்குப் பிறகு இந்த விஷயம் குறித்து திரு. காந்தி தெரிவித்து வந்துள்ள கருத்துகளை ஆராயும் எவரும் சுதந்திரம் குறித்த தீர் மானம் திரு.காந்திக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை, அதுமுதல் காங் கிரசை மீண்டும் குடியேற்ற நாட்டு அந்தஸ்துக் கோரிக்கைக்குத் திருப்பி அழைத்துச்செல்வது அவசியம் என்பதை அவர் உணர்ந் திருந்தார் என்ற முடிவுக்கே வருவார்கள். இதனை அவர் நாசுக்கான முறையில் படிப்படியாகச் செய்தார். காங்கிரசின் குறிக்கோள் முதலில் சுதந்திரம் என்பதிலிருந்து பெயரளவிலான சுதந்திரம் என்று குறைக்கப் பட்டது; பிறகு இந்தப் பெயரளவிலான சுதந்திரம் சமத்துவக் கூட்டாக கீழிறக்கப்பட்டது; இதன் பின்னர் இந்த சமத்துவக் கூட்டும் அதன் பழைய நிலைமைக்கே கொண்டுவரப்பட்டது. இந்தச் சக்கரம் ஒரு சுற்றுச் சுற்றி நின்றபோது, 1937ல் பிரிட்டிஷ் மக்களின் தகவலுக் காக திரு.காந்தி பின்கண்ட கடிதத்தை திரு.போலக்கிடம் தந்தார்:

> "1931 ல் வட்டமேசை மாநாட்டின்போது நான் கொண் டிருந்த கருத்தையே இப்போதும். கொண்டிருக்கின்றேனா என்பதுதானே உங்கள் கேள்வி. என்னைப் பொறுத்த வரை யில், பிரிந்து செல்வதற்கு உரிமை வழங்கும் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டத்தின் விதிகளுக்கு இணங்க குடியேற்ற நாட்டு அந்தஸ்து அளிக்கப்படுமானால் நான் எத்தகைய தயக்கமுமின்றி ஏற்றுக்கொள்வேன் என்று அன்றும் சொன்னேன், இப்போதும் அதையே சொல்கிறேன்." [1]

நேரு அறிக்கையைப் பல முஸ்லீம் அமைப்புகள் நிராகரித் தன; இதற்கு அவை தந்த காரணங்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

---

1. **டைம்ஸ் ஆப் இந்தியா** 1-2-37. இதனைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது, புதிய அரசியலமைப்புச் சட்டத்தின்படி. புதிய மாகாண சட்டமன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக்கொண்ட தேசிய சிறப்பு மாநாட்டில், சுதந்திரத்திற்கு ஆதரவாக வெளியிடப்பட்ட பிரகடனம் முக்கியத்துவமற்றதாகிவிடுகிறது. ஆனால் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தைத் தொடங்கியதைக் கொண்டு நோக்கும்போது திரு. காந்தி இப்போது சுதந்திரத்தை ஆதரிக்கிறார் என்று கூறலாம்.

இந்தக் காரணங்கள் முற்றிலும் எதிர்பாராதவை. தனி வாக்காளர் தொகுதிகளை ரத்து செய்யும்படி நேரு அறிக்கை பரிந்துரைத்ததால் முஸ்லீம் லீக் போன்ற சில முஸ்லீம் அமைப்புகள் அந்த அறிக்கையை நிராகரித்தன என்பதில் ஐயமில்லை. ஆனால் கிலாபத் மாநாடோ அல்லது ஜமயத்-உல்-உலேமாவோ நேரு அறிக்கையைக் கண்டித்த தற்கு நிச்சயமாக இதுவல்ல காரணம். இத்தனைக்கும் இந்த இரு முஸ்லீம் அமைப்புகளும் ஒத்துழையாமை, சட்டமறுப்பு போன்ற கனல்கக்கும் சோதனைகளில் காங்கிரசுடன் இணைந்து பிணைந்து நின்று ஈடுபட்டவை; நாட்டின் விவகாரங்கள் சம்பந்தப்பட்ட பிரச் சினைகள் குறித்து இவை வெளியிட்ட அறிவிப்புகள் வேறு எந்த முஸ்லீம் அமைப்பு வெளியிட்ட அறிவிப்புகளை விடவும் முஸ்லீம் மக்களின் உண்மையான கருத்துகளைப் பெரிய அளவுக்குப் பிரதி பலிப்பவையாக இருந்தன.

1928ல் கல்கத்தாவில் நடைபெற்ற அகில இந்திய கிலாபத் மாநாட்டுக்குத் தலைமை வகித்த மௌலானா முகமது அலி, நேரு அறிக்கையை தாம் நிராகரிப்பதற்கான காரணங்களை தமது தலைமை உரையில் தொகுத்துரைத்தார். அவர் கூறியதாவது:

> "இந்திய தேசிய காங்கிரசிலும், அதன் காரியக் கமிட்டியிலும் அதேபோன்று அனைத்திந்திய முஸ்லீம் லீகிலும் நான் ஓர் உறுப்பினன். இன்றைய அரசியல் பிரச்சினைகள் குறித்து, முஸ்லீம் சமுதாயம் முழுவதன் மிகுந்த கவனத்திற்குரிய பிரச் சினைகள் குறித்து என் கருத்துகளை வெளியிடுவதற்கே இந்த கிலாபத் மாநாட்டுக்கு நான் வந்திருக்கிறேன்.

★ ★

"அனைத்துக் கட்சி சிறப்பு மாநாட்டில் அவர் பேசும்போது இந்தியா பரிபூரண சுதந்திரம் பெற வேண்டும்; அதில் வகுப்புவாதம் ஏதுமில்லை என்று கூறினார். எனினும் கூட்டத்தினர் அவரிடம் அடிக்கடி கேள்விகள் கேட்டுத் தொல்லை கொடுத்தனர். ஒவ்வொரு குறுக்கீட்டின்போதும் அவர் தமது பேச்சை சிறிது நேரம் நிறுத்த வேண்டியதேற்பட்டது.

★ ★

நேரு அறிக்கை தனது பீடிகையில் அடிமைத்தளை நிலவுவதை ஒப்புக் கொண்டிருக்கிறது... சுதந்திரமும் குடியேற்ற நாட்டு அந்தஸ்தும் மிகவும் வேறுபட்டவை...

★ ★

''உங்கள் தேசியத்தைப் பற்றி வீண் பெருமையடித்துக் கொண்டு வகுப்புவாதத்தைக் கண்டிக்கும்போது, உங்கள் இந்தியா வைப் போன்ற, உங்கள் தேசிய இந்தியாவைப் போன்ற வேறு ஏதேனும் நாடு உலகில் இருக்கிறதா என்பதை எனக்குக் காட்டுங்கள் என்று கேட்கிறேன்.

★ ★

''உங்கள் அரசியலமைப்பில் ஒவ்வொரு நாளும் தவறான கோட்பாடுகளையும், நெறியற்ற திட்டங்களையும், பிழைபாடான கருத்துகளையும் இணைத்து சமரசம் செய்து கொள்கிறீர்கள்; ஆனால் தனி வாக்காளர் தொகுதிகளையும் இட ஒதுக்கீடுகளையும் நாடும் நமது வகுப்புவாதிகள் விஷயத்தில் எவ்வகையிலும் விட்டுக் கொடுக்க மறுக்கிறீர்கள். மக்கட்தொகையில் எங்கள் விகிதம் இருபத் தைந்து விழுக்காடு, அப்படியிருந்தும் சட்டமன்றத்தில் எங்களுக்கு 33 விழுக்காடு இடங்களை நீங்கள் தருவதில்லை. இந்த விஷயத் தில் நீங்கள் ஒரு யூதனாக, பனியாவாகத்தான் இருக்கிறீர்கள். ஆனால் ஆங்கிலேயர்களுக்கோ உங்களது ஆட்சியுரிமைக்குரிய அந்தஸ்தைத் தாராளமாக வழங்குகிறீர்கள்''.

மாநாடு ஒரு சுருக்கமான தீர்மானத்தை பின்கண்டபடி மணிச் சுருக்கமான முறையில் ஏற்றது:

> ''பரிபூரண சுதந்திரமே நமது குறிக்கோள் என்பதை இந்த மாநாடு மீண்டும் வலியுறுத்துகிறது''.

1931-ல் அலகாபாத்தில் ஜமயத்-உல்-உலேமா மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டின் தலைவர் என்ற முறையில் மௌலானா ஹஸ்ரத் மோகனி நிகழ்த்திய தமது தலைமை உரையில் நேரு அறிக்கையைக் கண்டிப்பதற்கு இதே காரணங்களைக் கூறினார்;

சீர்தூக்கிய அளவான சொற்களுடன் ஆனால் கடுமையான முறையில் அந்த அறிக்கையைத் தாக்கி பின்கண்டவாறு கூறினார்:[1]

''இந்தியா சம்பந்தமான எனது அரசியல் குறிக்கோள் இப்போது எல்லோருக்கும் நன்கு தெரியும். பரிபூரண சுதந்திரத்திற்குக் குறைவான எதனையும் நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். அதிலும் அந்த சுதந்திரம் அமெரிக்கா அல்லது ரஷ்ய பாணியில் அமைந்திருக்க வேண்டும். (1) ஜனநாயகம், (2) கூட்டாட்சி, (3) மேலிருந்து கீழே அதிகாரம் பரவலாக்கப்படுதல் ஆகியவை அதன் அடிப்படையான அம்சங்களாக இருப்பதோடு, முஸ்லீம் சிறுபான்மையினரின் உரிமைகள் பாதுகாக்கப்படவும் வேண்டும்.

''கடந்த சில காலமாக டில்லி ஜமயத்-உல்-உலேமா பரிபூரண சுதந்திரம் என்னும் குறிக்கோளை உறுதியாக விடாது பற்றி நின்று வருகிறது. பெரும்பாலும் இந்தக் காரணத்துக்காகவே அது நேரு அறிக்கையை, ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பை அன்றி ஏக ஆட்சி அரசியலமைப்பை வகுத்துத் தந்திருக்கும் அந்த அறிக்கையை நிராகரித்தது. அடுத்து, லாகூர் மாநாட்டுக்குப் பிறகு மகாத்மா காந்தியின் ஆலோசனையின்படி காங்கிரஸ் நேரு அறிக்கையை ரவி நதிக்கரையில் ஆழக் குழிதோண்டி புதைத்துவிட்டு, பரிபூரண சுதந்திரம் குறித்த தீர்மானத்தை ஒருமனதாக ஏற்றுக்கொண்டபோது, டில்லி ஜமயத் காங்கிரசுடனும் அதன் வேலைத் திட்டத்துடனும் ஒத்துழைப்பதில் தீவிரமாக ஈடுபட்டது; சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொள்வது ஒவ்வொரு இந்தியனின் இந்து அல்லது முஸ்லீமின் கடமை என்பதாலேயே அவ்வாறு செய்தது.

''ஆனால் துரதிருஷ்டவசமாக காந்திஜி வெகுவிரைவிலேயே சொன்ன சொல் தவறலானார்: (1) இன்னும் சிறையிலிருக்கும்போது, திரு. ஸ்லோகோம்பே என்ற பிரிட்டிஷ் பத்திரிகையாளருக்கு அளித்த ஒரு பேட்டியில் பரிபூரண சுதந்திரம் என்று தாம் கூறியது சுதந்திரத்தின் சாராம்சத்தையே குறிப்பிட்டதாக விளக்கினார்; (2) மேலும், சமரசத்தில் நாட்டம் கொண்டிருக்கும் தமது விருப்பத்தைத் தெரிவித்து சிறையிலிருந்து விடுதலையானதும் பூரண சுதந்திரம் என்பதற்குப் பதிலாக ''பூரண சுயராஜ்யம்'' என்னும் ஒரு மலையாள சொல்லைப் பயன்படுத்தியதுடன் நில்லாமல் 'பூரண சுயராஜ்யத்தில்' பிரிட்டிஷாருடனான தொடர்பைத் துண்டிக்கும் சாத்தியக்கூறே இல்லை என்று பகிரங்கமாகவே, அறிவித்தார்; (3) இர்வின் பிரபுவுடன் ஓர் இரகசிய உடன்பாடு செய்து கொண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள்

1. இந்தியக் காலாண்டு பதிவேடு, 1928, தொகுதி II, பக்கம். 402-403.

குடியேற்ற நாடு அந்தஸ்து என்னும் குறிக்கோளை வரித்துக் கொண்டார்.

''காந்திஜியிடம் காணப்பட்ட இந்த மாற்றத்திற்குப் பிறகு மகாத்மாவைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதை டில்லி ஜமையத் தவிர்த்திருக்க வேண்டும்; நேரு அறிக்கையைப் போன்றே காங்கிரஸ் காரியக் கமிட்டியின் இந்தக் கோட்பாட்டையும் ஜமையத் முற்றிலுமாக நிராகரித்திருக்க வேண்டும்; ஏனென்றால் பம்பாயில் இந்த அறிக்கைக்குப் புத்துயிரளிக்கச் செய்யப்பட்ட ஒரு சூழ்ச்சியே தவிர இது வேறல்ல.

''ஆனால் 'பூரண சுயராஜ்யம்' என்பது பரிபூரண சுதந்திரத்தைக் குறிக்கவில்லை, அதற்குப் பதிலாக பூரண சுதந்திரத்திற்கு மிக மிகக் கீழான ஒன்றையே அது அர்த்தப்படுத்துகிறது என்று தெரிந்திருந்தும் என்ன விளங்காத, தெளிவற்ற காரணங்களுக்காக 'பூரண சுயராஜ்யத்தை' தங்களது குறிக்கோளாக டில்லி ஜமைத்-உல்-உலேமா ஏற்றுக் கொண்டதோ நமக்குத் தெரியவில்லை. காந்திஜி குடியேற்ற நாட்டு அந்தஸ்தை ஏற்றுக் கொண்ட போதிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து செல்லும் உரிமையை இந்தியர்களுக்குப் பிரிட்டன் அளிக்க வேண்டும் என்று அவர் வலியுறுத்தி வருவது ஜமைத் இந்தக் குறிக்கோளை ஏற்றுக் கொண்டதற்கு ஒருக்கால் காரணமாக இருக்கக் கூடும்.

''ஆனால் இந்த உரிமையை வலியுறுத்துவது பரிபூரண சுதந்திரம் வேண்டும் என்ற முந்தைய பிரகடனத்தைவிட எவ்வகையிலும் சிறந்ததோ, உகந்ததோ அல்லது மேன்மையானதோ அல்ல என்பது தெள்ளத் தெளிவு. அப்படியானால் இப்போது இந்த உரிமையை வலியுறுத்தும் காந்திஜி முன்னர் ஏன் பூரண சுதந்திரக் கோரிக்கையை முன்வைத்தார்? இதற்குக் காரணம் உண்டு. குடியேற்ற நாட்டு அந்தஸ்து கோரிக்கைக்கு இணங்கும்படி பிரிட்டனை நிர்ப்பந்திக்கும் ஒரே நோக்கத்துக்காகவே அவர் பூரண சுதந்திரம் என்ற கோரிக்கையை வலியுறுத்தினார். குடியேற்ற நாட்டு அந்தஸ்து தான் மகாத்மாவின் ஒரே இறுதியான குறிக்கோளாகும். இதே நோக்கில்தான் காங்கிரஸ் தலைவர்களும் தங்களை ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் அதிருப்தி கொள்ளச் செய்ய விரும்பாத பிரிட்டிஷ் மக்களிடமிருந்து அதிகப்பட்ச அரசியல் ஆதாயங்களைப் பெறும் குறிக்கோளோடு பிரிந்து செல்லும் உரிமை தங்களுக்கு வேண்டும் என்று கோரி வருகிறார்கள். இத்தனைக்கும் பிரிந்து செல்லும் இந்த உரிமை இந்தியர்களுக்கு

வழங்கப்பட்டாலும், அது ஒருபோதும் நடைமுறைப்படுத்தப்படாது என்பது காந்திஜிக்கும் அவருடைய ஆதரவாளர்களுக்கும் நன்றாகவே தெரியும்.

''என்னுடைய இந்தக் கருத்து ஐயத்தை அடிப்படையாகக் கொண்டது என்று எவர் ஒருவரும் எண்ணக்கூடும்; அவசியம் ஏற்படும்போது சாம்ராஜ்யத்திலிருந்து விலகுவது பற்றி காங்கிரஸ் நிச்சயம் முடிவெடுக்கும் என்றும் அவர் வாதிடக்கூடும். அப்படியானால் பிரிட்டிஷ் தொடர்பைத் துண்டித்துக் கொண்டுவிட்ட பிறகு இந்திய அரசாங்கத்தின் அமைப்பு வடிவம் எவ்வாறு இருக்கும் என்று அவரைக் கேட்க விரும்புகிறேன். எவரும் ஒரு சர்வாதிகார அமைப்பைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க முடியாது என்பது தெளிவு. அதேபோன்று, குவிமைய போக்குடைய அதாவது எல்லா அதிகாரங்களும் மத்தியில் குவிந்திருக்கக்கூடிய ஒரு ஜனநாயக அமைப்பும் விரும்பத் தக்கதல்ல. ஏனென்றால் நடைமுறையில் இது ஓர் இந்து ராஜ்யமாகவே இருக்கும். எந்தச் சந்தர்ப்பத்திலும் முஸ்லீம்கள் இதை ஏற்க மாட்டார்கள். இவை போக எஞ்சிய வடிவம் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது; அதாவது பிரிட்டிஷார் முற்றிலுமாக வெளியேறிய பிறகு, ஐக்கிய அமெரிக்கக் குடியரசுகள் அல்லது சோவியத் ரஷ்யாவின் பாணியிலமைந்த அரசு வடிவமே அது; தன்னாட்சி படைத்த மாகாணங்களும் சமஸ்தானங்களும் ஒன்றுபட்டு விரிமைய போக்குடைய ஒரு ஜனநாயக அரசாங்கம் அமைக்கப்படுவதையே இங்கு குறிப்பிடுகிறேன். இத்தகைய அமைப்பில் அதிகாரங்கள் மத்தியில் குவிக்கப்படாமல் பரவலாக்கப்படும். ஆனால் இது இந்துக்களின் ஆதிக்கத்திலுள்ள காங்கிரசுக்கோ அல்லது மகாத்மா காந்தி போன்ற பிரிட்டனின் ஆதரவாளருக்கோ ஏற்புடையதாக இருக்காது.

''இவ்வாறு டில்லி ஜமைத்-உல்-உலேமா பரிபூரண சுதந்திரத்தை கைகழுவிவிட்ட பிறகு தன்னைத்தானே நகைப்புக்கும் கேலிக்கும் உரியதாக்கிக் கொண்டு விட்டது. ஆனால் ஆண்டவன் அருளால் கான்பூர், லக்னோ, பாதெளன் போன்ற நகரங்களைச் சேர்ந்த உலேமாக்கள் தாங்கள் மேற்கொண்ட சூளுரையில் இன்னமும் உறுதியாக இருந்து வருகிறார்கள்; கடவுள் கிருபையால் அவர்கள் தொடர்ந்து அவ்வாறு இருந்து வருவார்கள். நெஞ்சுரமற்ற சிலர் இந்த உயர்ந்த லட்சியத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து வருகிறார்கள்; அந்த லட்சியத்தை தற்போது அடைய இயலாது என்றால் அது பற்றிப் பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை என்று அழுகுணி வாதம் செய்து வருகிறார்கள். இவ்வாறு பேசுவது பயனற்றதல்ல, மாறாக முற்றிலும் அவசியமானதும் கூட, ஏனென்றால் எந்த ஓர்

உயர்ந்த லட்சியமும் எப்போதும் நம் கண் முன்னால் இல்லை என்றால், அது மறக்கப்பட்டு விடக்கூடிய அபாயம் உண்டு என்று இந்தத் தோல்வி மனப்பான்மை கொண்டவர்களுக்குக் கூறிக் கொள்ள விரும்புகிறோம்.

''எனவே, எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நாம் குடியேற்ற நாட்டு அந்தஸ்தை எதிர்க்க வேண்டும்; ஏனென்றால் இது ஒரு சமரச ஏற்பாடோ அல்லது நமது இறுதிக் கோளில் ஒரு பகுதியோ அல்ல, மாறாக இது நமது குறிக்கோளுக்கே மாறானது, எதிரானது. காந்திஜி லண்டன் சென்றடைந்து, வட்டமேசை மாநாடு வெற்றிகரமாக முடிந்து, பாதுகாப்புகளுடனோ அல்லது பாதுகாப்புகள் இல்லாமலோ ஏதேனும் ஒரு வகையான குடியேற்ற நாட்டு அந்தஸ்து இந்தியாவுக்கு வழங்கப்படுமானால், அப்போது பூரண சுதந்திரம் என்னும் கருத்து, கோரிக்கை மங்கி மறைந்து போகும் அல்லது குறைந்தபட்சம் நீண்ட காலத்துக்கு மறக்கப்பட்டு விடும்.

அகில இந்திய கிலாபத் மாநாடும் ஜமையத்-உல்-உலேமாவும் கடுமையான பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்ச்சி கொண்ட தீவிரவாத அமைப்புகள் என்பதில் ஐயமில்லை. ஆனால் அகில இந்திய முஸ்லீம் மாநாடு தீவிரவாதிகளையோ அல்லது பிரிட்டிஷ் எதிர்ப்பு முசல்மான்களையோ கொண்ட அமைப்பல்ல. அப்படியிருந்தும் இதன் ஐக்கிய மாகாணக் கிளை 1928 நவம்பர் 4 ஆம் தேதி கான்பூரில் கூட்டிய தனது மாநாட்டில் பின்கண்ட தீர்மானத்தை ஏற்றது:

> ''இந்திய முசல்மான்கள் பரிபூரண சுதந்திர லட்சியத்தை ஆதரித்து நிற்கிறார்கள் என்று இந்த அனைத்துக் கட்சி ஐ.மா. முஸ்லீம் மாநாடு கருதுகிறது; இந்த சுதந்திரம் ஒரு கூட்டாட்சிக் குடியரசு வடிவத்தை எய்த வேண்டும் என்றும் அது விரும்புகிறது.''

இஸ்லாம் எப்போதுமே சுதந்திரத்தைப் போதித்து வந்திருக்கிறது, எனவே இந்திய முஸ்லீம்கள் பரிபூரண சுதந்திரத்திற்கு எதிரானவர்களாக இருந்தால், அவர்கள் தங்களது சமயக் கடமையைச் செய்யத் தவறியவர்களாவார்கள் என்று இத்தீர்மானத்தை முன்மொழிந்தவர் கூறினார். இந்திய முஸ்லீம்கள் ஏழ்மையானவர்களாக இருக்கலாம், ஆனால் அவர்கள் இந்த உலகில் உள்ள வேறு எவரையும் விட இஸ்லாமின் மீது அதிகப் பற்றுதலும் பக்தியும் விசுவாசமும் கொண்டவர்கள் என்று பேச்சாளர் அழுத்தம் திருத்தமாகக் குறிப்பிட்டார்.

பரிபூரண சுதந்திரத்திற்கு ஆதரவளிக்க இந்த மாநாடு முன்வர வேண்டும் என்று மௌலானா ஆசாத் சோபனி ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தபோது, மாநாட்டு விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் ஒரு சுவையான நிகழ்ச்சி நடைபெற்றது.[1]

கான் பகதூர் மசூதுல் ஹாசனும் வேறு சிலரும் இந்தத் தீர்மானத்தை எதிர்த்தனர்; முசல்மான்களின் நலன்களுக்கு இது தீங்கு விளைவிக்கும் என்று அவர்கள் வாதிட்டனர். இதன்பேரில், பர்தா காலரியில் அமர்ந்திருந்த பல பெண்கள் ஒரு கடிதத்தை எழுதி தலைவருக்கு அனுப்பி வைத்தனர். பரிபூரண சுதந்திரத்திற்கு ஆதரவாக நிற்கும் துணிச்சல் ஆண்களுக்கு இல்லையென்றால், பெண்கள் தங்கள் பர்தாக்களை வீசியெறிந்து விட்டு, சுதந்திரப் போராட்டத்தில் அவர்களது இடத்தை நிரப்புவார்கள் என்று அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

## III

தங்களது முடிவான எதிர்காலம் குறித்து இத்தகைய கருத்து வேறுபாடு நிலவியபோதிலும், இந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒரே அரசியலமைப்புச் சட்டத்தின் அரசியல் பிணைப்புகளால் பிணைத்து, ஒரே நாட்டில், ஒரே மக்களாக வாழ்வதற்கு நிர்ப்பந்திக்கும் ஒரு முயற்சி நடைபெற்று வருகிறது. இந்த முயற்சி வெற்றி பெறுவதாகவே வைத்துக் கொள்வோம்; எப்படியோ முஸ்லீம்களை இதற்கு இணங்க வைத்துவிடுவதாகவும் வைத்துக் கொள்வோம்; அப்போது இந்த அரசியலமைப்பு முறிந்துவிடாது என்பதற்கு, நொறுங்கி விழுந்து விடாது என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது?

நாடாளுமன்ற அரசாங்கம் வெற்றிகரமாகச் செயல்படுவது சில குறிப்பிட்ட நிலைமைகள் இருந்து வருவதைப் பொறுத்திருக்கிறது. இத்தகைய நிலைமைகள் இருந்தால்தான் நாடாளுமன்ற அரசுமுறை வேரூன்ற முடியும். காலஞ்சென்ற பால்போர் பிரபு இத்தகைய ஒரு நிலைமையை 1925ல் சுட்டிக்காட்டினார்; அரபு மக்களின் அரசியல் எதிர்காலம் குறித்து தம்முடைய உடன்பிறந்தாரின் மகனான பிளாஞ்சே துக்தாலேயுடன் உரையாடிக் கொண்டிருந்தபோதுதான் அவர் இதனைச் சுட்டிக்காட்டினார்.

1. இந்தியக் காலாண்டுப் பதிவேடு, 1928, தொகுதி II, பக்கம் 425.

உரையாடலின்போது அவர் கூறியதாவது:[1]

''பிரதிநிதித்துவ அரசாங்கம்' என்னும் கோட்பாட்டை அதன் அடிப்படை குறித்து சிறிதளவு கூட அறிந்திராத தேசங்களிடம் புகுத்தியதன் மூலம் பிரிட்டிஷ் தேசம் ஓரளவு தவறு செய்து விட்டது - அமெரிக்கர்களுக்கும் இதில் பங்குண்டு, இக்குற்றச்சாட்டிலிருந்து அவர்களை விடுவிப்பது சாத்தியமல்ல. இதனை விளக்குவது கடினம். ஆங்கிலோ-சாக்ஸன் இனங்கள் விளக்கிக் கூறும் பணியில் திறமையற்றவர்கள். மேலும் இதனை விளக்குவது அவசியம் என்று நமக்குத் தோன்றவில்லையே என்பதை நாமே அறிவோம். பிரிட்டிஷ் நாடாளுமன்ற அரசாங்கத்தின் முழுச் சத்தும் சாரமும் காரியங்களைச் **செய்யச் செய்யும் நோக்கத்தில்தான்** அடங்கியுள்ளது என்பது பிரிட்டிஷ் அரசியலமைப்புச் சட்டம் குறித்த எந்த நூலிலேனும் எழுதப்பட்டிருப்பதை நீங்கள் **காணமுடியும்** என்பது சந்தேகமே. இதனை மெய்யென ஒப்புக் கொள்வோம். இதை மட்டுமே ஆதாரமாகக் கொண்ட ஓர் அமைப்பை விரிவுபடுத்துவதிலேயே நூற்றுக்கணக்கான ஆண்டுகளைச் செலவிட்டுள்ளோம். இது நம்முள் மிக ஆழமாகப் பதிந்து விட்டதால் அதைக் காணத் தவறிவிட்டோம். ஆனால் இது மற்றவர்களுக்கு அத்தனை வெளிப்படையாகத் தெரியக் கூடியதல்ல. இந்த மக்கள் - இந்தியர்கள், எகிப்தியர்கள் மற்றும் பலர் - நமது கல்வியைக் கற்கின்றனர். அவர்கள் நமது வரலாற்றையும், நமது தத்துவத்தையும், அரசியலையும் படிக்கின்றனர். நாடாளுமன்ற பணிகளுக்கு முட்டுக்கட்டை போடும் வழிமுறைகளைப் படித்தறிந்து கொள்கின்றனர். ஆனால் நெருக்கடியான அல்லது முக்கியமான கட்டம் வரும்போது அரசு எந்திரம் செயல்படுவது நிற்கக்கூடாது என்பதில் நமது எல்லா நாடாளுமன்றக் கட்சிகளும் உறுதியோடிருக்கின்றன என்பதை யாரும் அவர்களுக்கு விளக்கிக் கூறுவதில்லை. வெல்லிங்டன் கோமகன் கூறியது போன்று, 'மன்னரின்' அரசாங்கம் தொடர்ந்து இயங்கியாக வேண்டும்', எனினும் எந்திரத்தைச் செயல்படாமல் தடுப்பதே எதிர்க்கட்சிகளின் பணி என்பது அவர்களது கருத்து. ஆனால் எதையும் எளிதாகச் சொல்லிவிடலாம், அதைச் செய்ய முடியும் என்ற நம்பிக்கைதான் இல்லை.''

1. துத்தாலேயின் பால்போர் (ஹட்சின்சன்) தொகுதி II பக். 363-64

அரசு எந்திரத்தைச் செயல்படாதபடித் தடுக்கும் அளவுக்கு இங்கிலாந்தில் எதிர்க்கட்சிகள் ஏன் செல்லுவதில்லை என்று கேட்ட போது அவர் கூறியதாவது:

''மக்கள் அடிப்படையிலேயே ஒன்றாக இருப்பதை நமது முழு அரசியல் எந்திரமும் முன்கூட்டியே ஊகித்து வைத் திருக்கிறது....''

நாடாளுமன்ற அரசாங்கம் வெற்றிகரமாகச் செயல்படுவதற்கு அவசியமான நிலைமை குறித்து பால்போர் தெரிவித்த இந்தக் கருத்துகளை லாஸ்கி மிகச் சிறந்த முறையில் பின்வருமாறு ரத்தினச் சுருக்கமாகக் கூறுகிறார்:[1]

''நாடாளுமன்ற அரசாங்கத்தின் வலிமை அதன் அடிப் படைக் குறிக்கோள்கள் விஷயத்தில் அரசியல் கட்சிகள் வளர்த்துக் கொண்டுள்ள ஒற்றுமையைக் கொண்டு துல்லிய மாக மதிப்பிடப் படுகிறது.''

பிரதிநிதித்துவ அரசாங்கம் வெற்றிகரமாகச் செயல்படுவதற்கு அவசியமான நிலைமைகளை மேலே எடுத்துரைத்தோம்; தற்போது இந்தியாவில் இந்த நிலைமைகள் நிலவுகின்றனவா என்பதைப் பரிசீலிப்பது உசிதமாக இருக்கும்.

பிரதிநிதித்துவ அரசாங்கம் திறம்படச் செயல்பட வேண்டு மென்ற நோக்கம் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இருக்கிறது என்பதை நாம் எந்த அளவுக்குக் கூறமுடியும்? பிரதிநிதித்துவம் வாய்ந்த, பொறுப்புள்ள அரசாங்கம் என்பது பயனற்றது, நடை முறைக்கு ஒவ்வாதது என்பதை மெய்ப்பிக்க இரு தரப்புகளில் ஒன்று அரசாங்க எந்திரத்தைச் செயல்படாதபடி தடுக்கும் நோக்கம் கொண்டிருப்பதைப் புலப்படுத்தினாலே போதும். இத்தகைய ஒரு நோக்கமே போதுமானது என்கிறபோது அது இந்துக்களிடம் காணப் பட்டாலும் அல்லது முஸ்லீம்களிடம் காணப்பட்டாலும் ஒன்றுதான். முஸ்லீம்கள் இந்துக்களைவிட எதையும் மனந்திறந்து துணிவோடு பேசக்கூடியவர்கள்; எனவே, இந்துக்களின் மனத்தைவிட முஸ்லீம் களின் மனத்தை எளிதாகக் கிரகித்துக் கொள்ள முடியும். முஸ்லீம்

1. இங்கிலாந்தில் நாடாளுமன்ற அரசாங்கம், பக். 37.

அரசியலில் ஆதிக்கம் செலுத்திவரும் இஸ்லாமியக் கோட்பாடு களையும், பிரபல முஸ்லீம் தலைவர்கள் தெரிவிக்கும் கருத்துகளை யும் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்த்தால் முஸ்லீம் மனம் எவ்வாறு செயல்படுகிறது, எத்தகைய அம்சங்களின்பால் அவர்கள் எளிதில் ஈர்க்கப்படுகின்றனர் என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். பால்போர் வலியுறுத்தியது போன்ற நிலைமை இந்தியாவில் நிலவுகிறது என்று கூறமுடியுமா என்பதை எதையும் நடுநிலை உணர்வோடு, உணர்ச்சிவசப்படாமல் நோக்கும் ஆற்ற லுடையவர்கள் தீர்மானிப்பதற்கு வசதியாக இஸ்லாமின் இத்தகைய சமயத் தத்துவங்கள் சிலவற்றையும், முஸ்லீம் தலைவர்கள் தெரி வித்த சில கருத்துகளையும் கீழே தருகிறோம்.

இஸ்லாமின் கோட்பாடுகளில் நம் கவனத்திற்குரிய ஒரு கோட்பாடு பின்வருமாறு கூறுகிறது; முஸ்லீம் ஆட்சி நடைபெறாத ஒரு நாட்டில் முஸ்லீம் சட்டத்துக்கும் அந்நாட்டின் சட்டத்துக்கும் இடையே முரண்பாடு ஏற்படுமாயின் முந்தைய சட்டத்தையே பிந்தைய சட்டத்தை விட மேம்பாடுடையதாக, பின்பற்றத் தக்கதாக ஏற்றுக் கொள்ள வேண்டும்; ஒரு முஸ்லீம் அந்த நாட்டின் சட்டத்தை மீறி முஸ்லீம் சட்டத்துக்குக் கீழ்ப்படிவது முறையானதும் சரியானது மாகும்.

இத்தகைய நிலைமைகளில் முசல்மான்களின் கடமை என்ன என்பதை மௌலானா முகமது அலி சுட்டிக்காட்டியிருக்கிறார்; அவர் 1927ல் கைது செய்யப்பட்டு கராச்சி குற்றவியல் நடுவர் முன்னர் நிறுத்தப்பட்டு, அவர் மீது அரசாங்கம் சுமத்திய குற்றச்சாட்டு களுக்குப் பதிலளித்துத் தந்த வாக்குமூலத்தில்தான் முசல்மான் களின் கடமையை வலியுறுத்தியிருக்கிறார். 1921 ஜூலை 8ஆம் தேதி கராச்சியில் நடைபெற்ற அகில இந்திய கிலாபத் மாநாட்டுக்குத் தலைமை தாங்கி அவர் முன்மொழிந்த ஒரு தீர்மானம் ஏற்கப் பட்டதைத் தொடர்ந்தே அவர் கைது செய்யப்பட்டு அவர்மீது வழக்கு தொடரப்பட்டது.

அந்த மாநாட்டில் ஏற்கப்பட்ட தீர்மானம் வருமாறு:

''இன்றைய நிலைமையில் ஒரு முசல்மான் பிரிட்டிஷ் படைகளில் தொடர்ந்து சேவை செய்வதோ, சேருவதோ அல்லது படையில் சேரும்படி மற்றவர்களைத் தூண்டி ஊக்குவிப்பதோ எல்லா வகைகளிலும் சமய ரீதியில் சட்ட விரோதமானது என்று இந்த மாநாடு தெளிவாக பறைசாற்றுகிறது. படைகளிலுள்ள

ஒவ்வொரு முசல்மானுக்கும் இந்த மதக்கட்டளைகள் எட்டும் படிச் செய்வது பொதுவாக எல்லா முசல்மான்களின் குறிப்பாக உலேமாக்களின் கடமையாகும்.''

மௌலானா முகமது அலியுடன் வேறு ஆறு பேர்கள் மீதும்[1] இ.பி.கோ. 131 ஆவது பிரிவுடன் சேர்த்து 120-பி பிரிவின் கீழும், 114 ஆவது பிரிவுடன் சேர்த்து 505 ஆவது பிரிவின் கீழும், இ.பி.கோ. 113 ஆவது பிரிவுடன் சேர்த்து 505 ஆவது பிரிவின் கீழும் வழக்கு தொடரப்பட்டது. மௌலானா தாம் குற்றவாளி அல்ல என்று வாதாடி அதற்கு ஆதரவாகப் பின்கண்ட வாக்குமூலத்தை அளித்தார்:[2]

இந்த அதீதமான குற்றச்சாட்டின் பொருள்தான் என்ன? எவருடைய சித்தாந்தங்களால் நாங்கள் வழிகாட்டப்படுவது? முஸ்லீம்களாகிய எங்களுடைய சித்தாந்தங்களாலா அல்லது இந்துக்களுடைய சித்தாந்தங்களாலா? முசல்மான் என்ற முறையில் பேசுகிறேன். நான் நேர் வழியிலிருந்து விலகி தவறு செய்கிறேன் என்றால் அதை மெய்ப்பிப்பதற்கு ஒரே வழிதான் இருக்கிறது; புனிதமான குரானைக் கொண்டோ அல்லது கடைசி தீர்க்கத்தரிசியின் - அவருக்கு ஆண்டவனின் பேரருளும் அமைதியும் கிட்டுவதாக - உண்மையான பாரம்பரியங்களைக் கொண்டோ அல்லது கடந்த கால மற்றும் தற்கால முஸ்லீம் சமயத்துறை அறிஞர்கள் பிரகடனம் செய்த சமயக் கருத்து களைக் கொண்டோதான் அதனை மெய்ப்பிக்க முடியும். இஸ்லாமின் இந்த இரு ஆதார மூலங்களின் பெயரால் கேட்கிறேன். பேய்த்தனமான, கொடிய அரசாங்கம் என்று அழைக்கப்படுவதற்கு விரும்பவில்லை என்றால் எனது எந்தச் செயலுக்காக அது இன்று என் மீது வழக்கு தொடுத்துள்ளது என்பதைக் கூறவேண்டும்.

''நான் ஒன்றைப் புறக்கணித்தாலும் குற்றம், புறக்கணிக்கா விட்டாலும் குற்றம் என்றால் எப்படித்தான் இந்த நாட்டில் நான் பாதுகாப்பாக வாழமுடியும்?

''நான் ஒன்று பாவியாக இருக்க வேண்டும் அல்லது குற்றவாளியாக இருக்க வேண்டும்.... இஸ்லாம் ஒரே ஒரு மேலாண்மையைத்தான் ஏற்கிறது, அதுதான் கடவுளின்

1. இதில் விந்தை என்னவென்றால் இந்த ஆறு பேர்களில் சாரதா பீடத்தைச் சேர்ந்த சங்கராச்சாரியாரும் ஒருவர்.

2. அலி சகோதரர்களின் விசாரணை, ஆர்.வி. தண்டாணி, பக்கங்கள் 69-71.

மேலதிகாரம், அந்த மேலாண்மை ஒப்புயர்வற்றது, கட்டுப் பாடுகளுக்கு உட்படாதது, பிரிக்க முடியாதது, பராதீனம் செய்ய முடியாதது...

★ ★

''ஒரு முசல்மான் அவன் குடிமகனாக இருந்தாலும் சரி, படை வீரனாக இருந்தாலும் சரி, முஸ்லீம் ஆட்சியில் வாழ்பவ னாக இருந்தாலும் சரி, முஸ்லீமல்லாத ஆட்சியில் வாழ்பவ னாக இருந்தாலும் சரி அவனது முழு முதல் விசுவாசமும் ஆண்டவனிடமும், தீர்க்கத்தரிசியிடமும், அவருடைய சீடர் களிடமும், முஸ்லீம் சமயத் தலைவர்களிடமும்தான் இருக்க வேண்டும் என்று குரான் கட்டளையிடுகிறது... இந்த ஒற்றுமை சித்தாந்தம் எளிதில் புரிந்துகொள்ள முடியாத யாரோ ஒரு சிந்தனையாளர் வகுத்தளித்த கணித சூத்திரம் போன்றதல்ல, மாறாக அது படித்த அல்லது படிக்காத ஒவ்வொரு முசல் மானது அன்றாடக் கோட்பாடாகும்... முசல்மான்கள் இதற்கு முன்னரும் வேறு இடங்களிலும் முஸ்லீம் அல்லாத ஆட்சியின் கீழ் அமைதியாக வாழ்ந்து வந்திருக்கின்றனர். ஆனால் முசல்மான்கள் எப்போதுமே ஒரு மாற்றமுடியாத விதிமுறை யைக் கடைப்பிடித்து வந்திருக்கின்றனர், இப்போதும் கடைப் பிடித்து வருகின்றனர், இனியும் கடைப்பிடித்து வருவர். 'அனை வருக்கும் மேலான ஆளுநர்' என்று புனிதமான குரான் போற்றும் ஆண்டவனின் கட்டளைகளுக்கு மாறுபடாத முறை யில் தங்களது சமய சார்பற்ற ஆட்சியாளர்கள் பிறப்பிக்கும் சட்டங்களுக்கும் ஆணைகளுக்கும் மட்டுமே முசல்மான்கள் கீழ்ப்படிந்து நடப்பார்கள் என்பதே அந்த விதிமுறையாகும். முசல்மான்கள் கீழ்ப்படிந்து நடப்பது குறித்த இந்த மிகத் தெளிவான, கண்டிப்பான, திட்டவட்டமான வரையறைகள் முஸ்லீமல்லாத ஆட்சியாளர்களை மட்டுமே கருத்திற்கொண்டு நிர்ணயிக்கப்பட்டவை அன்று; மாறாக இவை முழுதளா வியவை, எங்கும் எல்லோருக்கும் எல்லாவித ஆட்சிகளுக் கும் பொருந்தக்கூடியவை; எவ்விதத்திலும் விரிவுபடுத்தவோ, குறுக்கவோ, சுருக்கவோ முடியாதவை''.

ஒரு நிலையான அரசை விரும்பும் எவரையும் இது மிகுந்த அச்சம் கொள்ளவே செய்யும். ஆனால் ஒரு நாடு முசல்மான்களின் தாயகமாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி வகுத்தளிக்கப்

படும் இந்த முஸ்லீம் கோட்பாடுகளுக்கு இது குறித்து எந்தக் கவலையும் அக்கறையும் இல்லை.

முஸ்லீம் பொது ஒழுங்குச் சட்டத்தின்படி உலகம் தார்-உல்-இஸ்லாம் (இஸ்லாமின் இருப்பிடம்) என்றும், தார்-உல்-ஹார்ப் (யுத்தத்தின் இருப்பிடம்) என்றும் இரு முகாம்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. ஒரு நாடு முஸ்லீம்களால் ஆளப்படும்போது தார்-உல்-இஸ்லாம் என அழைக்கப்படுகிறது. முஸ்லீம்கள் ஆட்சி யாளர்களாக இல்லாமல் குடிமக்களாக மட்டுமே இருக்கும் ஒரு நாடு தார்-உல்-ஹார்ப் எனப்படுகிறது. முஸ்லீம்களின் பொது ஒழுங்குச் சட்டம் இவ்வாறிருக்கும்போது, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இந்தியா பொதுத் தாயகமாக இருக்க முடியாது. அது முஸ்லீம்களின் நாடாக இருக்கலாம் - ஆனால் 'இந்துக்களும் முஸ்லீம்களும் சமமான வர்களாக வாழும்' ஒரு நாடாக இருக்க முடியாது. மேலும், அது முஸ் லீம்களால் ஆளப்படும்போது முசல்மான்களின் நாடாக மட்டுமே இருக்க முடியாது. அதேபோன்று எந்தக் கணத்தில் நாடு முஸ்லீ மல்லாதோரின் ஆளுகையின் கீழ் வருகிறதோ அந்தக் கணம் முதலே அது முஸ்லீம்களின் நாடு என்ற நிலையை இழந்துவிடுகிறது. அது தார்-உல்-இஸ்லாமாக இருப்பதற்குப் பதிலாக தார்-உல்-ஹார்பாக மாறிவிடுகிறது.

இதனை ஏதோவொரு கோட்பாட்டளவிலான கருத்தாக மட்டுமே எடுத்துக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் முஸ்லீம்களின் போக்கையே நிர்ணயிக்கக்கூடிய அளவுக்கு செயலூக்க மிக்க ஒரு சக்தியாக மாறும் ஆற்றல் அதற்கு இருக்கிறது. பிரிட்டிஷார் இந்தி யாவைக் கைப்பற்றிக் கொண்டபோது அது முஸ்லீம்களின் போக்கில் மிகப் பெரும் பிரதிபலிப்பை ஏற்படுத்திற்று. பிரிட்டிஷ் ஆக்கிர மிப்பு இந்துக்களிடம் அவ்வளவாக மனச்சாட்சி உறுத்தலை ஏற் படுத்தவில்லை. ஆனால் அதேசமயம் முஸ்லீம்களைப் பொறுத்த வரையில், இனியும் இந்தியா முஸ்லீம்கள் வாழ்வதற்குரிய ஒரு நாடுதானா என்ற கேள்வியை அது எழுப்பியது. இது குறித்து அச் சமயம் முஸ்லீம் சமுதாயத்திடையே ஒரு விவாதமே நடை பெற்றது. இந்தியா தார்-உல்-ஹார்பா அல்லது தார்-உல்-இஸ்லாமா என்ற இந்த விவாதம் அரை நூற்றாண்டுக் காலம் நடைபெற்ற தாக டாக்டர் டைட்டஸ் கூறுகிறார். முஸ்லீம்களில் மிகவும் வெறி உணர்வு கொண்ட சில சக்திகள் சையத் அகமத் தலைமையில் உண்மையில் ஒரு புனிதப் போரையே பிரகடனம் செய்தனர்; முஸ்லீம் ஆட்சி நடைபெறும் நாடுகளுக்கு குடிபெயர்ந்து செல்ல வேண்டிய

(ஹிஜ்ரத்) அவசியத்தை வலியுறுத்திப் பிரகடனம் செய்தனர்; இது சம்பந்தமாக இந்தியா முழுவதும் ஒரு கிளர்ச்சியையும் நடத்தினர்.

இச்சமயம்தான் அலிகார் இயக்கத்தின் நிறுவகரான சர் சையத் அகமத் தலையிட்டார்; இந்தியா முஸ்லீம் ஆட்சியில் இல்லாமல் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருப்பதை வைத்து அதனை தார்-உல்-ஹார்பாகக் கருத வேண்டாம் என்று முஸ்லீம்களின் மனத்தை மாற்றுவதற்கு தமது அறிவுத்திறம் முழுவதையும் பயன் படுத்தி அரும்பாடுபட்டார். பிரிட்டிஷ் ஆட்சியில் முஸ்லீம்கள் தங்களது சமய வினைமுறைகள், சடங்குகள் முதலியவற்றைச் செய் வதற்கு முழுச் சுதந்திரம் பெற்றிருப்பதால் இதனை தார்-உல்-இஸ்லாமாகக் கருத வேண்டும் என்று அவர் முஸ்லீம்களை வலியுறுத்தினார். அவரது அயராத முயற்சி காரணமாக **ஹிஜ்ரத்** இயக்கம் அப்போதைக்கு ஓய்ந்தது. எனினும் இந்தியா தார்-உல்-ஹார்ப் எனும் கோட்பாடு கைவிடப்படவில்லை. கிலாபத் கிளர்ச்சி நடைபெற்று வந்த 1920-21 ஆம் ஆண்டுகளில் முஸ்லீம் தேசபக்தர்கள் இந்தத் தத்துவத்தை மீண்டும் பிரசாரம் செய்வதில் முனைந்து ஈடுபட்டனர். இந்தப் பிரசாரத்திற்கு முஸ்லீம் மக்கள் திரளிடையே ஆதரவு இல்லாமல் போகவில்லை. முஸ்லீம்களில் ஒரு கணிசமான பகுதியினர் முஸ்லீம் பொது ஒழுங்கு சட்டத்தின்படிச் செயல்படுவ தற்குத் தாங்கள் தயாராக இருப்பதாக அறிவித்ததோடு நில்லாமல் உண்மையில் இந்தியாவில் உள்ள தங்கள் வீடுவாசல்களைத் துறந்து விட்டு ஆப்கனிஸ்தானில் போய்க் குடியேறவும் செய்தனர்.

தார்-உல்-ஹார்ப் நிலையிலுள்ள முஸ்லீம்கள் அதிலிருந்து தப்புவதற்கு ஹிஜ்ரத் மட்டுமே ஒரே மார்க்கமாக இருக்கவில்லை என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும். முஸ்லீம் சட்டத்தில் இதற்கு மற்றொரு உரிமைக் கட்டளையும் இடம் பெற்றிருந்தது; அதுதான் **ஜிஹாத்** (சமயப் போர்) என்பது. இதன்படி "உலகம் முழுவதுமே இஸ்லாமின் ஆதிக்கத்தின் கீழ் வரும்வரை இஸ்லாம் ஆட்சியை மேன்மேலும் விஸ்தரித்துச் செல்ல ஒரு முஸ்லீம் ஆட்சியாளர் கடமைப்பட்டுள்ளார். உலகம் தார்-உல்-இஸ்லாம், தார்-உல்-ஹார்ப் என்று இரண்டு முகாம்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும் நிலைமையில் எல்லா நாடுகளுமே இவற்றில் ஏதேனும் ஒரு முகாமைச் சேர்ந் தவையாகவே இருக்கும். கோட்பாட்டளவில், தார்-உல்-ஹார்பை தார்-உல்-இஸ்லாமாக மாற்றுவது ஆற்றல் மிக்க ஒரு முஸ்லீம் ஆட்சியாளரது கடமையாகும்". இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் ஹிஜ்ரத்தில் ஈடுபட்ட நிகழ்ச்சிகளைப் போலவே ஜிஹாதைப்

பிரகடனம் செய்யவும் அவர்கள் தயங்கவில்லை என்பதைக் காட்டும் நிகழ்ச்சிகளும் உள்ளன. 1857 ஆம் வருடக் கலக வரலாற்றை நுணுகி ஆராயும் எவரும் அந்தக் கலகத்தில் குறைந்தபட்சம் ஒரு பகுதி யாவது உண்மையில் பிரிட்டிஷாருக்கு எதிராக முஸ்லீம்கள் பிரக டனம் செய்த ஜிஹாத்தாக இருப்பதைக் காண்பார்கள். பிரிட்டிஷார் இந்தியாவை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டதால் அந்நாடு தார்-உல்-ஹார்பாக ஆகிவிட்டது என்று பல பத்தாண்டுக் காலம் சையத் அகமத் ஓயாது ஒழியாது நடத்தி வந்த பிரசாரத்தின் விளைவாக ஏற்பட்ட கலகத்தின் ஒரு பதிப்பாகவே 1857 ஆம் வருட எழுச்சியை முஸ்லீம்கள் பார்க்கின்றனர். 1857 ஆம் வருட எழுச்சியை இந்தியாவை மீண்டும் தார்-உல்-இஸ்லாமாக்கும் முஸ்லீம்களின் முயற்சிஎனக் கூறலாம். இவ்வகையில் மிக அண்மையில் நடைபெற்ற நிகழ்ச்சி 1919ல் இந்தியா மீது ஆப்கனிஸ்தான் நடத்திய படையெடுப்பாகும். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது வெறுப்பு கொண்ட கிலாபத் இயக்கத் தினரின் தலைமையில் இருந்த முசல்மான்கள்தான் இந்தியாவை விடுதலை செய்வதற்கு ஆப்கனிஸ்தான் உதவியை நாடி இந்தப் படையெடுப்பைத் தூண்டிவிட்டனர்.[1] இந்தப் படையெடுப்பின் விளைவாக இந்தியா விடுதலை பெற்றிருக்குமா அல்லது ஆப்கனிஸ் தானுக்கு அடிமைப்பட்டிருக்குமா என்பதைச் சொல்வதற்கில்லை. ஏனென்றால் அந்தப் படையெடுப்பு செயல்படுத்தப்படுவதில் தோல்வி யடைந்தது. இது ஒருபுறமிருக்க, இந்தியா முற்றிலும் முஸ்லீம் ஆட்சி யில் இல்லாதிருக்கும் நிலையில் அது ஒரு தார்-இல்-ஹப் நாடு தான்; எனவே இஸ்லாம் கோட்பாடுகளின்படி முசல்மான்கள் ஒரு ஜிஹாத்தைப் பிரகடனம் செய்வது நியாயப்படுத்தப்படுகிறது.

அவர்கள் ஜிஹாத்தைப் பிரகடனம் செய்வது மட்டுமல்ல, அந்த ஜிஹாத் வெற்றி பெறுவதற்கு அந்நிய முஸ்லீம் நாட்டின் உதவியையும் நாட முடியும் அல்லது அந்த அந்நிய முஸ்லீம் நாட் டுக்கே ஜிஹாத்தைப் பிரகடனம் செய்யும் உத்தேசமிருக்குமாயின் அதன் முயற்சி வெற்றியடைய உதவவும் முடியும். திரு. முகமது அலி முறை அமர்வு நீதிமன்றத்தில் இதனை மிகத் தெளிவாக விளக்கினார். திரு. முகமது அலி கூறியதாவது:

> ''ஆனால் பொதுவாக இந்த உலக வாழ்க்கை சம்பந்தப் பட்டவை உட்பட எங்களது எல்லாச் செயற்பாடுகளையும்

---

1. இந்த கவையான மற்றும் பயங்கரமான நிகழ்ச்சியையும் அதில் திரு. காந்தி ஆற்றிய பங்கை யும் மராத்தா இதழில் திரு. கராந்திகார் பல தொடர் கட்டுரைகளில் விவரித்துள்ளார்.

எங்கள் சமயம் எவ்வாறு காண்கிறது என்பது பற்றி அரசாங்கம் சரியான தகவல்களைப் பெறவில்லை என்பது வெளிப் படையாகத் தெரிவதால் ஒரு விஷயத்தை இங்கு தெளிவு படுத்துவது அவசியம்; அது இதுதான்: திட்டவட்டமான ஆதாரம் இல்லாமல் ஒரு முஸ்லீம் இன்னொரு முஸ்லீமுக்கு எதிராக பாதகமான கருத்து வெளியிடுவதை இஸ்லாம் அனு மதிப்பதில்லை; எங்கள் முஸ்லீம் சகோதரர்கள் திட்டமிட்ட முறையில் ஆக்கிரமிப்பில் ஈடுபட்டார்கள், தங்கள் மதத்தைப் பாதுகாப்பதற்கு அவர்கள் ஆயுதமேந்தவில்லை என்பது தீர் மானமாக உறுதி செய்யப்பட்டாலொழிய அவர்களை எதிர்த்து நாங்கள் போராட முடியாது.'' (1919ல் பிரிட்டிஷாருக்கும் ஆப்கனியர்களுக்கும் இடையே நடைபெற்றுவந்த போரையே திரு. முகமது அலி இங்கு குறிப்பிடுகிறார்). ''இப்போது எங்கள் நிலை இதுதான். அமீரின் வன்மத்துக்கும் மூர்க்கத்தனத்துக்கும் போதிய சான்றில்லாமல் முசல்மான்கள் உட்பட இந்தியப் படைவீரர்கள் குறிப்பாக எங்கள் உதவியுடனும் ஊக்கத் துடனும் ஆப்கனிஸ்தானைத் தாக்குவதையும், முதலில் அதைக் கைப்பற்றிக் கொண்டு, பிறகு மேற்கொண்டு பல சிக்கல்களுக்கும் குழப்பங்களுக்கும் அதை இரையாக்குவதை யும் நாங்கள் நிச்சயமாக விரும்பவில்லை, ஆதரிக்கவில்லை.

''ஆனால் இதற்கு மாறாக மாட்சிமை தங்கிய மன்னர் அமீருக்கு இந்தியாவுடனும் இந்திய மக்களுடனும் எத்தகைய பூசலும் சச்சரவும் இல்லையென்றால், பிரிட்டிஷ் ராஜாங்க மந்திரியே பகிரங்கமாக அறிவித்ததுபோல முஸ்லீம் உலகெங் கும் நிலவும் அமைதியின்மையே அவரைச் செயல்படத் தூண் டியதென்றால், பலவீனமானவர்களுக்கு ஒரே மாற்று வழி யான ஹிஜ்ரத்தைப் பற்றிச் சிந்திக்கும்படி முஸ்லீம்களை நிர்ப்பந்தித்த அதே சமய நோக்கமே பலமிக்கவர்களுக்கு மாற்று வழியான **ஜிஹாத்**தைப் பற்றிச் சிந்திக்கும்படி மன்னரை நிர்ப் பந்தப்படுத்தி இருந்தால், வன்முறை மீது, படைபலத்தின் மீது மேன்மேலும் நம்பிக்கைக் கொண்டவர்களின் சவாலை எதிர்கொள்ள அவர் உறுதி பூண்டிருந்தால், கிலாபத்துக்கு எதிராகவும் **ஜிஹாத்**தில் ஈடுபட்டுள்ளோருக்கு எதிராகவும் முசல்மான்கள் போர் தொடுக்க வேண்டுமென்று விரும்பு வோருடன், ஜைருத்-உல்-அரபையும் ஏனைய முஸ்லீம் புனித தலங்களையும் முறைகேடாக ஆக்கிரமித்துக் கொண் டிருப்போருடன், இஸ்லாமை பலவீனப்படுத்தும் நோக்கம்

கொண்டிருப்போருடன், அதன்பால் பாரபட்சம் காட்டுவோருடன், இஸ்லாமின் சித்தாந்தத்தைப் பரப்புவதற்கு எங்களுக்கு முழுச் சுதந்திரம் அளிக்க மறுப்போருடன் அவர் கணக்குத் தீர்க்க முடிவு செய்திருந்தால், அப்போது முதலாவதாக, அவருக்கு எதிராக ஒரு முசல்மான் எந்த உதவியையும் செய்யக்கூடாது என்று இஸ்லாம் தெள்ளத் தெளிவாகப் பணிக்கிறது; இரண்டாவதாக, ஜிஹாத் என் பிராந்தியத்தை அணுகினால் அந்தப் பிராந்தியத்திலுள்ள ஒவ்வொரு முசல்மானும் முஜாஹிதினில் சேர வேண்டும், அவனுடைய அல்லது அவருடைய சக்திக்கேற்ற எல்லா உதவியையும் செய்ய வேண்டும் என்று அது வலியுறுத்துகிறது.

''இப்படிப்பட்டதுதான் தெள்ளத்தெளிவான, அணுவளவும் சர்ச்சைக்கிடமற்ற இஸ்லாமிய சட்டம்; ஒரு முஸ்லீமல்லாத ஆட்சிக்கு எதிராக ஜிஹாத் பிரகடனம் செய்யப்படும்போது அந்த ஆட்சியின் கீழுள்ள ஒரு முஸ்லீம் குடிமகனின் கடமை என்ன என்று எல்லையில் குழப்பம் ஏற்படுவதற்கான அறிகுறி தென்படாததற்கு முன்பே, காலஞ்சென்ற அமீர் இன்னும் உயிரோடு இருந்தபோதே எங்கள் வழக்கை விசாரித்தக் குழுவிடம் வாக்குமூலம் அளித்தபோது இதைத்தான் விளக்கிக் கூறினோம்.''

இந்தப் பிரச்சினையுடன் சம்பந்தப்பட்டதும், நமது கவனத்திற்குரியதுமான இஸ்லாமின் மூன்றாவதொரு சித்தாந்தம் பிரதேச உறவை ஏற்கவில்லை. அதன் உறவெல்லாம் சமூக மற்றும் சமய சார்புடையது; எனவே பிரதேச உறவுக்கு அப்பாற்பட்டது. இங்கும் மௌலானா முகமது அலிதான் சிறந்த சாட்சியாக வருகிறார். கராச்சி முறை நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டு, குற்றக் கூண்டில் நிறுத்தப்பட்ட போது ஜூரிகளை நோக்கி அவர் பின்கண்டவாறு கூறினார்:

''பொதுவாக முஸ்லீமல்லாத வட்டாரங்களிலும் குறிப்பாக அதிகார வட்டாரங்களிலும் தெரியவராத ஒரு சித்தாந்தத்தை இப்போது நாங்கள் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். அந்த சித்தாந்தம் இதுதான்: ஒரு முசல்மானின் சமயப் பற்று சில குறிப்பிட்ட கோட்பாடுகளின் பால் அவன் நம்பிக்கை வைப்பதிலும் அதற்கேற்ப வாழ்க்கையில் நடந்து கொள்வதிலும்

மட்டும் அடங்கியிருக்கவில்லை; எத்தகைய நிர்ப்பந்தத்திலும் ஈடுபடாமல் மற்றவர்களும் அந்தச் சமயப் பற்றையும் நடைமுறைகளையும் பின்பற்றி ஒழுகும்படிச் செய்வதற்கு அவன் முழு முயற்சியும் மேற்கொள்ள வேண்டும். இது புனித குரானில் **அம்ரிபில்மரூஃப்** என்றும் **நஹி அனில்முங்கர்** என்றும் கூறப்பட்டிருக்கிறது; நபிகள் நாயகத்தின் பாரம்பரியங்கள் பற்றி கூறும் சில குறிப்பிட்ட அத்தியாயங்களும் இஸ்லாமின் இந்த இன்றியமையாத சித்தாந்தத்தைப் பற்றி விவரிக்கின்றன. ''நான் என்னுடைய சகோதரனின் காப்பாளன் அல்ல'' என்று ஒரு முசல்மான் கூறமுடியாது; ஏனென்றால் மற்றவர்களையும் நன்மை செய்யும்படித் தூண்டி ஊக்குவித்தாலன்றி, தீமைகள் செய்யாதபடி அவர்களைத் தடுத்து நிறுத்தினாலன்றி அவன் கடைத்தேற முடியாது. எனவே, இஸ்லாமின் முஜாஹித்துக்கு எதிராகப் போரிடும்படி எந்த ஒரு முசல்மானும் நிர்ப்பந்திக்கப்பட்டாலும் அவன் உளச்சான்றுக்குக் கட்டுப்பட்டு, கடமை உணர்ச்சியோடு அதனை உறுதியோடு எதிர்க்க வேண்டும்; அது மட்டுமல்ல, அவன் தனது கடைத்தேற்றத்தை, விமோசனத்தை மதிப்பவனாக இருந்தால், தன்னுடைய ஏனைய முஸ்லீம் சகோதரர்களையும் எத்தகைய அபாயத்தையும் பொருட்படுத்தாமல் இதே போன்ற எதிர்ப்பைக் காட்டுவதற்கு இணங்க வைக்க வேண்டும். இவ்வாறு செய்யாதவரை அவனுக்கு எத்தகைய விமோசனமும் கிட்டாது. இது எங்களுடைய கோட்பாடு மட்டுமன்றி, ஒவ்வொரு முசல்மானது கோட்பாடுமாகும். தற்பெருமையற்ற, அடக்கமான முறையில் இந்தக் கோட்பாட்டை நடைமுறையில் கடைப்பிடிக்கவே நாங்கள் முயன்று வருகிறோம்; இந்தக் கோட்பாட்டைப் பரப்புவதற்கு எங்களுக்கு சுதந்திரம் இருக்க வேண்டும். அந்தச் சுதந்திரம் எங்களுக்கு மறுக்கப்படுமானால், இந்த சுதந்திரம் இல்லாத நாடு இஸ்லாமுக்குப் பாதுகாப்பானதல்ல என்ற முடிவுக்கே நாங்கள் வர வேண்டியிருக்கும்''.

இதுதான் அகில உலக இஸ்லாமியத்தின் ஆதார சுருதி. இதுதான் நான் முதலில் ஒரு முஸ்லீம், பின்னர்தான் இந்தியன் என்று இந்தியாவிலுள்ள ஒவ்வொரு முசல்மானையும் மார்தட்டிக் கொள்ள வைக்கிறது. இந்தியாவின் முன்னேற்றத்தில் ஓர் இந்திய முஸ்லீம் மிகச் சிறிய பங்கே ஆற்றி வருவதற்கும், அதே சமயம்

முஸ்லீம் நாடுகளின் நலன்களுக்காக அவன் அயர்வு சோர்வின்றிப் பாடுபட்டு வருவதற்கும்,[1] அவனுடைய சிந்தனைகளில், எண்ணங்களில் முஸ்லீம் நாடுகள் முதல் இடத்தையும் இந்தியா இரண்டாவது இடத்தையும் பெற்று வருவதற்கும் இந்த உணர்வே காரணம்.

மேதகு ஆகா கான் இதனை நியாயப்படுத்திப் பின்வருமாறு கூறினார்:[2]

''இது மிகவும் சரியான, நியாயமான அகில உலக இஸ்லாமியம்; ஒவ்வொரு உண்மையான, சமயப் பற்றுள்ள முகமதியனும் இதில் அங்கம் வகிக்கிறான் - இது ஆன்மீக சோதரத்துவத்தையும் நபிகள் நாயகத்தின் குழந்தைகளது ஒற்றுமையையும் குறிக்கும் சித்தாந்தம்; மாபெரும் பண்பாட்டுக் குடும்பமான பாரசீக - அராபிய கலாசாரத்தில் இது ஆழமான, நிரந்தரமான இடத்தைப் பெற்றுள்ளது; இதன் முதல் அத்தியாயத்துக்கு இஸ்லாம் என்று நாம் பெயர் சூட்டினோம். சீனா முதல் மொராக்கோ வரை, வோல்கா முதல் சிங்கப்பூர் வரை எங்கெங்குமுள்ள முஸ்லீம் சோதரர்களின்பால் அன்பும் கருணையும் காட்டுவதை அது குறிக்கிறது. இஸ்லாமின் இலக்கியத்திலும், அதன் எழில் மிகும் கவின் கலைகளிலும், அதன் வனப்பு மிக்கக் கட்டிடக் கலையிலும், அதன் மயக்கும் கவிதையிலும் நிலையான, அழிவில்லாத ஆர்வம் காட்டுவதை அது குறிக்கிறது. உண்மையான சீர்திருத்தத்தையும் அது குறிக்கிறது - அதாவது முற்றிலும் எளிய முறையில் இஸ்லாம் பின்பற்றப்பட்டு வந்த ஆரம்ப காலத்துக்கு, தக்கவாறு வாதித்தும் இணக்குவித்தும் இஸ்லாமிய போதனை நடைபெற்று வந்த காலத்துக்கு, தனிநபர் வாழ்க்கையில் ஆன்மீக பலம் வெளிப்படுத்தப்பட்டு வந்த காலத்துக்கு, மனித குலத்துக்கு நலம் செய்யும் நற்பணிகள் நடைபெற்றுவந்த காலத்துக்குத் திரும்பிச் செல்வதை அது குறிக்கிறது. இந்த இயல்பான, போற்றத்தக்க ஆன்மீக இயக்கம் அதனுடைய தலைவரையும் அவர் போதித்த

1. 1912 இல் முதலாவது பால்கன் போர் ஆரம்பமான சமயத்திலும் 1922ல் ஐரோப்பிய நாடுகளுடன் துருக்கி சமாதானம் செய்துகொண்ட சந்தர்ப்பத்திலும் இந்திய முஸ்லீம்கள் இந்திய அரசியலில் அணுவளவும் அக்கறை காட்டவில்லை. துருக்கி, மற்றும் அராபியாவின் விவகாரங்களில்தான் அவர்கள் முற்றிலும் மூழ்கிப் போயிருந்தனர்.

2. இடைமாறுதல் காலத்தில் இந்தியா, பக். 157.

கோட்பாடுகளையும் மட்டுமன்றி, அனைத்துக் கண்டங்களை யும் நாடுகளையும் சேர்ந்த அவருடைய குழந்தைகளையும் துருக்கியர்கள், ஆப்கனியர்கள், இந்தியர்கள், எகிப்தியர்கள் போன்ற பல்வேறு இனங்களின் அன்புக்கும் பாசத்துக்கும் நேசத்துக்கும் உரியவர்களாக ஆக்கியுள்ளது. காஷ்கர் அல்லது சரஜிவோவைச் சேர்ந்த முஸ்லீம் குடியிருப்புகளில் ஏற்படும் ஒரு பஞ்சமாயினும் சரி, பெரும் தீ விபத்தாயினும் சரி உடனே டில்லி அல்லது கெய்ரோவைச் சேர்ந்த முகமதியர்களின் அனுதாபத்தையும் பொருளாயத உதவியையும் ஈர்த்து விடு கிறது. இஸ்லாமின் உண்மையான ஆன்மீக, கலாசார ஒற்றுமை மேன்மேலும் வளர்ந்து வலுப்பெற்றுக் கொண்டே செல்ல வேண்டும்; ஏனென்றால் நபிகள் நாயகத்தின் பக்தர்களுக்கு இதுதான் வாழ்க்கையின் அடித்தளம்''.

இந்த ஆன்மீக உலக - இஸ்லாமியம் அரசியல் உலக இஸ் லாமியத்தைத் தோற்றுவிக்குமானால் அதனை இயல்புக்குப் புறம் பானது என்று கூற முடியாது. ஆகாகான் பின்வருமாறு கூறியபோது இந்த உணர்வே அவர் மனத்தில் இருந்திருக்க வேண்டும் :[1]

''பெர்சியா, ஆப்கனிஸ்தான், அநேகமாக அரபியா ஆகியவை முன்னோ பின்னோ என்றேனும் ஜெர்மனி போன்ற ஐரோப்பிய பெருநிலப் பகுதியைச் சேர்ந்த ஏதேனும் ஒரு நாட்டின் அல்லது ரஷ்யா உடைந்து அதிலிருந்து தோன்றக் கூடிய ஒரு நாட்டின் அதிகார வரம்பிற்குள் வரக்கூடும் அல்லது உண்மையான தொடர்பு அதிகமுடைய இந்திய சாம்ராஜ்யத் துடன் தனது கதிப்போக்கை இணைத்து அதன் நன்மை தீமை களில் அவை பங்கு கொள்ளக்கூடும் என்பதை இந்திய தேச பக்தன் உணர்வது அவசியம். சின்னஞ்சிறு அரசுகளை வலுமிக்க நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு செய்துவரும் உலக சக்திகள் இதுவரை ஐரோப்பாவிலேயே பெரும்பாலும் தம்மை வெளிப்படுத்திக் கொண்டன என்றாலும், தவிர்க்க முடியாதபடி ஆசியாவிலும் அந்த சக்திகள் தலைதூக்க வாய்ப்பு உண்டு. இத்தகைய பகைப்புலனில், பகைமை பாராட்டும் வலுமிக்க அண்டை நாடுகள் தன்னைக் கூர்ந்து கவனித்துவரும் நிலைமையையும் அதன் மூலம் ஏற்படக்கூடிய கடுமையான

1. இடைமாறுதல் காலத்தில் இந்தியா, பக்கம். 169.

ராணுவ பளுவையும் ஏற்கத் தயாராக இருந்தாலொழிய இந்தியா பரஸ்பர நலன்களையும் நல்லெண்ணத்தையும் அடிப் படையாகக் கொண்ட உறவுகள் மூலம் அண்டை முகமதிய நாடுகளைத் தன் பக்கம் ஈர்ப்பதை அலட்சியப்படுத்த முடியாது.

''சுருக்கமாகச் சொன்னால், நலம் பயக்கும், 'வளரும் ஒற்றுமை எனும் மார்க்கம் ஒரு கூட்டாட்சி இந்தியாவை ஆதார அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்; இதில் ஒவ்வொரு அங்கப் பகுதியும் தனது தனிப்பட்ட உரிமைகளை யும், தனது வரலாற்றுத் தனித்தன்மைகளையும், இயற்கை நலன்களையும் பயன்படுத்திக் கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும். அதேசமயம் அந்நிய அபாயத்திலிருந்தும், வலு மிக்க சக்திகளின் பொருளாதாரச் சுரண்டலிலிருந்தும் பாது காக்கக்கூடிய ஒரு பொதுப் பாதுகாப்பு முறையும், சுங்க வரி அமைப்பும் இருப்பது அவசியம். இத்தகைய ஒரு கூட்டாட்சி இந்தியா விரைவிலேயே இலங்கையையும் தனது இயல்பான தாயின் அரவணைப்பில் கொண்டு வந்துவிடும். இதர வளர்ச்சிப் போக்குகள் நாம் குறிப்பிட்டுள்ளவாறு நடைபெறும். நீதி, சுதந்திரம் எனும் விரிவான, ஆழமான அடித்தளத்தை இடு வதன் மூலமும், ஒவ்வொரு இனத்தையும், ஒவ்வொரு மதத் தையும், ஒவ்வொரு வரலாற்று உண்மையையும் அங்கீகரிப் பதன் மூலமும் நாம் ஒரு மாபெரும் தெற்காசியக் கூட்டரசைக் கட்டி உருவாக்க முடியும்.[1]

---

1. இந்தத் தெற்காசிய கூட்டரசு உருவாகி இருக்குமானால் எத்தகைய பயங்கரமான விளைவு கள் ஏற்பட்டிருக்கும்? எண்ணிக்கூடப் பார்க்க முடியாத ஓர் இக்கட்டான, அவலமான சிறுபான்மையினர் நிலைக்கு இந்துக்கள் தள்ளப்பட்டிருப்பார்கள். இந்திய வருடாந்தர பதிவேடு மேலும் கூறுவதாவது: அரபியாவிலிருந்து மலாயா வரை தெற்கு ஆசியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை நிலைநிறுத்துவதற்காக இந்தியாவைச் சேர்ந்த முஸ்லீம் சமுதாயத் திலுள்ள பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர்கள் ஓர் ஆங்கிலேய-முஸ்லீம் கூட் டணியை உருவாக்குவதற்குத் தீவிரமாக முயன்று வந்திருக்கிறார்கள். இந்தக் கூட்டணி யில் முஸ்லீம்கள் இப்போது இளைய பங்காளிகளாக இருந்து வருகிறார்கள்; உரிய காலத்தில் மூத்தப் பங்காளிகளாவதற்குத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய சில உணர்ச்சி களும் எதிர்பார்ப்புகளும் இருப்பதால்தான் போர் நடைபெற்று வந்த காலத்தில் மேதகு ஆகாகான் எழுதிய இடைமாறுதல் காலத்தில் இந்தியா எனும் நூலில் அவர் கோடிட்டுக் காட்டியிருக்கும் இந்தத் திட்டத்தின் தடங்களை ஆராய்வது அவசியம். ஒரு தென்மேற்கு ஆசியக் கூட்டரசை அமைக்கும் யோசனை இத்திட்டத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய கூட்டரசில் இந்தியா ஓர் அங்கப் பகுதியாக இருக்கும். போர் முடிந்த பிறகு வின்ஸ்டன் சர்ச்சில் பிரிட்டிஷ் மந்திரிசபையில் காலனி மந்திரியாகப் பொறுப்பேற்றார். அப்போது மத்தியக் கிழக்கு இலாகாவின் ஆவணக் காப்பகத்தில் ''மத்தியக் கிழக்கு சாம்ராஜ்யம்'' என்ற ஒரு திட்டம் தயார் நிலையில் இருப்பதைக் கண்டார்.'' - 1938, தொகுதி II, ''தாயக அரசியலில் இந்தியா'', பக். 48.

''இன்றைய நிலைமைகளுக்கு ஏற்ப, பெர்சியாவும் ஆப்கனிஸ்தானும் வளர்ச்சிப் பாதையில் முன்னேறுவதற்கு உதவும் நேர்மையான, உளப்பூர்வமான கொள்கை வடமேற்கில் இந்தியாவுக்கு இரண்டு இயற்கையான காப்பரண்கள் உருவாக உதவும்; இவற்றை ஜெர்மானியர்களோ ஸ்லாவ்களோ, துருக்கியர்களோ மங்கோலியர்களோ ஒருபோதும் அழிக்க முடியாது. ஆரோக்கியமான ஒரு கூட்டரசின் வடிவத்திற்கு கண்கண்ட ஒரு முன்மாதிரியை வழங்கும் இந்தியாவின்பால் பெர்சியாவும் ஆப்கனிஸ்தானும் தாமாகவே ஈர்க்கப்படும். இந்தக் கூட்டரசில் ஒவ்வொரு மாகாணத்திற்கும் உண்மையான தன்னாட்சி உரிமை இருக்கும்; சமஸ்தானங்களின் உள்நாட்டுச் சுதந்திரம் உத்தரவாதம் செய்யப்படும்; நிஜாமின் கீழ் பேரார் உட்பட ஹைதராபாத் சமஸ்தானம் மீண்டும் புத்துயிர் பெறும். இந்தியாவில் சுதந்திரமும், ஒழுங்கும், தன்னாட்சியும், அதேசமயம் பேரரசின் ஐக்கியமும் நிலவுவதை இந்நாடுகள் காணும்; சூரியனே என்றும் அஸ்தமிக்காத அந்த மாபெரும் சாம்ராஜ்யத்தினது நல்லெண்ணத்தின், அதன் பிரம்மாண்டமான, வரம்பற்ற வலிமையின் ஆதரவுடன் உள்நாட்டுத் தன்னாட்சி தொடர்வதை உத்தரவாதம் செய்யக்கூடிய ஒரு மாபெரும் கூட்டரசின் அனுகூலங்களை அவை மிகச் சரியாகக் கணித்துப் பாராட்டி வரவேற்கும். பிரிட்டிஷ் மெசபொட்டோமியாவின் நிலையும் அதேபோன்று அரபியாவின் நிலையும் நான் பரிந்துரைத்துள்ள கொள்கையால் மிகப் பெரும் அளவில் வலுப்பெறும்.''.

தெற்கு ஆசியக் கூட்டரசு இந்தியர்களுக்கு நன்மை செய்வதை விட அரபியா, மெசபொட்டோமியா, ஆப்கனிஸ்தான் போன்ற முஸ்லீம் நாடுகளுக்குத்தான் அதிக நன்மை செய்யக்கூடும். இந்திய முசல்மான்களின் எண்ணங்களும் சிந்தனைகளும் ஆர்வ விருப்பங்களும் அக்கறைகளும் கரிசனைகளும் இந்தியாவை விட முஸ்லீம் நாடுகள் மீதுதான் குவிந்துள்ளன என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அரசாங்கம் என்பது அதிகாரத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்பதை அடிப்படையாகக் கொண்டது. ஆனால் இந்துக்கள் மற்றும் முஸ்லீம்களின் தன்னாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் கொண்டிருப்பவர்கள் இத்தகைய கீழ்ப்படிதல் எதைச் சார்ந்திருக்கும், சாதாரண காலங்களிலும் நெருக்கடி காலங்களிலும் இது எந்த அளவுக்குக் கிட்டும் என்பதைப் பற்றி ஆராய்ந்தறிந்ததாகத் தெரியவில்லை. இது

மிக முக்கியமான பிரச்சினை. ஏனென்றால் கீழ்ப்படிதல் தோல்வி யுறுமானால் தன்னாட்சி என்பது ஒன்று சேர்ந்து பணியாற்றுவதைக் குறிக்குமே அன்றி, கீழ்ப்படிந்து பணியாற்றுவதைக் குறிக்காது. இது குறிக்கோள் அளவில் சரியானதாக இருக்கலாம். ஆனால் இது அன்றாட, பொதுநிலைப்பட்ட உலகில் வேறுபட்ட முறையில் இருக் கும். ஒரே பிரதிநிதித்துவ அரசாங்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்ட சக்திகள் எண்ணிக்கை அளவில் முரண்பாடானதாக, ஏறுமாறான தாக இருக்குமாயின், சிறு பகுதியினர் பெரும்பகுதியினரின் கீழ்ப் பணியாற்ற வேண்டியிருக்கும்; இந்தச் சிறு பகுதியினர் பெரும்பகுதி யினரின் கீழ் பணியாற்றுகிறார்களா, இல்லையா என்பது பெரும் பான்மையினர் நடத்தும் அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு எந்த அள வுக்கு கீழ்ப்படிந்து நடக்கத் தயாராக இருக்கிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கும். தன்னாட்சி வெற்றி பெறுவதில் இது ஒரு மிக முக்கியமான அம்சம். பால்போர் இந்த உண்மையில் ஒரு பகுதி யைத்தான் விண்டு காட்டியிருப்பதாகத் தோன்றுகிறது. இந்த விஷ யத்தில் வெற்றி பெறுவது சம்பந்தப்பட்ட தரப்புகள் அடிப்படையில் ஒன்றாக இருப்பதையே சார்ந்திருக்கிறது என்று இந்தக் கண்ணோட் டத்திலிருந்துதான் அவர் கூறியிருக்கிறார் என்று எடுத்துக் கொள்ள லாம். அரசாங்க அதிகாரத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்ற விருப்பார்வம் இருப்பது எந்தத் தன்னாட்சித் திட்டமும் வெற்றி பெறுவதற்கு சமத்துவ முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அம்சமாகும்.

நாடாளுமன்ற அரசாங்கம் வெற்றிகரமாக செயல்படுவதற்கு அவசியமான இந்த இரண்டாவது அம்சத்தின் முக்கியத்துவத்தை ஜேம்ஸ் பிரைஸ் விவாதித்திருக்கிறார்.[1] அரசியல் ஒருங்கிணைவின் அடிப்படை குறித்து ஆராயும்போது, அரசுகளைக் கட்டி உருவாக்கு வதில் வலிமை பெரும் பங்காற்றி இருக்கக் கூடுமென்றாலும் அது பல காரணிகளில் ஒன்றை தவிர மிக முக்கியமானதல்ல என்பதை அவர் சுட்டிக்காட்டியிருக்கிறார். அரசியல் சமூகங்களைத் தோற்று விப்பதிலும், உருவாக்குவதிலும், விரிவுபடுத்துவதிலும், அவற்றைப் பின்னிப் பிணைப்பதிலும் வலிமையைவிட முக்கியமானது கீழ்ப் படிதல்தான், அதாவது ஆணைக்கும் சட்டத்துக்கும் இணங்கி நடப்பது தான். கீழ்ப்படியும் இந்த விருப்பமும், அரசாங்க ஆணைகளுக்கு இணங்கிப்போகும் தன்மையும் தனிப்பட்ட குடிமக்கள் மற்றும் பிரிவினரின் குறிப்பிட்ட சில மனோதத்துவ இயல்புகளைப் பொறுத்துள்ளன. கீழ்ப்படிதலைத் தோற்றுவிக்கும் இந்த மன இயல்பு

1. வரலாறு மற்றும் சட்ட இயல் ஆய்வுகள், தொகுதி II, கட்டுரை 1.

களில் தொல்லை தராமை, பணிவிணக்கம், ஒத்துணர்வு, அச்சம், நேர்மை உணர்வு ஆகியவற்றை பிரைஸ் முக்கியமாகக் குறிப்பிடு கிறார். இவையாவும் ஒரே தரமுடையவை அல்ல. கீழ்ப்படியும் போக்கைத் தோற்றுவிக்கும் காரணக் கூறுகள் என்ற முறையில் ஒப்புநோக்கும்போது அவை முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதில் ஐயமில்லை. கீழ்ப்படிதலை ஒட்டுமொத்தமாக எடுத்துக் கொள்ளும் போது முறையே அச்சம், நியாய உணர்வின் விழுக்காடு தொல்லை தராமை, பணிவிணக்கம் அல்லது ஒத்துணர்வின் விழுக்காடை விட மிகவும் குறைவு என்று பிரைஸ் கணித்துக் கூறியுள்ளார். எனவே, இந்தக் கருத்தின்படிப் பார்க்கும்போது, அரசாங்கத்தின் அதிகாரத் துக்கு மக்களைக் கீழ்ப்படியச் செய்யும் இரண்டு மிகவும் சக்தி வாய்ந்த அம்சங்கள் பணிவிணக்கமும் ஒத்துணர்வும் என்பது தெள்ளத் தெளிவாகிறது.

அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மைக்கு நாட்டின் அடிப்படைப் பிரச்சினைகளில் அரசியல் கட்சிகளின் ஒற்றுமை எவ்வளவு இன்றி யமையாததோ அவ்வளவு இன்றியமையாதது அரசாங்கத்தின் அதி காரத்துக்குக் கீழ்ப்படியும் உணர்வாகும். அரசைப் பராமரிப்பதில் கீழ்ப்படிதலுக்குள்ள முக்கியத்துவம் குறித்து எந்த விவேகமுள்ள மனிதனும் ஐயப்பாடு எழுப்பமுடியாது. எனவே, சட்டமறுப்பில் நம்பிக்கை வைப்பது அராஜகத்தில் நம்பிக்கை வைப்பதற்கு ஒப்பாகும்.

சரி, இந்துக்களால் இந்துக்களைக் கொண்டு நடத்தப்படும் ஓர் அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு முஸ்லீம்கள் எந்த அளவுக்குக் கீழ்ப்படிவார்கள்? இந்தக் கேள்விக்குப் பதிலளிப்பதற்குப் பெரிய ஆராய்ச்சி எல்லாம் தேவை இல்லை. ஒரு முஸ்லீமுக்கு ஓர் இந்து காஃபிர்[1] ஆவான். ஒரு காஃபிர் நன்மதிப்புக்கு உரியவனல்ல. அவன் இழிந்த பிறவி; சமுதாயத்தில் உரிய தகுதி உள்ளவனல்ல. இதனால்தான் காஃபிரால் ஆளப்படும் ஒரு நாடு முசல்மானுக்கு தார்-உல்-ஹார்பாக காட்சி தருகிறது. இவற்றை எல்லாம் கொண்டு பார்க்கும்போது, ஓர் இந்து அரசாங்கத்துக்கு முஸ்லீம்கள் கீழ்ப்படிய மாட்டார்கள் என்பதை மெய்ப்பிப்பதற்கு வேறு சான்றுகள் ஏதும் தேவையில்லை என்று தோன்றுகிறது. இந்து அரசாங்கத்துடனான

1. காஃபிர்கள் என்று தாங்கள் அழைக்கப்படுவது குறித்து மனம் புண்பட இந்துக்களுக்கு எந்த உரிமையும் இல்லை. ஏனென்றால் இதே இந்துக்கள் முஸ்லீம்களை மிலேச்சர்கள் என்ற இழிவான பதத்தில் குறிப்பிடுகின்றனர் - சேர்ந்து பழக அருகதையற்றவர்கள் என்று இதற்குப் பொருள்.

அதிகாரத்துக்குக் கீழ்ப்படியச் செய்யும் பணிவிணக்க உணர்வும் ஒத்துணர்வும் முஸ்லீம்களிடையே அறவே இல்லை. இதற்குச் சான்றுகள் உள்ளனவா என்று கேட்டால் கணக்கற்ற சான்றுகள் இருக்கின்றன. ஆனால் இவற்றில் எவற்றைக் கூறுவது, எவற்றை ஒதுக்குவது என்பதுதான் பிரச்சினை; அந்த அளவுக்கு மலைமலை யாக சான்றுகள் உள்ளன.

கிலாபத் இயக்கம் மிக மும்முரமாக நடைபெற்றுக் கொண் டிருந்த நேரம். இந்துக்கள் தாங்களே முன்வந்து முசல்மான்களுக்கு எத்தனை எத்தனையோ உதவிகளைச் செய்து கொண்டிருந்தனர். இத்தகைய மிக நெருக்கடியான வேளையிலும் தங்களுடன் ஒப் பிடும்போது இந்துக்கள் மிகவும் கீழ்ப்பட்ட, தாழ்ந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை முஸ்லீம்கள் ஒரு கணமும் மறக்கவில்லை. இன்சாஃப் என்னும் கிலாபத் இதழில் ஒரு முசல்மான் பின்வருமாறு எழுதினார்:[1]

> ''சுவாமி, மகாத்மா என்பதன் பொருள் என்ன? முஸ்லீமல் லாதவர்களைக் குறிப்பதற்கு முஸ்லீம்கள் தங்கள் பேச்சிலும் எழுத்திலும் இவற்றைப் பயன்படுத்த முடியுமா? சுவாமி என்பது 'குரு'வையும், 'மகாத்மா' என்பது 'மிக உயர்ந்த ஆன்மீக சக்திகள் படைத்தவர்' என்பதையும் குறிக்கிறது, இது 'ரு-இ-ஆஜ' முக்கும், மிக உயர்ந்த புனித ஆவிக்கும் இணையானது என்று அவர் கூறுகிறார்''.

முஸ்லீமல்லாதவர்களை முஸ்லீம்கள் இவ்வாறு பணிவணக் கத்துடனும், பயபக்தியுடனும் அழைப்பது இஸ்லாமிய சட்டத்துக்கு இசைந்ததுதானா என்பதை முஸ்லீம் சமய அறிஞர்கள் ஒரு ஃபத்வா மூலம் முடிவு செய்ய வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

1924ல் திரு. காந்தி சிறையிலிருந்து விடுதலை செய்யப் பட்டதைக் கொண்டாடுவதற்கு டில்லியில் ஹக்கீம் அஜ்மல் கானால் நடத்தப்படும் திப்பியா யூனானி மருத்துவக் கல்லூரியில் ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் குறிப்பிடத்தக்கதொரு சம்பவம் நடைபெற்றது.[2] இவ்விழாவில் ஓர் இந்து மாணவர் பங்கெடுத்துக்

1. ''இந்தியர்களின் பார்வையில்'', டைம்ஸ் ஆப் இந்தியா, 11.3.24.

2. ''இந்தியர்களின் பார்வையில்'', டைம்ஸ் ஆப் இந்தியா, 21.3.24.

கொண்டு பேசும்போது திரு. காந்தியை ஹஜரத் ஈசாவுடன் (ஏசு கிறிஸ்து) ஒப்பிட்டு விட்டார். அவ்வளவுதான், தங்களது மத நம்பிக்கையின் புனிதத் தன்மையை இது அவமதித்து விட்டதாக முசல்மான்கள் எடுத்துக் கொண்டனர்; உடனே அங்கிருந்த எல்லா முகமதிய மாணவர்களும் சீறியெழுந்து அந்த இந்து மாணவரை நையப் புடைக்க முயன்றனர். தங்களது உணர்வுகள் புண்படுத்தப்பட்டதற்கு எதிரான இந்த அமளிதுமளியில் தங்களுடைய சக-சமயத்தினருடன் முசல்மான் பேராசிரியர்களும் சேர்ந்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

1923ல் இந்திய தேசிய காங்கிரசின் மாநாட்டுக் கூட்டத்திற்கு திரு. முகமது அலி தலைமை தாங்கினார். அப்போது அவர் தமது உரையில் திரு. காந்தியைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு பேசினார்:

''மகாத்மாவின் போதனைகளையும் அவர் பட்டதுன்ப துயரங்களையும் ஏசுவின் போதனைகளுடனும் அவரது துயரங்களுடனும் ஒப்பிட்டுப் பலர் பேசினர். ஏசு கிறிஸ்து தமது மடாலயத்துக்கு வெளியே ஆரம்பத்தில் உலகைக் கூர்ந்து ஆராய்ந்தபோது, இவ் உலகைச் சீர்திருத்துவதற்கான ஆயுதத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டிய நிலைக்கு ஆளானார். மற்றவர்கள் பொருட்டு துன்புறுவது, சகிப்புத் தன்மை காட்டுவது ஆகியவற்றின்மூலம் சர்வவல்லமை மிக்கவராவது, தூய்மையான உள்ளத்தின் மூலம் வன்முறையின் மீது வெற்றிக்கொடி நாட்டுவது எனும் சித்தாந்தங்கள் எல்லாம் மனிதனின் முதல் வழித்தோன்றல்களான அபல், கெய்ன் போன்றோரது காலத்தவை போன்று பழைமையானவை.

''எது எப்படியாயிருப்பினும், இது மகாத்மா காந்திக்கும் உரிய தனிச்சிறப்பாகும்; ஆனால் ஒரு கிறித்தவ அரசாங்கம் தான் நம் காலத்து ஏசுகிறிஸ்து போன்ற ஒரு மனிதரை பெரும் குற்றமிழைத்தவராக இழிவாக நடத்துகிறது. (வெட்கம், வெட்கம்); அமைதியின் தூதரை ஏறத்தாழ ஒத்தவராக பொது விவகாரங்களில் ஈடுபட்டு வரும் ஒரு மனிதரை பொது அமைதிக்குப் பங்கம் விளைவித்தவராகக் குற்றம் சாட்டித் தண்டிக்கிறது. ஏசு வருவதற்கு முன்னர் யூதேயாவின் நிலைமை எவ்வாறு இருந்ததோ அவ்வாறேதான் மகாத்மா வருவதற்கு முன்னர் இந்தியாவின் அரசியல் நிலைமைகளும் இருந்தன. இதுபோன்றே, யூதேயா மக்களுக்கு ஏசு கிறித்து வழிகாட்டிய முறையிலேயே மகாத்மா காந்தியும் இந்தியாவை பீடித்துள்ள

நோய்களுக்குப் பரிகாரம் கூறினார். துன்புறுத்துவதன் மூலம் ஆத்ம சுத்தி, அரசாங்கத்துக்குள்ள பொறுப்புகள் குறித்த ஒரு தார்மிகத் திட்டம், சுயராஜ்யத்துக்கு முன்நிபந்தனையான சுயக் கட்டுப்பாடு இவையே மகாத்மாவின் கோட்பாடாகவும் பற்றுறுதியாகவும் இருந்தன; ஆமதாபாத்தில் காங்கிரஸ் மகாசபை நடைபெற்று முடிந்த புகழ் மிக்க ஆண்டில் வாழும் பெரும் பேறு பெற்றவர்கள் மனித குலத்தின் ஒரு மாபெரும் பகுதியினரின் எண்ணங்களிலும், உணர்வுகளிலும், செயல்பாடுகளிலும் அவர் எத்தகைய துரிதமான, பிரமிக்கத்தக்க மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கிறார் என்பதைக் கண்டிருக்கக் கூடும்.''

இதற்கு ஓராண்டிற்குப் பிறகு அலிகாரிலும் ஆஜ்மீரிலும் பேசும்போது திரு.முகமது அலி பின்கண்டவாறு கூறினார்:

''திரு.காந்தியின் குணப்பண்பு எவ்வளவுதான் தூய்மையானதாக இருந்தாலும் சமயக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது, பண்பே இல்லாத எந்த ஒரு முசல்மானைவிடவும் கீழானவராகவே எனக்குத் தோன்றுகிறார்.''

அவரது இந்தப் பேச்சு மிகுந்த கொந்தளிப்பையும் கோபாவேசத்தையும் கிளர்த்திவிட்டது. திரு.காந்தியிடம் ஆழ்ந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருந்த திரு.முகமது அலியா அவரைப்பற்றி இத்தகைய பெருந்தன்மையற்ற, குறுகிய நோக்குடைய, ஆணவமிக்க கருத்துகளை வெளியிடுகிறார் என்பதை பலரால் நம்பவே முடியவில்லை. லக்னோவில் அமினாபாத் பூங்காவில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் திரு.முகமது அலி உரையாற்றிக் கொண்டிருந்த போது, திரு.காந்தியைப்பற்றி இவ்வாறெல்லாம் அவதூறாகப் பேசியது உண்மையா என்று அவரிடம் கேட்கப்பட்டது. அப்போது திரு.முகமது அலி எத்தகைய தயக்கமுமின்றி, மனச்சாட்சி உறுத்தலுமின்றிப் பின் கண்டவாறு பதிலளித்தார்:[1]

''ஆம், என்னுடைய மதத்தின்படி, என்னுடைய சித்தாந்தத்தின்படி, ஓர் ஒழுக்கங்கெட்ட, இழிவடைந்த முசல்மானை திரு. காந்தியைவிட மேம்பட்டவனாகவே கருதுகிறேன்.''

ஒரு காஃபிரான திரு.காந்தியை ஏசுகிறித்துவின் அளவுக்கு உயர்த்தி வானளாவ திரு.முகமது அலி புகழ்ந்து பேசியதை பழைமை விரும்பிகளான முஸ்லீம் சமுதாயம் முழுவதும் ஒரு பெரும் குற்றமாக

1. ''இந்தியர்களின் பார்வையில்'', டைம்ஸ் ஆப் இந்தியா, 21.3.24.

எடுத்துக்கொண்டு பலத்த கூக்குரல் எழும்பியதாலே அவர் தாம் பேசியதையே விழுங்கி ஏப்பமிட்டு வேறுவிதமாகப் பேச வேண்டிய தாயிற்று என்று கூறப்படுகிறது.[1] ஒரு காஃபிரை இவ்வாறு ஏற்றிப் போற்றிப் பேசுவது முஸ்லீம் சட்டத்தால் தடை செய்யப்பட்டுள்ளது என்று முஸ்லீம் சமூகம் வாதிட்டது.

1928 ஆம் ஆண்டில் இந்து-முஸ்லீம் உறவுகள் பற்றி வெளியிடப்பட்ட ஒரு கொள்கை அறிக்கையில் குவாஜா ஹாசன் நிஜாமி பின்கண்டவாறு குறிப்பிட்டிருந்தார்:[2]

> ''முசல்மான்கள் இந்துக்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர்கள்; அவர்கள் இந்துக்களுடன் ஒன்றுபடவே முடியாது. குரூரமான போர்களுக்குப் பிறகு முசல்மான்கள் இந்தியாவை வென்றனர்; ஆங்கிலேயர்கள் அவர்களிடமிருந்து இந்தியாவைக் கைப்பற்றிக் கொண்டனர். முசல்மான்கள் எவ்வகையிலும் பிரிக்க முடியாத ஓர் ஒன்றுபட்ட தேசம்; அவர்கள்தான் இந்தியாவின் எசமானர்களாக இருக்க முடியும். அவர்கள் ஒருபோதும் தங்கள் தனித்தன்மையை விட்டுக் கொடுக்க முடியாது. அவர்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் இந்தியாவை ஆண்டு வந்தவர்கள்; எனவே இந்த நாட்டின் மீது அவர்களுக்கு நியாயப்படியான, விதிமுறைப்படியான உரிமை இருக்கிறது. இந்துக்கள் இந்த உலகில் ஒரு சிறுபான்மை சமூகத்தினர். ஒருவரை ஒருவர் அழித்துக் கொள்ளும் உட்பகை சண்டை சச்சரவுகளிலிருந்து அவர்கள் ஒருபோதும் விடுபடுவதில்லை; அவர்கள் காந்தியிடம் நம்பிக்கை வைத்திருக்கின்றனர்; பசுவை வணங்கி வழிபடுகின்றனர்; அவர்கள் மற்றவர்களின் தண்ணீரைப் பயன்படுத்தி மாசுபடுகின்றனர். தன்னாட்சி பற்றி இந்துக்கள் கவலைப்படுவதில்லை; அதில் கவனம் செலுத்த அவர்களுக்கு நேரமில்லை; அவர்கள் சிண்டுபிடித்துக் கொண்டு தங்கள் சொந்தப் பூசல்களில் மூழ்கிக் கிடக்கட்டும். மற்றவர்கள் மீது ஆட்சி செய்ய அவர்களுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? ஆற்றல் இருக்கிறது? முசல்மான்கள் ஒரு சமயம் ஆட்சி புரிந்தவர்கள், இனியும் ஆட்சி செய்வார்கள்.''

1. ''இந்தியர்களின் பார்வையில்'', டைம்ஸ் ஆப் இந்தியா, 26.4.24.

2. மேற்படி நூல், 14-3-'28

இந்துக்களுடன் இணங்கிப் போவதற்குப் பதிலாக அவர்களுடன் மீண்டும் பலப்பரீட்சையில் ஈடுபடவே முஸ்லீம்கள் தயாராகி வருவதுபோல் தோன்றுகிறது. 1926ஆம் ஆண்டில் ஒரு சர்ச்சை எழுந்தது: 1761ல் நடைபெற்ற மூன்றாவது பானிபட் போரில் உண்மையில் யார் வெற்றி பெற்றார்கள் என்பதே அந்த சர்ச்சை. இந்தப் போரில் தங்களுக்குத்தான் மகத்தான வெற்றி என்று முஸ்லீம்கள் உரிமை கொண்டனர்; 4 லட்சம் முதல் 6 லட்சம் பேர் கொண்ட மராட்டிய படைகளை 1 லட்சம் பேரே கொண்ட அகமது ஷா அப்தலியின் படைகள் வெற்றிகொண்டது மாபெரும் வெற்றியில்லையா என்று அவர்கள் வாதிட்டனர். இந்துக்களோ இதில் தங்களுக்குத்தான் வெற்றி - தோல்வியடைந்தவரின் வெற்றி - ஏனென்றால் முஸ்லீம் படையெடுப்புகளின் அலையை இது தடுத்து நிறுத்தியது என்று எதிர்வாதம் செய்தனர். இந்துக்களிடம் தோல்வியடைந்ததை ஒப்புக்கொள்ள முஸ்லீம்கள் எவ்வகையிலும் தயாராக இல்லை; இந்துக்களைவிடத் தாங்கள் வலுமிக்கவர்கள் என்பதை எப்போது வேண்டுமானாலும் நிரூபிக்கத் தாங்கள் தயார் என்றும் சவால் விட்டனர். இந்துக்களை விட முஸ்லீம்கள் எப்போதுமே மிகவும் வலுவானவர்கள் என்பதை நிரூபிப்பதற்கு நஜிபாபாத்தைச் சேர்ந்த மௌலானா அக்பர் ஷா கான் என்பவர் ஒரு விந்தையான யோசனையை வெளியிட்டார்; வரலாற்றுச் சிறப்புமிக்க இதே பானிபட் சமவெளியில் இந்துக்களும் முஸ்லீம்களும் நான்காவது போர் ஒன்றைப் பரீட்சார்த்தமாக நடத்திப் பார்த்துவிடலாம் என்று தெரிவித்தார். அத்துடன் நில்லாமல் பண்டிட் மதன்மோகன் மாளவியாவுக்குப் பின்கண்ட அறைகூவலையும் விடுத்தார்:[1]

> "மாளவியாஜி, பானிபட் போரின் முடிவை தவறாகத் திரித்துக் கூற நீங்கள் முயற்சி செய்துவந்தால், இதனைப் பரிசோதிப்பதற்கு ஓர் எளிதான, சிறந்த வழியை உங்களுக்குக் காட்டுகிறேன். அதிகாரிகளின் இடையூறு ஏதுமின்றி நான்காவது பானிபட் போர் நடைபெறுவதற்கு உங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திப் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து அனுமதி பெற்றுத்தாருங்கள். அப்போது இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய இரு சமூகத்தினரது வீரதீரத்தையும், பேராண்மையையும், போரிடும் வல்லமையையும் சோதித்துப் பார்த்து

1. மேற்படி நூல், 20.6.26.

விடுவோம். இதற்கு ஏற்பாடு செய்ய நான் தயாராக இருக்கிறேன்.... இந்தியாவில் 7 கோடி முசல்மான்கள் இருக்கிறார்கள். எனவே அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் வகையில் 700 முசல்மான்களுடன் குறிப்பிட்ட தேதியில் பானிபட் வந்து சேருகிறேன். இந்தியாவில் 22 கோடி இந்துக்கள் இருப்பதால் 2200 இந்துக்களுடன் நீங்கள் பானிபட் வந்து சேர அனுமதிக்கிறேன். இந்தப் போரில் பீரங்கிகளையோ எந்திரத் துப்பாக்கிகளையோ, அல்லது வெடிகுண்டுகளையோ பயன்படுத்துவது முறையாக இருக்காது. வாட்கள், ஈட்டிகள், வேல்கம்புகள், வில், அம்புகள், பட்டாக்கத்திகள், குத்துவாள்கள் போன்றவற்றை மட்டுமே பயன்படுத்தவேண்டும். இந்துப் படைகளின் தளபதி பொறுப்பை நீங்கள் ஏற்க இயலவில்லை என்றால் அந்தப் பொறுப்பை சதாசிவராவ்[1] அல்லது விஷ்வாஸ்ராவ்[2] ஆகியோரது வழித்தோன்றல்களில் எவருக்கேனும் அளிக்கலாம்; 1761ல் தங்களுடைய முன்னோர்கள் அடைந்த தோல்விக்குப் பழி தீர்த்துக்கொள்ள இதன்மூலம் அவர்களுடைய சந்ததியினருக்கு வாய்ப்பு கிட்டும். எப்படியாயினும் ஒரு பார்வையாளராகவாவது பானிபட்டுக்கு வந்து சேருங்கள்; அங்கு நடைபெறும் போரின் முடிவை நேரில் பார்த்தபிறகு நீங்களே உங்கள் கருத்துகளை மாற்றிக் கொள்வீர்கள்; பின்னர் நாட்டில் தற்போது நடைபெற்றுவரும் சர்ச்சைக்கு இதன்மூலம் ஒரு முடிவுஏற்படும். இறுதியாக ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்: நான் அழைத்துவரும் 700 பேரில் நீங்கள் அஞ்சி நடுநடுங்கும் பட்டாணியர்களோ அல்லது ஆப்கன்களோ எவரும் இருக்கமாட்டார்கள். ஷரியத்தைப் பற்றுதியுடன் பின்பற்றும் சிறந்த குடும்பங்களைச் சேர்ந்த இந்திய முசல்மான்களை மட்டுமே அழைத்து வருவேன்.''

## IV

இத்தகையவைதான் இந்துக்கள் மற்றும் முஸ்லீம்களது சமய நம்பிக்கைகளும், சமூகப்போக்குகளும், இறுதி கதிப்போக்குகளும், அவர்களது வகுப்புவாத மற்றும் அரசியல் வெளிப்பாடுகளுமாகும். இந்த சமய நம்பிக்கைளும், சமூகப் போக்குகளும்,

1, 2. மூன்றாவது பானிபட் போரில் இந்துப்படைகளின் தளபதிகளாக இருந்தவர்கள் இவர்கள்.

இறுதிக் கதிப்போக்குகள் குறித்த கருத்துகளும்தான் அவர்களது செயல்பாட்டு திசைவழிகளை, அவர்கள் பரஸ்பரம் தங்களுக்குள் ஒத்துழைப்பை வளர்த்துக்கொள்வார்களா அல்லது சச்சரவிட்டுக் கொள்வார்களா என்பதை நிர்ணயிக்கும் இயக்கு சக்தியாக அமைந்துள்ளன. இந்துக்களும் முஸ்லீம்களும் என்றும் ஒரே தேசமாக அல்லது இன்னும் சொல்லப்போனால் ஒரு முழுமையின் இரண்டு இணக்கமான பகுதிகளாகக் கூட இருக்க முடியாத அளவுக்கு அவர்கள் மிகவும் ஒத்திசைவற்றவர்களாக, அணுவளவும் விட்டுக்கொடுக்காதவர்களாக இருந்து வந்திருக்கின்றனர் என்பதைக் கடந்தகால அனுபவம் காட்டுகிறது. இந்த வேறுபாடுகள் அவர்களைப் பிரித்துவைப்பதோடு, சர்வசதாவும் சண்டை சச்சரவில் ஈடுபடும்படியும் செய்கின்றன. இந்த வேறுபாடுகள் சாசுவதமானவை; அதுபோன்றே இந்து-முஸ்லீம் பிரச்சினையும் நிரந்தரமானதாகிவிட்டது. இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றுபட்டவர்கள், இப்போது ஒன்றுபட்டிருக்காவிட்டாலும் இனிமேலாவது ஒன்றுபட்டிருப்பார்கள் என்ற அடிப்படையில் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முயல்வது எத்தகைய பலனும் தராத, வறண்ட தரிசு நிலத்தில் பயிரிட எத்தனிப்பதற்கு ஒப்பாகும். இதுதான் செக்கோஸ்லோவாகியா விஷயத்தில் நடைபெற்றது. இன்றைய நிலைமையில், சில உண்மைகளை சர்ச்சைக்கு அப்பாற்பட்ட முறையில் ஒப்புக்கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது; இத்தகைய ஒப்புதல் எவ்வளவு மகிழ்ச்சியற்றதாயினும் அதனை ஏற்பதைத் தவிர வேறு வழியில்லை.

முதலாவதாக, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே ஒற்றுமை ஏற்படுத்த எல்லா சாத்தியமான முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டபோதிலும், அவை யாவும் தோல்வியடைந்துவிட்டன.

இந்த முயற்சிகளின் வரலாறு 1909 ஆம் ஆண்டு தொடங்கியதெனக் கூறலாம். அப்போது முஸ்லீம் தூதுக்குழு ஒன்று சில கோரிக்கைகளை பிரிட்டிஷாரிடம் முன்வைத்தது. பிரிட்டிஷாரும் அவற்றை ஏற்றுக்கொண்டனர். இந்துக்களும் இதற்கு தங்களது ஒப்புதலை அளித்தனர்: இவர்களில் பிரபலமானவர் திரு.கோகலே. தனிவாக்காளர் தொகுதிக் கோட்பாட்டுக்கு இசைவு தெரிவித்தமைக்காக பல இந்துக்கள் அவரைப்பெரிதும் குறைகூறினர். ஆனால் இவ்விதம் ஒப்புதலளிக்காமல் இருப்பது விவேகமாகாது என்பதை அவர்மீது குறை காண்பவர்கள் மறந்துவிட்டனர். இத்தகைய

வர்களுக்கு எதிரான வாதத்தை இங்கு ஆணித்தரமாக அழகாக திரு.முகமது அலி எடுத்துரைக்கிறார்:

> "... முரண்பாடானதாகத் தோன்றினாலும், தனிவாக்காளர் தொகுதிகளின் உருவாக்கம் இந்து-முஸ்லீம் ஒற்றுமை ஏற்படுவதைத் துரிதப்படுத்தி இருக்கிறது எனக் கூறவேண்டும். முதல்தடவையாக ஓர் உண்மையான வாக்குரிமை, அது வரையறைக்குட்பட்டதாக இருப்பினும், இந்திய மக்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சி ஆரம்பமானது முதலே இந்துக்களும் முஸ்லீம்களும் பிளவுபட்டிருந்திருக்கின்றனர்; பல சந்தர்ப்பங்களில் பரஸ்பரம் ஒருவர் மீதொருவர் பகைமை பாராட்டி வந்திருக்கின்றனர். இத்தகைய நிலைமையில் கலப்புத் தொகுதிகள் பரஸ்பரம் வகுப்புச் சச்சரவுகளும் பூசல்களும் நடைபெறுவதற்கான களத்தை அமைத்துக் கொடுத்திருக்கும்; இரு சமூகங்களுக்கும் இடையே உள்ள இடைவெளியை மேலும் விரிவுபடுத்தியிருக்கும். தேர்தலில் போட்டியிடும் ஒவ்வொரு வேட்பாளரும் தனது சொந்த சமூகத்தின் ஆதரவையே நாடவேண்டியிருக்கும். அப்போது 'தனது சமூகத்தின் நலன்களைப் பாதுகாப்பது' என்பது போன்ற ஏதேனும் ஒரு திட்டத்தின் பெயரால், எதிர் சமூகத்தின்மீது தனக்குள்ள தீவிர வெறுப்பைக் காட்டியாக வேண்டும். அப்போதுதான் வேட்பாளரைச் சேர்ந்த சமூகத்தின் வாக்குகளை அவர் பெறமுடியும். இது ஒரு மோசமான நடைமுறையாகும். இது இப்படியென்றால், இரு சமூகங்களும் சமத்துவ அளவில் போட்டியிடாத தேர்தலின் முடிவுகள் இதைவிடவும் மோசமான விளைவுகளை ஏற்படுத்தும்; ஏனென்றால் தனது வேட்பாளரை வெற்றிபெறச் செய்யமுடியாதுபோன சமூகம் வெற்றி பெற்ற எதிர் சமூகத்தின்பால் முன்னிலும் ஆழமான வெறுப்பு உணர்வையும் காழ்ப்பு உணர்வையும் வளர்த்துக்கொள்ளும். இரண்டு சமூகங்களும் பிளவுபட்டுக் கிடக்கும் நிலைமையில் தேர்தலின்போது எந்த அரசியல் கோட்பாடுகளும் பிரபலம் பெறுவதற்கு வாய்ப்பில்லாமல் போகிறது. தனிவாக்காளர் தொகுதிகளின் உருவாக்கம் இந்த வகுப்பு வெறிப் போராட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கு பெரும் பாங்காற்றி இருக்கிறது. எனினும் வகுப்புகளிடையே ஐயமும் போட்டியும் பொறாமையும் தலைவிரித்தாடி வரும்போது, வகுப்புவாரித் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் கூட எதிர் சமூகத்தின

ரிடம் பகைமைப் பாராட்டுவதில் தீவிரம் காட்டுபவர்களாகவே இருப்பார்கள் என்பதை நான் மறந்துவிடவில்லை.''

தனி வாக்காளர் தொகுதிகள் அமைப்பதற்கு 1909ல் இந்துக்கள் அளித்த ஆதரவு இந்து-முஸ்லீம் ஒற்றுமையை ஏற்படுத்திவிட வில்லை. பின்னர் 1916 ஆம் வருட லக்னோ ஒப்பந்தம் வந்தது. இந்த ஒப்பந்தத்தின்படி பல அம்சங்களிலும் முஸ்லீம்களை இந்துக்கள் திருப்திப்படுத்தினர். எனினும் இதனாலும் இரு சமூகங்களுக்கும் இடையே எந்த உடன்பாடும் ஏற்படவில்லை. இந்து-முஸ்லீம் ஒற்றுமையைக் கட்டிவளர்ப்பதற்கு ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு மற்றொரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அனைத்திந்திய முஸ்லீம் லீகின் வருடாந்திர மாநாடு 1923 மார்ச் மாதம் லக்னோவில் நடைபெற்றது; அம்மாநாட்டில் ஒரு முக்கியமான தீர்மானம் ஏற்கப் பட்டது; இந்தியாவிலுள்ள பல்வேறு சமூகங்களுக்கும் சமய உட் பிரிவுகளுக்கும் இடையே ஒரு தேசிய உடன்பாடு ஏற்படவேண்டும் என்று அத்தீர்மானம் வலியுறுத்தியது[1]; இது சம்பந்தமாக ஒரு குழுவையும் அது நியமித்தது; ஏனைய அமைப்புகள் நியமிக்கும் இத்தகைய குழுக்களுடன் இது விஷயத்தில் ஒத்துழைப்பதே அதன் நோக்கம். 1923 செப்டம்பரில் டில்லியில் மௌலானா அபுல் கலாம் ஆசாத் தலைமையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரசின் விசேட மாநாடும் இதேபோன்ற ஒரு தீர்மானத்தை ஏற்றது; இத் தீர்மானம் லீக் தீர்மானத்தின் உணர்வுகளைப் பிரதி பலிப்பதாக அமைந் திருந்தது. 1. அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தி அமைப்பதற்கும் 2. ஒரு தேசிய உடன்படிக்கை நகலைத் தயாரிப்பதற்கும் இரு குழுக்களை அமைப்பதெனக் காங்கிரஸ் தீர்மானித்தது. இந்திய தேசிய உடன்படிக்கையை தயாரித்த குழுவின் அறிக்கையில் டாக்டர் அன்சாரியும், லாலா லஜபதிராயும் கையெழுத் திட்டிருந்தனர்.[2] அந்த அறிக்கை 1923ல் காகினாடாவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் சமர்ப்பிக்கப்பட்டது. இந்திய தேசிய உடன்படிக்கை ஒருபுறமிருக்க, வங்க மாகாண காங்கிரஸ் கமிட்டியும் சி.ஆர். தாஸின் தூண்டுதலின் பேரில் வங்காள முஸ்லீம்களுடன் ஒரு வங்காள உடன்படிக்கையைச் செய்து கொண்டது.[3] இந்திய தேசிய உடன்படிக்கையும் வங்காள உடன்படிக்கையும் காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டியின்

---

1. லீக் தீர்மானத்தின் முழு வாசகத்தையும் இந்திய வருடாந்திர பதிவேடு, 1923, தொகுதி I, பக்கங்கள் 395--396 ல் பார்க்க.

2. வங்காள உடன்படிக்கையின் வாசகங்களை மேற்படிநூல் பக்கம் 127ல் காண்க.

3. உடன்படிக்கை குறித்த அறிக்கையையும் நகல் வாசகங்களையும் மேற்படி நூல், 1923, தொகுதி II, பின் இணைப்பு, பக்கங்கள் 104-108 பார்க்க.

விவாதத்திற்கு வந்தது.[1] வங்காள உடன்படிக்கை 458 வாக்குகள் ஆதரவாகவும் 678 வாக்குகள் எதிராகவும் பெற்று நிராகரிக்கப் பட்டது. தேசிய உடன்படிக்கையைப் பொறுத்தவரையில் [2] அதன் நகல் குறித்து மேற்கொண்டு கருத்துகளைத் திரட்டி 1924 மார்ச் 21 ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பரிசீலனைக்கு குழு முன்வைக்க வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்தது. எனினும் இது விஷயத்தில் இந்தக் குழு மேற்கொண்டு நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. வங்க உடன்படிக்கைக்கு இந்துக்கள் கடுமையான எதிர்ப்பு தெரிவித்ததே இதற்குக் காரணம். குழு மேற் கொண்டு தனது முயற்சிகளை மேற்கொள்வதற்கு இது ஏற்றதருண மல்ல என்று கருதப்படுவதாக லாலா லஜபதிராய்[3] கூறினார். தவிரவும், திரு.காந்தி அச்சமயம் சிறையிலிருந்து விடுதலை செய்யப் பட்டிருந்தார்; எனவே, அவர் இப்பிரச்சினையைக் கவனத்தில் எடுத்துக் கொள்வார் என்று எண்ணப்பட்டது. ஆதலால் டாக்டர் அன்சாரி தாம் அதுவரை சேகரித்து வைத்திருந்த தகவல்களை ஏ.ஐ.சி.சி.யிடம் சமர்ப்பிப்பதோடு நின்று கொண்டுவிட்டார்.

திரு.காந்தி சிறையிலிருந்து வெளியே வந்த உடனேயே விட்ட இடத்திலிருந்து தொடங்கினார். 1924 நவம்பரில் பம்பாயில் பூர்வாங்க விவாதங்கள் நடைபெற்றன. இந்த விவாதங்களின் பயனாக, அனைத்துக் கட்சி மாநாடு எனும் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது; ஒற்றுமையை நிலைநாட்டும் பிரச்சினையில் கவனம் செலுத்து வதற்கு ஒரு குழு நியமிக்கப்பட்டது. இந்த அமைப்பு உண்மை யிலேயே ஓர் அனைத்துக் கட்சி அமைப்பாக அமைந்திருந்தது. காங்கிரஸ், இந்து மகா சபை, நீதிக்கட்சி, மிதவாதக்கட்சி, இந்தியக் கிறித்தவர்கள், முஸ்லீம் லீக் முதலியவற்றின் பிரதிநிதிகள் அந்த அமைப்பில் இடம் பெற்றிருந்தனர். இந்த அனைத்துக் கட்சி மாநாடு நியமித்த குழுவின் கூட்டம் டில்லியில் வெஸ்டர்ன் ஓட்டலில் 1925ல்

---

1. இந்த இரு உடன்படிக்கைகள் குறித்த விவாதங்களை மேற்படி நூல் பக்கங்கள் 121-127ல் பார்க்க.

2. தீர்மானத்தை மேற்படிநூல் பக்கம் 122ல் காண்க.

3. 1925ல் நடைபெற்ற அனைத்துக்கட்சி மாநாடுகள் குறித்த அவரது அறிக்கையை இந்தியக் காலாண்டு பதிவேடு, 1925, தொகுதி I, பக்கம் 70ல் காண்க.

ஜனவரி 23 ஆம் தேதி நடைபெற்றது. திரு.காந்தி தலைமை வகித்தார். ஜனவரி 24 ம் தேதி இக்குழு 40 உறுப்பினர்களைக் கொண்ட பிரதி நிதித்துவம் வாய்ந்த ஒரு துணைக்குழுவை நியமித்தது. இத் துணைக் குழுவிடம் பின்கண்ட பணிகள் ஒப்படைக்கப்பட்டன: (அ) அனைத்துக் கட்சிகளும் காங்கிரசில் சேருவதற்கு வழிவகுக்கும் பரிந்துரைகளை வழங்குதல், (ஆ) சுயராஜ்யத்தில் சட்டமன்றங்களிலும் எல்லா சமூகங்களும், இனங்களும், உபபிரிவுகளும் பிரதிநிதித்துவம் பெறுவ தற்கு வகை செய்யும் ஒரு திட்டத்தைத் தயாரித்தளித்தல், தகுதிக்கும் திறமைக்கும் பங்கம் ஏற்படாத வகையில் அரசுப்பணித்துறைகளில் பல்வேறு சமூகங்களுக்கும் நியாயமான, முறையான பிரதிநிதித் துவத்தைப் பெற்றுத்தரக்கூடிய ஒரு முறையைப் பரிந்துரை செய்தல். (இ) நாட்டின் இன்றைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஒரு சுயராஜ்யத் திட்டத்தை வகுத்தளித்தல். பிப்ரவரி 15 ஆம் தேதியன்றோ அல்லது அதற்கு முன்னதாகவோ தனது அறிக்கையைச் சமர்ப்பிக்கும் படி குழு பணிக்கப்பட்டது. தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணியைத் துரிதப்படுத்தும் பொருட்டு சில உறுப்பினர்கள் சேர்ந்து, சுயராஜ்யத் திட்டத்தைத் தயாரிப்பதற்கு ஒரு சிறு குழுவை அமைத்துக் கொண் டனர்; வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத் திட்டத்தை உருவாக்கும் பணியை பிரதானக் குழுவிடம் விட்டுவிட்டனர்.

திருமதி பெசன்ட் தலைமையிலிருந்த சுயராஜ்யத் துணைக் குழு அரசியலமைப்புச் சட்டம் குறித்த தனது அறிக்கையை உரிய காலத்தில் தயாரிப்பதில் வெற்றிபெற்றதோடு, அனைத்துக்கட்சி மாநாட்டின் பொதுக்குழுவிடம் அதனைச் சமர்ப்பிக்கவும் செய்தது. ஆனால் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் குறித்து ஒரு திட்டம் தயாரிப்பதற்காக நியமிக்கப்பட்ட துணைக்குழு மார்ச் 1 ஆம் தேதி டில்லியில் கூடி எந்த முடிவுக்கும் வராமலேயே காலவரையறை யின்றி ஒத்திவைக்கப்பட்டது. லாலா லஜபதிராயும் இந்துக்களின் ஏனைய பிரதிநிதிகளும் துணைக் குழுவின் கூட்டத்தில் பங்கு கொள்ளாததே இதற்குக் காரணம். திரு.காந்தியும் பண்டிட் மோதிலால் நேருவும் பின்கண்ட அறிக்கையை வெளியிட்டனர்:

> ''திருவாளர்கள் ஜெயகர், சீனிவாச அய்யங்கார், ஜெய் ராம் தாஸ் ஆகியோர் பங்கு கொள்ள இயலாத காரணத்தால் துணைக் குழுக் கூட்டத்தை ஒத்திவைக்கும்படி லாலா லஜபதி

ராய் கேட்டுக்கொண்டார். எங்கள் சொந்தப் பொறுப்பில் கூட்டத்தைத் தள்ளிவைக்கமுடியாத நிலையிலிருந்தோம். எனவே, ஒத்திவைக்கும் பிரச்சினையை கூட்டத்திலேயே முன்வைக்கும்படி நாங்கள் லாலா லஜபதிராயிடம் கூறினோம். அவ்வாறே செய்யப்பட்டது. ஆனால் லாலா லாஜபதிராயும் அவர் குறிப்பிட்ட ஏனையோரும் பங்கு கொள்ளாததோடு, எத்தகைய முடிவுக்கும் வரமுடியாத அளவுக்கு கூட்டத்திற்கு வந்திருந்தோர் எண்ணிக்கையும் மிகவும் குறைவாக இருந்தது. எந்தத் திட்டவட்டமான முடிவுக்கும் வரக்கூடிய வகையில் குழுவிடம் போதிய தகவல் இல்லை என்பதும், அண்மை வருங்காலத்திலும் தகவல்கள் கிட்டுவது சாத்திய மில்லை என்பதும் எங்கள் கருத்தாகும்...''

இந்த அறிக்கை சம்பந்தப்பட்ட கட்சிகளின் போக்கை தொகுத்துக் கூறுவதாக அமைந்திருந்தது என்பதில் ஐயமில்லை. குழுவில் இந்துக்களின் சார்பாகப் பேசுவதற்கு உரிமை பெற்றிருந்த காலஞ்சென்ற லாலா லஜபதிராய் அலகாபாதிலிருந்து வெளிவரும் **லீடர்** எனும் இதழில் எழுதியிருந்த ஒரு கட்டுரையில் ஒரு புதிய உடன்படிக்கை செய்துகொள்வதற்கு உடனடி அவசரம் ஏதுமில்லை என்று ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தார்; சில மாகாணங்களில் இந்து பெரும்பான்மையையும் வேறு சில மாகாணங்களில் முஸ்லீம் பெரும் பான்மையையும் அங்கீகரிப்பதே இந்து-முஸ்லீம் ஒற்றுமை ஏற் படுவதற்கான ஒரே மார்க்கம் என்ற கருத்தை ஏற்கவும் அவர் மறுத்துவிட்டார்.

இந்து-முஸ்லீம் ஒற்றுமை பிரச்சினை 1927ல் மீண்டும் எடுத்துக்கொள்ளப்பட்டது. சைமன் கமிஷன் விசாரணை ஆரம்ப மாவதற்கு முன்னர் இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 1916ல் மாண்டேகு-செம்ஸ்போர்டு விசாரணை தொடங்குவதற்கு முன்னர் மேற்கொள்ளப்பட்ட இத்தகைய முயற்சி லக்னோ ஒப்பந்தத்தில் முடிந்தது போலவே இப்போதைய முயற்சியும் வெற்றிபெறும் என்று நம்பப்பட்டது. இதற்கு ஓர் பூர்வாங்க ஏற்பாடாக 1927 மார்ச் மாதம் 20 ஆம் தேதி டில்லியில் பிரபல முஸ்லீம்கள் பங்கேற்ற ஒரு மாநாடு நடைபெற்றது; முஸ்லீம்களின் நலன்களைப் பாதுகாப்பது சம்பந்தமான சில பிரேரணைகள்[1] இம்மாநாட்டில் பரிசீலிக்கப்

1. இந்தப் பிரேரணைகளை இந்தியக் காலாண்டு பதிவேட்டில், 1927, தொகுதி 1, பக்கம் 33ல் காணலாம். இந்தப் பிரேரணைகளே பின்னர் திரு. ஜின்னாவின் 14 அம்சத் திட்டத்திற்கு அடிப்படையாக அமைந்தன.

பட்டன. டில்லிப் பிரேரணைகள் எனப்படும் இப்பிரேரணைகள் 1927ல் டிசம்பரில் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் ஆராயப்பட்டன. அதே சமயம், இதர அமைப்புகள் நியமிக்கும் இதேபோன்ற குழுக்களுடன் கலந்தாலோசித்து இந்தியாவுக்கு சுய ராஜ்ய அரசியலமைப்புச் சட்டத்தை வகுக்கும் அதிகாரத்தை காரியக் கமிட்டிக்கு அளிக்கும் தீர்மானத்தை காங்கிரஸ் நிறை வேற்றிற்று.[1] லிபரல் கட்சியும் முஸ்லீம் லீகும் இதே போன்ற தீர்மானங்களை நிறைவேற்றின; இந்தக் கலந்தாய்வுகளில் பங்கு கொள்வதற்குத் தமது பிரதிநிதிகளையும் நியமித்தன. ஏனைய அமைப்புகளையும் தமது பிரதிநிதிகளை அனுப்பும்படி காங்கிரஸ் காரியக் கமிட்டி கேட்டுக் கொண்டது. அனைத்துக் கட்சிகள் மாநாடு[2] என அழைக்கப்படும் இந்தக் குழு 1928 பிப்ரவரி 12ல் கூடி அரசியலமைப்புச் சட்டத்தை வகுப்பதற்காக ஒரு துணைக் கமிட்டியை நியமித்தது. இந்தக் குழு ஒரு நகல் அரசியலமைப்புச் சட்டத்தை யும், அத்துடன் ஓர் அறிக்கையையும் தயாரித்தது. இந்த அறிக்கையே நேரு அறிக்கை எனப்படுகிறது. காங்கிரஸ் மாநாடு நடைபெறுவ தற்கு முன்னர் 1928 டிசம்பர் 22ஆம் தேதி டாக்டர் அன்சாரி தலைமை யில் நடைபெற்ற அனைத்துக் கட்சிகளின் விசேட மாநாட்டில் இந்த அறிக்கை முன்வைக்கப்பட்டது. எந்தப் பிரச்சினை குறித்தும், வகுப்புப் பிரச்சினை குறித்தும்கூட எத்தகைய முடிவுக்கும் வர முடியாமல் இந்த விசேடமாநாடு 1929 ஜனவரி 1 ஆம் தேதி நாள் குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட்டது.

இது மிகவும் வியப்பளிப்பதாக இருக்கிறது. ஏனென்றால் முஸ்லீம் பிரேரணைகளுக்கும் நேருக் கமிட்டியில் தெரிவிக்கப் பட்டிருந்த பிரேரணைகளுக்கும் இடையேயான வேறுபாடு அப்படி ஒன்றும் கணிசமானதல்ல. அனைத்துக் கட்சி விசேட மாநாட்டில் தமது திருத்தங்களை ஆதரித்து திரு.ஜின்னா ஆற்றிய உரையிலிருந்து இதனைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.[3] நேருக் கமிட்டி

1. இந்தப் பிரேரணைகள் குறித்த காங்கிரசின் தீர்மானத்தை மேற்படி நூலில் காண்க, தொகுதி II, பக்கம் 397-98

2. அனைத்துக்கட்சி மாநாட்டின் துவக்கம், வரலாறு, இயைபு பற்றியும் அதன் அறிக்கை பற்றியும் மேற்படி நூலில் காண்க, தொகுதி I, பக். 1-142.

3. இந்தியக் காலாண்டுப் பதிவேடு பார்க்க, 1928, தொகுதி I, பக்கங்கள் 123-124.

அறிக்கையில் நான்கு திருத்தங்கள் செய்யப்படவேண்டும் என்று திரு. ஜின்னா விரும்பினார். மத்திய சட்டமன்றத்தில் முஸ்லீம்களுக்கு 33 1/3 விழுக்காடு பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும் என்ற கோரிக்கை குறித்த தமது முதலாவது திருத்தம் சம்பந்தமாக திரு. ஜின்னா பேசியதாவது:

''தாங்கள் உத்தேசித்துள்ள திட்டத்தின்படி மத்திய சட்ட மன்றத்தில் மூன்றிலொரு பங்கும் இன்னும் சொல்லப் போனால் அதற்கு அதிகமாகவும் இடங்களை முஸ்லீம்கள் பெறுவதற்கு வாய்ப்பு இருப்பதாக நேரு கமிட்டி கூறியிருக் கிறது; பஞ்சாபும் வங்காளமும் அவற்றின் மக்கட்தொகை வீதாசாரத்திற்கு அதிகமாக பெறும் என்றும் வாதிக்கப்படுகிறது. ஆனால் நாங்கள் உணர்வதெல்லாம் இதுதான். முஸ்லீம்கள் மூன்றிலொரு பங்கு இடத்தைப் பெறப்போகிறார்கள் என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம்கள் தங்களது மக்கட்தொகை அடிப்படைக்கும் அதிக மான பிரதிநிதித்துவத்தை மத்திய சட்டமன்றத்தில் பெறப் போகிறார்கள் என்பதைக் காரணம்காட்டி, நீங்கள் கைக்கொண் டிருக்கும் முறை முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள மாகாணங்களுக்கு நியாயம் வழங்கக்கூடியதாக இல்லை. பணக்காரர்களுக்கு அதிகம் தரப்போகிறீர்கள், ஏழைகளுக்கோ மக்கட்தொகைப்படிதான் தருவோம் என்கிறீர்கள். இது வாதத்துக்குச் சரியாக இருக்கலாம். ஆனால் விவேகத்துக்குப் பொருந்தாது.

''எனவே, நேரு அறிக்கை பரிந்துரைப்பதுபோல், முஸ்லீம்கள் மூன்றிலொரு பங்கோ அல்லது அதற்கு அதிகமாகவோ இடங்கள் பெறவேண்டுமானால், வங்காளத்துக்கோ பஞ்சா புக்கோ அதிக இடங்கள் தரமாட்டார்கள். ஏற்கெனவே சிறு பான்மையாக உள்ள சென்னை, பம்பாய் போன்ற மாகாணங் களிடையே ஆறு அல்லது ஏழு கூடுதல் இடங்களை விநியோகிப் பார்கள். அதிலும் சிந்து பிரிக்கப்படுமானால் பம்பாய் மாகாணம் 8 விழுக்காடுக்கும் குறைவாகவே பெறும் என்பதை மறந்து விடவேண்டாம். இதனால்தான் மூன்றிலொரு பங்கு என்று நிர்ணயித்துவிட்டு, முஸ்லீம்களிடையே எங்கள் சொந்த ஏற்பாட்டின்படி இடங்களைப் பகிர்ந்துகொள்ள எங்களை அனுமதியுங்கள் என்று கூறுகிறோம்.''

அவரது இரண்டாவது திருத்தம் பஞ்சாபிலும் வங்காளத்திலும் மக்கட்தொகை அடிப்படையில் இடங்களை ஒதுக்குவது சம்பந்தப்பட்டதாகும். அதாவது சட்டரீதியாக பெரும்பான்மை கோருவது சம்பந்தப்பட்டதாகும். இது பற்றி திரு.ஜின்னா கூறியதாவது:

''1927 மார்ச்சில் சில முஸ்லீம் தலைவர்கள் சில பிரேரணைகளை முன் வைத்ததும், அவை ''டில்லிப் பிரேரணைகள்'' எனப் பெயர் பெற்றதும் உங்களுக்கு நினைவிருக்கும். அவை பம்பாயில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிலும் சென்னை காங்கிரசிலும் பரிசீலிக்கப்பட்டன; சென்ற வருடம் கல்கத்தாவில் கூடிய முஸ்லீம் லீக் கூட்டம் குறைந்தபட்சம் பிரேரணையின் இந்தப் பகுதியைப் பெருமளவுக்கு ஊர்ஜிதம் செய்தது. இங்கு நான் விரிவான வாதப்பிரதிவாதங்களில் இறங்கப் போவதில்லை. இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதானால், பஞ்சாபிலும் வங்காளத்திலும் முகமதியர்கள் பெரும்பான்மையினராக இருந்தபோதிலும் அவர்களது வாக்குரிமை பலம் அவர்களது மக்கட்தொகை வீதாசாரத்துக்குத் தகுந்தபடியாக இல்லை என்பதுதான் பிரச்சினை. நேரு அறிக்கை இதற்கு ஒரு பரிகாரத்தைக் கண்டிருக்கிறது; அதாவது வயதுவந்தோர் வாக்குரிமை நிலைநாட்டப்படுமானால் அப்போது இட ஒதுக்கீட்டுக்கு அவசியமில்லை என்று கூறுகிறது. ஆனால் அவ்வாறு வயதுவந்தோர் வாக்குரிமை நடைமுறைப்படுத்தப்படாத பட்சத்தில் பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம்களுக்கு அவர்களது மக்கட்தொகை அடிப்படையில் இட ஒதுக்கீடு உத்தரவாதம் செய்யப்படவேண்டும், இதில் எந்த ஐயத்துக்கும் இடமிருக்கக் கூடாது என்று நாங்கள் விரும்புகிறோம். அப்போது கூடுதல் இடங்களை நாங்கள் கோரமாட்டோம்.''

அவரது மூன்றாவது திருத்தம் நிர்ணயிக்கப்பட்டவை போக எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திடம் ஒப்படைக்கப் படவேண்டுமென்ற நேரு கமிட்டியின் பரிந்துரை சம்பந்தப்பட்டதாகும். இந்த அதிகாரங்கள் மாகாண அரசாங்கத்திடம் ஒப்படைக்கப் படவேண்டும் என்ற திருத்தத்தை முன்மொழிந்து திரு. ஜின்னா கூறியதாவது:

''கனவான்களே, இது முற்றிலும் அரசியலமைப்புச் சம்பந்தப் பட்ட விஷயம், வகுப்பு அம்சத்துக்கும் இதற்கும் எந்தச்

சம்பந்தமுமில்லை. முஸ்லீம்கள் வகுப்புவாத உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டிருக்கிறார்கள் என்று இந்துக்கள் கூறுவார்கள் என்பது எனக்குத் தெரியும். எங்கள் உறுதியான, திட்டவட்டமான கருத்து என்னவென்றால், இந்தப் பிரச்சினையைக் கவனமாக ஆராய்ந்து பார்த்தோமானால், இந்த அதிகாரங்கள் மாகாணத்திடம் ஒப்படைக்கப்படுவதே நியாயம் என்பதாகும்.''

அவரது நான்காவது திருத்தம் சிந்து பிரிவினை சம்பந்தப்பட்டது. சிந்து பிரிவதற்கு ஒரு நிபந்தனையுடன் நேரு கமிட்டி ஒப்புதல் அளித்தது; ''இந்த அறிக்கையில் விவரித்துள்ளபடி அரசாங்கம் அமைக்கப்பட்ட பிறகே'' சிந்து பிரிவினை செயல்படுத்தப்பட வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. இந்த நிபந்தனை வாசகம் நீக்கப்படவேண்டும் என்ற திருத்தத்தை முன்மொழிந்து திரு.ஜின்னா பேசியதாவது:

''இதில் எங்களுக்கு மிகுந்த சிரமம் இருக்கிறது... இந்த அரசியலமைப்பின்படி ஓர் அரசாங்கத்தை அமைப்பதற்கு முன்பு அடுத்த ஆறு மாதங்களுக்குள்ளோ, ஒரு வருடம் அல்லது இரண்டு வருடங்களுக்குள்ளோ சிந்துவைப் பிரிப்பதென அரசாங்கம் முடிவு செய்கிறது என வைத்துக்கொள்வோம் அப்போது 'அதை நாங்கள் விரும்பவில்லை' என்று முகமதியர்கள் சொல்லவேண்டுமா... இந்த நிபந்தனை வாசகம் இருக்கும்வரை இந்த அரசிலயமைப்பின்படி ஏககாலத்தில் ஓர் அரசாங்கம் அமைக்கப்படும்வரை முகமதியர்கள் சிந்து பிரிவினையை எதிர்க்கவேண்டும் என்பதுதான் அதற்குப் பொருளாகும். எல்லைப்புற மாகாண விஷயத்தில் நீங்கள் இவ்வாறு ஏதும் கூறவில்லையே, அப்படியிருக்கும்போது சிந்து விஷயத்தில் மட்டும் ஏன் இந்த நிபந்தனை? எனவேதான் இந்தச் சொற்களை நீக்கவேண்டுமென்று நாங்கள் கோருகிறோம்.... லக்னோ ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட தரப்புகள் ஏற்றுக்கொண்ட தீர்மானத்தில் இது இடம்பெற்றிருப்பதால் இதனை நீக்கமுடியாது என்று கமிட்டி கூறுகிறது. கமிட்டியின் உறுப்பினர்களிடம் எனக்கு மிகுந்த நன்மதிப்பு உண்டு. அந்தப் பணிவிணக்கத்தோடு கேட்கிறேன் யாரோ சிலர் உடன்பட்டு ஒரு குறிப்பிட்ட தீர்மானத்தை ஏற்றுக்கொண்டுவிட்டார்கள் என்பதற்காக இந்த விசேட மாநாட்டில் பங்குகொள்ளும்

நாங்கள் அதற்குக் கட்டுப்படவேண்டுமா? இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான பிளவு அப்படி ஒன்றும் மிகவும் ஆழமானதல்ல என்பதையே இந்தத் திருத்தங்கள் புலப்படுத்துகின்றன. அப்படியிருந்தும் இந்தப் பிளவைப் போக்கி இரு சமூகங்களையும் நெருங்கிவரச் செய்வதற்கும் உருப்படியான முயற்சி எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. இந்துக்களும் முஸ்லீம்களும் செய்யத் தவறிவிட்ட இந்தப் பணி பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் விடப்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கமும் தனது வகுப்புத் தீர்ப்பின்மூலம் இப்பணியைச் செய்தது.

இந்துக்களுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் இடையே ஏற்பட்ட புனா ஒப்பந்தம் இந்த ஒற்றுமையைச் சாதிக்கும் முயற்சிகளுக்கு மேலும் ஓர் உந்துதலை, உத்வேகத்தை அளித்தது. 1932 நவம்பருக்கும் டிசம்பருக்கும் இடைப்பட்ட மாதங்களில் ஏதேனும் ஓர் உடன்பாட்டுக்கு வருவதற்கு இந்துக்களும் முஸ்லீம்களும் பெருமுயற்சி எடுத்துக்கொண்டனர். முஸ்லீம்கள் தங்களது அனைத்துக் கட்சி மாநாடுகளில் மும்முரமாக இருந்தனர். இந்துக்களும்முஸ்லீம்களும் சீக்கியர்களும் ஒற்றுமை மாநாடுகளில் தீவிரமாக பங்கு கொண்டனர். பிரேரணைகளும் எதிர் பிரேரணைகளும் முன்வைக்கப்பட்டன. எனினும் வகுப்புத்தீர்ப்புக்குப் பதில் வேறு ஓர் உடன்பாடு காணுவதற்கு நடைபெற்ற பேச்சுவார்த்தைகளால் எந்தப் பலனும் கிட்டவில்லை. கமிட்டியின் 23 அமர்வுகளுக்குப் பிறகு இந்த முயற்சி கைவிடப்பட்டது.

அரசியல் பிரச்சினைகளில் உடன்பாடு காணுவதற்கு முயற்சிகள் நடைபெற்றது போன்றே சமூக, சமய பிரச்சினைகளிலும் உடன்பாடு எட்டுவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அத்தகைய பிரச்சினைகளில் சில வருமாறு:

1. பசுவதை, 2. மசூதிகளின் முன் வாத்திய இசை. 3. மதமாற்றம். இப்பிரச்சினைகளில் மிகுந்த கருத்துவேறுபாடு நிலவியது. இந்த திசை வழியில் முதல் முயற்சி 1923ல் மேற்கொள்ளப்பட்டது. இந்திய தேசிய உடன்பாடு செய்து கொள்ளலாம் என்று அப்போது யோசனை கூறப்பட்டது. ஆனால் இந்த முயற்சி தோல்வி அடைந்தது. அச்சமயம் திரு.காந்தி சிறையில் இருந்தார். 1924 பிப்ரவரி 5 ஆம் . ேதி அவர் சிறையிலிருந்து விடுதலையானார். இந்து-முஸ்லீம்

ஒற்றுமைக்குத் தாம் ஆற்றி வந்த பணி சிதைந்து சீர்குலைந்தது கண்டு மிகுந்த அதிர்ச்சியடைந்தார் திரு. காந்தி; இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே நடைபெற்ற கொலைவெறி மிக்க கலகங்களுக்குத் தார்மிக ரீதியில் பொறுப்பேற்று 21 நாள் உண்ணா நோன்பு மேற்கொள்ள அவர் முடிவு செய்தார். எல்லா சமூகங்களையும் சேர்ந்த பிரபல இந்தியத் தலைவர்கள் பங்கு கொண்ட ஓர் ஒற்றுமை மாநாட்டைக் கூட்டுவதற்கு இந்த உண்ணாவிரதம் வகை செய்தது. கல்கத்தாவின் தலைமை மேற்றிராணியாரும் (பிஷப்)இந்த மாநாட்டில் கலந்து கொண்டார். 1924 செப்டம்பர் 26 முதல் அக்டோபர் 2 ஆம் தேதி வரை மாநாடு நடைபெற்றது.[1] மனச்சாட்சி சுதந்திரம், சமய சுதந்திரம் என்னும் உயரிய கோட்பாடுகளைச் செயல்படுத்துவதில் தங்களது முழு முயற்சிகளையும் ஈடுபடுத்த மாநாட்டில் பங்கு கொண்டோர் உறுதிபூண்டனர்; எத்தகைய ஆத்திரமூட்டும் சூழ்நிலைமையிலும் இந்தப் பாதையிலிருந்து விலகிச் செல்வதை, நெறி பிறழ்ந்து செல்வதை வன்மையாகக் கண்டித்தனர். திரு. காந்தியைத் தலைவராகக் கொண்ட ஒரு தேசிய பஞ்சாயத்து சபை நிறுவப்பட்டது. சமய நம்பிக்கைகள் கொண்டிருத்தல், அவற்றை வெளிப்படுத்தல், சமய வினைமுறைகளைப் பின்பற்றுதல், வழிபாட்டுத் தலங்களின் புனிதத்தைப் பாதுகாத்தல், பசுவதை செய்தல், மசூதிகளின் முன்னால் வாத்திய இசை வாசித்தல் போன்றவை சம்பந்தப்பட்ட சில அடிப்படை உரிமைகளையும் சுதந்திரங்களையும் இந்த மாநாடு வகுத்துத் தந்தது; அவற்றிற்கு சில வரையறைகளையும் நிர்ணயித்துக் கொடுத்தது. எனினும் இந்த ஒற்றுமை மாநாட்டால் இரு சமூகங்களிடையேயும் அமைதியையும் ஒற்றுமையையும் நிலைநாட்ட முடியவில்லை. அச்சமயம் அன்றாட நிகழ்ச்சியாக நடைபெற்று வந்த கொடிய வகுப்புக் கலக சூறாவளியைச் சற்று மட்டுப்படுத்த மட்டுமே அம்மாநாட்டால் முடிந்தது. எனினும் 1925க்கும் 1926க்கும் இடையே மீண்டும் இந்து-முஸ்லீம் கலவரம் மூண்டு, பெரு நெருப்பாக உக்கிர வடிவம் எடுத்தது; தீவிரத்திலும் கொலையிலும் கொள்ளையிலும் கொள்ளியிலும் என்றும் கண்டிராத வேகத்தையும் வீச்சையும் அகோரத் தன்மையையும் படுபயங்கரத்தையும் அடைந்தது. அப்போது வைசிராயாக இருந்த இர்வின் பிரபு இந்தக் கொலைவெறிகளையும் கொடூரங்களையும் கலகங்களையும் கண்டு மிகுந்த அதிர்ச்சி அடைந்தார்;

1. இந்த முயற்சிகள் குறித்த விவரங்களை இந்திய காலாண்டுப் பதிப்பேட்டில் காண்க, 1932, தொகுதி II, பக்கம். 296.

2. பட்டாபி சீதாராமய்யா - காங்கிரஸ் வரலாறு, பக்கம். 532.

1927 ஆகஸ்டு 29 ஆம் நாளன்று மத்திய சட்டமன்றத்தில் அவர் உரையாற்றுகையில் கலவரங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்து அமைதியை நிலைநாட்டும்படி இரு சமூகங்களையும் உணர்ச்சி ததும்பக் கேட்டுக் கொண்டார். அமைதி காக்கும்படி இர்வின் பிரபு விடுத்த வேண்டுகோளைத் தொடர்ந்து மற்றொரு ஒற்றுமை மாநாடு நடைபெற்றது; இது சிம்லா ஒற்றுமை மாநாடு எனப் பெயர் பெற்றது.[1] இந்த ஒற்றுமை மாநாடு 1927 ஆகஸ்டு 30 ஆம் தேதி கூடி, மனநிறைவு அளிக்கக்கூடிய ஓர் உடன்பாடு காணுவதற்கு தலைவர்கள் எடுத்துவரும் முயற்சிகளுக்கு ஆதரவளிக்கும்படி இரு சமூகங்களையும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளும் ஒரு வேண்டுகோளை விடுத்தது. மேலும், மாநாடு ஓர் ஒற்றுமைக் குழுவையும் நியமித்தது. இந்த ஒற்றுமைக் குழு செப்டம்பர் 16 முதல் 22 வரை திரு. ஜின்னாவின் தலைமையில் சிம்லாவில் கூடி விவாதித்தது. எனினும் பசுவதை, மசூதிகளின் முன்னால் வாத்திய இசை வாசித்தல் போன்ற பிரதான பிரச்சினைகளில் எந்த முடிவும் ஏற்படவில்லை; குழுவின் முன்னாலிருந்த இதர பிரச்சினைகளோ தொடப்படக்கூட இல்லை. குழு உடைந்துவிடக்கூடும் என்று சில உறுப்பினர்கள் அஞ்சினர். எதிர்காலத்தில் ஒரு வசதியான தேதியில் குழு மீண்டும் கூட வேண்டும் என்று இந்து உறுப்பினர்கள் வலியுறுத்தினர். குழுவின் முஸ்லீம் உறுப்பினர்களோ ஆரம்பத்தில் தங்களிடையே கருத்து வேறுபாடு கொண்டிருந்தனர். ஆனால் இறுதியில் குழுவைக் கலைத்து விடுவது என்று முடிவு செய்தனர். ஆறு வாரங்களுக்குள் குறிப்பிட்ட பதினோரு உறுப்பினர்கள் கேட்டுக் கொண்டால் குழுவின் கூட்டத்தைத் தலைவர் கூட்ட வேண்டும் என்றும் அவர்கள் தெரிவித்தனர். ஆனால் இத்தகைய வேண்டுகோள் எதுவும் வரவுமில்லை; குழு மீண்டும் ஒருபோதும் கூடவுமில்லை.

இவ்வாறு சிம்லா மாநாடு தோல்வியடைந்தது. அச்சமயம் காங்கிரஸ் மகாசபையின் தலைவராக இருந்த திரு. சீனிவாச அய்யங்கார் இந்துக்களும் முஸ்லீம்களும் அடங்கிய ஒரு விசேட மாநாட்டைக் கூட்டினார். இம்மாநாடு 1927 அக்டோபர் 27, 28 தேதிகளில் கல்கத்தாவில் நடைபெற்றது. கல்கத்தா ஒற்றுமை மாநாடு என இது பெயர் பெற்றது.[2] மிகுந்த சர்ச்சைக்குள்ளான மேலே கூறிய மூன்று பிரச்சினைகள் குறித்து இம்மாநாடு சில தீர்மானங்

1. இந்த மாநாட்டின் நடவடிக்கைகள் குறித்த விவரங்களை 'இந்தியக் காலாண்டுப் பதிவேட்டில்' காண்க. தொகுதி II. பக். 39-50.

2. மாநாட்டு நடவடிக்கைகளுக்கு மேற்படி நூலைக் காண்க. பக். 50-58.

களை நிறைவேற்றிற்று. ஆனால் இந்து மகாசபையும் முஸ்லீம் லீகும் இந்த மாநாட்டில் கலந்து கொள்ளாததால் இத்தீர்மானங்கள் வலு விழந்து போயின.

இந்து-முஸ்லீம் ஒற்றுமை என்பது சாதிக்கப்பட வேண்டிய, சாதிக்கப்படக் கூடிய ஓர் உன்னதமான லட்சியம், இதனைக் கைகூடச் செய்வதற்கு போதிய முயற்சிகள் மேற்கொள்ளப்படாத தற்குத் தலைவர்களைத்தான் குறைகூற வேண்டும் என்ற கருத்து பரவலாக நிலவிய ஒரு காலம் இருக்கத்தான் செய்தது. இந்து-முஸ்லீம் ஒற்றுமையை எய்துவதற்கு அதுவரை எத்தகைய குறிப் பிட்ட முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளாத மௌலானா முகமது அலியே கூட 1911ல் இத்தகைய ஒரு கருத்தை வெளியிட்டார். 1911 ஜனவரி 14 ஆம் தேதியிட்ட **காம்ரேட்** இதழில் எழுதும்போது திரு. முகமது அலி பின்கண்டவாறு குறிப்பிட்டார்:

''இந்தியா ஒன்றுபட்ட நாடு என்ற ஆரவாரக் கூச்சலில் நமக்கு நம்பிக்கை இல்லை. இந்தியா ஒன்றுபட்ட நாடாக இருந்தால் இந்த ஆண்டின் பெருமதிப்புக்குரிய காங்கிரஸ் மகாசபை தலைவரை எங்கிருந்தோ தொலைதூரத்திலிருந்து இழுத்துவர வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? அறுசுவை உணவு உண்பதாகக் கனவு காண்பதால் பசியின் கொடுமை அடங்கிவிடாது. சூட்சுமமிக்க இரசவாதத்தைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அதுபோன்றதுதான் ஆரவாரமிக்க புனிதத் தோற்றமும். இந்தப் போலி சமய பற்றார்வத்தில் இன்னமும் நாம் ஓரளவு நம்பிக்கை வைத்திருக்கிறோம். இதுதான் ஏகபோக மனோபாவத்தை தீவிர தேசபக்தியாக இரசவாதம் செய்கிறது.... நாம் பெரிதும் விரும்பும் நபர், நாம் வெகுவாக அஞ்சும் நபர், நாம் மிகக் குறைந்த அளவே நம்பும் நபர் யாரென்றால் அவர்தான் பொறுமையற்ற, சகிப்புத் தன்மை யற்ற கற்பனாவாதி. பைரனைப் பற்றிக் கெதே கூறும்போது அவர் அதிசயிக்கத்தக்க கவிஞர் என்றார், ஆனால் இது அவர் சிறுவனாக இருந்தபோது என்று நினைவு கூர்ந்தார். மாபெரும் லட்சியங்களையும் அதேசமயம் பெரிதும் பொறுமை யின்மையையும் கொண்ட ஒரு மனிதனை நல்லவரென்றும் கூற முடியவில்லை, கெட்டவர் என்று தள்ளவும் முடியவில்லை. குழப்பமும் தடுமாற்றமும் மிகுந்த இந்த நாட்டில் ஒற்றுமை யைக் கட்டி வளர்ப்பதற்கு எத்தனையோ முயற்சிகள் நல்லெண்ணமிக்க முயற்சிகளும் தீய எண்ணம் கொண்ட

முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்ட போதிலும் பயனில்லை; ஆய்ந்தோய்ந்து செய்யப்படாத முயற்சி மாண்டு மடிந்துபோன கல்லறையில் மிக மலிவான, வாசனையற்ற உணர்வுகள் எனும் மலர்களைத் தூவுவதற்குக் கூட நமக்கு மனமில்லை. உடைந்து போன கண்ணாடித் துண்டுகளை ஒட்ட வைக்கும் தவறை நாம் செய்யக்கூடாது, அவ்வாறு செய்துவிட்டு, பிறகு அது தோல்வி யடைந்ததற்காக கூப்பாடு போடுவதோ அல்லது அந்தக் கண்ணாடி மீது பழிபோடுவதோ கூடாது. வேறுவிதமாகச் சொன்னால், எந்த நிலைமையையும் நாம் துணிகரமாக, அஞ்சாநெஞ்சத்தோடு எதிர்கொள்ள வேண்டும்; எவ்வளவு அருவருப்புத் தருபவையாக இருந்தாலும், விரும்பத்தகாதவை யாக இருந்தாலும், எதார்த்தத்தை, உண்மைகளை மதிக்க வேண்டும், ஒப்புக்கொள்ள வேண்டும். நமக்குப் பிடிக்காத மெய்ம்மைகளை, எதார்த்தங்களைக் காணாதிருப்பது, மூடி மறைப்பது மோசமான ராஜதந்திரமாகும். ஒற்றுமைக்குக் குறுக்கே நிற்கும் ஆழமான தப்பெண்ணங்களையும், பிரிக்கும் போக்குடைய பரந்தகன்ற வேறுபாடுகளையும் நேர்மையாக வும், ஒளிவுமறைவின்றியும் ஒப்புக்கொள்வது ஒற்றுமையை ஈட்டுவதில் வெற்றி பெறுவதற்கு இன்றியமையாததாகும்.''

கடந்த 30 ஆண்டுக்கால வரலாற்றைத் திரும்பிப் பார்க்கும் போது பின்கண்ட கேள்விகள் எழுவது நியாயமானதே: இத்தனை ஆண்டுகளில் இந்து-முஸ்லீம் ஒற்றுமை எய்தப் பெற்றிருக்கிறதா? அந்த ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு முயற்சிகள் ஏதும் மேற் கொள்ளப்படவில்லையா? இவ்வகையில் செய்ய வேண்டிய முயற்சி கள் எவையும் எஞ்சியிருக்கின்றனவா? இந்து-முஸ்லீம் ஒற்றுமை சாதிக்கப்படவில்லை என்பதையே கடந்த 30 ஆண்டுக்கால வரலாறு காட்டுகிறது. இதற்கு மாறாக, தற்போது அவர்களிடையே மிகப் பெரிய பிளவுதான் காணப்படுகிறது; எண்ணிப் பார்க்க முடியாத ஒற்றுமையின்மைதான் நிலவுகிறது. இத்தனைக்கும் இந்த ஒற்றுமையை ஈட்டுவதற்காக உளப்பூர்வமான, இடையறாத முயற்சிகள் எவ்வளவோ செய்யப்பட்டுவிட்டன; அதனை அடை வதற்கு இன்னும் செய்யவேண்டிய முயற்சிகளும் எதுவும் இல்லை; ஒரு தரப்பு இன்னொரு தரப்பிடம் முற்றிலும் சரணடைவது ஒன்று தான் இன்னும் பாக்கி. அடிப்படை நியாயமின்றி நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளும் பழக்கமில்லாத ஒருவர் இந்து-முஸ்லீம் ஒற்றுமை முயற்சி என்பது வெறும் கானல்நீர்தான், அந்த யோசனையை இனி கைவிட்டுவிடுவதுதான் முறையானதாக இருக்கும் என்று

கூறினால் அவரை தோல்வி மனப்பான்மை கொண்டவர் என்றோ, பொறுமையற்ற கற்பனைவாதி என்றோ கூறுவதற்கு எவருக்கும் துணிவு இருக்கமுடியாது. தங்களது கடந்தகால முயற்சிகள் அனைத்தும் பரிதாபகரமாக தோல்வியடைந்துள்ள நிலைமையில், இனியும் இந்த வீணான, பயனற்ற முயற்சியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருக்க போகிறார்களா அல்லது ஒற்றுமை முயற்சியைக் கைவிட்டு, வேறு ஏதேனும் அடிப்படையில் உடன்பாடு காணுவதற்கு யத்தனிக்கப் போகிறார்களா என்பதை இந்துக்கள்தான் சொல்ல வேண்டும்.

இரண்டாவதாக, முஸ்லீம் கண்ணோட்டமும் முற்றிலும் புரட்சிகரமாக மாறியிருக்கிறது என்பதையும் ஒப்புக்கொள்ள வேண் டும். இரு தேச சித்தாந்தத்தை இப்போது வலியுறுத்துபவர்களில், பாகிஸ்தானை உருவாக்குவதுதான் இந்து-முஸ்லீம் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதற்கான ஒரே பரிகாரம் என்று தற்போது அழுத்தம் திருத்தமாகக் கூறிவருபவர்களில் சிலர் கடந்த காலத்தில் என்ன கூறினார்கள் என்பதைக் கருத்திற்கொண்டு பார்த்தால் இந்தப் புரட்சி எவ்வளவு முழுமையானது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இத்தகையவர்களில் திரு. ஜின்னாதான் முதலிடத்தை வகிக்கிறார் என்று கூறவேண்டும். இந்து-முஸ்லீம் பிரச்சினையில் அவரது கருத்துகளில் ஏற்பட்டுள்ள புரட்சியை ஊசலாட்டமானது என்று கூறுவதற்கில்லை என்றாலும் கவனத்தை மிகவும் கவரக்கூடியது என்பதில் ஐயமில்லை, இந்தப் புரட்சியின் நோக்கையும் போக்கை யும் சிறப்பு இயல்பையும் அதன் பரந்தகன்ற தன்மையையும் புரிந்துகொள்ளவேண்டுமானால் அவரது கடந்தகாலக் கூற்று களைத் தெரிந்திருப்பது அவசியம்; அப்போதுதான் தற்போது அவர் கூறிவரும் கருத்துகளுடன் அவற்றை ஒப்பிட்டுப் பார்க்கமுடியும்.

1918ல் ரௌலட் மசோதாவுக்கு ஆட்சேபம் தெரிவித்து, அதற்கு அடையாளமாக திரு.ஜின்னா தமது மத்திய சட்டமன்ற மேலவை உறுப்பினர் பதவியைத் துறந்தார்.[1] அவர் தமது ராஜினாமாவைச் சமர்ப்பித்துப் பேசும்போது பின்கண்டவாறு குறிப்பிட்டார்:

> ''இப்போதுள்ள நிலைமையில், இம்மாமன்றத்திலுள்ள வர்களுக்கு என்னால் எந்தப் பயனுமில்லை என்று உணர்

1. 1923ல் காகினாடாவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் நிகழ்த்தப்பட்ட தலைமை உரையிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோள்.

கிறேன்; இந்த மன்றத்திலிருக்கும் மக்கள் பிரதிநிதிகளது கருத்து களையும் வெளியே உள்ள மக்களது கருத்துகளையும் இவ்வாறு அறவே மதிக்காத, புறக்கணிக்கிற ஓர் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பது என்பது என் சுயமரியாதைக்கு ஏற்புடையதல்ல என்றும் உணர்கிறேன்.''

இந்திய அரசாங்க சீர்திருத்த மசோதாவைப் பரிசீலிப்பதற்காக நாடாளுமன்றம் நியமித்த கூட்டுப்பொறுக்குக் கமிட்டி முன்னர் 1919ல் திரு. ஜின்னா சாட்சியம் அளித்தார். இந்து - முஸ்லீம் பிரச்சினை குறித்து கமிட்டிஉறுப்பினர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்கும் வகையில் அவர் பின்கண்ட கருத்துகளை வெளி யிட்டார்.

## மேஜர் ஆர்ம்ஸ்பி - கோர் விசாரணை

**கேள்வி 3806** - நீங்கள் முஸ்லீம் லீக் சார்பில் ஆஜராகி இருக்கிறீர்கள் - அதாவது இந்தியாவிலுள்ள ஒரே மிகப் பரந்த முகமதிய அமைப்பின் சார்பில் ஆஜராகி இருக்கிறீர்கள், அப்படித்தானே? - ஆம்.

**கே. 3807** - உங்களிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அளித்த பதில்களிலும் சரி, இன்று காலை நீங்கள் நிகழ்த்திய தொடக்க உரை யிலும் சரி இந்தியாவிலுள்ள முகமதியர்களுக்கு விசேட நலன்கள் இருப்பது பற்றி நீங்கள் எதுவும் குறிப்பிடாதது எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது; இது குறித்து நீங்கள் எதுவும் கூறவிரும்பாதது தான் இதற்கு காரணமா? - அப்படியில்லை, சவுத்பரோ குழு இதனை ஏற்றுக்கொண்டதாக நான் கருதியதே இதற்குக் காரணம், தாங்கள் விரும்பும் எந்தக் கேள்விகளையும் குழு உறுப்பினர்கள் கேட்கலாம் என்றும் விட்டுவிட்டேன்.[1] லக்னோ ஒப்பந்தம் கையெழுத்தாவதில் நான் மிக முக்கிய பங்கேற்றேன். அச்சமயம் நான் முசல்மான் களின் பிரதிநிதியாக இருந்தேன்.

**கே.3809** - இந்திய அரசாங்கத்தின் பிரேரணையை நிராகரிக்கும்படி அகில இந்திய முஸ்லீம் லீக் சார்பில் இந்தக் கமிட்டியைக் கேட்டுக் கொள்கிறீர்களா? - வங்காளம் சம்பந்தப்பட்ட இந்திய அரசாங்கத்தின் பிரேரணையை (அதாவது லக்னோ ஒப்பந்தத்தில் தரப்பட்டிருப்

1. மத்திய சட்டமன்றத்தில் மேலவையிலுள்ள இந்திய உறுப்பினர்களின் ஆட்சேபத்தையும் பொருட்படுத்தாமல் இந்த மசோதா சட்டமாக்கப்பட்டு, ''அராஜகம் மற்றும் புரட்சிக் குற்றங்கள்'' சட்டம் XI, 1919 எனப் பெயர்பெற்றது.

பதைவிட வங்காள முஸ்லீம்களுக்கு அதிகப் பிரதிநிதித்துவம் தரும் பிரேரணையை) நிராகரிக்கும்படி உங்களைக் கேட்குமாறு எனக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

**கே. 3810** - இந்தியக் கண்ணோட்டத்திலிருந்து பேசியதாக நீங்கள் கூறினீர்கள். உண்மையிலேயே நீங்கள் ஒரு இந்திய தேசியவாதி என்ற முறையில் பேசுகிறீர்களா? - ஆம், அவ்வாறுதான் பேசுகிறேன்.

**கே. 3811** - இத்தகைய கருத்து கொண்டுள்ள நீங்கள் முகமதிய சமுதாயம் பெற்றிருக்கும் தனி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் விரை விலேயே மறைந்துவிடும் என்று நினைக்கிறீர்களா? - அவ்வாறுதான் நினைக்கிறேன்.

**கே. 3812** - அதாவது, அரசியல் வாழ்வில் முகமதியர்களுக்கும் இந்துக்களுக்குமிடையே உள்ள எத்தகைய வேறுபாடும் கூடிய விரைவில் ஒழிக்கப்படவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள், அப்படித்தானே? - ஆம், அப்படித்தான். அந்த நாள் வருமானால் அதைவிட என்னை மகிழ்ச்சி கொள்ளச் செய்வது வேறு எதுவும் இருக்க முடியாது.

**கே.3813** - இந்தியாவில் மட்டுமன்றி இந்தியாவுக்கு வெளியேயும் இந்திய முகமதியர்களுக்கு அநேக அரசியல் நலன்கள் இருக்கின்றன என்றும், இதனால்தான் அவர்கள் எப்போதும் தங்களை ஒரு தனித்த சமூகமாக நிலைநாட்டிக்கொள்ள ஆவலோடு இருக்கிறார்கள் என்றும் கூறப்படுவது உண்மை என்று நீங்கள் நினைக்கவில்லை அப்படித்தானே? - இதில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. இந்தியாவில் முகமதியர்களுக்கு விசேட அக்கறைக்குரியவை என்று நீங்கள் குறிப்பிடும் விஷயங்கள் வெகு சிலவே இருக்கின்றன - சமய சார்பற்ற விஷயங்களையே இங்கு குறிப்பிடுகிறேன்.

**கே. 3814** - சாதாரணமான முறையில் இதனை இங்கு கூறுகிறேன், இல்லையா ? - எனவேதான் இந்தத் தனி வாக்காளர் தொகுதிகள் மறையும் நாள் வெகு தொலைவில் என்று உண்மையில் நம்புகிறேன், எதிர்பார்க்கிறேன்.

**கே. 3815** - அதேசமயம் இந்திய அரசாங்கத்தின் அயல்நாட்டுக் கொள்கையில் இந்திய முகமதியர்கள் தனி அக்கறை கொண்டிருக் கிறார்கள் என்பது உண்மைதானே? - ஆம், அக்கறை கொண்டிருக்

கிறார்கள். நீங்கள் எடுக்க உத்தேசித்திருக்கும் நடவடிக்கை குறித்து பெரும்பாலான முகமதியர்கள் உறுதியான உணர்ச்சிகளையும் வலுவான கருத்துகளையும் கொண்டுள்ளனர்.

**கே. 3816** - முகமதிய சமுதாயத்தின் சார்பில் பேசும் நீங்கள் இந்திய அரசாங்கம் வாக்காளர்களுக்கு இன்னும் அதிகப் பொறுப்புக்கூறக் கடமைப்பட்டிருக்கவேண்டும் என்பதில் இவ்வளவு ஆர்வம் காட்டுவதற்கு இதுவும் ஒரு காரணமா ? - இல்லை.

**கே. 3817** - பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இருந்து கொண்டே இந்தியா ஓர் அயல்துறைக் கொள்கையைக் கொண்டிருப்பதும், லண்டனிலுள்ள தம்முடைய அமைச்சர்களின் ஆலோசனையின்படி மாட்சிமை தங்கிய மன்னர் வேறொரு அயல்துறைக் கொள்கையைக் கொண்டிருப்பதும் சாத்தியம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? - இங்கு ஒன்றை தெளிவுபடுத்த விரும்புகிறேன். இது அயல்துறைக் கொள்கை சம்பந்தப்பட்ட விஷயமே அல்ல. இது தங்களுக்கு மிகவும் சிக்கலான நிலைமை என்று இந்திய முஸ்லீம்கள் உணர்கிறார்கள். ஆன்மீகரீதியில் சுல்தான் அல்லது கலிஃபாதான் அவர்களுடைய தலைவர்.

**கே.3818** - ஒரு பிரிவினருக்கா? - ஆம், சன்னி பிரிவுக்கு; அந்தப் பிரிவுதான் மிகப்பெரியது; இந்தியா முழுவதிலும் அவர்கள்தான் மிகப் பெரும்பான்மையினராக இருக்கின்றனர். எங்கள் கருத்துபடி கலிஃபாதான் புனித தலங்களின் சட்டப்படியான பாதுகாவலர்; வேறு எவருக்கும் அந்த உரிமை இல்லை. புனித தலங்கள் ஆட்டமன் சாம்ராஜ்யத்திலிருந்து பிரிக்கக்கூடாது, சுல்தானின் தலைமையில் அவை ஆட்டமன் சாம்ராஜ்யத்திலேயே இருக்க வேண்டும் என்று முஸ்லீம்கள் தீவிர கருத்துடையவர்களாக இருக்கின்றனர்.

**கே. 3819** - சீர்திருத்த மசோதாவிலிருந்து அயல்துறைக் கொள்கைக்குத் தாவுவதற்கு நான் விரும்பவில்லை - இது எவ்வகையிலும் அயல்துறைக் கொள்கைக்குச் சம்பந்தப்பட்டதல்ல என்று கூறுகிறேன். உலகெங்குமுள்ள முஸ்லீம் சம்பந்தப்பட்ட அயல்துறை விஷயங்களில் இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் ஒரு குறிப்பிட்ட போக்கைக் கடைப்பிடிப்பார்களா என்பதுதானே நீங்கள் எழுப்பும் கேள்வி.

**கே. 3820** - நான் எழுப்பும் கேள்வி இதுதான்; அயல்துறைக் கொள்கை சம்பந்தமான தங்களது கருத்துகளை இந்திய அரசாங்கத்திடம் வலியுறுத்தி ஏற்கச் செய்வதற்கு மத்திய அரசாங்கத்தின்மீது ஒரு வகையான கட்டுப்பாட்டைக் கொண்டு வருவதற்கு அவர்கள் முயற்சிக்கிறார்களா? - இல்லை.

## திரு. பென்னட்டின் விசாரணை

**கே.3853** - ஒரு வகுப்புக் கலகம் போன்ற ஏதேனும் நிகழும்பட்சத்தில் சட்டம், ஒழுங்கை நிலைநாட்டும் பொறுப்பை அரசின் நிர்வாகத் தரப்பிடம் ஒப்படைப்பது நலம் பயக்குமல்லவா? - என்னைக் கேட்டால் அப்படி நான் நினைக்கவில்லை என்றுதான் கூறுவேன். மேலும், நீங்கள் குறிப்பிடும் சண்டை சச்சரவு போன்ற விஷயங்களுக்குச் செல்ல நான் விரும்பவில்லை.

**கே. 3854** - பழைய குழப்பங்களை எல்லாம் கிண்டிக்கிளறும் நோக்கத்தோடு இந்தக் கேள்வியை நான் கேட்கவில்லை; அவற்றை எல்லாம் மறந்துவிடவே விரும்புகிறேன் - என்னைக் கேட்டால், இந்தக் கலகங்களெல்லாம் சில தப்பெண்ணங்களாலேயே நடைபெறுகின்றன என்று கூறுவேன். காவல்துறையினர் ஒரு தரப்புக்கு ஆதரவாக நடந்துகொள்ளும்போது மற்றதரப்பினர் இயல்பாகவே கோபாவேசமடைகின்றனர். இந்திய சமஸ்தானங்களில் இந்து-முஸ்லீம் கலகங்கள் நடைபெற்றதாக நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள் என்பது எனக்கு நன்கு தெரியும். பெயரைக் குறிப்பிடாமல் ஒரு சம்பவத்தை கமிட்டியிடம் கூறுவது தவறில்லை என்று நினைக்கிறேன். ஒரு சமயம் சமஸ்தான மன்னர் ஒருவரைச் சந்திக்க நேர்ந்த போது, ''சமஸ்தானங்களில் எல்லாம் இந்து - முஸ்லீம் கலவரங்கள் நடைபெறுவதில்லையே அதன் இரகசியம் என்ன?'' என்று அவரிடம் கேட்டேன். அதற்கு அவர் பின்வருமாறு பதிலளித்தார்: ''எங்கேயேனும் குழப்பம் ஏற்பட்டால் காவல்துறையினர் எதாவது ஒரு தரப்புக்குச் சாதகமாக நடந்துகொள்வதுதான் இதற்குப் பிரதான காரணம் என்பது தெரியவந்தது. எனவே இதற்கு நாங்கள் கண்டுபிடித்த ஒரே பரிகாரம் அபாய அறிகுறி தென்பட்ட மாத்திரத்திலேயே சம்பந்தப்பட்ட காவல்துறை அதிகாரியை அங்கிருந்து வேறு இடத்துக்கு மாற்றிவிடுவோம். அத்துடன் பிரச்சினை முடிந்துவிடும்.''

**கே. 3855** - நீங்கள் கூறியது பயனுள்ள தகவல் என்பதில் ஐய மில்லை. ஆனால் இந்தக் கலவரங்கள் இனக்கலவரங்களாக, ஒருபுறம் முகமதியர்களும் இன்னொருபுறம் இந்துக்களும் ஈடுபடும் கல வரங்களாகவே இருந்து வருகின்றன. இத்தகைய சந்தர்ப்பத்தில் ஏதேனும் ஒரு சமூகத்தின் அமைச்சர் சட்டம், ஒழுங்கைப் பரா மரிக்கும் பொறுப்பை ஏற்பது உசிதமாக இருக்குமல்லவா? - நிச்சயமாக,

**கே. 3856** - உசிதமாக இருக்குமா? - நான் வேறுவிதமாக நினைத் தால் எனக்கே களங்கம் தேடிக்கொள்பவன் ஆவேன். நான் ஓர் அமைச்சராக இருந்தால் நீதியையும் நியாயத்தையும் நேர்மையை யும் தளர வேறு எதையும் அணுவளவும் பொருட்படுத்த மாட்டேன் என்று அச்சமின்றிக் கூறுவேன்.

**கே.3857** - எதிர்த் தரப்புக்கு நீங்கள் நிச்சயமாக நியாயம் வழங்கு வீர்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது; எனினும் அப்போதும் கூட அகநிலை அம்சம் என்று ஒன்றிருப்பதை மறந்து விடக்கூடாது. ஐயுற்ற மனப்பான்மையுடன், தங்களுக்குப் பார பட்சம் காட்டப்படுவதாக மக்கள் நினைக்க வாய்ப்பு உண்டல்லவா? - மக்களில் ஏதேனும் ஒரு தரப்பினர் தங்களுக்கு அநீதி இழைக்கப் பட்டதாகவோ, நியாயம் வழங்கப்படவில்லை என்றோ கருதுவார் கள் என்று கூறுகிறீர்களா?

**கே.3858** - ஆம், இது ஒருபுறமிருக்க, புறநிலை அம்சம் என்று ஒன்றிருக்கிறதல்லவா? - இதற்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: இந்த இடர்ப்பாடுகள் எல்லாம் துரிதமாக மறைந்துவருகின்றன. வெகு அண்மையில் கூட பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த தாணா மாவட்டம் முழுவதிலும் கீழிருந்து மேலே வரை ஒவ்வொரு அதிகாரி யும் இந்திய அதிகாரியாகவே இருந்தார், அவர்களில் ஒருவர் கூட முகமதியர் இல்லை, எல்லோருமே இந்துக்கள்தான், அப்படி யிருந்தும் எந்த ஒரு முறையீடு ஒருபோதும் என் காதுகளுக்கு எட்டியதில்லை. அண்மையில் கூட இதே நிலைமைதான் அங்கு காணப்பட்டது. நீங்கள் என்னிடம் இப்போது கூறியது போன்ற பாரபட்ச உணர்வு பத்து ஆண்டுகளுக்கு முன்னர் இருந்திருக்கக்கூடும் என்பதை ஒப்புக் கொள்கிறேன். எனினும் அந்த நிலை இப்போது வெகு வேகமாக மாறிவருகிறது.

## இஸ்லிங்டன் பிரபுவின் விசாரணை

***கே.3892*** - *சற்று முன்னர் வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தைப் பற்றிக் கூறினீர்கள்; இந்துக்களுடன் தங்களுக்குரிய பிரதிநிதித் துவத்தை முகமதியர்கள் பெறும்பொருட்டு ஏற்கெனவே உள்ளதும் இனிமேல் புகுத்தப்படுவதற்கு உத்தேசிக்கப்பட்டிருப்பதுமான வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை ஒரு சில வருடங்களில் ஒழித்துக் கட்டிவிட முடியும் என்று நீங்கள் நம்புவதாக மேஜர் ஆர்ம்ஸ்பி கோாரின் கேள்விக்கு நீங்கள் அளித்த பதிலில் கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். இந்த மகிழ்ச்சிகரமான நிலை எப்போது உருவாகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? - இது சம்பந்தமான ஒரு சில விவரங்களை மட்டுமே உங்களுக்கு என்னால் தரமுடியும்: இதற்கும் அதிகமாக என்னால் எதுவும் கூற இயலாது: நான் தரும் பின்கண்ட விவரங்களிலிருந்து நிலையை ஓரளவு நீங்கள் புரிந்து கொள்ளமுடியும்; 1913ல் ஆக்ராவில் முஸ்லீம் லீக் மாநாடு நடைபெற்றது; தனி வாக்காளர் தொகுதிகளை முசல்மான்கள் வலி யுறுத்தவேண்டுமா, வேண்டாமா என்பதைச் சோதித்துப் பார்க்க அச்சமயம் விரும்பினோம்; இது சம்பந்தமாக ஒருவாக்கெடுப்பு நடத்தினோம்; அந்த வாக்கெடுப்பு மாகாணங்கள் அடிப்படை யிலேயே நடைபெற்றது; ஒவ்வொரு மாகாணத்துக்கும் குறிப்பிட்ட ஒரு சில வாக்குகளே ஒதுக்கப்பட்டன; இந்த வாக்கெடுப்பில் தனித்தொகுதிகளை ஒழிப்பதற்கு 40 வாக்குகளும், அவற்றைத் தொடர்ந்து பராமரிப்பதற்கு ஆதரவாக 80 சொச்சம் வாக்குகளும் - துல்லியமான எண்ணிக்கை எனக்கு நினைவில்லை - கிடைத்தன. இது நடைபெற்றது 1913 ஆம் ஆண்டில், இதற்குப் பின்னர் இந்தப் பிரச்சினை குறித்து பல்வேறு முசல்மான் தலைவர்களுடன் விவா திப்பதற்கு அநேக வாய்ப்புகள் கிட்டின; இந்த விஷயத்தில் அவர் களது கண்ணோட்டத்தில் மாற்றம் ஏற்பட்டு வருவதைக் கவ னித்தேன். வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் எப்போது ஒழியும் என்பதைத் திட்டவட்டமாகக் கூற இயலாது; ஆனால் அது நீண்ட காலம் நீடிக்காது என்றே கருதுகிறேன். அநேகமாக அடுத்த விசா ரணை இந்தப் பிரச்சினை பற்றியதாகக்கூட இருக்கக்கூடும்.*

***கே.3893*** - *உங்களை முழுமையாக இணைத்துக் கொள்ளும்படி அடுத்த விசாரணையில் முகமதியர்கள் கேட்பார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்கள், அப்படித்தானே? - ஆம், அடுத்த விசாரணை அநேக மாக இதுபோன்ற ஒரு விஷயம் பற்றி இருக்கலாம்.*

*திரு.ஜின்னா முஸ்லீம் லீக் சார்பில் ஒரு சாட்சியாக ஆஜரான போதிலும், முஸ்லீம் லீகில் தாம் உறுப்பினராக இருப்பதை*

நாட்டிலுள்ள இதர அரசியல் நிறுவனங்களுடன் தமக்குள்ள தொடர்புக்கு ஓர் இடையூறாக இருக்க அவர் அனுமதிக்கவில்லை. திரு.ஜின்னா தன்னாட்சிக் கழகத்திலும் காங்கிரசிலும் உறுப்பின ராக இருந்துவந்தார். கூட்டு நாடாளுமன்றக் கமிட்டியின் முன் சாட்சியம் அளித்தபோது அவர் கூறியது போன்று இந்த மூன்று அமைப்புகளிலும் அவர் உறுப்பினராக இருந்தபோதிலும் காங்கிர சுடனும் முஸ்லீம் லீகுடனும் பகிரங்கமாகவே கருத்துவேறுபாடு கொண்டிருந்தார்; தன்னாட்சிக் கழகத்தின் கருத்துகள் சிலவற்றிலும் அவருக்கு உடன்பாடில்லை. அவர் நடைமுறையில் ஒரு சுயேச்சை யாளராக, ஆனால் தேசியவாதியாக இருந்தார்; கிலாபத் முசல் மான்களுடன் அவருக்கிருந்த தொடர்புகளிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம். 1920ல் முசல்மான்கள் கிலாபத் மாநாடு என்னும் அமைப்பைத் தொடங்கினர். வெகுவிரைவிலேயே அது வலிமை மிக்க நிறுவனமாகப் பரிணமித்ததால் லீகின் செல்வாக்கு 'சடசட' வெனச் சரிந்தது; மரணம் நேரிடாமல் உணர்ச்சியற்றுக் கிடக்கும் நிலையிலேயே அது இருந்து வந்தது; இந்த நிலை 1924 வரை நீடித்தது; இந்த ஆண்டுகளில் எந்த ஒரு முஸ்லீம் தலைவரும் அவர் கிலாபத் மாநாட்டு உறுப்பினராக இருந்தாலொழிய முஸ்லீம் மக்களிடையே முஸ்லீம் மேடையிலிருந்து பேசமுடியாது. முஸ்லீம்கள் முஸ்லீம்களைச் சந்திக்கும் பேச்சுமேடையாக அது ஒன்று மட்டும் அப்போது இருந்து வந்தது. அந்த நிலைமையிலும்கூட கிலாபத் மாநாட்டில் சேருவதற்கு திரு.ஜின்னா மறுத்துவிட்டார். மரபு வழுவாத, உறுதியான முஸ்லீம் கோட்பாடு எனும் சமய நெருப்பு தன்னுள் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருப்பதாக இப்போது கூறும் இதே திரு.ஜின்னா அப்போது பெயரளவிலான ஒரு முஸ்லீ மாக மட்டுமே இருந்துவந்ததே இதற்குக் காரணம் என்பது தெள்ளத் தெளிவு. ஆனால் அவர் கிலாபத்தில் சேராததற்கு வேறொரு உண்மை யான காரணமும் இருந்தது; அதாவது இந்திய முசல்மான்கள் இந்தியா வுக்கு வெளியே உள்ள முஸ்லீம்கள் சம்பந்தமான விவகாரங்களில் ஈடுபட்டிருந்தது அவருக்கு உடன்பாடாக இல்லை.

ஒத்துழையாமை, சட்டமறுப்பு, சட்டமன்ற பகிஷ்கரிப்புத் திட்டங்களை காங்கிரஸ் ஏற்றுக்கொண்டபிறகு திரு.ஜின்னா அக் கட்சியிலிருந்து விலகினார். அதன் கடுமையான விமர்சகரானார்; ஆனால் காங்கிரஸ் ஓர் இந்துக்களின் அமைப்பு என்று அவர் எப்போதும் குற்றம் சாட்டியதில்லை. இத்தகைய ஒரு கருத்தை அவர் கொண்டிருப்பதாக அவருடைய எதிரிகள் ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டபோது அதை அவர் வன்மையாக ஆட்சேபித்தார். அச்சமயம்

அவர் டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகைக்கு எழுதிய கடிதத்தை இன்றும் பார்க்கலாம். காங்கிரஸ் பற்றி திரு.ஜின்னா இப்போது கொண்டுள்ள கருத்துக்கும் கடந்தகாலத்தில் கொண்டிருந்த கருத்துக்கும் எவ்வளவு மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு இருக்கிறது என்பதை இக்கடிதத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம், அந்தக் கடிதம்[1] வருமாறு:

''டைம்ஸ் ஆப் இந்தியா'' ஆசிரியருக்கு

ஐயா - நான் கூறியதாக வந்திருக்கும் ஒரு கருத்துக்கு மீண்டும் மறுப்பு தெரிவிக்க விரும்புகிறேன். இதற்கு நீங்கள் பிரதானம் கொடுத்து பலமுறை பிரசுரித்திருக்கிறீர்கள். இப்போதும் அக்டோபர் 1-ந் தேதியிட்ட உங்கள் இதழில் இரண்டாவது பத்தியில் 'காங்கிரசை 'ஓர் இந்து அமைப்பு' என்று நான் பழித்துரைத்ததாக உங்கள் நிருபர் 'பங்கரின்' செய்தி வெளிவந்திருக்கிறது. எனது உரை திரித்துத் தவறாக வெளிவந்திருக்கிறது. எனது உரை திரித்துத் தவறாகப் பிரசுரிக்கப்பட்டதுமே அதற்குப் பகிரங்கமாக மறுப்பு தெரிவித்தேன். ஆனால் எனது மறுப்பு உங்கள் இதழில் இடம்பெறவில்லை. எனவே, இந்தக் கடிதத்தையேனும் பிரசுரிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.''

கிலாபத் கிளர்ச்சி பெரும் சூறாவளியாகச் சுழன்றடித்து ஓய்ந்தபிறகு, இந்தியாவின் உள்நாட்டு அரசியலுக்குத் திரும்புவதில் ஆர்வம் காட்டினர்; இதனால் முஸ்லீம் லீக் புத்துயிர் பெற்றது. 1924 டிசம்பர் 30 ஆம் தேதி பம்பாயில் திரு.ராஸா அலி தலைமையில் நடைபெற்ற முஸ்லீம்லீக் மாநாடு எழுச்சி மிக்கதாக இருந்தது. திரு. ஜின்னாவும் திரு.முகமது அலியும் பங்கு கொண்டனர்.[2]

இந்த மாநாட்டில் ஒரு முக்கியமான தீர்மானம் நிறைவேற்றபட்டது. முஸ்லீம் சமூகத்தின் தேவைகளைப்பூர்த்தி செய்யக்

1. டைம்ஸ் ஆப் இந்தியாவில் இக் கடிதம் பிரசுரமான தேதி 3.10.25.

2. காகினாடா காங்கிரஸ் மாநாட்டுக்குத் தலைமை தாங்கிப்பேசும்போது திரு.முகமது அலி நகைச்சுவையோடு குறிப்பிட்டதாவது: திரு. ஜின்னா விரைவிலேயே நம்முடன் வந்து சேர்ந்துகொள்வார் (கைதட்டல்). ஒரு நாத்திகர் காஃபிராகிறார், ஒரு காஃபிர் நாத்திகராகிறார். அதுபோன்றே திரு. ஜின்னா காங்கிரசிலிருந்த அந்நாட்களில் நான் அவருடன் இல்லை; பிறகு நான் காங்கிரசிலும் முஸ்லீம் லீகிலும் இருந்தபோது அவர் என்னிடமிருந்து விலகிஇருந்தார். என்றேனும் ஒரு நாள் நாங்கள் சமரசமாகிவிடுவோம் என்று நம்புகிறேன் (சிரிப்பு)''

கூடிய ''ஓர் ஒன்றுபட்ட, முழுநிறைவான, நடைமுறைச் செயற்பாடுகள் திட்டம்'' ஒன்றை உருவாக்கும் நோக்கத்தோடு பலதரப்பட்ட அரசியல் எண்ணங்களையும் பிரதிபலிக்கும் இந்தியாவின் பல்வேறு முஸ்லீம் அமைப்புகளின் பிரதிநிதிகள் கூடிய விரைவில் டில்லியிலோ அல்லது வேறு எந்த மைய இடத்திலோ கூடுவது உசிதமாக இருக்கும் என்று அந்தத் தீர்மானம் வலியுறுத்தியது. அப்போது தீர்மானத்தை விளக்கி திரு. ஜின்னா பேசியதாவது:[1]

> ''முஸ்லீம் சமூகத்தை ஒன்றுதிரட்டுவதன் குறிக்கோள் இந்து சமூகத்துடன் சச்சரவிடுவதற்கல்ல; மாறாக தாயகத்திற்காக அதனுடன் ஒன்றுபட்டு ஒத்துழைப்பதற்காகவே முஸ்லீம் சமூகம் அணிதிரட்டப்படுகிறது. முஸ்லீம்கள் அவ்வாறு அணிதிரண்டதும் இந்துமகாசபையுடன் கைகோத்து, இந்துக்களும் முகமதியர்களும் சகோதரர்கள் என்று உலகுக்குப் பறைசாற்றுவர்.''

முஸ்லீம் சமூகத்தின் அரசியல் கோரிக்கைகளை வகுத்தளிப்பதற்காக பிரபல முசல்மான்களைக் கொண்ட ஒரு குழுவை நியமிக்கும் தீர்மானத்தையும் இதே மாநாட்டில் லீக் ஏற்றுக் கொண்டது. இது சம்பந்தமான தீர்மானத்தை திரு. ஜின்னாவே முன்மொழிந்தார். தீர்மானத்தை முன்மொழிந்து அவர் பேசியதாவது:[1]

> ''லீகின் மேடையில் நான் ஒரு வகுப்புவாதியாக காட்சியளிப்பதாகக் கூறப்படும் குற்றச்சாட்டை மறுக்கிறேன். என்றும்போல் நான் ஒரு தேசியவாதிதான என்று உறுதி கூற விரும்புகிறேன். இங்கு வருவதற்குத் தனிப்பட்ட முறையில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. மிகச்சிறந்த, மிகவும் தகுதி வாய்ந்தவர்களே நாட்டின் சட்டமன்றங்களுக்குப் பிரதிநிதிகளாகச் செல்லவேண்டும் (கேளுங்கள், கேளுங்கள் மற்றும் கையொலி). ஆனால் துரதிர்ஷ்டவசமாக என்னுடைய முஸ்லீம் சகோதரர்கள் இந்த அளவுக்குச் செல்லத் தயாராக இல்லை. இந்த நிலைமையைப் பார்த்துக் கண்களை மூடிக் கொண்டிருக்க என்னால் முடியாது. சட்டமன்றங்களிலும் நாட்டின் பணித்துறைகளிலும் தங்களுக்குத் தனிப்பிரதிநிதித்

1. டைம்ஸ் ஆப் இந்தியா செய்தியிலிருந்து, ஜனவரி 1, 1925
2. இந்தியக் காலாண்டுப் பதிவேடு, 1924, தொகுதி II, பக். 48,

துவம் தரப்படவேண்டும் என்று விரும்பும் முஸ்லீம்கள் ஏராளமானோர் உள்ளனர். அதேசமயம் அவர்கள் வகுப்பு ஒற்றுமையைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் அந்த ஒற்றுமை எங்கே? ஏதேனும் ஒரு தகுந்த உடன்பாட்டின் மூலம்தான் இதனை எய்தமுடியும். நமது சோதர சமயத்தினர் சுயராஜ் யத்திற்குப் போராடத் தயாராக இருக்கின்றனர் (பலத்த கரவொலி). ஆனால் சில பாதுகாப்புகள் வேண்டுமென்று விரும்புகின்றனர். எனது கருத்து எவ்வாறு இருந்தபோதிலும் செயல்முறை அரசியல்வாதி என்ற முறையில் நிலைமையை கூர்ந்து ஆராயவேண்டியுள்ளது. ஒற்றுமைக்கு உண்மையாகத் தடையாக இருப்பவர்கள் இரு சமூகத்தினருமல்ல, இரு தரப்பிலுமுள்ள சில விஷமிகளே இந்த இழிசெயலைப் புரிந்து வருகின்றனர்.''

இவ்வாறு அவர் ஒற்றுமைக்குக் கேடு விளைவிப்பவர் களை மிகக் கடுமையான மொழியில் கண்டிக்க அணுவளவும் தயங்க வில்லை; ஒரு நேர்மையான தேசியவாதியிடமிருந்துதான் இத்தகைய எரிச்சரம் ஒத்த கண்டனம் வெளிவரமுடியும். 1924 மே 24 ஆம் தேதி லாகூரில் நடைபெற்ற லீக் மாநாட்டுத் தலைவர் என்ற முறையில் அவர் கூறியதாவது:[1]

''நாம் சுதந்திர மக்களாக இருக்கவிரும்பினால் ஒன்று படுவோம். அவ்வாறன்றி அதிகாரவர்க்கத்தின் அடிமைகளாகத் தொடர்ந்து இருக்க வேண்டுமானால் ஒருவர் குரல்வளையை ஒருவர் பிடித்துக்கொண்டு, சிண்டுப்பிடித்துக் கொண்டிருப்போம், சண்டை போட்டுக் கொண்டிருப்போம், அற்ப விஷயங்களில் நமது கீழ்த் தரமான வீண் பெருமையைப் பறைசாற்றிக்கொண்டு அகமகிழ்ந் திருப்போம்.''

1925 ஆம் ஆண்டிலும் பின்னர் 1928 ஆம் ஆண்டிலும் நடைபெற்ற இரண்டு அனைத்துக்கட்சி மாநாடுகளிலும் கூட்டு வாக்காளர் தொகுதிகள் அடிப்படையில் இந்து - முஸ்லீம் பிரச் சினைக்குத் தீர்வு காண திரு.ஜின்னா தயாராக இருந்தார். 1927ல் லீக் மேடையிலிருந்து அவர் பின்கண்டவாறு பகிரங்கமாகவே கூறினார்.[2]

1. இந்தியக் காலாண்டுப் பதிவேடு, 1924, தொகுதி I, பக்.658

2. மேற்படி நூல், 1927, தொகுதி I, பக்.37

''தாங்கள் பாதுகாப்பாக இருப்பதற்கு தனி வாக்காளர் தொகுதிதான் ஒரே வழி என்று மிகப்பெரும்பாலான முசல் மான்கள் உறுதியாகவும் மனப்பூர்வமாகவும் நம்பினாலும் நான் தனி வாக்காளர் தொகுதிகளை ஆதரிக்கவில்லை.''

1928ல் சைமன் கமிஷன் பகிஷ்காரத்தில் காங்கிரசுடன் இணைந்து திரு.ஜின்னா பங்கு கொண்டார். இந்துக்களும் முஸ்லீம் களும் ஓர் உடன்பாடு காணுவதில் தோல்வியடைந்தபோதிலும், லீக் இரண்டாக உடையும் நிலைமை ஏற்பட்டபோதிலும் அவர் சற்றும் தயங்காமல் இந்தப் பகிஷ்காரத்தில் பங்கு கொண்டார்.

வட்டமேசை மாநாடு என்னும் கப்பல் வகுப்புவாதப் பாறை மீது மோதி உடையவிருந்த தருணத்திலும் தான் ஒரு வகுப்பு வாதியாக சித்தரிக்கப்படுவதைக் கண்டு பெரிதும் வெகுண்டெழுந் தார்; மாநாட்டுத் தோல்விக்குத் தான்தான் காரணம் என்ற குற்றச் சாட்டையும் வன்மையாக மறுத்தார்; வகுப்புப் பிரச்சினையை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மத்தியஸ்துக்கு விடத் தான் தயாராக இருப்பதாகவும் அறிவித்தார். 1931 ஆகஸ்டு 8 ஆம் தேதி உ.பி.முஸ்லீம் மாநாட்டில் பேசும்போது திரு.ஜின்னா கூறியதாவது:[1]

''முஸ்லீம்கள் ஒன்றுபட்டிருப்பது தற்போது முற்றிலும் அத்தியாவசியமானதும் மிக முக்கியமானதுமாகும் என்பதை முதலாவதாக உங்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். உங்கள் வேற்றுமைகளை எல்லாம் மறந்து ஓரணி யில் திரண்டு இந்த உட்பகைப் போருக்கு முடிவு கட்டுங்கள். டாக்டர் அன்சாரி, திரு.டி.ஏ.கே ஷெர்வானி, மௌலானா அபுல் கலாம் ஆசாத், டாக்டர் சையத் முகமது போன்றோர் முன்னிலையில் இதனை உணர்ச்சித் துடிப்போடு வலியுறுத் தினேன், என்னால் முடிந்தளவுக்கு இறைஞ்சிக் கேட்டுக் கொண்டேன். இந்தியாவின் கடற்கரையை விட்டு நான் செல்லும்போது இந்த நற்செய்தியைக் கேட்கமுடியும் என்று நம்புகிறேன்; நம்மில் எத்தனை வேறுபாடுகள் இருந்த போதிலும், நம்முடைய நம்பிக்கைகளும் கோட்பாடுகளும் எத்தகையவையாக இருந்தபோதிலும் நமக்குள் சச்சரவிட்டுக் கொள்வதற்கு இது தருணமல்ல.

1. மேற்படி நூல், 1931, தொகுதி II, பக், 230-231.

''மற்றொரு விஷயத்தையும் இங்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பல்வேறு வழிகளிலும் என்னை இடை யறாது திரித்துக் காட்டுவதில் முனைந்து ஈடுபட்டிருக்கும் குறிப்பிட்ட சில பத்திரிகைகள் இருக்கின்றன. குறிப்பிட்ட சில இந்துப்பிரிவினர் இருக்கின்றனர். நான் இன்று காலை திரு.காந்தியின் உரையைப் படித்துக்கொண்டிருந்தேன்; தாம் இந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒன்றாக நேசிப்பதாக அதில் அவர் குறிப்பிட்டிருந்தார். இந்த மேடையில் நின்று கொண்டு நான் மீண்டும் கூறுகிறேன். இவ்விதம் உரிமை கொண்டாட என்னால் முடியாது என்றாலும் இரு சமூகங்களுக் கும் நீதி வழங்கப்படவேண்டும் என்று உளப்பூர்வமாகவும் நேர்மையாகவும் வலியுறுத்துகிறேன்.''

தொடர்ந்து திரு.ஜின்னா கூறியதாவது: ''எனது மனதுக்கு மிக முக்கியமான பிரச்சினையாகத் தோன்றும் இந்து-முஸ்லீம் உடன்பாட்டுப் பிரச்சினையைப் பொறுத்தவரையில், பஞ்சாபி லும் வங்காளத்திலும் பெறும்பான்மையான இடங்களைப் பெறுவதற்கு முஸ்லீம்களுக்கு உரிமை உண்டு என்பதை இந்துக்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கருதுகிறேன்; இது ஏற்றுக் கொள்ளப்படுமானால் வெகு விரைவிலேயே ஓர் உடன்பாட்டுக்கு வரமுடியும் என்று நம்புகிறேன்.

''இங்கு எழும் அடுத்த பிரச்சினை தனிவாக்காளர் தொகுதி களா, கூட்டு வாக்காளர் தொகுதிகளா என்பதாகும். பஞ்சாபி லும் வங்காளத்திலும் முஸ்லீம்களுக்குப் பெரும்பான்மை இடங்கள் வழங்க ஒப்புக்கொள்ளப்படுமானால் கூட்டு வாக் காளர் தொகுதிகள் அடிப்படையில் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதையே தனிப்பட்ட முறையில் நான் விரும்புவேன் (கரவொலி) என்பது உங்களில் பெரும்பாலோருக்குத் தெரியும். ஆனால் ஏராளமான முஸ்லீம்கள் - பெரும்பான்மையான முஸ்லீம்கள் என்று கருதுகிறேன் - தனிவாக்காளர் தொகுதிகள் தான் வேண்டுமென வலியுறுத்தி வருவதையும் நான் அறிவேன். இங்கு எனது நிலையைத் தெளிவுபடுத்துவது உகந்தது; தனி வாக்காளர் தொகுதிகள் அடிப்படையில்கூட உடன்பாடு காணலாம் என்று கருதுகிறேன். புதிய அரசியலமைப்புச் சட்டப்படி நாம் அனைவரும் செயல்பட ஆரம்பிக்கும்போது, இந்துக்களும் முஸ்லீம்களும் அவநம்பிக்கையையும், அச்சத் தையும், ஐயப்பாடுகளையும் பரஸ்பரம் ஒழித்துக்கட்டும்போது,

அவர்கள் தங்கள் சுதந்திரத்தைப் பெறும்போது நாம் நெருக்கடி நிலையைச் சமாளிக்கும் ஆற்றலைப் பெறுவோம்; அப்போது நம்மில் பெரும்பாலோர் நினைப்பது போலன்றி தனி வாக்காளர் தொகுதி வெகு விரைவிலேயே மறைந்துவிடும்.

''எனவே, முதலில் முஸ்லீம்களுக்கிடையே இணக்கமும் அமைதியும் ஏற்படவேண்டும் என்று விரும்புகிறேன்; அதே போன்று, இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கும் இடையேயும் உடன்பாடும் அமைதியும் ஏற்படவேண்டுமென்று விழை கிறேன். இது வாக்குவாதத்தில் ஈடுபடும் நேரமல்ல, பிரசாரம் செய்துகொண்டிருப்பதற்கும் நேரமல்ல, இரு சமூகங்களும் பரஸ்பரம் பகைமை உணர்வுகளை வளர்த்துக் கொள்வ தற்கும் நேரமல்ல, ஏனென்றால் பகைவன் நம் இருவர் வீட்டு வாசலிலும் நின்றுகொண்டிருக்கிறான், இந்நிலைமையில் இந்து-முஸ்லீம் பிரச்சினை தீர்க்கப்படாவிட்டால் ஆங்கி லேயன் மத்தியஸ்தம் செய்யவேண்டிவரும், அவ்விதம் மத்தி யஸ்தம் செய்பவன் குரங்கு மத்தியஸ்தம் செய்த கதையில் அதிகாரத்தின் பெரும் பகுதியைச் சுருட்டிக் கொள்வான் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்துக்கள் என்னை நிந்திக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன். முஸ்லீம்கள் விரும்புவதை எல்லாம் கொடுக்கத் தாம் தயாராக இருப்பதாகக் காந்தியே கூறுகிறார். ஆனால் நான் அவ்வாறெல்லாம் இந்துக்களிடம் கேட்கவில்லை; முஸ்லீம்கள் கேட்கும் 14 கோரிக்கைகளை அவர்கள் நிறைவேற்றினால் போதும், இது திரு.காந்தி தருவ தற்கு சித்தமாக இருக்கும் 'தொகை குறிப்பிடப்படாத காசோலை' யைவிட மிகமிகக் குறைவு. எங்களுக்கு வெற்று காசோலை வேண்டாம், அவர்கள் ஏன் எங்கள் 14 அம்சக் கோரிக்கைகளுக்கு ஒப்புதல் அளிக்கக்கூடாது? 'எங்களுக்கு வெற்றுக் காசோலைக் கொடுங்கள்' என்று பண்டிட் ஜவஹர்லால் நேரு கூறுகிறார்; 'எங்களிடம் ஒரு வெற்றுக் காசோலையைத் தாருங்கள், சுதேசிப் பேனாவைக் கொண்டு சுதேசிக் காகிதத்தில் கையெழுத்திட்டுத் தருகிறோம்' என்று திரு.பட்டேல் கூறுகிறார். இவர்கள் எல்லாம் வகுப்புவாதிகள் இல்லை, நான்தான் வகுப்புவாதி! ஒவ்வொருவரையுமே தவறாக எடை போடாதீர்கள் என்று இந்துக்களுக்குக் கூறு கிறேன். இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டு நம் நாட்டின் கோடானு கோடி மக்களுக்கு அமைதியையும் நல்வாழ்வையும் வளத்தையும் மகிழ்வையும் கொண்டுவரும் நிலைமையில் இருப்போம் என்று நம்புகிறேன்''

''மற்றொரு விஷயத்தையும் இங்கு உங்களுக்குக் கூற விரும்புகிறேன், அது நான் என்ன செய்தேன் என்பது பற்றியதாகும். வட்டமேசை மாநாட்டின்போது ஒரே ஒரு கோட்பாட்டைத்தான் நான் கடைப்பிடித்தேன்; நான் பம்பாய் கடற்கரையைவிட்டுச் செல்லும்போது இந்தியாவின் நலன்களைப் புனிதமானவையாகக் கருதுவேன் என்று மக்களுக்குக் கூறினேன், அந்தக் கோட்பாட்டைத்தான் அங்கு நான் பின்பற்றினேன். நான் ஏதோ தற்பெருமை பேசுவதாக நினைக்க வேண்டாம். ஏனென்றால் வட்டமேசை மாநாடு பற்றிய விவரங்கள் தற்போது ஒரு திறந்த புத்தகமாகிவிட்டன, அவற்றை யார் வேண்டுமானாலும் படிக்கலாம், மாநாட்டு நடவடிக்கைகளைப் படித்தாலே நான் கூறுவது எவ்வளவு தூரம் உண்மை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அந்த மாநாட்டில் என் கடமையைச் செய்துவிட்டேன்; நான் இந்திய மண்ணில் தந்துவிட்டுச் சென்ற வாக்குறுதியை கடமை உணர்வோடும் பற்றுறுதியோடும் முழு அளவுக்குக் காப்பாற்றி விட்டேன். நான் செய்ததைவிடவும் அதிகமாக காங்கிரசோ, திரு. காந்தியோ சாதிக்க முடியுமானால் அதனை மனதாரப் பாராட்டத் தயங்கமாட்டேன்.

திரு. ஜின்னா முடிவாகக் கூறும்போது, ''இரு சமூகத்தினரும் ஓர் உடன்பாடு காணுவது அவசியம், என்றென்றும் நண்பர்களாக இருப்பது முக்கியம், எனவே, இது சம்பந்தமாக நடைபெறக்கூடிய எந்தப் பேச்சுவார்த்தைகளின் போதும் நிதானத்தையும், விவேகத்தையும், இணக்கத்தையும் கடைப்பிடிக்க வேண்டுமென்று முஸ்லீம்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.''

முஸ்லீம் சித்தாந்தத்தில் மாற்றம் ஏற்பட்டிருப்பதை உறுதிப்படுத்தக்கூடிய மேலும் ஒரு சான்றாக தற்போது திரு.ஜின்னாவின் ஆதரவாளராகவும், பாகிஸ்தான் கோரிக்கையை உறுதியாக ஆதரிப்பவருமான திரு. பர்கத் அலி ஒரு சமயத்தில் அத்தகைய கருத்துக்களைக் கொண்டிருந்தார் என்பதை இங்கு கூறுவது பொருத்தமாகவும் உசிதமாகவும் இருக்கும் என்று நினைக்கிறேன்.

சைமன் கமிஷனுடன் ஒத்துழைப்பது சம்பந்தமாக முஸ்லீம் லீக் பிளவுபட்டபோது ஒரு பிரிவுக்கு சர் முகமது ஷாஃபி தலைவராக இருந்தார், இப்பிரிவினர் சைமன் கமிஷனுடன் ஒத்துழைக்க

வேண்டும் என்று வலியுறுத்தினர்; திரு. ஜின்னாவின் தலைமை யிலிருந்த மற்றொரு பிரிவினரோ காங்கிரசின் சைமன் கமிஷன் பகிஷ்காரத் திட்டத்தை ஆதரித்தனர். லீகின் இவ்விரண்டு பிரிவினரும் தங்களது வருடாந்திர மாநாடுகளை 1928ல் வெவ்வேறு இடங்களில் நடத்தினர். ஷாஃபி பிரிவினர் லாகூரிலும், ஜின்னா பிரிவினர் கல்கத்தா விலும் கூடினர். அச்சமயம் பஞ்சாப் முஸ்லீம் லீகின் செயலாளராக இருந்த திரு. பர்கத் அலி லீகின் ஜின்னா பிரிவினரது கல்கத்தா மாநாட்டில் கலந்து கொண்டு வகுப்பு உடன்பாடு குறித்தத் தீர்மானத்தை முன்மொழிந்தார். கூட்டு வாக்காளர் தொகுதிகள் இந்த உடன்பாட் டுக்கு அடிப்படையாக இருக்க வேண்டும் என்று தீர்மானத்தில் வலியுறுத்தப்பட்டிருந்தது, தீர்மானத்தை முன்மொழிந்து திரு. பர்கத் அலி பேசியதாவது:[1]

> ''லீக் வரலாற்றிலேயே முதல் தடவையாக அதன் கண்ணோட் டத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டுள்ளது. தனி வாக்காளர் தொகுதிகள் கோட்பாட்டினை எதிர்க்கும் நமது இந்து சோதர நாட்டினர்க்கு இந்த மாற்றத்தின் மூலம் உளப்பூர்வமாக நேசக் கரம் நீட்டுகிறோம்.''

1928ல் டாக்டர் அன்சாரி தலைமையில் ஒரு தேசியக் கட்சி அமைக்கப்பட்டது. தேசிய முஸ்லீம் கட்சி என இது வழங்கப்பட்டது. முஸ்லீம் லீகின் ஜின்னா பிரிவினரைவிட இந்தக் கட்சி ஓரடி முன்னால் சென்றது; திரு. ஜின்னா வலியுறுத்தும் திருத்தங்கள் உள்ளிட்ட எத்தகைய திருத்தங்களும் இல்லாமல் நேரு அறிக்கையை அப்படியே ஏற்றுக் கொள்ள அது தயாராக இருந்தது. 1927ல் லீகின் ஜின்னா பிரிவில் இருந்த திரு. பர்கத் அலி அக்கட்சியிடம் போதிய தேசிய மனப் பான்மை இல்லை என்று கூறி அதிலிருந்து விலகி டாக்டர் அன்சாரி யின் தேசிய முஸ்லீம் கட்சியில் சேர்ந்தார். 1930ல் அலகாபாதில் அனைத்திந்திய முஸ்லீம் லீகின் வருடாந்திர மாநாடு நடைபெற்றபோது அதில் சர் முகம்து இக்பால் தமது தலைமை உரையில் இந்தியா வைப் பிரிவினை செய்வதற்கான திட்டம் ஒன்றை முன்வைத்தார்.[2] இதனைக் கண்ணுற்ற திரு. பர்கத் அலி சர் முகமது இக்பாலை மிகவும் கோபாவேசத்தோடு, வருணிக்க இயலாத அளவு உக்கிரத்தோடு தாக்கிக் கருத்து வெளியிட்டார். இதிலிருந்து அச்சமயம் திரு. பர்கத்

1. அவரது உரையை இந்திய தேசிய பதிவேட்டில் காண்க, 1930 தொகுதி II, பக். 334-345.
2. மேற்படி நூல், 1931, தொகுதி II, பக். 234-235

அலி எவ்வளவு மாபெரும் தேசியவாதியாக இருந்தார் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இதில் விந்தை என்னவென்றால் முகமது இக்பாலின் அதே திட்டத்தைத்தான் திரு. ஜின்னாவும், திரு. பர்கத் அலியும் இப்போது வரித்துக்கொண்டு பாகிஸ்தான் கோரிவருகின்றனர். 1931ல் லாகூரில் பஞ்சாப் தேசிய முஸ்லீம் மாநாடு நடைபெற்றது. திரு. பர்கத் அலிதான் இம்மாநாட்டின் வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்தார். பாகிஸ்தான் பற்றி அப்போது அவர் தெரிவித்த கருத்துகள் இங்கு நினைவு கூரத்தக்கவை[1]. தமது கட்சியின் அரசியல் சித்தாந்தத்தை வலியுறுத்தி மாநாட்டின் வரவேற்புக் கமிட்டித் தலைவரான மாலிக் பர்கத் அலி பின்கண்டவாறு பேசினார்:

> ''முதலாவதாக, இந்தியாவின் முழு சுதந்திரத்திலும் நன்மதிப்பிலும் நாம் நம்பிக்கை வைத்திருக்கிறோம். நாம் பெரிதும் மதித்துப் போற்றிப் பேணி வந்த நமது தொடர்புகள் யாவும் பின்னிப் பிணைந்த பூமியுமான இந்தியாதான் நமது நேசத்திலும் பாசத்திலும் ஆர்வ விருப்பங்களிலும் முதலிடத்தைப் பெற வேண்டும்; முதலில் முஸ்லீம் பின்னர்தான் இந்தியன் என்ற கோஷத்தை எழுப்பி, அறியாமையில் மூழ்கிக்கிடப்பவர்களைக் கவர்ந்து ஈர்ப்பதற்கு செய்யப்படும் கொடிய பிரசாரத்துக்கு நாம் உடந்தையாக இருக்கமாட்டோம். இத்தகைய சுலோகம் அப்பட்டமான அர்த்தமற்ற பகட்டாரவாரம் மட்டுமன்றி, முழுக்க முழுக்க விஷமத்தனமானதும் ஆகும் என்று நாம் கருதுகிறோம். இஸ்லாம் இந்தியாவின் நிரந்தரமான, முதன்மையான நலன்களுக்கு முரண்பட்டதாக ஒருபோதும் இருக்க முடியாது. இந்தியாவில் இஸ்லாமும் இந்தியாவும் ஒப்பானவையாகும்; பொருளாதார ரீதியிலும், அரசியல் ரீதியிலும், சமூக ரீதியிலும் இன்னும் சொல்லப்போனால் தார்மிக ரீதியிலும் எவையெல்லாம் இந்தியாவுக்குத் தீங்கு பயக்கக்கூடியவையோ அவையெல்லாம் இஸ்லாமுக்கும் கேடுவிளைவிக்கக் கூடியவையே ஆகும். எனவே, இஸ்லாமுக்கும் இந்தியாவின் நல்வாழ்வுக்கும் இடையே உள்ளார்ந்த முரண்பாடு இருப்பதாகப் பேசும் அரசியல்வாதிகள் போலியான தீர்க்கதரிசிகள் பிரிவைச் சேர்ந்தவர்கள் மட்டுமன்றி அடிப்படையில் இஸ்லா

1. அவரது உரையை இந்திய தேசிய பதிவேட்டில் காண்க, 1930 தொகுதி II, பக். 334-345.

மின் பகைவர்களுமாவர். மேலும், துருக்கியர்கள், எகிப்தியர்கள், அரபியர்கள் போன்ற இந்தியாவுக்கு வெளியிலுள்ள நமது முஸ்லீம் சோதரர்கள்பால் அனுதாபமும் பரிவும் காட்டுவது அவசியம் என்பதில் ஐயமில்லை. ஆனால், அந்த அனுபவம் - எடுத்த எடுப்பில் பார்க்கும்போது இந்த உணர்வு நோக்கமுடையதாகவும் ஆரோக்கியமானதாகவும் தோன்றினாலும் - இந்தியாவின் இன்றியமையாத நலன்களுக்கு ஊறு விளைவிக்கக்கூடியதாக ஆகிவிட நாம் ஒருபோதும் அனுமதிக்கக் கூடாது. தவிரவும், தமது அனுதாபம் அந்த நாடுகளுக்கு மிகுந்த மதிப்புடையதாக இருப்பது எவ்வளவு சாத்தியமென்றால், அந்த அனுதாபத்துக்கு அடிமூலமாக, தோற்றுவாயாக, நாற்றுப்பண்ணையாக, ஊற்றுக்கண்ணாக விளங்கும் இந்தியா உண்மையிலேயே ஒரு மாபெரும் நாடாக இருந்தால்தான் அது சாத்தியம். அப்படி ஒரு துரதிருஷ்டவசமான நிலை - இந்தத் துர்ப்பாக்கிய நிலை ஏற்படாதபடி ஆண்டவன் அருள்புரிய வேண்டும். அதாவது இந்தியாவை அடிமைப்படுத்தி அதன் மக்களது சுதந்திரத்தைப் பறிப்பதற்காக அந்நிய முஸ்லீம் நாடு ஏதேனும் படையெடுத்துவரும் நிலை ஏற்படுமானால் அப்போது முஸ்லீம் இந்தியா முஸ்லீமல்லாத இந்தியாவுடன் தோளோடு தோள் இணைத்து நின்று அந்த ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடுவதற்கு அகில உலக இஸ்லாமியம் எவ்வகையிலும் தடையாக இருக்க அனுமதிக்க மாட்டோம்.

''எனவே, இது விஷயத்தில் முஸ்லீமல்லாத வட்டாரங்கள் எவ்விதத்திலும் ஐயுறவோ, அச்சமோ கொள்ளத் தேவையில்லை. வடமேற்கு எல்லைப்புறக் கணவாய்களுக்கு அப்பாலிருந்து இந்தியாவுக்கு இஸ்லாமிய அபாயம் என்று குறுகிய மனோபாவம் படைத்த சில இந்து அரசியல்வாதிகள் கிளிப்பிள்ளை போல் திரும்பத் திரும்பக் கூறி பூச்சாண்டி காட்டிக் கொண்டிருப்பதை நான் அறிவேன். இத்தகைய கூற்றுகளும், அச்சங்களும் அடிப்படையிலேயே தவறானவை, முற்றிலும் ஆதாரமற்றவை என்று மீண்டும் கூறிக்கொள்ள விரும்புகிறேன். படையெடுப்பாளர் இஸ்லாமைப் பின்பற்றுபவராக இருப்பினும் முஸ்லீம் இந்தியா முஸ்லீமல்லாத இந்தியாவைப் போன்றே இந்தியாவின் சுதந்திரத்தை உறுதியாகப் பாதுகாத்து நிற்கும்.

''அடுத்தபடியாக, சுதந்திர இந்தியாவை மட்டுமல்லாமல் ஐக்கிய இந்தியாவை நாம் விரும்புகிறோம். நாம் விரும்புவது முஸ்லீம் இந்தியாவோ, இந்து இந்தியாவோ, சீக்கியர் இந்தியாவோ அல்லது வேறு எந்த சமூகத்தினரின் இந்தியாவோ அல்ல, அனைத்து மக்களது, சகல சமூகத்தினரது, எல்லா சமயத்தினரது இந்தியாவையே நாம் விரும்புகிறோம். இது நமது நிலையான, உறுதியான கோட்பாடாக இருப்பதால் எதிர்கால இந்தியாவை இந்து இந்தியா அல்லது முகமதிய இந்தியா என்று பிரிவினை செய்வது எங்களுக்கு உடன்பாடானதல்ல, அதற்கு நாங்கள் எவ்வகையிலும் உடந்தையாக இருக்கமாட்டோம். இந்து இந்தியா, முஸ்லீம் இந்தியா என்ற கண்ணோட்டம் அதீத வெறிஉணர்வு கொண்டவர்களை என்னதான் கவர்ந்து ஈர்ப்பதாகவும், அவர்களைப் பெரிதும் பரவசம் கொள்ளச் செய்வதாகவும் இருந்தாலும் அதனை நாம் முழுமூச்சோடு, திடஉறுதியோடு எதிர்ப்போம். ஏனென்றால் இது அறவே நடைமுறைசாத்தியமற்றதும் முற்றிலும் வெறுக்கப்படத்தக்கதும் மட்டுமல்ல, ஏனென்றால் இது இந்தியாவின் இன்றைய அரசியல் செயல்பாடுகளில் உன்னதமானவையும், நிலைபேறுடையவையுமான யாவற்றுக்கும் சாவுமணி அடிக்கிறது என்பது மட்டுமல்ல, இந்தியாவின் தலைசிறந்த வரலாற்றுப் பாரம்பரியத்துக்கும் இது முரணானதாகவும் எதிரிடையானதாகவும் இருக்கிறது.

''அசோகர், சந்திரகுப்தர் காலங்களில் இந்தியா ஒன்றாக இருந்தது; இந்துக்களிடமிருந்து முகலாயர்களுக்கு அல்லது முஸ்லீம் களுக்கு அதிகாரம் மாறிய நிலையிலும் கூட இந்தியா ஒன்றாகவே இருந்தது; அதேபோன்று நமது ஆர்வவிருப்பங்கள் எல்லாம் நிறைவேறி, சுதந்திரம் அடைந்ததும் இந்தியா ஒன்றாகவே இருக்கும்; அப்போது நம்மீது ஒளிரும் ஒளிவெள்ளம் நமது பண்டைப் பெருமை யால் பெற்றதாக இருக்கக்கூடாது, நமது முகங்களிலிருந்தே நேரடி யாகப் பாய்ந்து வரும் ஒளிவெள்ளமாக இருக்க வேண்டும்.

''முஸ்லீம் லீகின் மூச்சு அநேகமாக அடங்கிவிட்ட நிலைமை யில், சுதந்திர இஸ்லாமை அது இனியும் பிரதிநிதித்துவப் படுத்தாத நிலைமையில், சர் முகமது இக்பால் அதன் மேடை யிலிருந்து நிகழ்த்திய தமது தலைமை உரையில் இந்தியாவைத் துண்டாட வேண்டும் என்ற யோசனையை முன்வைத்திருக்கிறார்; இதன் பின்னர் அவர் தமது கருத்தை மாற்றிக்கொண்டது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இது எப்படியிருப்பினும் அவர் முன் வைத்த பிரிவினைத் திட்டம் இஸ்லாமை அடிப்படையாகக்

கொண்டது என்று எவரும் எண்ணி ஏமாந்து விடக்கூடாது என்று எச்சரிக்கிறேன். அப்படியே ஒருக்கால் டாக்டர் சர் முகமது இக்பால் தமது யோசனையை மறுதலிக்காது போயினும் இது எந்த விவேகமுள்ள மனிதரும் முன்வைக்கக்கூடிய யோசனை அல்ல. என்னைப் பொறுத்தவரையில், இஸ்லாமின் வளர்ந்து வரும் தலைமுறையின் உணர்வுகளுக்கும், நுண்ணறிவுக்கும் அந்நியமானது என்று அந்த யோசனையை திட்டவட்டமாக வும் தயக்கமயக்கமின்றியும் நிராகரித்திருப்பேன். இந்தியா வகுப்புவாரி மாகாணங்களாகப் பிரிவினை செய்யப்படக் கூடாது என்பது மட்டுமல்ல, இந்து மதமும் இஸ்லாமும் இந்தியாவின் விரிந்து பரந்த எல்லைகளுக்குள் சுதந்திரமாக சகவாழ்வு வாழவேண்டும். அவை எவ்வகையிலும் குறுகிய எல்லைகளுக்குள் கட்டுப்படுத்தப்படவோ, அடைத்து வைக்கப் படவோ, ஒடுக்கிவைக்கப்படவோ கூடாது என்று வலியுறுத்திக் கூறுவதை உண்மையிலேயே எனது பெருமித மிக்க கடமை யாகக் கருதுகிறேன். இந்தியாவை முஸ்லீம் இந்தியா, இந்து இந்தியா என்று பிரிக்க வேண்டுமென்று டாக்டர் இக்பால் கூறியிருக்கும் யோசனையைப் போன்றதே பஞ்சாபைக் கூறுபோட்டுப் பிரிக்க வேண்டும் எனச் சில சீக்கிய வகுப்பு வாதிகள் முன்வைத்திருக்கும் தீயயோசனையும்.

சுதந்திரமான, ஒன்றுபட்ட இந்தியா; அதில் அனைத்து மக்களும் சமத்துவ உரிமைகளை அனுபவிக்கின்றனர்; கூடிய மட்டும் பரந்த ஜனநாயக அடிப்படையில் அதாவது வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையிலும், கூட்டு வாக்காளர் தொகுதிகளின் அடிப்படையிலும் மக்களின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்; அவர்கள் எத்தகைய வேறுபாடு களும் குறைபாடுகளுமன்றிச் சட்டங்களை இயற்றிப் பராமரிக் கின்றனர்; பாரபட்சமின்றிச் சட்டங்களைச் செயல்படுத்து வதை தனது கடமையாகக் கொண்டதும், தனது செயற்பாடு களுக்கு எங்கோ தொலைதூரத்திலுள்ள அயல்நாட்டினரின் நாடாளுமன்றத்துக்கு அல்லாமல் தமது நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப் பிரதிநிதிகளுக்கு பொறுப்புகூறக் கடமைப் பட்டதுமான ஒரு நிர்வாகம் என் மனத்திரையில் காணும் எதிர்கால இந்தியாவைப் பற்றிய படப்பிடிப்பினை இதற்கு மேலும் நான் விவரிக்க வேண்டும் என நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன். பொதுவாழ்வில் உள்ள எவரும் அலட்சியப்படுத்த முடியாத அளவுக்கு இன்று பெரும்

பரிணாமங்களைப் பெற்றுள்ள கூட்டு வாக்காளர் தொகுதியா, தனி வாக்காளர் தொகுதியா, எனும் பிரச்சினை எழுந்திருக்கா விட்டால் தேசிய முஸ்லீம் கட்சியின் குறிக்கோள்களையும் நோக்கங்களையும் பொதுப்படையாகக் கூறுவதோடு நின் றிருப்பேன்.

''சொத்துரிமை அடிப்படையில் இன்று வாக்குரிமை நிர்ணயிக்கப்பட்டிருப்பதன் காரணமாக ஒரு மாகாணத்தைச் சேர்ந்த பெரும்பான்மை மக்கள் வாக்காளர் பட்டியலில் சிறுபான்மையினராக செயற்கையான முறையில் காட்டப்பட்டு வருகின்றனர்; வகுப்புவாத உணர்வுகளும் எண்ணங்களும் உச்சக்கட்டத்தில் இருந்து வருகின்றன; எங்கும் அவநம்பிக்கை எனும் நச்சுவளி சூழ்நிலை முழுவதையுமே விஷப்படுத்தி வருகிறது; இத்தகைய நிலைமையில் தனி வாக்காளர் தொகுதி யின் மதிப்பும், பயனும் எப்படிப்பட்டதாக இருப்பினும் இன்றைய சுற்றுச்சூழலிலும் எதிர்கால இந்தியாவிலும் தனி வாக்காளர் தொகுதிகளுக்கு எத்தகைய இடமும் இருக்கக்கூடாது என்றே கருதுகிறோம்.

தேசியத்தையும், தனி வாக்காளர் தொகுதிகளையும், பாகிஸ்தானையும் பற்றி திரு. ஜின்னாவும் திரு. பர்கத் அலியும் ஒரு சமயம் இத்தகைய கருத்துகளைத்தான் கொண்டிருந்தனர். இதே பிரச்சினைகள் குறித்து இப்போது இவர்கள் எத்தகைய நேரெதிரான கருத்துகளைக் கொண்டிருக்கின்றனர்?

இந்து-முஸ்லீம் ஒற்றுமையை நிலைநாட்டுவதற்கு மேற் கொள்ளப்பட்ட முயற்சிகள் படுதோல்வியடைந்ததையும், முஸ்லீம் தலைவர்களின் மனத்தில் ஒரு புதிய சித்தாந்தம் உருவானதையும் பற்றி இதுவரை எடுத்துக்கூறினேன். இதில் மூன்றாவது ஒரு விஷ யமும் உள்ளது. தற்போது பரிசீலனையிலுள்ள பிரச்சினையுடன் சம்பந்தப்பட்டிருப்பதன் காரணமாகவும், அதன்மீது அது ஏற்படுத்தக் கூடிய தாக்கத்தின் காரணமாகவும் இன்றைய சூழ்நிலையில் அது குறித்து விவாதிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அரசியல் தத்துவ இயலாளர்கள் ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு இந்த முஸ்லீம் சித்தாந் தத்திற்குப் பின்னால் நியாயம் இருக்கிறதா என்பதுதான் அந்த மூன்றாவது விஷயம்.

பாகிஸ்தான் பிரிவினை கோரிக்கையில் எந்த நியாயமும் இல்லை என்று இந்துக்களில் பலர் கருதுவதாகத் தோன்றுகிறது.

பாகிஸ்தான் கோட்பாடு என்ற அளவில் தவறானது என்பதில் ஐய மில்லை. பாகிஸ்தான் கோரிக்கைக்கான தத்துவ ரீதியான நியாயம் ஒரு வகுப்புக்கும் தேசத்துக்குமுள்ள வேறுபாட்டில்தான் அடங்கி யுள்ளது. முதலாவதாக, அண்மையில் இது பெருமளவுக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த சர்ச்சையின் சாராம்சம் பின்கண்ட இரண்டு பிரச்சினைகளில்தான் அடங்கியுள்ளது என்று கருதி அர சியல் தத்துவ இயலாளர்கள் நீண்டகாலம் அவற்றிலேயே பிரதான கவனம் செலுத்திவந்தனர். ஒன்று, சிறுபான்மையினர் மீது ஆட்சி செலுத்துவதற்கு ஒரு சாதாரண பெரும்பான்மையினருக்குள்ள உரிமையை ஓர் அரசாங்கத்துக்கான நேர்மையான அடிப்படையாக எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளலாம்; இரண்டு, ஓர் அரசாங்கத்தின் சட்டப்படியான நிலை ஆளப்படுவோரின் இணக்கத்தை, சம்ம தத்தை எந்த அளவுக்குச் சார்ந்துள்ளது. ஓர் அரசாங்கத்தின் சட்டப் படியான நிலை ஆளப்படுவோரின் சம்மதத்தைத்தான் பொறுத் துள்ளது என்று வலியுறுத்தி வந்தவர்கள்கூட தங்களது கோட்பாடு வெற்றியடைந்துவிட்டது என்ற திருப்தியில் பேசாது இருந்து விட்ட னர்; இந்தப் பிரச்சினையில் இதற்கு மேல் கவனம் செலுத்த அவர் கள் எத்தகைய அக்கறையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆளப்படு வோர்''களுக்குள்ளேயே வேறுபாடுகளைக் காணும் அவசியத்தை அவர்கள் உணரத் தவறிவிட்டார்கள். ஆளப்படுவோர் வகையினர் ஒரு சமூகமாக அமைந்திருக்கின்றனரா அல்லது ஒரு தேசமாக அமைந் திருக்கின்றனரா என்பது இப்போதைக்கு அவசியமற்ற விஷயம் என்று அவர்கள் கருதிவிட்டனர். எனினும் சந்தர்ப்ப சூழ்நிலை இந்த வேறுபாட்டை ஒப்புக்கொள்ளும்படி அரசியல் தத்துவ இயலாளர் களை நிர்ப்பந்தித்தது. இரண்டாவதாக, இது வித்தியாசம் இல்லாத வெறும் வேறுபாடல்ல. இந்த வேறுபாடு கணிசமானது, இதன் விளை வான வித்தியாசம் அடிப்படையானது. அரசியல் தத்துவ இயலாளர்கள் ஒரு சமூகத்திற்கு வழங்கத் தயாராக இருக்கும் அரசியல் உரிமை களுக்கும் அதேசமயம் சட்டப்பூர்வமாக நிறுவப்பெற்ற ஓர் அரசாங் கத்துக்கு எதிராக ஒரு தேசத்துக்கு அவர்கள் அளிக்கத் தயாராக இருக்கும் அரசியல் உரிமைகளுக்கும் இடையே உள்ள வித்தி யாசத்திலிருந்து ஒரு சமூகத்துக்கும் ஒரு தேசத்துக்குமுள்ள இந்த வேறுபாடு மிகவும் அடிப்படையானது, முக்கியமானது என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். கிளர்ச்சி செய்யும் உரிமையை மட்டுமே ஒரு சமூகத்துக்கு வழங்க அவர்கள் தயாராக இருக்கின் றனர். ஆனால் ஒரு தேசத்துக்கோ பிளவுபடுத்தும் உரிமையை அளிக்க அவர்கள் சித்தமாக இருக்கின்றனர். இவ்விரண்டுக்கும் இடையான வேறுபாடு தெள்ளத் தெளிவானது, அடிப்படையானது. கிளர்ச்சி செய்யும்

உரிமை அரசாங்கத்தின் பாணியிலும் செயல்முறையிலும் மாற்றம் கோருவது சம்மந்தப்பட்ட விஷயங்களுக்கு மட்டுமே பொருந்தும். ஆனால் பிளவு ஏற்படுத்துவதற்கான உரிமை கிளர்ச்சி செய்யும் உரிமையைவிட மிகவும் விரிவானது. ஒரு நாட்டைச்சேர்ந்த குறிப்பிட்ட மக்கள் பிரிவினர் தாங்கள் வாழும் பிரதேசத்துடன் சேர்ந்து பிரிந்து செல்லும் உரிமையை இதன் மூலம் கோரலாம். இந்த வித்தியாசத் துக்கு என்ன அடிப்படை என்று கேட்கலாம். அரசியல் சித்தாந்த நூலாசிரியர்கள் இந்த விஷயம் குறித்து நன்கு ஆராய்ந்து, கிளர்ச்சி செய்வதற்கு ஒரு சமூகத்திற்குள்ள உரிமையையும்[1], பிளவுபடுத்து வதற்கு ஒரு தேசத்திற்குள்ள உரிமையையும்[2] நியாயப்படுத்தி அதற்கான காரணங்களையும் விவரித்துள்ளனர். இதிலுள்ள வித்தி யாசம் இதுதான்; ஒரு சமூகத்துக்கு பாதுகாப்புகள் பெற உரிமை உண்டு; ஒரு தேசத்துக்கோ பிரிவினை கோர உரிமை உண்டு; இந்த விஷயம் தெள்ளத்தெளிவானது; மிக முக்கியமானது. ஆனால் ஒரு உரிமை கிளர்ச்சி செய்வதுடன் ஏன் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது, இன்னொரு உரிமை பிளவுபடுத்தும் நிலைக்கு ஏன் விரிவுபடுத்தப்பட்டிருக்கிறது என்பதற்கு அவர்கள் எத்தகைய காரணங்களும் கூறவில்லை.

---

1. சிக்விக் இதனைப் பின்கண்டவாறு நியாயப்படுத்துகிறார்: ''....சம்பந்தப்பட்ட பிரச்சினை ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்போது பணிந்து போவதால் ஏற்படக்கூடிய தீமைகள் கிளர்ச்சி செய்வதால் ஏற்படக்கூடிய தீமைகளைவிட மேலோங்கி இருப்பதாக நியாயமாகவே கருதப்படுகிறது. கிளர்ச்சியாளர்கள் பெரிதும் வலுவில்லாதவர்களாக இருந்தாலும்கூட, ஒரு கிளர்ச்சி சில சமயங்களில் குறைகள் நிவர்த்திக்கப்படுவதற்கான தூண்டுதலை அளிக்கக்கூடும்; ஏனென்றால் தங்களது தவறான செயற்பாடுகளால் பாதிக்கப்பட்ட சமூகத்தின் தீவிர ஊறுபட்ட உணர்வை இது பெரும் பான்மையினரின் கவனத்திற்கு கொண்டுவருகிறது. இதே காரணங்களால், ஒரு கிளர்ச்சி ஏற்படக்கூடிய சாத்தியக்கூறு சமரசத்திற்கு இட்டுச் செல்லக்கூடும்; சுருக்கமாகக் கூறினால், கொந்தளிப்பும் கிளர்ச்சியும் வெடிக்குமோ என்ற அச்சம் ஒரு ஜனநாயகத்திலும் சரி வேறு எந்த வடிவத்திலமைந்த அரசாங்கத்திலும் சரி அரசியல் சட்டரீதியாக உயர் அதிகாரம் பெற்றவர்கள் தவறான நடவடிக்கைகளில் ஈடுபடா மலிருப்பதற்கு ஒரு நல்ல தடையாக இருக்கக்கூடும். எனவே, ஜனநாயகரீதியிலான ஆட்சியின் கீழிலிருக்கும் ஒரு சமூகத்துக்கு கிளர்ச்சி செய்யும் தார்மிக உரிமை இருப்பது அவசியம் என்று கருதுகிறேன்.. '' **அரசியலின் அடிப்படைக் கூறுகள்** '' (1929), பக். 646-47.

2. பிளவுபடுத்துவதற்கான உரிமை குறித்து சிக்விக் பின்வருமாறு கூறுகிறார்: ''ஓர் அரசாங்கம் சட்டப்பூர்வமானதாக இருக்க வேண்டுமானால் ஆளப்படுவோரின் இணக்கத்தை அது பெற்றிருக்க வேண்டும் என்று கருதுபவர்கள் பின்கண்ட அனுமானத்தையும் ஏற்றுக்கொள்கின்றனர். ஆளுவதற்குத் தங்களுக்கு உரிமை உண்டு என்று பெரும்பான்மையினர் கோரும் அதேசமயம் இந்த உரிமையால் பாதிக்கப்படக்கூடிய சிறுபான்மையினர் அந்த நாட்டின் ஒரு குறிப்பிட்ட தொடர்ச்சியான பகுதியில் பெரும்பான்மையினராக இருக்கும் பட்சத்தில் அவர்கள் பிரிந்து சென்று ஒரு புதிய அரசை அமைத்துக்கொள்ளும் உரிமையை அங்கீகரிக்க வேண்டும்... இத்தகைய பிரிவினையால் பல சந்தர்ப்பங்களில் நாடு முழுவதன் நலன்களுமே மேம்பாடடைய முடியும் என்று கருதுகிறேன். உதாரணமாக ஒரு நாட்டின் நிலப்பகுதி நீண்ட கடலால் அல்லது இதர இயற்கைத் தடைகளால் பிரிக்கப்பட்டிருந்தாலோ, உள்நாட்டுத் தகவல் தொடர்புகள் பெருமளவுக்குப் பாதிக்கப்பட்டிருந்தாலோ, இனம், சமயம், கடந்தகால வரலாறு, இப்போதைய சமூக நிலைமைகள் போன்றவற்றில் பெருமளவில் வேறுபாடுகள் நிலவினாலோ, சட்டங்கள் விஷயத்தில் அந்தந்தப் பகுதியினரின் தேவைகளும்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

இந்தப் பிரச்சினையை அவர்கள் எழுப்பக் கூட இல்லை. இதற்கான வெளிப்படையான விளக்கத்தையும் அவர்கள் தரவில்லை. எனினும் இந்த வித்தியாசம் ஏன் தோற்றுவிக்கப்பட்டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்வது சுவையானதாகவும் பயனுள்ளதாகவும் இருக்கும். இந்த வித்தியாசத்துக்கு இறுதி கதிப்போக்கு குறித்த பிரச்சினைகளே காரணமாக இருக்கக்கூடும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு நாடு என்பது, பல சமூகங்களைக் கொண்டதாகவோ அல்லது அநேக தேசங்களைக் கொண்டதாகவோ இருக்கிறது. பல சமூகங்களைக் கொண்ட ஒரு நாட்டில் ஒரு சமூகம் இன்னொரு சமூகத்தின் எதிரணியில் இருக்கக்கூடும்; அல்லது இரண்டும் பரஸ்பரம் எதிர்த்துக் கொண்டிருக்கக்கூடும். ஆனால் தமது இறுதியான கதிப்போக்கு விஷயத்தில் அவை தம்மை ஒன்றாகப் பாவிக்கின்றன. ஆனால் பல தேசங்களைக் கொண்ட ஒரு நாட்டில் ஒரு தேசம் இன்னொரு தேசத்துக்கு எதிராக சீறி எழுமானால், அந்த மோதல் இறுதி கதிப்போக்கு சம்பந்தப்பட்டதாக அமைந்துவிடுகிறது. இதுதான் சமூகங்களுக்கும் தேசங்களுக்குமுள்ள வேறுபாடு; இந்த வேறுபாடுதான் அவற்றின் அரசியல் உரிமைகளுக்கிடையே வித்தியாசம் காணப்படுவதற்குக் காரணம். இந்த விளக்கம் புதுமையானதோ, தனித்தன்மை வாய்ந்ததோ அல்ல. சமூகம் ஒருவகையான உரிமையையும் தேசம் அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட வேறொரு வகையான உரிமையையும் ஏன் பெற்றிருக்கின்றன என்பதை வேறொரு விதத்தில் இது கூறுகிறதே அன்றி வேறல்ல. ஒரு சமூகம் கிளர்ச்சி செய்ய உரிமை பெற்றிருக்கிறது, அத்துடன் அது திருப்தியடைந்துவிடுகிறது. அது விரும்புவதெல்லாம் அரசாங்கத்தின் செயல்பாங்கிலும் பாணியிலும் மாற்றம் செய்யப்பட வேண்டும் என்பதுதான். அதன் மனக்குறை இறுதி கதிப்போக்கு சம்பந்தமான எத்தகைய வேறுபாடு சம்பந்தப்பட்டதல்ல. இதே சமயம் ஒரு தேசத்துக்கு பிளவு உண்டு பண்ணுவதற்கான உரிமை வழங்கப்பட வேண்டியிருக்கிறது; ஏனென்றால் அரசாங்கத்தில் வெறும் மாற்றம் செய்வதுடன் அது திருப்தியடையாது. அதன்

(முன்பக்கத் தொடர்ச்சி)

கோரிக்கைகளும் மாறுபட்டவையாக இருந்தாலோ அல்லது வேறு எந்த அரசு தலையீடு இருந்தாலோ உள்நாட்டு விவகாரங்கள் விஷயத்தில் அவர்கள் ஒரு பொது ஆட்சியைக் கொண்டிருப்பது உகந்ததல்ல; அதேசமயம் கூட்டரசு இருப்பினும் அவர்களது வெளிஉறவுகளைப் பொறுத்தவரையில் அவை வேறுபட்டவையாக இருக்கும்; ஒவ்வொரு பகுதியும் மற்றவர்களின் சச்சரவுகளில் சிக்க வைக்கப்படுவதன் மூலம் அதிகம் இழக்க நேரிடும்; மற்றதன் படைகளது உதவியைப் பெறுவதில் கிட்டும் அனுகூலத்தைவிட இந்த இழப்பு அதிகமாகவே இருக்கும். இத்தகைய நிலைமையில் வரலாற்றுப்பூர்வமான தேசபக்த உணர்வோ அல்லது பரந்து விரிந்த ஒரு நிலப்பகுதியைப் பெற்றிருப்பதனால் ஏற்படக்கூடிய பெருமிதமோ முரண்பாடான முழுமை அதன் இயல்பான பகுதிகளாக அமைதியோடு பிரிவதைத் தடுப்பது விரும்பத்தக்கதல்ல'' - அரசியலின் அடிப்படைக் கூறுகள், (1929), பக். 648-49.

கோரிக்கை இறுதி கதிப்போக்கு சம்பந்தப்பட்டது. தம்மைப் பிணைத்துக்கொண்டிருக்கும் இயற்கைக்குப் புறம்பான தளைகள் அறுத்தெறியப்பட்டாலொழிய அது திருப்தியடையாது என்னும் போது, அந்தப் பிணைப்பை முறித்து, ஒவ்வொன்றும் தனது சொந்தக் கதிப்போக்கை பின்பற்ற சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று விவேகமும் அத்துடன் அறிவியலும் வலியுறுத்துகின்றன.

## V

இந்து-முஸ்லீம் ஒற்றுமை முயற்சிகள் தோல்வியடைந்து விட்டன என்பதையும் முஸ்லீம் சித்தாந்தம் முற்றிலும் ஒரு புரட்சி கரமான மாற்றத்தை அடைந்துள்ளது என்பதையும் ஒப்புக்கொள்வது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் இத்தகைய விளைவு கள் ஏற்பட்டதற்கான துல்லியமான, திட்டவட்டமான காரணங் களைத் தெரிந்துகொள்வதும், இந்த முயற்சிகள் தோல்வியடைந்த தற்கும், முஸ்லீம்களின் சித்தாந்தம் புரட்சிகரமாக மாற்றமடை வதற்கும் பிரிட்டிஷாரின் பிரித்தாளும் கொள்கைதான் காரணம் என்று இந்துக்கள் கூறுகின்றனர். இதில் வியப்படைவதற்கு எதுவுமில்லை. அரசாங்கத்தை எப்போதும் எதிர்ப்பதைத் தவிர அரசியலையும், வேறு எந்த அரசியலையும் கொண்டிராத ஐரிஷ் மனோபாவத்தை வளர்த்துக் கொண்ட இந்துக்கள் எதற்கும் எல்லாவற்றிற்கும் அர சாங்கத்தை எதிர்ப்பதை, பருவ நிலை மோசமாக இருந்தால்கூட அதற்கும் அரசாங்கத்தின்மீது பழிபோடுவதை ஒரு வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்துக்களுக்கு மிகவும் பிடித்தமான இந்த ஆழமற்ற, சத்தற்ற விளக்கத்தை நிராகரிக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. முதலாவதாக, இது இரண்டு முக்கியமான விஷயங் களைக் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தவறிவிடுகிறது. ஒன்று, பிரிட்டி ஷார் பிரித்தாளும் கொள்கையைக் கடைப்பிடிக்கிறார்கள் என்று வைத்துக்கொண்டால் கூட, அத்தகைய பிளவை சாத்தியமாக்கக் கூடிய சக்திகள் இருந்தாலொழிய அந்தக் கொள்கை வெற்றிபெற முடியாது. தவிரவும், அப்படியே இந்தக் கொள்கை நீண்டகாலமாகவே வெற்றி யடைந்து வந்திருக்கிறது என்றால், பிளவை உண்டு பண்ணக்கூடிய இந்த சக்திகள் ஏறத்தாழ நிரந்தரமானவை என்பதையும், சற்றும் விட்டுக்கொடுக்காதவை என்பதையும், தற்காலிகமானவையா, மேலெழுந்தவாரியானவையா அல்ல என்பதையுமே அது காட்டுகிறது.

இரண்டு, இந்த சித்தாந்த மாற்றத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் திரு. ஜின்னா பிரிட்டிஷாரின் கையாள் என்று அவருடைய மிக மோசமான பகைவர்களால் கூட சந்தேகிக்கப்பட முடியாதவர் என்பதை இந்த விளக்கம் மறந்துவிடுகிறது. அவர் தான் கூறும் கருத்தே சரியானது என்று உடும்புப் பிடிவாதம் செய்பவராக இருக்கலாம். முகமூடியில்லாத அப்பட்டமான தற்புகழ்ச்சியாளராக இருக்கலாம். அசாதாரணமான அறிவுத்திறத்தால் ஈடுசெய்யப்படாத அகந்தையாளராக இருக்கலாம். இதன் காரணமாகவே அவரால் எவருக்கும் பக்கப்பாட்டுப் பாடுபவராக இருக்கமுடியாது. அத்தகைய இரண்டாவது நிலையிலிருந்து ஒரு பொது லட்சியத்திற்காக மற்றவர்களுடன் அவரால் இணைந்து பணியாற்ற முடியாது. அவருக்கென்று சொந்தக் கருத்துகள் ஏதுமில்லை. மற்றவர்களது கருத்துகளையே அவர் கையாள்கிறார் என்று அவரது எதிரிகள் கூறும் குற்றச்சாட்டு உண்மையல்ல என்றாலும், அவரை கருத்துகள் பொங்கிப் பொழியும் ஊற்று என்று கூறமுடியாதிருக்கலாம். அவருடைய புகழ் செயற்கையாக உருவாக்கப்பட்டதாக இருக்கலாம். ஆனால் அதேசமயம் அணுவளவும் லஞ்ச ஊழலுக்கு ஆளாகாதவர் என்ற அடைமொழிக்கு இவரைவிட அதிகம் பொருந்தக்கூடிய அரசியல்வாதி வேறு எவரேனும் இந்தியாவில் இருக்கிறார்களா என்பது சந்தேகமே. பிரிட்டிஷாருடன் அவருக்குள்ள உறவுகளை அறிந்தவர்கள் எவரும் அவர்களுடைய பகைவராக இல்லாவிட்டாலும், எப்போதுமே அவர்களை விமர்சிப்பவராக இருந்து வந்திருக்கிறார் என்பதை ஒப்புக்கொள்வார்கள். அவரை யாருமே விலைகொடுத்து வாங்க முடியாது. அவர் செல்வத்தைத் தேடி அலைபவராக, கூலிப்படையாக ஒரு போதும் இருந்ததில்லை என்பது அவருக்குள்ள மகத்தான பெருமையாகும். ஆக இவ்விதம் திரு. ஜின்னாவின் சித்தாந்த மாற்றத்திற்கு இந்துக்கள் வழக்கமாகக் கூறும் விளக்கம் அடிபட்டுப் போகிறது.

அப்படியானால் இந்த அவல நிலைக்கு, ஒற்றுமை முயற்சிகளின் இந்தப் பரிதாபகரமான தோல்விக்கு, முஸ்லீம்களது இந்த சித்தாந்த மாற்றத்துக்கு உண்மையான விளக்கம்தான் என்ன? மெய்யான காரணம்தான் என்ன?

இந்து-முஸ்லீம் ஒற்றுமை முயற்சி தோல்வியடைந்ததற்கான உண்மையான காரணம் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே உள்ள பிரச்சினை வெறும் கருத்து வேறுபாடு சம்பந்தப்பட்டதல்ல.

அதேபோன்று, இந்தப் பகைமை பொருளாயாத அம்சங்களுடன் சம்பந்தப்பட்டதுமல்ல என்பதை உணர்ந்து கொள்ளத் தவறியதில் தான் அடங்கியுள்ளது. இதன் மூலகாரணம் வரலாற்று, சமய, கலாசார, சமூக முரண்பாட்டில் வேர் கொண்டுள்ளது; அரசியல் முரண்பாடு என்பது இவற்றின் ஒரு பிரதிபலிப்பு மட்டுமே ஆகும். இவையாவும் அதிருப்தி என்னும் ஓர் ஆழமான ஆறாக உருவாகி, இந்த மூல ஆதாரங்களால் மேன்மேலும் வலுப்பெற்று, நுங்கும் நுரையுமாகப் பெருக்கெடுத்து கரைபுரண்டோடுகிறது. வேறொரு பிறப்பிடத்திலிருந்து பெருகிவரும் நீர் என்னதான் தூய்மையானதாக இருந்தாலும் இந்த ஆற்றில் வந்து கலக்கும்போது அது தனது வண்ணத்தை மாற்றிக் கொள்வதற்குப் பதிலாக, தனது திட்டத்தைக் குறைத்துக் கொள்வதற்குப் பதிலாக நீரோட்டத்தில் அப்படியே தன்னைக் கரைத்துக் கொள்கிறது. இந்த நீரோட்டம் கொண்டுவரும் பகைமை என்னும் வண்டல் மண் நிரந்தரமாகவும் ஆழமாகவும் படிந்துவிடுகிறது. இந்த வண்டல் மேன்மேலும் குவிந்து கொண்டிருக்கும்வரை, இந்தப் பகைமை உணர்வு நீடிக்கும்வரை இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான வெறுப்புணர்வு, முரண்பாடு நீங்கி இந்து முஸ்லீம் ஒற்றுமை ஏற்படும் என்று எதிர்பார்க்க முடியாது.

துருக்கியில் கிறித்தவர்களும் முசல்மான்களும் போன்று இந்துக்களும் முஸ்லீம்களும் பகைவர்களாகப் பல போர்க்களங்களில் சந்தித்திருக்கின்றனர்; இந்தப் போராட்டத்தின் விளைவு பல சந்தர்ப்பங்களில் அவர்களை வெற்றிபெற்றவர்களாகவும் வீழ்த்தப்பட்டவர்களாகவும் ஆக்கியுள்ளது. இவற்றில் எந்தத் தரப்பு வெற்றி பெற்ற போதிலும் இவற்றிடையே ஒரு நிரந்தரமான பிணைவு உருவாகி நிலைத்துவிடுகிறது. முகலாயர்களாலோ, பிரிட்டிஷாராலோ வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்ட அரசியல் ஒற்றுமை பல சந்தர்ப்பங்களில் அடிப்படையான, உள்ளார்ந்த அரசியல் கூட்டிணைப்பைக் கட்டி வளர்ப்பதற்குப் பதிலாக பரஸ்பர பகைமை உணர்வையே தீவிரப்படுத்தி இருக்கிறது. சமயத்தாலோ அல்லது சமூக சட்ட விதிமுறைகளாலோ, இந்தப் பிளவை அகற்ற முடியவில்லை. இந்த இரண்டு சமயங்களும் தனித்து ஒதுங்கி இருக்கும் இயல்புடையவை, சிறந்த சமூக நல்லொழுக்கத்தின் பொருட்டு அவற்றிடையே எத்தகைய இணக்கத்தை அடிப்படையிலேயே தோற்றுவிக்க முயன்றாலும் அவை ஒத்துப்போவதில்லை. அவற்றிடையே ஓர் உள்ளார்ந்த பகைமை உணர்வு வேரோடிப் போயிருப்பதுபோல் தோன்றுகிறது. பல நூற்றாண்டுகளாக முயன்றும் அந்தப் பகைமை உணர்வை அகற்ற

முடியவில்லை. அக்பர், கபீர் போன்றவர்கள் இந்த இரு சித்தாந்தங் களையும் ஒருங்கிவரச் செய்வதற்கு எவ்வளவோ முயன்றும் அவற்றின் பின்னாலுள்ள அளவியல் எதார்த்தங்கள் மாறவில்லை, அப்படியே நிலை கொண்டுள்ளன; கணித மொழியில் கூறுவதானால் ஒரு பொது பகுவெண்ணைக் காணஇயலவில்லை. ஓர் இந்து, இந்து மதத்திலிருந்து கிறித்தவ மதத்திற்கு மாறும்போது அவ்வள வாக, குமுறலோ, கொந்தளிப்போ ஏற்படுவதில்லை. ஆனால் அவன் இந்து மதத்திலிருந்து இஸ்லாமுக்கு மாறும்போது ஒரு வகுப்புக் கலவரமே வெடிக்கிறது. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே உள்ள பகைமையின் ஆழத்தை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

மத விஷயத்தில் முஸ்லீம்களையும் இந்துக்களையும் இஸ் லாமும் இந்து மதமும் பிரித்து வைத்திருப்பது மட்டுமல்ல, அவர் களது சமூக ஒருங்கிணைவையும் அவை தடுக்கின்றன. இந்துக் களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே கலப்புத் திருமணங்கள் நடை பெறுவதை இந்து மதம் தடை செய்துள்ளது. இந்தக் குறுகிய மனோபாவம் இந்து மதத்தை மட்டுமே பீடித்துள்ள ஒரு நோயல்ல; இஸ்லாமும் இவ்வகையில் குறுகிய நோக்கமுடையதாகவே இருக் கிறது. முஸ்லீம்களுக்கும் இந்துக்களுக்கும் இடையே கலப்புத் திருமணங்கள் நடைபெறுவதை இஸ்லாமும் தடை செய்துள்ளது. இத்தகைய சமூகச் சட்டங்கள் இருந்து வருவதால் சமூக ஒன்றிணைவு சாத்தியமல்ல; இதன் காரணமாக கண்ணோட்டங்களையும் வழி முறைகளையும் கூட்டு பொதுநல அடிப்படையில் உருவாக்க இயலாது போகிறது; சமூக முரண்பாடுகளை முனை மழுங்க வைக்க முடியவில்லை; பன்னெடுங்கால சமூக முடக்கத்தை ஒழுங்குபடுத்த வாய்ப்பில்லாத நிலை ஏற்படுகிறது.

இந்து மதத்திலும் இஸ்லாம் மதத்திலும் வேறு சில குறை பாடுகளும் இருக்கின்றன; இவ்விரண்டு சமூகங்களுக்குமிடையே உள்ள புண் ஆறாமல் இருப்பதற்கு இவை காரணமாக அமைந் திருக்கின்றன. இந்து மதம் மக்களைப் பிரிக்கிறது என்றும், இஸ்லாம் மக்களை ஒன்றிணைக்கிறது என்றும் கூறப்படுகிறது. ஆனால் அது ஓரளவுதான் உண்மை. ஏனென்றால் அது எப்படி ஒன்றுபடுத்து கிறதோ அப்படி பிரிக்கவும் செய்கிறது. இஸ்லாம் ஒரு நெருங்கிய கூட்டுரிமைக்கழகம். முஸ்லீம்களையும் முஸ்லீம் அல்லாதவர்களை யும் அது மிகவும் ஒத்திசைவற்ற முறையில் பிரித்துக் காண்கிறது. இஸ்லாமின் சகோதரத்துவம் அனைவரையும் உள்ளடக்கிய சகோதரத்

துவம் அல்ல. அது முஸ்லீம்களுக்கான முஸ்லீம் சகோதரத்துவம் மட்டுமே. இஸ்லாமில் தோழமை உணர்வு நிலவுகிறது என்பதில் ஐயமில்லை; ஆனால் அதன் அனுகூலத்தை அந்த மதத்தின் கட்டுக் கோப்புக்குள் இருப்பவர் மட்டுமே அனுபவிக்க முடியும். இந்தக் கட்டுக்கோப்பிற்கு வெளியே இருப்பவர்களுக்குப் பகைமையும், அவமதிப்பும், இகழ்ச்சியும், புறக்கணிப்பும்தான் காத்திருக்கின்றன. இஸ்லாமின் இரண்டாவது குறைபாடு அது ஸ்தல தன்னாட்சி முறையிலிருந்து மாறுபட்ட ஒரு சமூக தன்னாட்சி முறையாக அமைந்திருப்பதாகும். ஏனென்றால் அவன் தான் வாழும் நாட்டின் மீதன்றி, தான் கடைப்பிடிக்கும் சமயத்தின்மீது விசுவாசம் கொண் டிருக்கிறான். முஸ்லீமுக்கு இபி பெனே இபி பத்ரியா நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று. எங்கெல்லாம் இஸ்லாம் ஆட்சி நடை பெறுகிறதோ அவையெல்லாம் அவனது சொந்த நாடு. வேறுவித மாகச் சொன்னால், ஓர் உண்மையான முஸ்லீம் இந்தியாவைத் தனது தாயகமாக வரித்துக் கொள்ளவும் இந்துக்களை உற்றார் உறவினர்களாகக் கருதவும் இஸ்லாம் ஒருபோதும் அனுமதிக்காது. ஒரு மாபெரும் இந்தியராகவும் உண்மையான முஸ்லீமாகவும் திகழ்ந்தவருமான மௌலானா முகமது அலி இந்திய மண்ணை விட ஜெருசலேமில் தன்னை அடக்கம் செய்ய வேண்டும் என்று விரும்பியதற்கு ஒருவேளை இதுவே காரணமாக இருக்கலாம்.

முஸ்லீம் தலைவர்களின் சித்தாந்த மாற்றத்திற்கு அவர்களுடைய கருத்தில் ஏற்பட்ட எத்தகைய நேர்மையற்ற நெறி பிறழ்வும் காரணமாக இருக்க முடியாது. பாகிஸ்தான் என்ற ஒரு புதிய பெயரால் உருவகப்படுத்தப்படும் ஒரு புதிய கதிப்போக்கை சுட்டுகிற ஒரு புதிய கட்சியின் விடியலாக அது தோன்றக்கூடும். முஸ்லீம்கள் முதல் தடவையாக ஒரு புதிய கதிப்போக்கைப் பூசித்துப் போற்றும் ஒரு புதிய வழிபாட்டை மேற்கொண்டிருப்பது போல் அது தோன்றக்கூடும். ஆனால் உண்மையில் இது அப்படியல்ல. இந்த வழிபாடு புதியதாக இருக்கிறதென்றால் அவர்களது கதிப்போக்கு எனும் கதிரவன் இதுவரை மேகங்களிடையே மறைந்திருந்து இப் பொழுதுதான் அது முழுப் பிரகாசத்துடன், கண்ணை மின்வெட்டும் ஒளி வண்ணத்துடன் வெளிப்பட்டிருப்பதே அதற்குக் காரணம். புதிய கதிப்போக்கு எனும் இந்த காந்த சக்தி முஸ்லீம்களைத் தன்பால் ஈர்க்காமல் இருக்க முடியாது. திரு. ஜின்னா போன்றவர்களே பெரிதும் உலுக்கப்பட்டு எதிர்த்து நிற்க முடியாத அளவுக்கு அதன் சக்தி அபரிமிதமானதாக இருக்கிறது. இந்தக் கதிப்போக்கு ஸ்தூலமான வடிவில் இந்தியாவின் தேசப்படத்தில் படர்ந்துவருகிறது. தேசப்

படத்தைக் காணும் எவரும் இதனைக் கவனிக்காமல் இருக்க முடியாது. ஆண்டவனே முஸ்லீம்களுக்கு ஒரு தனித் தேசிய அரசைத் திட்டமிட்டு உருவாக்கித் தந்திருப்பதுபோல் அது அந்தத் தேசப் படத்தில் காட்சியளிக்கிறது.

இந்தப் புதிய கதிப்போக்கு எளிதாக வகுக்கப்பட்டு, திட்ட வட்டமான வடிவம் கொடுக்கப்படக் கூடியது மட்டுமன்றி கவர்ந்து ஈர்க்கக் கூடியதுமாகும்; ஏனென்றால் அனைத்து முஸ்லீம்களையும் ஒரே இஸ்லாமிய அரசில் இணைக்கும் முஸ்லீம் திட்டத்தை நடைமுறையில் செயல்படுத்தும் சாத்தியக் கூறுகளை இது தோற்றுவிக்கிறது; அது மட்டுமன்றி, பல்வேறு நாடுகளிலுள்ள முஸ்லீம்கள் அவர்கள் சார்ந்த நாட்டின் தேசியத்தை ஏற்று அதன் மூலம் இஸ்லாமிய சகோதரத்துவத்தைச் சிதைக்கும் அபாயத்தையும் இதன் மூலம் அது தவிர்க்கிறது.[1] இந்துஸ்தானத்திலிருந்து பாகிஸ்தான் பிரிந்தால் ஈரான், ஈராக், அரபியா, துருக்கி, எகிப்து முதலான முஸ்லீம் நாடுகள் கூட்டாக இணைந்து கான்ஸ்டான்டிநோபிளிலிருந்து லாகூர் வரையிலான ஒரே இஸ்லாமிய அரசை அமைக்க முடியும். இந்தப் புதிய கதிப்போக்கின் மந்திர ஆற்றலில், மயக்கும் அழகில் தனது மனத்தைப் பறிகொடுக்காத, இந்தியப் பகைப்புலனில் முஸ்லீம்களுக்குள்ள இடம் குறித்த தனது கருத்தை முற்றிலும் மாற்றிக் கொள்ளாத ஒரு முசல்மான் உண்மையில் விவேகமில்லாதவனாகத்தான் இருக்க வேண்டும்.

இந்தக் கதிப்போக்கு இவ்வளவு தெள்ளத் தெளிவாக இருக்கும் போது, முஸ்லீம்கள் அதனை ஏற்றுக்கொள்வதற்கு இவ்வளவு நீண்ட காலம் பிடித்ததானது ஓரளவு வியப்பளிப்பதாக இருக்கிறது. இதுதான் முஸ்லீம்களின் இறுதி கதிப்போக்கு என்பதை 1923 ஆம் ஆண்டு வாக்கிலேயே அவர்களில் சிலர் அறிந்திருந்தனர். வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த குடியமர்ந்த மாவட்டங்களைப் பஞ்சாபுடன் இணைக்கும்போது, அவற்றுக்கும் பழங்குடிகளின் பிரதேசத்துக்கும் இடையேயான நிர்வாக உறவுகள் பற்றி ஆராய்ந்து அறிவதற்காக அந்த ஆண்டில் சர் டென்னிஸ் பிரதே தலைமையில் இந்திய அரசாங்கம் நியமித்த வடமேற்கு எல்லைப்புற மாகாணக் குழுவின் முன்னர் கான் சாகேப் சர்தார் எம். குல்கான் அளித்த

1. இந்திய முசல்மான்கள் உட்பட எந்த ஒரு முஸ்லீமல்லாத நாட்டிலுமுள்ள முசல்மான்களும் தாயகத்தின்மீது பற்றுதல் கொள்ளும் தேசியத்தை சர் முகமது இக்பால் வன்மையாகக் கண்டித்தார்.

சாட்சியத்தை இதற்கு ஒரு சான்றாகக் கூறலாம். அவரது சாட்சியத்தின் முக்கியத்துவத்தை திரு. எம்.என். சமர்த் தவிர குழுவைச் சேர்ந்த வேறு எந்த உறுப்பினரும் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. திரு. சமர்த் தமது சிறுபான்மை அறிக்கையில் இதைச் சுட்டிக்காட்டியிருந்தார். இந்தப் புதிய கதிப்போக்கின் பரிணாம வரலாற்றில் மறைந்து கிடந்த ஓர் அம்சத்தை அவரது அறிக்கையின் பின்கண்ட பகுதிகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.[1] திரு. சமர்த் கூறுகிறார்:

> ''வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தையும் சுதந்திரப் பிரதேசத்தையும் பற்றி மட்டுமன்றி, பலுச்சிஸ்தான், பெர்சியா, ஆப்கனிஸ்தான் முதலியவை பற்றியும் சொந்த அனுபவ அறிவோடு ஆதாரப்பூர்வமாக இந்தக் கமிட்டியின் முன் பேசக் கூடிய இவரைப் போன்ற வேறொரு சாட்சியைக் காண முடியாது. தலைவர் 'இஸ்லாமிய அஞ்சுமன், டேரா இஸ்மையில் கான்' என்ற முறையில் அவர் பேச முன்வந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இந்த சாட்சியம் (கான் சாகேப் சர்தார் முகமது குல்கான்) பின்வருமாறு கேட்டேன்: 'எல்லைப்புற மாகாணத்தின் சிவில் அரசாங்கம் சிந்துவில் இருப்பது போன்ற அரசாங்கத்தின் பாணியில் மாற்றியமைக்கப்படுமானால், அப்போது சிந்து பம்பாய் ராஜ தானியின் ஒரு பகுதியாக இருப்பது போன்று எல்லைப்புற மாகாணமும் பஞ்சாபின் ஓர் இன்றியமையாத கூறாக இருக்க வேண்டியிருக்கும். இதுபற்றித் தாங்கள் கூறக்கூடியது என்ன?' அவர் இதற்குப் பதிலளிக்கும் போது, சுற்றி வளைக்காமல் கீழ்க்கண்டவாறு பட்டவர்த் தனமாக பதிலளித்தார்: 'இஸ்லாமைப் பொறுத்தவரையிலும், சர்வதேசக் கூட்டிணைவு குறித்த முகமதியர்களின் கண்ணோட் டத்தைப் பொறுத்தவரையிலும் அதை நான் எதிர்க்கிறேன்.' அவர் இவ்வாறு பதில் அளித்ததன் பேரில் அவரிடம் மேற் கொண்டு சில கேள்விகளைக் கேட்டேன். அவற்றிற்கு அவர் விஷயத்தைப் பூசி மெழுகி மழுப்பாமல், ஒளிவு மறைவின்றி, மனந்திறந்து பதிலளித்தார். அவரது பதிலின் சில பகுதிகளைக் கீழே தந்துள்ளேன்:

1. வடமேற்கு எல்லைப்புற விசாரணைக் கமிட்டி அறிக்கை, 1924, பக்கங்கள் 122-23.

*'கே:* உங்களது அஞ்சுமன் இயக்கத்துக்கு அடிப்படையாக இருப்பது அகில-உலக இஸ்லாம் எனும் கருத்தோட்டமாகும். அதாவது இஸ்லாம் என்பது ஒரு சர்வதேசக் கூட்டிணைவாகும். அவ்வாறிருக்கும்போது சிந்து மாகாணத்தை பஞ்சாபுடன் இணைப்பது இந்தக் கருத்தோட்டத்துக்கு பாதகமானதாக, தீங்கு விளைவிக்கக் கூடியதாக இருக்கும். உங்களைப் போன்று கருதுபவர்களிடம் இந்த எண்ணமே மேலோங்கி இருக்கும். அப்படித்தானே?

ப: ஆம். அப்படித்தான். எனினும் மேலும் சில விஷயங்களை கூற வேண்டியவனாக இருக்கிறேன். இந்து-முஸ்லீம் ஒற்றுமை ஒருபோதும் சாத்தியமல்ல. அது எந்நாளும் நிறைவேற முடியாதது என்பது அவர்களது கருத்து. எனவே, இந்த மாகாணம் தனித்திருக்க வேண்டும், இஸ்லாமுக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்குமிடையே ஓர் இணைப்புக் கண்ணியாக அது இருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். உண்மையில் என்னுடைய கருத்து என்னவென்று கேட்டால் அஞ்சுமனின் உறுப்பினன் என்ற முறையில் பின்கண்ட அபிப்பிராயத்தைத் தான் கூறுவேன். இந்துக்களும் முசல்மான்களும் பிரிந்திருக்க வேண்டும், 23 கோடி இந்துக்கள் தெற்கேயும் 8 கோடி முஸ்லீம்கள் வடக்கேயும் பிரிந்திருக்க வேண்டும். ராஸ் குமாயிலிருந்து[1] ஆக்ராவரை இந்துக்களுக்கும் ஆக்ராவிலிருந்து பெஷாவர் வரை முகமதியர்களுக்கும் தாருங்கள். ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு குடிபெயர்வதைத் தான் இங்கு குறிப்பிடுகிறேன். இது பரஸ்பரம் பரிமாற்றத்தைக் குறிக்கிறதே அன்றி, பூண்டோடு ஒழித்தலைக் குறிக்கவில்லை. போல்ஷிவிஸம் தற்போது தனிச் சொத்துரிமையை ஒழித்துக் கட்டி வருகிறது. அது சகலவற்றையும் தேசியமயமாக்கி வருகிறது. இந்தக் கருத்து பரிவர்த்தனை சம்பந்தப்பட்டதாக மட்டுமே இருக்கக்கூடும். இது இயல்பாகவே காரிய சாத்தியமற்றது. ஒருவேளை காரியசாத்தியமானதாக இருக்குமானால் மற்றதை விடவும் இதையே நாங்கள் விரும்புவோம்.

1. இவ்வாறுதான் மூலப்படிவத்தில் இருக்கிறது; கன்னியாகுமரி என்பதைத்தான் இவ்வாறு தவறாகக் குறிப்பிட்டிருக்கக் கூடும்.

'கே: இந்தப் பிரதான கருத்துதான் பஞ்சாபுடன் இணையக் கூடாது என்று உங்களை நிர்ப்பந்திக்கிறதா?

'ப: ஆம், மிகச் சரியாக சொன்னீர்கள்.

★ ★

'கே : இஸ்லாமிய சர்வதேசக் கூட்டிணைவைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டபோது, அரசியல் அம்சத்தைவிட சமய அம்சமே உங்கள் மனத்தில் மேலோங்கி இருந்தது என்று நினைக்கிறேன்.

ப: இயல்பாக அரசியல் அம்சம்தான் மேலோங்கி இருந்தது. அஞ்சுமன் என்பது அரசியல் சம்பந்தப்பட்டது; அடிப்படையில் முகமதியர் சம்பந்தப்பட்ட சகலமுமே சமயச் சார்புடையது தான். எனினும் அஞ்சுமன் ஓர் அரசியல் அமைப்பாகும்.

கே: இங்கு நான் உங்கள் அஞ்சுமனைப் பற்றிக் குறிப்பிட வில்லை. முசல்மான்களைப் பற்றியே குறிப்பிடுகிறேன். இஸ்லாமிய சர்வதேசக் கூட்டிணைவைப் பற்றி முசல்மான் கள் என்ன நினைக்கிறார்கள்? அவர்கள் மனத்தில் பிரதானமாக இடம் பெற்றிருப்பது மத அம்சமா அல்லது அரசியல் அம்சமா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

ப: இஸ்லாம் என்பது சமயத்துடனும் அரசியலுடனும் சம்பந்தப்பட்டது.

'கே : எனவே அரசியலும் சமயமும் பின்னிப் பிணைந்தது என்று கூறுகிறீர்கள்.

ப : ஆம், நிச்சயமாக!

★ ★

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தை பஞ்சாபுடன் இணைக்க மறுத்து அதனை ஒரு தனி பட்டாணியர் மாகாணமாக நிரந்தர மாக்குவதற்கு மேற்கொள்ளப்பட்டு வரும் முயற்சி ஆப்கனிஸ் தானுடனும் இந்தியாவுக்கு வெளியே உள்ள இதர முஸ்லீம் நாடு களுடனும் பட்டாணியர்களுக்குள்ள தொடர்புகளைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது எவ்வளவு அபாயகரமானது என்பதைக் காட்டும் குறிப்பிட்ட நோக்கத்துக்காகவே திரு. சமர்த் இந்தக் சாட்சியத்தைப் பயன்படுத்திக் கொண்டார். ஆனால் அதேசமயம் பாகிஸ்தான் பிரிவினைத் திட்டத்துக்கான கரு 1923 ஆம் ஆண்டுக்கு முன்பே உருக்கொண்டுவிட்டது என்பதையும் இந்தச் சாட்சியம் புலப்படுத்துகிறது.

மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களை வடமேற்கு எல்லைப்புற மாகாணத்துக்கும் விஸ்தரிக்க வேண்டும் என்ற தீர் மானத்தை 1924ல் பம்பாயில் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாட்டில் முன்மொழிந்து திரு. முகமது அலி பேசினார். இந்தியாவுடன் இணைந் திருப்பதா அல்லது காபூலுடன் இணைந்திருப்பதா என்பதைத் தீர்மானிக்கும் சுய நிர்ணய உரிமை எல்லைப்புற மாகாண முகமதி யர்களுக்கு வழங்கப்பட வேண்டும்[1] என்று அப்போது அவர் வலி யுறுத்தியதாகக் கூறப்படுகிறது. கான்ஸ்டான்டிநோபிளிலிருந்து டில்லி வரை ஒரு நேர்கோடு வரைந்தால், ஷகரான்பூர் வரை செல்லும் ஒரு முகமதிய பிரதேசம் அதில் அடங்கியிருப்பதைக் காணலாம் என்று ஓர் ஆங்கிலேயர் கூறியதாகவும் அவர் தெரிவித்தார். திரு. சமர்த் குறிப்பிட்ட சாட்சியின் வாக்குமூலத்திலிருந்து அம்பலமான பாகிஸ்தான் திட்டம் முழுவதுமே திரு. முகமது அலிக்குத் தெரிந் திருப்பது சாத்தியமே; இதனால்தான் சாட்சி வெளியிடத் தவறிவிட்ட ஓர் இரகசியத்தை முன்பின் யோசிக்காமல் அவர் வெளியிட்டு விட்டார்; பாகிஸ்தானை இறுதியில் ஆப்கனிஸ்தானுடன் இணைக் கும் திட்டமே அது.

எனினும் பாகிஸ்தான் திட்டம் பற்றி 1924 ஆம் ஆண்டுக்கும் 1930 ஆம் ஆண்டுக்கும் இடையே முஸ்லீம்கள் அதிகம் பேசிய தாகவோ, ஏதேனும் உருப்படியான நடவடிக்கை எடுத்துக் கொண்ட தாகவோ தெரியவில்லை. முஸ்லீம்கள் இத்திட்டத்தை கிட்டத்

---

1. இது சம்பந்தப்பட்ட விவரத்தை 1925 ஏப்ரல் 11ஆம் தேதி கல்கத்தாவில் நடைபெற்ற இந்து மகாசபை மாநாட்டில் லாலா லஜபதிராய் நிகழ்த்திய தலைமை உரையில் காணலாம் - இந்தியக் காலாண்டு பதிவேடு, 1925, தொகுதி I, பக். 379.

தட்ட குழிதோண்டிப் புதைத்துவிட்டதாகவே தோன்றுகிறது. பிரிவினைக்குப் பதிலாக வழக்கமான ஒரு தேச சித்தாந்தத்தின் அடிப்படையில் தங்களுக்குப் பல்வேறு பாதுகாப்புகள் கோரி இந்துக்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். எனினும் 1930ல் வட்டமேசை மாநாடு நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் சில முஸ்லீம்கள் சேர்ந்து லண்டனைத் தலைமை அலுவலகமாகக் கொண்டு ஒரு குழுவை அமைத்துக் கொண்டனர்; பாகிஸ்தான் திட்டத்தை வட்டமேசை மாநாட்டில் பிரபலப்படுத்துவதே அவர்களது நோக்கம். இதன் பொருட்டு, பல துண்டுப் பிரசுரங்களும் சுற்றறிக்கைகளும் தயாரிக்கப்பட்டு வட்டமேசை மாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளிடம் விநியோகிக்கப்பட்டன. பாகிஸ்தான் கோரிக்கையை வலியுறுத்தி அதற்கு ஆதரவான வாதங்களும் சான்றுகளும் அந்தப் பிரசுரங்களில் எடுத்துரைக்கப்பட்டிருந்தன. அப்போதும்கூட இதில் யாரும் அக்கறையோ ஆர்வமோ காட்டவில்லை. வட்டமேசை மாநாட்டில் பங்கு கொண்ட முஸ்லீம் பிரதிநிதிகள் இவற்றையெல்லாம் சற்றும் பொருட்படுத்தவில்லை; இவற்றில் எத்தகைய கவனமும் கரிசனமும் காட்டவில்லை.[1]

இந்தத் திட்டம் நனவாக முடியாத ஒரு வெறுங் கனவு என்று ஆரம்பத்தில் முஸ்லீம்கள் நினைத்திருக்கக் கூடும். பின்னால், இத்திட்டம் நடைமுறை சாத்தியமானதுதான் என்று உணர்ந்தபோதும் கூட அவர்கள் இதனை ஒரு பிரச்சினையாக எழுப்பவில்லை. இத் திட்டத்தை ஏற்குமாறு பிரிட்டிஷாரையும் இந்துக்களையும் நிர்ப் பந்திக்கும் அளவுக்கு அவர்கள் அப்போது ஸ்தாபன ரீதியாக ஒன்று திரண்டு வலுமிக்கவர்களாக இல்லாததே இதற்குக் காரணம். வட்டமேசை மாநாட்டில் பாகிஸ்தான் கோரிக்கையை முஸ்லீம்கள் ஏன் வலியுறுத்தவில்லை என்பது புரியாத புதிராக இருக்கிறது. இதற்குப் பல காரணங்கள் இருக்கக்கூடும். 14 அம்சக் கோரிக்கைகள் சம்பந்தமாக அச்சமயம் முசல்மான்களுக்கும் இந்துக்களுக்கும் இடையே ஒரு சர்ச்சை நடைபெற்று வந்தது. இதன் முடிவு பிரிட்டிஷார் மேற்கொள்ளும் போக்கைப் பொறுத்திருந்தது. எனவே,

1. ஒரு பொதுவான மத்திய அரசாங்கம் இருக்கக் கூடாது என்பது பாகிஸ்தான் திட்டத்தின் பிரதான அம்சம் எனில், வட்டமேசை மாநாட்டுப் பிரதிநிதிகளில் அதனை ஆதரித்த ஒரே உறுப்பினர் சர் முகமது இக்பால்தான். வட்டமேசை மாநாட்டின் மூன்றாவது அமர்வில் அவர் பேசும்போது, இந்தியாவுக்கு மத்திய அரசாங்கம் என்று எதுவும் இருக்கக் கூடாது, மாகாணங்கள் அனைத்தும் லண்டனிலுள்ள ராஜாங்க மந்திரியுடன் நேரடித் தொடர்பு கொண்ட தன்னாட்சி உரிமையுடைய சுதந்திரக் குடியேற்ற நாட்டு அந்தஸ்துடையவையாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தினார்.

இச்சமயத்தில் பாகிஸ்தான் கோரிக்கையை முன்வைத்து பிரிட்டி ஷாரின் அதிருப்தியைத் தேடிக்கொள்ள வேண்டாம் என்று அவர்கள் நினைத்திருக்கக் கூடும். முசல்மான்கள் சிறந்த ராஜதந்திரிகள்; அரசியல் என்பது ஒரு சூதாட்டம், தக்க தருணம் வரும்போது செயலில் இறங்குவதுதான் பலன் தரும் என்ற பிஸ்மார்க்கின் சித்தாந்தத்தை நன்கு அறிந்தவர்கள்; எனவே 14 அம்சக் கோரிக்கை கள் குறித்த தகராறில் பிரிட்டிஷாரின் முடிவு தெரியும் வரை பல்லைக் கடித்துக் கொண்டு காத்திருப்பதென அவர்கள் தீர்மானித்தனர்.[1]

பாகிஸ்தான் கோரிக்கையை முன்வைப்பதில் தாமதம் காட்டப் பட்டதற்கு இன்னொரு காரணமும் கூறப்படுகிறது. பாகிஸ்தான் கோரிக்கையை தத்துவார்த்த ரீதியில் நியாயப்படுத்துவதற்கு முஸ்லீம் தலைவர்கள் அண்மைக் காலம் வரை அறிந்திருக்க முடியாதிருந் திருக்கக் கூடும். பாகிஸ்தான் என்பது இந்திய அரசியல் சதுரங்கப் பலகையில் காயை எளிதாக நகர்த்தும் சாதாரண விஷயமல்ல. இதில் ஒரு நாட்டையே துண்டாடும், பிளவுபடுத்தும் பிரச்சினை சம்பந்தப் பட்டிருப்பதால், இதுவரை மேற்கொள்ளப்படாத மிகப்பெரிய காய் நகர்வாகும் இது. பாகிஸ்தான் திட்டத்தை ஆதரிக்க எந்த முகமதிய னாவது துணிந்து முன்வந்தால், இத்தகைய வன்முறையான, மிகவும் கட்டுமீறிய திட்டத்தை மேற்கொள்வதற்கு என்ன தார்மிக, தத்து வார்த்த நியாயம் இருக்கிறது என்று அவனிடம் கேட்கப்படுவது நிச்சயம். பாகிஸ்தான் கோரிக்கைக்கு ஒரு தத்துவார்த்த அடிப் படையை அவர்கள் ஏன் இதுவரை கண்டுபிடிக்கவில்லை என்பது முற்றிலும் புரிந்துகொள்ளக்கூடியதே. இதனால்தான் முஸ்லீம் தலை வர்கள் இந்திய முசல்மான்களை ஒரு சமூகமாக அல்லது ஒரு சிறுபான்மையினராகவே குறிப்பிட்டு வந்தனர். முஸ்லீம்களை ஒரு தேசம் என்று அவர்கள் என்றுமே குறிப்பிட்டதில்லை. ஒரு சமூகத் திற்கும் ஒரு தேசத்துக்கும் இடையேயான வேறுபாடு மிகவும் மெல்லியது; நொய்ம்மையானது; எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே அந்த வேறுபாடு முனைப்பானதாகத் தெரியும் என்று கூறமுடியாது. ஒவ்வொரு நாடுமே ஏறத்தாழ கலப்பு நாடுதான்; பெரும்பாலான நாடுகளில் பலதரப்பட்ட மக்கள் வாழ்கின்றனர்; அவர்கள் வெவ்வேறு மொழிகளைப் பேசுகின்றனர்; வேறுபட்ட சமயக் கோட்பாடுகளையும்

1. பாகிஸ்தான் கோரிக்கை பற்றி பிரிட்டிஷ் அதிகாரிகளுடன் தனிப்பட்ட முறையில் விவாதித்தபோது, அதனை அவர்கள் ஆதரிக்கவில்லை எனக் கூறப்படுகிறது. எனவே அவர்களது அதிருப்தியை இப்போது தேடிக்கொள்ள வேண்டாம் என எண்ணி பாகிஸ்தான் கோரிக்கையை முஸ்லீம்கள் வலியுறுத்தாமல் இருந்திருக்கக் கூடும்.

சமூகப் பழக்க வழக்கங்களையும் பின்பற்றுகின்றனர்; தொளதொளப்பான முறையில் இணைந்த பல்வேறு குழுக்களின் ஒரு கதம்பமாக அமைந்திருக்கின்றனர். எந்த ஒரு நாடும் சொல்லிலும் செயலிலும் ஒன்றுபட்ட ஒரே சமுதாயமாக இருந்ததில்லை. இப்படிப்பட்ட நிலைமையில், மக்களில் ஒரு பிரிவினர் ஒரு தேசத்துக்குரிய அம்சங்களைத் தம்முள் கொண்டிருந்தபோதிலும் தவறாக தங்களை ஒரு சமூகமாகப் பாவித்துக் கொள்ளக் கூடும். இரண்டாவதாக, ஏற்கெனவே நாம் சுட்டிக்காட்டியதுபோல், ஒரு தேசமாக உருவாகக் கூடிய எல்லா அம்சங்களையும் கொண்டிருந்தபோதிலும் ஒரு மக்களினத்திடம் தேசிய உணர்வு இல்லாதிருக்கக்கூடும்.

இது ஒருபுறமிருக்க, சிறுபான்மையினரின் உரிமைகள், பாதுகாப்புகள் எனும் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது இந்த வேறுபாடு அத்தனை முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல. ஒரு சிறுபான்மையினர் ஒரு சமூகமாக இருந்தாலும் சரி, தேசமாக இருந்தாலும் சரி அவர்கள் சிறுபான்மையினர்தான்; ஒரு சிறு தேசத்தின் உரிமைகளும் பாதுகாப்புகளும் ஒரு சிறு சமூகத்தின் உரிமைகளிலிருந்தும் பாதுகாப்புகளிலிருந்தும் மிகவும் வேறுபட்டவையாக இருக்க முடியாது. பெரும்பான்மையினரின் கொடுங்கோன்மையை, வல்லாட்சியை எதிர்த்தே பாதுகாப்பு கோரப்படுகிறது; சிறுபான்மையினர் மீது பெரும்பான்மையினர் கொடுங்கோன்மை செய்வது நிலைநாட்டப்பட்டுவிடும்போது, அதை எதிர்த்துப் பாதுகாப்பு கோரும் சிறுபான்மையினர் ஒரு சமூகமா அல்லது தேசமா என்பது முக்கியமல்ல. ஒரு சமூகத்துக்கும் தேசத்துக்கும் இடையே வேறுபாடு இல்லை என்று இதற்குப் பொருள் அல்ல. உண்மையிலேயே இந்த வேறுபாடு பரந்தகன்றது. இதனை இரத்தினச் சுருக்கமாகப் பின்வருமாறு கூறலாம்; ஒரு சமூகம் ஏனைய சிறிய அல்லது பெரிய சமூகங்களிலிருந்து என்னதான் வேறுபட்டிருந்தாலும், முரண்பட்டிருந்தாலும் இறுதிக் கதிப்போக்கில் அது மற்ற சமூகங்களுடன் ஒன்றுபட்டிருக்கிறது. ஆனால் அதே சமயம் ஒரு தேசமோ நாட்டின் ஏனைய அங்கப் பகுதிகளுடன் வேறுபட்டிருப்பது மட்டுமல்ல, அந்தப் பகுதிகளின் கதிப்போக்குக்கு முற்றிலும் முரண்பட்டதொரு தனது சொந்தக் கதிப்போக்கில் நம்பிக்கை வைத்து அதனைப் பேணிப் போற்றி வருகிறது. இந்த வேறுபாடு மிக ஆழமானதாக எனக்குத் தோன்றுகிறது. என்னைப் பொறுத்த வரையில் ஒரு சமூகத்தை ஒரு தேசத்திலிருந்து வேறுபடுத்திக் காண்பதற்கு இதனை ஓர் உரைகல்லாகப் பயன்படுத்த நான் தயங்க மாட்டேன். தங்களிடையே வேறுபாடுகள் இருந்தபோதிலும் தங்களுக்கும்

தங்களை எதிர்ப்பவர்களுக்கும் ஒரு பொதுவான கதிப்போக்கை ஏற்கும் மக்களை ஒரு சமூகம் எனக் கூறலாம். மற்றவர்களிடமிருந்து வேறுபட்டிருப்பது மட்டுமன்றி, மற்றவர்கள் ஏற்றுக்கொள்ளும் அதே கதிப்போக்கைத் தங்களுடைய கதிப்போக்காக ஏற்க மறுக்கும் மக்களை ஒரு தேசம் என அழைக்கலாம். இவ்வாறு ஒரு பொதுவான கதிப் போக்கை ஏற்பதும் ஏற்காததும்தான் இந்துக்களுடனான உறவைப் பொறுத்தவரையில் தீண்டப்படாதவர்களும், கிறித்தவர்களும், பார்சி களும் சமூகங்களாக இருப்பதற்கும் முஸ்லீம்கள் ஒரு தேசமாக இருப் பதற்கும் காரணமாகும். எனவே, அரசு சமுதாயத்தில் ஒத்திசைவுக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது, இறுதி கதிப்போக்கு சம்பந்தப் பட்ட வேறுபாடு மிகவும் முக்கியமான அடிப்படையான வேறுபாடு என்பது தெள்ளத் தெளிவு. இந்த வேறுபாடு இயக்காற்றல் இயல்பு கொண்டது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இது நீடிக்கு மானால் நாடு சிதறுண்டு, பிளவுண்டு போகும் நிலைமைதான் ஏற்படும். ஆனால் பாதுகாப்புகளைப் பொறுத்தவரையில் ஒரு தேசத்துக்கும் ஒரு சமூகத்துக்கும் இடையே வேறுபாடு இருப்பதற் கில்லை. ஒரு தேசத்துக்குள்ள அதே உரிமைகளையும் பாதுகாப்பு களையும் பெற ஒரு சமூகம் தகுதி பெற்றிருக்கிறது.

முஸ்லீம் தலைவர்கள் முஸ்லீம்களை ஒரு சமூகமாகவும் சிறுபான்மையினராகவும் குறிப்பிட்டுப் பேசுவது ஒரு வழக்கமாகி விட்டதே பாகிஸ்தான் கோரிக்கைக்கு ஒரு தத்துவார்த்த அடிப்படை யைக் காணுவதில் தாமதம் ஏற்பட்டதற்குக் காரணமாகும். இந்தப் பதப்பிரயோகம் அவர்களைத் தவறான பாதையில் இட்டுச் சென்று முட்டுச் சந்தில் கொண்டு வந்து நிறுத்திவிட்டது. தாங்கள் ஒரு சிறுபான்மை சமூகத்தினர் என்பதை அவர்களே ஒப்புக்கொண்டதால், தங்களுக்கு உரிய பாதுகாப்புகள் கோருவதைத் தவிர வேறு மார்க்க மில்லை என்று கருதினர்; அவ்வாறே கோரவும் செய்தனர்; இதிலேயே ஏறத்தாழ அரை நூற்றாண்டுக் காலம் மூழ்கிப் போயிருந்தனர். தங்களை ஒரு சிறுபான்மையினர் என்று அறிவிப்பதுடன் நில்லாமல், ஒரு சமூகமாக உள்ள சிறுபான்மையினருக்கும், ஒரு தேசமாக உள்ள சிறுபான்மையினருக்கும் இடையே உள்ள வேறுபாட்டைப் பாகு படுத்திக் காண முற்பட்டிருப்பார்களேயானால் பாகிஸ்தான் கோரிக்கைக்கான தத்துவார்த்த அடிப்படையைக் கண்டறியும் பாதைக்கு அவர்களை அது இட்டுச் சென்றிருக்கும். அவ்வாறு நிகழ்ந் திருக்குமானால் அநேகமாக பாகிஸ்தான் இன்னமும் முன் கூட்டியே உருவாகி இருக்க முடியும்.

இது எப்படியிருந்தபோதிலும், முஸ்லீம்கள் ஒரு முழு மாற்றத்தை அடைந்திருக்கிறார்கள் என்பதிலும், எத்தகைய முறை கேடான தூண்டுதலாலும் இந்த மாற்றம் ஏற்படவில்லை என்பதிலும், மாறாக தங்களது உண்மையான, இறுதிக் கதிப்போக்கு என்ன என்பதைத் தெரிந்து கொண்டதன் பேரிலேயே அவர்களிடையே இந்த மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதிலும் ஐயமில்லை. இந்தத் திடீர் மாற்றம் சிலருக்கு அதிர்ச்சி அளிக்கக்கூடும். ஆனால் கடந்த இருபது ஆண்டுகளாக இந்து-முஸ்லீம் அரசியலை ஆராய்ந்து வந்திருப்பவர்கள் இந்த மாற்றத்தை, இரு தரப்பினரும் பிரிவதை எதிர்பார்க்கவே செய்தனர். இந்து-முஸ்லீம் அரசியல் பாதை துயரமிக்க, தீச்சகுனமான ஒரு போக்குப் பாதையாகவே இருந்து வந்திருக்கிறது. இந்துக்களும் முஸ்லீம்களும் இணையொத்த பாதையில் நடைபோட்டனர். அவர்கள் ஒரே திசைவழியில் சென்றனர் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஒருபோதும் அவர்கள் ஒரே பாதையில் சென்றதில்லை. பிரிட்டிஷாருக்கு எதிராக இந்துக்களின் அரசியல் உரிமைகளை நிலைநாட்டும் பொருட்டு 1885ல் இந்துக்கள் காங்கிரஸ் கட்சியைத் தொடங்கினர். இந்துக்கள் வீசிய வலையில் சிக்குவதற்கும் காங்கிரசில் சேருவதற்கும் முஸ்லீம்கள் மறுத்துவிட்டனர். 1885 முதல் 1906 வரை முஸ்லீம்கள் இந்து அரசியல் நீரோட்டத்திலிருந்து ஒதுங்கி விலகியே நின்றனர். முஸ்லீம் சமூகம் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டிய அவசியத்தை 1906ல் அவர்கள் உணர்ந்தனர். அப்போதேகூட முஸ்லீம் அரசியல் வாழ்க்கை எனும் நீரோட்டம் தங்குதடையின்றிப் பாய்ந்து செல்வதற்கு ஒரு தனி வாய்க்கால் வகுத்தனர். அதுதான் முஸ்லீம் லீக் எனும் தனி அரசியல் அமைப்பு. முஸ்லீம் லீக் தோன்றியது முதலே முஸ்லீம்களின் அரசியல் நீரோட்டம் இந்தத் தனி வாய்க்கால் வழியாகத் தான் பிரவகித்துச் சென்றது. சில அபூர்வமான சந்தர்ப்பங்களில் தவிர காங்கிரசும் லீகும் தனித்தனியாகவே செயல்பட்டு வந்தன. அவற்றின் நோக்கங்களும் குறிக்கோள்களும் ஒரே மாதிரியானவையாக இருக்கவில்லை. ஒரே இடத்தில் தமது வருடாந்தர மாநாடுகளை நடத்துவதைக் கூட அவை தவிர்த்துவந்தன; ஒன்றின் நிழல் மற்றொன்றின் மீது படர்ந்துவிடுமோ என்று அச்சம். லீகும் காங்கிரசும் சந்தித்துக் கொள்ளவில்லை என்று இதற்குப் பொருள் அல்ல. பேச்சுவார்த்தைகளுக்காக மட்டுமே அவை சந்தித்துக் கொண்டன; இவற்றில் ஒரு சில சந்திப்புகள் வெற்றியடைந்தன; பெரும்பாலான சந்திப்புகள் படுதோல்வியிலேயே முடிந்தன. 1916ல் அவை லக்னோவில் சந்தித்தன; அவற்றின் முயற்சிகள் அப்போது வெற்றி வாகை சூடின. 1925ல் சந்தித்தபோது அவற்றின் முயற்சிகளுக்கு வெற்றி

கிட்டவில்லை. 1928ல் முஸ்லீம்களில் ஒரு பகுதியினர் காங்கிரசுடன் ஒத்துழைப்பதற்குத் தயாராக இருந்தனர். மற்றொரு பிரிவினர் இதற்கு மறுத்துவிட்டனர். பிரிட்டிஷாரைச் சார்ந்திருக்கவே அவர்கள் விரும்பினர். கிலாபத் இயக்கத்தின்போதுதான் இந்த இரு நீரோட்டங்களும் அவற்றின் செல்லும் திசையை மாற்றிக்கொண்டு, ஒரே ஓடையில் ஒரே நீரோட்டமாகப் பொங்கிப் பெருக்கெடுத்துச் சென்றன. ஆண்டவன் அருளால் ஒன்று சேர்ந்த இந்த நீரோட்டத்தை இனி எவரும் பிரிக்க முடியாது என்று பலரும் நம்பினர். ஆனால் இந்த நம்பிக்கை பொய்த்துவிட்டது. இந்த இரு நீரோட்டங்களையும் பிரிக்கக் கூடிய ஏதோ ஒன்று அவற்றின் இயையில் இருப்பது தெரியவந்தது. அவற்றின் சங்கமம் நிகழ்ந்த ஒரு சில ஆண்டு களுக்குள்ளேயே கிலாபத் இயக்கத்தின் குறிக்கோள் மறைந்த உடனேயே ஒரு நீரோட்டத்தின் நீர் இன்னொரு நீரோட்டத்தின் நீருக்கு எதிராக வன்மையான முறையில் செயல்படத் தொடங்கிற்று; ஓர் அந்நியப் பொருள் நுழைந்தால் உடல் எவ்வாறு எதிர்விளைவு களை உண்டுபண்ணுமோ அவ்வாறு இது நடைபெற்றது. ஒன்று மற்றொன்றை வெளியேற்றுவதிலும், பரஸ்பரம் பிரிந்து செல்லு வதிலும் முனைந்து ஈடுபடும் போக்கை அவை வெளிப்படுத்த ஆரம்பித்தன. இது மிக. பயங்கர விளைவுகளை ஏற்படுத் திற்று;- நீரோட்டங்கள் பற்றிக் கூறுவதற்குப் பயன்படுத்தப்படும் மொழியில் கூறுவதானால் - இவ்விரு நீரோட்டங்களும் பிரிந்தபோது கட்டுக்கடங்காத வேகத்துடனும், வருணிக்க இயலாத வன்மை யுடனும், கரைபுரண்டோடும் காட்டாற்று வெள்ளம் போல் பொங்கி எழுந்து தறிகெட்டு ஓடின; ஒன்றுக்கொன்று தொலைதூரத்தில், முன்னிலும் மிக ஆழமான கால்வாய்கள் வழியாக அவை பெருக் கெடுத்துச் சென்றன. இந்த நீரோட்டங்கள் தாற்காலிகமாக நிலை கொண்டிருந்த நீர்நிலையிலிருந்து உக்கிரத்தோடு வெடித்துப் பீரிட்டுப் பாய்ந்த வேகத்தில் அவற்றின் திசைவழியே மாறிப் போய்விட்டது. ஒருசமயம் அவற்றின் திசைவழி ஒரு போக்குடையதாக இருந்தது. இப்போது அவை நேர் எதிர்திசைகளில் சென்று வருகின்றன. ஒரு நீரோட்டம் முன்னர் போலவே கிழக்கு நோக்கிப் பாய்ந்து கொண் டிருக்கிறது. மற்றொரு நீரோட்டமோ எதிர் திசையில் மேற்கு நோக்கிப் பாய்ந்து செல்லத் தொடங்கியிருக்கிறது. நான் இங்கு பயன்படுத்தியுள்ள சொல்லணியை வேண்டுமானால் ஒருவர் ஆட் சேபிக்கலாமே தவிர, இந்து-முஸ்லீம் அரசியல் வரலாறு குறித்த ஒரு தவறான கணிப்பு என்று இதனைக் கூறமுடியாது என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்த இணைப்போக்கை மனத்

தில் கொள்ளும் எவரும் இது திடீரென ஏற்பட்ட மாற்றமல்ல என்பதை உணர முடியும். இந்த மாற்றத்தை ஒரு புரட்சி எனக் கூறுவதானால், இந்து-முஸ்லீம் அரசியலில் காணப்படும் இந்த இணைபோகு நிலையை அந்தப் புரட்சியின் பரிணாம வளர்ச்சி எனச் சொல்லலாம். முஸ்லீம் அரசியல் ஓர் இணைபோகு வழியில் செல்லுவதையும், இந்து அரசியல் நீரோட்டத்தில் அது ஒருபோதும் இணையாததையும் நவீன கால இந்திய வரலாற்றில் ஒரு விந்தையான அம்சம் எனலாம். முஸ்லீம்கள் இவ்வாறு தங்களைத் தனிமைப் படுத்திக் கொள்வதற்கு ஒரு புதிரான உணர்வால் உந்தப்படுகின்றனர்; அந்த உணர்வின் பிறப்பிடத்தை அவர்களால் கூற முடியாது; ஒரு மறைவான கையால் அவர்கள் வழிநடத்தப்படுகின்றனர்; அந்தக் கையை அவர்களால் காணமுடியாது; ஆனால் அதேசமயம் இந்துக்களிடமிருந்து ஒதுங்கியிருக்கும்படி எப்போதும் அது அவர்களை ஏவி வருகிறது. இந்தப் புதிரான உணர்வு, இந்த மறைந்துள்ள கரம் பாகிஸ்தானால் உருவகப்படுத்தப்படும் அவர்களது முன்கூட்டயே நிர்ணயிக்கப்பட்ட கதிப்போக்கே தவிர வேறு எதுவுமல்ல; இந்தக் கதிப்போக்கை அவர்கள் அறியாதிருந்தாலும் அது அவர்களுள் செயல்பட்டு வந்தது. இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, பாகிஸ்தான் திட்டம் புதியதோ, அல்லது திடீரெனத் தோன்றியதோ அல்ல என்பது புலனாகும். இப்போது நடைபெற்றிருக்கும் ஒரே விஷயம் தெளிவற்றதாக இருந்த ஒன்று இப்போது முழு ஒளி வண்ணத்துடன் பிரகாசிப்பதும், பெயரெதுவும் இல்லாததாக இருந்த ஒன்று இப்போது தனக்கு ஒரு பெயரை வரித்துக் கொண்டிருப்பதும்தான்.

## VI

இப்போது நடைபெற்ற முழு வாதத்தையும் இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதானால், ஓர் ஒன்றுபட்ட இந்தியா என்பது சுதந்திர இந்தியாவுடன் இன்னும் சொல்லப்போனால் குடியேற்ற நாட்டு அந்தஸ்து கொண்ட இந்தியாவுடன்கூட ஒத்துப்போக முடியாதது. இந்தியா ஒரே முழுமையாக இருக்க வேண்டும் என்பதை ஆதார அடிப்படையாகக் கொண்டால் சுதந்திரம் பெறும் அதன் நம்பிக்கைகள் அனைத்தும் சீர்குலைந்து போகும். சுதந்திரத்தைத் தேசியக் கதிப்போக்காகக் கருதினாலும் அப்போதும் ஏமாற்றமே மிஞ்சும்; ஏனென்றால் இந்துக்கள் அந்தப் பாதையைப் பின்பற்ற மாட்டார்கள்.

அவர்கள் அந்தப் பாதையைப் பின்பற்றா திருப்பதற்குக் காரணம் உண்டு. இந்துக்கள் மீது முஸ்லீம்கள் ஆதிக்கம் செலுத்துவதற்கான வாய்ப்பு இந்தப் பாதையில்தான் அடங்கியுள்ளது என்று அவர்கள் அஞ்சுகின்றனர். சுதந்திரத்திற்காக முஸ்லீம்கள் செய்துவரும் முயற்சி கபடற்றதல்ல என்று இந்துக்கள் கருதுகின்றனர். பிரிட்டிஷ் சாம் ராஜ்யப் பாதுகாப்பு வளையத்திலிருந்து இந்துக்களை வெளியே கொண்டுவந்து, அண்டை முஸ்லீம் நாடுகளுடன் கூட்டு சேர்ந்து அவற்றின் உதவியுடன் அவர்களைக் கீழ்ப்படுத்துவதற்கே சுதந் திரத்தைப் பயன்படுத்த முஸ்லீம்கள் சூழ்ச்சி செய்கிறார்கள் என்பது இந்துக்களின் பயம். அதேசமயம் முஸ்லீம்களைப் பொறுத்த வரை யில் சுதந்திரம் என்பது முடிவான குறிக்கோள் அல்ல. மாறாக, அது முஸ்லீம் ராஜ்யத்தை நிறுவுவதற்கான ஒரு வழிமுறையே ஆகும். தேசியக் கதிப்போக்கை குடியேற்ற நாட்டு அந்தஸ்து அடிப்படையில் நோக்கினாலும் ஏமாற்றம் காத்திருக்கிறது; ஏனென் றால் முஸ்லீம்கள் அதற்கு உடன்பட மாட்டார்கள். குடியேற்ற நாட்டு அந்தஸ்துத் திட்டத்தின் கீழ் ஒருவருக்கு ஒரு வாக்கு, ஒரு வாக்குக்கு ஒரு மதிப்பு என்ற கோட்பாட்டின் அனுகூலத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்துக்கள் தங்கள்மீது இந்து ராஜ்யத்தைத் திணிப்பார்கள் அது இந்துக்களால் இந்துக்களைக் கொண்டு இந்துக்களுக்காக நடைபெறும் ராஜ்யமாகவே இருக்கும் என்று அவர்கள் அச்சம் கொள்கிறார்கள். ஆகவே, இந்தியா ஓர் ஒன்று பட்ட நாடாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்படுமானால் அதன் எதிர்காலம் முற்றிலும் ஏமாற்றமளிப்பதாக இருப்பதே இந்தியா வின் தலைவிதியாகிவிடும்.

ஒன்றுபட்ட இந்தியா போராடிப் பெறுவதற்குரிய ஒரு குறிக் கோள்தானா என்பது பரிசீலிக்க வேண்டிய ஒரு பிரச்சினையாகும். முதலாவதாக, இந்தியா ஒன்றுபட்டதாக இருந்தாலும் கூட அது ஒருபோதும் ஓர் ஒருங்கிணைந்த முழுமையாக இருக்க முடியாது. இந்தியா பெயரளவில் தொடர்ந்து ஒரே நாடாக இருந்து வரலாம்; ஆனால் உண்மையில் அது இரண்டு தனித்தனிப் பகுதிகள் - பாகிஸ்தான் இந்துஸ்தான் - செயற்கையான முறையில் வலிந்து இணைக்கப்பட்ட ஒரு நாடாகவே இருக்கும். முக்கியமாக இரு-தேசக் கோட்பாட்டின் அடிப்படையில் அது இவ்வாறுதான் இருந்துவரும். இந்நிலைமையில், ஒற்றுமை கருத்துக்கு இந்திய சூழ்நிலையில் அவ்வளவாக ஆதரவு இருக்காது; சாமானிய இந்துவையும் சரி,

முஸ்லீமையும் சரி அது கவர்ந்து ஈர்க்காது; அவனது பார்வை எல்லாம் அவன் வாழும் நிலப்பகுதி மீதுதான் பதிந்திருக்கும். எனினும் இரு தரப்பிலுமுள்ள கற்பனைத் திறமும் சூதுவாதுமற்ற மனங்களை இக் கருத்து கவரவே செய்கிறது. ஆனால் இரு தேசக் கோட்பாடு இந்த உணர்ச்சிவயப்பட்ட ஒற்றுமை ஆர்வம் வளர்வதற்குக் கூட இடம் கொடுக்காது. இந்த சிறுமை விஷக்கிருமி அரசியலில் பரவுவதானது வலிந்து பெறப்பட்ட இந்த இணைவைக் களைந்தெறிவதற்கு ஒரு ஜீவமரணப் போராட்டத்தை நடத்தும்படியான மனோபாவத்தை ஒருநாள் நிச்சயம் ஏற்படுத்தவே செய்யும். அப்படி ஒருக்கால் ஏதேனும் சில மேம்பட்ட காரணங்களால் இந்தக் கலைப்பு நடைபெறவில்லை என்றால் அப்போது இந்தியாவுக்கு ஒரு விஷயம் கண்டிப்பாக நிகழும் - அதாவது, தொடர்ந்து நீடிக்கும் இந்தக் கூட்டிணைப்பு அதன் உள் ளுரத்தை, உயிர்ச்சாற்றை உறிஞ்சிக் கொண்டே இருக்கும்; அதன் ஒன்றிப்பைத் தளர்த்திய வண்ணமிருக்கும்; அதன் மக்கள் தன்மீது கொண்டுள்ள பற்றுதலையும் நம்பிக்கையையும் பலவீனப்படுத்திக் கொண்டிருக்கும்; அதன் தார்மிக, பொருளாயத வளங்களின் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்காது போனாலும் அவற்றைப் பயன் படுத்துவதைத் தடுத்துக் கொண்டிருக்கும். சுருக்கமாகக் கூறினால் இந்தியா இரத்தசோகை நோயால் பீடிக்கப்பட்ட ஒரு நோயாளி போல் நலிவுற்றுத் தளர்ந்துபோய், உரமற்று, வலிமை குன்றிய நாடாக இருக்கும்; ஒரு நடைபிணமாகக் காட்சியளிக்கும்; செத்தும் புதைக்கப்படாத உயிரற்ற உடலாகத் தென்படும்.

இந்த வலிந்து பெறப்பட்ட கூட்டிணைப்பின் இரண்டாவது பிரதிகூலம் இந்து-முஸ்லீம் உடன்பாட்டிற்கான ஓர் அடிப்படையைக் கண்டறிய வேண்டிய அவசியம் ஏற்படுவதாகும். ஓர் உடன்பாட்டை எய்துவது எவ்வளவு கடினம் என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை. நாட்டின் இதர நலன்களுக்கு ஊறு ஏற்படாத வகையில் இந்தியாவை, பாகிஸ்தான், இந்துஸ்தான் என்று பிரிப்பதைத் தவிர வேறு எந்த முறையில் இத்தகைய உடன்பாட்டை எட்ட முடியும் என்பதை எண்ணிப் பார்ப்பது கடினமாக இருக்கிறது. இவ்வகையில் எத்தகைய இடர்ப்பாடுகள் இருந்தபோதிலும், இந்த வலிந்து பெறப்பட்ட கூட்டிணைப்பு தொடருமானால், வகுப்பு உடன்பாடு ஏற்படாமல் இந்தியா அரசியல் ரீதியில் முன்னேறுவது சாத்திய மல்ல என்பதை எவரும் மறுக்க முடியாது. உண்மையில் இன்றைய நிலைமையில் வகுப்பு உடன்பாடுதான் - இன்னும் சரியாக சொல்வ

தானால் இப்போதும் இனிமேலும் இந்துக்களும் முஸ்லீம்களும் இரண்டு தேசங்களாகக் கருதப்பட வேண்டுமென்ற ஒரு சர்வதேச உடன்பாடுதான் - ஒவ்வொரு அங்குல அரசியல் முன்னேற்றத்திற்கும் ஓர் இன்றியமையாத முன் நிபந்தனையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்தப் பலவந்தமான அரசியல் கூட்டிணைப்பில் மூன்றாவது ஒரு பாதகமும் உண்டு. மூன்றாவது ஒரு தரப்பு இருப்பதை அது அகற்ற முடியாது. முதலாவதாக, அரசியலமைப்பு ஒன்று உரு வாகுமானால் அது பரஸ்பரம் ஐயப்பாடுகளும், நேசமற்ற உணர்வு களும் கொண்ட அரசுகள் இணைந்த ஒரு கூட்டரசாகவே இருக்கும். சர்ச்சைகள் ஏற்படுமானால் மத்தியஸ்தம் செய்வதற்கு மூன்றாவது ஒரு தரப்பு இருப்பதை அவை தாமாகவே விரும்பி வரவேற்கும். ஏனென்றால் அவை ஒன்றன்மீது ஒன்று கொண்டிருக்கும் அவ நம்பிக்கையும் நேசபூர்வமற்ற உறவுகளும் இருதேசங்களும் பேச்சு வார்த்தைகள் மூலம் தமக்கிடையே உள்ள ஐயங்களைப் போக்கி திருப்தியடைவதற்கு இடையூறாக இருக்கக்கூடும். பிரிட்டிஷுக்கு எதிர்ப்புக் காட்டுவதில் கடந்த காலத்தில் ஒற்றுமை நிலவி பல உள்ளங்களை உவப்படையச் செய்தது; அந்த ஒற்றுமைகூட இனி எதிர்காலத்தில் இருக்காது. இரு தேசங்களும் பிரிட்டனுக்கு எதிராக ஒன்றுபடுவதற்குப் பதில் அவை முன்னைவிடவும் ஒன்றையொன்று அதிகம் எதிர்த்துக் கொண்டிருக்கும். இரண்டாவதாக, இந்துக்களுக் கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான உடன்பாடுதான் அரசிய லமைப்பின் அடிப்படையாக, அடித்தளமாக அமைந்திருக்கும்; இந்நிலையில் இத்தகைய அரசியலமைப்பு வெற்றிகரமாகச் செயல் படுவதற்கும், உடன்பாடு முறிந்துவிடாதபடிப் பார்த்துக் கொள் வதற்கு போதிய ஆயுதப்படைகளுடன் கூடிய ஒரு மூன்றாவது தரப்பு இருப்பது அவசியமாகிறது.

இவையாவும் இந்துக்களும் முஸ்லீம்களும் போற்றிப் பேணி வருவதும், விரைவில் நிறைவேற வேண்டுமென்று ஆர்வம் கொண் டிருப்பதுமான அரசியல் கதிப்போக்கின் செயல்குலைவைக் காட்டு கின்றன. எதிரும் புதிருமான இரு தேசங்கள் ஒரு நாட்டின் அர வணைப்பில், ஒரே அரசியலமைப்பில் பிணைந்திருக்கும்போது வேறு என்ன எதிர்பார்க்க முடியும்?

இந்த இருண்ட காட்சியுடன் இந்தியா பாகிஸ்தானாகவும் இந்துஸ்தானாகவும் பிரிவதால் ஏற்படும் காட்சியுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். இவை ஒவ்வொன்றும் தனக்கு நிர்ணயித்துக் கொள்ளும் கதிப்போக்கை செயல்படுத்துவதற்கான பாதையை பிரிவினை திறந்து விடுகிறது. முஸ்லீம்கள் பாகிஸ்தானுக்கு சுதந்திரத்தையோ அல்லது குடியேற்ற நாட்டு அந்தஸ்தையோ இவற்றில் எது சிறந்தது என்று அவர்களுக்குத் தோன்றுகிறதோ அதனைத் தேர்ந்தெடுத்துக் கொள் வதற்கு அவர்கள் உரிமை பெறுவார்கள். இதேபோன்று, இந்துக்கள் தங்களது இந்துஸ்தானுக்கு சுதந்திரத்தையோ அல்லது குடியேற்ற நாட்டு அந்தஸ்தையோ இவற்றில் எது அவர்களுக்கு விவேகமான தாகத் தோன்றுகிறதோ அதனைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கான உரிமை பெறுவார்கள். இந்து ராஜ்யம் எனும் கொடுங் கனவி லிருந்து, மனக்கிலியிலிருந்து முஸ்லீம்கள் விடுதலை பெறுவார்கள். இவ்வாறு இரு தரப்பினருக்குமே அரசியல் முன்னேற்றப் பாதை தட்டுத்தடங்கலின்றிச் செல்லக்கூடியதாகி விடுகிறது. குறிக்கோளை அடையும் முயற்சி தோல்வியடைந்து விடுமோ என்ற அச்சம் நீங்கி அதனை எய்துவிட முடியும் என்ற நம்பிக்கை மலர்கிறது. இந்தியா ஒரே முழுமையான நாடு என்ற முறையில் முன்னேற விரும்பினால் வகுப்பு உடன்பாடு அதற்கு ஓர் இன்றியமையாத முன் நிபந் தனையாக இருக்க வேண்டும். ஆனால் இந்தியா இந்துஸ்தான் என்றும் பாகிஸ்தான் என்றும் பிரிந்து விட்டால் இத்தகைய முன்நிபந்தனை எனும் கடுமையான கால்கட்டுகளிலிருந்து விடுபட்டு விடும்; மேலும், சிறுபான்மையினருடன் ஒரு வகுப்பு உடன்பாடு செய்து கொள்வது ஓர் அவசியமான முன்நிபந்தனையாக இருந் தாலும் கூட அந்த நிபந்தனையை நிறைவேற்றுவதில் சிரமம் ஏதும் இருக்காது. இந்துஸ்தான், பாகிஸ்தான் ஆகிய இவை ஒவ்வொன் றின் பாதையிலிருந்தும் இந்த முட்டுக்கட்டை அகற்றப்பட்டு விடு கிறது. பாகிஸ்தான் உருவாவதால் ஏற்படக்கூடிய மற்றொரு அனு கூலத்தையும் இங்கு குறிப்பிடுவது அவசியம். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே ஒரு வகையான பகை உணர்வு இருந்து வருகிறது என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது; இந்தப் பகை உணர்வு அகற்றப்படவில்லை என்றால் அது இந்தியா வின் அமைதிக்கும் முன்னேற்றத்திற்கும் நாசகரமான கேடு விளைவிக்கும். ஆனால் இந்தக் கேடு, ஊறுபாடு பரஸ்பர பகைமை யினால்விட அது தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்கு ஒரு பொதுக்களம் இருப்பதனாலேயே அதிகம் விளைகிறது என்பது உணரப்படுவதில்லை. இந்தப் பொதுக் களம்தான் இந்தப் பகைமை யைச் செயல்படும்படி தூண்டி ஊக்குவிக்கிறது. இவ்வாறின்றி வேறுவிதமாக இருக்க முடியாது. பொது அக்கறைக்குரிய செயற்பாடு

களில் பங்கெடுத்துக் கொள்ளும் நிலைமை இருதரப்புகளுக்கும் ஏற்படும்போது, அவற்றுள் உள்ளார்ந்து பொதிந்துள்ள பகைமை உணர்வை வெளிப்படுத்திக் கொள்வதைத் தவிர வேறு என்ன நிகழ முடியும். இந்நிலைமையில் பாகிஸ்தான் ஏற்படுமானால், அதில் பின்கண்ட அனுகூலம் இருக்கிறது. அதாவது இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே நேசப்பாங்கற்ற நிலை ஏற்படுவதற்குக் காரணமான சமூகப் பகைமை செயல்படுவதற்கான களம் இல்லாததை அது செய்து விடுகிறது. இதனால், இத்தனை ஆண்டுகளாக இந்தியாவை அதலகுதலப்படுத்தி அதன் அமைதிக்கு அளப்பெரும் பங்கம் விளைவித்து வந்த இந்தச் சீர்கேட்டினால் அவதிப்பட வேண்டும் என்ற அச்சம் இந்துஸ்தானுக்கும் பாகிஸ்தானுக்கும் இல்லாது போய்விடும். கடைசியாக ஆனால் அதேசமயம் முக்கியத் துவத்தில் எவ்வகையிலும் குறையாத ஓர் அம்சமும் இருக்கிறது; சமாதானத்தை நிலைநாட்டுவதற்கு மூன்றாவதொரு தரப்பு இருக்க வேண்டிய அவசியம் இல்லாது போவதுதான் அந்த முக்கிய அம்சம். இந்த வலுக்கட்டாயமான கூட்டிணைப்பு காரணமாக திணிக்கப் படும் தளைக்கட்டுகளிலிருந்து பாகிஸ்தானும் இந்துஸ்தானும் விடுபட்டு, உள்ளுக்குள் எத்தகைய சீர்குலைவு ஏற்படும் என்ற அச்சமின்றி, ஒவ்வொன்றும் உறுதிமிக்க, வலிமை வாய்ந்த, நிலையான அரசாக வளர்ந்து வலுப்பெற்று வளமும் நலமும் பெற முடியும். இரண்டு வெவ்வேறான அரசுகள் என்ற முறையில் அவை தத்தமது கதிப்போக்குகளை ஈட்ட முடியும்; அதேசமயம் இவை ஒரே முழுமையின் பகுதிகளாக இருக்குமானால் தமது குறிக்கோளை எய்த முடியாது.

ஒன்றுபட்ட இந்தியா வேண்டுமென்று விரும்புபவர்கள் 1923ல் காங்கிரஸ் மகாசபையின் தலைவர் என்ற முறையில் என்ன கூறினார் என்பதை கவனத்திற் கொள்ள வேண்டும். இந்தியர்களிடையேயான ஒற்றுமை குறித்துப் பேசும்போது திரு. முகமது அலி கூறியதாவது:

> ''தவறாக வழிகாட்டும் இந்த எதிர்ப்பு ஒற்றுமைக்குப் பதிலாக வேறு ஏதேனும் ஒரு புதிய சக்தி இந்தப் பரந்த இந்தியாவை ஒன்றுபடுத்தினாலொழிய, பூகோள ரீதியில் இது ஒரு தவறான பெயராகவே இருந்துவரும்.''

இவ்வகையில் இதுவரை பயன்படுத்தப்படாத வேறு ஏதேனும் புதிய சக்தி இருக்கிறதா? இதர எல்லா சக்திகள் தோல்வியடைந்த நிலையில், பதவிக்கு வந்த காங்கிரஸ் **பொதுமக்கள் தொடர்பு** என்ற

திட்டத்தில் ஒரு புதிய சக்தியைக் கண்டது. முஸ்லீம் தலைவர்களைப் புறக்கணித்துவிட்டு அல்லது அவர்களை ஏமாற்றிவிட்டு இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே அரசியல் ஒற்றுமையை நிலைநாட்டுவதே இதன் நோக்கம். சாராம்சத்தில் இது, "டோரி தங்கத்'தைக் கொண்டு தொழிற்கட்சியை விலைக்கு வாங்கும் பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சியின் திட்டமே தவிர வேறன்று. இந்தத் திட்டம் கேடு விளைவிக்கக் கூடியது மட்டுமன்றி, பயனற்றதுமாகும். எந்த ஓர் உடைமை உரிமையாளனும் தன் கையை விட்டுப் போக விரும்பாத சில அரிதினும் அரிதான பொருள்கள் இருக்கின்றன என்பதையும், அவற்றின் மதிப்பை அவன் நன்கு அறிந்திருக்கிறான் என்பதையும், அவற்றை அவனிடமிருந்து ஏமாற்றிப் பறிப்பதற்கு செய்யப்படும் எந்த முயற்சியும் பெருஞ் சீற்றத்தையும் மனக்கசப்பையுமே தோற்றுவிக்கும் என்பதையும் காங்கிரஸ் மறந்துவிடுகிறது. ஒரு சமூகத்தின் வாழ்க்கையில், அதிலும் குறிப்பாக அதன் நிலை இடையறா கடும் எதிர்ப்புக்குள்ளாகி, அதனை நிலைநாட்ட வேண்டிய அவசியத்திற்குள்ளாகி இருக்கும்போது, அரசியல் அதிகாரம் என்பது அச்சமூகத்திற்கு விலைமதிப்பிட முடியாத ஒன்றாகும். இந்த அரசியல் அதிகாரத்தின் மூலம் மட்டும்தான் அச்சமூகம் தனது நிலையை உறுதிப்படுத்திக் கொள்ள முடியும்; பாதுகாத்துக் கொள்ள முடியும். பொய்ப் பிரச்சாரத்தின் மூலமும், தவறான எண்ணத்தைத் தோற்றுவிப்பதன் மூலமும், பதவி ஆசை காட்டியும் அல்லது கைக்கூலி கொடுத்தும் இந்த அதிகாரத்தை அதனிடமிருந்த பறிக்க முயல்வது அந்த சமூகத்தை நிராயுதபாணியாக்குவதற்கும், அதன் பீரங்கிகளின் வாயை அடைப்பதற்கும், அதனை அடிமைப்படுத்துவதற்கும், அதனை செயலற்றதாக்கி முடமாக்கச் செய்வதற்கும் ஒப்பாகும். இதுவும் ஒற்றுமையை ஏற்படுத்தும் ஒரு வழியாக இருக்கக்கூடும். ஆனால் இந்த வழி அருவருக்கத்தக்கது; ஏனென்றால் ஒரு தவறான, நியாயமற்ற, நேர்மையற்ற முறையின் மூலம் எதிர்ப்பை அடக்கி ஒடுக்குவதை இது குறிக்கிறது. இது எத்தகைய ஒற்றுமையையும் ஏற்படுத்தாது. மாறாக அது கடும் சினத்தையும், மனக்கசப்பையும், பகைமையையுமே உண்டுபண்ணும்.[1] காங்கிரசின் பொதுமக்கள்

1. அமைதியும் தன்னடக்கமுள்ள சர் அப்துல் ரகீம் கூட 1925 டிசம்பர் 30 ஆம் தேதி அலிகாரில் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாட்டில் தலைமை உரையாற்றும்போது இந்துக்களின் தந்திரோபாயம் பற்றித் தமது மனக் கசப்பை வெளியிட்டார். சுத்தி, சங்காதன் போன்ற வடிவத்தில் முஸ்லீம் சமூகத்தின் மீது நடைபெற்றுவரும் தாக்குதல் பற்றியும், இந்து மகாசபை நடத்தி வரும் இயக்கங்கள் பற்றியும், லாலா லஜபதி ராய், சுவாமி சிரத்தானந்தர் போன்ற அரசியல்வாதிகளின் நடவடிக்கைகள் குறித்தும் அவர் வருத்தம்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

தொடர்புத் திட்டம் இதைத்தான் செய்துள்ளது. பாகிஸ்தான் கோரிக்கை உருவாவதற்கு மதிகேடான இந்தப் பொதுமக்கள் தொடர்புத் திட்டம் ஒரு முக்கிய காரணமாக இருந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை.

பொதுமக்கள் தொடர்புத் திட்டம் ஓர் அரசியல் நெம்புகோலாக உருவாக்கப்பட்டு, செயல்படுத்தப்பட்டது துரதிருஷ்டவசமானது, சமூக ஒற்றுமைக்கான ஒரு சாதனமாக இதனைப் பயன்படுத்தி இருந்தால் பெரும் வெற்றி கிடைத்திருக்கும் என்று சிலர் கூறக்கூடும். ஆனால் இந்துக்களையும் முஸ்லீம்களையும் பிரித்து வைத்திருக்கும் சமூக சுவரை உடைத்தெறிவதில் அது வெற்றி பெற்றிருக்க முடியுமா? நிச்சயமாக வெற்றி பெற்றிருக்க முடியாது. இந்த இரு சமூகங்களையும் இணைக்கும் எந்த ஒரு சமூகப் பிணைப்பும் இல்லை என்பது ஒவ்வொரு இந்தியனையும் மிகுந்த வேதனைக்கும் வருத்தத்துக்கும் உள்ளாக்கக்கூடிய விஷயமாகும். இந்த இரு சமூகங்களுக்கு இடையேயும் கூடி உணவு அருந்துதல் இல்லை, கலப்புத் திருமணம் இல்லை. இவற்றை அவர்களிடம் புகுத்த முடியுமா? அவர்களது விழாக்கள் வெவ்வேறானவை. இந்த விஷாக் களைக் கொண்டாடும்படி அல்லது அவற்றில் கலந்து கொள்ளும்படி இந்துக்களைத் தூண்டமுடியுமா? இவ்விரு சமூகங்களின் சமயக் கருத்துகளும் மாறுபட்டவை மட்டுமல்ல, ஒன்றுக்கொன்று பகைமையானவையும்கூட; ஒரு சமய மேடையில் ஒரு தரப்பு தோன்றினால் மற்ற தரப்பு வெளியேறிவிடும். அவர்களது கலாசாரங்களும் பண்பாடுகளும் வெவ்வேறானவை; அவர்களது இலக்கியங்களும் வரலாறுகளும் வேறுபட்டவை. அவை வேறுபட்டவை மட்டுமல்ல,

---

(அடிக் குறிப்புத் தொடர்ச்சி)

தெரிவித்தார். அவர் கூறியதாவது: ''ஸ்பெயினிலிருந்து மூர்களை ஸ்பானிஷ்காரர்கள் வெளியேற்றியதுபோல் இந்தியாவிலிருந்து முஸ்லீம்களையும் துரத்த வேண்டும் என்று சில இந்துத் தலைவர்கள் பகிரங்கமாகவே பேசி வருகின்றனர்''. ஆனால் முசல்மான்களை அவர்களது இந்து நண்பர்கள் அப்படி ஒன்றும் விழுங்கிவிட முடியாது. முஸ்லீம்கள் செயற்கையான சூழ்நிலைமைகளில் வாழ்ந்து வருவதால் இந்துக்கள் மிகவும் அனுகூலமான நிலைமையில் இருந்து வருகின்றனர். ஆங்கிலேயர்கள் கூட அவர்களது நச்சுப் பிரசாரத்தைக் கண்டு அஞ்சி ஒடுங்குவதாகத் தோன்றுகிறது. இந்து அரசியல் கோட்பாட்டுக்குத் தலையாட்டுபவர்களைத் தவிர மற்றபடி பொதுவாழ்வில் உயர்நிலையிலுள்ள மிகச் சிறந்த முசல்மான்களை எல்லா வழிகளிலும் மிகவும் சிறுமைப்படுத்தும் கலையிலும் இந்துக்கள் கைதேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். முசல்மான்கள் தங்கள் எதிர்காலத்தை இந்துக்கள் கையில் ஒப்படைக்க முடியாது, தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான எல்லா நடவடிக்கைகளையும் அவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை இந்துக்கள் தங்களது மிகவும் ஆத்திரமூட்டும், மூர்க்கத்தனமான நடத்தையின் மூலம் தெள்ளத் தெளிவாக்கி இருக்கிறார்கள். அகில இந்தியப் பதிவேடு, 1925, தொகுதி II, பக்கம் 356.

மற்ற தரப்பால் ரசிக்க முடியாதவை; அருவருப்பும் குமட்டலும் வெறுப்பும் உண்டுபண்ணக் கூடியவை. இவ்வாறிருக்கும் போது, வாழ்க்கையின் மூலாதாரமாக விளங்கும் இந்த ஒரே நீரூற்றிலிருந்து இவர்களைத் தண்ணீர் குடிக்க வைக்க யாராலும் முடியுமா? இவர்களை இணைக்கும் பொதுவான அம்சங்கள் ஏதுமில்லை; அவற்றை உருவாக்கி வளர்க்கவும் முடியாது. அவர்களிடையே போதிய தனிப்பட்ட தொடர்புகள் கூட இல்லை; பொதுவான கலாசார, உணர்ச்சிபூர்வமான வாழ்க்கையைப் பகிர்ந்துகொள்வது பற்றியோ சொல்லவே வேண்டாம். அவர்கள் ஒன்று சேர்ந்து வாழ்வதில்லை. இந்துக்களும் முஸ்லீம்களும் தங்களுக்கே உரிய தனி உலகங்களில் வாழ்ந்து வருகின்றனர். இந்துக்கள் பெரும்பான்மையாக இருக்கும் மாகாணங்களில் இந்துக்கள் கிராமங்களிலும் முஸ்லீம்கள் நகரங்களிலும் வசிக்கின்றனர். அதேபோன்று, முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள மாகாணங்களில் முஸ்லீம்கள் கிராமங்களிலும் இந்துக்கள் நகரங்களிலும் வசிக்கின்றனர். அவர்கள் எங்கு வாழ்ந்தாலும் தனித்தே வாழ்கின்றனர். ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு கிராமத்திலும் இந்துக் குடியிருப்புகள் என்றும் முஸ்லீம்கள் குடியிருப்புகள் என்றும் தனித் தனியாக உள்ளன. அவர்கள் தொடர்ந்து பங்கெடுத்துக் கொள்ளக் கூடிய எதுவும் இல்லை. அவர்கள் ஒன்று வாணிகஞ் செய்யச் சந்திக்கிறார்கள் அல்லது கொலை செய்ய சந்திக்கிறார்கள். ஒருவருடன் ஒருவர் நட்பை வளர்த்துக் கொள்வதற்கு அவர்கள் சந்திப்பதில்லை. அவர்கள் வாணிகஞ் செய்யவோ அல்லது கொலை செய்யவோ தேவையில்லாத போது அவர்கள் சந்திப்பதில்லை. அமைதி நிலவும்போது இந்துக் குடியிருப்புகளும் முஸ்லீம் குடியிருப்புகளும் இரண்டு பகை குடியேற்றங்கள் போல் தோன்றுகின்றன. சண்டை தொடங்கிய கணத்திலேயே இவை ஆயுதந்தாங்கிய பாசறைகளாக மாறிவிடுகின்றன. அமைதி நிலவும் காலமும் சரி கலகம் வெடிக்கும் காலமும் சரி குறுகியவை. ஆனால் இவற்றுக்கு இடைப்பட்ட காலத்தில் மிகுந்த பதற்றம் நிலவுகிறது. இத்தகைய தடைவேலிகள் இருந்துவரும்போது பொதுமக்கள் தொடர்பு என்ன சாதிக்க முடியும்? உள்ளார்ந்து ஒற்றுமையைக் கட்டி வளர்ப்பது ஒருபுறமிருக்கட்டும், இந்தத் தடைவேலியின் மறுபக்கம் கூடப் போகமுடியாது.



# பகுதி V

பாகிஸ்தான் பிரச்சினை குறித்து முந்தைய பக்கங்களில் கூறப்பட்டிருப்பவை குறித்து பலரும் பல்வேறு கருத்துகளைக் கொண்டுள்ளனர். பிரச்சினையின் இரு கோணங்களையும் அவற்றால் எழக்கூடிய சிக்கல்களையும் பற்றி மட்டுமே நான் கூறியிருக்கிறேன் என்றும், அவற்றில் எதைக் குறித்தும் என் சொந்தக் கருத்தை நான் தெரிவிக்கவில்லை என்றும் குறை கூறியுள்ளனர். இது சரியல்ல, ஏனென்றால் எல்லாப் பிரச்சினைகள் குறித்து இல்லாவிட்டாலும் நிச்சயமாக மிகப் பல பிரச்சினைகள் குறித்து என் கருத்துகளை முற்றிலும் திட்டவட்டமாகக் கூறியிருக்கிறேன் என்பதை முந்தைய பகுதிகளைப் படித்தவர்கள் எவரும் ஒப்புக்கொள்வார்கள். குறிப்பாக, இந்த சர்ச்சையில் மிக முக்கியமான இரு பிரச்சினைகளை இங்கு குறிப்பிட வேண்டும். முஸ்லீம்கள் ஒரு தேசமா, பாகிஸ்தான் கோருவதற்கு அவர்களுக்கு உரிமை உண்டா என்பதே அந்த இரு பிரச்சினைகள். மற்றும் சிலரது விமர்சனம் முற்றிலும் வேறுபட்டதொரு முறையில் அமைந்துள்ளது. என் சொந்தக் கருத்துகளைத் தெரிவிக்க நான் தவறிவிட்டதாக அவர்கள் குற்றம் சாட்டவில்லை, மாறாக, இந்தப் பிரச்சினையில் என் சொந்த முடிவுகளுக்கு வருவதில் சில முன்மொழிவுகள் தீர்மானமானவை, திட்டவட்டமானவை என்ற நோக்கில் அவற்றை ஆதாரமாகக் கொண்டிருக்கிறேன் என்று குற்றம் சாட்டியிருக்கிறார்கள். ''உங்கள் முடிவுகளை மிகப் பொதுப்படையான முறையில்தானே கூறியிருக்கிறீர்கள்? ஒரு பொதுவான முன்மொழிவுக்கு கட்டுப்பாடுகளும் வரையறைகளும் உண்டல்லவா? சில சிக்கலான பிரச்சினைகளை மிகச் சுருக்கமாகவும் ஏனோதானோ என்ற போக்கில் கையாண்டிருக்கிறீர்கள் அல்லவா? நியாயமான, அமைதியான முறையில் பாகிஸ்தானை உருவாக்க முடியும் என்பதை நீங்கள் காட்டியிருக்கிறீர்களா?'' இவ்வாறெல்லாம் அவர்கள் கேட்டிருக்கிறார்கள். இந்த விமர்சனம் கூட முற்றிலும் சரியானது என்று கூற முடியாது. இந்த விஷயங்களை எல்லாம் நான் கையாளத் தவறிவிட்டேன் என்று கூறுவது சரியல்ல. வேண்டுமானால் இவற்றை நான் கையாண்டமுறை சுருக்கமானதாகவும் ஓரளவு தொடர்பற்றதாகவும் இருக்கலாம். இந்த விமர்சனத்தில் அதிக வேகமும் வலிமையும் இருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். என் தவறைத் திருத்திக் கொள்வது என் கடமை என்பதையும் உணர்

கிறேன். இந்த அடிப்படையில் இந்தப் பகுதி பின்கண்ட விஷயங்களை அலசி ஆராய்கிறது:

1. பாகிஸ்தானுக்கான முஸ்லீம்களின் கோரிக்கையைப் பாதிக்கும் அம்சங்கள் என்ன?

2. பாகிஸ்தான் கோரிக்கை சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் யாவை? அவற்றிற்கான தீர்வு என்ன?

3. பாகிஸ்தான் பிரச்சினைக்குத் தீர்வு காணும் அதிகாரம் படைத்தவர்கள் யார்?

# இயல் 13

# பாகிஸ்தான் என்று ஒன்று இருக்க வேண்டுமா?

## I

இதுவரை சொல்லப்பட்டதெல்லாம் ஒருபுறம் இருக்க சந்தேகப் பிராணிகளும், தேசியவாதிகளும், பழமைவாதிகளும் பழைய சிந்தனையுடைய இந்தியரும் ''பாகிஸ்தான் என்று ஒன்று இருக்க வேண்டுமா?'' என்று வினவத் தவறமாட்டார்கள். இத்தகைய ஓர் அணுகுமுறையை எவரும் சாதாரணமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. ஏனெனில் பாகிஸ்தான் பிரச்சினை உண்மையில் மிக ஆழமானது, அப்பிரச்சினை காலப் பொருத்தமுடையது, முஸ்லீம் களின் மற்றும் அவர்களது ஆதரவாளர்களின் முன் வைக்கப்பட வேண்டிய அளவுக்கு நியாயமானது என்பதுடன் மட்டுமன்றி, அது மிக முக்கியமானதும் கூட. பாகிஸ்தானுக்காக வாதிடுபவர்களின் பலம் கணிசமாக இருக்கிறது, அவர்களை ஒருபோதும் அசட்டை செய்துவிட முடியாது என்ற உண்மையில் தான் அதன் முக்கியத் துவமே அடங்கியுள்ளது. இந்த வரையறைகள் பற்றிய வெறும் அறிக்கையே கூட ஒருவரை அவர்களுடைய சக்தியை உணரச் செய்வதற்குப் போதுமானது எனலாம். அது அவர்களது முகத்தி லேயே தெளிவாகப் பிரதிபலிக்கிறது. இது அவ்வாறு இருக்க, பாகிஸ்தானை உருவாக்குவது இன்றியமையாதது என்பதை நிலை நாட்டுவதற்கு முஸ்லீம்களின் மீது சுமத்தப்பட்டுள்ள பளு மிக அதிகமானது. தங்கள் தரப்பு வாதத்தில் அவர்கள் வெற்றி பெறுவ தற்கு முன்னர் ஒரு சர்வதேச நடுவர் மன்றத்தின் உள்ளுணர்வைத் திருப்திப்படுத்தும் விதத்தில் முஸ்லீம்கள் தக்க ஆதாரத்தை முன் வைக்க வேண்டியிருக்கும் என்பதுடன், இத்தகையதொரு தன்மை யுடைய சாட்சியத்தை எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கும் என்ற வகையில் உண்மையில் பாகிஸ்தான் பிரச்சினை அல்லது அப்பட்ட மாகச் சொன்னால் இந்தியாவைத் துண்டாடும் பிரச்சினை மிக ஆபத்தான தன்மையைக் கொண்டதாகும். இத்தகைய வரையறை களின் பின்னணியில் பாகிஸ்தானுக்கு ஆதரவான கூற்றின் நிலை பாடுகளைப் பார்ப்போம்.

## II

இந்தியாவின் முஸ்லீம் மக்கள் தொகையின் பெரும்பகுதியினர் சில குறிப்பிட்ட பகுதிகளில் குவிந்துள்ளனர். ஆகவே அப்பகுதிகளை இந்தியாவின் இதர பகுதிகளிலிருந்து எளிதில் துண்டித்துவிடமுடியும் என்ற காரணத்தினால்தான் பாகிஸ்தான் என்ற ஒன்று இருக்கவேண்டுமா? சில குறிப்பிட்ட பகுதிகளில் முஸ்லீம் மக்கள் பெருமளவில் குவிந்துள்ளனர் என்பதும், இப்பகுதிகள் துண்டிக்கப்படத்தக்கவையாக இருக்கின்றன என்பதும் ஒப்புக்கொள்ளக் கூடியதுதான். அதனால் என்ன? இக்கேள்வியைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும்போது, இயற்கையானது இந்தியாவை ஒரே பூகோளத் தொகுதியாக அமைத்துள்ளது என்ற அடிப்படை உண்மையையும் நாம் மறந்துவிடக்கூடாது. இந்தியமக்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டுள்ளனர் என்பது உண்மைதான். அவர்கள் எப்போது சண்டையை நிறுத்திக்கொள்வார்கள் என்று எவரும் ஆருடம் கூறமுடியாது. இதை உண்மை என்று எடுத்துக்கொண்டாலும் கூட அது நமக்கு எதைச் சொல்கிறது? இந்தியர்கள் சண்டையில் ஈடுபடக்கூடிய மக்கள் என்பதையே அது சொல்கிறது. மற்றபடி இந்தியா ஒரே பூகோளத் தொகுதி என்ற உண்மையை அது அழித்துவிடுவதில்லை. இயற்கையைப்போன்று இந்தியாவின் ஒற்றுமையும் தொன்மையானது, இந்த பூகோளத் தொகுதியினுள்ளும் அதன் பரப்பு முழுவதிலும் நினைவுக் கெட்டாத காலந்தொட்டே ஒரு கலாசார ஒற்றுமையும் இருந்து வந்துள்ளது. அரசியல் மற்றும் சமூகப் பிரிவினைகளையும் மீறி இக்கலாசார ஒற்றுமை மேலோங்கி வந்துள்ளது. எப்படியாயினும், கடந்த நூற்றைம்பது ஆண்டுகளில், கலாசாரம், அரசியல், பொருளாதாரம், சட்டம் மற்றும் நிர்வாக அமைப்புகள் ஒரே சீராக இயங்கி வந்துள்ளன. பாகிஸ்தானைப் பற்றிய எந்த ஒரு விவாதத்திலும், முக்கிய அம்சமாக இல்லாவிடினும், தொடக்க அம்சமாக இந்தியாவின் அடிப்படை ஒற்றுமை இருப்பதை மறந்துவிடக் கூடாது. ஏனெனில் பிரிவினைக் கருத்துக்கு இரு பக்கங்கள் உள்ளன. அவற்றைத் தெளிவாக வேறுபடுத்திக் காட்ட வேண்டும் என்ற உண்மையைப் புரிந்து கொள்வது அவசியம். முன்பே பிரிவினை நிலைமை நிலவிவந்தது; இவ்வாறு முன்பு தனித்தனியாக இருந்து பின்னர் ஒன்றாக இணைந்த பகுதிகளை மீண்டும் பிரிக்கச் சொல்லுகிறோம்; இதுதான் பிரிவினை என்பது என்று ஒருபுறம் வாதிக்கப்படுகிறது. இன்னொரு புறம் இதற்கு நேர்மாறான வாதம் முன்வைக்கப்படுகிறது: அதாவது ஒற்றுமை நிலையே எப்போதும், இந்தியாவில் நிலவி வந்திருக்கிறது; அப்படியிருக்கும்போது ஒட்டு

மொத்தமாக இருந்த ஒரு நிலப்பரப்பைத் தனித்தனிப் பகுதிகளாகப் பிரிப்பதே பிரிவினையாகும் என்று வாதிக்கப்படுகிறது. ஒற்றுமை ஏற்படுவதற்கு முன்பு ஒற்றுமையின்மை இருந்த நிலையில் பிரிவினை யானது பழைய நிலைக்குத் திரும்புவதே தவிர வேறல்ல என்று பிரிவினைவாதிகள் கூறுகின்றனர். ஆனால் இந்தியாவில் ஒற்றுமையே தொடக்க நிலையாகும்; சில முஸ்லீம்களுக்குத் திருப்தியில்லை என்ற காரணத்திற்காக இப்போது அந்த ஒற்றுமையை ஏன் குலைக்க வேண்டும்? வரலாற்றுக் காலந்தொட்டு நாடு ஒரே தொகுதியாக இருந்ததை ஏன் இப்போது துண்டாடவேண்டும்? இவ்வாறு ஒற்றுமை வாதிகள் பதிலுக்குக் கூறுகின்றனர்.

## III

இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையில் வகுப்பு வாதப் பகைமை இருக்கிறது என்ற காரணத்தினால் பாகிஸ்தான் என்று ஒன்று இருக்கவேண்டுமா? வகுப்புவாதப் பகைமை உள்ளது என்பதை எவரும் மறுக்கமுடியாது. ஒரே நாட்டில் ஒரு அரசியல் சட்டத்தின் கீழ் ஒன்றாக வாழும் விருப்பம் இல்லாத அளவுக்குப் பகைமை உள்ளதா என்பதுதான் பிரச்சினை. 1937 வரை கூடிவாழும் விருப்பம் நிச்சயமாக இருந்துவந்தது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்க சட்டத்தின் ஷரத்துக்கள் உருவாக்கப்பட்டபோது, தாங்கள் ஒரே நாட்டில் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் கூடிவாழவேண்டும் என்ற கருத்தை இந்துக்களும் முஸ்லீம்களும் ஏற்றுக் கொண்ட துடன் அச்சட்டம் ஏற்றப்படுவதற்கு முந்தைய விவாதங்களிலும் கலந்து கொண்டனர். 1920க்கும் 1935க்கும் இடையில் இந்தியாவில் வகுப்பு வாத உணர்வின் நிலை எவ்விதம் இருந்தது? முந்தைய பக்கங்களில் கூறப்பட்டிருப்பது போன்று 1920லிருந்து 1935 வரை இந்தியாவின் வரலாறு வகுப்புவாத மோதலின் ஒரு நெடிய கதையாக இருந்து வந்துள்ளது, அதில் உயிருக்கும் உடமைகளுக்கும் ஏற்பட்ட இழப்பு மிகவும் அவமானகரமான அளவை எட்டியது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச்சட்டம் நிறைவேற்றப் பட்டதற்கு முந்தைய இப் பதினைந்து ஆண்டுக் காலகட்டத்திற்கிடையில் இருந்தது போன்று வகுப்புவாத நிலைமை ஒருபோதும் இவ்வளவு மோசமானதாக என்றும் இருந்ததில்லை. ஆயினும் பகைமையின் இந்த நெடிய வரலாறு, இந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒரே நாட்டில் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் வாழ ஒப்புக்கொள்வதிலிருந்து தடை செய்யவில்லை. அப்படியிருக்கும்போது வகுப்புவாதப்பகைமை யைப் பற்றி இப்போது இந்த அளவுக்குப் பேசவேண்டிய அவசியம் என்ன வந்தது?

வகுப்புவாதப் பகைமை நிலவும் ஒரே நாடு இந்தியா மட்டும்தானா? கனடாவின் நிலைமை என்ன? கனடாவில் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையில் நிலவும் உறவுகளைப் பற்றி திரு. அலெக்சாண்டர் பிராடி[1] கூறுவதை சற்றே பாருங்கள்.

"மொத்தமுள்ள நான்கு மாகாணங்களில் நோவா ஸ்காடியா, நியூ பிரன்ஸ்விக் மற்றும் ஒன்டாரியோ ஆகிய மூன்றில் அதே ஆங்கிலோ- சாக்சன் வழிவந்த, பண்டைப் பாரம்பரியங்களுடன் கூடிய மக்கள் கணிசமான எண்ணிக்கையில் வசித்து வந்தனர். அமெரிக்கப் புரட்சியின் விளைவாகத் தோன்றிய இக்காலனிகளை அடக்குமுறைகளுக்குப் பயந்து வடக்கு நோக்கிச் சென்ற 50,000 ஐக்கிய சாம்ராஜ்ய உண்மை விசுவாசிகள் உருவாக்கினர். காடுகளை அழித்து தங்களது குடியேற்றங்களை அமைத்துக் கொண்டனர். நோவா ஸ்காடியாவில் பெரும் எண் ணிக்கையில் ஸ்காட்ச் மற்றும் அமெரிக்கர்கள் குடியேறினர். புரட்சிக்குப் பின்னர் இக்காலனிகள் அனைத்திலும் உருவாக்கப்பட்டிருந்த சாம்ராஜ்யத்தின் உண்மை விசுவாசிகளின் குடியேற்றங்களில் கிரேட் பிரிட்டனையும் அயர்லாந்தையும் சேர்ந்தவர்கள் குடியேற்றப்பட்டனர்."

★ ★ ★

"கியூபெக் மாகாணம், இதிலிருந்து மாறுபட்டதாக இருந்தது. 1867 இல் பிரெஞ்சுக் கனடா ஒரு தனிப்பட்ட கலாசாரத் தொகுதியாக இருந்தது. இனம், மொழி, மதம் ஆகிய தடைகளினால் பிரிட்டிஷ் சமூகங்களிலிருந்து தனிப்பட்டு நின்றது. அதனுடைய வாழ்க்கை ஒரு தனிப்பட்ட வார்ப்பில் அமைந்திருந்தது. தனது தீவிரத்தன்மையில் மத்தியகால கத்தோலிக்க நம்பிக்கையினால் தூண்டப்பட்ட அது பெரும்பாலும் கால்வினிச் இறைமையியல் தத்துவத்தைக் கொண்டிருந்த புரொடஸ்டன்ட்டுகளின் இதர உலகாயத விஷயங்களுடனும் சீர்திருத்த சமய வாதங்களுடனும் இணைந்தவர்கள்பால் அது சொற்ப அனுதாபத்தையே கொண்டிருந்தது. இரு மக்களின் மத நம்பிக்கை களும் இரு துருவங்களை போல் இருந்தன. எப்போதும் மதக் கண்ணோட்டத்தில் அல்லாது சமூகக் கண்ணோட்டத்தில் ஆங்கிலேய புரொடஸ்டன்ட்டுகள் ஜனநாயகம், எதார்த்த வாதம், நவீன சிந்தனை ஆகியவற்றின்பால் நாட்டம் கொண் டிருந்தனர்: ஆனால் பிரெஞ்சு மக்களின் கத்தோலிக்க மத நம்பிக்கையோ தந்தைப் பாசம், லட்சியவாதம், பழைய மரபு களுக்கு மதிப்பளித்தல் ஆகியவற்றைச் சார்ந்து நின்றது."

★ ★ ★

1. கனடா, இயல் 1.

''1867 ல் பிரெஞ்சுக் கனடா எவ்வாறிந்ததோ அப்படியேதான் இன்றைக்கும் அது இருந்து வருகிறது. ஆங்கிலேய மாகாணங்களில் அதிகம் மதிக்கப்படாத நம்பிக்கைகளையும், மரபுகளையும் அமைப்புகளையும் அது இன்னமும் பேணிக்காத்து வருகிறது. அது மிகத்தெளிவான சிந்தனையையும் ஊக்கத்தையும் தனக்கென சொந்தமான முக்கிய மதிப்புகளையும் கொண்டிருக்கிறது. உதாரணமாக திருமணம் மற்றும் விவாகரத்து ஆகியவை குறித்த அதனுடைய அணுகுமுறை, கனடாவின் பிற பகுதிகளிடத்திலிருந்து மட்டுமன்றி ஆங்கிலோ-சாக்சன் செல்வாக்கு மிகுந்த வட அமெரிக்காவின் மீதமுள்ள பகுதிகளின் அணுகு முறையிலிருந்தும் மாறுபட்டு நிற்கிறது.''

''கனடாவின் மிகப்பெரிய நகரமான மான்ட்ரீலில் இரு மக்களுக்கிடையிலான உறவுகளில் உள்ள இடைவெளி மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. மக்கள் தொகையில் கிட்டத்தட்ட 63 சதவிகிதம் பிரெஞ்சு மக்களாகவும் 24 சதவிகிதத்தினர் பிரிட்டிஷ் மக்களாகவும் உள்ளனர். இங்கு ஒற்றுமைக்கு ஏராளமான வாய்ப்பு இருக்கிறது. ஆயினும் உண்மையில் வர்த்தகமும் அரசியலும் கட்டாயமாக அவர்களை இணைந்து செயல்படச்செய்யும் இடங்களைத் தவிர மற்ற இடங்களில் அவர்கள் தனித்தனியாக, தனிப் பண்புகளுடன் வாழுகின்றனர்; அவர்கள் தங்களுக்கென தனியாக குடியிருப்புப் பகுதிகளையும் தங்களுக்கெனச் சொந்தமாக வர்த்தக மையங்களையும் கொண்டிருக்கின்றனர். இன ஒதுக்கலில் குறிப்பிடத் தக்கவர்களாக ஆங்கிலேயர்கள்தான் இருக்கின்றனர்.''

ஆங்கிலம் பேசும் மான்ட்ரீல் நகரவாசிகள் ஒட்டுமொத்தமாகத் தங்களது பிரெஞ்சு மொழிபேசும் சகபிரஜைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை. அவர்களுடைய மொழியைக் கற்றுக் கொள்ளவோ அவர்களுடைய மரபுகளையும் அபிலாஷைகளையும் ஆர்வ விருப்பங்களையும் புரிந்து கொள்ளவோ, அவர்களுடைய குணாதிசயங்களையும் குறைகளையும் ஒரு தெளிவான பார்வையுடனும் பரிவுகொண்ட மனத்துடனும் அணுகவோ எந்த முயற்சியும் செய்யவில்லை: மொழித் தடையினால் இரு மக்களிடையுள்ள பிரிவும் ஊக்குவிக்கப்படுகிறது. 1921 ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு தெரிவித்த விவரங்கள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை. பிரெஞ்சு வம்சாவழியைச் சேர்ந்த கனடியர்களில் கிட்டத்தட்ட 50 சதவிகிதத்தினர் ஆங்கிலம் பேச முடியாதவர்களாக இருந்தனர்.; ஆங்கிலேய வம்சா

வழியைச் சேர்ந்த 95 சதவீதத்தினர் பிரெஞ்சு மொழி பேச முடியாதவர்களாக இருந்தனர். மான்ட்ரீலிலும் கூட பிரிட்டிஷ் மக்களில் 70 சதவிகிதம் பேர் பிரெஞ்சு பேசமுடியாதவர்களாகவும், பிரெஞ்சு மக்களில் 34 சதவிகிதம் பேர் ஆங்கிலம் தெரியாதவர்களாகவும் இருந்தனர். ஒரு பொதுவான மொழி இல்லாதது அந்த இரு தேசிய இனங்களுக்கிடையில் ஒரு நிரந்தரப் பிளவையும் ஏற்படுத்தி வருவதுடன் அவர்கள் இணைந்து செயல்படுவதையும் தடுத்து வருகிறது.

''கூட்டரசு அமைப்பின் முக்கியத்துவம் என்னவெனில், பிரெஞ்சுக்காரர்கள் தங்களுடைய தனித்தன்மை வாய்ந்த தேசிய வாழ்வைத் தக்கவைத்துக் கொள்ளும் அதேசமயம், பிரிட்டிஷாருடன் மகிழ்ச்சிகரமான பங்காளிகளாக மாறவும் மிக மேம்பட்ட கனடிய தேசியப் பண்பை பெறவும், தங்களுடைய சொந்தக் குழுவிற்கும் அப்பால் குடியேற்றநாட்டிடம் விசுவாசம் கொள்ளவும் பிரெஞ்சு மக்களுக்கு வாய்ப்பளித்த ஓர் அரசாங்க அமைப்புக்கு வகை செய்ததேயாகும்.''

* * *

கனடாவில் ஒரு பரந்த தேசிய இனத்துக்கான பாதையை கூட்டரசுமுறை வெற்றிகரமாகத் திறந்துவிட்ட அதேசமயம் அது தொடங்கிவைத்த ஒத்துழைப்பானது பிரெஞ்சு மற்றும் பிரிட்டிஷ் மக்களுக்கிடையே ஏற்பட்ட கடுமையான கருத்து மோதலினால் சில சமயங்களில் பெரும் பாதிப்புக்குள்ளானது. மிக மேம்பட்ட தேசிய இனம் என்ற கருத்து உண்மையில் பல சந்தர்ப்பங்களில் ஒரு நிழலாகச் சுருங்கிவிட்டது.''

தென் ஆப்பிரிக்காவின் நிலைமை என்ன? போயர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் இடையில் நிலவிய உறவுகளைப் பற்றித் தெரியாதவர்கள் திரு. இ.எச். புரூக்ஸ்[1] கூறுவதைச் சிந்திக்கட்டும். அவர் கூறுகிறார்:

''தென் ஆப்பிரிக்காவின் தேசியத்தன்மை தென் ஆப்பிரிக்காவின் இரு வெள்ளை இனங்களுக்கிடையில் எந்த அளவுக்குப் பொதுவானதாக இருக்கிறது? மிகவும் நிஜமான தீவிர ஆப்ரிகான்டர் தேசியத்தன்மை என்று ஒன்று இருப்பது

1. தென் ஆப்பிரிக்காவின் அரசியல் வருங்காலம், 1927.

உண்மைதான்; பொதுவாகச் சொன்னால் அது வெள்ளை இனங்களில் ஒரு இனத்தில் மட்டும் காணப்படும் ஓர் உணர்வே யாகும். அது ஹாலந்திலிருந்து வந்து முதலில் குடியேறியவர் களின் மொழியும், ஹ¬குனாட் மற்றும் ஜெர்மன் மொழியின் செல்வாக்கினால் சற்றே மாறுதலடைந்த மொழியுமான ஆப்ரிகான்ஸ் மொழியின் மீதான பற்றுதலினால் ஏற்பட்ட உணர்வேயாகும். ஆப்ரிகான்டர் தேசியவாதம் தனித்தன்மை வாய்ந்த ஒரு போக்கைக் கொண்டிருக்கிறது; தென் ஆப்பிரிக்கா வுக்காகத் தம்மை எல்லா வழிகளிலும் அர்ப்பணித்துக் கொண்ட ஒருவர் முழுவதுமாகவோ அல்லது முக்கியமாகவோ ஆங்கிலம் பேசுபவராக இருந்தால் அங்கு அவருக்கு முக்கிய இடம் கிடையாது.''

* * *

''இன்றைக்கு தென் ஆப்பிரிக்க தேசம் என்று ஒன்று இருக்கிறதா?''

''ஆம் என்று கூறுவதற்கு எதிராக தென்ஆப்பிரிக்க வாழ்வில் சில ஒவ்வாத அம்சங்கள் உள்ளன.''

* * *

''ஆங்கிலம் பேசும் தென் ஆப்பிரிக்கர்களிடையே தேசிய ஒற்றுமை என்ற லட்சியத்திற்குக் குந்தகம் விளைவிக்கும் பல போக்குகள் காணப்படுகின்றன. அந்த இனத்தின் பல நற் குணங்களுடன் அவர்களிடம் ஒரு முக்கியக் குறைபாடும் உள்ளது - அதுதான் கற்பனைத் திறமின்மை; அதாவது, வேறொரு மனிதரின் இடத்தில் தன்னை வைத்துப் பார்ப் பதில் ஆர்வமின்மை. மொழிப்பிரச்சினையில் இருப்பதை விட இது வேறெங்கும் இவ்வளவு தெளிவாக வெளிப்படுவ தில்லை. அண்மைக்காலம் வரை ஆங்கிலம் பேசும் தென் ஆப்பிரிக்கர்களில் ஒரு சிலர் மட்டுமே ஒரு வர்த்தகக் கண் ணோட்டத்தில் அல்லது ( ஆட்சிப் பணிகளில் உள்ளது போன்று) ஏறக்குறைய கட்டாயத்தின் பேரில் மட்டுமே ஆப்ரி கான்ஸ் மொழியைக் கற்றுள்ளனர்; இன்னும் சிலர் உரை யாடலுக்காக மட்டுமே அதைப் பயன்படுத்தி வருகின்றனர். பலர் அதை பகிரங்கமாகவே வெறுப்புடன் பார்க்கின்றனர். அதைப் பற்றித் தாங்கள் தெரிந்திருப்பதற்குத் தலைகீழான வீதாசாரத்தில் அந்த வெறுப்பு உள்ளது. பெரும்பான்மை யோர் வெறும் சகிப்புத்தன்மையுடன், மனநிலைக்கேற்றவாறு உணர்ச்சியினால் உந்தப்பட்டு அல்லது வேடிக்கையாக அதைக் காண்கின்றனர்.''

இதே விஷயம் சம்பந்தமாக மற்றொருவரது கூற்றை செவி மடுப்போம். அவர்தான் திரு. மான்ஃபிரெட்நாதன்[1] தென்ஆப்பிரிக்காவில் போயர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் இடையிலான உறவுகள் குறித்து அவர் பின்வருமாறு கூறுகிறார்:

''அவர்கள் இருவரும், முக்கியமாக புரொடெஸ்டன்ட் பிரிவைச் சேர்ந்த மக்கள்தாம்; ஆயினும் மதவேறுபாடுகள் ஒரு பொருட்டாக இல்லாத இந்தக் காலத்தில் இது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. அவர்கள் ஒருவருக்கொருவர் சுதந்திரமாக வர்த்தக நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றனர்.''

* * *

''எனினும் வெள்ளை இன மக்களின் இரு மாபெரும் பிரிவுகளுக்கிடையில் இதுவரை முற்றிலும் சுதந்திரமான சமூகப் பிணைப்பு இருந்து வந்தது என்று உண்மையில் கூறமுடியாது. இதற்குக் காரணம், மிகப் பெரிய நகர்ப்புற மையங்களில் வசிக்கும் பெரும்பான்மை மக்கள் ஆங்கிலேயர்கள் தாம். இந்த நகரவாசிகள் கிராமப்புறங்களிலுள்ள மக்களைப் பற்றியும் அவர்களுடைய வாழ்க்கை முறைகளைப் பற்றியும் மிகக் குறைவாகவே தெரிந்து வைத்திருக்கின்றனர் என்பதேயாகும் என்று கூறப்பட்டு வந்துள்ளது. ஆனால் கிராமப்புறப் பகுதிகளிலுள்ள சிறுநகரங்களில் கூட, வழக்கமாக, பெருமளவில் நட்புறவு காணப்பட்டாலும், விருந்தினர்களுக்கு போயர்கள் சிறந்த விருந்தோம்பலை வெளிப்படுத்திய போதிலும், தேவை யான வர்த்தக அல்லது தொழில் ரீதியான உறவுகள், ஒத்துழைப்பு தேவைப்படும் சமூக விழாக்கள், அறப்பணி சம்பந்தமான அல்லது பொதுவிழாக்கள் ஆகியவற்றைத் தவிர இருபிரிவினருக்குமிடையில் பெருமளவுக்கு சமூகப் பிணைப்பு இல்லாதிருக்கிறது.''

ஆக, இதிலிருந்து வகுப்புவாதப் பகைமை நிலவும் ஒரே இடம் இந்தியா மட்டுமேயல்ல என்பது தெளிவு. ஆங்கிலேயர்களுடன் அரசியல் ஒற்றுமையுடன் வாழும் கனடாவிலுள்ள பிரெஞ்சு மக்களின் வழியில் இந்த வகுப்புவாதப் பகைமை குறிக்கிடவில்லை என்றால், டச்சுக்காரர்களுடன் அரசியல் ஒற்றுமையுடன் வாழும்

---

1. தென் ஆப்பிரிக்கக் காமன்வெல்த், பக்கம். 365.

தென் ஆப்பிரிக்காவிலுள்ள ஆங்கிலேயர்களின் வழியில் இந்த வகுப்புவாதப் பகைமை குறுக்கிடவில்லை என்றால், ஜெர்மானியர்களுடன் அரசியல் ஒற்றுமையுடன் வாழும் ஸ்விட்சர்லாந்திலுள்ள பிரெஞ்சு மற்றும் இத்தாலியர்களின் வழியில் இது குறுக்கிடவில்லை என்றால், இந்தியாவில் ஒரே அரசியல் சட்டத்தின்கீழ் ஒன்றாக வாழ இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஏன் சாத்தியமில்லாமல் போக வேண்டும்?

## IV

காங்கிரஸ் பெரும்பான்மையின் பால் முஸ்லீம்கள் நம்பிக்கை இழந்து விட்டார்கள் என்ற காரணத்தினால்தான் பாகிஸ்தான் என்று ஒன்று இருக்கவேண்டுமா? காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பில் இருந்த இரண்டு ஆண்டுகள் மூன்றுமாதங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகளின் சூழ்ச்சியுடன் இந்துக்கள் கடைபிடித்துவந்த கொடுங்கோன்மை, அடக்குமுறை போன்ற சில உதாரணங்களை இந்த நம்பிக்கை இழப்பிற்கான காரணங்களாக முஸ்லீம்கள் மேற்கோள் காட்டுகின்றனர். துரதிருஷ்டவசமாக இக்குறைகளை ராயல் கமிஷன் விசாரணை செய்யவேண்டும் என்ற தமது கோரிக்கையை திரு.ஜின்னா வலியுறுத்தவில்லை. அவர் வலியுறுத்தியிருந்தாரேயானால் இந்தப் புகார்களில் எந்த அளவுக்கு உண்மை இருந்தது என்பது நமக்குத் தெரிந்திருக்கும். முஸ்லீம் லீக் கமிட்டிகளின் அறிக்கைகளில்[1] கூறப்பட்டிருந்த இச் சம்பவங்களை நன்கு பரிசீலித்துப் பார்த்தோமானால், இக் குற்றச்சாட்டுகளில் ஓரளவுக்கு உண்மை இருக்கக் கூடும் என்ற போதிலும்கூட, இந்த அறிக்கைகளில் பெரும்பகுதி அப்பட்டமாக மிகைப்படுத்திக் கூறப்பட்டவையேயாகும் என்ற எண்ணத்தையே வாசகரிடம் ஏற்படுத்தும். சம்பந்தப்பட்ட காங்கிரஸ் மந்திரிசபைகள் இக்குற்றச்சாட்டுகளை மறுத்துஅறிக்கைகள் வெளியிட்டன. காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பில் இருந்த இரண்டாண்டுகள் மூன்று மாதங்களில் அது ராஜதந்திரத்தை வெளிப்படுத்தாமல் இருந்திருக்கலாம்; சிறுபான்மையினரிடம் நம்பிக்கையை ஏற்படுத்தாமலிருக்கலாம்; ஆனால் ஒருபோதும் அவர்களை அடக்கியாள முயன்றதில்லை. இவ்வாறிருக்கும்போது, இந்தக் குற்றச்சாட்டுகள்

1. பிர்பூர் அறிக்கை என்று பிரபலமாக அறியப்பட்ட, காங்கிரஸ் மாகாணங்களில் முஸ்லீம்களின் குறைகளை விசாரிப்பதற்கு அகில இந்திய முஸ்லீம் லீக் நியமித்த விசாரணைக் கமிட்டியின் அறிக்கையை இது விஷயமாகக் காணவும். பீகாரிலுள்ள முஸ்லீம்களின் சில குறைகளை விசாரணை செய்து பீகார் மாகாண முஸ்லீம் லீக் விடுத்த அறிக்கையும், இந்த அறிக்கையில் அடங்கியிருந்த சில குற்றச்சாட்டுகளுக்கு பீகார் அரசாங்கத்தின் தகவல்துறை அதிகாரி வெளியிட்ட பத்திரிகை குறிப்பும் 13.3.1939 ஆம் தேதியிட்ட அம்ருதபஜார் பத்திரிகாவில் பிரசுரிக்கப்பட்டன.

மட்டுமே இந்தியாவை துண்டாடுவதற்குக் காரணமாக இருக்க முடியுமா? கடந்த முறை காங்கிரசை ஆதரித்த வாக்காளர்கள் இந்த முறை மனம் மாறி காங்கிரசை ஆதரிக்காதிருப்பார்கள் என்று நம்புவது சாத்திய மில்லையா? அல்லது திரும்பவும் காங்கிரஸ் பதவிக்கு வருமானால், அது செய்த தவறுகளிலிருந்து பாடம் கற்றுக்கொண்டு, தனது தவறான கொள்கையை அது மாற்றிக் கொண்டு அதன்மூலம் தனது கடந்தகால நடத்தையினால் உருவாக்கப்பட்ட அச்சத்தைப் போக்க முயலாதா?

## V

முசல்மான்கள் ஒருதேசம் என்ற காரணத்தினால் பாகிஸ்தான் என்று ஒன்று இருக்கவேண்டுமா? உலகம் முழுவதுமே தேசியத் தன்மையின் தீமைகளுக்கெதிராகக் கூக்குரலெழுப்பி, ஏதேனும் ஒரு சர்வதேச அமைப்பை உருவாக்கவேண்டும் என்று முயன்று கொண் டிருக்கும் வேளையில் திரு.ஜின்னா முஸ்லீம் தேசியத் தன்மை யின் ஆதரவாளராகவும் அதை முன்னின்று நடத்துபவராகவும் மாறி யிருப்பது பரிதாபத்துக்குரியது. தனது அங்கங்கள் சிதைந்து போய் விட்ட ஒரு சமுதாயத்திற்கும், தனது அங்கங்கள் தளர்ச்சியடைந்து விட்ட ஒரு சமுதாயத்திற்கும் இடையில் உள்ள வேறுபாட்டைக் காணத் தயாராக இல்லாத திரு.ஜின்னா தாம் புதிதாகக் கண்டெடுத் துள்ள முஸ்லீம் தேசியவாதத்தில் மூழ்கிப்போயிருக்கிறார். மேற்கூறிய வேறு பாட்டை சரியான சிந்தனையுள்ள எந்த மனிதரும் அசட்டை செய்ய மாட்டார். ஒரு சமுதாயம் சிதைந்துகொண்டிருப்பது - இரு தேசங்கள் தத்துவம் சமுதாயத்தையும் நாட்டையும் கண்கூடாக சிதைத்தலே ஆகும்- கார்லைல் கூறுவது போன்று துண்டிக்கப்பட்டுப் போன அங்கங்களை ஒன்றாகப் பிணைக்கும் இன்றியமையாத இழைமம் அந்த சமுதாயத்தில் காணப்படாததையே குறிக்கிறது. இத்தகைய சந்தர்ப்பங்களில் பிளவுபடுத்துவதைக் கண்டு நாம் வருத்தப்படத்தான் முடியும். அதைத் தடுக்க முடியாது. ஆனால் இத்தகைய ஜீவாதாரமான இழைமங்கள் இருக்கும் இடத்தில் அவற்றை அசட்டை செய்துவிட்டு, முஸ்லீம்கள் செய்து வருவது போல், சமுதாயத்தையும் நாட்டையும் வேண்டுமென்றே கட்டாய மாகப் பிளவுபடுத்துவது ஒரு குற்றமாகும். முசல்மான்கள் வேறுபட்ட தேசமாக இருக்க விரும்பு வதற்கு அவர்கள் அவ்வாறு இருந்து வந்தார்கள் என்பதல்ல காரணம்; மாறாக, அவர்கள் அவ்வாறு இருக்க விரும்புகிறார்கள் என்பதே காரணம். முசல்மான்கள் விரும்பினால் அவர்கள் ஒரே தேசமாக ஒன்றுபடமுடியும். ஆனால், இந்துக்களையும் முசல்மான்களையும் ஒரே மக்களாக்கக்கூடிய பொதுவான எதுவும் அவர்களிடையே இல்லையா? இருவருக்கும் பொதுவான பல பழக்க

வழக்கங்கள், பாணிகள், சடங்குகள், சம்பிரதாயங்கள் இருப்பதை எவரும் மறுக்கமுடியாது. இந்துக்களையும் முசல்மான்களையும் பிரிக்கும் மதசம்பந்தமான சடங்குகள், சம்பிரதாயங்கள் உள்ளன என்பதையும் எவரும் மறுக்க முடியாது. இதில் எவற்றை வலியுறுத்துவது என்பதுதான் பிரச்சினை. பொதுவான அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுமானால் இந்தியாவில் இரு தேசங்கள் இருக்க வேண்டிய தேவை இல்லை. கருத்து வேறுபாடு கொண்ட அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுமானால் அது இரு தேசங்களைத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை. திரு. ஜின்னா வழி நடத்திச் செல்லுவதுபோல் தோன்றும் கருத்து என்னவெனில் இந்தியர்கள் ஒருமக்களே தவிர அவர்கள் ஒருபோதும் ஒரு தேசமாக முடியாது என்பதுதான். இந்தியர்களை இந்தியாவின் மக்கள் என்று குறிப்பிடுவதையும் இந்திய தேசம் என்று குறிப்பிடுவதைத் தவிர்ப்பதையும் வழக்கமாகக் கொண்ட பிரிட்டிஷ் எழுத்தாளர்களின் போக்கையே இது பின்பற்றுகிறது. சரி இந்தியர்கள் ஒரு தேசமல்ல. அவர்கள் வெறும் மக்கள் மட்டுமே என்றே வைத்துக் கொள்வோம். அதனால் என்ன? தேசங்கள் ஒன்றுபட்ட ஒருங்கிணைந்த ஆளுமை கொண்டவைகளாக உருவாவதற்கு முன்னர் மக்கள் மட்டுமே இருந்ததாக வரலாறு பதிந்துள்ளது. இந்தியர்கள் மக்களாக மட்டுமே இருந்தனர் என்று சொல்வதற்கு வெட்கப்படவேண்டியதில்லை. இந்தியாவின் மக்கள் ஒரே தேசமாக மாறமாட்டார்கள் என்று கவலைப்படுவதற்குக் காரணம் எதுவும் இல்லை. ஏனெனில், டிஸ்ரேலி கூறியதுபோல ஒருதேசம் என்பது கலையின் படைப்பு, காலத்தின் படைப்பு, தங்களை ஒன்றாகப் பிணைக்கக் கூடிய அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கவும். தங்களைப் பிரிக்கக் கூடிய அம்சங்களை மறந்துவிடவும் ஒப்புக்கொள்வார்களேயானால், காலப்போக்கில் இந்துக்களும் முசல்மான்களும் ஏன் ஒரே தேசமாக வளர்ச்சியடையக்கூடாது என்பதற்குக் காரணமில்லை. பிரெஞ்சு அல்லது ஜெர்மானியர்களைப்போல அவர்களது தேசியத்தன்மை அந்த அளவுக்கு ஒருங்கிணைந்ததாக இல்லாது இருக்கக்கூடும். ஆனால் அவர்கள் பொதுவான பிரச்சினைகள் குறித்துப் பொதுவான மனநிலையை எளிதில் உருவாக்க முடியும். ஒட்டுமொத்தத்தில் இதுவே தேசிய உணர்வு உருவாக்க உதவுகிறது. அதனால்தான் அது இந்தஅளவுக்கு போற்றப்படுகிறது. வேறுபாடுகளை மட்டுமே வலியுறுத்துவதும், பிணைக்கக்கூடிய சக்திகளை ஒட்டுமொத்தமாக அசட்டை செய்வதும் முஸ்லீம் லீகிற்கு நியாயம்தானா? இரு தேசங்கள் ஒன்றாக இணைகிறதென்றால் அதற்குக் காரணம் முன்கூட்டியே செய்யப்படும் ஏற்பாடு அல்ல என்பதையும், திட்டமிட்டு செய்யப்படும் முயற்சியின் பயனே இது என்பதையும் மறந்துவிடக்கூடாது.

ஏற்கெனவே நான் கூறியதுபோல் இந்தியாவிலுள்ள முசல்மான்கள் நடைமுறையிலும் சட்டரீதியாகவும் இன்னமும் ஒரு தேசமாக உருவாகிவிடவில்லை; மாறாக, ஒரு தேசத்தை உருவாக்குவதற்குத் தேவையான கூறுகள் அவர்களிடம் இருப்பதாக மட்டுமே கூறமுடியும். இந்தியாவின் முசல்மான்கள் ஒரு தேசம் என்பதை ஒப்புக்கொண்டாலும் இருதேசங்களைக் கொண்டிருக்கக்கூடிய நாடாக இருக்கப்போவது இந்தியா மட்டும்தானா? கனடாவின் நிலைமை என்ன? கனடாவில் ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள் என்று இரு தேசங்கள் இருப்பதை அனைவரும் அறிவர். தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்கள் என்றும் டச்சுக்காரர்கள் என்றும் இருதேசங்கள் இல்லையா? சுவிட்சர்லாந்தின் நிலைமை என்ன? ஜெர்மானியர்கள், பிரெஞ்சுக்காரர்கள், இத்தாலியர்கள் என்று சுவிட்சர்லாந்தில் வாழும் மூன்று தேசங்களைப் பற்றி அறியாதார் யார்? தாங்கள் ஒரு தனிப்பட்ட தேசம் என்பதற்காக கனடாவிலுள்ள பிரெஞ்சு மக்கள் நாட்டைத் துண்டாடவேண்டும் என்று கோரினார்களா? போயர்களிடமிருந்து தாங்கள் முற்றிலும் ஒரு மாறுபட்ட தேசம் என்பதால் ஆங்கிலேயர்கள் தென் ஆப்பிரிக்காவைத் துண்டாட வேண்டும் என்று கூறுகின்றார்களா? தாங்களனைவரும் வெவ்வேறு தேசங்கள் என்பதால் ஜெர்மானியர்களும், பிரெஞ்சுக்காரர்களும், இத்தாலியர்களும் சுவிட்சர்லாந்தைத் துண்டாடவேண்டுமென்று போராடியதாக யாரேனும் கேள்விப்பட்டிருக்கிறார்களா? ஒரே நாட்டில் ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் குடிமக்களாக வாழ்வதால் தங்களுடைய தனித்தன்மையுடைய கலாசாரங்களை இழந்துவிடுவோம் என்று ஜெர்மானியர்களும், பிரெஞ்சுக்காரர்களும், இத்தாலியர்களும் எப்போதேனும் எண்ணியதுண்டா? மாறாக தனித்தன்மைவாய்ந்த இத் தேசங்கள் அனைத்தும் ஒரே நாட்டில் ஒரே அரசியல் சட்டத்தின்கீழ் தங்களது தேசிய இனத்தையும் தங்களது தனித்தன்மைவாய்ந்த கலாசாரங்களையும் இழந்துவிடும் அச்சமின்றி ஒன்றாக வாழுவதில் மனநிறைவடைந்து வந்துள்ளன. அதேபோன்று கனடாவிலுள்ள பிரெஞ்சு மக்கள், ஆங்கிலேயர்களுடன் சேர்ந்து வாழுவதால் அவர்கள் பிரெஞ்சு மக்களாக இல்லாமல் போய்விடவில்லை, அல்லது தென் ஆப்பிரிக்காவில் போயர்களுடன் சேர்ந்து வாழ்வதால் ஆங்கிலேயர்கள் ஆங்கிலேயர்களாக இல்லாமல் போய்விடவில்லை. ஒரு பொதுவான நாட்டுக்கும் ஒரு பொதுவான அரசியல் சட்டத்திற்கும் தங்களது பொதுவான கடப்பாடுகள் ஒருபுறமிருக்க ஜெர்மானியர்களும், பிரெஞ்சுக்காரர்களும்,

இத்தாலியர்களும் தனித்தன்மை வாய்ந்த தேசங்களாகவே இருந்து வந்துள்ளனர். இவ்வகையில் சுவிட்சர்லாந்தின் உதாரணம் குறிப் பிடத்தக்கதாகும். சுவிட்சர்லாந்தை சுற்றியுள்ள நாடுகளின் தேசிய இனங்கள் சுவிட்சர்லாந்தின் தேசிய இனங்களுடன் நெருக்கமான சமய மற்றும் இன ஒருமைப்பாட்டைக் கொண்டுள்ளன. இந்த ஒருமைப்பாடுகள் ஒருபுற மிருக்க சுவிட்சர்லாந்தில் உள்ள தேசிய இனங்கள் முதலில் சுவிஸ் மக்களாகவும் பின்னர்தான் ஜெர்மானியர் களாகவும், இத்தாலியர்களாகவும், பிரெஞ்சுக்காரர்களாகவும் இருந்து வருகின்றனர்.

கனடாவில் பிரெஞ்சு மக்களின் அனுபவத்தையும், தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்களின் அனுபவத்தையும், சுவிட்சர் லாந்தில் பிரெஞ்சுக்காரர்கள் மற்றும், இத்தாலியர்களின் அனுபவத் தையும் பார்க்கும்போது, இந்தியாவில்மட்டும் ஏன் வேறுவிதமாக இருக்கவேண்டும் என்ற கேள்விகள் எழத்தான் செய்கின்றன. இந்துக் களும் முஸ்லீம்களும் இரு தேசங்களாகப் பிளவுபட்டு நிற்கிறார்கள் என்று வைத்துக்கொண்டாலும் அவர்களால் ஒரேநாட்டில் ஒரே அரசியல்சட்டத்தின்கீழ் ஏன் வாழமுடியாது? இரு தேசங்கள் என்ற தத்துவம் தோன்றியிருப்பது ஏன் நாட்டைப் பிளவுபடுத்து வதை அவசியமாக்க வேண்டும்? இந்துக்களுடன் சேர்ந்து வாழ்வதன் மூலம் தங்களுடைய தேசியத் தன்மையையும் தேசியக் கலாசாரத் தையும் இழந்துவிடுவோமோ என்று முசல்மான்கள் ஏன் பயப்பட வேண்டும்? நாட்டைப் பிளவுபடுத்துவதை முஸ்லீம்கள் வலி யுறுத்துவதற்குக் காரணம் என்ன? நாட்டைத் துண்டாடவில்லை என்றால் இந்துக்களுக்கும் முசல்மான்களுக்கும் இடையில் பல பொதுவான அம்சங்கள் இருப்பதால் , இந்துக்களுடனான இடை யறாத சமூகத் தொடர்புகள் மூலம் முசல்மான்களிடம் எஞ்சி யிருக்கும் கொஞ்சநஞ்ச தனித்தன்மைவாய்ந்த இஸ்லாமியக் கலா சாரம் மறைந்துவிடும், அதன் விளைவாக இறுதியில் இரு தேசங் களுக்குப் பதிலாக இந்தியாவில் ஒரே தேசம்தான் வளர்ச்சியுறும் என்று முஸ்லீம் தலைவர்கள் அஞ்சுவதாலேயே நாட்டைப் பிளவு படுத்த அவர்கள் பிடிவாதமாக வற்புறுத்துகிறார்கள் என்ற முடிவுக்கே பலர் வரக்கூடும். முஸ்லீம் தேசியவாதம் அவ்வளவு வலுவற்றதாக இருக்குமானால் அப்போது நாட்டைப் பிரிக்கும் நோக்கம் செயற்கை யானதாக இருக்கும்; பாகிஸ்தான் பிரச்சினை அதன் அடிப்படை யையே இழந்துவிடும்.

# VI

சுயராஜ்யம் என்பது இந்து ராஜ்யமாகிவிடும் என்ற காரணத்தினால்தான் பாகிஸ்தான் என்று ஒன்று இருக்கவேண்டுமா? இக் கூக்குரலினால் முசல்மான்கள் எளிதில் உணர்ச்சி வசப்படு கின்றனர். ஆகவே இதில் இழையோடும் பொய்ம்மைகளைத் தோலுரித்துக் காட்டுவது அவசியமாகிறது.

முதலாவதாக, இந்து ராஜ்யம் உருவாவதை முஸ்லீம்கள் எதிர்ப்பது மனச்சான்று பூர்வமான எதிர்ப்பா அல்லது ஓர் அரசியல் எதிர்ப்பா? அது மனச்சான்றுபூர்வமான எதிர்ப்பாக இருக்குமானால் அந்த மனச்சான்று விநோதமான வகைப்பட்ட மனச்சான்றாகத்தான் இருக்கவேண்டும் என்ற முடிவுக்கே ஒருவர் வரமுடியும். இந்து மன்னர்களின் தான்தோன்றித்தனமான, கட்டுப்பாடற்ற இந்து ராஜ் யத்தில் உண்மையில் கோடிக்கணக்கான முசல்மான்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு முஸ்லீம்களோ அல்லது முஸ்லீம் லீகோ எந்தவிதமான ஆட்சேபணையையும் எழுப்பவில்லை. முஸ்லீம்கள் ஒருசமயம் பிரிட்டிஷ் ராஜ்யத்திற்கு மனச்சான்றுபூர்வமான ஆட்சேபணை தெரிவித்தனர். இன்றைக்கு அவர்களுக்கு அதற்கான ஆட்சேபணை இல்லை என்பது மட்டுமன்றி, அதைப் பெருமளவில் ஆதரிப்பவர்களாகவும் மாறிவிட்டனர். பிரிட்டிஷ் ராஜ்யத்திற்கு அல்லது ஓர் இந்து மன்னரின் அப்பட்டமான இந்து ராஜ்யத்திற்கு ஆட்சேபணை இருக்கக்கூடாது, ஆனால் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைப்பதற்கு மட்டும் ஆட்சேபணை தெரிவிக்க வேண்டும் ஏனெனில் அது ஓர் இந்து ராஜ்யமாக, எந்தவிதமான கட்டுப்பாடுகளுக்கும் உட்படாத இந்து ராஜ்யமாக இருக்கும் என்ற முசல்மானது அணுகுமுறையின் தருக்க நியாயத்தைப் புரிந்து கொள்வது கடினமானதாக இருக்கிறது.

இந்து ராஜ்யத்திற்கெதிரான அரசியல் ஆட்சேபணைகள் பல்வேறு ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளன. முத லாவது ஆதாரம் என்னவெனில் இந்து சமுதாயம் என்பது ஒரு ஜனநாயகரீதியான சமுதாயமல்ல என்பதாகும். அது ஜனநாயக ரீதி யான சமுதாயமல்ல என்பது உண்மைதான். மதமாற்றம் செய்வதில் ஈடுபாடு காட்டாமல், இந்து சமுதாயத்தைச் சீர்திருத்துவதற்கான பல்வேறு இயக்கங்களில் முஸ்லீம்கள் ஏதேனும் பங்கு வகித்தனரா என்று கேட்பது சரியானதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் இந்து

சமுதாயத்தின் ஜனநாயக விரோதத்தன்மையினால் விளையும் தீமைகளினால் பாதிக்கப்பட்டவர்கள் முசல்மான்கள் மட்டும்தானா என்று கேட்பது சரியானதாக இருக்கும். கோடிக்கணக்கான சூத்திரர் களும் பிராமணர் அல்லாதவர்களும் கோடிக்கணக்கான தீண்டத் தகாதவர்களும், இந்து சமுதாயத்தின் ஜனநாயக விரோதத் தன்மை யின் மோசமான விளைவுகளால் துன்புற்று வரவில்லையா? மொத்த இந்து மக்கள் தொகையின் 10 சதவிகிதத்தினராகக் கூட இல்லாத- இந்துக்களின் மேல் ஜாதியினரான - இந்து மேல்தட்டு வர்க்கத் தினரைத் தவிர, கல்வியிலிருந்தும், பொதுசேவைகளிலிருந்தும், அரசியல் சீர்திருத்தங்களிலிருந்தும் பயன்பெறுவது யார்? இந்து அரசியலைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் இந்துக் களின் மேல்தட்டு வர்க்கத்தினர் சூத்திரர்கள் மற்றும் தீண்டத்தகாத வர்களின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாப்பதை விட முசல்மான்களின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாப்பதற்கே அதிக முக்கியத்துவம் கொடுத்து வரவில்லையா? தீண்டத்தகாதவர் களுக்கு எந்தவித அரசியல் சலுகைகள் வழங்கப்படுவதையும் உறுதி யாக எதிர்த்துவரும் திரு.காந்தி முஸ்லீம்களுக்கு ஆதரவாக எதையும் செய்யத் தயாராக இருக்கவில்லையா? உண்மையில் இந்து மேல் தட்டு வர்க்கத்தினர் சூத்திரர்களுடனும் தீண்டத்தகாதவர்களுடனும் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளுவதைவிட, முஸ்லீம்களுடன் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளத் தயாராக உள்ளனர். இந்து சமுதாயத்தின் ஜனநாயக விரோதப் போக்கைப்பற்றிக் குறைகூறுவ தற்கு நிச்சயமாக முஸ்லீம்களுக்கு எந்தவித அடிப்படையும் இல்லை.

இந்து ராஜ்யத்திற்கெதிரான முஸ்லீம் ஆட்சேபணைக்கு ஆதாரமாக உள்ள மற்றொரு அடிப்படை, இந்துக்கள் ஒரு பெரும் பான்மை சமுதாயம், முஸ்லீம்கள் ஒரு சிறுபான்மை சமுதாயம் என்பதாகும். உண்மைதான். இத்தகைய நிலைமை நிலவும் நாடு இந்தியா மட்டும்தானா? கனடா, சுவிட்சர்லாந்து, தென் ஆப்பிரிக்கா ஆகியநாடுகளில் நிலவும் சூழ்நிலைகளுடன் இந்தியாவில் நிலவும் சூழ்நிலைகளை ஒப்பிட்டுப் பார்ப்போம். முதலாவதாக, மக்கள் தொகை விநியோகத்தை எடுத்துக்கொள்வோம். கனடாவின்[1] மொத்த மக்கள் தொகையான 10,376,786 இல் 2,927,990 பேர் மட்டுமே பிரெஞ்சுக்காரர்கள் ஆவர். தென் ஆப்பிரிக்காவில்[2] டச்சுக்காரர்களின் எண்ணிக்கை 1,120,770 ஆகும். ஸ்விட்சர்லாந்தின்[1] மொத்த ஜனத்

1. கனடா, ஆண்டறிக்கை நூல், 1936
2. தென் ஆப்பிரிக்கா ஆண்டறிக்கை நூல் 1941

தொகையான 4,066,400 இல் ஜெர்மானியர்கள் 2,924,313 ஆகவும் பிரெஞ்சுக்காரர்களின் எண்ணிக்கை 831,097 ஆகவும் இத்தாலியர் களின் எண்ணிக்கை 242,034 ஆகவும் உள்ளது.

பெரும்பான்மை சமுதாயத்தின் ஆட்சியின் கீழ் இருப் பதில் சிறிய தேசிய இனங்களுக்கு அச்சம் எதுவும் இல்லை என்பதையே இது காட்டுகிறது. இத்தகைய ஒரு எண்ணமே கூட அவர்களுக்கு அன்னியமானதாகத் தோன்றுகிறது. அது ஏன்? சட்டமன்றம், நிர்வாகம் போன்ற அதிகார மையங்களில் பெரும் பான்மையான தேசிய இனம் தனது மேலாண்மையை நிறுவும் சாத்தியக்கூறு இல்லை என்ற காரணத்தினாலா? இது முற்றிலும் மாறுபட்டது. சுவிட்சர்லாந்து, கனடா, தென்ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளில் வெவ்வேறு பெரிய, சிறிய தேசிய இனங்களின் பிரதிநிதித் துவம் உண்மையில் எந்த அளவுக்கு இருக்கிறது என்பதைக் காட்டும் எந்தப் புள்ளிவிபரங்களும் கிடைக்கவில்லை. அதற்குக் காரணம் இந்தியாவில் உள்ளதைப்போன்று வகுப்புவாரி அடிப் படையில் தொகுதிகள் அங்கு ஒதுக்கப்படுவதில்லை. ஒரு பொதுத் தேர்தலில் தன்னால் எத்தனை தொகுதிகளில் வெற்றி பெற முடியுமோ அத்தனை தொகுதிகளில் போட்டியிட ஒவ்வொரு சமூகத்திற்கும் உரிமையுண்டு. சட்டமன்றத்திலுள்ள மொத்த உறுப்பினர் எண் ணிக்கைக்கு தங்களது மக்கள் தொகையின் வீதாசார அடிப்படையில் ஒவ்வொரு தேசிய இனமும் பெறக்கூடிய இடங்களின் உத்தேச எண்ணிக்கையை எளிதில் நம்மால் கணக்கிடமுடியும். இதனடிப் படையில் ஆய்வுசெய்யும் பொழுது நம்மால் என்ன காண முடி கிறது? சுவிட்சர்லாந்தில் நாடாளுமன்றத்தின் மொத்தப் பிரநிதி களின் எண்ணிக்கை 187 ஆகும். அதில் ஜெர்மன் மக்கள் தொகை 138 இடங்களிலும், பிரெஞ்சு மக்கள் 42 இடங்களிலும், இத்தாலியர்கள் வெறும்7 இடங்களிலும் வெற்றி பெறக்கூடிய வாய்ப்புகள் உள்ளன. தென் ஆப்பிரிக்காவில் மொத்தமுள்ள 153 இடங்களில் ஆங்கி லேயர்கள் 62 இடங்களிலும் டச்சுக்காரர்கள் 94 இடங்களிலும் வெற்றி பெற வாய்ப்புண்டு. கனடாவில் மொத்தம் 245 உறுப்பினர் கள் உள்ளனர். இதில் பிரெஞ்சு[2] மக்கள் 65 இடங்களை மட்டுமே பெற்றுள்ளனர். இதனடிப்படையில் இந்த நாடுகளனைத்திலும் பெரும்பான்மை தேசிய இனம், இதர சிறிய தேசிய இனங்களின்மீது

1. ஸ்டேட்ஸ்மேனின் ஆண்டறிக்கை நூல் 1941.

2. அது கியூபெக் மாகாணத்திற்கானது.

தனது மேலாதிக்கத்தைச் செலுத்தக்கூடிய சாத்தியக்கூறு உள்ளது. உண்மையில், சட்டப்படியும், பொதுப்படையாகவும் பேசினால் கனடாவில் பிரெஞ்சுமக்கள் பிரிட்டிஷ் ராஜ்யத்தின் கீழும் தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்கள் டச்சு ராஜ்யத்தின் கீழும் சுவிட்சர் லாந்தில் இத்தாலியர்களும் பிரெஞ்சுக்காரர்களும் ஜெர்மன் ராஜ்யத் தின் கீழும் வாழ்கிறார்கள் என்று கூறுமளவுக்கு செ ல்லலாம். ஆனால் உண்மை நிலை என்ன? கனடாவில் உள்ள பிரெஞ்சுக் காரர்கள் தாங்கள் பிரிட்டிஷ் ராஜ்யத்தின் கீழ் வாழமாட்டோம் என்று கூக்குரல் எழுப்புகின்றனரா? தென் ஆப்பிரிக்காவிலுள்ள ஆங்கி லேயர்கள் டச்சு ராஜ்யத்தின் கீழ் வாழமாட்டோம் என்று கூக்குரல் எழுப்பியுள்ளனரா? ஜெர்மன் ராஜ்யத்தின் கீழ் வாழுவதற்கு சுவிட்சர் லாந்திலுள்ள பிரெஞ்சுக்காரர்களும் இத்தாலியர்களும் ஏதேனும் ஆட்சேபம் தெரிவித்துள்ளனரா? அப்படிஒன்றும் இல்லாதிருக்கும் போது இந்து ராஜ்யம் என்று முஸ்லீம்கள் ஏன் கூக்குரல் எழுப்ப வேண்டும்?

இந்து ராஜ்யம் என்பது ஓர் அப்பட்டமான வகுப்புவாதப் பெரும்பான்மையின் ஆட்சியாக இருக்கவேண்டும் என்று பிரேரணை செய்யப்படுகிறதா? இந்துப் பெரும்பான்மையின் உத்தேசக் கொடுங் கோன்மைக்கு எதிராக முஸ்லீம்களுக்குப் பாதுகாப்பு வழங்கப் படவில்லையா? கனடாவில் பிரெஞ்சுக்காரர்களுக்கும், தென் ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்களுக்கும் சுவிட்சர்லாந்தில் பிரெஞ்சுக் காரர்கள் மற்றும் இத்தாலியர்களுக்கும் வழங்கப்பட்டிருக்கும் பாதுகாப்புகளைவிட இந்தியாவின் முஸ்லீம்களுக்கு வழங்கப் பட்டுள்ள பாதுகாப்புகள் சிறந்தவையாகவும் பரந்தவையாகவும் இருக்கவில்லையா? இத்தகைய பாதுகாப்புகள் பட்டியலில் ஒன்றே ஒன்றை மட்டும் உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். சட்ட மன்றத்திற்கான இடங்களில் முசல்மான்கள் கணிசமான பிரதி நிதித்துவத்தைப் பெறவில்லையா? இந்தப் பிரதிநிதித்துவ மதிப்பு கனடாவிலும், தென்ஆப்பிரிக்காவிலும், சுவிட்சர்லாந்திலும் உள்ள வர்களுக்குத் தெரியுமா? முஸ்லீம்களுக்குள்ள இப் பிரதிநிதித்துவ மதிப்பின் தாக்கம் என்ன? சட்டமன்றத்தில் உள்ள இந்துப் பெரும் பான்மையைக் குறைப்பதல்லவா இதன் நோக்கம்? இந்த குறைப்பின் அளவு என்ன? பிரிட்டிஷ் இந்தியாவை மட்டும் கருத்தில் கொண்டு, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ் மத்திய சட்ட மன்றத்திலுள்ள கீழ்ச்சபையில் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் பிரதேச வாரியான தொகுதிகளுக்கு வழங்கப்பட்ட பிரதிநிதித்துவத்தை

மட்டும் கணக்கிலெடுத்துக் கொண்டால் மொத்தமுள்ள 187 தொகுதிகளில் இந்துக்களுக்கு 105 இடங்களும் முஸ்லீம்களுக்கு 82 இடங்களும் ஒதுக்கப்பட்டன. இப்புள்ளி விபரங்களைப் பார்க்கும் போது இந்து ராஜ்யத்தைப் பற்றிய அச்சம் எங்கிருந்து வருகிறது என்று கேட்கத் தோன்றவில்லையா?

இந்து ராஜ்யம் நிஜமாகும் பட்சத்தில் அது இந்த நாட்டில் மிகப்பெரிய சோகசம்பவமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்துக்கள் என்ன சொன்னாலும், இந்துமதம் விடுதலை, சமத்துவம், சோதரத்துவம் ஆகியவற்றுக்கு ஒரு பேரிடராகவே இருக்கும். இந்த விஷயத்தில் அது ஜனநாயகத்துக்கு ஏற்புடையதல்ல. இந்து ராஜ்யம் எந்தவிலை கொடுத்தேனும் தடுக்கப்படவேண்டும். ஆனால் அதற்கு எதிரான பரிகாரமாகப் பாகிஸ்தான் அமையுமா? ஒரு வகுப்புவாத ராஜ்யத்தை சாத்தியமாக்குவது எது எனில், ஒரு நாட்டில் வாழும் பல்வேறு வகுப்புகளின் சம்பந்தப்பட்ட பலத்தில் காணப்படும் குறிப்பிடத்தக்க முரண்பாடேயாகும். மேற்குறிப்பிட்டபடி, இந்த முரண்பாடு கனடா, தென் ஆப்பிரிக்கா, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில் இருப்பதைவிட இந்தியாவில் குறிப்பிடத்குந்த அளவு கூடுதலாக இல்லை. ஆயினும் கனடாவில் பிரிட்டிஷ் ராஜ்யம் இல்லை; தென் ஆப்பிரிக்காவில் டச்சு ராஜ்யம் இல்லை. சுவிட்சர்லாந்தில் ஜெர்மன் ராஜ்யம் இல்லை. தங்களது நாட்டில் பெரும்பான்மை வகுப்பினரின் ராஜ்யம் ஏற்படுவதைத் தடுப்பதில் பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும், இத்தாலியர்களும் எவ்வாறு வெற்றிகண்டனர்? நிச்சயமாக நாட்டைப் பிளவுபடுத்தி அல்ல: அவர்களுடைய வழிமுறை என்ன? அரசியலில் வகுப்புவாதக் கட்சிகளின் மீது தடைவிதிப்பதே அவர்கள் கையாண்ட வழிமுறை. கனடா, தென் ஆப்பிரிக்கா அல்லது சுவிட்சர்லாந்தில் உள்ள எந்த இனமும் ஒரு தனிப்பட்ட வகுப்புவாதக் கட்சியை ஆரம்பிக்கவேண்டும் என்று ஒருபோதும் சிந்தித்ததில்லை. இதில் கவனத்தில் கொள்ளவேண்டிய முக்கிய அம்சம் என்னவெனில் ஒரு வகுப்புவாதக் கட்சி உருவாக்கப்படுவதை எதிர்ப்பதில் முன்னிலை வகிப்பது சிறுபான்மை தேசங்களேயாகும் என்பதுதான். ஏனெனில் தாங்கள் ஒரு வகுப்புவாத அரசியல் கட்சியைத் துவக்கினால் பெரும்பான்மையினராக இருக்கும் வகுப்பினரும் கூட ஒரு வகுப்புவாதக் கட்சியைத் தொடங்குவர். அதன்மூலம் பெரும்பான்மைவகுப்பினர் தங்களது வகுப்புவாத ராஜ்யத்தை ஏற்படுத்துவது எளிதானது என்று காண்பர். சுயபாதுகாப்பு என்ற விஷச்சுழல் ஆகும் அது. தாங்கள் விரித்த அதே வலையில் தாங்களே

விழுவோம் என்பதை சிறுபான்மை இனங்கள் முழுமையாக உணர்ந்ததன் விளைவாகவே வகுப்புவாத அரசியல் கட்சிகள் உருவாக்கப்படுவதை சிறுபான்மை இனங்கள் எதிர்த்தன.

இந்து ராஜ்யத்தைத் தவிர்க்கும் இந்த வழிமுறையை முஸ்லீம்கள் சிந்தித்துப் பார்த்தனரா? அதைத் தவிர்ப்பது எவ்வளவு எளிதானது என்பதை அவர்கள் பரிசீலித்தனரா? லீகின் தற்போதைய கொள்கை எந்த அளவுக்குப் பயனற்றது, தீங்குப் பயப்பது என்பதை அவர்கள் யோசித்துப் பார்த்தனரா? இந்து மகாசபைக்கு எதிராகவும், அதன் முழக்கமான இந்து ஆட்சி, இந்து ராஜ்யம் ஆகியவற்றுக்கெதிராகவும் முஸ்லீம்கள் ஊளையிடுகின்றனர். ஆனால் இதற்கு யார் காரணம்? முஸ்லீம் லீகை உருவாக்கியிருப்பதன் மூலம் முசல்மான்கள் தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக் கொண்ட தவிர்க்க முடியாத பழிக்குப்பழி நடவடிக்கைதான் இந்து மகா சபையும் இந்துராஜ்யமும் ஆகும். அது ஒரு செயலுக்கான எதிர்ச் செயல். ஒன்று மற்றொன்றைத் தோற்றுவிக்கிறது. நாட்டைத் துண்டாடாமல், முஸ்லீம் லீகை மூட்டைகட்டி வைத்துவிட்டு, இந்துக்களும் முஸ்லீம்களும் கலந்த ஒரு கட்சியை உருவாக்குவதுதான் இந்து ராஜ்யம் என்ற பூதத்தைக் குழிதோண்டிப் புதைக்கும் ஒரே பயனுறுதியான வழியாகும். அரசியல் சட்டரீதியான பாதுகாப்பு நடவடிக்கைகளின் பிரச்சினை மீதான கருத்து வேறுபாடுகள் தொடரும்வரை காங்கிரசிலும் இந்துமகாசபையிலும் சேருவது முஸ்லீம்களுக்கும் இதர சிறுபான்மையினருக்கும் சாத்தியமில்லை என்பது உண்மைதான், ஆனால் இப்பிரச்சினை நிச்சயம் தீர்க்கப் படும்; தீர்க்கப்படவேண்டிய பிரச்சினை இது. இத்தீர்வு முஸ்லீம் களுக்கும் இதர சிறுபான்மையினருக்கும் அவர்களுக்குத் தேவையான பாதுகாப்புகளைப் பெற்றுத்தரும் என்று நம்பிக்கையுடன் கூறமுடியும். இது நிறைவேறவேண்டும் என்று உளப்பூர்வமாக விரும்புகின்றோம். அவ்வாறு நிகழும்போது கட்சிகள் மறு ஒருங் கமைக்கப்படும் வழியில் எதுவும் குறுக்கிடமுடியாது. காங்கிரசும் இந்து மகாசபையும் தகர்ந்துபடும். சமூக மற்றும் பொருளாதார மறுசீரமைப்புக்கான ஓர் ஒப்புக்கொள்ளப்பட்ட திட்டத்தினடிப் படையில் இந்துக்களும் முசல்மான்களும் கூட்டு அரசியல் கட்சிகளை உருவாக்குவர், அதன்மூலம் இந்து ராஜ்யம் அல்லது முஸ்லீம் ராஜ்யம் நிஜமாகும் அபாயத்தைத் தவிர்க்க முடியும். இந்தியாவில் இந்துக்களும் முஸ்லீம்களும் இணைந்த ஒரு கூட்டுக் கட்சியை உருவாக்குவதில் எந்தவித சிரமமும் இராது. இந்து சமுதாயத் தில் பல கீழ்மட்டப் பிரிவுகள் உள்ளன. அவர்களுடைய பொருளாதார,

அரசியல், சமூகத் தேவைகள் பெரும்பாலான முஸ்லீம்களின் தேவைகளைப் போன்றவையேயாகும். பலநூற்றாண்டுகளாகத் தங்களுக்கு சாதாரண மனித உரிமைகளை மறுத்தும் பறித்தும் வந்த உயர்ஜாதி இந்துக்களுடன் இணங்கிப்போவதைவிட பொதுவான இலக்குகளை எய்துவதற்காக முஸ்லீம்களுடன் ஒரு பொதுவான லட்சியத்தில் இணைவதற்கு அவர்கள் தயாராக இருப்பார்கள். இத்தகைய ஒரு போக்கை பின்பற்றுவதை அபாயகரமான செயல் என்று கருதமுடியாது. இப்பாதை நன்கு பழகிய பாதைதான். பெரும்பாலான மாநிலங்களில் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத் தங்களின் கீழ் முஸ்லீம்களும் பிராமணர் அல்லாதாரும் ஒடுக்கப் பட்ட வர்க்கத்தினரும் ஒன்றாக இணைந்து 1920 முதல் 1937 வரை ஒரே குழுவின் உறுப்பினர்களைப் போன்று சீர்திருத்தங்களைச் செயல் படுத்தப் பாடுபட்டது உண்மையல்லவா? இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இடையில் வகுப்புவாத நல்லிணக்கத்தை எய்தவும், இந்து ராஜ்யம் உருவாகும் அச்சுறுத்தலை ஒழிக்கவுமான மிகவும் பயனுள்ள வழிமுறை இதில்தான் உள்ளது. திரு.ஜின்னா இந்த வழியை எளிதில் பின்பற்றியிருக்கலாம்; அதில் வெற்றிபெறுவது திரு.ஜின்னாவுக்கு கடினமானது அல்ல. இத்தகைய ஓர் ஒருங்கிணைந்த வகுப்புசாராத கட்சியை உருவாக்க திரு. ஜின்னா முயன்றிருந்தாரேயானால் அவரது தரப்பில் வெற்றிக்கு எல்லா வாய்ப்புகளும் இருந்திருக்கும். அத்தகைய கட்சியை உருவாக்கி அமைக்கும் திறன் அவருக்கிருந்தது. ஒரு தேசியவாதிக்குரிய புகழை அவர் பெற்றிருந்தார். மனதொருமித்த இந்துக்களையும் முஸ்லீம்களையும் கொண்ட ஓர் ஐக்கியக் கட்சியை உருவாக்க அவர் மட்டும் அழைப்பு விடுத்திருப்பாரேயானால், காங்கிரசை எதிர்த்து வந்த பல இந்துக்களும் கூட அவருக்குப் பின்னால் அணி திரண்டிருப்பர். திரு. ஜின்னா என்ன செய்தார்? 1937 இல்தான் திரு. ஜின்னா முஸ்லீம் அரசியலில் நுழைந்தார். ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் முஸ்லீம் லீகை சவக்குழிக்கு அனுப்பு வதைக் கண்டு மகிழ்ச்சியடைந்திருக்கக்கூடிய நிலையில் இருந்த அவர் அதிசயிக்கத் தக்க விதத்தில் அழிந்தும் சிதைந்துக் கொண்டிருந்த முஸ்லீம் லீகிற்கு புத்துயிர் ஊட்டினார். இத்தகையதொரு வகுப்புவாத அரசியல் கட்சியை தொடங்கியது வருத்தத்திற்குரியதாக இருந்த போதிலும் அதில் மன நிம்மதியளிக்கும் அம்சம் ஒன்றும் இருந்தது. அதுதான் திரு. ஜின்னாவின் தலைமை, திரு.ஜின்னா தலைமை ஏற்றிருப்பதனால் லீக் வெறும் வகுப்புவாதக் கட்சியாக ஒருபோதும் மாறாது என்று அனைவரும் கருதினர். அக்கட்சியின் புதிய வாழ்க்கைப் பாதையின் முதல் இரண்டு ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்ட தீர் மானங்கள், அது இந்துக்களையும் முஸ்லீம்களையும் கொண்ட ஓர்

அரசியல் கட்சியாக உருவாகும் என்பதைச் சுட்டிக்காட்டின. 1937 அக்டோபரில் லக்னோவில் நடைபெற்ற முஸ்லீம்லீகின் வருடாந்திரக் கூட்டத் தொடரில் மொத்தம் 15 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இவற்றில் பின்வரும் இரு தீர்மானங்கள் விசேட ஆர்வத்தை தூண்டக்கூடியவை ஆகும்:

*தீர்மானம்[1] எண்: 7*

*''1935 ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தையும் ஆளுநர்களுக்கு பிறப்பிக்கப்பட்ட ஆணைகளையும் அப்பட்டமாக மீறும் விதத்தில் சில மாகாணங்களில் காங்கிரஸ் கட்சிகளின் அமைச்சரவை உருவாக்கப்பட்டதை எதிர்த்து அகில இந்திய முஸ்லீம் லீகின் இக்கூட்டம் கண்டனத்தையும் எதிர்ப்பையும் தெரிவிக்கிறது. முசல்மான்கள் மற்றும் இதர முக்கிய சிறுபான்மையினரின் நலன்களைப் பாதுகாப்பதற்காக அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட விசேட அதிகாரங்களை அமலபடுத்தத் தவறியதற்காக ஆளுநர்களைக் கண்டிக்கிறது.''*

*தீர்மானம் எண்: 8*

*''சுதந்திர ஜனநாயக அரசுகளின் கூட்டமைப்பு வடிவில் முழுமையான சுதந்திரத்தை இந்தியாவில் ஏற்படுத்துவதுதான் அகில இந்திய முஸ்லீம்லீகின் குறிக்கோள் என்று தீர்மானிக்கப்படுகிறது. இதில் முசல்மான்கள் மற்றும் இதர சிறுபான்மையினரின் உரிமைகளும் நலன்களும் போதுமான அளவுக்குப் பயனுறுதியுடன் பேணிக் காக்கப்படும்.''*

1938 டிசம்பரில் பாட்னாவில் நடைபெற்ற லீகின் அடுத்த வருடாந்திரக் கூட்டத்தொடரில் அதே எண்ணிக்கையிலான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றில் தீர்மானம் எண்.10 குறிப்பிடத்தக்கதாகும். அது பின்வருமாறு:

''1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தில் பொறிக்கப்பட்டுள்ள கூட்டாட்சித் திட்டம் ஏற்புடையதல்ல என்ற தனது கருத்தை அகில இந்திய முஸ்லீம் லீக் வலியுறுத்துகிறது. ஆனால் ஏற்கெனவே நடைபெற்றுள்ள சம்பவங்களையும்

1. மூலநூலில் இது இட்டாலிக் அச்சுரு படிவத்தில் இல்லை.

அல்லது அவ்வப்போது நடைபெறக்கூடிய சம்பவங்களையும் கருத்தில் கொண்டு, இந்தியாவிலுள்ள முசல்மான்கள் மற்றும் இதர சிறுபான்மையினரின் நலன்களைப் பாதுகாக்கக் கூடிய ஒரு தகுந்த மாற்று ஏற்பாட்டிற்கான சாத்தியக்கூறுகளை ஆராயும் கண்ணோட்டத்துடன் அது இதன்வாயிலாக அகில இந்திய முஸ்லீம் லீகின் தலைவருக்கு தேவையான நடவடிக்கை களை மேற்கொள்ளும் அதிகாரத்தை வழங்குகிறது.''

இத்தீர்மானங்களின் வாயிலாகத் தாம் முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாத இதர சிறுபான்மையினருக்கும் இடையில் ஒரு பொதுவான முன்னணிக்கு ஆதரவாக இருப்பதாகத் திரு.ஜின்னா காட்டிக்கொண்டார். துரதிருஷ்டவசமாக, இத்தீர்மானங்களில் இழையோடிய பரந்த எண்ணமும் அரசியல்திறமும் வெகுகாலம் நீடிக்கவில்லை. 1939 இல் திரு.ஜின்னா குட்டிக்கரணம் அடித்து பாகிஸ்தான் பிரிவினைக்கு ஆதரவான இந்த தீர்மானத்தை நிறை வேற்றியதன் மூலம் முசல்மான்களைத் தனிமைப்படுத்தும் ஆபத் தான நாசகரமான, கொள்கையை வகுத்துத்தந்தார். இவ்வாறு முஸ்லீம்களைத் தனிமைப் படுத்துவதற்கான காரணம் என்ன? முசல் மான்கள் ஒரு வகுப்பினரல்ல, அவர்கள் ஒரு தேசம் என்ற கருத்து மாற்றத்தைத்தவிர வேறு என்ன காரணம் இருக்கமுடியும்!! முஸ்லீம் கள் ஒரு தேசமா அல்லது ஒரு வகுப்பினரா என்ற பிரச்சினை குறித்து எவரும் சர்ச்சையில் ஈடுபடவேண்டியதில்லை. ஆனால் முஸ்லீம்கள் ஒரு தேசம் என்று கூறிவிட்டது மட்டுமே எவ்வாறு அரசியல் தனிமையை ஒரு பாதுகாப்பான, வலுவான கொள்கையாக்குகிறது என்பதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாக இருப்பதை எவராலும் உணர முடியும். இக் கொள்கையின் மூலம் திரு.ஜின்னா தங்களுக்கு எத் தகைய தீங்கு செய்திருக்கிறார் என்பதைத் துரதிருஷ்டவசமாக முஸ்லீம்கள் புரிந்துகொள்ளவில்லை. முசல்மான்களுக்கான ஒரே அமைப்பாக முஸ்லீம் லீகை ஆக்கியதன் மூலம் திரு.ஜின்னா என்ன சாதித்தார் என்பதை முஸ்லீம்களே எண்ணிப்பார்க்கட்டும். பின்பாட்டுப் பாடவேண்டிய நிலைமையைத் தவிர்க்க அது அவருக்கு உதவி யிருக்கக் கூடும். ஏனெனில் முஸ்லீம் முகாமிற்குள் அவருக்கு எப்போதும் முதலிடம் நிச்சயம் உண்டு. ஆனால் இந்து ராஜ்யத்தி லிருந்து தனிமைப்படுத்தும் இத்திட்டத்தின் மூலம் முஸ்லீம்களைக் காப்பாற்றமுடியும் என்று லீக் எப்படி நம்புகிறது? முசல்மான்கள் சிறுபான்மையினராக உள்ள மாநிலங்களில் இந்துராஜ்யம் நிறுவப் படுவதை பாகிஸ்தான் தடுத்துவிடுமா? நிச்சயமாக அது முடியாது. பாகிஸ்தான் உருவானால் முஸ்லீம்கள் சிறுபான்மையினராக உள்ள

மாநிலங்களில் இதுதான் நடைபெறும். அகில இந்தியக் கண்ணோட்டத்திலிருந்து பார்ப்போம். இந்துஸ்தானிலேயே தங்கிவிடக்கூடிய முஸ்லீம் சிறுபான்மையினர் மீது மத்தியில் இந்து ராஜ்யம் ஏற்படுவதை பாகிஸ்தானால் தடுத்துவிட முடியுமா? அதுமுடியாது என்பது நிதர்சனம். அப்படியிருக்க, பாகிஸ்தானால் என்ன பயன்? முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள மாநிலங்களில், ஒருபோதும் இந்துராஜ்யம் ஏற்படாத இடங்களில் இந்து ராஜ்யத்தைத் தடுப்பது மட்டும்தானா!! வேறுவிதமாகச் சொல்வதெனில் முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள இடங்களில் அவர்களுக்குப் பாகிஸ்தான் தேவையற்றது. ஏனெனில் அங்கு இந்து ராஜ்யம் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சமே இல்லை. சிறுபான்மையினராக முஸ்லீம்கள் உள்ள இடங்களில் அது அவர்களுக்குப் பயனற்றது. ஏனெனில் அங்கு பாகிஸ்தான் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவர்கள் இந்து ராஜ்யத்தை சந்தித்துதான் தீரவேண்டும். முஸ்லீம் லீகின் அரசியலைப் போன்ற பயனற்ற அரசியல் ஏதேனும் இருக்க முடியுமா? சிறுபான்மை முஸ்லீம்களுக்கு உதவுவதற்காகத் தொடங்கப்பட்ட முஸ்லீம் லீக் பெரும்பான்மை முஸ்லீம்களின் லட்சியத்திற்காகப் பாடுபடுவதில் போய் முடிந்திருக்கிறது. முஸ்லீம் லீகின் ஆரம்ப நோக்கத்திலிருந்து இது எத்தகைய உருத் திரிபாகி விட்டது! செம்மாந்த நிலையிலிருந்து எள்ளிநகையாடத்தக்க நிலைக்கு எத்தகைய வீழ்ச்சி! இந்து ராஜ்யத்திற்கெதிரான ஒரு மாற்று மருந்தாக நாட்டைப் பிளவுபடுத்துவதென்பது மிக மிக மோசமானது.

## VII

இவை பாகிஸ்தானுக்கு ஆதரவான முஸ்லீம் வாதத்தில் எனக்குத் தோன்றிய சில பலவீனமான அம்சங்களாகும். எனக்குத் தோன்றாத இன்னும் சில பலவீனங்களும் இருக்கக்கூடும். ஆனால் ஏற்கெனவே உள்ள இந்தப்பட்டியலே கூட மிகவும் நீளமானது. இதில் கூறப்பட்டுள்ளவற்றைச் சமாளிக்க முஸ்லீம்கள் என்ன திட்டம் வைத்திருக்கிறார்கள்? இது முஸ்லீம்கள் பதிலளிக்க வேண்டிய கேள்வியேயன்றி நான் பதிலளிக்க வேண்டிய கேள்வி அல்ல. இந்த விஷயத்தை ஆராய்பவன் என்றமுறையில் எனதுகடமை இந்தப் பலவீனங்களை வரிசைப்படுத்துவதேயாகும். இதைத்தான் நான் செய்திருக்கிறேன். நான் பதிலளிக்க வேண்டிய விஷயங்கள் வேறு எவையும் இல்லை.

ஆயினும் இன்னும் இரண்டு முக்கியக் கேள்விகள் உள்ளன. அவற்றை மேற்கோள் காட்டாமல் இந்தவிவாதம் முழுமை

பெற்றதாகக் கருதி இதற்கு முற்றுப்புள்ளி வைக்கமுடியாது. இக்கேள்விகளின் நோக்கமே எனக்கும் எனது விமர்சகர்களுக்குமிடையில் உள்ள சில ஐயப்பாடுகளைப் போக்குவதாகும். இக்கேள்விகளில் ஒன்று எனது விமர்சகர்களை நோக்கி நான் கேட்பதற்குரியது. மற்றொன்று விமர்சகர்கள் என்னை நோக்கிக் கேட்பதற்குரியது.

முதலாவதாக, விமர்சகர்களை நோக்கி நான் கேட்க வேண்டுமென்று கருதும் கேள்வி இதுதான்:

முஸ்லீம்களின் வாதத்தில் காணப்படும் பலவீனங்களைப் பற்றிய இந்த அறிக்கையிலிருந்து அவர்கள் என்ன பலன் எதிர்ப் பார்க்கின்றனர்? பாகிஸ்தானை உருவாக்குவதனால் ஏற்படும் நன்மைகளைப் பற்றிய சர்ச்சையில் தோல்வியடைந்தால் முசல்மான்கள் பாகிஸ்தானைக் கைவிடவேண்டும் என்று அவர்கள் எதிர்பார்க்கின்றனரா? இந்த சர்ச்சைக்குமுடிவு கட்டுவதற்கு என்ன வழிமுறை பின்பற்றப்படுகிறது என்பதைப் பொறுத்தே அது அமையும். ஆரம்ப காலத்தில் இந்துக்களிடையேயிருந்து மதம் மாறுபவர்களைப் பெறுவதற்காக கிறிஸ்தவ சமயத்தினர் பயன்படுத்திய வழிமுறையையே இந்துக்களும் முசல்மான்களும் பின்பற்றக்கூடும். இந்த வழிமுறையின்படி ஒரு கிறித்தவ மதபோதகருக்கும் ஒரு பிராமணருக்கும் இடையில் விவாதத்திற்காக ஒருநாள் குறிக்கப்படும். முதலாமவர் கிறித்தவ மதத்தைப் பிரதிநிதித்துவப் படுத்துபவராகவும், பின்னவர் இந்துமதத்தை ஆதரிப்பவராகவும் இருப்பார்கள். இதில்யார் தமது மதத்திற்கெதிரான விவாதத்தில் தோல்வியுற்றாலும் அவர் மற்றவருடைய மதத்தைத் தழுவிக் கொள்ளவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் சொற்போர் நடைபெறும். பாகிஸ்தான் பிரச்சினை சம்பந்தமாக இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையில் சச்சரவுகளைத் தீர்க்கும் ஒரு வழிமுறையாக இத்தகைய வழிமுறை ஒப்புக்கொள்ளப்படுமானால், பலவீனங்களின் இப்பட்டியலை வெளியிடுவதில் ஏதேனும் பயன் இருக்கக்கூடும். ஆனால், ஒரு சர்ச்சையைத் தீர்ப்பதில் இன்னொரு வழிமுறையும் இருக்கிறது என்பதை மறந்துவிடக்கூடாது. பிஷப்பெர்க்ளியின் வாதங்களுக்குப் பதிலளிப்பதில் டாக்டர் ஜான்சன் பயன்படுத்திய வழிமுறையே அது. அதை ஜான்சன் வழிமுறை என்றும் அழைக்கலாம். ஒரு சமயம் போஸ்வெல் டாக்டர் ஜான்சனைச் சந்தித்தார். அப்போது சடப்பொருள் என்று எதுவும் கிடையாது; பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் வெறும் மாயைதான் என்ற பிஷப் பெர்க்ளியின் சித்தாந்தத்தை எடுத்துக்கூறி, இது மிக சாமர்த்தியமான குதர்க்கவாதமாக இருக்கிறது, எனினும்

அதை மறுக்கமுடியவில்லை என்று தெரிவித்தாராம். அப்போது டாக்டர் ஜான்சன் ஒரு பெரிய கல்லின் மீது தமது பலங்கொண்ட மட்டும் காலால் உதைத்துப் பெரிதும் உணர்ச்சிவசப் பட்டவராக ''நான் இவ்வாறு அதை மறுதலிக்கிறேன்'' என்று கூறியதாக போஸ்வெல்லே பதிவுசெய்திருக்கிறார். எதையும் சீர்தூக்கிப் பார்க்கும் பெரும்பாலானவர்கள் கருதுவதுபோன்று முஸ்லீம்களும் பாகிஸ் தானுக்கான தங்களது கோரிக்கையை தக்க ஆதாரங்களுடன் காரண காரியவாதங்களுடன் நிலைநாட்டுவதே நியாயம். ஆனால், டாக்டர் ஜான்சனின் வழிமுறையைப் பின்பற்றி ''உங்களது விவாதங்களை தூக்கி எறியுங்கள். எங்களுக்குப் பாகிஸ்தான் வேண்டும்'' என்று கூற முஸ்லீம்கள் முடிவுசெய்துவிட்டார்களேயானால் நான் ஆச்சரியப் படமாட்டேன். அவ்வாறு நேரும்போது பாகிஸ்தான் கோரிக்கைக்கு ஆதரவான வாதங்களைத் தகர்ப்பதற்கு வரையறைக்குட்பட்ட ஆதாரங்கள் மீது வைக்கப்படும் எந்த நம்பிக்கையும் பலனளிக்காது என்பதை விமர்சகர் உணரவேண்டும். ஆகவே பாகிஸ் தானுக்கு எதிரான இந்த ஆட்சேபணைகளின் தர்க்கநியாயத்தை கண்டு அகமகிழ்ந்து போவதில் பயனேதும் இல்லை.

என்னிடம் விமர்சகர் கேட்க உரிமையுள்ள கேள்வியைப் பற்றி இப்போது பார்ப்போம்: நான் ஏற்கெனவே கூறியுள்ள ஆட்சே பணைகளின் பகைப்புலனில், பாகிஸ்தான் பிரச்சினை சம்பந்த மாக எனது நிலை என்ன? எனது நிலையைப் பற்றி எனக்கு எந்த விதமான ஐயப்பாடும் கிடையாது. சிலநிபந்தனைகளுக்குட்பட்டு பின்வரும் அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருப்பது போன்று, பாகிஸ்தான் வேண்டுமென்று முசல்மான்கள் கட்டாயமாகக் கோரி னால் அப்போது அவர்களுடைய கோரிக்கை ஏற்கப்படவேண்டும் என்ற உறுதியானநிலைபாட்டினை நான் கொண்டிருக்கிறேன். என்னுடைய வாதம் முன்னுக்குப்பின் முரணாக இருப்பதாக எனது விமர்சகர்கள் என்மீது குற்றம்சாட்டுவார்கள் என்பதும், இத்தகைய அசாதாரணமான முடிவுக்கான காரணங்களைக் கோருவார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அசாதாரணமானது என்று குறிப்பிடப் படுவதற்குக் காரணம், இந்த அத்தியாயத்தின் முற்பகுதிகளில், பாகிஸ் தானுக்கான முஸ்லீம்களின் வாதத்தில் எந்தவிதமான கட்டாயப் படுத்தும் அம்சமும் இல்லை என்ற கருத்தை நான் வெளியிட் டிருப்பதே ஆகும். பாகிஸ்தனுக்கு ஆதரவான முஸ்லீம்களின் வாதத் தில் உள்ள பலவீனங்களைப் பொறுத்தவரை நான்கூறியது எதையும் திரும்பப் பெறப்போவதில்லை. ஆயினும் முஸ்லீம்கள் பாகிஸ் தானைப் பெற்றே தீரவேண்டும் என்றிருந்தால் இந்த விஷயத்தில்

அவர்களுக்கு விட்டுக்கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை. இந்த முடிவுக்கு என்னை இட்டுச் சென்ற காரணங்களைப் பொறுத்தவரை பாகிஸ்தானுக்கான தர்க்கவியலின் பலம் அல்லது பலவீனம் அக்காரணங்களில் ஒன்றல்ல என்று கூற தயங்க மாட்டேன். எனது கருத்தில் இப்பிரச்சினையைத் தீர்மானிக்கும் இரு முக்கிய அம்சங்கள் உள்ளன. முதலாவது இந்தியாவின் பாதுகாப்பு; இரண் டாவது முஸ்லீம்களின் விருப்பார்வம். இவற்றை நான் ஏன் தீர்மானகர மானவை எனக் கருதுகிறேன். எனதுகருத்தில் அவை எப்படிப் பாகிஸ்தானுக்கு ஆதரவானவை என்பதைக் கூறுகிறேன்.

முதலாவது அம்சத்திலிருந்து தொடங்குவோம். சுதந்திரம் பெறுவது முக்கியமில்லை, ஆனால் அதைப் பேணிக்காக்கும் நிச்சயமான வழிமுறைகள்தாம் முக்கியமானவை என்பதை எவரும் அசட்டை செய்யமுடியாது. ஒரு நாட்டின் சுதந்திரத்திற்கு இறுதி உத்தரவாதம் ஒரு பாதுகாப்பான ராணுவம்தான்; எந்த நேரத்திலும் எந்த சந்தர்ப்பத்திலும் நாட்டுக்காகப் போராடும் என்று நாம் நம்பியிருக்கக்கூடிய ஒரு ராணுவம்தான். இந்தியாவின் ராணுவம் இந்துக்களையும் முஸ்லீம்களையும் கொண்ட ஒரு கலவையான ராணுவமாக இருக்க வேண்டியது அவசியம். ஓர் அன்னிய சக்தி இந்தியாவின் மீது படையெடுக்குமானால் ராணுவத்திலுள்ள முஸ்லீம்கள் இந்தியாவைப் பாதுகாப்பார்கள் என்று நம்ப முடியுமா? படை யெடுப்பவர்கள் அவர்களுடைய சக-மதத்தினர் என்று வைத்துக் கொள்வோம். அப்போது முஸ்லீம்கள் படை யெடுப்பாளர்களின் பக்கம் நிற்பார்களா அல்லது அவர்கள் இந்தியா வைக் காப்பதற்காக படையெடுப்பாளர்களை எதிர்த்து நிற் பார்களா? பாகிஸ்தானின் ஆதாரசுருதியான இருதேசத்தத்துவம் என்ற தொற்றுநோய் ராணுவத்திலுள்ள முஸ்லீம்களை எந்த அளவுக்குப் பீடித்துள்ளது என்பதைப் பொறுத்துத்தான் இக்கேள்விக்கான பதில் அமைந்திருக்கும். அவர்களுக்கு அந்த நோய் தொற்றியிருக்குமானால் இந்தியாவிலுள்ள ராணுவம் பாதுகாப்பானதாக இருக்க முடியாது. இந்தியாவின் சுதந்திரத்திற்குப் பாதுகாவலனாக இருப்பதற்குப் பதிலாக அந்த ராணுவம் இந்திய சுதந்திரத்திற்கு அச்சுறுத்தலாகவும் உள்ளார்ந்த அபாயமாகவும் மாறக் கூடும். இந்தியாவின் பாதுகாப்பு கருதி அவர்கள் பாகிஸ்தானை நிராகரிக்க வேண்டும் என்று சில பிரிட்டிஷார் வாதிடுவதைச் செவிமடுக்கும்போது நான் திகைப் படைகிறேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். சில இந்துக்களும் கூட இதேபாட்டைத்தான் பாடுகின்றனர். ஒன்று இந்தியாவின் சுதந்திரத் தில் தீர்மானமான அம்சம் எது என்பதை அவர்கள் உணராதிருக்க வேண்டும்; அல்லது தனது சொந்த பந்தோபஸ்துக்குப் பொறுப்பாக

உள்ள ஒரு சுதந்திரநாடாக அல்லாமல், அத்து மீறி நுழையும் ஒருவனை எதிர்த்துப் பாதுகாக்கப்படவேண்டிய ஒரு பிரிட்டிஷ் உடைமையாக இந்தியாவின் பந்தோபஸ்தைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருக்க வேண்டும் என்று நான் நிச்சயமாகக் கருது கிறேன். இது முற்றிலும் ஒரு தவறான கண்ணோட்டமாகும். இந்தியாவின் பிரிவினை இல்லை என்றால் இந்தியாவை பிரிட்டி ஷார் சிறந்த முறையில் பாதுகாப்பார்களா என்பதல்ல பிரச்சினை. சுதந்திர இந்தியாவை இந்தியர்களால் பாதுகாத்துக்கொள்ள இயலுமா என்பதுதான் பிரச்சினை. அதற்கு ஒரே பதில் சுதந்திர இந்தியாவை ஒரே ஒரு நிபந்தனையின் பேரிலேயே பாதுகாக்க முடியும். இந்தியா வின் ராணுவம் அரசியல் கலப்பற்றதாக, பாகிஸ்தான் என்ற நச்சி னால் பாதிக்கப்படாததாக இருக்கவேண்டும் என்பதுதான் அந்த நிபந்தனை என்பதை நான் திரும்பவும் கூறுகிறேன். ராணுவத்தின் பிரச்சினையைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் சுயராஜ்யம் என்ற பிரச்சினையை விவாதிக்கும் இந்த நாட்டில் வளர்ந்துவிட்ட மிகவும் மதிகெட்ட போக்குக்கு எதிராக இந்தியர்களை எச்சரிக்க விரும்பு கின்றேன். அரசியல் சார்ந்த ஒரு ராணுவம் இந்தியாவின் விடுதலைக்கு மிகப் பெரிய ஆபத்தாக இருக்கும் என்பதை உணரத் தவறுவதை விட மிகவும் நாசகரமானது வேறு எதுவும் இருக்க முடியாது. ராணுவமே இல்லாதிருப்பதை விடவும் அது மோசமானது.

உள்நாட்டில் தனது அதிகாரத்தைப் பிரயோகிக்கும் விஷ யத்தில் கலக சக்திகளாலும், கீழ்ப்படிய மறுக்கும் எதிர்ப்பு சக்தி களாலும் நாடு அச்சுறுத்தப்படும்போது அதற்கு இறுதி அரணாகத் திகழ்வது ராணுவம்தான் என்ற உண்மையும் கூட மிக முக்கிய மானதாகும். உதாரணமாக, அரசாங்கம் பிரகடனம் செய்யும் ஒரு கொள்கையை முஸ்லீம்களின் ஒரு பிரிவினர் வன்மையாக எதிர்க் கின்றனர் என்று வைத்துக் கொள்வோம். தனது கொள்கையை நடைமுறைப் படுத்துவதற்காக தனது ராணுவத்தைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் அந்த அரசாங்கத்திற்கு ஏற்படுகிறது என்றும் வைத்துக் கொள்வோம். அப்போது ராணுவத்திலுள்ள முஸ்லீம்கள் தமது கட்டளைக்கு கீழ்ப்படிவார்கள், முஸ்லீம் கலகக்காரர்களை சுட்டு வீழ்த்துவார்கள் என்று அந்த அரசாங்கம் நம்பி இருக்க முடியுமா? இதுவும் ராணுவத்தில் உள்ள முஸ்லீம்களின் மீது இரு தேசத் தத்துவம் எந்த அளவுக்குத் தொற்றியிருக்கிறது என்பதைப் பொறுத்தே உள்ளது. அந்த வியாதி அவர்களைத் தொற்றியிருக்குமே யானால் இந்தியா ஒரு பாதுகாப்பான, பந்தோபஸ்தான அரசாங் கத்தைக் கொண்டிருக்க முடியாது.

இனி, இரண்டாவது முக்கிய அம்சத்தைப் பார்ப்போம். அரசியலில் ஒரு சக்தி என்றமுறையில் இந்துக்கள் உணர்வுக்கு, எந்தவித மதிப்பும் அளிப்பதில்லை. முஸ்லீம்களுக்கு எதிராக அவர்கள் இரண்டு அம்சங்களை நம்பிக் கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. முதலாவது அம்சம், இந்துக்களும் முஸ்லீம்களும் இரு தேசங்கள் என்றபோதிலும் கூட அவர்கள் ஒரே அரசின் கீழ் வாழ முடியும் என்பதாகும்; மற்றொரு அம்சம் முஸ்லீம்களின் பாகிஸ்தான் கோரிக்கை வலுவான உணர்வுகளை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றதேயன்றி தெளிவான வாதங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை என்பதாகும். இத்தகைய வாதங்களைக் கொண்டு இந்துக்கள் எத்தனைக் காலம் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டிருக்கப் போகிறார்களோ என்று எனக்குத் தெரியவில்லை. முதலாவது வாதம் முன்னுதாரணமற்றது அல்ல என்பது உண்மை தான். அதேசமயம், அதனுடைய மதிப்பு மிகவும் வரையறுக்கப் பட்டுள்ளது என்பதைக் காண்பதற்கு பெரிய அறிவாற்றல் தேவை யில்லை. இரு தேசங்கள், ஓர் அரசு என்பது ஒரு கவர்ச்சிகரமான கோஷம்தான் என்பதில் ஐயமில்லை. ஒரு சமயப் பேருரைக்குள்ள கவர்ச்சி இதற்கிருக்கிறது; இது முஸ்லீம் தலைவர்களின் மனமாற்றத்தில் முடியவும் கூடும். ஆனால் அதேசமயம் ஒரு சமயச்சொற்பொழிவு போன்று அல்லாமல் அவசரச் சட்டம் போன்றதொன்றைப் பிறப்பித்து அதற்கு முஸ்லீம்கள் கீழ்ப்படியவேண்டுமென்று விழைவது சுத்த பைத்தியக்காரத் தனமானது. இதற்கு சுயசிந்தனையுள்ள எவரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். இது நிச்சயமாக சுயராஜ்யத்தின் நோக்கத்தையே கெடுத்துவிடும் என்று கூறுவேன். இரண்டாவது வாதமும் கூட அதே அளவுக்கு அற்பத்தனமானது தான். பாகிஸ்தான் வேண்டும் என்ற முஸ்லீம் வாதம் உணர்வுகளை ஆதாரமாகக் கொண் டிருக்கிறது என்பது அதன் பலவீனம் சம்பந்தப்பட்ட விஷயம் அல்ல; உண்மையில் அதுவே அதன் பலம் எனலாம். ஓர் அரசியல் சட்டம் செயல்படத் தகுந்ததுதானா என்பதைத் தெரிந்துகொள்வது ஒரு தத்துவம் சார்ந்த விஷயமல்ல. அதற்கு அரசியலில் ஆழ்ந்த ஞானம் தேவையில்லை. அது ஓர் உணர்வுபூர்வமான விஷயம். ஓர் அரசியல் சட்டம் என்பது அளவான, எடுப்பான ஆடைகளைப் போன்றது. ஓர் அரசியல் சட்டம் எடுப்பானதாக இல்லாவிடில், அது எந்தஅளவுக்கு முழுநிறைவானதாக இருந்தாலும் செயல்படாது. மக்களின் ஒரு தீர்மானகரமான பிரிவினரின் வலுவான உணர்வுகளுக்கு எதிராக இருக்கும் எந்த ஓர் அரசியல் சட்டத்தையும் கொண்டிருப்பது புரட்சிக்கு அழைப்பு விடுப்பது என்று இல்லாவிடினும் அழிவைத் தேடிக்கொள்வதாகும்.

ஒரு பாதுகாப்பான ராணுவம் இருக்கிறது என்று வைத்துக் கொண்டாலும் கூட, ஆயுதப்படைகளைக் கொண்டு ஆட்சி நடத்துவதென்பது ஒரு மக்களை ஆளும் இயல்பான முறை அல்ல என்பதை இந்துக்கள் உணரவில்லை. வன்முறை என்பது அரசுச் சமுதாயத்துக்கு சக்தி வாய்ந்த மருந்து என்பதை மறுக்கமுடியாது. ஆனால் அரசுச் சமுதாயம் நோய்வாய்ப்படும் போதுதான், இந்த மருந்தைக் கொடுக்க வேண்டும். அரசுச் சமுதாயத்துக்கு பலப்பிரயோகம் ஒரு சிறந்த மருந்து என்ற காரணத்தினால் மட்டுமே அதை அன்றாட உணவாக மாற்ற அனுமதிக்க முடியாது. அரசுச் சமுதாயம் இயல்பான செயல்பாட்டைக் கொண்டு இயங்க வேண்டும். அரசுச் சமுதாயத்தில் அங்கம் வகிக்கக் கூடிய பல்வேறு சக்திகள் ஒன்றாக இணைந்து செயல்படும் விருப்பத்தையும், முறையாக அமைக்கப்பட்ட அதிகார அமைப்பினால் நிறைவேற்றப்பட்ட சட்டங்களுக்கும் உத்தரவுகளுக்கும் கீழ்ப்படியும் உறுதியையும் கொண்டிருக்கும் போதுதான் இது நடைபெற முடியும். முஸ்லீம்களின் நலன்களைப் பாதுகாப்பதற்குத் தேவையான ஷரத்துகள் அனைத்தையும் ஐக்கிய இந்தியாவின் புதிய அரசியல் சட்டம் தன்னகத்தே கொண்டுள்ளது என்று வைத்துக் கொள்வோம். "உங்களுடைய பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு நன்றி. ஆனால் உங்களால் ஆளப்படுவதை நாங்கள் விரும்பவில்லை'' என்று முஸ்லீம்கள் கூறினால், அவர்கள் சட்டமன்றங்களைப் புறக்கணித்தால், சட்டங்களுக்குக் கீழ்ப்படிய மறுத்தால், வரி செலுத்துவதை எதிர்த்தால், அப்போது என்ன நடைபெறும்? அப்போது துப்பாக்கி முனைகளைப் பயன்படுத்தி முஸ்லீம்களைக் கீழ்ப்படியச் செய்ய இந்துக்கள் தயாராக இருப்பார்களா? சுயராஜ்யம் என்பது மக்களுக்குச் சேவை செய்யும் வாய்ப்பாக இருக்கப்போகிறதா அல்லது முசல்மான்களை வெற்றி கொள்ள இந்துக்களுக்கும், இந்துக்களை வெற்றி கொள்ள முசல்மான்களுக்கும் ஒரு வாய்ப்பாக இருக்கப்போகிறதா? சுயராஜ்யம் என்பது மக்களின், மக்களால், மக்களுக்காக நடத்தப்படும் அரசாங்கமாக இருக்கவேண்டும். இதுவே சுயராஜ்யத்தின் முழு முதல் நோக்கம்; சுயராஜ்யத்தை நியாயப்படுத்தும் ஒரே காரணம். இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவருக்கெதிராக மற்றொருவர் சூழ்ச்சிகளில் ஈடுபடக்கூடிய ஒருவர் தனது எதிரியை வெற்றிகொள்ளத் திட்டமிடக்கூடிய ஒரு சகாப்தத்தைத் தோற்றுவிப்பதுதான் சுயராஜ்யம் என்றால் அத்தகைய ஒரு சுயராஜ்யத்தைத் தோற்றுவிக்க ஜனநாயக நாடுகள் ஏன் பாடுபட வேண்டும்? அது ஒரு பொறியாக, ஒரு மாயையாக, ஒரு புரட்டாகவே இருக்கும்.

பல்வேறு மாற்றுக் கருத்துகளுக்கிடையில் ஒன்றைத் தேர்வு செய்யும் ஒரு நிலைக்குத் தாங்கள் தள்ளப்பட்டிருப்பதை முஸ்லீம் அல்லாதவர்கள் உணர்ந்திருப்பதுபோல் தோன்றவில்லை. அவற்றை இங்கே கூறுகிறேன். முதலாவதாக, அவர்கள் இந்தியாவின் விடுதலைக்கும் இந்தியாவின் ஒற்றுமைக்கும் இடையில் தேர்வு செய்யவேண்டியுள்ளது. முஸ்லீம் அல்லாதவர்கள் இந்தியாவின் ஒற்றுமையை வலியுறுத்துவார்களேயானால் அவர்கள் இந்தியா விரைவில் விடுதலை அடைவதற்கு இடையூறு செய்பவர்களாகிறார் கள். இரண்டாவது தேர்வு இந்தியாவைப்பாதுகாக்கும் நிச்சயமான வழிமுறை சம்பந்தப்பட்டதாகும்; ஒரு சுதந்திரமான, ஒருங்கிணைந்த இந்தியாவில் முஸ்லீம் அல்லாதவர்ளுடன் இணைந்து வாழவும் முன்னேறவும் அவர்கள் முஸ்லீம்களை நம்பியிருக்க முடியுமா; இரு சாராரின் பொதுவான விடுதலையைப் பாதுகாக்கத் தேவையான நெஞ்சுறுதி இருக்குமா; அல்லது இந்தியாவைப் பிரிவினை செய்து அதன்மூலம் முஸ்லீம் இந்தியாவின் பாதுகாப்பை உறுதிப்படுத்த அதன் பந்தோபஸ்தை முஸ்லீம்கள்வசம் ஒப்படைத்து விடுவதும், அதேபோன்று முஸ்லீம்கள் அல்லாத இந்தியாவின் பந்தோ பஸ்தை முஸ்லீம்கள் அல்லாதவர்களிடம் ஒப்படைத்துவிடுவதும் நல்லதா.

முதலாவது, தேர்வைப் பொறுத்தவரை, இந்தியாவின் ஒற்றுமையை விட இந்தியாவின் சுதந்திரத்தையே நான் விரும்பு கின்றேன். உலகில் வேறு எங்கும் காணமுடியாத அளவுக்கு தீவிர தேசியவாதிகளாக இருக்கும் சின்பெய்ன் இயக்கத்தவர்களிடம் இந்தியர்களைப் போன்றே சுதந்திரம் அல்லது ஒற்றுமை எனும் மாற்று யோசனைகள் முன்வைக்கப்பட்டபோது அவர்கள் அயர்லாந்தின் ஒற்றுமைக்குப் பதிலாக அயர்லாந்தின் சுதந்திரத்தையே தேர்வு செய் தனர். பிரிவினையை[1] எதிர்க்கும் முஸ்லீம் அல்லாதவர்கள், அயர் லாந்தின் பிரிவினை குறித்த பிரச்சினை சம்பந்தமாக ஐரிஷ் தேசிய வாதிகளுக்கு ஃபெயின் இயக்கத்தின் துணைத்தலைவராக ஒருசமயம் இருந்த தவத்திரு. மைக்கேல் ஓஃப்ளைகான் வழங்கிய அறிவுரை யிலிருந்து படிப்பினைகளைக் கற்றுக் கொள்ளக்கூடும். அவர் கூறியதாவது:

"அல்ஸ்டரின் யூனியன் பகுதிகளைத் தவிர்ப்பதற்கு ஒப்புக் கொள்வதை விடுத்து உள்நாட்டு ஆட்சியை நிராகரிப்போ மானால் உலகத்தின் முன் நாம் எத்தகைய வாதத்தை முன்

1. சர் ஜேம்ஸ் ஓ கான்னரால் மேற்கோள் காட்டப்பட்டது. அயர்லாந்தின் வரலாறு தொகுதி II, பக். 257

வைக்கப்போகிறோம்? பூகோள ரீதியிலான எல்லைகளைக் கொண்ட ஒரு தீர்வுதான் அயர்லாந்து என்று நாம் சுட்டிக் காட்ட முடியும். பூகோளரீதியான எல்லைகளைக் கொண்ட எண்ணற்ற தீவுத் தேசிய இனங்களிடம் நமது வாதத்தை எடுத்துரைத்தோமானால் அந்த வாதம் சரியானதாக இருக்கக் கூடும். எல்லைகள் இடம்பெயரக்கூடிய கண்டங்களைச் சேர்ந்த நாடுகளுக்கு நாம் வேண்டுகோள் விடுக்கும்போது அந்த வாதத்தில் எந்த சக்தியும் இராது. தேசிய எல்லைகள் பூகோளரீதியான எல்லைகள் மிக அரிதாகவே ஒன்றுபடுகின்றன. ஸ்பெயினையும் போர்ச்சுக்கல்லையும் பூகோளம் ஒரே தேசமாக ஆக்கியது; ஆனால் வரலாறு அதை இரு தேசங்களாக்கி விட்டது. வட அமெரிக்க கண்டத்தின் மீதுள்ள பல நாடுகள் விஷயத்தில் பூகோளம் எதையும் செய்யவில்லை. வரலாறு அனைத்தையும் செய்து முடித்துவிட்டது. ஐரோப்பாவின் இயற்கை அமைப்புகளைக் கொண்ட வரைபடத்திலிருந்து ஐரோப்பாவின் அரசியல் வரைபடத்தை உருவாக்க ஒருமனிதன் முயன்றானேயானால் அவன் தன்னைத் தானே இருட்டில் தேடுபவனகத்தான் இருப்பான். அயர்லாந்திலிருந்து ஒரே தேசத்தை உருவாக்க பூகோளம் கடினமாகப்பாடுபட்டுள்ளது; ஆனால் வரலாறு அதற்கு எதிராகச் செயல்பட்டுள்ளது. அயர்லாந்து தீவும் அயர்லாந்தின் தேசிய பிரிவும் ஒன்றுடன் ஒன்று உடன் படுவதில்லை. இறுதிப் பகுப்பாய்வில் தேசியப்பண்பு எனும் அம்சமே மக்களின் விருப்பமாக அமைகிறது.''

ஓர் ஆழமான எதார்த்த உணர்விலிருந்து இச் சொற்கள் வெளிவந்துள்ளன. இந்தியாவிலுள்ள நம்மிடம் வருந்தத்தக்க விதத்தில் இந்த உணர்வு இல்லாதிருக்கிறது.

இரண்டாவது பிரச்சினை சம்பந்தமாக, இந்தியாவை முஸ்லீம் இந்தியா என்றும் முஸ்லீம் அல்லாத இந்தியா என்றும் பிரிப்பதை, இருதரப்பிற்கும் பந்தோபஸ்து வழங்கும் நிச்சயமான பாதுகாப்பான வழிமுறையாக நான் விரும்புகின்றேன். இருமாற்று யோசனைகளில் அதுவே நிச்சயமாகப் பாதுகாப்பானதாகும். இருதேசங்கள் தத்துவம் என்ற தொற்றிலிருந்து தோன்றக்கூடிய ஒரு சுதந்திர, ஒருங்கிணைந்த இந்தியாவின் ராணுவத்தில் முஸ்லீம்களின் பற்றுறுதி பற்றிய எனது ஐயப்பாடுகள் வெறும் கற்பனையானவையே என்று கருதப்படக் கூடும் என்று எனக்குத் தெரியும். அது உண்மை என்பதில் ஐயமேதும்

இல்லை. நான் மேற்கொண்டுள்ள தேர்வின் ஆதாரபலத்திற்கு எதிராக அது ஆற்றல் பெற்றிருக்கவில்லை. நான் கூறுவது தவறாகக் கூட இருக்கலாம். பர்க்கேயின் சொற்களைப் பயன்படுத்துவதெனில் பந்தோபஸ்து உணர்வினால் ஏற்படும் அதீதத் தன்னம்பிக்கையால் அழிவதைவிட மிகப் பெரிய கோழைத்தனத்திற்காக ஏளனம் செய்யப்படுவது சிறந்தது என்று முரண்பாட்டச்சம் எதுவுமின்றி என்னால் நிச்சயமாகக் கூற முடியும். நடப்பது நடக்கட்டும் என்று விட்டுவிட நான் விரும்பவில்லை. இந்தியாவின் பாதுகாப்பு போன்ற ஒரு முக்கியப் பிரச்சினையைச் சந்தர்ப்ப வசமென்று விட்டு விடுவது என்பது மிகப்பெரிய குற்றம் புரிந்ததாகிவிடும்.

ஒருவர் கட்டாயப்படுத்தப்பட்டாலொழிய பாகிஸ்தானுக்கான முஸ்லீம் கோரிக்கைக்கு எவரும் ஒப்புதலளிக்கமாட்டார். இந்தச் சமயம் தவிர்க்க முடியாததைச் சந்திக்காதிருப்பதும் தவறாகிவிடும். அதைத் துணிவுடனும் பொது அறிவுடனும் சந்தியுங்கள். முழுமையானதொன்றைப் பாதுகாக்கும் வீண் முயற்சியில் ஒரு வேளை தக்கவைத்துக் கொள்ளமுடியக்கூடிய ஒரு பகுதியை இழப்பதும் கூட ஒரு பெரிய தவறுதான்.

பாகிஸ்தான் பிரச்சினையில் முசல்மான்கள் விட்டுக் கொடுக்கவில்லையானால், அப்போது பாகிஸ்தான் உருவாக வேண்டும் என்று நான் கூறுவதற்கான காரணங்கள் இவைதான். என்னைப்பொறுத்தவரை ஒரே முக்கியமான கேள்வி இதுதான்: பாகிஸ்தானை அடைவதில் முசல்மான்கள் உறுதியுடன் இருக்கின்றனரா? அல்லது பாகிஸ்தான் என்பது வெறும் கூக்குரல் தானா? அல்லது போகிறபோக்கில் எழுப்பப்படும் ஒரு கோரிக்கையா? அல்லது அது அவர்களுடைய நிரந்தர அபிலாஷைகளைப் பிரதிபலிக்கிறதா? இது குறித்து கருத்து வேறுபாடுகள் இருக்கக் கூடும். பாகிஸ்தான் நிச்சயமாக வேண்டும் என்று முஸ்லீம்கள் கோரும் பட்சத்தில் அவர்களது கோரிக்கைக்கு இணங்குவதே அறிவார்ந்த பாதையாக இருக்குமென்பதில் ஐயமேதும் இருக்க முடியாது.

# இயல் 14

# பாகிஸ்தானின் பிரச்சினைகள்

## I

இந்தியாவைப் பாகிஸ்தான் என்றும் இந்துஸ்தான் என்றும் பிரிப்பதில் தோன்றக்கூடிய பலபிரச்சினைகளில் பின்வரும் மூன்று பிரச்சினைகளும் அடங்கும்:

1. இப்போதைய இந்திய அரசாங்கத்தின் ஆஸ்திகளையும் கடன்பொறுப்புகளையும் ஒதுக்கீடு செய்யும் பிரச்சினை.

2. நிலப்பகுதிகளை வரையறுக்கும் பிரச்சினை, மற்றும்

3. பாகிஸ்தானிலிருந்து இந்துஸ்தானுக்கும், இந்துஸ்தானிலிருந்து பாகிஸ்தானுக்கும் மக்களைப் பரிமாறிக்கொள்ளும் பிரச்சினை.

இப்பிரச்சினைகளில் முதலாவது பிரச்சினை காரணகாரிய தொடர்புடையது; ஏனெனில், சம்பந்தப்பட்ட தரப்புகளினால் ஒப்புக் கொள்ளப்பட்டு இந்தியாவைப் பிரிவினை செய்யும்போது மட்டுமே அது பரிசீலனைக்குரியதாகிறது. மீதமுள்ள இரு பிரச்சினைகளும் வேறுவிதமானவை. அவற்றுக்கு சில நியாயமான, நேர்மையான தீர்வு சாத்தியம் என்று தாங்கள் திருப்தியடையாதவரை பாகிஸ்தான் குறித்து எந்தமுடிவையும் பலர் மேற்கொள்ளமாட்டார்கள் என்ற அர்த்தத்தில் பாகிஸ்தான் கோரிக்கை நிறைவேற்றப்படுவதற்கு நிபந்தனைகளே அவை. ஆகவே, பாகிஸ்தான் சம்பந்தப்பட்ட கடைசி இரு பிரச்சினைகளை மட்டுமே பரிசீலனை செய்வதுடன் நான் நிறுத்திக் கொள்கிறேன்.

## II

பாகிஸ்தானின் எல்லைகள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைப் பொறுத்தவரை இதுவரை முஸ்லீம் லீகின் தரப்பிலிருந்து தெளிவான

அதிகாரப்பூர்வமான அறிக்கை எதுவும் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை. உண்மையில் நாட்டின் அரசியல் சூழலையே சிக்க லாக்குவதில் முடியும் விதத்தில் திரு. ஜின்னா பாகிஸ்தானுக்கு ஆதரவாக சூறாவளி பிரசார இயக்கம் நடத்தி வந்துள்ள அதே சமயம் அவருடைய உத்தேச பாகிஸ்தானின் எல்லைகள் சம்பந்தமான விவரங்கள் எதையும் அவரது விமர்சகர்களுக்குத் தெரியப்படுத்துவது நியாயம் என்பதை அவர் சிந்தித்துப் பார்க்கவில்லை என்பது இந்துக் களின் புகார்களில் ஒன்றாகும். இதுவரை திரு.ஜின்னாவின் வாதம், பாகிஸ்தானின் எல்லைகள் சம்பந்தமான விவாதத்திற்கு இன்னமும் காலம் கனியவில்லை என்பதும், பாகிஸ்தான் என்ற கோட்பாடு ஒப்புக்கொள்ளப்படும்போது அது விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப் படும் என்பதுமேயாகும். அது திரும்பத் திரும்பக் கூறப்படும் சாமர்த்தியமான பதிலாக இருக்கலாம். ஆனால் அது, இப்பிரச் சினைக்கு அமைதி வழியில் தீர்வுகாணத் தங்களால் முடிந்த உதவி வழங்குவதற்கு நடுநிலையோடு தங்களது மனதைச் செலுத்த விரும்புவோருக்கு நிச்சயமாக உதவாது. பாகிஸ்தான் என்ற கோட்பாட்டில் ஒருநபர் ஈடுபாடு கொண்டிருப்பாரேயானால், பாகிஸ்தானுக்கான திரு.ஜின்னாவின் திட்டத்தை ஏற்றுக் கொள்ள அவர் கடமைப்பட்டிருக்கிறார் என்று திரு.ஜின்னா கருதுவதுபோல் தெரிகிறது. இதைவிடப் பெரிய தவறு வேறு எதுவும் இருக்கமுடியாது. பாகிஸ்தான் என்ற ஒருகோட்பாட்டை ஒருநபர் ஏற்றுக்கொள்ளலாம். இந்தியாவைப் பிரிவினை செய்தல் என்றுமட்டுமே அதற்கு அர்த்த மாகும். ஆனால் இக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்வதென்பது பாகிஸ் தானுக்கான திரு.ஜின்னாவின் திட்டத்தில் ஒருவரை எவ்வாறு ஈடுபாடு கொள்ளச் செய்யும் என்பதைப் புரிந்து கொள்வது கடின மாக இருக்கிறது. உண்மையில் பாகிஸ்தானின் எந்த ஒரு திட்டமும் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை என்றால், கொள்கையளவில் பாகிஸ்தானுக்கு அவர் ஆதரவாக இருந்தாலும் கூட அவர் எந்த வடிவத்திலும் பாகிஸ்தானை எதிர்ப்பதற்கு முழுச் சுதந்திரம் பெற்ற வராக இருப்பார். ஆகவே பாகிஸ்தானுக்கான திட்டமும் பாகிஸ்தான் என்ற கோட்பாடும் முற்றிலும் வேறுபட்ட இரு கருத்துக்களாகும். இக்கருத்தில் தவறேதும் கிடையாது. விளக்கமாகக் கூறும் வகையில், சுயநிர்ணயக் கோட்பாடு என்பது ஒரு வெடிப்பொருள் போன்றது என்று கூறலாம். சந்தர்ப்பத்தின் தேவையும் அவசரத்தன்மையும் நிரூபிக்கப்படும்போது அதைப் பயன்படுத்தும் கோட்பாட்டிற்கு ஒருவர் உடன்படலாம். ஆனால் வெடித்துச் சிதறவைக்கப்படக் கூடிய இடத்தை முதலில் தெரிந்துகொள்ளாமல் வெடிமருத்தைப் பயன்படுத்துவதற்கு எவரும் சம்மதிக்கமுடியாது. ஒரு ஒட்டுமொத்தக்

கட்டமைப்பையும் வெடித்துச் சிதறச் செய்யப் போகிறது அல்லது ஒரு குறிப்பிட்ட பகுதியை மட்டும் வெடிக்கச் செய்ய அது பயன் படுத்தப்படப் போகிறது என்றால் அவர் பயன்படுத்துவதையே ஏற்றுக் கொள்ள மறுக்கக்கூடும். பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு வேறுவழி வகைகளைப் பயன்படுத்தக் கூடும். ஆகவே எல்லைக் கோடுகளைக் குறிப்பிடுவது பாகிஸ்தான் என்ற கோட்பாட்டிற்கு ஒரு நிச்சயமான வடிவத்தை வகுப்பதற்கு அத்தியாவசியமான தொடக்கப் பணியாகும். அதேபோன்று பாகிஸ்தானுக்கான திட்டத்தின் தேவை யான விபரங்களை பொதுமக்களிடமிருந்து மறைக்காதிருப்பதும் கூட ஓர் உண்மையான பாகிஸ்தான் ஆதரவாளருக்கு அத்தியாவசிய மானதாகும். தமது பாகிஸ்தானின் எல்லைகளைப் பிரகடனப் படுத்த மறுப்பதில் திரு.ஜின்னாவின் விட்டுக்கொடுக்காத, பிடிவாதத் தன்மை ஒரு ராஜியவாதி என்ற முறையில் மன்னிக்கமுடியாத தாகும். இருந்தாலும், பாகிஸ்தான் பிரச்சினையைத் தீர்ப்பதில் ஆர்வ முள்ளவர்கள் அனைவரும், திரு.ஜின்னா முழு விபரங்களையும் வழங்க ஒப்புக்கொள்ளும்வரை பாகிஸ்தான் பிரச்சினைகளைத் தீர்க்கக் காத்திருக்க வேண்டிய தேவை இல்லை. சில அனுமானங் களின் அடிப்படையில்தான் ஒருவர் விவாதத்தை மேற்கொள்ள முடியும். மேற்குப் பாகிஸ்தானின் எல்லைகள் வடமேற்கு எல்லைப் புற மாகாணம், பஞ்சாப், சிந்து ஆகியவற்றின் இப்போதைய எல்லை களாகவும் கிழக்குப் பாகிஸ்தானின் எல்லைகள் இப்போதைய வங்காள மாகாணம், அஸ்ஸாமின் சில மாவட்டங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியதாகவும் இருக்க வேண்டுமென்று முஸ்லீம் லீக் விரும்பு வதாக இந்த விவாதத்தில் நான் யூகிக்கிறேன்.

## III

ஆகவே பரிசீலனைக்குரிய பிரச்சினை இதுதான்: இந்த உரிமை கோரல் நேர்மையானதுதானா? இந்த உரிமைகோரல் சுயநிர்ணயக் கோட்பாட்டை ஆதாரமாகக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இந்த உரிமை கோரலில் உள்ள நியாயத்தை மதிப்பீடு செய்ய முடிவதற்கு சுயநிர்ணயக் கோட்பாட்டின் வீச்சையும் வரையறைகளையும் தெளிவாகப் புரிந்து கொள்வது அவசியம். துரதிருஷ்டவசமாக இத்தகைய புரிந்து கொள்ளும் தன்மை முற்றிலுமாக இல்லாததுபோல் தோன்றுகிறது. ஆகவே பின்வரும் கேள்வியுடன் தொடங்குவது அவசியம்: சுயநிர்ணயக் கோட்பாட்டின் உண்மை யான, சட்டரீதியான பொருள் என்ன? கடந்த சில ஆண்டுகளாகத்தான்

சுயநிர்ணயம் என்ற சொல் பழக்கத்திற்கு வந்துள்ளது. ஆனால் இது ஏதோ ஒரு மிகப்பழைய விஷயத்தை விவரிக்கிறது. சுயநிர்ணயம் என்ற சொல்லில் இழையோடும் கருத்து வெவ்வேறு வழிகளில் வளர்ச்சியடைந்துள்ளது. 19ஆம் நூற்றாண்டின் போது சுயநிர்ணயம் என்றால் மக்களின் விருப்பங்களுக்கு ஏற்ற விதத்தில் ஓர் அரசாங்க வடிவத்தை ஏற்படுத்தும் உரிமை என்று அர்த்தமாகிறது. இரண்டாவதாக, அரசாங்கத்தின் வடிவம் எத்தகையதாக இருந்தாலும் ஓர் அன்னிய இனத்திடமிருந்து தேச சுதந்திரத்தைப் பெறும் உரிமை என்று சுயநிர்ணயத்திற்கு அர்த்தமாயிற்று. பாகிஸ்தானுக்கான கிளர்ச்சி இந்த இரண்டாவதாகக் கூறப்பட்ட சுயநிர்ணய வகைப்பட்டதாகும்.

பாகிஸ்தானின் இந்த அம்சம் சம்பந்தப்பட்ட விஷயங்களுடன் நிறுத்திக்கொண்டு, சுயநிர்ணயப் பிரச்சினை சம்பந்தப்பட்ட பின்வரும் விஷயங்களை மனதிலிருத்திக் கொள்வது அவசியமென்று எனக்குத் தோன்றுகிறது.

முதலாவதாக, சுயநிர்ணயம் என்பது மக்களால் ஏற்படுத்தப்படுவதாக இருக்கவேண்டும். குறிப்பிட்டுச்சொல்வதற்குக்கூட இது மிகச் சாதாரணமான விஷயம். ஆனால் அதை வலியுறுத்திக் கூறுவது அவசியமாகியுள்ளது. முஸ்லீம் லீகும் இந்து மகாசபையும் சுயநிர்ணயம் என்ற கருத்தைத் தங்கள் விருப்பம் போல் பயன்படுத்தி வருகின்றன. ஒருபகுதியில் இருக்கும் மக்கள் முஸ்லீம்களாக இருப்பதால் பாகிஸ்தானில் அப்பகுதி சேர்க்கப்படவேண்டும் என்று முஸ்லீம் லீக் கோரிவருகிறது. இன்னொரு பகுதியில் உள்ள பெரும்பான்மையினர் முஸ்லீம் அல்லாதவர்களாக இருந்தபோதிலும் அப்பகுதியை ஆளும் மன்னர் முஸ்லீமாக இருப்பதால் அப்பகுதியையும் பாகிஸ்தானில் சேர்க்க வேண்டுமென்று கோரப்படுகிறது. இந்தியாவில் சுயநிர்ணயத்தினால் ஏற்படும் ஆதாயத்தை முஸ்லீம் லீக் கோரிவருகிறது. அதேசமயத்தில் சுயநிர்ணய உரிமை பாலஸ்தீனத்தில் பிரயோகப்படுத்தப்படுவதை லீக் எதிர்க்கிறது. முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக இருப்பதால் ஒரு முஸ்லீம் மாநிலம் என்றமுறையில் காஷ்மீரையும், ஹைதராபாதில் ஆளும் மன்னர் முஸ்லீமாக இருப்பதால் அதையும் லீக் உரிமை கொண்டாடுகிறது. அதேபோன்று ஒரு பகுதியில் வாழும் மக்கள் முஸ்லீம் அல்லாதவர்களாக இருப்பதால் அப்பகுதியை இந்துஸ்தானில் சேர்க்க வேண்டுமென்று இந்துமகாசபை உரிமை கொண்டாடுகிறது. ஒரு பகுதியிலுள்ள பெரும்பான்மையினர் முஸ்லீம்களாக இருந்தபோதிலும் கூட அப்பகுதி ஆளும் மன்னர் ஓர் இந்துவாக இருப்பதால் அப்பகுதி இந்துஸ்தானுடன் சேர்க்கப்படவேண்டும் என்று உரிமை கொண்டாட அது முன்வருகிறது. இத்தகைய விநோதமான முரண்பாடான உரிமைகோரல்களுக்குக் காரணம் பாகிஸ்தான் சம்பந்தப்

பட்ட இரு தரப்புகளான இந்துக்களும் முஸ்லீம்களும் சுயநிர்ணயம் என்றால் என்ன என்பதையே புரிந்துகொள்ளவில்லை என்ற உண்மையேயாகும்; அல்லது அவர்கள் இப்போது ஈடுபட்டுள்ளது போல் தோன்றக்கூடிய திட்டமிட்ட பிரதேசக் கொள்ளையை நடத்துவதில் தங்களைத் தாங்களே நியாயப்படுத்திக்கொள்ள உதவுவதற்கு சுயநிர்ணயக் கோட்பாட்டைத் தவறாகப் பயன்படுத்துவதில் போட்டிபோட்டுக் கொண்டு செயல்படுகிறார்கள். சுயநிர்ணயம் என்றால் என்ன என்பதைப்பற்றிய சரியான கருத்துக்களை மக்கள் கொண்டிராவிடில், அக்கோட்பாட்டிற்கு உண்மையாக இல்லாவிடில், விளைவுகள் எதுவாக இருந்தாலும் அவற்றை ஏற்றுக் கொள்ளாவிடில் தனது பிரதேசங்களை மறுசீரமைக்கும் பிரச்சினை பரிசீலனைக்கு வரும்போதெல்லாம் இந்தியா அப்பட்டமான குழப்பத்தில் ஆழ்த்தப்பட்டுவிடும். ஆகவே குறிப்பிடுவதற்கு மிக எளிதானது என்று கருதப்படக்கூடிய, அதாவது சுயநிர்ணயம் என்பது மக்களால் மட்டுமே தீர்மானிக்கப்படக் கூடியதேயன்றி வேறு எவராலும் அல்ல என்பதை வலியுறுத்துவது நல்லது.

சுயநிர்ணயக் கோட்பாட்டை எந்த அளவுக்குப் பயன்படுத்த முடியும் என்ற அளவின் இன்றியமையாத் தன்மையைக் குறித்துக் கொள்வது இரண்டாவது அம்சமாகும். இது பற்றி திரு. ஓ கான்னர்[1] பின்வருமாறு கூறுகிறார்:

"சுயநிர்ணயம் என்ற சித்தாந்தம் பிரபஞ்சம் தழுவிய ஒரு சித்தாந்தமே அல்ல. அதைப்பற்றி அதிகபட்சமாக சொல்லக்கூடியது என்னவெனில், பொதுவாகச் சொன்னால், அது ஒரு சிறந்த செயல்படும்விதி, நியாயத்தை ஆதாரமாகக் கொண்டு உருவாக்கப்பட்டது. தங்களது சொந்தப் பாணியில் மக்களின் வளர்ச்சிக்காகவும் நல்லிணக்கத்திற்காகவும் சமாதானத்திற்காகவும் பாடுபடக்கூடியது. திரும்பவும் பொதுவாகச் சொன்னால் அதுவே மிகச் சிறந்த பாணியாகும். அது சூழ்நிலைகளுக்கு விட்டுக் கொடுக்கவேண்டும். அச்சூழ்நிலைகளின் அளவு, புவிஇயல் நிலைமை ஆகியவை சில முக்கிய அம்சங்களாகும். இந்த விதி சூழ்நிலைகளுக்கு எதிராக மேலோங்கியிருக்க வேண்டுமா அல்லது சூழ்நிலைகள் இந்த விதிக்கு எதிராக மேலோங்கி இருக்க வேண்டுமா என்பதை ஒருவருடைய பொதுஅறிவு அல்லது நியாய உணர்வு அல்லது ஒரு

1. அயர்லாந்தின் வரலாறு தொகுதி II

பெந்தாமைட் கூறுவதைப்போல மிகப் பெரும்பாலோருக்கு மிகப்பெரிய அளவில் நன்மை நாடும் உணர்வைப் பிரயோகிப்பதன் மூலம் மட்டுமே தீர்மானிக்க முடியும். இந்த மூன்றையும் சரியாகப் புரிந்து கொண்டோமானால், அவை உண்மையில் ஒரே விஷயத்தை வெளிப்படுத்தும் வெவ்வேறு வழிமுறைகளாகும். ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைத் தீர்ப்பதில் பெரும் இன்னல்கள் எழக்கூடும். சில உண்மைகள் ஒரு குறிப்பிட்ட வழியைக் கொண்டவையாகவும் மற்றவை வேறுவழியைக் கொண்டவையாகவும் உள்ளன. சில வகைப்பட்ட உண்மைகள் சிலருடைய மனங்களைக் கவர்ந்து விடுகின்றன; ஆனால் மற்றவர்கள் மனதில் எந்தவிதத் தாக்கமும் ஏற்படுத்துவதில்லை. இப்பிரச்சினையை கணிக்கமுடியாத வகைப்பட்டதாக இருக்கக்கூடும். அதாவது, பொதுவில் மனிதகுலம் முழுவதானாலும் ஏற்றுக் கொள்ளப்படக்கூடிய எந்த ஒரு நிச்சயமான முடிவும் சாத்தியமில்லை என்பதாக இருக்கக்கூடும். சில விஷயங்களில் அது தவறு என்று கூறுவதைவிட, வேறொரு தேசத்தின் சுயநிர்ணய உரிமையில் ஒரு தேசம் தலையிடும் உரிமை கொண்டாடுவதைச் சரி என்று இனிமேலும் கூறுவது சாத்தியமில்லை என்று கூறலாம். இது கருத்தின் பாற்பட்ட ஒரு விஷயம். இது குறித்து பாகுபாடற்ற உண்மையான மனங்கள் கருத்து மாறுபடக்கூடும்.''

இது ஏன் இவ்வாறு இருக்கவேண்டும் என்பதற்கு இரு காரணங்கள் உள்ளன. முதலாவதாக, தேசிய இனம் என்பது ஒரு புனிதமானதோ அல்லது இதர அனைத்துக்கருத்துக்களையும் மீறி அதற்கு இன்றியமையாத் தன்மையை வழங்கக்கூடிய முழுமையான கோட்பாடோ அல்ல. இரண்டாவதாக, ஒரு தனித்தன்மை வாய்ந்த தேசிய இனத்தைப் பராமரித்து, பேணிக்காப்பதற்குப் பிரிவினை அவ்வளவு அத்தியாவசியமானதல்ல.

சுயநிர்ணய உரிமை என்ற பிரச்சினை தொடர்பாக மனதில் கொள்ள வேண்டிய ஒரு மூன்றாவது விஷயமும் உள்ளது. ஒரு தேசிய இனத்திற்குச் சுய நிர்ணய உரிமை என்பது கலாசார சுதந்திரம் என்ற வடிவத்தை அல்லது பிரதேச சுதந்திரம் என்ற வடிவத்தைத் தரக் கூடும். அது எந்தவடிவத்தைப் பெறும் என்பது பிரதேச மக்கள் தொகை அமைப்பைப் பொறுத்தே இருக்க வேண்டும். எளிதில் துண்டிக்கப்படக் கூடிய அருகருகாமையிலுள்ள பகுதிகளில் ஒருதேசிய இனம்

வாழ்ந்து, இதர விஷயங்கள் சமமாக இருக்குமேயானால், பிரதேச சுதந்திரம் கோரும் வாதம் முன் வைக்கப்படலாம். விடுவிக்கமுடியாத அளவுக்கு பின்னிப் பிணைந்திருப்பதன் காரணமாக தேசிய இனங்கள் கலந்து வாழும் பகுதிகளை எளிதில் துண்டிக்கமுடியாது. அப்போது அவர்கள் கலாசார சுதந்திரம் பெறுவதற்குமட்டுமே தகுதியுள்ள வர்களாகிறார்கள். இத்தகைய சந்தர்ப்பங்களில் பிரதேசப்பிரிவினை என்பது சாத்தியமில்லாத ஒன்றாகும். அவர்கள் ஒன்றுபட்டு வாழ்ந்தே தீரவேண்டும். அவர்களுக்குள்ள ஒரே மாற்றுவழி குடிபெயர்வதுதான்.

## IV

சுயநிர்ணயம் என்ற கருத்தின் வீச்சையும் வரையறைகளை யும் விளக்கிய நாம் இப்போது பாகிஸ்தானின் எல்லைகள் பற்றிய பிரச்சினைகளைப் பார்ப்போம். இப்பரிசீலனைகளின் வெளிச்சத் தில், இப்போதைய எல்லைகளே பாகிஸ்தானின் எல்லைகளாக இருக்கவேண்டும் என்ற முஸ்லீம் லீகின் கூற்றினுடைய நிலை என்ன? இக்கேள்விக்கான பதில் மிகத் தெளிவானதாக இருப்பது போல் எனக்குத் தோன்றுகிறது. புவிஇயல் அமைப்பு இப்பிரச் சினைக்குத் தீர்வுகாணும் போல் தோன்றுகிறது. எந்தவிதமான சிறப்பு வாதிடுதல்களும் தேவைப்படாது. வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தான், மற்றும் சிந்து மாகாணங்களில் இந்துக் களும் முஸ்லீம்களும் ஒருவரோடொருவர் கலந்து வாழுகின்றனர். இந்த மகாணங்களில் இந்துக்கள் பிரதேசப் பிரிவினை கோருவதை ஏற்பது சாத்தியமில்லாதது போல் தோன்றுகிறது. கலாசார சுதந் திரத்துடனும், தங்களது பாதுகாப்புக்காக உருவாக்கப்படக்கூடிய அரசியல் பாதுகாப்பு நடவடிக்கைகளுடனும் அவர்கள் திருப்தி யடையவேண்டும். பஞ்சாப் மற்றும் வங்காளம் சம்பந்தமான வாதம் முற்றிலும் வித்தியாசமான பரிமாணத்தைக் கொண்டதாகும். தேச வரைபடத்தைப் பார்த்தால் இதரமூன்று மாகாணங்களில் ஒருவர் காண்பதிலிருந்து இந்த இரு மாகாணங்களில் உள்ள இந்துக்கள் மற்றும் முஸ்லீம்களின் மக்கள்தொகை அமைப்பு முற்றிலும் வேறுவிதமாக இருப்பது தெரியவரும். பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம் அல்லாதவர்கள், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தான், சிந்து ஆகியமாகாணங்களில் உள்ளதைப்போன்று நிலப்பரப்பு முழுவதிலும் பரந்து காணப்படும் பரந்த முஸ்லீம் மக்கள் தொகையினால் சூழப்பட்டோ அல்லது அவர்களுக்கு மத்தியில் சிறு தீவுகளைப் போன்றோ வாழவில்லை. பஞ்சாபிலும் வங்காளத்திலும்

இந்துக்கள் அருகருகாமையிலும் துண்டிக்கப்படக் கூடியதுமான இரு வேறு பகுதிகளில் வசிக்கின்றனர். இத்தகைய சூழ்நிலைகளில் முஸ்லீம் லீக் கோருவதுபோல் தோன்றும் அதாவது பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் இப்போதைய எல்லைகளே மேற்குப் பாகிஸ்தான் மற்றும் கிழக்குப் பாகிஸ்தானின் எல்லைகளாகத் தொடரும் என்பதை ஏற்றுக்கொள்ள எந்தக் காரணமும் இல்லை.

மேற்கூறப்பட்ட விவரத்திலிருந்து இரு முடிவுகள் தெளிவாகின்றன. பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் முஸ்லீம் அல்லாத மக்கள் தாங்கள் வாழும்பகுதிகள் பிரதேசரீதியாகத் துண்டிக்கப் படுவதன்மூலம் பாகிஸ்தானிலிருந்து தவிர்க்கப்படுவதற்கான வாய்ப் பிருப்பது ஒரு முடிவாகும். மற்றொன்று என்னவெனில், வட மேற்கு எல்லைப்புற மாகாணம், பலுசிஸ்தானம், சிந்து ஆகிய மாகாணங்களின் முஸ்லீம் அல்லாதமக்கள் பாகிஸ்தானிலிருந்து தவிர்க்கப்படவேண்டும் என்று கோரமுடியாது. அவர்களுக்கு கலாசார சுதந்திரத்தையும் அரசியல் பாதுகாப்பு நடவடிக்கைகளையும் மட்டுமே கோர உரிமையுண்டு. இதை வேறு விதமாகச் சொல்வதெனில், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மற்றும் பலுசிஸ்தான் மாகாணங்களின் எல்லைகள் இப்போதுள்ளபடியே இருக்கவேண்டும் என்ற முஸ்லீம் லீகின் உரிமை கோரலை எதிர்க்கமுடியாது என்று கூறலாம். ஆனால் பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் விஷயத்தில் இத்தகைய ஓர் உரிமை கோரல் ஏற்றுக் கொள்ள முடியாததாகும். இந்த மாகாணங்களின் முஸ்லீம் அல்லாதவர்கள் விரும்புவார்களேயானால் தாங்கள் வசிக்கும் பகுதி இந்த இரு மாகாணங்களின் எல்லைகளை மாற்றியமைப்பதன் மூலம் பாகிஸ்தானிலிருந்து தவிர்க்கப்பட வேண்டும் என்று உரிமை கொண்டாட முடியும்.

## V

எல்லைகளை மாற்றியமைக்க வேண்டும் என்று பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம் அல்லாதவர்களின் இந்த உரிமைகோரலை நேர்மையான, நியாயமான உரிமைகோரல் என்று முஸ்லீம் லீக் கருதும் என்று ஒருவர் எண்ணியிருக்கக்கூடும். 1940 மார்ச்சில் நிறைவேற்றப்பட்ட முஸ்லீம் லீகின் லாகூர் தீர்மானத்தில் எல்லைகளை மாற்றியமைக்கும் சாத்தியக்கூறு ஒப்புக்கொள்ளப் பட்டது. அத்தீர்மானம் கூறியதாவது:

"புவியியல் ரீதியாக அருகருகாமையிலுள்ள பகுதிகளை எல்லைக் கோடிட்டு பிராந்தியங்களாக உருவாக்கப்பட்ட முற்றிலும் சுதந்திரமான அரசுகளை ஏற்படுத்துவது; அவ்வாறு அமைக்கப்பட்ட அரசுகளைத் தேவையான பிரதேச மறுசீரமைப்பு செய்தல், இந்தியாவின் வடமேற்கு மற்றும் கிழக் கிந்திய மண்டலங்களில் உள்ளதைப் போன்று எண்ணிக்கையில் முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக உள்ள பகுதிகள் ஒன்றாக இணைக்கப்பட்டு சுதந்திர முஸ்லீம் தாயகங்களாக உருவாக்குதல், சட்டரீதியாக உருவாக்கப்படும் அவை சுயாட்சி கொண்ட அரசுரிமை பெற்ற பகுதிகளாக இருக்கும்."

கிரிப்ஸ் பிரேரணைகள் சம்பந்தமாக முஸ்லீம் லீக் நிறைவேற்றிய தீர்மானத்திலிருந்து முஸ்லீம் லீகின் நிலைமை தொடர்ந்து இவ்வாறுதான் இருந்து வந்தது. இப்பிரேரணைகளைப் படிக்கும் எவரும் இதைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் திரு.ஜின்னா தமது கண்ணோட்டத்தை மாற்றிக் கொண்டதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. 1942 நவம்பர் 16 அன்று ஜலந்தரில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் திரு. ஜின்னா பின்வரும் விதமாகத் தெரிவித்துள்ளதாகச் செய்திகள் வந்துள்ளன:

"அப்பாவி மக்களை வேண்டுமென்றே கிளப்பித் தவறான வழியில் இட்டுச் செல்லுவதற்கு அண்மையில் ஒரு சூழ்ச்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இதை ஒரு சூழ்ச்சியே தவிர வேறல்ல என்றே கூறுவேன். இதைச் செய்பவர்கள் வேண்டுமென்றேதான் இவ்வாறு செய்கின்றனர். அது என்னவெனில், சுயநிர்ணய உரிமை என்பது முஸ்லீம்களுக்கு மட்டுமே உரித்தானதா, ஏன் அதை இதர வகுப்பினருக்கும் விஸ்தரிக்கக் கூடாது? எல்லோருக்கும் சுயநிர்ணய உரிமை உள்ளது என்று சாதிக்கும் அவர்கள் பஞ்சாப்பைப் பல துண்டுகளாகப் பிரிக்க வேண்டுமென்று கூறுகிறார்கள். அதேபோன்று வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து ஆகியவற்றையும் பிரிக்க வேண்டுமென்று கூறுகிறார்கள். இவ்வாறு நூற்றுக்கணக்கான பாகிஸ்தான்கள் உருவாகும்."

## துணை- தேசக் குழுக்கள்

"இந்தியாவெங்கிலும் உள்ள ஒவ்வொரு வகுப்பினருக்கும் சுய-நிர்ணய உரிமை உண்டு என்ற புதிய சூத்திரத்தின்

பிதாமகர் யார்? இது மிகப்பெரிய அறியாமையாக இருக்க வேண்டும் அல்லது குறும்பாகவோ சூழ்ச்சியாகவோ இருக்க வேண்டும். நான் அவர்களுக்குப் பதிலளிக்கிறேன். முசல்மான்கள் சுயநிர்ணய உரிமையைக் கோருவதற்கான காரணம் தங்களது தாய்நாடான ஒரு குறிப்பிட்ட பிரதேசத்திலும், அவர்கள் பெரும்பான்மையினராக உள்ள மண்டலங்களிலும் அவர்கள் ஒரு தேசியக் குழுவாக இருப்பதனால்தான். பரவலாகப் பல இடங்களில் சிதறிக் கிடக்கும் தேசியக் குழுவினருக்கு ஓர் அரசு வழங்கப்பட்டுள்ளதாக வரலாற்றில் எங்கேனும் நீங்கள் கண்டதுண்டா? அவர்களுக்காக ஓர் அரசை நீங்கள் எங்கிருந்து பெறப்போகிறீர்கள்? அவ்வாறெனில் ஐக்கிய மாகாணங்களில் முஸ்லீம்கள் 14 சதவிகிதத்தினராக உள்ளனர். அவர்களுக்கு ஏன் ஓர் அரசைப் பெற்றுத் தரக்கூடாது? ஐக்கிய மாகாணங்களில் உள்ள முஸ்லீம்கள் ஒரு தேசியக் குழுவாக இல்லாமல் சிதறிக் கிடக்கிறார்கள். ஆகவே அரசியல் சட்ட மொழியில் அவர்கள் துணை தேசியக் குழுக்கள் என்று குறிப்பிடப்படுகின்றனர். ஒரு சிறுபான்மை மக்களுக்கு எந்த ஒரு நாகரிகமடைந்த அரசாங்கத்திடமிருந்தும் கிடைக்க வேண்டியதை விடக்கூடுதலாக எதையும் அவர்களால் எதிர்பார்க்க முடியாது. நிலைமையைத் தெளிவுபடுத்தியிருப்பதாக நம்புகிறேன். முஸ்லீம்கள் துணை தேசக் குழுவினர் அல்ல: சுயநிர்ணய உரிமையைக் கோரிப் பெறுவதும் அதைப் பிரயோகிப்பதும் அவர்களுடைய பிறப்புரிமை.''

திரு.ஜின்னா ஒரு விஷயத்தை முற்றிலுமாக மறந்துவிட்டார். அவரது விமர்சகர்கள் எழுப்பும் பிரச்சினை பொதுவான முஸ்லீம்-அல்லாத சிறுபான்மையினர் சம்பந்தப்பட்டதல்ல. பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம் - அல்லாத சிறுபான்மையினர் சம்பந்தப்பட்டதாகும் அது. தமது துணை-தேசத் தத்துவத்தின் மூலம் முஸ்லீம் அல்லாத சிறுபான்மையினர் வாழும் ஒரு சிறிய எளிதில் துண்டிக்கப் படக்கூடிய பிரதேசத்தை அவர்களுக்கு வழங்க வேண்டுமென்ற வாதத்தை நிராகரிக்க திரு.ஜின்னா பிரேரணை செய்கிறாரா? அவ்வாறெனில் அவரது கருத்தைவிடவும் குரூரமான கருத்தை எந்த ஒரு அரசியல் நூலிலும் காண்பது கடினம் என்று சொல்ல எவரும் கடமைப் பட் டிருப்பர். ஒரு துணை தேசம் என்ற கருத்து இதுவரை கேள்விப்படாததாகும். அது ஆதாரமற்ற கருத்து மட்டுமல்ல, அறிவுக்கு ஒவ்வாத கருத்தும் ஆகும். ஒரு துணை-தேசம் என்ற தத்துவம் எதைக் குறிக்கிறது? அதனுடைய விளைவுகளைச் சரியாகப் புரிந்து கொண்டிருப்பேனாகில்,

ஒரு துணைதேசம் எந்த தேசத்திற்குச் சொந்தமானதோ அதிலிருந்து துண்டிக்கப்படுவது சாத்தியமானபோதிலும் கூட அது துண்டிக்கப் படக்கூடாது என்று அர்த்தமாகும்: ஒரு தேசத்துக்கும் துணை தேசத் திற்குமான உறவுகள் ஒரு மனிதனுக்கும் அவனது தட்டுமுட்டுப் பொருள்களுக்கும் இடையிலான அல்லது ஓர் உடைமைக்கும் அதன் உரிமைப் பொறுப்புகளுக்கும் இடையிலான உறவுகளைவிட மேலான தல்ல என்று அதற்கு அர்த்தமாகும். தட்டுமுட்டுப் பொருள்கள் அதன் உரிமையாளருடன் செல்லும். உரிமைப் பொறுப்புகள் உடமையுடன் செல்லும். ஆகவே ஒரு துணை தேசம் ஒரு தேசத்துடன் செல்லும். திரு. ஜின்னாவின் விவாதத்தில் தொடர்ச்சியாக இவ்வா றுதான் நியாயப்படுத்தப்பட்டு வருகிறது. பஞ்சாபையும் வங்காளத் தையும் சேர்ந்த இந்துக்கள் வெறும் தட்டுமுட்டுப் பொருள்கள் தான். ஆகவே அவர்கள் பஞ்சாபின் முஸ்லீம்களும் வங்காளத்தின் முஸ்லீம்களும் அவர்களை எங்கு இட்டுச் செல்ல விரும்புகிறார் களோ அங்கு அவர்களுடன் எப்போதும் செல்லவேண்டும் என்று திரு.ஜின்னா உண்மையிலேயே வாதிட விரும்புகிறாரா? இத்தகைய ஒரு அபத்தமான வாதத்தை எந்த ஒரு நியாய உணர்வுள்ள மனித னாலும் செவிமடுக்க முடியாது. அது அதிகபட்ச தர்க்க முரணான வாதம், நிச்சயமாக திரு. ஜின்னாவைப் போன்ற ஒரு முதிர்ந்த வழக் கறிஞருக்கு அதன் தர்க்க முரண்பாட்டைக் காண்பது கடினமாக இருக்கக்கூடாது. எண்ணிக்கையில் அதிகமாக உள்ள தேசம் சம்பந்தப் பட்ட வரையில் எண்ணிக்கையில் குறைவாக உள்ள தேசம் துணை தேசம், அதற்குப் பிரதேசப் பிரிவினை கோரும் உரிமை இல்லை என்றால், ஒட்டுமொத்தமாக இந்தியாவை எடுத்துக்கொண்டு பார்க்கும்போது இந்துக்கள் ஒரு தேசம், முஸ்லீம்கள் ஒரு துணை தேசம். துணைதேசம் என்ற முறையில் அவர்களுக்கு சுயநிர்ணய உரிமையோ அல்லது பிரதேசப் பிரிவினை கோரும் உரிமையோ கிடையாது என்று ஏன் கூற முடியாது?

பாகிஸ்தான் கோரிக்கையின் உள்நோக்கம் சம்பந்தமாக ஏற்கனவே ஒரு குறிப்பிட்ட அளவிலான ஐயப்பாடுகள் உள்ளன. சரியாகவோ, தவறாகவோ பெரும்பாலான மக்கள், பாகிஸ்தான் தீங்கு விளைவிக்கப்போவதாகவே ஐயுறுகின்றனர். பாகிஸ்தானுக்கு இரு குறிக்கோள்கள், ஒன்று உடனடிக் குறிக்கோள், இரண்டாவது இறுதிக் குறிக்கோள் இருப்பதாக அவர்கள் கருதுகின்றனர். உடனடிக் குறிக்கோள் அண்மையிலுள்ள முஸ்லீம் நாடுகளுடன் இணைந்து ஒரு முஸ்லீம் சமஷ்டியை உருவாக்குவதேயாகும் என்று கூறப்படு கிறது. முஸ்லீம் சமஷ்டியின் இறுதிக் குறிக்கோள் இந்துஸ்தானின் மீது படையெடுத்து இந்துக்களை வெற்றிகொண்டு இந்தியாவில்

முஸ்லீம் சாம்ராஜ்யத்தை மீண்டும் ஏற்படுத்துவதேயாகும். திரு.ஜின்னா தமது 14 அம்சக் கோரிக்கைகளில் முன்வைத்தது போன்று, தனித்தனியான முஸ்லீம் மாகாணங்களை உருவாக்கு வதற்கான கோரிக்கைகளுக்குப் பின்னால் பிணையாளிகளைப் பிடித்துவைக்கும் சூழ்ச்சியின் இறுதிக்கட்டம்தான் பாகிஸ்தான் என்று மற்றவர்கள் கருதுகின்றனர். முஸ்லீம்களின் மனதில் என்ன இருக்கிறது என்பதை யாராலும் கண்டறியமுடியாது. பாகிஸ்தானுக் கான அவர்களது கோரிக்கைகளுக்குப் பின்னால் உள்ள உண்மை யான நோக்கங்களையும் அதுபோலவே தெரிந்து கொள்வது இயலாது. முஸ்லீம்களின் உண்மையான நோக்கங்கள் வெளியில் தெரிவதைவிட வேறானவை என்று பாகிஸ்தானின் இந்து எதிரிகள் ஐயுறுவார்களேயானால் அவர்கள் அதை மனதில் கொண்டு அதற் கேற்றவாறு திட்டமிடுவர். அவர்களால் பாகிஸ்தானை எதிர்க்க முடியாது, ஏனெனில் அதற்குப்பின்னாலுள்ள நோக்கங்கள் மோசமானவை. பாகிஸ்தானுக்குள் வகுப்புவாதப் பிரச்சினையைக் கிளப்ப திரு.ஜின்னா ஏன் விரும்புகிறார் என்று அவரைக் கேட்கும் உரிமை அவர்களுக்கு உண்டு. பாகிஸ்தானுக்குப் பின்னால் உள்ள நோக் கத்தின் நச்சுத்தன்மை எத்தகையதாக இருந்தபோதிலும் அதில் குறைந்தபட்சம் ஒரு நன்மையேனும் இருக்கவேண்டும். பாகிஸ் தானுக்குள் ஒரு வகுப்புவாதப் பிரச்சினையை ஏற்படுத்துவது பாகிஸ்தானின் லட்சியமாக இருக்கக்கூடாது. பாகிஸ்தானிடமிருந்து ஒருவர் எதிர்பார்க்கக்கூடிய குறைந்தபட்ச நன்மை இதுதான். இந்தியாவில் இருந்துவருவதைப் போன்று பாகிஸ்தானும் வகுப்பு வாதப் பிரச்சினையால் பீடிக்கப்படுமேயானால், பாகிஸ்தான் என்று ஒன்று ஏன் இருக்கவேண்டும்? வகுப்புவாதப் பிரச்சினை யிலிருந்து தப்பும் வழியை அது வழங்குமானால் மட்டுமே அதை வரவேற்கமுடியும். சிறுபான்மையினரும் பெரும்பான்மையினரும் ஒருவரை ஒருவர் எதிர்க்கும் நிலை இல்லாத ஓர் இனவழி அரசாக இருக்கும் விதத்தில் எல்லைகளை அமைப்பதுதான் அதைத் தவிர்க்கும் ஒரே வழியாகும். அதிருஷ்டவசமாக திரு.ஜின்னா அதை அனுமதித்தால் மட்டுமே அதை ஓர் இனவழி அரசாக மாற்ற முடியும். இங்குதான் ஐயப்பாட்டிற்கான பிரதானக் காரணம் அடங்கி யுள்ளது. அதை நீக்குவதற்குப் பதிலாக திரு. ஜின்னா தேசங்கள் மற்றும் துணை தேசங்கள் போன்ற அபத்தமான, தர்க்கமுரணான, செயற்கையான வேறுபாடுகளின் மூலம் பிரச்சினையைப் பெரிது படுத்தி வருகிறார்.

இத்தகைய அபத்தமான, தர்க்கமுரணான கருத்துகளைக் கூறியும், பாதுகாக்க முடியாததைப் பாதுகாத்தும், நேர்மையான

வற்றை எதிர்த்தும் வருவதைவிட, அல்ஸ்டரின் எல்லைகளை வரையறுக்கும் விஷயத்தில் சர் எட்வர்டு கார்சன் செய்ததை திரு. ஜின்னாவும் செய்வது நன்றாயிருக்காதா? ஐரிஷ் சுயாட்சிப் பிரச்சினை எத்தகைய மாற்றங்களுக்கு உள்ளாயிற்று என்பதை அறிந்தவர்களனைவரும் அல்ஸ்டரின் பேரரசு நாடாளுமன்றத்தின் அரசாங்கம் அல்லது அல்ஸ்டரின் அரசாங்கம்தான் இருக்குமேயன்றி ஒருபோதும் சுயாட்சி அரசாங்கம் இராது என்ற தமது கொள்கையை சர் எட்வர்டு கார்சன் 1911 செப்டம்பர் 23 அன்று நடைபெற்ற கிரெய் காவன் கூட்டத்தில் உருவாக்கினார் என்பதை அறிவர். நாடாளுமன்றம் தனது அரசாங்கத்தைத் திரும்பப் பெற உத்தேசித்திருப்பதால் இப்பேரரசு கொள்கை அல்ஸ்டரின் ஓர் இடைக்கால அரசாங்கம் ஏற்படுத்தப்படுவதை அர்த்தப்படுத்தியது. 1911 செப்டம்பர் 25 அன்று பெல்ஃபாஸ்டில் நடைபெற்ற அல்ஸ்டர் யூனியனிஸ்டு கவுன்சில், தி கவுண்டி கிராண்ட் ஆரஞ்சுலாட்ஜஸ், மற்றும் யூனியனிஸ்டு கிளப்புகளைப் பிரதிநிதித்துவப்படுத்தும் பிரதிநிதிகளின் கூட்டுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தில் இக்கொள்கை இடம்பெற்றிருந்தது. சுயாட்சி மசோதா இயற்றப்பட்ட நாளன்று அல்ஸ்டரின் இடைக்கால அரசாங்கம் நடப்பிற்கு வரவிருந்தது. ''அவர்கள் (அல்ஸ்டரைட்டுகள்) கட்டுப்படுத்தக்கூடிய மாவட்டங்கள்'' அனைத்தின் மீதும் அதிகாரம் செலுத்தும் பொறுப்பை இடைக்கால அரசாங்கத்திடம் ஒப்படைப்பதுதான் இக்கொள்கையின் ஒரு முக்கிய சிறப்பம்சமாகும்.

''அவர்களால் கட்டுப்படுத்தப்படக்கூடிய '' என்ற சொற்றொடர் ஐயத்துக்கிடமின்றி அல்ஸ்டரின் ஒட்டுமொத்த நிர்வாகப் பிரிவை உள்ளடக்கும் அர்த்தத்தை வழங்குவதாகும். இப்போது அல்ஸ்டரின் இந்த நிர்வாகப் பிரிவில் ஒன்பது கவுண்டிகள் அடங்கியுள்ளன. அவற்றின் மூன்றில் கத்தோலிக்கர்களே பெரும்பான்மையினராக உள்ளனர். அல்ஸ்டரின் கீழ் தங்களுடைய விருப்பங்களுக்கெதிராக இந்த மூன்று கத்தோலிக்கக் கவுண்டிகளையும் கட்டாயமாகத் தக்கவைத்துக் கொள்வதையே இது அர்த்தப்படுத்திற்று. ஆனால் சர் எட்வர்டு கார்சன் இறுதியில் என்ன செய்தார்? கத்தோலிக்கர்கள் பெரும்பான்மையினராக உள்ள மூன்று மாவட்டங்கள் அல்ஸ்டருடன் இணைந்திருந்தால் அது ஒரு சுமையாகிவிடும் என்று அறிந்துகொள்ள சர் எட்வர்டு கார்சனுக்கு அதிக காலம் பிடிக்கவில்லை. ஓர் உண்மையான தலைவருக்கே உரிய தீரத்துடன் மூன்று கவுண்டிகளை இழக்கவும் அல்ஸ்டரைப் பாதுகாப்பானதாக்கவும் பிரேரணை செய்யும் பிரகடனத்தை முன்

வைத்தார். 1920 மே 18 அன்று காமன்ஸ் சபையில் ஆற்றிய உரையில் அவர் தாம் ஆறு கவுண்டிகளுடன் திருப்தியடைவதாக அறிவித்தார். தாம் ஏன் ஆறு கவுண்டிகளுடன் திருப்தி அடைவதாக அந்த சந்தர்ப் பத்தில் அவர் ஆற்றிய உரையில் கூறிய காரணங்கள் மேற்கோள் காட்டப்படுவதற்கு உகந்தவை. அவர் கூறியது இதுதான்:[1]

> ''உண்மை என்னவெனில் வட்டாரம் வட்டாரமாக, நகரம் நகரமாக இந்த விஷயம் முழுமையையும் பல கவலைதோய்ந்த மணித்துளிகள், பல கவலை தோய்ந்த நாட்கள் நன்கு ஆய்வு செய்தபின்னர், டொனெகல், கேவன், மொனகான் ஆகிய வற்றின் நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்று பெல்ஃபாஸ்டில் ஒரு நாடாளுமன்றத்தை வெற்றிகரமாக தொடங்கும் வாய்ப்பே இல்லாமல் போகும் என்ற முடிவுக்கு வந்தோம். நாங்கள் அவ்வாறு செய்யும் நிலையில் இருக்கிறோம் என்று இங்குவந்து பாவனை செய்வது எங்களுக்கும் மிக நன்றாகத் தான் இருக்கும். இயற்கையில், கூடுமானவரை மிகப் பெரிய பகுதிகளை எங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்கு நாங்களும் விரும்புகிறோம். பல்வேறு அரசாங்கங்களின் ஆளுகையை விரிவுபடுத்துவதற்காக எல்லா நாடுகளிலும் நிலவும் நிலப்பறிப்பு முறைதான் இது; இந்த மூன்று கவுண்டி களும் எங்களுடன் இணைக்கப்பட்டால் ஓர் அரசாங்கத்தை நாங்கள் நடத்துவதில் பயனில்லை. அது தோல்வியில் முடியும் என்பது எங்களுக்குத் தெரியும்.''

இவை அறிவுசான்ற, மதிநுட்பமுடைய, மிகவும் தீரமிக்க சொற்களாகும். இச்சொற்கள் கூறப்பட்ட நிலைமைக்கும், பாகிஸ் தானின் கோட்பாட்டைப் பிரயோகிப்பதன் மூலம் பஞ்சாபிலும் வங்காளத்திலும் உருவாக்கப்படவிருக்கும் நிலைமைக்கும் நெருங் கிய தொடர்புண்டு. ஓர் அமைதியான பாகிஸ்தானை அவர்கள் விரும்புவார்களேயானால் முஸ்லீம் லீகும் திரு.ஜின்னாவும் அவற்றை மனதில்கொள்ள மறந்துவிடக்கூடாது. பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம் அல்லாத சிறுபான்மையினரை பாதுகாப்பு நட வடிக்கைகளுடன் திருப்திப்பட்டுக் கொள்ளுமாறு கூறுவதில் பய னில்லை. பெரும்பான்மை இந்துக்களின் கொடுங்கோன்மைக்கு

1. ஹன்சார்டு (காமன்ஸ் சபை) 1920 தொகுதி 129, பக்கம் 1315 கையெழுத்து வடிவம் என்னுடையது.

எதிரான பாதுகாப்பு நடவடிக்கைகளில் முசல்மான்கள் திருப்தியடையத் தயாராக இல்லை என்றால், பெரும்பான்மை முஸ்லீம்களின் கொடுங்கோன்மைக்கு எதிரான பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கொண்டு திருப்தியடையுமாறு சிறுபான்மை இந்துக்கள் ஏன் கேட்டுக்கொள்ளப்பட வேண்டும்? '' உங்கள் பாதுகாப்பு நடவடிக்கைகளைக் குப்பையில் போடுங்கள், நாங்கள் உங்களால் ஆளப்படுவதை விரும்பவில்லை'' என்று இந்துக்களிடம் முசல்மான்கள் கூறமுடியுமானால் - இந்தவாதத்தைத்தான் ரெட்மாண்டுக்கு எதிராக கார்சன் பயன்படுத்தினார்- இதே வாதத்தை, பாதுகாப்பு நடவடிக்கைகளைக் கொண்டு திருப்தியடையுங்கள் எனும் முஸ்லீம் யோசனைக்கு எதிராக பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் இந்துக்களாலும் திருப்பிக் கூறமுடியும்.

இந்த அணுகுமுறை, பாகிஸ்தான் பிரச்சினையின் அமைதியான தீர்வுக்கு இட்டுச் செல்லுவதற்காகத் திட்டமிடப்பட்டதல்ல என்பதுதான் விஷயம். மிரட்டுவதோ, பலப்பிரயோகம் செய்வதோ பலனளிக்காது. முதலாவதாக, இது இருவர் ஆடக்கூடிய ஆட்டம். இரண்டாவதாக, ஆயுதங்கள் என்பவை பலத்தின் ஓர் அம்சமாக மட்டுமே இருக்கமுடியும். ஆனால் ஆயுதங்கள் மட்டுமே போதுமானவை அல்ல. ரூஸோ கூறியதுபோல '' ஒரு வலிமையானவர் தமது வலிமையை உரிமையாகவும் கீழ்ப்படியும் குணத்தை கடமையாகவும் மாற்றியமைக்காதவரை அவர் எப்போதும் எஜமானராக இருக்குமளவுக்கு வலிமையானவரல்ல. ''நன்னெறிகள் மட்டுமே வலிமையை உரிமையாகவும், கீழ்ப்பணியும் குணத்தைக் கடமையாகவும் மாற்றமுடியும்.'' பாகிஸ்தானுக்கான தனது உரிமைகோரல் நன்னெறிகளை ஆதாரமாகக் கொண்டிருக்குமாறு லீக் பார்த்துக் கொள்ளவேண்டும்.

## VI

எல்லைகள் சம்பந்தப்பட்ட பிரச்சினையைப் பொறுத்த வரை இவ்வளவுபோதும். எல்லைகள் மாற்றியமைக்கப்பட்ட பின்னரும் கூட பாகிஸ்தானுக்குள் இருக்கவேண்டிய நிலைமையிலுள்ள சிறுபான்மையினரின் பிரச்சினையை இப்போது பார்ப்போம்.

முதலாவதாக, சிறுபான்மையினரின் அரசியல் மற்றும் கலாசார உரிமைகளைப் பாதுகாப்பதற்காக அரசியல் சட்டத்தில் பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்வதாகும். இந்தியர்களைப் பொறுத்த

வரை இது தெரிந்த விஷயம்தான், ஆகவே இதை விரிவுபடுத்துவது தேவையற்றதாகும்.

இரண்டாவதாக, சிறுபான்மையினரை பாகிஸ்தானில் இருந்து இந்துஸ்தானுக்கு மாற்ற வகை செய்வதாகும். இத்தீர்வைப் பலர் விரும்புகின்றனர், மக்கள் தொகையைப் பரிமாற்றம் செய்வது சாத்தியம் என்பதை நிரூபிக்கமுடியுமானால், இதுவிஷயத்தில் பாகிஸ்தானுக்குச் சம்மதம் அளிக்க அவர்கள் தயாராகவும் விருப்ப முள்ளவர்களாகவும் இருப்பர். ஆனால் அவர்கள் இதை ஓர் ஊச லாடக்கூடிய, ஒரு குழப்பமான பிரச்சினையாகக் கருதுகின்றனர். இது திகிலடைந்துள்ள மனத்திற்கான ஓர் அறிகுறியே என்பதில் ஐயமில்லை. ஓர் அமைதியான, நிதானமான மனநிலைமையில் இந்த விஷயத்தை பரிசீலனை செய்தால் இப்பிரச்சினை ஊசலாடக் கூடியதோ அல்லது குழப்பமானதோ அல்ல என்பது தெரியவரும்.

முதலாவதாக, இப்பிரச்சினையின் பரிமாணங்களைப் பரிசீலனை செய்வோம். இந்த மக்கள் தொகைப் பரிமாற்றம் எந்த அளவுக்கு நடைபெறப்போகிறது? இந்த அளவைத் தீர்மானிப்பதில் ஒருவர் மூன்று கருத்துகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார். முதலில், பஞ்சாப் மற்றும் வங்காளத்தில் எல்லைகள் மாற்றியமைக்கப்படுமானால், இந்த இரு மாநிலங் களைப் பொறுத்தவரை மக்கள் தொகையை மாற்றும் பிரச்சினைக்கே இடமிராது. இரண்டாவது, இந்துஸ்தானில் வசிக்கும் முசல்மான் கள் பாகிஸ்தானுக்குக் குடிபெயர விரும்பவில்லை. வீகும் கூட அவர்கள் பாகிஸ்தானுக்கு மாற்றப்படுவதை விரும்பவில்லை. மூன்றாவதாக, வடமேற்கு எல்லைப்புற மாகாணங்கள், சிந்து, பலுசிஸ்தானிலுள்ள இந்துக்கள் குடிபெயர விரும்பவில்லை. இந்த ஊகங்கள் சரியாக இருக்குமானால் மக்கள் தொகையை மாற்றும் பிரச்சினை ஓர் ஊசலாடும் பிரச்சினையாக இராது. உண்மையில் அது ஒரு பிரச்சினை என்று கருதப்படத்தேவையில்லாத அளவுக்கு மிகச்சிறிய பிரச்சினையேயாகும்.

அது ஒரு பிரச்சினையாக மாறுகிறது என்றே வைத்துக் கொள்வோம். அது ஒரு குழப்பமான பிரச்சினையாக இருக்குமா? தீர்வு சாத்தியமாக இருக்கக் கூடிய எதுவும் ஒரு பிரச்சினையே அல்ல என்பதை அனுபவம் காட்டுகிறது. அரசியல் மாற்றங்களின் காரண மாக ஒரு பகுதியிலிருந்து மற்றொன்றிற்குக் குடிபெயரும் ஒரு நபருக்கு ஏற்படககூடிய உத்தேச சிரமங்கள் என்ன என்பதைத் தெரிந்து கொள்வதன்மூலம் இத்தகைய ஒரு பிரச்சினைக்கான

தீர்வைக் கண்டறிவது உசிதமாக இருக்கும். பின்வருவன தெளிவு படுத்தப்பட வேண்டிய விஷயங்களாகும். 1. மக்களின் பரிமாற்றத்தைச் செயல்படுத்தவும் ஏதுவாக்கவுமான அமைவு, 2. குடி பெயர்தலுக்கு எதிரான அரசாங்கத்தடை. 3. குடிபெயரும் குடும்பத்தினர் தங்களுடன் எடுத்துச்செல்லும் பொருட்கள் மீது அரசாங்கத்தின் கடுமையான வரிவிதிப்பு. 4. தங்களது அசையா சொத்துக்களைத் தங்களது புதிய இடத்திற்கு குடிபெயரும் குடும்பங்களினால் தம்முடன் எடுத்துச் செல்ல இயலாமை. 5. குடிபெயரும் குடும்பத்தினரின் ஆஸ்திகளின் மதிப்பைத் தேவையின்றிக் குறைக்கும் கண்ணோட்டத்துடன் நேர்மையற்ற வழிமுறைகளில் ஈடுபடுவதைத் தவிர்ப்பதில் ஏற்படும் சிரமம். 6. மார்க்கெட்டில் விற்பனை செய்வதன் மூலம் ஆஸ்தியின் முழு மதிப்பைப் பெறமுடியாததனால் ஏற்படும் இழப்பை ஈடுசெய்ய வேண்டிய நிலைமையினால் ஏற்படும் அச்சம். 7. விட்டுச் செல்லும் நாட்டிலிருந்து குடும்பத்தை குடிபெயரச் செய்வதன் காரணமாக ஓய்வூதியம் மற்றும் இதர வருவாய்இனங்களைப் பெறுவதில் உள்ள சிரமம். 8. பணம் செலுத்தப்பட வேண்டிய கரன்சியை நிர்ணயிப்பதில் சிரமம். இந்தச் சிரமங்கள் அகற்றப்படுமானால் மக்களைப் பரிமாற்றவும் செய்து கொள்வதற்கான வழி தெளிவாகி விடுகிறது.

பின்வருவனபோன்ற சில நிபந்தனைகள் அடங்கிய ஒரு விதியை உள்ளடக்கிய ஓர் ஒப்பந்தத்திற்குப் பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தான் ஆகிய இரு அரசுகளும் ஒப்புக்கொள்வதன் மூலம் முதல் மூன்று சிரமங்களையும் எளிதில் அகற்றிட முடியும்.

> ''சம எண்ணிக்கையிலான பிரதிநிதிகளடங்கிய ஒரு கமிஷனை நியமிக்கவும் அதற்கு இரு தரப்புகளும் அங்கீகரிக்கக் கூடிய இரு நாடுகளையும் சேராத ஒரு நபரைத் தலைவராக நியமிக்கவும் பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தான் அரசாங்கங்கள் ஒப்புக் கொள்கின்றன.
>
> '' கமிஷன் மற்றும் அதன் கமிட்டிகளின் பராமரிப்புக்காகவும் அதன் செயல்பாட்டிற்காகவும் ஆகும் செலவினங்களை இரு அரசாங்கங்களும் சம அளவில் பகிர்ந்துகொள்ளும்.
>
> '' தங்களது பிரதேசங்களுக்குள் உள்ள இனச் சிறுபான்மையினரான தங்களது பிரஜைகள் அனைவருக்கும் தங்களது குடியேறும் விருப்பத்தைத் தெரிவிக்கும் உரிமையை வழங்க பாகிஸ்தான் அரசாங்கமும் இந்துஸ்தான் அரசாங்கமும் இதன் மூலம் ஒப்புக் கொள்கின்றன.

''இந்த உரிமையைப் பிரயோகிப்பதை எல்லா வழிகளிலும் ஏதுவாக்கவும், குடியேறும் சுதந்திரத்தின் பாதையில் உள்ள நேரடியான, மறைமுகமான தடைகளை அகற்றவும் மேற்கூறப்பட்ட இரு நாடுகளின் அரசாங்கங்களும் ஒப்புக் கொள்கின்றன. குடியேறும் உரிமைகளுக்கெதிராக எல்லா சட்டங்களும் விதிமுறைகளும் செல்லாதவையாகக் கருதப் படும்.''

ஆஸ்திகளை மாற்றுவது சம்பந்தப்பட்ட நான்காவது மற்றும் ஐந்தாவது சிரமங்களைப் பின்வரும் நிபந்தனைகளை ஒப்பந்த விதிகளில் சேர்ப்பதன் மூலம் பயனுறுதியுடன் சமாளிக்க முடியும்:

''இந்த விதிகளைப் பின்பற்றி குடிபெயரும் உரிமையைப் பயன்படுத்தத் தீர்மானிப்பவர்கள் தங்களது அசையும் சொத்துக் களை அவற்றின்மீது எந்தவிதமான தீர்வையும் விதிக்கப் படாமல் அவற்றைத் தங்களுடன் எடுத்துச் செல்லும் அல்லது அவற்றை போக்குவரத்துச் சாதனங்கள் மூலம் எடுத்துச் செல்லும் உரிமையைப் பெற்றிருப்பர்.

''அசையாச் சொத்துகளைப் பொறுத்தவரை பின்வரும் ஷரத்துக்களுக்கேற்ப அது கமிஷனால் தீர்வு செய்யப்படும்:

1. குடியேறுபவரின் அசையாச் சொத்துக்களின் மதிப்பை நிர்ணயம் செய்வதற்கு ஒரு நிபுணர்குழுவை கமிஷன் நியமிக்கும். சம்பந்தப்பட்ட குடியேறுபவர் அக்குழுவில் தம்மால் தேர்வு செய்யப்பட்ட ஒருவரை இடம்பெறச் செய்யலாம்.

2. குடியேறுபவரின் அசையாச் சொத்துக்களை விற்பனை செய்யும் கண்ணோட்டத்துடன் தேவையான நடவடிக்கைகளை கமிஷன் மேற்கொள்ளும்.''

இழப்பை ஈடுசெய்வது, ஓய்வூதியம் மற்றும் இதர செலவினங்களுக்கான தொகை செலுத்துதல், தொகையை எந்தக் கரன்சியில் செலுத்துவது என்பதைக் குறிப்பிடுவது சம்பந்தமான மீதமுள்ள சிரமங்களைப் பொறுத்தவரை, அவற்றைத் தீர்க்க ஒப்பந்தத்தின் பின்வரும் விதிகள் போதுமானவை:

1. ''குடியேறுபவரின் அசையாச் சொத்துக்களின் விற்பனை விலைக்கும் உத்தேச மதிப்புக்கும் இடையிலுள்ள வித்தியாசத் தொகையை, அக்குறைபாட்டைப்பற்றி கமிஷன் தெரிவித்த உடனேயே அப்பிரஜை காலிசெய்து போகும் நாட்டின் அரசாங்கம் கமிஷனிடம் செலுத்த வேண்டும். இத்தொகையில் நான்கில் ஒருபங்கு சம்பந்தப்பட்ட அந்த நாட்டின் பணத்திலும் மீதமுள்ள நான்கில் மூன்று பங்கைத் தங்கமாகவோ அல்லது மீதமுள்ள தங்கப் பத்திரங்கள் மூலமாகவோ செலுத்தலாம்.

2. ''மேற்கூறப்பட்டவாறு நிர்ணயிக்கப்பட்ட தங்களது அசையாச் சொத்துக்களின் மதிப்பைக் குடியேறுபவர்களுக்கு கமிஷன் வழங்கும்.

3. ''இப்போதைய ஒப்பந்தம் கையெழுத்தான தேதியில் ஒரு குடியேறுபவர் பெற்றுவந்த எல்லா சிவில் அல்லது ராணுவ பென்ஷன்களும் கடமைப்பட்ட நாட்டின் கணக்குக்கு மாற்றப் படும். அந்த நாடு அதன் உரிமையாளர்களுடைய கணக்கில் அத்தொகையைக் கமிஷனுக்குச் செலுத்தும்.

4. ''குடியேறுவதை ஏதுவாக்கத் தேவையான நிதிகளை கமிஷனில் அங்கம் வகிக்கும் நாடுகள் வழங்கவேண்டும்.''

மக்களை ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு மாற்றுவது சம்பந்தமான இச் சிரமங்களைச் சமாளிப்பதற்கு இந்த ஷரத்துக்கள் போதுமானவை அல்லவா? இன்னும் பல சிரமங்கள் இருப்பது உண்மைதான். ஆனால் அவை கடக்கமுடியாத சிரமங் கள் அல்ல! அவை கொள்கை சம்பந்தமான பிரச்சினைகளைக் கொண்டிருக்கின்றன. முதலாவது பிரச்சினை இதுதான். மக்களை ஒருநாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு மாற்றுவது கட்டாயத்தின் அடிப்படையில் அமையுமா அல்லது சுய விருப்பத்தின் அடிப் படையிலா? இரண்டாவது பிரச்சினை இதுதான். அரசு உதவியுடன் இடம் பெயரும் இந்த உரிமை அனைவருக்கும் பொதுவானதா அல்லது ஏதோ ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தைச் சேர்ந்த நபர்களுக்கு மட்டும் உரித்தானதா? மூன்றாவது: இந்த ஷரத்துக்களுக்கு, குறிப்பாக அசையாச் சொத்துக்களின் விற்பனை விஷயத்தில் ஏற்படும் இழப்பை ஈடுசெய்வதற்கான ஷரத்துக்கு எத்தனைகாலம் இந்த அரசாங்கம் கட்டுப்பட்டிருக்கும்? இந்த ஷரத்துக்கள் ஒரு குறிப்பிட்ட கால வரையறைக்குட் பட்டிருக்குமா? அல்லது இந்தக் கடப்பாடு கால வரையின்றித் தொடருமா?

முதலாவது விஷயத்தைப் பொறுத்தவரை இரண்டுமே சாத்தியம்தான். இரண்டுமே செயல்படுத்தப்பட்டிருக்கும் உதாரணங்கள் உள்ளன. கிரீசுக்கும் பல்கேரியாவுக்கும் இடையிலான மக்கள் தொகை மாற்றித்தரும் பணி சுய விருப்பத்தினடிப்படையில் அமைந்திருந்தது. அதே சமயம் கிரீசுக்கும் துருக்கிக்கும் இடையில் அது கட்டாயத்தின் பேரில் நடைபெற்றது. கட்டாயமாக இடம் பெயரச் செய்வது எடுத்த எடுப்பிலேயே தவறானதாகும். ஒருவர் வாழும் இடத்திலேயே தொடர்ந்து வாழுவதால் ஓர் அரசில் அமைதியும் நிம்மதியும் அச்சுறுத்தலுக்கு உள்ளாகாதவரை அல்லது அவ்வாறு இடம் பெயருவது அவருடைய சொந்த நலனுக்கு அவசியமாக மாறுகிறவரை, அவரைத் தமது பூர்வீகமாக வாழுமிடத்தைக் கட்டாயமாக மாற்றச்செய்வது நியாயமானதாக இராது. தேவைப்படுவது என்னவெனில் இடம்பெயர விரும்புபவர்கள் தங்குதடையின்றி இழப்புக்கு உள்ளாகாமல் அவ்வாறு செய்ய முடிய வேண்டும். ஆகவே, என்னுடைய கருத்து என்னவெனில் எவரையும் இடம்பெயருமாறு கட்டயாப்படுத்தக் கூடாது. இடம்பெயரும் தங்களது விருப்பத்தைத் தெரிவிப்பவர்களுக்கு அந்த வாய்ப்பு தாராளமாக வழங்கப்பட வேண்டும்.

இரண்டாவது விஷயத்தைப் பொறுத்தவரை, சிறுபான்மை இனத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே அரசு உதவியுடன் இடம் பெயர்ந்து செல்லும் திட்டத்தைப் பயன்படுத்திக்கொள்ள அனுமதிக்கப்படவேண்டும். ஆனால் இந்த அனுகூலத்தைப் பெறக்கூடாதவர்களை ஒதுக்கிவைப்பதற்குக்கூட இந்தக் கட்டுப்பாடு போதுமானதாக இராமல் போகலாம். இன அல்லது மத வேறுபாடுகள் காரணமாக நிச்சயமாக கொடுமைகளுக்கும் அல்லது பழிவாங்கும் நடவடிக்கைகளுக்கும் இரையாகக்கூடிய குறிப்பிட்ட நன்கு விளக்கப்பட்ட சிறுபான்மையினருக்கு மட்டுமே இது பொருந்தவேண்டும்.

மூன்றாவது விஷயம் முக்கியமானதும், ஆழ்ந்த கருத்து வேறுபாடுகளைத் தோற்றுவிக்கக் கூடியதும் ஆகும். அரசாங்கச் செலவில் குடிபெயரும் விருப்பத்தை எல்லையற்ற காலத்திற்கு ஓர் அரசாங்கத்தை நீட்டித்துவைக்குமாறு கட்டாயப்படுத்துவது முற்றிலும் நியாயமற்றது என்பதை இந்த விஷயத்தை நேர்மையான கண்ணோட்டத்தில் பார்க்கும் எவரும் கூறமுடியும். மேற்கூறப்பட்ட விதிகளில் அடங்கியுள்ளபடி அரசு உதவியுடன் குடிபெயரும் திட்டத்தின் ஷரத்துகளைப் பயன்படுத்த ஒருவர் விரும்பினால் ஒரு குறிப்பிட்டகாலத்திற்குள் குடிபெயரும் விருப்பத்தை அவர் பிரயோ

கிக்க வேண்டும். அந்தக் காலவரையறை முடிந்த பின்னர் அவர் குடிபெயர விரும்பினால் அவர் அவ்வாறே செய்யலாம்; ஆனால் அவர் தமது சொந்தச் செலவில் அரசின் உதவியின்றிக் குடிபெயரலாம் என்று ஒரு நபருக்குச் சொல்வதில் தவறேதும் கிடையாது. அரசு உதவிக்கான உரிமையை இவ்வாறு வரையறுப்பதில் நேர்மை யின்மை எதுவும் கிடையாது. தனிப்பட்ட பிரஜைகளினால் எந்த விதத்திலும் கட்டுப்பாடு செய்யமுடியாத அரசியல் மாற்றங்களின் விளைவாகத் தான் குடிப்பெயர்ச்சி ஏற்படுவதனால் அரசு உதவி இத்திட்டத்தின் ஓர் அவசியப் பகுதியாகிறது. ஆனால் குடிப்பெயர்ச்சி என்பது அரசியல் மாற்றத்தின் விளைவாக ஏற்படாமலும் இருக்கக் கூடும். இதரக் காரணங்களினாலும் கூடக் குடிபெயர்ச்சி ஏற்படலாம். இந்த கார ணங்களினால் அவ்வாறு நேரும்போது, குடி பெயருபவருக்கு அர சாங்கம் உதவிசெய்யக் கடமைப்பட்டிருக்க வில்லை. குடிபெயர்தல் அரசியல் காரணங்களுக்காகவா அல்லது தனிப்பட்ட காரணங் களுக்காகவா என்பதைத் தீர்மானிக்கும் ஒரே வழி அதை ஒரு குறிப்பிட்ட கால அவகாசத்துடன் சம்பந்தப் படுத்துவதேயாகும். ஓர் அரசியல் மாற்றம் நிகழ்ந்ததிலிருந்து ஒரு குறிப்பிட்ட காலகட்டத் திற்குள் அது நிகழும்போது அது அரசியல் காரணங்களினால் என்பதை யூகிக்கமுடியும். அக்காலகட்டத்தைத் தாண்டி குடிபெயர்தல் நடைபெற்றால் அது தனிப்பட்ட காரணங்களினால் என்று யூகிக்க முடியும். இதில் நேர்மையின்மை எதுவும் கிடையாது. சிவில் பணி யாளர்களின் விஷயத்தில் கூட இதே விதி பொருந்தும், ஓர் அரசியல் மாற்றம் நிகழும்போது குறிப்பிட்ட காலகெடுவுக்குள் அவர்கள் ஓய்வு பெறுவார்களேயானால், வீதாசாரப்படியான ஓய்வூதியத்துடன் ஓய்வுபெற அவர்கள் அனுமதிக்கப்படுவார்கள். ஆனால் இக்காலக் கெடு முடிந்த பின்னர் ஓய்வு பெறுபவர்களுக்கு இந்த விதி பொருந்தாது.

நான் யோசனை கூறியது போன்று இந்தவிஷயங்கள் குறித்த கொள்கை அமைந்திருக்குமானால், ஒப்பந்தத்தில் பின்வரும் விதிகளைச் சேர்ப்பதன் மூலம் அதைச் செயல்படுத்தலாம்:

> "சிறுபான்மை இனத்தைச் சேர்ந்த 18 வயதுக்கு மேற்பட்ட எந்த ஒரு நபரும் இந்த ஒப்பந்தத்தின் கீழ் சுயவிருப்பத்தின் அடிப்படையிலான குடிபெயரும் உரிமையைப் பிரயோகிக் கலாம்".

> "இந்த உரிமையைப் பிரயோகிக்கும் விழைவுக்குப் போதுமான சான்றாகக் கமிஷனின் முன்னர் ஒரு பிரகடனம் செய்வதே போதுமானது.

'' கணவரின் முடிவே அவரது மனைவியின் முடிவாக இருக்கும். பெற்றோர்கள் அல்லது பாதுகாவலர்களின் விருப்பமே அவர்களது குழந்தைகளின் அல்லது அவர்களது பரதுகாப்பிலுள்ள 18 வயதுக்குக் குறைந்தவர்களின் விருப்பாக இருக்கும்.

''இந்த ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்ட தேதியிலிருந்து ஐந்தாண்டு காலத்திற்குள் குடிபெயரும் இந்த விருப்ப உரிமையைப் பிரயோகிக்கவில்லை என்றால் இந்த ஒப்பந்தம் வழங்கும் சலுகைக்கான உரிமை காலாவதி யாகிவிடும்.

''இக் கமிஷன் செயல்படத் தொடங்கிய நாளிலிருந்து ஐந்தாண்டுக் காலம் முடிந்த பின்னர் ஆறு மாதங்களுக்குள் இக் கமிஷனின் கடமைகள் முடிவுக்கு வரும்.''

செலவின் நிலைமை என்ன? இடம்பெயர்தல் கட்டாயமாக்கப்படும்போதுதான் செலவுப்பிரச்சினை முக்கியமடையும். சுயவிருப்ப அடிப்படையில் இடம்பெயரும் ஒரு திட்டம் அரசின் மீது மிகப்பெரிய நிதிப்பளுவை ஏற்படுத்தாது. விடுதலையைவிட மனிதர்கள் ஆஸ்தியையே அதிகம் நேசிக்கிறார்கள். தங்களது அரசியல் எஜமானர்களின் கரங்களில் கொடுங்கோன்மையைக் கூடப் பலர் விரும்பி ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் தங்களது குடும்ப வேர்கள் ஆழமாக ஊன்றியுள்ள வசிக்கும் இடங்களை மட்டும் மாற்றிக்கொள்ள விரும்பமாட்டார்கள். ஆடம் ஸ்மித் கூறியது போன்று எடுத்துச் செல்வதற்கு மிகவும் கடினமாக உள்ள சரக்குகள் யாவற்றிலும் மனிதனே அதிகக் கடினமான சரக்கு ஆகும். ஆகவே செலவு எவரையும் அச்சுறுத்தத் தேவை இல்லை.

நடைமுறை சாத்தியத்தின் நிலைமை என்ன? இது ஒன்றும் புதிய திட்டம் அல்ல. இது ஏற்கெனவே முயன்று நடைமுறை சாத்தியமானதுதான் என்று காணப்பட்டுள்ளது. கடந்த ஐரோப்பிய யுத்தத்தின்போது கிரீசுக்கும் பல்கேரியாவுக்கும் இடையிலும் துருக்கிக்கும் கிரீசுக்கும் இடையிலும் மக்களை இடம்பெயரச் செய்வதற்காக இது செயல்படுத்தப்பட்டது. இது வெற்றிகரமாகச் செயல்பட்டுள்ளது, முயன்று பார்க்கப்பட்டுள்ளது, நடைமுறை சாத்தியமானது என்று கண்டறியப்பட்டுள்ளது என்பதை எவரும் மறுக்கமுடியாது. நான் கோடிட்டுக் காட்டியுள்ள திட்டம் அதே திட்டத்தின் நகல் போன்றதேயாகும். கிரீசுக்கும் பல்கேரியாவுக்கும் இடையிலும் துருக்கிக்கும்

கிரீசுக்கும் இடையிலும் மக்களை இடம்பெயரச்[1] செய்வதில் அது பயன்படுத்தப்பட்டுள்ளது. குறிப்பிடத்தக்க வெற்றியுடன் அது நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது என்பதை எவரும் மறுக்க முடியாது. பிறநாடுகளில் வெற்றிகரமாக அமைந்த ஒரு திட்டம் இந்தியாவிலும் வெற்றிகரமாக அமையும் என்று எதிர்பார்க்கலாம்.

பாகிஸ்தான் பிரச்சினை அவ்வளவு எளிதானதல்ல. ஆனால் அதன் கோட்பாடும் நெறிமுறைகளும் ஒப்புக்கொள்ளப்படுமானால் பொதுவாகக் கருதப்படுவது போன்று அது அவ்வளவு கடினமானதல்ல. அது சிரமமானதாக இருக்குமேயானால் அதற்கு ஒரே காரணம் அது நெஞ்சை உருக்குவதாக இருக்கும் பிரச்சினை என்பதுதான். அந்தக் கருத்தே வேதனையளிக்கக் கூடியதாக இருப்பதால் அதன் பிரச்சினைகளையும் அதற்கான தீர்வுகளையும் பற்றி எவரும் சிந்திக்க விரும்புவதில்லை. ஆனால் உணர்வுகள் மறைந்து பாகிஸ்தான் உருவாக்கப்படும் என்று முடிவு செய்யப்படுமானால், அதனால் ஏற்படும் பிரச்சினைகள் ஊசலாடக் கூடியவையாகவோ அல்லது குழப்பமானவையாகவோ இராது.



1. மக்களை இடம் பெயரச் செய்யும் பிரச்சினை சம்பந்தமாகக் கூடுதல் தகவல் பெற விரும்புவோர் ஸ்டீஃபன் பி. லடாஸ் எழுதிய சிறுபான்மையினரின் பரிமாற்றம் பல்கேரியா, கிரீஸ் மற்றும் துருக்கி 1932 (மேக்) என்ற நூலைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். அதில் கிரீசுக்கும் பல்கேரியாவுக்கும் இடையிலும் கிரீசுக்கும் துருக்கிக்கும் இடையிலும் மக்களை இடம்பெயரச் செய்தது சம்பந்தமான திட்டம் முழுமையாக விளக்கப்பட்டுள்ளது.

# இயல் 15

## யார் தீர்மானிப்பது?

பாகிஸ்தான் பிரச்சினைக்கு இந்துத் தரப்பு என்றும் முஸ்லீம் தரப்பு என்றும் இரு தரப்புகள் உள்ளன. இதைத் தவிர்க்க முடியாது. ஆயினும் துரதிருஷ்டவசமாக இருதரப்புக்களின் அணுகுமுறையும் தேசிய நலன்களுக்கு அப்பாற்பட்டவையாகத்தான் உள்ளன. இந்த உணர்வின் படுகைகள் மிகவும் கடினமாக இருப்பதால் இப்போது அதை ஊடுருவிச் செல்வது நியாய உணர்வுக்கு மிகவும் கடினமாக இருக்கிறது. எதிரும் புதிருமான உணர்வுகள் மறைந்து விடுமா அல்லது மோசமடையுமா என்பதைக் காலமும் சூழ் நிலைகளும்தான் சொல்லமுடியும். இந்தப் பனி உருகுவதற்கு இந்தியர்கள் எவ்வளவுகாலம் காத்திருக்க வேண்டும் என்பதை யாரும் முன்னறிந்து கூறமுடியாது. இந்தப் பனி உருகும்வரை சுதந் திரத்தைக் குளிர்பதன அறையில் வைத்துப்பூட்ட வேண்டியது தான் என்பது மட்டும் நிச்சயம். பாகிஸ்தான் என்ற லட்சியமும் அதற்கு ஒரு நிரந்தரத் தீர்வும் காணப்படும் வரை இந்தியச் சுதந் திரம் காலவரையின்றி ஒத்திவைக்கப்படுவதை கோடிக்கணக் கான சிந்திக்கும் இந்தியர்கள் கடுமையாக எதிர்க்கின்றனர் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். நானும் அவர்களில் ஒருவன். பாகிஸ்தான் என்பது ஒருபிரச்சினை, அது ஒரு மனநிலை அல்ல என்றால் அதிலிருந்து தப்புவதற்கு வழிகிடையாது. அதற்கு ஒரு தீர்வு காணப்படவேண்டும் என்ற கருத்துடையவர்களில் நானும் ஒருவன். தவிர்க்கமுடியாததை சந்தித்தே ஆகவேண்டும் என்று கருது பவர்களில் நானும் ஒருவன். நம்மைச் சுற்றி நடக்கும் சம்பவங்களைக் காண மறுத்து ஒருவர் தமது தலையை மணலுக்குள் புதைத்துக் கொள்வதில் பயனேதும் இல்லை, ஏனெனில் அச்சம்பவங்களின் ஓசை ஒருவருடைய உணர்வுகளைப் புண்படுத்துகிறது. முடிவு ஏற் படுவதற்கு வெகுகாலம் முன்னரே ஒருவர் முடிந்தால் அதற்கான தீர்வுடன் தயாராக இருக்கவேண்டும் என்று கருதுபவர்களில் நானும் ஒருவன். ஆற்றைக் கடக்கவேண்டிய கட்டாயம் நேரிடும் என்று ஒருவருக்குத் தெரிந்திருந்தால் அதற்காக ஒரு பாலத்தைக் கட்டுவதே அறிவுடைமை.

பாகிஸ்தானின் முக்கியப் பிரச்சினை இதுதான்: பாகிஸ்தான் என்று ஒன்று இருக்குமா, இருக்காதா என்பதைத் தீர்மானிப்பது யார்? கடந்த மூன்று ஆண்டுகளாக இந்த விஷயம் குறித்து நான் சிந்தித்து வருகிறேன். இப்பிரச்சினைக்குத் தகுந்த பதில் சம்பந்தமாக சில முடிவுகளுக்கு நான் வந்திருக்கிறேன். இப்பிரச்சினையின் தீர்வில் அக்கறையுள்ள மற்றவர்களுடன் இந்த முடிவுகளைப் பகிர்ந்து கொள்ள விரும்புகின்றேன், அப்போதுதான் அவற்றை மேற்கொண்டு ஆராய முடியும். எனது முடிவுகளைத் தெளிவுபடுத்துவதற்காக, அவற்றை ஒரு நாடாளுமன்றச் சட்டத்தின் வடிவில் முன்வைத்தால் அது நமது நோக்கத்திற்குப் பயன்படும் என்று கருதுகிறேன். எனது முடிவுகளை உள்ளடக்கிய சட்டத்தின் நகல் பின்வருமாறு:

## இந்திய அரசாங்கம் (ஆரம்ப ஷரத்துக்கள்) சட்டம்

இப்போது கூடியுள்ள நாடாளுமன்றத்தில், மாட்சிமை பொருந்திய மன்னராலும், ஆன்மீக மற்றும் இம்மைக்குரிய பிரபுக்களாலும், காமன்ஸ் சபையினாலும் பின்வருமாறு சட்டமியற்றப் படுகிறது:

I. 1) இந்தச் சட்டம் இயற்றபட்ட தேதியிலிருந்து ஆறு மாதத்திற்குள், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், சிந்து, வங்காளம் ஆகிய மாகாணங்களின் சட்டமன்றங்களில் உள்ள பெரும்பான்மை முஸ்லீம் உறுப்பினர்கள், முஸ்லீம்கள் அதிகமாக வாழும் பகுதிகளை பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து பிரிக்க வேண்டும் என்ற ஒரு தீர்மானத்தை நிறைவேற்றவேண்டும். இச் சட்டத்தின் ஷரத்துக்களுக்கேற்ப இந்தமாகாணங்கள் மற்றும் பலுசிஸ்தானின் முஸ்லீம் மற்றும் முஸ்லீம் அல்லாத வாக்காளர்கள் மத்தியில் இப்பிரச்சினை குறித்து ஒரு கருத்துக்கணிப்பை நடத்த மாட்சிமை பொருந்திய மன்னர் உத்தரவிட வேண்டும்.

II. 2) இந்த மாகாணங்களில் பின்வரும் வடிவத்தில் வாக்காளர்களுக்குக் கேள்விகள் வழங்கப்பட வேண்டும்:

i. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து பிரிக்கப்படுவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

ii. நீங்கள் பிரிவினையை எதிர்க்கிறீர்களா?

3) 1) கருத்துக்கணிப்பின் முடிவுகள், முஸ்லீம் வாக்காளர்களில் பெரும்பான்மையினர் பிரிவினைக்கு ஆதரவாகவும், முஸ்லீம் அல்லாதவர்களின் பெரும்பகுதியினர் பிரிவினைக்கு எதிராகவும் இருப்பதாகக் காண்பித்தால், பெரும்பான்மையினராக முஸ்லீம்கள் வசிக்கக்கூடிய இந்த மாகாணங்களில் உள்ள அத்தகைய மாவட்டங்கள் மற்றும் பகுதிகளின் ஒரு பட்டியலைத் தயாரிப்பதற்காக ஒரு எல்லை வரையறுக்கும் கமிஷனை நியமிக்கும் ஆணையை மாட்சிமை தங்கிய மன்னர் பிறப்பிக்கவேண்டும். அத்தகைய மாவட்டங்களும் பகுதிகளும் ஒதுக்கப்பட்ட மாவட்டங்கள் என்று அழைக்கப்படும்.

2) ஒதுக்கப்பட்ட மாவட்டங்கள் கூட்டாகப் பாகிஸ்தான் என்றும் மீதமுள்ள பிரிட்டிஷ் இந்தியா இந்துஸ்தான் என்றும் குறிப்பிடப்படும். வடமேற்குப் பகுதியில் உள்ள ஒதுக்கப்பட்ட மாவட்டங்கள் மேற்குப் பாகிஸ்தான் என்றும் வடகிழக்கில் உள்ள பகுதிகள் கிழக்குப் பாகிஸ்தான் என்றும் அழைக்கப்படும்.

III. 1) எல்லை வரையறுப்புக் கமிஷனின் பரிந்துரைகள் உடன்படிக்கையின் மூலமோ அல்லது நடுவர் தீர்ப்பின் மூலமோ இறுதியான பின்னர், ஒதுக்கப்பட்ட மாவட்டங்களின் வாக்காளர்களிடையே மற்றுமொரு கருத்துக் கணிப்பு நடத்த மாட்சிமை பொருந்திய மன்னர் உத்தரவிட வேண்டும்.

2) வாக்காளர்களுக்குச் சமர்ப்பிக்கப்படும் கேள்விகள் பின்வரும் வடிவத்தில் அமைந்திருக்கும்:

i. நீங்கள் பிரிவினையை உடனடியாக ஆதரிக்கிறீர்களா?

ii. நீங்கள் பிரிவினையை எதிர்க்கிறீர்களா?

IV. 1) பெரும்பான்மையினர் பிரிவினைக்கு ஆதரவாக இருப்பார்களேயானால், பாகிஸ்தானுக்கு ஒன்றும் இந்துஸ்தானத்திற்கு மற்றொன்றுமாக இரு தனித்தனி அரசியல் சட்டங்களை வகுப்பதற்கான ஏற்பாடு

களைச் செய்வது மாட்சிமை தங்கிய மன்னரின் சட்டப்படியான நடவடிக்கையாக இருக்கும்.

2) மாட்சிமை பொருந்திய மன்னரின் ஆணை மூலமாக குறிக்கப்பட்ட நாளிலிருந்து புதிய அரசுகளான பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தான் தனித்தனி நாடுகளாகச் செயல்படத் தொடங்கும்.

3) பெரும்பான்மையானவர்கள் உடனடியாகப் பிரிவினையை எதிர்பார்ப்பார்களேயானால் ஒட்டுமொத்தமாக பிரிட்டிஷ் இந்தியாவுக்கு ஒரே அரசியல் சட்டத்தை உருவாக்கும் ஏற்பாடுகளைச் செய்வது மாட்சிமை பொருந்திய மன்னரின் சட்டப்படியான நடவடிக்கையாக இருக்கும்.

V. கடந்த முந்தைய பிரிவில் கூறப்பட்டது போன்று நடைபெற்ற கருத்துக் கணிப்பில் பெரும்பான்மையானவர்கள் உடனடியாகப் பிரிவினையை எதிர்ப்பார்களேயானால் பாகிஸ்தானின் பிரிவினைக்கான மசோதாவும், கடந்த முந்தைய பிரிவில் கூறப்பட்டது போன்று நடைபெற்ற கருத்துக் கணிப்பில் பெரும்பான்மையானவர்கள் உடனடியாகப் பிரிவினையை ஆதரிப்பார்களேயானால் பாகிஸ்தானை இந்துஸ்தானத்துடன் இணைக்கவுமான மசோதாவும், பிரிட்டிஷ் இந்தியாவுக்கான புதிய அரசியல் சட்டத்தை அல்லது பாகிஸ்தானுக்கும் இந்துஸ்தானத்துக்குமான இரு தனித்தனி அரசியல் சட்டங்களை நடைமுறைப் படுத்துவதற்காக மாட்சிமை பொருந்திய மன்னர் குறிப்பிட்ட நாளிலிருந்து பத்தாண்டுகள் முடியும் வரை, ஏற்கப்படக்கூடாது.

VI. 1. இரு தனித்தனியான அரசியல் சட்டங்கள் நடப்பிற்கு வரும் பட்சத்தில் (நான்காவது பிரிவில் கூறப்பட்டது போன்று) குறிப்பிட்ட நாளுக்குப் பின்னர் உடனடியாக, பிரிட்டிஷ் இந்தியா முழுவதிற்குமான ஓர் அரசியல் சட்டத்தை ஏற்படுத்தும் கண்ணோட்டத்துடனும், பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின்

சட்டமன்றங்கள் மற்றும் அரசாங்கங்களுக்கிடை யில் இசைவான செயல்பாடுகளை ஏற்படுத்தும் கண்ணோட்டத்துடனும், பிரிட்டிஷ் இந்தியா முழு வதையும் பாதிக்கும் விஷயங்கள் சம்பந்தமாக பரஸ் பரம் செயல்தொடர்பையும் ஒரேசீரான தன்மை யையும் வளர்க்கவும், பிரிட்டிஷ் இந்தியா முழுவதும் ஒரே மாதிரியாக நிர்வகிக்கப்படவேண்டும் என்று இரு நாடாளுமன்றங்களும் பரஸ்பரம் ஒப்புக்கொள்ளும் சேவைகளின் நிர்வாகத்தை வழங்கவும், அல்லது இச்சட்டத்தின்படியே நிர்வாகம் செய்யவுமான கண் ணோட்டத்துடன் ஒரு இந்தியக் கவுன்சிலை ஏற்படுத் துவது மாட்சிமைதங்கிய மன்னருக்கு சட்டப்படி யான நடவடிக்கையாக இருக்கும்.

2. இனிவரும் விஷயமாக, இந்தியக் கவுன்சில், மாட் சிமை பொருந்திய மன்னரின் ஆணைகளுக்கிணங்க நியமிக்கப்பட்ட ஒரு தலைவரும் நாற்பது இதர உறுப் பினர்களையும் கொண்டிருக்கும், அவர்களில் இருபது உறுப்பினர்கள் பாகிஸ்தானைப் பிரதிநிதித்துவப்படுத்து பவர்களாகவும், மீதமுள்ள இருபது பேர் இந்துஸ் தானத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துபவர்களாகவும் இருப்பர்.

3. இந்தியக் கவுன்சிலின் உறுப்பினர்கள் ஒவ்வொரு தரப்பிலும் பாகிஸ்தான் அல்லது இந்துஸ்தானின் நாடாளுமன்றத்தினுடைய கீழ்ச் சபைகளினுடைய உறுப்பினர்களாக இருப்பர்.

4. இந்தியக் கவுன்சிலின் உறுப்பினர்களைத் தேர்வு செய்வதுதான் பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் சட்டமன்றங்களுடைய முதலாவது அலுவலாக இருக்கும்.

5. கவுன்சிலின் உறுப்பினர் ஒருவர், பாகிஸ்தான் அல்லது இந்துஸ்தானின் சட்டமன்ற உறுப்பினராக இருந்து அவரது பதவிக்காலம் முடிந்துவிட்டால் கவுன்சி லிலும் அவரது பதவிக்காலம் முடிந்துவிடும். பாகிஸ் தான் அல்லது இந்துஸ்தானின் சட்டமன்றம் கலைக்கப் படுமானால், கவுன்சிலின் உறுப்பினர்களாக இருக்கக்

கூடிய நபர்கள், ஒருபுதிய தேர்தல் நடைபெறும்வரை கவுன்சிலின் உறுப்பினர்களாகத் தொடர்ந்து பதவி வகிப்பார்கள். அவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப் படாவிடில் அப்போது ஓய்வு பெறுவார்கள்.

6. தாம் கலந்து கொள்ளும் கவுன்சிலின் ஒவ்வொரு கூட்டத்திற்கும் கவுன்சிலின் தலைவரே தலைமை வகிப்பார். இரு தரப்பிலும் சம அளவிலான வாக்குகள் இருந்தால் மட்டுமே அவருக்கு வாக்களிக்கும் உரிமை உண்டு. அவ்வாறில்லை எனில் அவர் வாக்களிக்க முடியாது.

7. கவுன்சிலின் முதலாவது கூட்டம் தலைவர் நிர்ண யிக்கும் நேரத்திலும் இடத்திலும் நடைபெறும்.

8. கவுன்சில் உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைந் தாலும் கவுன்சில் செயல்படும், கவுன்சில் கூட்டத் திற்குத் தேவையான குறைந்தபட்ச உறுப்பினர் எண்ணிக்கை 15 ஆக இருக்கும்.

9. மேற்கூறியதற்கு உட்பட்டு, கமிட்டிகளுக்கு அதி காரத்தைப் பகிர்ந்தளிப்பது உள்ளிட்ட தனது நட வடிக்கைகளை கவுன்சில் ஒழுங்குபடுத்திக் கொள்ள லாம்.

10. பாகிஸ்தானின் சட்டமன்றமும் இந்துஸ்தானின் சட்டமன்றமும் நிறைவேற்றிய ஒரே மாதிரியான சட்டங்கள் மூலம் இந்தியக் கவுன்சிலின் சட்ட திட்டங்கள் அவ்வப்போது மாறுபடலாம். அந்த சட்டங்கள் இந்தியக் கவுன்சிலின் உறுப்பினர்கள் அனைவரும் அல்லது உறுப்பினர்களில் எவரேனும் நாடாளுமன்ற வாக்காளர்களினால் தேர்ந்தெடுக்கப் படுவதற்கு வகைசெய்யும். பல தேர்வுரிமை பெற்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவிருக்கும் தொகுதி களைத் தீர்மானிக்கவும், பலதொகுதிகளிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக் கையைத் தீர்மானிக்கவும் தேர்தல் முறையைத் தீர் மானிக்கவும் அந்தச் சட்டங்கள் வகை செய்யும்.

VII.1. *பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் சட்டமன்றங்கள் ஒரேமாதிரியான சட்டங்கள் மூலம் பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் சட்டமன்றங்கள் மற்றும் அரசாங்கங்களின் எந்த அதிகாரங்களையும் இந்தியக் கவுன்சிலிடம் ஒப்படைக்கலாம். அத்தகைய சட்டங்கள் அவ்வாறு ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களைப் பிரயோகிக்கும் விதத்தையும் தீர்மானிக்கும்.*

2. *புதிய அரசியல் சட்டத்தைச் செயல்படுத்துவதற்காகக் குறிக்கப்பட்ட நாளிலிருந்து ரயில்வேக்கள் மற்றும் நீர்வழிப்பாதைகள் சம்பந்தமான சட்டங்களை இயற்றும் அதிகாரம், பாகிஸ்தான் அல்லது இந்துஸ்தானத்தின் வசம் உள்ள அதிகாரங்களாக அல்லாமல் இந்தியக் கவுன்சிலின் அதிகாரங்களாக மாறும். நிர்மாணிக்கப்படவேண்டிய பணிகள் மொத்தமாக பாகிஸ்தானிலோ அல்லது இந்துஸ்தானிலோ அமைந்திருந்தாலும், இருப்புப்பாதைகள், நீர்வழிப்பாதைகள் ஆகியவற்றின் நிர்மாணம், விஸ்தரிப்பு அல்லது மேம்பாட்டுக்கு அனுமதியளிக்கும் சட்டங்கள் உருவாக்குவதிலிருந்து பாகிஸ்தான் அல்லது இந்துஸ்தானின் சட்டமன்றத்தைத் தடுக்கும் அதிகாரம் எதுவும் இந்த உப பிரிவில் இராது.*

3. *பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் வளவாழ்வை எந்த வகையிலேனும் பாதிக்கக்கூடிய எந்தப் பிரச்சினைகள் தோன்றினாலும் கவுன்சில் ஒரு தீர்மானத்தின் மூலம் அவர்கள் சரியானது என்று கருதும் விதத்தில் யோசனைகள் வழங்க முடிவு செய்யலாம். ஆனால் அவ்வாறு வழங்கப்பட்ட யோசனைகளுக்கு எந்தவிதமான சட்டரீதியான அதிகாரம் இராது.*

4. *அவற்றைத் தனித்தனியாக பாகிஸ்தான் அல்லது இந்துஸ்தானில் நிர்வகிக்கும் தேவையைத் தவிர்க்கும் கண்ணோட்டத்துடன் எந்த ஒரு அகில இந்திய விஷயத்தையும் நிர்வகிக்கும் அதிகாரத்தை இந்தியக் கவுன்சிலுக்கு ஒப்படைப்பது சம்பந்தமான ஒரேமாதிரியான சட்டங்களை இயற்றும் ஆலோசனை குறித்து பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் சட்டமன்றங்*

களுக்குக்குப் பரிந்துரை செய்வது இந்தியக் கவுன்சிலின் சட்டரீதியான கடமையாக இருக்கும்.

5. மேற்கூறப்பட்டவாறு தற்காலிகமாகக் கவுன்சிலுக்கு ஒரேமாதிரியான சட்டங்கள்மூலம் வழங்கப்பட்ட எந்த அதிகாரங்களையும் இரு சட்டமன்றங்களும் திரும்பப் பெற்றுக் கொள்வது சட்டரீதியானதாக இருக்கும். அவ்வாறு செய்ததற்குப் பின்னர் சம்பந்தப்பட்ட அதிகாரங்களை இந்தியக் கவுன்சில் பிரயோகப் படுத்துவது நின்றுபோகும். அவற்றைப் பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் அரசாங்கங்களும் சட்டமன்றங்களும் தத்தமது ஆளுகைக்குட்பட்ட பிரிட்டிஷ் இந்தியாவின் பகுதிகளில் பிரயோகிக்கக் கூடியவையாக இருக்கும். இந்த அதிகாரங்களை மாற்றித் தருவதற்குத் தேவையான, தம்வசமுள்ள அல்லது தம் கட்டுப்பாட்டிலுள்ள நிதிகளைச் சரிப்படுத்திக் கொள்வது உள்ளிட்ட நடவடிக்கைகளை கவுன்சில் மேற்கொள்ளும்.

VIII. 1. பிரிவு IV (3) இல் குறிப்பிடப்பட்டதுபோன்று பிரிட்டிஷ் இந்தியாவுக்கான ஓர் அரசியல் சட்டம் நடைமுறைக்கு வந்து பத்தாண்டுகள் முடிந்த பின்னர், மாகாண மற்றும் மத்திய சட்டமன்றங்களில் உள்ள ஒதுக்கப்பட்ட மாவட்டங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் பெரும்பான்மை முஸ்லீம் உறுப்பினர்கள் இந்துஸ்தானிலிருந்து பாகிஸ்தானைப் பிரிப்பது சம்பந்தமான ஒரு கருத்துக் கணிப்பு நடத்த வேண்டுமென்று மாட்சிமை பொருந்திய மன்னருக்கு ஒரு விண்ணப்பம் சமர்ப்பித்தால், மாட்சிமை பொருந்திய மன்னர் அவ்வாறே ஒரு கருத்துக் கணிப்பு நடத்த ஆணையிடுவார்.

2. வாக்காளர்களுக்குச் சமர்ப்பிக்கப்படும் கேள்விகளின் வடிவம் பின்வருமாறு அமைந்திருக்கும் :

i) இந்துஸ்தானிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்படுவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

ii) இந்துஸ்தானிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்படுவதை நீங்கள் எதிர்க்கிறீர்களா?

IX. கருத்துக்கணிப்பின் முடிவுகள் பிரிவினைக்கு ஆதர வாக இருக்குமானால், குறிப்பிட்ட ஒரு நாளிலிருந்து பாகிஸ்தான் பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரு பகுதி யாக இருப்பது முடிவுக்கு வரும். இந்தியக் கவுன்சில் கலைக்கப்படும் என்று கவுன்சிலில் ஓர் உத்தரவின் மூலம் மாட்சிமை பொருந்திய மன்னர் பிரகடனப் படுத்துவது சட்டரீதியானதாக இருக்கும்.

X. (1) பிரிவு IV இல் குறிப்பிட்டது போன்ற சூழ்நிலைகளில் இரு அரசியல் சட்டங்கள் நடப்பிற்கு வரும்போது பாகிஸ்தான் தனி அரசாக இராது. இந்துஸ்தானின் ஒரு பகுதியாகவே இருக்கும் என்பதை கவுன்சிலின் ஓர் உத்தரவு மூலம் மாட்சிமை பொருந்திய மன்னர் பிரகடனம் செய்வது சட்டரீதியானதாக இருக்கும். பாகிஸ்தானுக்கென்று தனியாக அரசியல் சட்டம் தொடங்கியதிலிருந்து பத்தாண்டுகள் முடியும் வரை இத்தகைய உத்தரவு பிறப்பிக்கப்பட மாட்டாது.

பிரிவு X-(2) இல் கூறப்பட்டிருப்பது போன்று நாடாளு மன்ற சட்டங்களை பாகிஸ்தான் மற்றும் இந்துஸ் தானின் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்கள் இயற் றும் வரை இத்தகைய பிரகடனங்கள் எதுவும் செய்யப் பட மாட்டாது.

(2) முந்தைய பிரிவின் மூன்றாவது பாராவில் கூறப் பட்டிருப்பது போன்று (நாடாளுமன்றச் சட்டங்கள் என்று இனி அது குறிக்கப்படும்) பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்கள், ஒரேமாதிரியான சட்டங்கள் மூலம் அறுதிப் பெரும்பான்மையான உறுப்பினர்கள் ஒப்புக் கொண்டபடி இந்தியக் கவுன்சிலுக்குப் பதிலாக ஐக்கிய இந்தியாவுக்கான ஒரு சட்டமன்றத்தை ஏற் படுத்தும். அதற்குத் தேவையான உறுப்பினர்களின் எண்ணிக்கையையும் அந்த உறுப்பினர்கள் நியமிக்கப் படவேண்டிய அல்லது தேர்ந்தெடுக்கப்படவேண் டிய முறைகளையும் தேர்வுரிமை பெற்ற பல உறுப் பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான தொகுதிகளை யும், பல தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையையும்,

நியமனத்திற்கான அல்லது தேர்தலுக்கான வழிமுறைகளையும் ஒன்று மற்றொன்றுடன் இருசபைகளின் உறவுகளுக்கு வகை செய்வதையும் தீர்மானிக்கும்.

XI.1) பாகிஸ்தானும் இந்துஸ்தானும் இணையும் நாளன்று இந்தியக் கவுன்சில் காலாவதியாகிவிடும். அப்போது அதுவரை இந்தியக் கவுன்சில் பிரயோகித்துவந்த எல்லா அதிகாரங்களும் சட்டமன்றம் மற்றும் இந்திய அரசாங்கத்திற்கு மாற்றித் தரப்படும்.

2) பாகிஸ்தான் மற்றும் இந்துஸ்தானின் சட்டமன்றங்கள் மற்றும் அரசாங்கத்தின் எல்லா அதிகாரங்களும் கடமைகளும், வரிவிதிப்பு சம்பந்தமான எல்லா அதிகாரங்கள் உள்ளிட்டு பிரிட்டிஷ் இந்தியாவின் சட்டமன்றத்துக்கும் மற்றும் அரசாங்கத்திற்கும் மாற்றப்படும், அப்போது அந்த சட்டமன்றங்களும் அரசாங்கமும் செயலற்றுப்போகும்.

XII. 1) ஒரு சட்டமன்றத்தில் சேவைபுரிய ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பதற்கு வாக்காளர்களிடையே நடத்தப்படும் தேர்தலைப் போன்று கூடுமானவரை அதே முறையில் இச்சட்டத்தின் கீழ் வாக்குச்சீட்டு மூலம் ஒரு தேர்தல் நடத்தப்படும். அத்தேர்தலை நடத்துவதற்குத் தேவையான தேர்தல் சட்டங்களை ஏற்றுக் கொள்வதற்கு மாட்சிமை பொருந்தியமன்னர் விதிமுறைகளை வகுத்தளிப்பார்.

2) ஒன்றுக்கு மேற்பட்ட இடத்தில் பதிவு செய்திருந்த போதிலும் கூட தேர்தலில் ஒரு வாக்காளர் ஒருமுறை தான் வாக்களிக்க முடியும்.

3) வாக்காளர் என்றால் வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பஞ்சாப், சிந்து, வங்காளம் மற்றும் பலுசிஸ்தான் ஆகிய மாகாணங்களில் வசிக்கும் ஒவ்வொரு வயதுவந்த ஆண், பெண் என்று அர்த்தமாகும்.

XIII. இந்தச் சட்டத்தை இந்திய அரசியல் சட்டம் (ஆரம்ப ஷரத்துக்கள்) விதி 194 என்று அழைக்கலாம்.

இந்த உத்தேச சட்டத்தில் உள்ளடங்கும் என்னுடைய முடிவுகளை வாசகர் புரிந்து கொள்வதற்கு இன்னும் விவரமான விளக்கங்கள் தேவை இல்லை என்று கருதுகிறேன். இந்தப் பிரேரணைகளின் சிறப்பம்சங்கள் சிலவற்றை வெளிக்கொணருவது அனுகூலமானதாக இருக்கக்கூடும். இவற்றுக்கு நாடாளுமன்றத்தின் உத்தேச சட்டவடிவு வழங்குவதானது கிரிப்ஸ் பிரேரணைகளுடன் அவற்றை ஒப்பிட்டு அவற்றுக்கு செயல் வடிவம் வழங்குவதாகும்.

பாகிஸ்தான் பிரச்சினைக்கு முதலில் தீர்வு காணாமல் குடியேற்ற நாட்டு அந்தஸ்து அல்லது சுதந்திரம் வழங்குவதற்கான ஒரு சட்டத்தை உடனடியாக இயற்றும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு இந்தியர்கள் கோருவதிலும் அதற்கு பிரிட்டிஷ் நாடாளுமன்றம் ஒப்புக்கொள்வதிலும் பயனில்லை என்பது எனது கருத்தாகும். பாகிஸ்தான் பிரச்சினையை முதல் பிரச்சினையாகப் பாவித்து ஏதேனும் ஒரு வழியில் அதற்கு முடிவுகண்டாக வேண்டும். இதனால்தான் இந்த உத்தேச சட்டத்தை நான் ''இந்திய அரசாங்கத்தின் (ஆரம்பஷரத்துக்கள்) சட்டம்'' என அழைக்கிறேன். பாகிஸ்தான் பிரச்சினை சுயநிர்ணய உரிமைப் பிரச்சினையாக இருப்பதால் அது மக்களின் விருப்பங்களின் மூலம் தீர்மானிக்கப்பட வேண்டும். ஆகவேதான் முஸ்லீம்கள் பெரும்பான்மையினராக வாழும் மாநிலங்களில் முஸ்லீம்கள் மற்றும் முஸ்லீம் அல்லாதவர்களிடையே ஒரு கருத்துக்கணிப்பை நடத்தவேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். பெரும்பான்மையான முஸ்லீம்கள் பிரிவினைக்கு ஆதரவாகவும் பெரும்பான்மையான முஸ்லீம் அல்லாதவர்கள் பிரிவினைக்கு எதிராகவும் இருப்பார்களேயானால், முஸ்லீம் பெரும் பான்மையினர் வசிக்கும் மாவட்டங்களை முஸ்லீம் அல்லாதவர்கள் பெரும்பான்மையினராக உள்ள மாவட்டங்களிலிருந்து இன மற்றும் கலாசார அடிப்படையில் பிரித்து மாகாண எல்லைகளை மறுவரைவு செய்வதன் மூலம் சாத்தியமான இடங்களில் எல்லைகளை வரையறுக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டும். இதற்காக ஒரு எல்லை வரையறுக்கும் கமிஷனை நியமிப்பது அவசியமாகும். அந்த எல்லை வரையறுப்புக் கமிஷன் சர்வதேச உறுப்பினர்களைக் கொண்டிருத்தல் நலம்.

முஸ்லீம்கள் மற்றும் முஸ்லீம் அல்லாதவர்களின் தனிப்பட்ட வாக்கெடுப்புத் திட்டத்தை ஆதாரமாகக் கொண்டுள்ள இரு கோட்பாடுகளை நான் அடிப்படையானவை என்று கருதுகிறேன். முதலாவதாக, ஒரு சிறுபான்மையினம், பெரும்பான்மையினத்தின் கொடுங்கோன்மையிலிருந்து தனது பாதுகாப்புக்கான காப்பீட்டு

உரிமையைக் கோரமுடியும். அவற்றை ஒரு முன்நிபந்தனையாக அது கோரமுடியும். நிச்சயமான வருங்காலம் குறித்த பிரச்சினைகள் சம்பந்தமாக முடிவெடுக்கும் பெரும்பான்மையினரின் உரிமைமீது தடையாணை விதிக்கும் உரிமை சிறுபான்மையினருக்கு இல்லை. இதனால்தான், பாகிஸ்தானை ஏற்படுத்துவது சம்பந்தமான வாக்கெடுப்பில் முஸ்லீம்கள் மட்டுமே கலந்து கொள்ள வேண்டுமென்று நான் கூறுகிறேன். இரண்டாவதாக, சிறுபான்மை வகுப்பினர் தங்களது கட்டளைகளுக்குப் பணிந்து நடக்கவேண்டும் என்று பெரும்பான்மை வகுப்பினர் உரிமை கொண்டாட முடியாது. ஓர் அரசியல் பெரும்பான்மை உடையவர்கள்தான் ஓர் அரசியல் சிறுபான்மையினரை ஆள அனுமதிக்கப்படவேண்டும். இந்தியாவில் இக்கோட்பாடு திருத்தப்பட்டு, குறிப்பிட்ட காப்பீட்டு உரிமைகளுக்கு உட்பட்டு ஒரு சிறுபான்மைவகுப்பினர் பெரும்பான்மை வகுப்பினரின் கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட்டுள்ளனர். ஆனால் இது சமூக, பொருளாதார, அரசியல் முக்கியத்துவத்துவமுடைய சாதாரணப் பிரச்சினை சம்பந்தப்பட்டதாகும். ஓர் அரசியல் சட்டரீதியான தன்மையுடைய ஒரு பிரச்சினை குறித்து சிறுபான்மை வகுப்பினர் மீது ஆதிக்கம் செலுத்தும் உரிமை பெரும்பான்மை வகுப்பினருக்குக் கிடையாது. இத்தகைய உரிமை இது வரை வழங்கப்பட்டதில்லை. இனி ஒருபோதும் வழங்கப்படவும் மாட்டாது. ஆகவேதான் முஸ்லீம் அல்லாதவர்கள் பாகிஸ்தானுக்குச் செல்ல விரும்புகிறார்களா அல்லது இந்துஸ்தானுக்கு வர விரும்புகிறார்களா என்பதைத் தீர்மானிப்பதற்கு அவர்கள் மட்டுமே கலந்து கொள்ளும் ஒரு தனிப்பட்ட வாக்கெடுப்பு நடத்த நான் வகை செய்திருக்கிறேன்.

எல்லை வரையறுப்புக் கமிஷன் பகுதிகளை வரையறுக்கும் தனது பணியைச் செய்து முடித்தபிறகு பல்வேறு சாத்தியக் கூறுகள் எழலாம். முசல்மான்கள் பாகிஸ்தானின் எல்லைகள் வரையறுக்கப்படுவதுடன் நிறுத்திக் கொள்ளலாம். பாகிஸ்தான் என்ற கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்டதனால் - அதுதான் எல்லைகளை வரையறுத்தல் என்பதற்கான அர்த்தமாகும் – அவர்கள் திருப்தியடையக்கூடும். வெறும் எல்லை வரையறுப்புடன் முசல்மான்கள் திருப்தியடையாது, அவர்கள் பாகிஸ்தானை ஏற்படுத்தும் திசைவழியில் முன்னேறிச் செல்ல விரும்புகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம், அப்போது அவர்களுக்கு இருவழிகள் உள்ளன. உடனடியாகப் பாகிஸ்தானை ஏற்படுத்தவேண்டும் என்று அவர்கள் விரும்புவார்கள் அல்லது ஒரு பொதுவான மத்திய அரசாங்கத்தின் கீழ் உதாரணமாகப் பத்தாண்டுக்காலம் வாழ அவர்கள் ஒப்புக்கொண்டு

இந்துக்களை சோதனைக்குள்ளாக்கக் கூடும். தங்களைச் சிறு பான்மையினர் நம்பலாம் என்று காட்டுவதற்கு இந்துக்களுக்கு ஒரு வாய்ப்பு கிட்டும். இந்துராஜ்யம் குறித்த தங்களது ஐயப்பாடுகள் எந்த அளவுக்கு நியாயமானவை என்பதை முஸ்லீம்கள் அனு பவத்திலிருந்து தெரிந்துகொள்வர். மற்றுமொரு சாத்தியக்கூறும் உள்ளது. உடனடியாகப் பிரிவினை வேண்டும் என்று கோரிய பாகிஸ் தானின் முசல்மான்கள் ஒரு காலகட்டத்திற்குப் பின்னர் பாகிஸ்தான் மீது வெறுப்படைந்து திரும்பிவந்து இந்துஸ்தானத்துடன் இணைந்து ஒரே அரசியல் சட்டத்தின் கீழ் ஒரே மக்களாக இருக்கத் தீர்மானிக்கக் கூடும்.

நான் காணக்கூடிய சில சாத்தியக் கூறுகள் இவையே யாகும். காலமும் சூழ்நிலைகளும் கனிந்து வரும்வரை இந்த சாத்தியக்கூறுகளின் கதவுகள் திறந்து வைக்கப்பட வேண்டும் என்பது எனது கருத்து. நீங்கள் இந்தியாவின் ஓர் அங்கமாக இருக்க விரும்பினால் அப்போது நீங்கள் ஒருபோதும் வெளியேறிச் செல்ல முடியாது அல்லது நீங்கள் வெளியேறிச் செல்லவிரும்பினால், ஒருபோதும் திரும்பி வரமுடியாது என்று முசல்மான்களிடம் கூறுவது தவறாக இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. எனது திட்டத் தில் கதவைத் திறந்தே வைத்திருக்கிறேன். சட்டத்தில் இரண்டு சாத்தியக்கூறுகளுக்கும் வகை செய்திருக்கிறேன். 1. 10 ஆண்டுகள் ஐக்கியமாக இருத்தல், அதற்குப் பின்னர் பிரிந்து செல்லுதல், 2. பத்தாண்டுகள் பிரிந்திருத்தல், அதற்குப் பின்னர் ஒன்றுபடுதல், தனிப்பட்ட முறையில் நான் இரண்டாவது கருத்தையே விரும்பு கின்றேன். ஆயினும் நான் இரு கருத்துக்களையும் ஆதரிக்கிறேன். முசல்மான்களுக்குப் பாகிஸ்தான் என்ற அனுபவம் இருப்பது சிறந்த தாக இருக்கும். பாகிஸ்தான் என்ற அனுபவத்திற்குப் பின்னர் மீண்டும் ஐக்கியமாவது நிலையானதாக நீடித்துநிற்கும். ஒருவேளை பாகிஸ் தான் உடனடியாக நடப்பிற்கு வருமானால் அந்தப் பிரிவினை ஒட்டு மொத்தமான கூர்மையான முழுமையான துண்டிப்பாக இராமல் இருப்பது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது. பாகிஸ்தானுக் கும் இந்துஸ்தானுக்கும் இடையில் நேரடித் தொடர்புகள் பராமரிக் கப்படவேண்டியது அவசியம். அப்போதுதான் உறவுகள் மேலும் முறியாமல் தடுப்பதும் மீண்டும் ஒன்றுபடும் வாய்ப்புகளும் சாத்திய மாகும். சட்டத்தில் அதற்கேற்ப ஓர் இந்தியக் கவுன்சிலுக்கு வகை செய்யப்பட்டுள்ளது. அதை ஒரு சமஷ்டி என்று தவறாகக் கருதிவிட முடியாது. அது ஒரு கூட்டுக்குழுவும் அல்ல. பாகிஸ்தானும் இந்துஸ் தானும் ஒரே அரசியல் சட்டத்தின்கீழ் ஒன்றுபடும்வரை ஓர் இணைக் கும் கருவியாகப் பயன்படுவதே அதன் நோக்கமாகும்.

இதுவே எனது திட்டம். இது ஒரு வகுப்பு-வாரி வாக்கெடுப்பை அடிப்படையாகக் கொண்ட ஒரு நெளிவுசுளிவான திட்டமாகும். இந்து உணர்வு தனக்கெதிரானது என்ற உண்மையை அது கணக்கிலெடுத்துக் கொள்கிறது. பாகிஸ்தானுக்கான முஸ்லீம்களின் கோரிக்கை போகிறபோக்கில் மறைந்துவிடக்கூடிய மன நிலையே என்ற உண்மையை அது அங்கீகரிக்கிறது. இத்திட்டம் பிளவுபடுத்தக்கூடிய திட்டமல்ல. இது ஒரு சட்டரீதியான பிரிவினையே. அது இந்துக்களுக்கு ஒரு கால அவகாசத்தை வழங்குகிறது. அதிகாரத்தைப் பயன்படுத்தி நேர்மையாக ஆட்சிநடத்த முடியும் என்று தங்களை நம்பலாம் என்பதைக் காட்ட அவர்கள் இந்த அவகாசத்தைப் பயன்படுத்திக்கொள்ளமுடியும். முசல்மான்களுக்கும் பாகிஸ்தானைத் தனியாக ஆளும் அவகாசத்தை இது வழங்குகிறது.

என்னுடைய பிரேரணைகளை சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸின் திட்டத்துடன் ஒப்பிடுவது விரும்பத்தக்கதாக இருக்கும். அப்பிரேரணைகள் தனித்தனிப் .பகுதிகளாகத் தொடராக வெளியிடப்பட்டன. 1943 மார்ச் 29 அன்று வெளியிடப்பட்ட நகல் பிரகடனம் பின்வருவனவற்றை மட்டும் உள்ளடக்கியிருந்தது:

ஆகவே மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் பின்வரும் நிபந்தனைகளை விதிக்கிறது:

(அ) போர் நடவடிக்கைகள் நின்ற உடனேயே, கீழ்க்கண்ட முறையில் இந்தியாவுக்கு ஒரு புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கும் கடமை வழங்கப்பெற்ற ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பை பின்வருமாறு விளக்கப்பட்ட விதத்தில் இந்தியாவில் நிறுவ நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்.

(ஆ) அரசியல் சட்டத்தை உருவாக்கும் அமைப்பில் சமஸ்தானங்கள் பின்கண்டவிதத்தில் பங்கெடுத்துக்கொள்ள வகை செய்யப்படும்.

(இ) இவ்வாறு வகுத்தளிக்கப்படும் அரசியல் சட்டத்தை கீழ்க்கண்ட நிபந்தனைகளின்படி உடனடியாக ஏற்கவும் உடனடியாக அதனைச் செயல்படுத்தவும் மாட்சிமை பொருந்திய மன்னர்பிரான் அரசாங்கம் சம்மதிக்கிறது:

ஈ. ஒரு புதிய அரசியலமைப்பை ஏற்கத் தயாராக இல்லாத, பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த எந்த ஒரு மாகாணங்களும் தனது இப்போதைய அரசியல் சட்டரீதியான நிலையைத் தக்கவைத்துக் கொள்ள உரிமை அளிக்கப்படவேண்டும்; அது விரும்பினால் பின்னர் சேருவதற்கு வகை செய்யப்பட வேண்டும்.

இவ்விதம் புதிய அரசியலமைப்பில் சேராத மாகாணங்கள் விரும்பும் பட்சத்தில் இந்திய கூட்டரசுக்குள்ள அதே அந்தஸ்தை அளிக்கக்கூடிய ஒரு புதிய அரசியலமைப்புச் சட்டத்தை அவை உருவாக்கிக் கொள்வதற்கு மன்னர்பிரான் அரசு சம்மதிக்கும்.

அவரது வானொலி உரையில் இணைப்பு மற்றும் பிரிவினை சம்பந்தமான விவரங்கள் வழங்கப்பட்டன. அவை பின்வருமாறு அமைந்திருந்தன.

''இந்தியா முழுமைக்குமாக - அதாவது பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் அதனுடன் சேர்ந்து கொள்ள விரும்பும் இந்திய சமஸ்தானங்களுக்கும் ஒரே அரசியல் சட்டத்தை உருவாக்குவதையே அரசியல் சட்டத்தை உருவாக்கும் அமைப்பு தனது குறிக்கோளாகக் கொண்டிருக்கும்.

''ஆனால் இந்தச் சாதாரண உண்மையை நாம் உணருகிறோம். ஒரே அறையில் நுழையுமாறு பகையுணர்வு கொண்டபலரை நீங்கள் தூண்டவிரும்பினீர்களேயானால், அறைக்குள் நுழைந்தவர்கள் வெளியேற முடியாது, அறைக்குள்ளேயே நிரந்தரமாக ஒன்றாக வைத்துப் பூட்டப்படுவார்கள் என்று அவர்களிடம் கூறுவது அறிவுடைமையாகாது.

''அவர்கள் உள்ளே போகலாம், தங்களால் ஒரு பொதுவான முடிவுக்கு வரமுடியாது என்பதைக் கண்டறிந்தால் அப்போது விருப்பமுள்ளவர்கள் வேறொரு கதவுவழியாக வெளியேறுவதை எவராலும் தடுக்கமுடியாது என்று அவர்களிடம் கூறுவது அறிவார்ந்த செயலாக இருக்கும். தங்களால் ஒப்புக் கொள்ள முடியாத பட்சத்தில் தங்களுடைய விருப்பம்போல் மீண்டும் வெளியே செல்ல முடியும் என்ற விஷயத்தை முன்கூட்டியே அவர்கள் அறிந்திருந்தால் ஏராளமானோர் அறைக்குள் சென்றிருக்கக் கூடும்.

"நல்லது, இதைத்தான் நாம் இந்தியாவின் மாகாணங்களுக்குச் சொல்கிறோம்! ஒரு பொதுவான அரசியல் சட்டத்தை உருவாக்க ஒன்றுதிரண்டுவாருங்கள். அரசியல் சட்டத்தை உருவாக்கும் அரசியல் நிர்ணய சபையில் நீங்கள் விவாதித்துவிட்டுக்கொடுத்து பின்னரும் கூட உங்களால் கருத்து வேறுபாடுகளைக் களைய முடியவில்லை, சில மாகாணங்கள் இன்னமும் அரசியல் சட்டத்தில் திருப்தியடையவில்லை என்று கருதுவீர்களேயானால், அத்தகைய மாகாணங்கள் வெளியேற விரும்பினால் தனித்து இருக்கலாம். அவர்களுக்கு இதர மாகாணங்களைப் போன்று அதே அளவுக்கு சுயாட்சி மற்றும் சுதந்திரம் கிடைக்கும். கூட்டாட்சியைப் பொறுத்தவரை அவை முழுமையான சுயாட்சி உரிமை பெற்றிருக்கும்."

இச்சித்திரத்தை முழுமையாக்குவதற்காக கூடுதல் விபரங்கள், பத்திரிகையாளர் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்டன. மாகாணங்களின் இணைப்பு அல்லது பிரிவினைக்கான திட்டத்தை விளக்கிய சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் கூறியதாவது:

"சட்டப்படியான சட்டமன்ற நடவடிக்கைகளின் முடிவில் எந்தஒரு மாகாணம் அல்லது மாகாணங்கள் புதிய அரசியல் சட்டத்தை ஏற்றுக்கொள்ளவும் கூட்டாட்சியில் சேரவும் விரும்பவில்லை என்றால் அந்தமாகாணம் வெளியேறிச் செல்வதற்கு சுதந்திரம் உண்டு - அதற்கு அந்த மாகாணத்தின் சட்டமன்றம் கணிசமான வாக்குகளின் மூலம் அதாவது 60 சதவிகிதம் - இணைப்புக்கு எதிராக தீர்மானம் செய்திருக்க வேண்டும். அது 60 சதவிகிதத்திற்கும் குறைவாக இருக்குமேயானால் மக்களின் விருப்பங்களை அறுதியாகத் தெரிந்து கொள்வதற்காக மாகாணம் முழுவதிலும் வாக்கெடுப்பு நடத்த உத்தரவிடவேண்டுமென்று சிறுபான்மையினர் கோரமுடியும். வாக்கெடுப்பு விஷயத்தில் சாதாரணப் பெரும்பான்மையே போதுமானது. இணைப்பை நிறைவு செய்வதற்கு சம்பந்தப்பட்ட மாகாண சட்டமன்றத்திலிருந்து ஆக்கப்பூர்வமான வாக்குகள் கிடைக்கவேண்டும். இணைப்பை விரும்பாத மாநிலங்கள் விரும்பினால் ஒரு தனி சட்டப்படியான அரசியல் நிர்ணயசபை மூலம் ஒரு தனி கூட்டாட்சியாக இணையலாம். ஆனால் இத்தகைய கூட்டாட்சி நடைமுறை சாத்தியமானதாக்குவதற்கு அவை பூகோள ரீதியில் அடுத்தடுத்து அமைந்திருக்க வேண்டும்."

என்னுடைய திட்டத்திற்கும் சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸின் திட்டத்திற்கும் இடையிலான முக்கிய வேறுபாடு மிகத் தெளிவானது. இணைப்பு அல்லது பிரிவினை என்ற பிரச்சினையைத்

தீர்மானிப்பது என்பது பாகிஸ்தான் என்ற ஒன்று இருக்குமா, இருக்காதா என்பதை வேறுவிதமாகக் கூறுவதேயாகும். சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் தீர்மானிக்கும் அலகாக ஒரு மாகாணத்தையே எடுத்துக் கொண்டார். தீர்மானிக்கும் அலகாக நான் சமுதாயத்தையே எடுத்துக் கொண்டிருக்கிறேன். சர் ஸ்டாஃபோர்டு ஒரு தவறான அடிப்படையை ஏற்றுக்கொண்டிருக்கிறார் என்பதில் எனக்கு ஐயமேதுமில்லை. பிரச்சினைக்குரிய விஷயங்கள் மாகாணங்களுக்கிடையிலானவை எனில் மாகாணத்தை ஓர் அலகாக கொள்வது சரியாக இருக்கும். உதாரணமாக பிரச்சினைக்குரிய விஷயங்கள் வரிவிதிப்பு, நீர் போன்றவற்றின் விநியோகம் சம்பந்தப்பட்டதாக இருக்குமானால் ஒட்டுமொத்தமாக அந்தமாகாணம் அல்லது மாகாணத்தின் ஒரு குறிப்பிட்ட பெரும்பான்மையினர் அதைத் தீர்மானிக்கும் உரிமை பெற்றுள்ளனர் என்பதை எவரும் புரிந்து கொள்ள முடியும். ஆனால் பாகிஸ்தான் சம்பந்தப்பட்ட சர்ச்சை இரு வகுப்பினருக்கு இடையிலான பிரச்சினையாகும். இதில் ஒரே மாகாணத்தைச் சேர்ந்த இரு வகுப்பினர் சம்பந்தப்பட்டுள்ளனர். மேலும் இந்த சர்ச்சையிலுள்ள பிரச்சினை, ஒரு பொதுவான அரசியல் வாழ்வில் இந்த இரு வகுப்பினரும் எந்த நிபந்தனைகளின்பேரில் ஒன்றுபட ஒப்புக் கொள்வார்கள் என்பதல்ல. இந்த சர்ச்சை மிக ஆழமாகச் செல்கிறது. ஒரு பொதுவான அரசியல் வாழ்வில் இந்த இரு வகுப்பினரும் ஒன்றுபடத் தயாராக உள்ளனரா என்ற பிரச்சினையை எழுப்புகிறது. இது அடிப்படையில் ஒரு வகுப்புவாத வேறுபாடேயாகும். இதற்கு வகுப்புவாரியான வாக்கெடுப்பின் மூலமே தீர்வு காண முடியும்.

## IV

நான் பிரேரணை செய்த தீர்வுக்குக் காரணகர்த்தா நானே என்று உரிமை கொண்டாடவில்லை. எனது தீர்வில் இழையோடும் கருத்துகள் மூன்று ஆதாரங்களிலிருந்து பெறப்பட்டவையாகும். ஹொரேஸ் புளுங்கெட் தலைமை வகித்த ஐரிஷ் ஒற்றுமை மாநாட்டிலிருந்தும், திரு. அஸ்குயித்தின் சுயாட்சி சட்டத் திருத்த மசோதாவிலிருந்தும், 1920 ஆம் ஆண்டின் அயர்லாந்து அரசாங்கச் சட்டத்திலிருந்தும் பெறப்பட்டவையே இக்கருத்துக்கள். பாகிஸ்தான் பிரச்சினைக்கான எனது தீர்வு ஒன்றுகுவிக்கப்பட்ட அறிவாற்றலின் விளைவேயாகும் என்பதை எளிதில் காணமுடியும். அது ஏற்றுக் கொள்ளப்படுமா? பாகிஸ்தான் பிரச்சினையைச் சுற்றி மூண்டுள்ள மோதலைத் தீர்ப்பதற்கு நான்கு வழிகள் உள்ளன. முதலாவது, பிரிட்டிஷ் அரசாங்கமே இதைத் தீர்மானிக்கும் அதிகாரம் பெற்ற அமைப்பாகச் செயல்படவேண்டும். இரண்டாவது, இந்துக்களும் முஸ்லீம்களும் இதற்கு ஒப்புக்கொள்ள வேண்டும். மூன்றாவது

இப்பிரச்சினை ஒரு சர்வதேச நடுவர் மன்றத்திடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும். நான்காவது, ஓர் உள்நாட்டுப்போரின் மூலம் தீர்த்துக் கொள்வது.

இன்றைக்கு இந்தியா ஓர் அரசியல் மனநல மருத்துவமனையாகக் காட்சியளித்த போதிலும் கூட, உள்நாட்டுப் போர் நடக்குமளவுக்கு விஷயங்களை முற்றவிடாதிருக்கும் நற்சிந்தனையுள்ள மக்கள் நாட்டில் போதிய எண்ணிக்கையில் உள்ளனர். அண்மை வருங்காலத்தில் அரசியல் தலைவர்களிடையே ஓர் உடன்பாடு ஏற்படுவதற்கான வாய்ப்பு இல்லை. 1942 ஏப்ரலில் அலகாபாத்தில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரசின் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், திரு. ஜகத் நாராயண்லால் கொண்டு வந்த தீர்மானத்தின் மீது, பாகிஸ்தான் கோரிக்கை ஏற்கப்படக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது.[1] இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கு மேலும் இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று, சம்பந்தப்பட்ட மக்களே தீர்த்துக் கொள்வது; மற்றொன்று, சர்வதேச நடுவர் மன்றத்தின்மூலம் தீர்ப்பது. இதைத்தான் நான் யோசனை கூறினேன். நான் முந்தைய வழியையே விரும்புகிறேன். பல்வேறு காரணங்களுக்காக இது ஒன்று மட்டுமே சரியான வழியாக எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சச்சரவைத் தீர்க்கத் தலைவர்கள் தவறிவிட்டதனால் இதைத் தீர்மானிப்பதற்காக இப்பிரச்சினையை மக்களிடம் எடுத்துச் செல்ல வேண்டிய தருணம் வந்துவிட்டது. ஒரு பிரதேசத்தைப் பிரித்தல், மக்களின் பற்றை ஒரு அரசாங்கத்திலிருந்து மற்றொன்றுக்கு மாற்றுதல் போன்ற ஒரு பிரச்சினையை எவ்வாறு அரசியல் தலைவர்கள் தீர்மானிக்க முடியும் என்பது உண்மையில் எண்ணிப்பார்க்க முடியாததாகும். இத்தகைய விஷயங்களை நாடு பிடிப்பார்கள் செய்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களுக்குப் போரில் வெற்றி பெறுவதே வெற்றி கொள்ளப்பட்ட மக்களை தம் விருப்பம் போல் ஆட்டிப்படைக்கப்போதுமான அதிகாரமாக இருந்தது. ஆனால் நாம் அத்தகைய காட்டுமிராண்டித்தனமான சூழ்நிலையில் இயங்கிக் கொண்டிருக்கவில்லை. சாதாரண சமயங்களில் அரசியல் சட்ட நடைமுறைகள் செயல்படுத்தப்படாதிருக்கும்போது, எதேச்சாதிகாரிகளின் ஆணைகளைப்போல் அரசியல் தலைவர்களின் கண்ணோட்டம் தாக்கத்தை ஏற்படுத்த முடியாது. அது ஜனநாயக ஆட்சிமுறைக்கே

1. அத்தீர்மானத்தின் வாசகம் வருமாறு:

''இந்திய யூனியன் அல்லது சமஷ்டியிலிருந்து பிரிந்து செல்வதற்கு எந்த ஒரு அங்க மாநிலத்திற்கோ அல்லது பிரதேச யூனிட்டுக்கோ உரிமை வழங்குவதன் மூலம் இந்தியாவைப் பிளவுபடுத்தும் எந்த ஒரு பிரேரணையும் சமஸ்தானங்கள், மாகாணங்கள மற்றும் ஒட்டுமொத்த நாட்டின் மக்களுடைய நலன்களுக்குப் பாதகம் விளைவிக்கும். ஆகவே காங்கிரஸ் இத்தகைய எந்த ஒரு பிரேரணையையும் ஏற்றுக்கொள்ளமுடியாது என்பதை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் கருத்தாகும்.''

முரணானதாக இருக்கும். தலைவர்களின் கண்ணோட்டங்களுக்கு வழங்கப்படும் மிகஉயர்ந்த மதிப்பு, நிகழ்ச்சி நிரலில் சேர்க்கத் தகுந்தவை என்று அவற்றைக் கருதுவதேயாகும். அக்கருத்துக்கள், விஷயங்கள் மக்களால் தீர்மானிக்கப்படவேண்டியதன் தேவையை மாற்றியமைக்கவோ அல்லது விலக்கவோ முடியாது. இந்த நிலைப் பாட்டைத்தான் சர் ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் மேற்கொண்டார். முஸ்லீம் லீக் மேற்கொண்ட நிலைபாடு என்னவெனில் பாகிஸ்தான் உருவாக்கப்படும், ஏனெனில் அதைப்பெற முஸ்லீம் லீக் தீர்மானித் துள்ளது. அந்த நிலைபாட்டை மிகச் சரியாகவே கிரிப்ஸ் பிரேரணை கள் எதிர்த்துள்ளன. கிரிப்ஸ் பிரேரணைகள் முஸ்லீம் லீகை, பாகிஸ் தானை ஒரு கருத்தாகப் பரிசீலனை செய்யுமாறு பிரேரணை செய்யும் ஓர் உரிமை கொண்ட அமைப்பு என்ற அளவுக்கு மட்டுமே அங்கீ கரித்துள்ளது. தீர்மானிக்கும் உரிமை அதற்கு வழங்கப்படவில்லை. பெரும்பான்மையான மக்களின் செயலூக்கமான சம்மதத்தைப் பெற்றிராத காங்கிரஸ் போன்ற ஓர் அகில இந்திய அமைப்பின் முடிவானது பாகிஸ்தான் பிரச்சினையினால் உடனடியாக பாதிப்புக் குள்ளாகி, அந்த விஷயத்தைத் தீர்வுக்கு இட்டுச் செல்லாது என்பதை அது உணர்ந்ததுபோல் தெரியவில்லை. பஞ்சாப் மற்றும் வங்கா ளத்தின் இந்துக்கள் எதிர்ப்பார்களேயானால், பாகிஸ்தானை விட்டுக் கொடுக்க திரு. காந்தியோ அல்லது திரு.ராஜகோபாலாச்சாரி யாரோ ஒப்புக்கொண்டாலும் அல்லது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பாகிஸ்தானை விட்டுக் கொடுக்கத் தீர்மானம் இயற்றி னாலும் அதனால் என்ன நன்மை ஏற்படும். உண்மையாகச் சொன் னால் ''பாகிஸ்தான் இருந்துவிட்டுப் போகட்டுமே'' என்று சொல்ல வேண்டிய வேலை பம்பாய் அல்லது சென்னையைச் சேர்ந்தவர் களுக்கு இல்லை. பல ஆண்டுகளாகத் தங்களது வாழ்வும் வருங் காலமும் எந்த அரசியல் மற்றும் பொருளாதார அமைப்புடன் பின்னிப் பிணைந்துள்ளதோ அதில் ஏற்பட்ட மிகவும் உக்கிரமான, மிகவும் புரட்சிக்கரமான, மிகவும் அடிப்படையான ஒருமாற்றத் தின் விளைவுகளைத் தாங்கிக் கொள்ளக்கூடிய, அப்பகுதிகளில் வாழும் மக்களே அதைத் தீர்மானிக்க விட்டுவிட வேண்டும். பாகிஸ்தான் மாகாணங்களில் வாழும் மக்களிடையே நடத்தப்படும் ஒரு கருத்துக்கணிப்புதான் பாகிஸ்தான் பிரச்சினையைத் தீர்க்கும் மிகவும் பாதுகாப்பான, அரசியல் சட்டரீதியான வழிமுறையாக எனக்குத் தோன்றுகிறது.

மக்களிடையே வாக்கெடுப்பின் மூலம் பாகிஸ்தான் பிரச் சினையைத் தீர்ப்பதென்பது எவ்வளவுதான் கவர்ச்சிகரமானதாக இருந்தாலும் சம்பந்தப்பட்டவர்களின் ஆதரவு அதற்கு இருக்காது

என்று அஞ்சுகின்றேன். முஸ்லீம் லீகும் கூட இக்கருத்தில் ஆர்வம் செலுத்தாது. அதற்குக் காரணம் இது ஒரு மோசமான யோசனை என்பது அல்ல. அதற்கு முற்றிலும் மாறானது. உண்மை என்ன வெனில் தனது சொந்தக் கவர்ச்சிகளைக் கொண்ட மற்றுமொரு தீர்வும் உண்டு. தனது அரசுரிமை அதிகாரத்தைப் பயன்படுத்தி பாகிஸ்தானை ஏற்படுத்துமாறு அது பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கோருகிறது. மக்களின் சம்மதத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கும் கருத்தை விட இந்தத் தீர்வு ஏன் விரும்பப்படுகிறது என்பதற்கான காரணம் என்னவெனில் இது எளிமையானது, மக்களிடையே வாக்கெடுப்பு நடத்துவதில் உள்ள விரிவான நடைமுறைகள் எதுவும் இதில் கிடையாது. ஒரு வாக்கெடுப்பில் ஏற்படும் நிச்சயமற்ற தன்மைகள் எதுவும் இதில் இராது. ஏன் இந்தக் கருத்து விரும்பப்படுகிறது என்பதற்கு மற்றுமொரு ஆதாரமும் உள்ளது. இதற்கு முன்னுதாரணம் உள்ளது என்பதுதான் அது. அதுவே ஐரிஷ் முன்னுதாரணம். இதில் வாதம் என்னவெனில் தனது அரசுரிமை அதிகாரத்தைப் பயன்படுத்தி பிரிட்டிஷ் அரசாங்கம் அயர்லாந்தைப் பிரித்து அல்ஸ்டரை உருவாக்கமுடியும் என்றால் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவைப் பிரித்து ஏன் பாகிஸ்தானை உருவாக்க முடியாது?

உலகிலேயே அதிக அரசுரிமை பெற்ற சட்டமியற்றும் அமைப்பு பிரிட்டிஷ் நாடாளுமன்றமேயாகும். ஒரு பெண்ணை ஆணாக மாற்றுவதையும் ஓர் ஆணைப் பெண்ணாக மாற்றுவதையும் தவிர பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தினால் செய்ய முடியாதது எதுவுமில்லை என்று ஆங்கிலேய அரசியல் சட்டத்தைப் பற்றி டி எல் ஹோம் என்ற பிரெஞ்சு எழுத்தாளர் எழுதியுள்ளார். குடியேற்ற நாடுகளின் விவகாரங்கள் சம்பந்தமாக பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் அரசுரிமை வெஸ்ட்மினிஸ்டர் சட்டத்தினால் வரையறுக்கப்பட்டிருந்தபோதிலும் கூட இந்தியாவைப் பொறுத்த வரை அதன் அரசுரிமை எல்லையற்றதாகவே இன்னமும் இருந்து வருகிறது. அயர்லாந்து விஷயத்தில் செய்தது போன்று இந்தியாவைப் பிரிக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்வதிலிருந்து பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தைத் தடுப்பதற்கு சட்டத்தில் எதுவும் இல்லை. பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தினால் செய்யமுடியும். ஆனால் அது இதைச் செய்யுமா? இது அதிகாரம் சம்பந்தப்பட்ட பிரச்சினையல்ல; நெஞ்சுரம் சம்பந்தப்பட்ட பிரச்சினை.

அயர்லாந்தின் முன்னுதாரணத்தைப் பின்பற்றவேண்டும் என்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தை வலியுறுத்துபவர்கள் அயர்லாந்தைப் பிரிவினை செய்வதற்கு இட்டுச் சென்றது எது என்றும் வினவ

வேண்டும். அவர்கள் மேற்கொண்ட நடவடிக்கையை அனுமதிப் பதற்கு அவர்களை இட்டுச் சென்றது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனச்சாட்சியா அல்லது அவர்கள் அதற்கு ஒப்புக்கொள்ளவேண்டிய சூழ்நிலைகள் அவர்கள் மீது திணிக்கப்பட்டதா? அயர்லாந்தின் பிரிவினை மனசாட்சியினால் அனுமதிக்கப்பட்டதல்ல. மாறாக அது சூழ்நிலைகளின் சக்தியால் அனுமதிக்கப்பட்டது என்பதை ஐரிஷ் சுயாட்சி வரலாற்றைப் படிக்கும் மாணவர் எவரும் ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கும். ஐரிஷ் சச்சரவில் சம்பந்தப்பட்ட எந்தத் தரப்பும் அயர்லாந்தின் பிரிவினையை விரும்பவில்லை என்பது அடிக்கடி தெளிவாக உணரப்படுவதில்லை. அல்ஸ்டரின் தலைவ ரான கார்சனும் கூட இதை உணருவதில்லை. கார்சன் சுயாட்சியை எதிர்த்தாரேயன்றி அவர் பிரிவினையை ஆதரிக்கவில்லை. அவரது முக்கிய நிலைபாடே சுயாட்சியை எதிர்ப்பதும் அயர்லாந்தின் ஒருமைப்பாட்டைப் பராமரிப்பதும்தான். சுயாட்சியைத் திணிப் பதற்கு எதிரான இரண்டாவது பாதுகாப்பு அரணாகத்தான் அவர் பிரிவினையை வலியுறுத்தினார். காமன்ஸ் சபையிலும் வெளியிலும் அவர் ஆற்றிய உரைகளிலிருந்து இது மிகத் தெளிவாகத் தெரியும். மறுபுறத்தில் ஆஸ்குயித்தின் அரசாங்கமும் கூட சமஅளவில் பிரி வினையை எதிர்த்தது. 1912 ஆம் ஆண்டின் ஐரிஷ் சுயாட்சி மசோதா சம்பந்தமான காமன்ஸ் சபையின் நடவடிக்கைக் குறிப்புகளிலிருந்து இதைக் காணமுடியும். ஒருமுறை கமிட்டி மட்டத்தில் திரு.அகர்-ராபர்ட்சினாலும் மீண்டும் மூன்றாவது வாசிப்பின் போது கார்சனினாலும் இந்த மசோதாவின் ஷரத்துகளிலிருந்து அல்ஸ்டரை ஒதுக்கிவைப்பதற்காக இருமுறை திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. இருமுறையும் அரசாங்கம் எதிர்த்ததால் திருத்தங்கள் தோல்வி யடைந்தன.

1920 இல் திரு.லாயிட் ஜார்ஜ் கொண்டு வந்த அயர்லாந்து அரசாங்கச் சட்டத்தினால் இறுதியாக அயர்லாந்தின் பிரிவினை செயல்படுத்தப்பட்டது. அயர்லாந்தின் பிரிவினை குறித்து இப்போது தான் முதல் முறையாக சிந்திக்கப்பட்டது என்றும், அதுவும் திரு.லாயிட் ஜார்ஜ் பெயரளவில் தலைமைப் பொறுப்பேற்றிருந்த கூட்டணி மந்திரி சபையில் கன்சர்வேடிவ் -யூனியனிஸ்டுகளின் மேலா திக்கம் காரணமாகத்தான் அது நிகழ்ந்தது என்றும் பலர் கருது கின்றனர். தமது கூட்டணியில் உள்ள பெரிய கட்சியின் செல் வாக்கிற்கு திரு.லாயிட்ஜார்ஜ் இரையானார் என்பது உண்மையாக இருக்கக்கூடும். ஆனால் 1920 இல்தான் முதல்முறையாக பிரிவினை பற்றி சிந்திக்கப்பட்டது என்பது உண்மையல்ல. அதேபோன்று லிபரல்

கட்சியும் மாற்றத்திற்கு உள்ளாகவில்லை என்பதும் உத்தேசத் தீர்வாகப் பிரிவினையை ஆதரிப்பதற்குத் தயாராக இல்லை என்பதும் உண்மையல்ல. உண்மையைச் சொன்னால், லிபரல் கட்சியின் பெரும் பான்மை ஆட்சியான அஸ்குயித்தின் அரசாங்கம் பதவியில் இருந்த போதுதான், அதாவது திரு.லாயிட் ஜார்ஜின் சட்டத்திற்கு ஆறு ஆண்டுகளுக்கு முன்னரே, 1914 இல் இப்பிரச்சினைக்கு தீர்வு பிரிவினையே என்ற கருத்து தோன்றியது. திரு.அஸ்குயித்தின் லிபரல் அரசாங்கம் மனமாற்றமடைந்ததற்கான காரணங்களை ஆய்வு செய்தால் மட்டுமே அயர்லாந்தின் பிரிவினைக்கு இட்டுச் சென்ற உண்மையான காரணத்தைப் புரிந்து கொள்ள முடியும். ''கர்ரா சம்பவம்'' என்று பொதுவாகக் குறிப்பிடப்படும் 1914 மார்ச்சில் ஏற்பட்ட ராணுவ நெருக்கடிதான் லிபரல் அரசாங்கத்தின் கண் ணோட்டத்தில் மாற்றத்தை ஏற்படுத்திய அம்சம் என்று நான் நிச்சய மாகக் கூறுவேன். ''கர்ரா சம்பவம்'' என்றால் என்ன, அஸ்குயித் அரசாங்கத்தின் கொள்கையில் இந்த மாற்றம் ஏற்படுவதற்கு அது எந்தஅளவுக்குத் தீர்மானகரமானதாக இருந்தது என்பதை விளக்கு வதற்கு ஒரு சில உண்மைகளைக் கூறினாலே போதும்.

முதலாவதாக, 1913 ஆம் ஆண்டின் இறுதிவாக்கில் ஐரிஷ் சுயாட்சி மசோதா தனது எல்லாக் கட்டங்களையும் கடந்து சென்றது. வாக்காளர்களிடையே பெரும்பான்மை வாக்குகளைப் பெறாமல் திரு. அஸ்குயித் செயல்படுவதாக அவர்மீது குற்றம் சாட்டப் பட்டதால், இன்னுமொரு பொதுத் தேர்தல் நடைபெறும் வரை இச்சட்டம் செயல்படுத்தப்பட மாட்டாது என்று அவர் உறுதி யளித்தார். போர் நடைபெறாதிருக்குமேயானால் 1915 இல் வழக்க மான விதத்தில் ஒரு பொதுத் தேர்தல் நடத்தப்பட்டிருக்கும். ஆனால் அல்ஸ்டர் மக்கள் ஒரு பொதுத் தேர்தலின் முடிவுக்காகக் காத்திருக்கத் தயாராக இல்லை. சுயாட்சியை எதிர்ப்பதற்காக செயலூக்கமான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அவர்கள் தங்களது வழிமுறைகளைத் தேர்வுசெய்வதில் எப்போதும் நெறிதவறாதவர் களாக இருக்கவில்லை. மன்னரின் உண்மையான பிரஜைகளாக இருப்பதிலிருந்து தங்களைத் தடுத்து வந்த அரசாங்கத்திற்கு எதிராக ஒரு மயக்கநிலையில் போராடிவந்தனர்; வெட்கமற்றது, கயமைத் தனமானது என்று கூறுவதற்கு எவரும் தயங்காத வழிமுறை களில் ஈடுபட்டனர். சுயாட்சியைத் தோற்கடிப்பதற்காக அல்ஸ்டர் வாசிகள் எப்போதும் நம்பியிருந்த மாகினாட் அரண் ஒன்று இருந்தது. அதுதான் பிரபுக்கள் சபை, ஆனால் 1911 ஆம் ஆண்டின் நாடாளு மன்றச் சட்டத்தின் மூலம் பிரபுக்கள் சபையானது வலிமையும் உயரமுமற்ற ஒரு புலம்பி அழும் சுவராக மாறியிருந்தது. அது

நம்பிக்கைக்குரிய ஒரு பாதுகாப்பு அரணாக இருக்கவில்லை. பிரபுக்கள் சபை நிராகரித்தாலும்கூட இந்த மசோதா நிறைவேறிவிடும் என்பதை அறிந்தும், அடுத்ததேர்தலில் அஸ்குயித் வெற்றிபெறக் கூடும் என்பதை உணர்ந்தும் அல்ஸ்டர்வாசிகள் எப்படியேனும் தங்களது நோக்கம் நிறைவேறவேண்டும் என்ற வெறியில் மற்று மொரு பாதுகாப்பு அரணைத் தேடிக்கொண்டிருந்தனர். அத்தகைய அரணை அவர்கள் ராணுவத்தில் கண்டனர். அது இரட்டைத் திட்டமாக இருந்தது. அல்ஸ்டருக்கு எதிராகப் பயன்படுத்துவதற்கு ராணுவமே இருக்கக்கூடாது என்பதை உறுதிப்படுத்தும் விதத்தில் வருடாந்திர ராணுவச் சட்டத்தை நிறுத்திவைக்க பிரபுக்கள் சபை யைப் பயன்படுத்தும் திட்டம் அதில் அடங்கியிருந்தது. இரண் டாவது திட்டம், அயர்லாந்தில் சுயாட்சியைத் திணிப்பதற்காக ராணுவத்தைப் பயன்படுத்த அரசாங்கம் முடிவு செய்யுமேயானால் அரசாங்கத்தின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாதிருக்க ராணுவத் தைத் தயாரிக்கும் கண்ணோட்டத்துடன் ராணுவத்தில் தங்களது பிரசாரத்தைப் பரப்புவதேயாகும். முதலாவது திட்டம் தேவையற்ற தாக மாறிற்று. ஏனெனில் அவர்கள் இரண்டாவது திட்டத்தை செயல்படுத்துவதில் எளிதில் வெற்றி பெற்றனர். 1914 மார்ச்சில் கர்ரா சம்பவம் நிகழ்ந்தபோது இது தெளிவாயிற்று. அயர்லாந்தி லுள்ள சில ராணுவக் கொத்தளங்களை யூனியனிஸ்டு தொண்டர்கள் தாக்கக்கூடும் என்று ஐயுறுவதற்கான காரணங்களை அரசாங்கம் கொண்டிருந்தது. இந்த ராணுவக் கொத்தளங்களைப் பாதுகாக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு அயர்லாந்திலுள்ள படை களின் தலைமைத் தளபதியான சர் ஆர்தர் பேஜட்டுக்கு மார்ச் 20 அன்று அரசாங்கம் உத்தரவுகளைப் பிறப்பித்தது. இந்த உத்தரவு களுக்குப் பதிலாக அவர் ஒரு தந்தி அனுப்பினார். அதிகாரிகள் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியத் தயாராக இல்லை என்றும், அவர்கள் தங்களது பதவிகளிலிருந்து விலகிவருகிறார்கள் என்றும், படைவீரர்கள் எங்கும் நகரமறுக்கும் வாய்ப்பு உள்ளதாக அஞ்சப் படுகிறது என்றும் அதில் கூறியிருந்தார். அல்ஸ்டர் யூனியனிஸ்டு களுக்கு எதிராக பணிபுரிய ஜெனரல் சர் ஹியூபர்ட் கஃப் மறுத்து விட்டார். அவருடைய உதாரணத்தையே பிறரும் பின்பற்று கின்றனர். ராணுவம் அரசியல் தன்மை கொண்டதாகிவிட்டது [1]

---

1. இது சம்பந்தமாக மேஜர் ஜெனரல் சர் சி.இ. கால்வெல் எழுதிய ஃபீல்டுமார்ஷல் சர் ஹென்றி வில்சனின் வாழ்க்கை தொகுதி 1. இயல் IXஐக் காணவும். அல்ஸ்டர் மற்றும் ராணுவம் சம்பந்தமாக நாடாளுமன்ற விவாதங்கள் (பிரபுக்கள்சபை) 1914, தொகுதி 15. பக்கம் 998-1017 ஐயும் காணவும். கர்ரா சம்பவத்திற்கு வெகுகாலம் முன்னரே அல்ஸ்டரைட்டுகள் ராணுவத்தினரை தம்வசப்படுத்திக் கொண்டனர் என்பதை இது காட்டுகிறது. ராணுவம் அல்ஸ்டரின் பக்கம் சாய்ந்து விட்டது. சுயாட்சியை செயல்படுத்துவதற்கு அதைப் பயன் படுத்தமுடியாது என்பதை உணர்ந்த காரணத்தினால் ஆறு ஆண்டுகளுக்கு சுயாட்சியிலிருந்து அல்ஸ்டருக்கு விலக்களிக்கும் ஒரு திருத்த மசோதாவைக் கொணர திரு. அஸ்குயித் முடிவு செய்திருக்கும் சாத்தியக்கூறு உள்ளது.

இல்லை ஒரு சார்புடையதாகி விட்டது என்பதை அரசாங்கம் உணர்ந்தது, அரசாங்கம் பயந்துபோய், வீரத்தை விட அறிவுடைமையே சிறந்தது என்ற பழமொழிக் கேற்ப பிரிவினைக்கு ஆதரவாக முடிவு மேற்கொண்டது. தமது நிலைபாட்டை மாற்றிக் கொள்ள அஸ்குயித் முடிவு செய்ததற்குக் காரணம் அவரது மனசாட்சியல்ல. மாறாக ராணுவம் கலகம் செய்துவிடுமோ என்ற அச்சமேயாகும். அதற்குப் பின்னர் பிரிவினை இன்றி சுயாட்சியைச் செயல்படுத்தவும் ராணுவத்தை எதிர்க்கவும் எவருக்கும் துணிவில்லாத அளவுக்கு அச்சம் விசுவரூப மெடுத்திருந்தது.

அயர்லாந்தில் செய்தது போன்றே இந்தியாவிலும் அதை மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் செய்யும் என்று நம்பமுடியுமா? இக்கேள்விக்குப் பதிலளிக்கமுடியாத நிலையில் நானிருக்கிறேன். ஆனால் இரண்டு விஷயங்களை என்னால் கூற முடியும். அயர்லாந்தின் இப்பிரிவினையால் ஏற்பட்ட விளைவு களைப் பற்றி மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் முழுமை யாக உணர்ந்திருந்தது என்பது முதலாவது விஷயமாகும். சுதந்திர ஐரிஷ் அரசு கிரேட் பிரிட்டனுடன் இணங்கிச் செல்ல முடியாத அளவுக்கு எதிரியாக மாறியது. அந்தப் பகைமைக்கு எல்லையே இல்லாமல் இருந்தது. பிரிவினை என்பது ஒருமுடிந்துவிட்ட உண்மை யாக இருக்கும்வரை பிரிவினை ஏற்படுத்திய காயம் ஒருபோதும் ஆறாது. அயர்லாந்தின் பிரிவினையை தார்மிக ரீதியில் பாதுகாக்கப் பட முடியாதது என்று கூறாதிருக்க முடியாது. ஏனெனில் அது மக்களின் சம்மதத்தினால் ஏற்பட்டதல்ல. வலிமையான சக்தியின் தூண்டுதலால் நிகழ்ந்ததாகும். அது மேக்பெத், டங்கனைக் கொலை செய்தது போன்று மிக மோசமானது. மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்தின் மீது படிந்த ரத்தக்கறைகள் லேடி மேக்பெத் தின் மீது படிந்த கறைகளைப் போன்று மிக ஆழமானவை. லேடி மேக்பெத் அது குறித்துக் கூறியது போன்று ''அரபியாவின் நறுமணப் பொருள்கள் அனைத்தும் சேர்ந்தும் கூட'' அந்த நாற்றத்தைப் போக்கத் தவறிவிட்டன. மாட்சிமை பொருந்திய மன்னரின் அர சாங்கம் மற்றுமொரு பிரிவினைப் பத்திரத்தில் கையொப்பமிடும் பொறுப்பேற்க விரும்பவில்லை என்பது பாலஸ்தீனத்தில் யூதர்- அரபு பிரச்சினை சம்பந்தமான அதன் கொள்கையிலிருந்து மிகத் தெளிவாகத் தெரிகிறது. இதை விசாரிப்பதற்காக அது பீல் கமிஷனை நியமித்தது. அக் கமிஷன் பாலஸ்தீனத்தைப் பிரிவினை செய்யப் பரிந்துரை செய்தது. முட்டுச்சந்து நிலையைத் தீர்க்கும் மிகவும்

நம்பிக்கையூட்டும் வழி என்ற முறையில் கோட்பாட்டளவில் அரசாங்கம் அதை ஏற்றுக் கொண்டது.[1] அரபுகளின் மீது இத்தகைய தொரு தீர்வை திணிப்பதனால் ஏற்படும் பிரச்சினையின் தீவிரத் தன்மையைத் திடீரென்று உணர்ந்த அரசாங்கம் உட்ஹெட் கமிஷன் என்ற மற்றுமொரு ராயல் கமிஷனை நியமித்தது. அது பிரிவினையைக் கண்டனம் செய்ததுடன், ஒரு பயங்கரமான நிலையிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதில் தீவிர அக்கறை கொண்டிருந்த அரசாங் கத்திற்கு ஓர் எளிய வழியைத் திறந்துவிட்டது. அயர்லாந்தின் பிரி வினை பின்பற்றத் தகுந்த ஒரு முன்னுதாரணமல்ல, அது தவிர்க்கப் படவேண்டிய ஓர் அருவருப்பான சம்பவமாகும். அது ஓர் எச்ச ரிக்கையேயன்றி உதாரணமல்ல. முஸ்லீம்லீகின் தூண்டுதலால் தனது சொந்த அதிகாரத்தைக் கொண்டு மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் இந்தியாவைப் பிரிவினை செய்யுமா என்பதில் எனக்கு சந்தேகம் உண்டு.

முஸ்லீம் லீகின் கோரிக்கைக்கு மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் ஏன் செவிமடுக்கவேண்டும்? அல்ஸ்டர் விஷயத்தில் ரத்த சம்பந்தம் இருந்த காரணத்தினால் பிரிட்டிஷ் அரசியல்வாதிகளில் ஒரு சக்தி வாய்ந்த பிரிவினர் அல்ஸ்டரை ஆத ரித்தனர். இந்த ரத்த சம்பந்தத்தை கார்சன் பிரபு "தனது இப்போதைய கணவனை அல்ஸ்டர் விவாகரத்து செய்யவேண்டுமென்று கட்டாயப் படுத்துகிறீர்கள். ஆனால் அல்ஸ்டரோ கணவனுக்கு உண்மை யாகவே இருந்து வருகிறது; அவளை தான் மனதார வெறுக்கும் வேறொருவனை, யாருடன் தான் வாழ விரும்பவில்லையோ அவனைத் திருமணம் செய்து கொள்ளுமாறு நீங்கள் கட்டாயப் படுத்துகிறீர்கள்" என்று கூறினார். மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கத்துக்கும் முஸ்லீம் லீகிற்கும் இத்தகைய உறவேதும் இல்லை. ஆகவே மாட்சிமை பொருந்திய மன்னரின் அரசாங்கம் தன்னை ஆதரிக்கும் என்று லீக் எதிர்ப்பார்ப்பது வீணான நம்பிக்கையே யாகும்.

இந்தியாவைப் பிரிவினை செய்வதற்கு மாட்சிமைபொருந்திய மன்னரின் அரசாங்கத்தினுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தச் செய்வதன் மூலம் தனது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள

1. நடாளுமன்ற விவாதங்கள் (காமன்ஸ்சபை) 1938-39. தொகுதி. 341 பக் 1987-2107; (பிரபுக்கள் சபை) 1936-37, தொகுதி 106, பக் 599-674 காண்க.

எண்ணுவது முஸ்லீம் லீகின் நலன்களுக்கு உகந்ததல்ல என்ற இன்னொருவிஷயத்தையும் நான் கூறவிரும்புகின்றேன். பாகிஸ்தானைப் பெறுவதைவிட மிகமுக்கியமானதென்று நான் கருதுவது என்னவெனில் பாகிஸ்தானை ஏற்படுத்துவதில் பின்பற்றப்படும் நடைமுறைகளேயாகும். பிரிவினைக்குப் பின்னர் பாகிஸ்தானும் இந்துஸ்தானும் இரு நேச நாடுகளாக, ஒன்று மற்றதன்பால் நல்லெண்ணத்துடனும் பகைமையுணர்வு இன்றியும் தொடர வேண்டும் என்பதே குறிக்கோளாகும்.

இந்த இலக்கை நனவாக்குவதற்குப் பொருத்தமான சிறந்த நடைமுறை என்ன? இந்த நடைமுறை ஒரு வகுப்பினருக்கு வெற்றியும் மற்றொரு வகுப்பினருக்கு அவமானத்தையும் ஏற்படுத்தாத அளவுக்கு இந்த நடைமுறை இருக்கவேண்டும் என்று அனைவரும் ஒப்புக்கொள்வர். இரு தரப்பினருக்கும் கௌரவத்துடன் சமாதானத்தை வழங்கும் முறையாக இருக்கவேண்டும். மக்களின் வாக்கெடுப்பு மூலம் மேற்கொள்ளப்படும் முடிவைத்தவிர இந்த இலக்கை எய்துவதற்கு வேறொரு சிறந்த தீர்வு இருக்கமுடியுமா என்பதை நானறியேன். எது மிகச்சிறந்த வழி என்பது குறித்த எனது யோசனைகளை வழங்கியிருக்கிறேன். பிறரும் கூட அவர்களது யோசனைகளை முன்வைக்கக் கூடும். எனது யோசனையே சிறந்தது என்று என்னால் கூறமுடியாது. இப்பிரச்சினையின் தீர்வு சம்பந்தமாகக் கூறப்படும் எந்த யோசனையானாலும், அது நல்லுணர்வுடனும் பொறுப்புணர்வுடனும் கூறப்படாதிருக்குமானால் இப்பிரச்சினை தீராத வியாதியாகவே இருக்கும்.



# முடிவுரை

நான் இங்கு நிறுத்திக்கொள்ள எண்ணுகிறேன். ஏனெனில் நான் சொல்லவேண்டிய பொருள் குறித்து அனைத்தையும் சொல்லி விட்டேன். சட்டமொழியில் கூறுவதானால் என் வாதத்தை முன் வைத்திருக்கிறேன். இவ்வாறு செய்யும்போது விக்டோரியா அரசு காலத்து வழக்கறிஞர்களுக்கு மிகவும் பிடித்தமான நெடுநீளமான நடையைக் கைக்கொண்டிருக்கிறேன். இந்த நடையில் ஒருவரை ஒருவர் வினாவுதல், விடைமொழிதல், கண்டனம் தெரிவித்தல், மறுப்புரை கூறல், எதிருரைக்கு எதிருரை, மறுப்புரைக்கு மறுப்புரை ஆகியன எல்லாம் அமையும். பாகிஸ்தானுக்கு ஆதரவான, எதிரான ஒருமுழுமையான படப்பிடிப்பை வழங்கவேண்டும் என்ற நோக்கத் துடன் திட்டமிட்டே இந்த நடையைக் கைக்கொண்டேன். முந்தைய பக்கங்கள் விவாதங்களைத் தருகின்றன. இப்பக்கங்களில் காணப் படும் உண்மைகள் என் அறிவுக்கும் நம்பிக்கைக்கும் உண்மை எனப் புலப்பட்டவை. என் முடிவுகளையும் நான் குறித்துள்ளேன். இனி இந்துக்களும் இஸ்லாமியர்களும் அவர்களுடைய கருத்தைக் கூறவேண்டும்.

அவர்களுடைய இந்தப்பணியில் உதவுதற்காக, சிக்கல்களை முன்மொழிதல் நல்லது. விவாதத்தில் கீழ்வரும் சிக்கல்கள் கவனிப் பதற்குரியன :

1. இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்திற்கு இந்து-முஸ்லீம் ஒற்றுமை தேவைதானா? தேவையாயின் இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இரண்டு தனித் தனி தேசங்கள் என்று புதிதாகத் தோன்றியுள்ள சூழ்நிலையில் இந்த ஒற்றுமை குறிக்கோளைத் தடையின்றி அடைதல் இயலுமா?

2. இந்து-முஸ்லீம் ஒற்றுமை நடக்கக் கூடியதாயின், அது, திருப்திப்படுத்துதல் என்ற முறையிலா, தீர்வு என்ற முறையிலா?

3. திருப்திப்படுத்தும் வகையில் அமைவதானால், முஸ்லீம் களின் மற்ற ஈடுபாடுகளுக்குப் பாதகம் ஏற்படாவகையில்

அவர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பைப் பெற என்ன சலுகைகள் வழங்கப்படும்?

4. தீர்வு என்ற வகையில் அமைவதானால், அத்தீர்வுக்குரிய வரையறைகள் யாவை? இரண்டு மாற்றுவழிகளே உள்ளன என்றால் i) இந்தியாவைப் பாகிஸ்தான், இந்துஸ்தான் எனப் பிரிப்பது ii) சட்டமன்றம்,செயலாண்மை மற்றும் பணிகளில் ஐம்பது ஐம்பது விழுக்காடு அளிப்பது எனும் இவ்விரண்டில் எது விரும்பத்தக்கது?

5. இந்தியா ஐக்கியப்படுத்தப்பட்ட ஒரே நாடாக அமையுமாயின், அது வெள்ளையர்களிடமிருந்து வெற்றி கொள்ளப்பட்டது என்று கருதும் நிலையில், இந்துக்களும் முஸ்லீம்களும் அதன் சுதந்திரத்தைப் பாதுகாப்பார்கள் என்று நம்பலாமா?

6. இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே தற்போது நிலவும் பகைமை உணர்வையும், இந்துக்களும் முஸ்லீம் களும் இரு வேறுபட்ட தேசங்கள் என்று புதிதாக எழுந் துள்ள சித்தாந்தத்தையும், அவர்களது இறுதி கதிப்போக்குகள் நேரெதிரானவையாக இருப்பதையும் கருத்திற்கொண்டு பார்க்கும்போது இவ்விரு தேசங்களுக்கும் ஒரே அரசிய லமைப்பை உருவாக்குவது சாத்தியமா, அத்தகைய அரசிய லமைப்புச் செயல்படுவதைத் தடுக்காமல், அதன் வெற்றிக் குப் பாடுபடும் உத்தேசத்தை அவை வெளிப்படுத்துமா?

7. இரு-தேசக் கோட்பாடு நிலைத்துவிட்டது என்ற கருத்தில் எண்ணிப் பார்த்தால் இந்தியா ஒரு முழு அமைப்பற்ற, ஒத்திசைவில்லாத ஒரு பகுதியாக இருக்காதா? ஒரு பொது விதியையும் நம்பிக்கையையும் கொண்ட வலிமையான நாடாக உருவாகத் தகுதியற்றதாக அது இருக்காதா? அந்நிலை யில் அது ஒரு வலிமையற்ற, நோயுற்ற நாடாக ஆகாதா? அந்நிலையில் அது வெள்ளையர்க்கோ பிறர்க்கோ நிரந்தர அடிமையாகிவிடாதா?

8. இந்தியா ஒரே நாடாக இருக்கமுடியாது என்றால் இந்தியர் களே அதன் இசைவற்ற இந்த நாட்டை அதன் இயல்பான பகுதிகளாக அதாவது பாகிஸ்தான் இந்துஸ்தான் என்று பிரிந்து போக உதவக்கூடாதா?

9. இந்துக்களும், முஸ்லீம்களும் ஏதாவது ஒரு காலத்தில் ஒற்றுமையாகி, ஒரே தேசத்தின் மக்களாய் வாழ்வார்கள் என்று முஸ்லீம்கள் வாழும் பாகிஸ்தானையும் இந்துக்கள் வாழும்

இந்துஸ்தானையும் இரண்டு தனித்தனி நாடுகளாக்கி அவற்றின் வளர்ச்சிக்கு வழிவகுப்பது நல்லதில்லையா?

இதுவரை தரப்பட்டுள்ள விவரங்களின் உதவியோடு இந்தப் பிரச்சினைகளை உரியமுறையில் புரிந்துகொண்டு, வாசகர்கள் தமது சொந்த முடிவுகளுக்கு வருவதற்குப் பின்வரும் மூன்று தடைகளைத் தவிர வேறு எந்தத் தடையும் இருக்கமுடியாது: 1. வரலாற்று ரீதியான தேசியம் குறித்த தவறான உணர்வு: 2. ஒரு குறிப்பிட்ட பிரதேசம் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்குத்தான் சொந்தம் என்ற தவறான கருத்து; 3. எதையும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கும் விருப்பமின்மை. இந்தத் தடைகளில் கடைசியாகக் குறிப்பிட்ட தடைதான் வெற்றிகொள்வ தற்கு மிகவும் கடினமானது: துரதிருஷ்டவசமாக சிந்திப்பது என்பது இந்தியாவில் அரிது; அதிலும் சுதந்தரமான சிந்தனை அரிதிலும் அரிது. இதுவும் குறிப்பாக இந்துக்களைப் பொறுத்தவரை உண்மை யானதாகும். எனவே இந்நூலின் பெரும்பகுதி அவர்களை நோக்கிக் கூறுவதாகவே அமைகிறது. இதற்குரிய காரணங்கள் தெளிவானவை. இந்துக்கள் பெரும்பான்மை யாக உள்ளார்கள். பெரும்பான்மை யாக உள்ள நிலையில் அவர்கள் கருத்துக்கு முக்கியத்துவம் உண்டு. அவர்கள் பகுத்தறிவு சார்ந்த அல்லது உணர்ச்சிப்பூர்வமான தடை களைச் சந்திக்க முயற்சி மேற்கொள்ளவில்லை எனில் அமைதியான தீர்வுக்கு பெரிதும் வாய்ப்பு இல்லை. ஆனால், இந்த விவாதத்தில் பெரும்பகுதியை அவர்களை குறிவைத்து முன்வைத்திருப்பதற்குச் சில சிறப்பான காரணங்கள் உள்ளன. அவை மற்றவருக்கு தெளிவாக தெரியாமல் போகலாம். தங்கள் உடனிருப்பவர்களின் கதிப்போக் குக்கு வழிகாட்டும் இந்துக்கள் கார்லைல் கூறிய 'காணும் கண்' ணை இழந்துவிட்டனர். அவர்கள் சில வெற்று மாயைகளின் கவர்ச்சியால் நடந்து கொண்டிருக்கின்றனர். இதன் விளைவு இந்துக்களுக்கு மிக பயங்கரமானதாக இருக்கும் என அஞ்சுகிறேன். இந்துக்கள் காங்கிர சின் பிடியில் இருக்கின்றனர்; காங்கிரஸ் திரு. காந்தியின் பிடியில் உள்ளது. திரு. காந்தி காங்கிரசுக்கு சரியான வழிகாட்டியுள்ளார் என்று கூறமுடியாது. திரு.காந்தி இரு விஷயங்களில் தஞ்சம் புகுந்து சிக்கலை எதிர்கொள்வதைத் தவிர்க்கிறார். இந்தியாவைப் பிரிப்பது நியாயமற்றது, பாவமானது, தான் அதற்குத் துணையாக இருக்க முடியாது என்று அவர் செல்லத் தொடங்கியுள்ளார். இது ஒரு விந்தை யான விரதமாகும்; பிரிவினைச் சிக்கல், இயற்கையாகவும் வரலாற் றடிப்படையிலும் அமைந்த எல்லைகளைத் தேசிய அடிப்படையில் மாற்றுதல் ஆகியவற்றை இந்தியா மட்டும் எதிர்கொள்ளவில்லை. போலந்து மூன்றுமுறை பிரிக்கப்பட்டுள்ளது. இனிமேலும் அது பிரிவுபடாது என்று கூறுவதற்கில்லை. கடந்த 150 ஆண்டுகளில்

பிரிவுபடாத ஐரோப்பிய நாடுகள் மிகச்சிலவே. இது நாட்டுப் பிரிவினை என்பது நியாயமானது என்றோ நியாயமற்றது என்றோ கூறுவதற்கில்லை என்பதைக் காட்டும். இது நியாயத்தோடு தொடர் பற்றது. இது ஒரு சமூக, அரசியல் அல்லது இராணுவம் சார்ந்த பிரச்சினையாகும். இதில் பாவத்திற்கு இடமில்லை.

இரண்டாவது கருத்தாக முஸ்லீம்லீக் முஸ்லீம்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவது அல்ல என்றும், பாகிஸ்தான் என்பது ஜின்னாவின் கற்பனை என்றும், திரு. காந்தி பிரிவினையை எதிர்க் கும் வகையில் கூறிவருகிறார். ஜின்னா முஸ்லீம் மக்கள் கூட்டத் தில் பெற்றுள்ள செல்வாக்கையும் நாளுக்குநாள் அவர் எல்லாச் சக்திகளையும் ஒன்று திரட்டி ஒரு போருக்கு ஆயத்தமாகி வருவதை யும் திரு. காந்தி எவ்வாறு அறியாமல் இருக்கிறார் என்பதைப் புரிந்துகொள்ள இயலவில்லை. இதற்கு முன் திரு. ஜின்னா மக்கள் தலைவராக இருந்ததில்லை. அவர் மக்கள்மீது அவநம்பிக்கையே கொண்டிருந்தார்.[1] எளிய மக்களை அரசியலிலிருந்து அப்புறப்படுத்த அவர் உயர்வகுப்பு வாக்குரிமையையே வற்புறுத்தினார். ஜின்னா எப்போதும் சமயப்பற்றும், ஆன்மீக ஈடுபாடும் கொண்டவராகவோ, இஸ்லாத்தை எடுத்துரைப்பவராகவோ இருந்ததில்லை. அவர் சட்ட மன்ற உறுப்பினராகும்போது புனிதகுரானை முத்தமிடுவார். அவர் அந்த நூலின் உள்ளடக்கத்தையோ, சிறப்பான தத்துவக் கூறுகளையோ அறியக் கவலைப்பட்டதில்லை. தன் ஆர்வத்தின் காரணமாகவோ, சமய உணர்வின் காரணமாகவோ அவர் பள்ளிவாசலுக்கு அடிக்கடி சென்றவரில்லை. முஸ்லீம்களின் சமயக் கூட்டங்களிலோ, அரசியல் கூட்டங்களிலோ எளியமனிதர்களிடையேயோ அவர் எப்போதும் காணப்பட்டதில்லை. இன்று திரு. ஜின்னாவிடம் முழுமாற்றம் காணப் படுவதை நாம் பார்க்கலாம். அவர் எளிய மக்களின் மனிதராக மாறி யுள்ளார். அவர் அவர்களுக்கு மேலானவராக இப்போது இல்லை. அவர் அவர்களிடையில் இருக்கிறார். அவர்கள் தங்களுக்கு மேலாக அவரைக் கொண்டு 'காய்தே-ஆஸம்' என்று அழைக்கின்றனர். அவர் இஸ்லாத்தில் நம்பிக்கை உடையவராக மட்டுமன்றி அதற்காக இறந்துவிடவும் தயாராக இருக்கிறார். இன்று அவர் 'கலாமா'வைவிட இஸ்லாத்தை அதிகம் அறிந்துள்ளார். இன்று அவர் 'குத்பா' கேட்கப்

1. பண்டிட் ஜவஹர்லால் நேரு தன் சுயசரிதையில், காங்கிரஸ் பள்ளியிறுதித் தேர்வு பெற்றவர்களையே உறுப்பினராகக் கொள்ள வேண்டுமென்று ஜின்னா விரும்பினார் என்று கூறியுள்ளார்.

பள்ளிவாசலுக்குச் செல்கிறார்; பெருநாள் கூட்டவழிபாட்டில் கலந்து கொள்வதில் மகிழ்ச்சி கொள்கிறார். டோங்கிரி, நுல்பஜார் ஒரு காலத்தில் அவர் பெயரை மட்டுமே அறியும். இன்று அவர் உரு வத்தை அறிந்துள்ளன. பம்பாயில் எந்த முஸ்லீம் கூட்டமும் ''அல்லாஹோ அக்பர்'' என்றும் ''காய்தே ஆஸம் நீடு வாழ்க'' என்றும் கூறாமல் தொடங்குவதோ முடிவதோ இல்லை. இவ்வகையில் திரு.ஜின்னா இங்கிலாந்தின் மன்னர் முதலாம் சார்லசின் மகிழ்ச்சி யற்ற மாமனாகிய பிரான்சின் நான்காம் ஹென்றியை அப்படியே பின்பற்றுகிறார். நான்காம் ஹென்றி சமயநம்பிக்கையில் சீர்திருத்தக் கத்தோலிக்கப் பிரிவைச் சார்ந்தவர். ஆனால் அவர் பாரீசிலுள்ள கத்தோலிக்கத் திருக்கோவிலில் மக்கள் கூட்டத்தில் கலந்து கொள்ளத் தயங்குவதில்லை. பாரீசின் வலிமையான ஆதரவைப் பெற தன் சமய நம்பிக்கையைக் கைவிட்டுப் பொதுமக்களின் கூட்டத்திற்குச் செல்வது ஒரு சிறியவிலை என்று அவர் கருதினார். நான்காம் ஹென்றிக்குப் பாரீஸ் மக்களைப்போல, திரு.ஜின்னா வுக்கு டோங்கிரியும், நுல்பஜாரும். இது ஒருவித உத்தியேயாகும்; மக்களை அணிதிரட்டலே ஆகும். திரு.ஜின்னா பகுத்தறிவிலிருந்து மூட நம்பிக்கையில் ஆழ்கிறார் என்று கருதினாலும், அவர் தன் குறிக் கோளுடன் மூழ்குகிறார்; அவர் தன் மூழ்குதலால், முஸ்லீம் சமூகத் தின் எல்லாத் தளங்களுக்கும் பரவுகிறார்; முஸ்லீம் சமூகத்தின் மன உருவாக்கத்தில் ஒரு பகுதியாகவே ஆகிவிடுகிறார். இது மிகவும் தெளிவானதாகும். திரு.காந்தி கொண்டுள்ள அசாதாரணமான கருத் துக்கு ஒரு அடிப்படையாக இருப்பவர்கள் தேசிய முஸ்லீம்கள் எனப்படுவோர் இருந்து வருவதுதான். முஸ்லீம் லீகைச் சார்ந்த வகுப்புவாத முஸ்லீம்களுக்கும் தேசிய முஸ்லீம்களுக்கும் இடையில் உண்மையான வேறுபாட்டைக் காண்பது கடினமானதாகும். தேசிய முஸ்லீம்களை முஸ்லீம் லீகிலிருந்து வேறுபடுத்திக்காணும் அள வுக்கு காங்கிரசோடு அவர்களுக்கு என்ன இன உணர்வு, குறிக்கோள், மற்றும் கொள்கை இருக்கக்கூடும் என்பது ஐயமாக உள்ளது. உண்மையில் காங்கிரஸ்காரர்கள், இரண்டிற்கும் இடையே வேறுபாடு இல்லை என்றும் காங்கிரசிலுள்ள தேசியமுஸ்லீம்கள் வகுப்புவாத முஸ்லீம்களின் புறக்காவற்படையினரே தவிர வேறல்ல என்றும் கருத்துக் கொண்டுள்ளனர். இக்கருத்து மறைந்த அன்சாரியை நினைவுபடுத்திப்பார்த்தால் உண்மைக்குமாறானது அன்று என்பது விளங்கும். தேசிய முஸ்லீம் தலைவரான அன்சாரி, காங்கிரசுக்கும் தேசிய முஸ்லீம்களுக்கும் மாறாக முஸ்லீம்களுக்குத் தனித்தேர்தல் தொகுதிகளைக் கொடுத்த வகுப்புத்தீர்ப்பை எதிர்க்க மறுத்துவிட்டார்.

இன்னும் சொல்லப்போனால், முஸ்லீம்களிடையே லீகின் செல்வாக்கு அதிகரித்துள்ளது. லீகை எதிர்த்த முசல்மான்கள் பலர் லீகில் இடங்கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டனர் அல்லது அதனோடு உடன்பாடு செய்துகொள்ளச் செய்யப்பட்டனர். மறைந்த சிக்கந்தர் ஹயத்கான், வங்காளத்தின் பிரதமராக இருந்து மறைந்த பஸ்லுல் ஹக் ஆகியோர் அடித்த குட்டிக்கரணங்களை கணக்கில் கொள்வோர் யாரும் இந்த உண்மையை உணர்வர். திரு. ஜின்னா 1937 இல் முஸ்லீம் லீகின் கிளைகளை மறுபடியும் கொண்டுவர முயன்றபோது தங்கள் மாநிலத்தில் அவற்றை ஏற்படுத்த சர் சிக்கந்தரும் பஸ்லுல் ஹக்கும் எதிர்ப்பு தெரிவித்தனர். அவர்கள் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் பஞ்சாபிலும் வங்காளத்திலும் தொடங்கப்பட்ட ஓராண்டிற்குள் இருவரும் லீகில் சேருமாறு வற்புறுத்தப்பட்டனர். இரை தேடிச் சென்றவர்கள் தாங்களே இரையான கதை தான் இது. லீகின் வெற்றிக்கு இதற்குமேல் தொடர்புடைய ஆதாரம் தரத் தேவையில்லை.

இதனைத் தாங்கும் ஆற்றலின்றி திரு.காந்தி, திரு. ஜின்னாவுடனும் முஸ்லீம் லீகுடனும் ஓர் உடன்பாட்டுக்கு வரப் பேச்சுவார்த்தை நிகழ்த்தாமல், ஒருமாறுபட்ட முடிவை மேற்கொண்டார். 1942 ஆகஸ்டு எட்டாம் நாளன்று அவர் காங்கிரஸைப் புகழ்பெற்ற ''வெள்ளையனே வெளியேறு'' தீர்மானத்தை நிறைவேற்றச் செய்தார். இந்தத் தீர்மானம் முதல்நிலையில் வெள்ளை அரசுக்கு ஓர் அறைகூவலாகும். ஆனால் இது உண்மையில் சிறுபான்மையினர் பற்றிய விவாதத்தில் பிரிட்டிஷ் அரசின் தலையீட்டை நீக்கும் முயற்சியுமாகும். இதன் மூலம் சிறுபான்மையினர் பிரச்சினைக்கு காங்கிரஸ் தனக்குரியவகையிலும், தன்னுடைய நோக்கிற்கு ஏற்பவும் தீர்வு காணும் உரிமையை அதற்குப்பெற்றுத்தரும் முயற்சியாக அது அமைந்திருந்தது. முஸ்லீம்களையும் இதர சிறுபான்மையினரையும் ஓரங்கட்டிவிட்டு சுதந்திரத்தைப்பெறும் முயற்சியாகவும் கருத்தில் இல்லாவிடினும் நடைமுறையில் இருந்தது. ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கம் ஒரு தோல்வியாக முடிந்தது. அது ஒரு பைத்தியக்காரத்தனமான முயற்சியாக அமைந்து ஒரு பேய்த்தனமான வடிவை எடுத்தது. அதில் கொள்ளை சூறை கொலை போன்றவற்றிற்கு இந்தியர்கள் பலியானார்கள்; அதில் குற்றமிழைத்தவர் காங்கிரஸ்காரராவர். இம்முயற்சியில் தோல்வியுற்ற அவர் அதிலிருந்து மீள்வதற்கு 1943 மார்ச்சில் 21 நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்.

இதிலும் அவர் தோல்வியடைந்தார். அதன்பிறகு அவர் நோய் வாய்ப்பட்டார். அவர் நலம் குன்றுகின்றார் என்று அறிந்தவுடன் சிறையில் இறந்துபட்டால் தமக்கு இழிவுவரும் என்று கருதிய பிரிட்டிஷ் அரசு அச்சத்தால் அவரை விடுதலை செய்தது. சிறையி லிருந்து வெளிவந்தவுடன் தானும், காங்கிரசும் பேருந்தைத் தவற விட்டது மட்டுமல்லாமல் சாலையையே இழந்துவிட்டதை அறிந்தார். தமது தகுதியைத் தக்கவைத்துக்கொள்ளவும், இந்தியா வின் பெரிய கட்சியான காங்கிரஸ் ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கத்தின் தோல்வி காரணமாகவும், அதனோடு இணைந்த வன்முறை காரணமாகவும் இழந்துவிட்ட மதிப்பைப் பெறவும் அவர் வைசிராயுடன் பேச்சுவார்த்தை தொடங்கினார். அம்முயற்சியில் ஏமாற்றமடைந்த நிலையில் திரு. காந்தி, திரு. ஜின்னாவை நோக்கித் திரும்பினார். அவர் திரு.ஜின்னாவைச் சந்தித்து வகுப்புச் சிக்கல் குறித்து 1944 ஜூலை 17 அன்று பேச விரும்புவதாக கடிதம் எழுதினார். திரு. ஜின்னா பம்பாயில் தமது இல்லத்தில் காந்தியை வரவேற்கச் சம்மதித்தார். 1944 செப்டம்பர் 9 ஆம்நாள் அவர்கள் சந்தித்தனர். அதனால் காந்தியிடம் அறிவின் விடியல் தோன்றியது. இதுவரை அவர் பார்க்கத் தவறிய வெளிச்சம் அவர் முகத்தில் வீச, அவர் அதனைப் பார்க்க இணங்கினார்.

1944 ஏப்ரலில் திரு.இராசகோபாலாச்சாரியாரால் திரு. ஜின்னா விடம் சமர்ப்பித்த திட்டமே அவர்களுடைய பேச்சுக்கு அடிப்படை யாக இருந்தது. இத்திட்டம் பற்றி திரு. இராசகோபாலச்சாரியார் கூறும்போது இதனைத் தாம் 1943 மார்ச்சிலேயே திரு.காந்தி சிறை யில் உண்ணாவிரதம் இருந்தபோது அவருடன் விவாதித்ததாகவும், திரு. காந்தி அதற்கு முழுச்சம்மதத்தைக் கொடுத்ததாகவும் கூறு கிறார். ஆனால் இது எந்த அளவுக்கு உண்மை என்று தெரிய வில்லை. சி.ஆர். திட்டம் என்று எல்லாரும் அறியப் பேசப்பட்ட இராசகோபாலாச்சாரியாரின் திட்ட வாசகம் வருமாறு:[1]

1. இந்தத் திட்டம் குறித்து 1943 மார்ச்சில் காந்தியுடன் விவாதிக்கப்பட்டது. ஆனால் ஏப்ரல் 1944 வரை அது ஜின்னாவுக்குத் தெரியப்படுத்தப்படவில்லை.

1. சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பைப் பொறுத்த வரை கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு இணங்க, முஸ்லீம்லீக், இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை ஏற்கிறது. மேலும், இடைப்பட்ட காலத்தில் ஓர் இடைக்கால அரசைத் தோற்று விப்பதில் காங்கிரசோடு ஒத்துழைக்கவும் இணங்குகிறது.

2. போர் முடிந்தபின், முகமதிய மக்கள் அறுதிப் பெரும்பான்மை யாக வாழும் இந்தியாவின் வடமேற்கு, கிழக்குப் பகுதிகளை ஒட்டியுள்ள மாவட்டங்களின் எல்லைகளை வரையறுப்ப தற்கு ஒரு குழு நியமிக்கப்படும். இவ்வாறு குறிப்பிடப்பட்ட இடங்களில் வாழும் அனைத்துப் பொதுமக்களிடத்தும் வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையிலோ அல்லது நடை முறைக்கொத்த வேறு எந்த வாக்குரிமை அடிப்படையிலோ வாக்கெடுப்பு நடத்தி இந்துஸ்தானத்திலிருந்து இப்பகுதிகள் பிரிவது பற்றி இறுதியாக முடிவு எடுக்கப்படும். பெரும் பான்மையினர் இந்துஸ்தானத்திலிருந்து பிரிந்து தனி மாநிலம் அமைப்பதென முடிவு செய்தால், அது நடைமுறைப்படுத்தப் படும். அப்போது, எல்லையில் இருக்கும் மாவட்டங்கள் இவை இரண்டில் ஏதேனும் ஓர் அரசில் சேர்ந்து கொள்வதற்கு அவற்றிற்குள்ள உரிமையைப் பாதிக்காத வகையில் அம்முடிவு எடுக்கப்படும்.

3. வாக்குரிமை நிகழுமுன் எல்லாக் கட்சிகளுக்கும் தங்கள் கருத்துகளைக் கூற உரிமை வழங்கப்படும்.

4. பிரிவினையின் போது, பாதுகாப்பு, வணிகம், செய்தித் தொடர்பு ஆகியவற்றையும் மற்றும் இதர அத்தியாவசிய துறைகளையும் பாதுகாப்பதற்கு பரஸ்பர ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்படும்.

5. மக்கள் தொகை இடம் மாற்றம் என்பது முற்றிலும் சுய விருப்ப அடிப்படையிலேயே அமையும்.

6. முழு அதிகாரத்தையும் பொறுப்பையும் பிரிட்டன் இந்திய அரசுக்கு மாற்றிக் கொடுக்கும்போதுதான் இந்த ஒப்பந்த விதிமுறைகள் அமலுக்குவரும்.

செப்டம்பர் 9ஆம் தேதி தொடங்கிய பேச்சுகள் செப்டம்பர் 27 வரை மேற்கொள்ளப்பட்டு, 18 நாட்களுக்கு நடந்து இறுதியில் பேச்சு தோல்வியுற்றதாக அறிவிக்கப்பெற்றது. பேச்சுகளில் ஏற்பட்ட தோல்வி பலதிறத்து மக்களிடம் பலவேறுபட்ட விளைவுகளை

உண்டாக்கியது. சிலர் மகிழ்ச்சியடைய பிறர் துயருற்றனர். ஆனால் பேச்சுக்கு முன்னர், மேலாண்மை குறித்த போரில் பிரிட்டிஷ்கார ரால் திரு.காந்தியும் பஞ்சாப் யூனியன் கட்சியினரால் திரு.ஜின்னா வும் தங்கள் மதிப்பில் பெரும்பகுதியை இழந்திருந்தனர். பெரும் பான்மை மக்கள் சிக்கல்தீர இவர்கள் ஏதேனும் ஆக்கப்பூர்வமான தீர்வை முன்வைக்க வேண்டுமென்று எதிர்ப்பார்த்தனர். இதில் தோல்வி உண்டானதற்கு தலைவர்களின் குறைபாடுகளே காரண மாகும். ஆனால் அடிப்படையில் சி.ஆர். திட்டத்தில் இருந்த குறைகளே தோல்வியைத் தவிர்க்க முடியாததாக ஆக்கின என்று கூறவேண்டும். முதல்நிலையில், அது வகுப்புப் பிரச்சினையை அரசியல் பிரச்சினை யோடு சேர்த்து அவிழ்க்கமுடியாத முடிச்சாக்கி விட்டது. இத்திட்டம் அரசியல் பிரச்சினைக்கு அடிப்படையான தீர்வாகவோ, வகுப்புப் பிரச்சினைக்கு அடிப்படையான தீர்வாகவோ இல்லை. இத்திட்டம் சிக்கலுக்குரிய தீர்வு எதையும் கூறவில்லை. அது திரு.ஜின்னாவை ஒரு பேரத்துக்கு இணங்கும்படி அழைத்தது. ''சுதந்திரம் பெறுவதற்கு நீங்கள் உதவினால், பாகிஸ்தான் பற்றிய உங்கள் கோரிக்கையை நாங்கள் மகிழ்ச்சியுடன் பரிசீலிப்போம்'' என்ற பேரமாக அது இருந்தது. இதுதான் சுதந்திரம் பெறச் சிறந்தவழியென்ற இக்கருத்தை எங்கிருந்து திரு. இராசகோபாலச்சாரியார் பெற்றாரென்று எனக்குத் தெரிய வில்லை. அவர் இந்தக் கருத்தை இந்தியாவின் பழைய இந்து அரசர்களிடமிருந்து பெற்றிருக்கலாம். பழைய இந்து அரசர்கள் பகைவர்களிடமிருந்து தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ளப் பக்கத்து நாட்டு இளவரசர்களுக்கு தங்கள் பெண்களை திருமணம் செய்து கொடுப்பர். இத்தகைய மண உறவுகள் ஒரு நல்ல கண வனையோ, நிரந்தர அரசியல் கூட்டையோ அளிக்கவில்லை என்பதை திரு. இராச கோபாலாச்சாரியார் மறந்துவிட்டார். இத்தகைய ஒரு விவகாரத்தில் சுதந்திரப் போரில் உதவுவதை வகுப்புப் பிரச்சினைக் கான தீர்வைச் சார்ந்திருக்கச் செய்வது அறிவுடைமையாகாது. ஒரு கட்சி மற்றொரு கட்சியை வகுப்புரிமைகள் என்ற தூண்டில் வழியே தன் வலைக்கும் இழுக்கின்ற வழியாகும் இது. சி.ஆரின் திட்டம் வகுப்புரிமைச் சிக்கல் தீர்வை விற்பனைக்குரிய பண்டமாக்கி விட்டது.

சி.ஆர். திட்டத்தின் இரண்டாவது குறைபாடு இரு தரப் பினராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உடன்பாட்டை நடைமுறைப் படுத்தும் சாதனத்தோடு தொடர்புடையது. சி.ஆர். திட்டத்தில் பரிந் துரைக்கப்பட்டுள்ள இத்தகைய சாதனம் இடைக்கால அரசாங்க மாகும். இதனைக் கூறும்போது திரு. இராசகோபாலாச்சாரியார்

இரண்டு இடையூறுகளைத் தெளிவாகக் கவனிக்கவில்லை. முதல் இடையூறு, இடைக்கால அரசு நிறுவப்பட்ட நிலையில் ஒப்பந்தம் செய்து கொண்ட கட்சிகளின் வாக்குறுதிகள் சட்டப்படி கூறுவதானால், உடனே நிறைவேற்றப்பட வேண்டிய வாக்குறுதிகளாக இருக்க மாட்டா. ஒருபுறம் நிறைவேற்றப்பட வேண்டிய வாக்குறுதிகளாகவும் இன்னொருபுறம் நிறைவேற்ற இயலாத வாக்குறுதிகளாகவுமே இருக்கும். இடைக்கால அரசு நிறுவுதலுக்கு ஒத்துக் கொள்வதன் மூலம் சுதந்திரம் பெறுவதில் காங்கிரசுக்கு உதவி செய்யும் வாக்குறுதியை லீக் நிறைவேற்ற முடியும். ஆனால் பாகிஸ்தானை உருவாக்க உதவும் காங்கிரசின் வாக்குறுதி நிறைவேற்றப்பட வேண்டியதாக இருக்கிறது. வாக்குறுதிகள் தொடர்ந்து செயல்படுத்தப்பட வேண்டுமெனச் சரியாக வற்புறுத்தும் திரு. ஜின்னா, வாக்குறுதி நிறைவேற்றப்படாத சூழலில் தன்னை வைத்துக் கொள்ளச் சம்மதிக்க மாட்டார். இராசகோபாலாச்சாரியார் கவனிக்காமல் விட்டுவிட்ட இன்னொரு இடர்ப்பாடு, காங்கிரஸ் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் பகுதியை இடைக்கால அரசு நிறைவேற்றத் தவறினால் யார் அதனை நிறைவேற்றுவது என்பதாகும். இடைக்கால அரசு என்பது ஒரு முழுமையான அரசு. அது எந்த மேலாண்மைக்கும் அடங்கியதன்று. ஒப்பந்தத்தை நிறைவேற்ற அதற்கு விருப்பமில்லாவிட்டால் முஸ்லீம்களுக்கு உள்ள ஒரே வழி கிளர்ச்சியில் இறங்குவதேயாகும். பாகிஸ்தானை அமைப்பதற்காக இடைக்கால அரசு ஒரு புதிய அரசியலமைப்பை உருவாக்க அனுமதிக்கப்படுவதை எவரும் ஒப்புக் கொள்ளார். அது ஒரு சூழ்ச்சியே தவிரத் தீர்வன்று. பிரிட்டிஷ் இந்தியாவின் தேசிய வாழ்வின் முக்கிய பகுதிகளால் ஒத்துக் கொள்ளப்பட்ட முன்னேற்பாடுகளுக்கு உரு வழங்கக்கூடிய நாடாளுமன்றச் சட்டத்தின் வழியாகச் சட்டமன்றங்களைக் கொண்டு வருவதே ஒரே வழியாகும். வேறு வழியொன்றும் இல்லை.

சி.ஆர். திட்டத்தில் மூன்றாவதாகக் குறை ஒன்று உள்ளது. அது பாகிஸ்தானுக்கும் இந்தியாவிற்கும் இடையே பொது ஈடுபாட்டிற்குரிய பாதுகாப்பு, வெளிவிவகாரம், சுங்கம் முதலியவற்றைப் பாதுகாக்க ஒப்பந்தம் செய்துகொள்ளும் ஏற்பாடு குறித்ததாகும். இங்கும் திரு. இராசகோபாலாச்சாரியார் தெளிவாக இடையூறுகளை எண்ணியதாகத் தெரியவில்லை. பொது நலன்கள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எப்படிப் பாதுகாக்கப்படக் கூடும்? நான் இதற்கு இரு வழிகளையே காணுகின்றேன். ஒன்று இத்தகைய விஷயங்கள் சம்பந்தமாக நிர்வாக அதிகாரமும் சட்டம் இயற்றும் அதிகாரமும் படைத்த ஒரு மத்திய அரசை நிறுவுவது. இதன் பொருள் பாகிஸ்தானும் இந்துஸ்தானும் முழுமையான அரசுகள் ஆகமாட்டா. திரு. ஜின்னா இதற்கு

ஒப்புக்கொள்வாரா? தெளிவாக அவர் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டார். மற்றொருவழி பாகிஸ்தானையும் இந்துஸ்தானையும் முழுமையான அரசுகளாக்கி, இத்தகைய பொதுநலன்கள் விஷயத்தில் இரண்டையும் ஓர் ஒப்பந்தவழிக் கட்டுப்படுத்தலாகும். ஆனால் ஒப்பந்தக் கூறுகளை அவர்கள் கடைப்பிடிப்பார்கள் என்று கூற என்ன உறுதி உள்ளது? தனி அரசுரிமை படைத்த நாடு என்ற முறையில், அது குடியேற்ற நாடாக இருந்தாலும் பாகிஸ்தான் அதனை மறுக்கக் கூடும். திரு. இராச கோபாலாச்சாரியார் இந்தப் பிரிவை உருவாக்கு வதற்குரிய அடிப் படையை 1922 இல் இங்கிலாந்தும் அயர்லாந்தும் செய்து கொண்ட ஒப்பந்தத்திலிருந்து பெற்றிருக்கலாம். ஆனால் அந்த ஒப்பந்தம் அயர்லாந்து தனியுரிமை பெறும்வரையில் இருந்த தென்பதையும் தனியுரிமை பெற்றபின் அது அவ்வொப்பந்தத்தை மறுத்துவிட பிரிட்டிஷ் பாராளுமன்றம் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் மௌனமாக இருந்தது என்பதையும் திரு. இராசகோபா லாச்சாரியார் மறந்து விட்டார்.

பேச்சுகள் தோல்வியடைந்தது பற்றி யாரும் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. ஆனால் கவலைப்பட வேண்டிய விஷயம் என்னவென்றால் திரு. ஜின்னா தனியாகப் பேசும்போது வெளிப் படையாகக் கருத்துகளைத் தெரிவிப்பதும், பொது மேடைகளில் அவற்றைக் குறித்து மௌனம் சாதிப்பதும், சில விஷயங்கள் குறித்த ஒரு தெளிவான கருத்தை இப்பேச்சு வார்த்தைகள் நமக்குத் தரத் தவறிவிட்டன என்பதுமேயாகும். இத்தகைய விஷயங்கள் வருமாறு: 1. முஸ்லீம் லீகின் தீர்மானத்திற்காகப் பாகிஸ்தான் ஒத்துக்கொள்ளப் பட வேண்டுமா? 2. முஸ்லீம் லீகைச் சாராத முஸ்லீம்கள் இதில் சொல்வதற்கு உரிமையில்லையா? 3. பாகிஸ்தானின் எல்லைகள் எப்படிப் பட்டவையாக இருக்கும்? இந்த எல்லைகள் பஞ்சாப், வங்காள மாநிலங்களின் நிர்வாக எல்லையாக இருக்குமா அல்லது இன அடிப்படையிலான எல்லையாக இருக்குமா? 4. ''தேவைப் படும் எல்லைகள் குறித்துச் சரிசெய்து கொள்வதற்கு உட்பட்டு'' என்ற லாகூர் தீர்மானத்தில் காணப்படும் சொற்களின் பொருள் யாது? லீக் தன் மனத்தில் கொண்டுள்ள பிரதேச சீரமைவுகள் என்ன? 5. லாகூர் தீர்மானத்தின் கடைசிப் பகுதியில் காணப்பெறும் 'இறுதி யாக' என்ற சொல்லின் பொருள் யாது? லீக், பாகிஸ்தான் சுதந்திர மான தனிநாடாக இல்லாத ஓர் இடைக்காலம் பற்றி எண்ணுகிறதா? 6. தற்போதுள்ள நிர்வாக எல்லைகளே கிழக்கு மற்றும் மேற்குப் பாகிஸ்தானது எல்லைகளாக இருக்க வேண்டுமென்பதே திரு. ஜின்னாவின் திட்டமென்றால், பஞ்சாபிலும் வங்காளத்திலும் வசிக்கும் ஷெட்யூல்டு வகுப்பினரும் இதர முஸ்லீம் அல்லாதாரும்

திரு. ஜின்னாவின் பாகிஸ்தானில் இருக்க விரும்புகிறார்களா என்பதைப் பொது வாக்கெடுப்பு மூலம் தீர்மானிக்க அவர் அனுமதிப்பாரா? பஞ்சாபிலும் வங்காளத்திலுமுள்ள முஸ்லீமல்லாதோரின் வாக்கெடுப்பு முடிவுகளுக்கு திரு. ஜின்னா கட்டுப்பட்டு நடந்து கொள்வாரா? மேற்குப் பாகிஸ்தானையும் கிழக்குப் பாகிஸ்தானையும் இணைப்பதற்காக ஐ.மாகாணம் பீகார் வழியே செல்லும் ஓர் ஊடு வழியை திரு. ஜின்னா கோருகிறாரா? இது சம்பந்தமான கேள்விகளை திரு. ஜின்னாவிடம் நேரடியாக முன்வைத்து அவற்றிற்குத் தெள்ளத் தெளிவான பதில்களைப் பெற்றிருந்தால் அது பெரிதும் பயனுள்ளதாக இருந்திருக்கும். இந்தப் பிரச்சினைகளில் திரு. ஜின்னாவின் மனத்தை, உண்மையான நிலையை அறிய முயலாமல், சி.ஆர். திட்டம் பெருமளவுக்கு லாகூர் திட்டத்தை ஒத்தது என்பதை மெய்ப்பிப்பதிலேயே திரு. காந்தி தமது முழு நேரத்தையும் வீணாகச் செலவிட்டு, இந்தப் பிரச்சினைகளைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்குக் கிட்டிய மிகச் சிறந்த வாய்ப்பை இழந்து விட்டார்.

இப்பேச்சுவார்த்தைகளின் பின், காந்தியும் ஜின்னாவும் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் தங்கள் ஆட்டம் முடிந்தவுடன் இருக்கைக்குத் திரும்புவதுபோல் இனி வேறொன்றும் செய்வதற்கில்லையென்பது போலத் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பி விட்டனர். அவர்கள் திரும்பச் சந்திப்பார்கள் என்பதற்கோ எப்போது சந்திப்பார்கள் என்பதற்கோ குறிப்பில்லை. அடுத்து என்ன என்ற கேள்வி அவர்களைத் தொல்லைப்படுத்துவதாக இல்லை. எனினும் இந்தியாவின் முன்னேற்றம் எந்தச் சிக்கலைத் தீர்த்தால்தான் ஏற்படுமோ அந்தச் சிக்கல் குறித்து விவாதிக்க மறுத்தால் இந்தியா எப்படி முன்னேறும்? மக்கள் ஏற்கிறார்கள் அல்லது மறுக்கிறார்கள் என்ற வகையைச் சார்ந்தன்று இப்பிரச்சினை. தீர்வு காணப்பட வேண்டிய பிரச்சினை இது. எப்படி? உடன்பாடு அல்லது தம் மனப்போக்கின்படி அது அமைய வேண்டும். உடன்பாட்டின் வழி சிக்கலைத் தீர்ப்பதென்றால், ஒன்றிற்கொன்று தாழ்ந்து போகாத வகையிலான பேச்சுவார்த்தை வழி, விட்டுக் கொடுத்து முடிவு காண்பதாக இருக்க வேண்டும். ஒருவர்க்கு மற்றவர் தாழ்ந்து போய்ச் செய்து கொள்வது ஒப்பந்தமன்று. அது சர்வாதிகாரம். இறுதியில் நல்லுறவு நிலவ இருசாரரும் உடன்பாட்டுக்கு வரவேண்டும். ஆனால் உடன்பாடு என்பது காலங்கடத்துகின்ற வழியாக மாறக்கூடும். அது நல்லெண்ணத்தை உண்டாக்க அதிகக் காலம் பிடிக்கும். எவ்வளவு காலமாகும் என்று கூறமுடியாது. இந்தியாவின் அரசியல் சுதந்திரம் என்பது ஓர் உடனடித் தேவையாகும். அது ஒத்திப்போட முடியாதது; அதே சமயத்தில் வகுப்புப் பிரச்சினைக்குத் தீர்வு காணா

மல் அதனை வேகப்படுத்த முடியாது. இந்தியாவின் சுதந்திரத்தை உடன்பாட்டைச் சார்ந்திருக்கச் செய்வது அதற்கான தீர்வைக் கால வரையறையின்றி ஒத்திப் போடுவதாகும். வேறு ஏதேனும் விரைவான ஒரு முறையைக் கண்டுபிடிக்க வேண்டும். ஓர் சர்வதேசக் குழுவில் மத்தியஸ்தம் செய்யப்படுவது சாலச்சிறந்த வழியாக எனக்குப் படுகின்றது. பாகிஸ்தான் உள்ளிட்ட விவாதத்திற்குட்பட்ட சிறு பான்மையரின் பிரச்சினைகள் இக்குழுவிற்கு அனுப்பப்படலாம். இக்குழுவின் உறுப்பினர்கள் பிரிட்டிஷ் அரசுக்கு வெளியேயிருந்து பெறப்பட்டவர்களைக் கொண்டு அமைக்கப்பட வேண்டும். இந்தக் குழுவிற்கு, இந்தியாவின் சட்டப்படியான சிறுபான்மைக் குழுக்களான முஸ்லீம்கள், ஷெட்யூல்டு வகுப்பினர், சீக்கியர்கள், இந்திய கிறித்த வர்கள் ஆகிய ஒவ்வொரு பிரிவினரும் ஒரு நியமன உறுப்பினரை தேர்ந்து எடுத்து அனுப்ப கேட்டுக் கொள்ளப்பட வேண்டும். இந்தச் சிறுபான்மையர் இந்துக்களைப் போலவே தங்கள் கோரிக்கைகளைத் தெரிவிக்கக் குழுவின் முன் வரவேண்டும். குழு வழங்கும் முடிவை ஏற்றுக்கொள்ள இசையவேண்டும். பிரிட்டிஷ்காரர்கள் கீழ்க்கண்ட உறுதிமொழிகளைத் தரவேண்டும்:

1. அவர்கள் வகுப்புத்தீர்வு விஷயத்தில் தலையிடமாட்டார்கள். அது உடன்பாட்டிற்கோ, மத்தியஸ்தக் குழுவுக்கோ விடப் படும்.

2. வகுப்புப் பிரச்சினையில் மத்தியஸ்தக் குழுவின் முடிவை இந்திய அரசு சட்டத்தில் இடம்பெறச்செய்து பிரிட்டிஷார் அதனை நடைமுறைப்படுத்த வேண்டும்.

3. சர்வதேச மத்தியஸ்தக் குழு அளிக்கும் தீர்ப்பை இந்தியா விலுள்ள சிறுபான்மையினர் விஷயத்தில் தங்களுக்குள்ள கடமைப் பொறுப்புக்களைப் போதிய அளவு நிறைவேற்றி விட்டதற்கு அடையாளமாக அவர்கள் கருதவேண்டும். இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வழங்க இணக்கம் தெரிவிக்க வேண்டும்.

இந்த நடைமுறை பல நன்மைகளைக் கொண்டது. இது பிரிட்டிஷ் அரசு வகுப்புத்தீர்வில் தலையிடுமோ என்ற அச்சத்தை அகற்றுகின்றது. இந்த அச்சத்தைக் காரணங்காட்டியே காங்கிரஸ் கட்சி வகுப்பு சிக்கலைத் தீர்க்கவில்லை. சிறுபான்மையினர் காங்கிர சிடமிருந்து பெறக்கூடியதை விடவும் பிரிட்டிஷாரிடமிருந்து அதிகமான நன்மைகளைப் பெற்றுவிடக் கூடுமென்றும், எனவே சிறுபான்மையர் காங்கிரசுடன் உடன்பாட்டுக்கு வர விரும்பவில்லையென்றும் கூறப்படுகிறது. இந்தத் திட்டத்தில் இரண்டாவது நன்மை ஒன்றுண்டு:

அதாவது, அரசியலமைப்புப் பிரச்சினையைச் சிறுபான்மை யினரின் அங்கீகாரத்திற்கு உட்படுத்துவதன் மூலம் இந்தியாவின் அரசியலமைப்பு முன்னேற்ற விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் சிறுபான்மையினருக்கு ரத்து அதிகாரத்தை அளித்திருக்கிறது என்ற காங்கிரசின் ஆட்சேபத்தை இது அகற்றுகிறது. சிறுபான்மையினர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வெறும் கைப்பொம்மைகளாகச் செயல் பட்டு வருகிறார்கள் என்ற ஐயம் காங்கிரசுக்கு இருந்து வருவதால் ஒன்று அவர்கள் நியாயமற்ற முறையில் தமது சம்மதத்தை அளிக்கா திருக்கக்கூடும் அல்லது பிரிட்டிஷ் அரசாங்கத்தை அதன் அங்கீ காரத்தை அளிக்காதபடி அதனை நிர்ப்பந்திக்கக் கூடும் என்று குற்றம் சாட்டப்படுகிறது. இவ்விதம் குற்றம் சாட்டுவதற்கான எல்லாவித அடிப்படைகளையுமே சர்வதேச மத்தியஸ்தம் அறவே அகற்றுகிறது. மேலும் சிறுபான்மையினரின் ஆட்சேபத்துக்கும் எவ்வித இடமில் லாமல் போகிறது. அவர்களுடைய கோரிக்கைகள் நியாயமும் நேர்மையும் உடையனவாக இருக்கும் நிலையில் மத்தியஸ்த குழுவிற்கு அவர்கள் அஞ்சத் தேவையில்லை. மத்தியஸ்த குழு ஒன்றிற் குக் கட்டுப்படுவதில் எந்தத் தவறும் இல்லை. எந்த மனிதனும் தன் னுடைய வழக்கிற்குத் தானே நீதிபதியாக அனுமதிக்க முடியாது என்ற நன்கறியப்பட்ட விதியை இந்த முறை பின்பற்றுகின்றது. சிறுபான்மையினரின் விஷயத்தில் எந்த விதிவிலக்கையும் கொண்டு வரக் காரணமில்லை. ஒரு தனிமனிதனைப் போலவே அது தன் னுடைய சொந்த விஷயத்தில் தானே நீதிபதியாக இருக்க அனுமதிக்க முடியாது. ஆனால் பிரிட்டிஷ் அரசின் நிலை என்ன? பிரிட்டிஷ் அரசு இந்தத் திட்டத்தின் எப்பகுதியையும் மறுக்கக் காரணமில்லை. வகுப்புத் தீர்ப்பு பிரிட்டனுக்குக் கடும்பழி சேர்த்திருக்கிறது. பிரிட்டிஷாருக்கு இது ஒரு பயனற்ற பணி; இதிலிருந்து அவர்கள் விடுபடுவது நல்லது. அரசுப் பொறுப்பிலிருந்து பிரிட்டிஷார் விடுபடுமுன் அவர்களைப் பாதுகாவலர்களாகக் கருதி ஒப்படைக்கப் பட்ட சில வகுப்புகளின் நலத்தையும் பாதுகாப்பையும் கருத்தில் கொண்டு செயல்படுவது அவர்களுடைய பொறுப்பல்லவா? ஒரு சர்வதேச மத்தியஸ்தக் குழுவின் தீர்ப்பின் அடிப்படையில் அமைந்த பாதுகாப்புகளை அரசியல் சட்டத்தில் இடம்பெறச் செய்ய வேண்டும். மத்தியஸ்தக் குழுவின் தீர்ப்பைச் செயல்படுத்தும் விஷயத்தில் பிரிட்டிஷ் அரசுக்கு ஒரே ஒரு நிகழ்ச்சி சிறிது இடையூறு தரக்கூடும். அத்தகைய நிகழ்ச்சி, குழுவின் முன் எந்த வகுப்பேனும் தங்கள் கட்சியை எடுத்துரைக்காத நிலையிலேயே எழக்கூடும். அந்த நிலையில் எழக்கூடிய வினா, பிரிட்டிஷ் அரசு குழுவின் ஆணையை அக்

குறிப்பிட்ட வகுப்புக்கு எதிராக நடைமுறைப்படுத்துவதை நியாயப் படுத்துமா?

பிரிட்டிஷ அரசுக் குழுவின் ஆணையை முற்றிலும் நியாய மாக அக்கட்சிக்கு எதிராக நடைமுறைப்படுத்தும் என்றே நான் கருதுகிறேன். குழுவிற்கு முன் தன் கருத்தை எடுத்துரைக்காத கட்சி யின் தகுதி என்னவாக இருக்கும்? அத்தகைய கட்சி ஒரு வம்புச் சண்டைக்காரக் கட்சியே ஆகும். ஒரு வம்புச்சண்டைக்காரர் எப்படி நடத்தப்படுவார்? தடுப்பு நடவடிக்கைகளுக்கு அவர் உள்ளாக்கப்பட வேண்டும். குழுவின் முடிவே அரசியலமைப்புச் சட்டத்திற்குள் கொண்டு சென்று நடைமுறைப்படுத்துவது, இணங்காத வம்புச் சண்டைக்காரரைத் தடுப்பு நடவடிக்கைகளுக்கு உள்ளாக்கு வதை ஒத்ததேயாகும். தேவையேற்படின் பிரிட்டிஷ் அரசு அத்தகைய நடவடிக்கையில் இறங்கத் தயங்க வேண்டியதில்லை. இத்தகைய வர்களோடு மேற்கொள்ள வேண்டிய சரியான நடைமுறை இதுவே. முசோலினி அபிசீனியாவிற்கு எதிராகத் தன் வழக்கை நடுவர் தீர்ப்புக்கு முன்கொண்டு வரமறுத்தபோது சர்வதேச சட்டம் இத்தகைய தடுப்பு நடவடிக்கைகளைத்தான் மேற்கொண்டது. நான் சொல்லியிருப்பது வினாவிற்குரிய விடையாக இல்லாமல் இருக் கலாம். அடுத்து என்ன? வேறு என்னவாக இருக்குமென எனக்குத் தெரியவில்லை. எனக்குத் தெரிந்ததெல்லாம் இதற்கு ஒரு விடை இல்லாமல் இந்தியாவுக்கு விடுதலை இல்லை என்பதே. அந்த விடை முடிவானதாக இருக்க வேண்டும்; சரியானதாக இருக்க வேண்டும்; தொடர்புடைய பிரிவினருக்கு நிறைவளிப்பதாக இருக்க வேண்டும்.



# பின் இணைப்புகளின் பட்டியல்

## வரைபடங்கள்

## பின் இணைப்பு I

வகுப்புவாரியாக இந்தியாவின் மக்கள் தொகை

| வகுப்புகள் | பிரிட்டிஷ் இந்தியா | இந்திய சமஸ்தானங்களும் ஏஜென்சிகளும் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. இந்துக்கள் | 150,890,146 | 55,227,180 | 206,117,326 |
| 2. முஸ்லீம்கள் | 79,398,503 | 12,659,593 | 92,058,096 |
| 3. ஷெட்யூல்டு வகுப்பினர்[1] | 39,920,807 | 8,892,373 | 48,813,180 |
| 4. குலமரபினர் | 16,713,256 | 8,728,233 | 25,441,489 |
| 5. சீக்கியர் | 4,165,097 | 1,526,350 | 5,691,447 |
| 6. கிறித்தவர்கள் | | | |
| 1. இந்தியக் கிறித்தவர்கள் | 1,655,982 | 1,413,808 | 3,069,790 |
| 2. ஆங்கிலோ-இந்தியர் | 113,936 | 26,486 | 140,422 |
| 3. பிறர் | 75,751 | 7,708 | 83,459 |
| 7. ஜைனர் | 578,372 | 870,914 | 1,449,286 |
| 8. பௌத்தர் | 167,413 | 64,590 | 232,003 |
| 9. பார்சிகள் | 101,968 | 12,922 | 114,890 |
| 10. யூதர் | 19,327 | 3,153 | 22,480 |
| 11. பிறர் | 371,403 | 38,474 | 409,877 |
| மொத்தம் | 294,171,961 | 89,471,784 | 38,364,3745 |

1. இது இந்திய அரசால் தீண்டப்படாதவருக்கு 1935 ஆம் ஆண்டுச் சட்டப்படி வழங்கப்பட்ட பெயர்.

**குறிப்பு:** பிரிட்டிஷ் இந்தியாவிலும் இந்திய சமஸ்தானங்களிலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் கூட்டு எண்ணிக்கை சரியாக இல்லை. பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள ஆஜ்மீர் - மெர்வாராவுக்கும் குவாலியர் சமஸ்தானத்துக்கும் உரிய தொகை சேர்க்கப் படவில்லை. 1940 மக்கள் தொகைக் கணக்கு இவ்வெண்ணிக்கைகளைத் தரவில்லை.

## சர் சையத்தின் செல்வாக்கு

அலிகார் வெற்றிகளை ஈட்டியிருக்கிறது. அதன் மாணவர்கள் தங்கள் சமய எல்லைக்குள்ளேயே வாழ்க்கைப் போரை நிகழ்த்தத் தொடங்கியுள்ளனர். இவர்கள் அடங்கிப்பணிசெய்யும் இயல்பும் நாட்டுப்பற்றும் வலிமையுறக் கொண்டவர்கள். இந்தியாவின் அரசியல் எதிர்காலம் மிகுதியான திறனாய்வுக்கு உட்பட்டுள்ள இப்போது, சர் சையத் அகமத் கானின் உணர்ச்சியூட்டலும் அலிகாரின் போதனைகளும் முகமதிய வரலாற்றுப் பெருமையில், அதன் கீழ்ப்படிதலில், பகுத்தறிவில், அறிதிறனில் ஒளிமிகக் கொண்டு விளங்குதல் தங்கள் உரையில் சிறப்புற உரைக்கப்பட்டது. ஆனால் அன்பர்களே! நீங்கள், உங்கள் ஆட்சியாளரின் நேர்மையான போக்கிலும் நீதியிலும் உண்மையாகவும் நம்பிக்கையோடும் உள்ள நிலையில், அண்மைக்கால நிகழ்ச்சிகள் முகமதிய இளைய தலைமுறையினரின் உணர்ச்சிகளைக் கிளறியிருப்பதையும், அது அமைதியான உடன்பாட்டுக்கான நல்லுரையும் மென்மையான வழிகாட்டலையும் கடந்துபோகக்கூடும் என்பதையும் நீங்கள் அறியாமல் இருக்க முடியாது.

கிழக்கு வங்கம் மற்றும் அஸ்ஸாம் விவகாரங்கள் குறித்து எத்தகைய விவாதத்திலும் இறங்கும் உத்தேசம் தற்போது எனக்கு இல்லை. எனினும் புதிய மாகாணத்தைச் சேர்ந்த முகமதிய சமுதாயத்தினர் தங்களுக்குப் புதிதான நிலைமைகளில் நிதானப் போக்கையும் தன்னடக்கத்தையும் கடைப்பிடித்து வருவதற்காக எவருடைய மனத்தையும் புண்படுத்தாத வகையில் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இந்தப் புதிய நிலைமைகள் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருப்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும்; அதேசமயம் வங்க உணர்ச்சிப் பாங்குகளில் நேர்மையானவை யாவற்றுக்கும் எனது அனுதாபம் உண்டு. ஆனால் இவை யாவற்றையும் விட முக்கியமாக ஒரு விஷயத்தை நீங்கள் நம்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதாவது புதிய மாகாணத்தின் எதிர்காலம் இப்போது உறுதிசெய்யப்பட்டுவிட்டது என்று கருதுகிறேன்; இந்தப் புதிய மாகாணத்தின் விவகாரங்கள் சம்பந்தமாக வைசிராயும் அரசாங்கமும் கடைப்பிடிக்கும் கொள்கை இன, சமயவேறுபாடின்றி மொத்தத்தில் இன்றைய மக்களுக்கும் எதிர்கால மக்களுக்கும் மிகச்சிறந்தவை என எவைத் தோன்றியதோ அவற்றை முற்றிலும் கருத்திற் கொண்டே உருவாக்கப்பட்டது

என்பதையும், கிழக்கு வங்கம் மற்றும் அஸ்ஸாமைச் சேர்ந்த முகமதிய சமூகம் தனது விசுவாசம் மதிக்கப்படுவதிலும், தனது நலன்கள் பாதுகாக்கப்படுவதிலும் பிரிட்டிஷாரின் நேர்மையை என்றும் போலவே உறுதியாக நம்பலாம் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

## இந்தியாவில் அமைதியின்மை

அரசியல் சூழ்நிலை முற்றிலும் மாறியுள்ள ஒரு சந்தர்ப் பத்தில் நீங்கள் உங்கள் விண்ணப்பத்தைச் சமர்ப்பித்திருக்கிறீர்கள். இத்தகைய ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கவில்லை என்று மறுக்க முற்படுவது முற்றிலும் பேதமை; இந்தியாவுக்குப் புதிதான பல ஆர்வ விருப்பங்கள் முன்னிலைக்கு வந்துள்ளன. அவற்றை நாம் புறக் கணிக்கமுடியாது. அவ்வாறு செய்ய நினைப்பது தவறு. ஆனால் இந்த அமைதியின்மைக்கெல்லாம் காரணம் என்ன? மோசமான ஆட்சியால் லட்சோபலட்சம் மக்களுக்கு ஏற்பட்டுள்ள அதிருப்தி என இதனைக் கூறமுடியாது. மனக்குறை கொண்ட மக்களின் எழுச்சி என்றும் இதனைச் சொல்ல முடியாது. உண்மையிலேயே இவ்வாறு யார் கூறினாலும் அதனை வன்மையாக எதிர்க்கிறேன்.

## மேற்கத்திய கல்வியில் கனிந்த கனிகள்

நாட்டின் கல்வி வளர்ச்சியை இன்னமும் மக்களில் ஒரு சிறு பகுதியினரே துய்த்து வருகின்றனர். இதற்கு முதன்முதலில் வித்திட்டது பிரிட்டிஷ் ஆட்சியேயாகும். இதில் கனிந்த கனிகளைப் பேணிக்காக்கவும், அதற்குச் சரியான திசைவழியைக் காட்டவும், பிரிட்டிஷ் ஆட்சி தற்போது முடிந்ததனைத்தையும் செய்துவருகிறது. நாம் இப்போது செய்துவரும் அறுவடையில் சாவியாகிப் போன பல கூலமணிகள் இருக்கலாம். இங்கு விதைக்கப்பட்ட மேற்கத்திய தானியம் இந்திய மக்களின் தேவைகளுக்கு முற்றிலும் ஏற்புடையதாக இல்லாதிருக்கக்கூடும்: ஆயினும் ஆண்டுகள் செல்லச்செல்ல இந்தக் கல்வி அறுவடை அதிகரிக்கும்; அது அளிக்கும் ஊட்டத்தின் ஆரோக் கியம் கவனமிக்க நிர்வாகத்தையும் உற்பத்திப் பொருள்களது விநி யோகத்தையும் பொறுத்திருக்கும். ''ஐரோப்பிய பாணியைச் சேர்ந்த பிரதி நிதித்துவ அமைப்புகள் இந்திய மக்களுக்கு முற்றிலும் புதியவை'' என்று நீங்கள் கூறுவதற்காகவோ அல்லது அவற்றை இங்கு புகுத்து வதற்கு உளப்பூர்வமான மிகுந்த சிந்தனையும் கவனமும் தேவை

என்று கூறுவதற்காகவோ நீங்கள் என் மன்னிப்பை நாடத் தேவை யில்லை. கிழக்கத்திய இனங்களின் வழிவழிவந்த உள்ளார்ந்த உந்துணர்வுகளுக்கும் பாரம்பரியங்களுக்கும் இடையில் மேற்கத்திய உலகின் எல்லா அரசியல் அமைப்பு முறைகளையுமே நான் வர வேற்பேன் என்று கருதிவிடாதீர்கள். மேற்கத்திய பரந்த எண்ணப் போக்கும், மேற்கத்திய நாகரிகத்தின் போதனைகளும், பிரிட்டிஷாரின் தனிநபர் சுதந்திரமும் இந்திய மக்களுக்கு எவ்வளவோ நன்மை செய்ய முடியும். ஆனால் அந்த அரசியல்முறைகள் அனைத்தையும் ஏற்கத்தான் வேண்டும் என்று நடைமுறைக்கு ஒவ்வாத முறையில் பிடிவாதமாக வலியுறுத்தக்கூடாது என்று நீங்கள் கூறுவதில் எனக்கு உடன்பாடு உண்டு.

## முகமதியர்களின் அரசியல் எதிர்காலம்

பெருமக்களே! இப்போது அரசியல் எதிர்காலம் குறித்து உங்கள் நிலைக்கு வருகிறேன். அதாவது முகமதிய வகுப்பினரின் அரசியல் நிலை குறித்து நீங்கள் பேசுவது பற்றிக் கூறுகிறேன். பொதுநிர்வாக நிலைகளில் இவ்வகுப்பினர் உரிமைகோரும் பங்கு பற்றியோ விரிவான நிபந்தனைகளைப் பரிசீலித்தல் பற்றியோ நான் பேச இயலாது என்பதை நீங்கள் உணர்வீர்கள். நான் பொதுப் படையாகவே பேச இயலும். நீங்கள் எழுப்பிய, உங்களுடைய கருத்துகள் நான் அண்மையில் நியமித்த குழுவின் முன் உள்ளன. நான் உங்கள் உரையை அவர்களுக்கு அளிக்க உரிய செயலை மேற்கொள்வேன். அதே சமயத்தில் உங்கள் குறிப்புகள் குறித்து குழுவின் அறிக்கை குறித்து எதுவும் முன்னரே கூறாத வகையில் பொதுப்படையாக நான் பதில் சொல்லக் கூடும்.

## பிரதிநிதித்துவம் பற்றிய கேள்வி

நான் புரிந்துகொண்ட அளவில் உங்கள் உரையின் மையக் கருத்து, பிரதிநிதித்துவம் உள்ள எந்த அமைப்பிலும் அது நகராட்சியாயினும், மாவட்டக் கழகமாயினும், சட்ட மேலவையாயினும் ஒருதேர்தல் அமைப்பை அவற்றில் கொண்டுவரும்போது அல்லது தேர்தல் அமைப்பை விரிவாக்கும்போது முகமதிய வகுப்பு ஒரு வகுப்பாகக் கருதப்பட வேண்டுமென்ற உரிமையாகும். தேர்தல் அமைப்புகள் பலவற்றில் இப்போது அமைக்கப்பட்ட நிலையில் ஒரு முகமதியரை உறுப்பினராகக் கொண்டுவரும் நிலை இல்லை என்பதை நீங்கள் குறிப்பிடுகின்றீர்கள். தற்செயலாக அவ்வாறு வந்தாலும், அவ்வாறு வருவது அவருடைய கருத்தை விட்டுக் கொடுத்துவிட்டு, தன் சமூகத்துக்கு மாறான ஒரு பெரும்பான்மையின்

கருத்தை ஏற்று, அச்சமூகத்துக்கு அவர் பிரதிநிதியாக இல்லாவிட்டாலும், அதற்கிசைய வேண்டும். எனவே நீங்கள் உங்களுடைய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த சமூகத்தின் பெரும்பான்மை என்ற நிலையிலும் பேரரசுக்கு உங்கள் சமூகம் ஆற்றியுள்ள தொண்டின் அடிப்படையிலும் நியாயமாக உரிமை கோரியிருக்கிறீர்கள். இதில் உங்களுடன் முற்றிலும் ஒத்துப்போகிறேன்; தயவுசெய்து என்னைத் தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். பல்வேறு சமூகங்களின் பிரதிநிதித்துவம் எவ்வகையில் ஈட்டப்படும் என்று குறிப்பாகத் தெரிவிக்க இங்கு நான் முயற்சிக்கவில்லை. ஆனால் இந்தக் கண்டத்தின் மக்கட் தொகையை உள்ளடக்கிய பலதரப்பட்ட சமூகங்களின் நம்பிக்கைகளையும் பாரம்பரியங்களையும் கருத்திற்கொள்ளாமல் தனிப்பட்ட முறையில் வாக்குரிமை அளிக்கும் எந்த ஒரு தேர்தல் பிரதிநிதித்துவ முறையும் இந்தியாவில் பரிதாபகரமாக தோல்வியடையவே செய்யும் என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். இந்தியாவின் மிகப் பெரும்பாலான மக்கள் பிரதிநிதித்துவ அமைப்புகள் பற்றி எதுவும் தெரியாதவர்களாக இருக்கிறார்கள். நகரமன்றங்களும், மாவட்ட மன்றங்களும் சுயாட்சி என்னும் ஏணியின் ஆரம்பப்படிகளாக அமையவேண்டும் என்றும், இந்தத் திசைவழியில்தான் மக்களுக்குப் படிப்படியாக அரசியல் போதனை அளிக்க முடியும் என்றும் நீங்கள் கூறுவதை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

## உறுதிமொழி

இதற்கிடையே, ஒன்றை மட்டும் இங்கு கூறிக்கொள்ள விரும்புகிறேன். நான் சம்பந்தப்பட்ட எந்த ஒரு நிர்வாக மறுசீரமைப்பிலும் ஒரு சமூகம் என்ற முறையில் முகமதிய சமூகத்தினரின் அரசியல் உரிமைகளும் நலன்களும் பாதுகாக்கப்படும் என்று அவர்கள் உறுதியாக நம்பலாம்; அதேபோன்று, மாட்சிமை தங்கிய மன்னர் பிரானின் இந்திய சாம்ராஜ்யத்தில் வதியும் லட்சோப லட்சக்கணக்கான மக்களின் சமய நம்பிக்கைகளும் தேசிய மரபுகளும் இதுவரை மதிக்கப்பட்டு வந்தது போலவே இனியும் மதிக்கப்படுவதற்கு நீங்களும் இந்திய மக்களும் பிரிட்டிஷ் ஆட்சியின் மீது நம்பிக்கை வைக்கலாம்.

மேதகையீர், மற்றும் கனவான்களே! புகழ்மிக்க, பிரதிநிதித்துவம் வாய்ந்த இத்தனை முகமதிய தலைவர்களைச் சந்திக்கும் அரிய வாய்ப்பினை அளித்தமைக்காக உங்களுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தொலை தூரத்திலிருந்து இங்கு வருமளவுக்கு பொது விவகாரங்களில் நீங்கள் கொண்டுள்ள ஆழ்ந்த அக்கறையையும் ஊக்கத்தையும் பெரிதும் பாராட்டுகிறேன்; நீங்கள் சிம்லாவில் மிகக் குறுகிய காலமே தங்குவதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது.

# பின் இணைப்பு XIII

## 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்தின்படி ஒவ்வொரு மாகாண சட்டமன்றத்திலும் கீழ்ச்சபைக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள்

| மாகாணங்கள் | மொத்த இடங்கள் | பொது இடங்கள் | | பின்தங்கிய பிரதேசங்களின் பிரதிநிதிகளுக்கும் பழங்குடியினருக்கும் ஒதுக்கப்பட்ட இடங்கள் | சீக்கியர் இடங்கள் | முகமதியர் இடங்கள் | ஆங்கிலோ-இந்தியர் இடங்கள் | ஐரோப்பியர் இடங்கள் | இந்தியக் கிறித்தவர் இடங்கள் | வர்த்தகம், தொழில், சுரங்கம், தோட்டத் தொழில் பிரதிநிதிகளுக்கும் ஒதுக்கப்பட்ட இடங்கள் | நிலக்கிழார் இடங்கள் | பல்கலைக்கழக இடங்கள் | தொழிலாளர் பிரதிநிதிகள் இடங்கள் | பெண்களுக்கான இடங்கள் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | மொத்த பொது இடங்கள் | ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட பொது இடங்கள் | | | | | | | | | | | பொது | சீக்கியர் | முகமதியர் | ஆங்கிலோ - இந்தியர் | இந்தியக் கிறித்தவர் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| சென்னை | 215 | 146 | 30 | 1 | .. | 28 | 2 | 3 | 8 | 6 | 6 | 1 | 6 | 6 | .. | 1 | .. | 1 |
| பம்பாய் | 175 | 114 | 15 | 1 | .. | 29 | 2 | 3 | 3 | 7 | 2 | 1 | 7 | 5 | .. | 1 | .. | .. |
| வங்காளம் | 250 | 78 | 30 | .. | .. | 117 | 3 | 11 | 2 | 19 | 5 | 2 | 8 | 2 | .. | 2 | 1 | .. |
| ஐக்கிய மாகாணங்கள் | 228 | 140 | 20 | .. | .. | 64 | 1 | 2 | 2 | 3 | 6 | 1 | 3 | 4 | .. | 2 | .. | |
| பஞ்சாப் | 175 | 42 | 8 | .. | 31 | 84 | 1 | 1 | 2 | 1 | 5 | 1 | 3 | 1 | 1 | 2 | .. | .. |
| பீகார் | 152 | 86 | 15 | 7 | .. | 39 | 1 | 2 | 1 | 4 | 4 | 1 | 2 | 3 | .. | 1 | .. | .. |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மத்திய மாகாணங்களும் பேராரும் | 112 | 84 | 20 | 1 | .. | 14 | 1 | 1 | .. | 2 | 3 | 1 | 2 | 3 | .. | .. | .. | .. |
| அஸ்ஸாம் | 108 | 47 | 7 | 9 | .. | 34 | .. | 1 | 1 | 11 | .. | .. | 4 | 1 | .. | .. | .. | .. |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 60 | 9 | .. | .. | 3 | 36 | .. | .. | .. | .. | 2 | .. | .. | .. | .. | .. | .. | .. |
| ஒரிசா | 60 | 44 | 6 | 5 | .. | 4 | .. | .. | 1 | 1 | 2 | . | 1 | 2 | .. | .. | .. | .. |
| சிந்து | 60 | 18 | .. | .. | .. | 33 | .. | 2 | .. | 2 | 2 | .. | 1 | 1 | .. | 1 | .. | .. |

பம்பாயில் பொது இடங்களில் ஏழு இடங்கள் மராட்டியர்களுக்கு ஒதுக்கப்படவேண்டும்.
பஞ்சாபில் நிலக்கிழார் இடங்களில் ஒன்று துமந்தாரால் நிரப்பப்படவேண்டும்.
அஸ்ஸாமிலும் ஒரிசாவிலும் பெண்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் வகுப்புவாரி அடிப்படையில் இருத்தல்கூடாது.

## ஒவ்வொரு மாகாணத்திலும் இந்திய அரசு சட்டம் 1935 கூறும் மேலவைக்கான இட ஒதுக்கீடு

| மாநிலம் 1 | 2 | கூடுதல் 3 | பொது 4 | முகம் 5 | ஐரோப் 6 | இந்தியக் கிறித் 7 | |
|---|---|---|---|---|---|---|---|
| சென்னை | 54 56 | 35 | 7 | 1 | 3 | .. | 8க்கு குறையாமலும் 10க்கு மிகாமலும் |
| பம்பாய் | 29 30 | 20 | 5 | 1 | .. | .. | 3க்கு குறையாமலும் 4க்கு மிகாமலும் |
| வங்காளம் | 63 65 | 10 | 17 | 3 | .. | 27 | 6க்கு குறையாமலும் 8க்கு மிகாமலும் |
| ஐக்கிய மாகாணங்கள் | 58 60 | 34 | 17 | 1 | .. | .. | 6க்கு குறையாமலும் 8க்கு மிகாமலும் |
| பீகார் | 29 30 | 9 | 4 | 1 | .. | 12 | 3க்கு குறையாமலும் 4க்கு மிகாமலும் |
| அஸ்ஸாம் | 21 22 | 10 | 6 | 2 | .. | .. | 3க்கு குறையாமலும் 4க்கு மிகாமலும் |

## பின் இணைப்பு XV

1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி கூட்டாட்சி சட்டமன்றத்தின் கீழ்ச்சபையில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு இடஒதுக்கீடு

| மாகாணம் | மொத்த இடங்கள் | மொத்த பொது இடங்கள் | ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்படும் பொது இடங்கள் | சீக்கியர் இடங்கள் | முகமதியர் இடங்கள் | ஆங்கிலோ - இந்தியர் இடங்கள் | ஐரோப்பியர் இடங்கள் | இந்தியக் கிறித்தவர் இடங்கள் | தொழில், வர்த்தகப் பிரதிநிதிகளுக்கு ஒதுக்கப்படும் இடங்கள் | நிலக்கிழார் இடங்கள் | தொழிலாளர் பிரதிநிதிகளின் இடங்கள் | பெண்களுக்கான இடங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| சென்னை | 37 | 19 | 4 | .. | 8 | 1 | 1 | 2 | 2 | 1 | 1 | 2 |
| பம்பாய் | 30 | 13 | 2 | .. | 6 | 1 | 1 | 1 | 3 | 1 | 2 | 2 |
| வங்காளம் | 37 | 10 | 3 | .. | 17 | 1 | 1 | 1 | 3 | 1 | 2 | 1 |
| ஐக்கிய மாகாணங்கள் | 37 | 19 | 3 | .. | 12 | 1 | 1 | 1 | | 1 | 1 | 1 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பஞ்சாப் | 30 | 6 | 1 | 6 | 14 | .. | 1 | 1 | .. | 1 | .. | 1 |
| பீகார் | 30 | 16 | 2 | .. | 9 | .. | 1 | 1 | .. | 1 | 1 | 1 |
| மத்திய மாகாணங்களும் பேராரும் | 15 | .. | 2 | .. | 3 | .. | .. | .. | .. | 1 | 1 | 1 |
| அஸ்ஸாம் | 10 | 4 | 1 | .. | 3 | .. | 1 | 1 | .. | .. | 1 | .. |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 5 | 1 | .. | .. | 4 | .. | .. | .. | .. | .. | .. | .. |
| ஒரிசா | 5 | 4 | 1 | .. | 1 | .. | .. | .. | .. | .. | .. | .. |
| சிந்து | 5 | 1 | .. | .. | 3 | .. | 1 | .. | .. | .. | .. | .. |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தான் | 1 | .. | .. | .. | 1 | .. | .. | .. | .. | .. | .. | .. |
| டில்லி | 2 | 1 | .. | .. | 1 | .. | .. | .. | .. | .. | .. | .. |
| ஆஜ்மீர்-மேர்வாரா | 1 | 1 | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | |
| குடகு | 1 | 1 | .. | .. | .. | .. | .. | .. | . | .. | .. | .. |
| மாகாணங்களல்லாத இடங்கள் | 4 | .. | .. | .. | .. | .. | .. | .. | 3 | .. | 1 | .. |
| மொத்த இடங்கள் | 250 | 105 | 19 | 6 | 82 | 4 | 8 | 8 | 11 | 7 | 10 | 9 |

# பின் இணைப்பு XVI

## 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி கூட்டாட்சி சட்ட மன்றத்தின் மேல்சபையில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு ஒதுக்கப்படும் இடங்கள்

| மாகாணம் அல்லது சமூகம் | மொத்த இடங்கள் | பொது இடங்கள் | ஷெட்யூல்டு வகுப்பினருக்கான இடங்கள் | சீக்கியர் இடங்கள் | முஸ்லிம்கள் இடங்கள் | பெண்களுக்கான இடங்கள் |
|---|---|---|---|---|---|---|
| சென்னை | 20 | 14 | 1 | .. | 4 | 1 |
| பம்பாய் | 16 | 10 | 1 | .. | 4 | 1 |
| வங்காளம் | 20 | 8 | 1 | .. | 10 | 1 |
| ஐக்கிய மாகாணங்கள் | 20 | 11 | 1 | .. | 7 | 1 |
| பஞ்சாப் | 16 | 3 | .. | 4 | 8 | 1 |
| பீகார் | 16 | 10 | 1 | .. | 4 | 1 |
| மத்திய மாகாணங்களும் பேராரும் | 6 | 6 | 1 | .. | 1 | .. |
| அஸ்ஸாம் | 5 | 6 | .. | .. | 2 | .. |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 5 | 1 | .. | .. | 4 | .. |
| ஒரிசா | 5 | 4 | .. | .. | 1 | .. |
| சிந்து | 5 | 2 | .. | .. | 3 | .. |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தான் | 1 | .. | .. | .. | 1 | .. |
| டில்லி | 1 | 1 | .. | .. | .. | .. |
| ஆஜ்மீர்-மேர்வாரா | 1 | 1 | .. | .. | .. | .. |
| குடகு | 1 | 1 | .. | .. | .. | .. |
| ஆங்கிலோ-இந்தியர் | 1 | .. | .. | .. | .. | ,, |
| ஐரோப்பியர்கள் | 7 | .. | .. | .. | .. | .. |
| இந்தியக் கிறித்தவர்கள் | 2 | .. | .. | .. | .. | .. |
| மொத்தம் | 150 | 75 | 6 | 4 | 40 | 6 |

## பின் இணைப்பு XVII

### 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி கூட்டாட்சி சட்ட மன்றத்தின் மேல் சபையிலும் கீழ்ச்சபையிலும் இந்திய சமஸ்தானங்களுக்கு இட ஒதுக்கீடு

| சமஸ்தானம் | மேல்சபையில் இடம் | | | கீழ்ச்சபையில் இடம் | மக்கள்தொகை |
|---|---|---|---|---|---|
| ஐதராபாத் | 5 | பிரிவு | 1 | 16 | 14,436,143 |
| மைசூர் | 3 | பிரிவு | 2 | 7 | 6,557,302 |
| காஷ்மீர் | 3 | பிரிவு | 3 | 4 | 3,646,242 |
| குவாலியர் | 3 | பிரிவு | 4 | 4 | 3,523,070 |
| பரோடா | 3 | பிரிவு | 5 | 3 | 2,443,007 |
| கலாத் | 2 | பிரிவு | 6 | 1 | 342,101 |
| சிக்கிம் | 1 | பிரிவு | 7 | .. | 109,898 |
| ராம்பூர் | 1 | பிரிவு | 8 | 1 | 465,225 |
| பெனாரஸ் | 1 | ,, | 8 | 1 | 391,272 |
| திருவாங்கூர் | 2 | பிரிவு | 9 | 5 | 5,095,973 |
| கொச்சி | 2 | ,, | 9 | 1 | 1,205,016 |
| புதுக்கோட்டை } | | | | | 400,694 |
| பங்கனபள்ளி } | 1 | ,, | 9 | 1 | 39,218 |
| சண்டூர் } | | | | | 13,583 |

பிரிவு 10

| சமஸ்தானம் | மேல்சபையில் இடம் | கீழ்ச்சபையில் இடம் | மக்கள்தொகை |
|---|---|---|---|
| உதால்பூர் | 2 | 2 | 1,566,010 |
| ஜெய்ப்பூர் | 2 | 3 | 2,031,775 |
| ஜோத்பூர் | 2 | 2 | 2,125,982 |
| பிகாஷீர் | 2 | 1 | 936,218 |
| ஆள்வார் | 1 | 1 | 749,751 |
| கோட்டா | 1 | 1 | 685,804 |
| பாத்பூர் | 1 | 1 | 486,954 |
| டோங்க் | 1 | 1 | 317,360 |
| தோல்பூர் } | 1 | 1 | 254,986 |
| கருளி } | 1 | | 140,525 |
| ஹண்டி } | 1 | 1 | 216,722 |
| சிரோகி } | 1 | | 216,525 |

| மஸ்தானம் | மேல்சபையில் இடம் | கீழ்ச்சபையில் இடம் | மக்கள் தொகை |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| துர்காபூர் | 1 | 1 | 227,544 |
| பன்ஸ்வாரா | | | 260,670 |
| பர்தார்கார் | 1 | 1 | 76,530 |
| ஜல்வார் | | | 107,890 |
| ஜெய்சால்மர் | 1 | 1 | 76,255 |
| கிஷன்கார் | | | 85,744 |

பிரிவு 11

| | | | |
|---|---|---|---|
| இந்தூர் | 2 | 2 | 1,325,089 |
| போபால் | 2 | 1 | 729,955 |
| ஹேவா | 2 | 2 | 1,587,445 |
| தட்டா | 1 | 1 | 158,834 |
| அர்ச்சா | | | 314,661 |
| தர் | 1 | 1 | 243,430 |
| தேவாஸ் | | | 83,321 |
| ,, | | | 70,513 |
| ஜவோரா | 1 | 1 | 100,166 |
| ராட்லம் | | | 107,321 |
| பன்னா | 1 | 1 | 212,130 |
| சம்தர் | | | 33,307 |
| அஜய்கர் | | | 85,595 |
| பிஜாவர் | 1 | 1 | 115,852 |
| சர்க்காரி | | | 120,351 |
| சர்த்தர்பூர் | | | 161,267 |
| பயோனி | 1 | 1 | 19,132 |
| நகோட் | | | 74,589 |
| மல்கர் | | | 68,991 |
| பருந்தா | | | 16,071 |

| மஸ்தானம் | மேல்சபையில் இடம் | கீழ்ச்சபையில் இடம் | மக்கள் தொகை |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| பர்வானி<br>அல்ராஜ்பூர்<br>பாபூர் | 1 | 1 | 141,110<br>101,963<br>54,225 |
| ஜபுரா<br>சல்லானா<br>சிதாமௌ | 1 | 1 | 145,525<br>35,223<br>28,422 |
| ராஜ்கார்<br>நரசிங்கர்<br>கிச்சிபூர் | 1 | 1 | 134,391<br>113,373<br>45,653 |
| | | பிரிவு 12 | |
| கட்ச் | 1 | 1 | 514,307 |
| இடார் | 1 | 1 | 262,660 |
| நவாநகர் | 1 | 1 | 409,192 |
| பவநகர் | 1 | 1 | 500,274 |
| ஜீனாகத் | 1 | 1 | 545,152 |
| ராஜ்பிப்லா<br>பலன்பூர் | 1 | 1 | 206,114<br>264,179 |
| தரங்தரா<br>கோண்டல் | 1 | 1 | 89,961<br>206,346 |
| போர்பந்தர்<br>மோர்வா | 1 | 1 | 115,673<br>113,023 |
| ரதன்பூர்<br>வங்கானீர்<br>பலதானா | 1 | 1 | 70,550<br>44,259<br>624,150 |
| கம்பேய்<br>தரம்பூர்<br>பலாஸ்லூர் | 1 | 1 | 67,701<br>112,031<br>52,527 |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| பரியா | | | 159,429 |
| சோட்டா உதிபூர் | 1 | 1 | 144,640 |
| சந்த் | | | 85,531 |
| லுனாவாடா | | | 95,162 |
| பனடா | | | 46,839 |
| சச்சின் | 1 | | 22,107 |
| ஜவகர் | | | 57,261 |
| தண்டா | | | 26,196 |
| | | 1 | |
| தரோல் | | | 27,639 |
| லிம்ப்டி | 1 | | 40,088 |
| வத்வான் | | | 42,602 |
| ராஜ்கோட் | | | 75,540 |

பிரிவு13

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| கோலாபூர் | 1 | 1 | 957,137 |
| சங்கில் | 1 | 1 | 258,442 |
| சவந்தவாடி | | | 230,489 |
| ஜன்ஜிரா | | | 110,379 |
| முத்தோல் | 1 | 1 | 62,322 |
| போர் | | | 141,540 |
| ஜம்கண்டி | | | 114,270 |
| மிராஜ் | | | 93,938 |
| மிராஜ் | 1 | 1 | 40,434 |
| குருந்துவாத் | | | 44,204 |
| குருந்துவாத் | | | 75,540 |
| அகல்கோட் | | | 92,605 |
| பல்டான் | | | 58,761 |
| ஜாத் | 1 | 1 | 91,099 |
| ஔந்த் | | | 76,507 |
| ராம்துர்க் | | | 35,454 |
| பாட்டியாலா | 2 | 2 | 1,625,520 |

| மஸ்தானம் | மேல்சபையில் இடம் | கீழ்ச்சபையில் இடம் | மக்கள் தொகை |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| பவல்பூர் | 2 | 1 | 984,612 |
| கைர்பூர் | 1 | 1 | 227,183 |
| கபூர்தாலா | 1 | 1 | 316,757 |
| ஜிந்த் | 1 | 1 | 324,676 |
| நாபா | 1 | 1 | 287,574 |
| டெஹ்ரி கார்வால் | | 1 | 349,563 |
| மண்டி<br>பிளாஸ்பூர்<br>சுகத் | 1 | 1 | 267,465<br>100,994<br>5840 |
| சிர்முர்<br>சம்பா | 1 | 1 | 168,568<br>146,870 |
| பரீத்கோட்<br>மாலேகோட்லா<br>லொஹரு | 1 | 1 | 164,364<br>83,072<br>23,338 |
| கூச்பீகார் | 1 | 1 | 590,886 |
| திரிபுரா<br>மணிப்பூர் | 1<br>1 | 1 | 382,450<br>445,506 |
| மயூர்பஞ்ச்<br>சோனாபூர் | 1<br>1 | 1 | 389,603<br>237,920 |
| பாட்னா<br>காலகண்டி | 1<br>1 | 1 | 566,924<br>513,716 |
| கியோஞ்சார்<br>கஸ்பூர்<br>பாஸ்தார்<br>சுர்குஜா | 1<br>1<br>1<br>1 | 1 | 460,609<br>356,674<br>524,721<br>501,930 |

| | | | | |
|---|---|---|---|---|
| கஸ்பூர் | | தென்கானல் | | 284,326 |
| பம்ரா | | நயாகட் | | 142,406 |
| சேனாகேலா | 1 | சேனாகேலா | 3 | 142,525 |
| பௌத் | | பௌத் | | 135,248 |
| பொனேய் | | தல்சேர் | | 60,702 |
| | | பொனேய் | | 80,186 |
| | | நீலகிரி | | 68,594 |
| | | பம்ரா | | 151,047 |
| பெஸ்டா | | ராஜ்காட் | | 277,569 |
| சுர்குஜா | | கைர்கட் | | 157,400 |
| ராஜ்காட் | 1 | ஜாஷ்பூர் | 3 | 193,698 |
| நந்கயோன் | | கங்கார் | | 136,101 |
| | | சாரங்கட் | | 128,967 |
| | | கொரயா | | 90,886 |
| | | நந்தயோன் | | 162,380 |
| கைர்கட் | | | | |
| ஜாஷ்பூர் | | | | |
| கங்கார் | 1 | | | |
| கொரயா | | | | |
| சாரங்கட் | | | | |
| பட்டியலின் பத்தி 12 இல் விளக்கப்பட்டவை | 2 | பட்டியலின் பத்தி 12 இல் விளக்கப்பட்டவை | 5 | 3,047,126 |
| | | கூடுதல் மக்கள்தொகை | | 78,996,344 |

## பின் இணைப்பு XVIII

# மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் வழங்கிய வகுப்புத் தீர்ப்பு - 1932

1. வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடரின் இறுதியில் மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசின் சார்பில் கடந்த டிசம்பர் முதல் தேதியன்று பிரதமர் அறிக்கை ஒன்றை வெளியிட்டார். அந்த அறிக்கை உடனடியாக நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. வகுப்புப் பிரச்சினைகள் குறித்து அனைத்துக் கட்சிகளுக்கும் ஏற்புடையதான ஓர் உடன்பாட்டைக் காண மாநாடு தவறிவிட்டது. இதன் காரணமாக இந்தியாவின் அரசியல் சட்ட முன்னேற்றம் எவ்வகையிலும் தடைபடக்கூடாது என்பதிலும், பிரச்சினையை நுணுகி ஆராய்ந்து, ஓர் இடைக்காலத் திட்டத்தை வகுத்து, இத்தடையை அகற்றவேண்டும் என்பதிலும் மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் உறுதி கொண்டுள்ளது. இவ்வாறு அறிக்கையில்[1] தெளிவுபடுத்தப்பட்டிருந்தது.

2. இந்தியாவின் பல்வேறு சமூகத்தினர் இப்பிரச்சினையில் ஓர் உடன்பாட்டுக்கு வரத் தொடர்ந்து தவறிவருவதால், ஒரு புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்கும் திட்டங்களின் முன்னேற்றம் பெரிதும் தடைபடுகிறது என்று தெரிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து, மிகவும் சிக்கலான, கடினமான, பெரும் சர்ச்சைக்குரிய இப்பிரச்சினையைத் தாங்கள் மீண்டும் மிகக் கவனமாகப் பரிசீலித்து ஆராய்ந்து வருவதாக கடந்த மார்ச் 19 ஆம் தேதியன்று மன்னர் பிரான் அரசாங்கம் அறிவித்தது. புதிய அரசியலமைப்புச்சட்டத்தின் கீழ் சிறுபான்மையினரின் நிலை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் குறைந்தபட்சம் சில அம்சங்களைப் பற்றியாவது ஒரு முடிவுக்கு வரவில்லை என்றால் அரசியலமைப்புச்சட்டத்தை வகுக்கும் பணியில் மேற்கொண்டு முன்னேற முடியாது என்பதை அரசாங்கம் இப்போது நன்கு உணர்ந்துள்ளது.

3. இதன்படி, கீழே தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கான வழிவகை ஏற்பாடுகளை இந்திய அரசிய

---

1. நாடாளுமன்ற அறிக்கை, 1932. இது அதிகாரபூர்வமாக வகுப்புத் தீர்ப்பு என அழைக்கப்படுகிறது.

லமைச்சட்டம் சம்பந்தமாக விரைவில் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படவிருக்கும் பிரேரணைகளில் சேர்ப்பது என மன்னர் பிரான் அரசாங்கம் முடிவுசெய்துள்ளது. அரசியலமைப்புச் சட்டம் வகுக்கப்படும் காலத்தில் சிறுபான்மையினருக்கு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த இதர ஏராளமான பிரச்சினைகள் குறித்து முடிவெடுக்க வேண்டிய அவசியம் ஏற்படும் என்பதை அரசு உணரத் தவறவில்லை என்பதனையே இத்திட்டத்தை வரையறைக்குட்படுத்தும் முடிவு குறிக்கிறது. மேலும், பிரதிநிதித்துவத்தின் வழிமுறை, விகிதாசாரங்கள் போன்றவற்றை அறிவித்துவிட்டால், இன்னமும் பரிசீலிக்கப்படாத இதர வகுப்புப் பிரச்சினைகளுக்குச் சம்பந்தப்பட்ட சமூகத்தினரே ஒரு சமரச முடிவு காண்பது சாத்தியமாகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே இம்முடிவு மேற்கொள்ளப் பட்டுள்ளது.

4. மன்னர் பிரான் அரசு பின்கண்டவற்றை மிகவும் தெளிவுபடுத்த விரும்புகிறது; தான் எடுத்த முடிவைத் திருத்தும் நோக்கத்தோடு மேற்கொள்ளப்படும் எந்தப் பேச்சுவார்த்தைகளிலும் அது தானாகவே முன்வந்து கலந்துகொள்ளாது; சம்பந்தப்பட்ட அனைத்துத் தரப்பினரின் ஆதரவைப் பெறாமல் இந்த முடிவை மாற்றுவதற்கு வைக்கப்படும் எந்தக் கோரிக்கையையும் அது பரிசீலிக்காது. ஆனால் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் ஓர் உடன்பாட்டை அது மகிழ்ச்சியோடு வரவேற்கும்; இத்தகைய முயற்சிக்கு அது எவ்வகையிலும் தனது கதவுகளை மூடாது. எனவே, ஒரு புதிய இந்திய அரசாங்க மசோதா சட்டமாக்கப்படுவதற்கு முன்னர், ஆளுநர்களின் ஆளுகையின் கீழ் உள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாகாணங்கள் குறித்தோ, அல்லது பிரிட்டிஷ் இந்தியா முழுவதும் குறித்தோ நடைமுறை சாத்தியமான ஒரு மாற்றுத் திட்டத்தைச் சம்பந்தப்பட்ட சமூகத்தினர் ஏற்றுக் கொண் டுள்ளனர் என்று மன்னர் பிரான் அரசு மனநிறைவு அடையும் பட்சத்தில், தற்போது அறிவிக்கப்பட்டிருக்கும் திட்டத்திற்குப் பதிலாக இந்த மாற்றுத் திட்டத்தை ஏற்கும்படி நாடாளுமன்றத்திற்குப் பரிந்துரை செய்ய அது தயாராக உள்ளது.

5. ஆளுநர்களின் மாகாணங்களிலுள்ள சட்டமன்றங்களில் அல்லது மேலவை இருக்கும்பட்சத்தில் கீழவைகளில் இத்துடன் இணைக்கப்பட்டுள்ள அட்டவணையில் காட்டியுள்ளபடி இடங்கள் ஒதுக்கப்படும்.

6. முகமதிய, ஐரோப்பிய, சீக்கிய தொகுதிகளுக்கு ஒதுக்கப்

படும் இடங்களுக்கான தேர்தல் மாகாணம் முழுவதும் தனிவாக்காளர் தொகுதிகளைச் சேர்ந்த வாக்காளர்கள் வாக்களிக்கும் அடிப்படையில் நடைபெறும் (விசேட சந்தர்ப்பங்களில் ''பின்தங்கியவை'' எனக் குறிப்பிடப்படும் எந்தப் பகுதிகளும் இதில் அடங்கமாட்டா.)

பத்து ஆண்டுகளுக்குப் பிறகு சம்பந்தப்பட்ட வகுப்பினரின் சம்மதத்துடன் இந்தத் தேர்தல் ஏற்பாட்டை (கீழேயுள்ளவை போன்ற இதர ஏற்பாடுகளையும்) திருத்தியமைத்துக்கொள்ள அதிகாரமளிப்பதற்கு அரசியலமைப்புச் சட்டத்திலேயே வகை செய்யப்படும்; இதனை உறுதி செய்து கொள்வதற்குத் தகுந்த வழிமுறைகள் வகுக்கப்படும்.

7. முகமதிய, சீக்கிய, இந்தியக்கிறித்தவ(கீழே 10 ஆவது பத்தி பார்க்கவும்), ஆங்கிலோ-இந்திய (கீழே 11 ஆவது பத்தி பார்க்கவும்) அல்லது ஐரோப்பியத் தொகுதிகளில் எதிலும் வாக்காளர்களாக இல்லாத வாக்களிக்கத் தகுதிபெற்ற எல்லா வாக்காளர்களும் ஒரு பொதுத் தொகுதியில் வாக்களிக்க உரிமை பெற்றிருப்பார்கள்.

8. பம்பாயில் சில குறிப்பிட்ட இரட்டை உறுப்பினர் பொதுத் தொகுதிகளில் மராட்டியர்களுக்கு ஏழு இடங்கள் ஒதுக்கப்படும்.

9. வாக்களிக்கத் தகுதிபெற்ற ''தாழ்த்தப்பட்ட வகுப்பினர்'' ஒரு பொதுத் தொகுதியில் வாக்களிப்பர். இந்த வகுப்பினர் இந்த முறையால் மட்டும் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் பெறுவது சாத்தியமில்லை என்பதால், அட்டவணையில் காட்டியுள்ளபடி அநேக தனி இடங்கள் அவர்களுக்கு ஒதுக்கப்படும். தேர்தல் விதிமுறைப்படி ''தாழ்த்தப்பட்ட வகுப்பினர்'' மட்டுமே வாக்களிக்கும் தனித்தொகுதிகளில் நடைபெறும் தேர்தல்கள் மூலம் இந்த இடங்கள் நிரப்பப்படும். மேலே குறிப்பிட்டுள்ளவாறு, இத்தகைய ஒரு தனித்தொகுதியில் வாக்களிக்கும் ஒருவர் பொதுத் தொகுதியில் வாக்களிக்கவும் உரிமை பெற்றிருக்கிறார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மிகப்பெரும் எண்ணிக்கையில் இருக்கும் குறிப்பிட்ட பகுதிகளில் இத்தொகுதிகள் அமைக்கப்படும்; ஆனால் சென்னையைத் தவிர அவை மாகாணம் முழுமையும் உள்ளடக்கியவையாக இருக்கமாட்டா.

வங்காளத்தைப் பொறுத்தவரையில், சில பொதுத் தொகுதிகளில் பெரும்பான்மையான வாக்காளர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பைச்

சேர்ந்தவர்களாக இருக்கக்கூடும் எனத் தோன்றுகிறது. எனவே, மேற்கொண்டு ஆராய்ந்து முடிவு செய்யும்வரை அந்த மாகாணத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான தனித்தொகுதிகளிலிருந்து எத்தனைப் பேர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்பது இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. வங்காள சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் 10க்கும் குறையாமல் இடங்கள் பெறவேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான தனித்தொகுதிகளில் வாக்களிக்க உரிமைபெற்றவர்கள் யார் என்பது இன்னமும் திட்டவட்டமாக, இறுதியாக முடிவு செய்யப்படவில்லை. வாக்குரிமைக்குழு அறிக்கையில் பரிந்துரைக்கப்பட்டுள்ள பொதுக்கோட்பாடுகளின் அடிப்படையில் இது பொதுவாகத் தீர்மானிக்கப்படும். ஆனால் வட இந்தியாவில் சில மாகாணங்களில் தீண்டாமை குறித்த பொது விதியைப் பயன்படுத்துவது அங்குள்ள விசேட நிலைமைகளுக்கு பொருந்தாத வகையில் சில சந்தர்ப்பங்களில் பொருள் கொள்வதில் போய் முடியக்கூடும்; எனவே இத்தகைய ஒரு மாகாணத்தில் இது விஷயத்தில் மாற்றம் காணுவது அவசியமாக இருக்கக்கூடும்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான இந்தத் தனித்தொகுதிகள் குறிப்பிட்ட காலத்திற்கும் அதிகமாகத் தேவைப்படும் என்று மன்னர்பிரான் அரசு கருதவில்லை. 6ஆவது பத்தியில் குறிப்பிடப்பட்டிருக்கும் தேர்தல் திருத்தப் பொது அதிகாரங்களின்படி இந்தத் தொகுதிகள் ஏற்கெனவே ஒழிக்கப்படாத பட்சத்தில், இவற்றை 20 ஆண்டுகளுக்குப் பிறகு முடிவுக்குக் கொண்டுவருவதற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தில் வகை செய்ய அரசு உத்தேசித்துள்ளது.

10. இந்தியக் கிறித்தவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள இடங்களுக்கான தேர்தல் தனிவாக்காளர் தொகுதிகளில் வாக்காளர்கள் வாக்களிப்பதன் மூலம் நடைபெறும். அநேகமாக சென்னையைத் தவிர, மாகாணம் முழுதையும் உள்ளடக்கிய இந்தியக் கிறித்தவ வாக்காளர் தொகுதிகளை உருவாக்குவதை நடைமுறைச் சிக்கல்கள் தடுக்கும் என்று கிட்டத்தட்ட நிச்சயமாகத் தோன்றுகிறது. எனவே இதனால் மாகாணத்தில் ஒன்று அல்லது இரண்டு பொறுக்கி எடுக்கப்பட்ட பகுதிகளில் மட்டுமே விசேட இந்தியக் கிறித்தவ வாக்காளர் தொகுதிகள் அமைக்கப்படவேண்டியிருக்கும். இந்தப் பகுதிகளிலுள்ள இந்தியக் கிறித்தவ வாக்காளர்கள் பொதுத்தொகுதியில் வாக்களிக்க மாட்டார்கள். இந்தப் பகுதிகளுக்கு வெளியே உள்ள

இந்தியக் கிறித்தவ வாக்காளர்கள் பொதுத் தொகுதியில் வாக் களிப்பார்கள். இந்தியக் கிறித்தவ சமூகத்தில் ஒரு கணிசமான பகுதி யின் பூர்வீக பழங்குடி மக்களைச் சேர்ந்தவர்களாக இருக்கும் பீகாரிலும், ஒரிசாவிலும் விசேட ஏற்பாடுகள் செய்வது அவசியமாக இருக்கும்.

11. ஆங்கிலோ-இந்தியர்களுக்கு ஒதுக்கப்படும் இடங்களுக் கான தேர்தல் வாக்காளர்கள் தனி வாக்காளர் தொகுதிகளில் வாக் களிப்பதன் மூலம் நடைபெறும். இந்த விஷயத்தில் எழக்கூடிய எத்தகைய நடைமுறைச் சிக்கல்களையும் ஆராய்ந்தறியும் நிபந் தனைக்குட்பட்டு, ஆங்கிலோ-இந்திய வாக்காளர் தொகுதிகள் ஒவ்வொரு மாகாணத்தின் பிரதேசம் முழுவதையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும் என்றும், அஞ்சல் வழி வாக்களிப்புமுறையைப் பயன்படுத்த வேண்டும் என்றும் இப்போதைக்கு உத்தேசிக்கப் பட்டுள்ளது; எனினும் இதில் இறுதிமுடிவு எதுவும் இன்னமும் எடுக்கப்படவில்லை.

12. பின்தங்கிய பிரதேசங்களின் பிரதிநிதிகளுக்கு ஒதுக்கப் படும் இடங்களை நிரப்பும் முறை இன்னும் பரிசீலனையில் இருக்கிறது; இத்தகைய பிரதேசங்கள் சம்பந்தமாக அரசியலமைப்புச் சட்டப்படியான ஏற்பாடுகள் குறித்து இறுதி முடிவெடுக்கப்படும் வரை இவர்களுக்கு ஒதுக்கப்படும் இடங்களின் எண்ணிக்கை தாற் காலிகமானதாகக் கருதப்பட வேண்டும்.

13. புதிய சட்ட மன்றங்களில் குறைந்தபட்சம் ஒரு சில பெண்உறுப்பினர்களேனும் இடம்பெறச் செய்வதற்கு மன்னர்பிரான் அரசாங்கம் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறது. ஆரம்பத்தில் பெண்களுக்கென விசேடமாக ஒரு சில இடங்களை ஒதுக்காமல் இந்த நோக்கத்தை நிறைவேற்ற முடியாது என அவர்கள் உணர்கின் றனர். ஏறுமாறானமுறையில் ஒரு சமூகத் திலிருந்து பெண் உறுப் பினர்கள் தேர்ந்தெடுக்கப்படாமலிருப்பது அவசியம் என்றும் அவர்கள் கருதுகின்றனர். பெண்களுக்கான ஒவ்வொரு விசேட இடத் துக்கும் ஒரு சமூகத்தைச் சேர்ந்த வாக்காளர்களைக் கொண்ட வாக் காளர் தொகுதியை வரையறுப்பதைத் தவிர்[1] இந்த இடர்ப்பாட்டைத் தவிர்க்கக் கூடியதும், தாங்கள் ஏற்றுக்கொண்டுள்ள இதர பிரதி நிதித்துவமுறையுடன் இணங்கிப் போகக்கூடியதுமான எந்த ஒரு

1. ஒரு விதி விலக்கு நீங்கலாக அட்டவணைக்குத் தந்துள்ள குறிப்பை (இ) காண்க. பின் இணைப்பு XVI.

பின் இணைப்பு XVIII- (தொடர்ச்சி)

## மாகாண சட்ட மன்றங்களில் ஒதுக்கப்படும் இடங்கள் ( கீழ்ச் சபைக்கு மட்டும்)

| மாகாணம் | பொது | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | பின்தங்கிய பிரதேசங்களின் பிரதிநிதிகள் | சீக்கியர்கள் | முகமதியர்கள் | இந்தியக் கிறித்தவர்கள் | ஆங்கிலோ இந்தியர்கள் | ஐரோப்பியர்கள் | வர்த்தகம், தொழில், சுரங்கம், தோட்டத் தொழில்களுக்கான தனித் தொகுதிகள்(அ) | நிலக்கிழார் தனித்தொகுதிகள் | பல்கலைக்கழகத் தனித்தொகுதிகள் | தொழிலாளர் தனித் தொகுதிகள் | மொத்த இடங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சென்னை | 134 (6 பெண்கள் உட்பட) | 18 | 1 | 0 | 29 (1 பெண் உட்பட) | 9 (1 பெண் உட்பட) | 2 | 3 | 6 | 6 | 1 | 6 | 215 |
| பம்பாய் (சிந்து உட்பட) | 97(அ)(5 பெண்கள் உட்பட) | 10 | 1 | 0 | 63 (1 பெண் உட்பட) | 3 | 2 | 4 | 8 | 3 | 1 | 8 | 200 |
| வங்காளம் | 80(ஆ) (2 பெண்கள் உட்பட) | இ | 0 | 0 | 119 (2 பெண்கள் உட்பட) | 2 | 4 (1 பெண் உட்பட) | 11 | 19 | 5 | 2 | 8 | 250 |
| ஐக்கிய மாகாணங்கள் | 132 (4 பெண்கள் உட்பட) | 12 | 0 | 0 | 66 (2 பெண் உட்பட) | 2 | 1 | 2 | 3 | 5 | 1 | 3 | 228 |
| பஞ்சாப் | 43 (1 பெண் உட்பட) | 0 | 0 | 32 (1 பெண் உட்பட) | 86 (2 பெண் உட்பட) | 2 | 1 | 1 | 1 | 5(ஈ) | 1 | 3 | 175 |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பீகார், ஒரிசா | 99 (3 பெண் உட்பட) | 7 | 8 | 0 | 42 (1 பெண் உட்பட) | 2 | 1 | 2 | 4 | 4 | 1 | 4 | 175 |
| மத்திய மாகாணங்கள்(பேரார் உட்பட) | 77(3 பெண் உட்பட) | 10 | 1 | 0 | 14 | 0 | 1 | 1 | 2 | 3 | 1 | 2 | 112 |
| அஸ்ஸாம் | 44 (1 பெண் உட்பட) | 4 | .. | 0 | 34 | 1 | 0 | 1 | 11 | .. | 0 | 4 | 108 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 9 | 0 | 0 | 3 | 36 | 0 | 0 | 0 | 0 | 2 | 0 | 0 | 50 |
| பம்பாய் (சிந்து நீங்கலாக) | 109 ஆ (5 பெண்கள் உட்பட) | 10 | 1 | 0 | 30 (1 பெண் உட்பட) | 3 | 2 (அ) | 3 | 7 | 2 | 1 | 7 | 175 |
| சிந்து | 10 (1 பெண் உட்பட) | 0 | 0 | 0 | 34 (1 பெண் உட்பட) | 0 | 0 | 2 | 2 | 2 | 0 | 1 | 60 |

(அ) இந்த இடங்களுக்குத் தேர்தல் நடத்தப்படும் அமைப்புகளின் இயைபு, பெரும்பாலான சந்தர்ப்பங்களில் ஐரோப்பியர்களை அதிகமாகக் கொண்டவையாகவோ அல்லது இந்தியர்களை அதிகமாகக் கொண்டவையாக இல்லாவிட்டாலும், சட்டப்படி நிர்ணயிக்கப்பட மாட்டாது. எனவே, ஒவ்வொரு மாகாணத்திலும் முறையே எத்தனை ஐரோப்பியர்களும் எத்தனை இந்தியர்களும் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவது சாத்தியமல்ல. எனினும் ஆரம்பத்தில் இந்த எண்ணிக்கை ஏறத்தாழ பின்கண்டவாறு அமைந்திருக்கும்: சென்னை 4 ஐரோப்பியர்கள், 2 இந்தியர்கள்; பம்பாய் (சிந்து உட்பட), 5 ஐரோப்பியர்கள், 3 இந்தியர்கள்; வங்காளம் 14 ஐரோப்பியர்கள், 5 இந்தியர்கள்; ஐக்கிய மாகாணங்கள் 2 ஐரோப்பியர்கள், 1 இந்தியர்; பஞ்சாப் 1 இந்தியர்; பீகார் மற்றும் ஒரிசா, 2 ஐரோப்பியர்கள், 2 இந்தியர்கள் பேரார் உட்பட மத்திய மாகாணங்கள் 1 ஐரோப்பியர்; 1 இந்தியர்; அஸ்ஸாம் 8 ஐரோப்பியர்கள், 3 இந்தியர்கள்; சிந்து நீங்கலாக பம்பாய் 4 ஐரோப்பியர்கள், 3 இந்தியர்கள்; சிந்து 1 ஐரோப்பியர், 1 இந்தியர்.

(ஆ) இவற்றில் 7 இடங்கள் மராட்டியர்களுக்கு ஒதுக்கப்படும்.

(இ) இந்த அறிக்கையின் 9-வது பத்தியில் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருப்பது போல, வங்காளத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான தனித் தொகுதிகளின் எண்ணிக்கை - இது 10க்கு அதிகபடாமல் இருந்தும் இன்னமும் நிர்ணயிக்கப்படவில்லை. பொதுத் தொகுதிகள் எண்ணிக்கை 80 ஆக இருக்கும்; இதிலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான தனித்தொகுதிகளைக் கழித்துவிட வேண்டும்.

(ஈ) இந்த இடங்களில் ஒன்று துமாந்தாரின் இடமாகும். நிலக்கிழார்களுக்கான நான்கு இடங்கள் கூட்டு வாக்காளர்களைக் கொண்ட தனித்தொகுதிகளிலிருந்து நிரப்பப்படும். வாக்காளர்களின் விநியோகத்தை வைத்துப்பார்க்கும்போது, இந்த இடங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் ஒருவர் இந்துவாகவும், ஒருவர் சீக்கியராகவும், இருவர் முகமதியர்களாகவும் இருப்பது சாத்தியம்.

(உ) பெண்களுக்கான இந்த இடம் ஷில்லாங்கில் வகுப்புவாரி அல்லாத தொகுதியிலிருந்து நிரப்பப்படும்.

## பின் இணைப்பு XIX

# துணை வகுப்புத் தீர்ப்பு[1]

''மத்தியில் பல்வேறு சமூகத்தினரின், முக்கியமாக முஸ்லீம் சமூகத்தினரின் பிரதிநிதித்துவம் பற்றிய பிரச்சினை இன்னும் தீர்க்கப் படவேண்டியிருக்கிறது. மத்தியக் கூட்டரசில் முஸ்லீம் சமூகத்தின ருக்கு 33 1/3 சதவீதம் பிரதிநிதித்துவம் இருக்கவேண்டும் என்று நான் திட்டவட்டமாகக் கருதுகிறேன். இதற்கு முன்னர் இதனை பல சந்தர்ப்பங்களில் மறைமுகமாகக் கூறியிருக்கிறேன் என்று எண்ணு கிறேன். இந்தியாவைப் பொறுத்தவரையில் அது, பாதிக்கப் பட்ட சமூகத்தினரும் சமஸ்தானாதிபதிகளும் தங்களுக்குள் தீர்த்துக் கொள்ள வேணடிய ஒரு விஷயம்; எனினும் இந்தப் பிரச்சினையில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பங்கைப் பொறுத்தவரையில், எதிர்காலத்தில் இட ஒதுக்கீடு சம்பந்தமாக இந்தத் தரப்புகளிடையே உடன்பாடு ஏற்படுவதை கூடியமட்டும் எளிதாக்க எச்சமயத்திலும் நாங்கள் உதவுவோம்.''

---

1. மத்திய அரசாங்கத்தில் தங்களுக்கு 331/3 சதவிகித இட ஒதுக்கீடு வேண்டும் என்ற முஸ்லீம்களின் கோரிக்கை பற்றி மன்னர் பிரான் அரசாங்கத்தின் வகுப்புத் தீர்ப்பு (பின் இணைப்பு XVIII, எத்தகைய முடிவையும் தெரிவிக்கவில்லை. இந்தக் கோரிக்கை குறித்த மன்னர் பிரான் அரசின் முடிவை 1932 டிசம்பர் 24 ஆம் தேதியன்று மூன்றாவது வட்டமேசை மாநாட்டில் சமர்ப்பித்த தமது அறிக்கையில் இந்தியா மந்திரி அறிவித்தார்.

## பின் இணைப்பு XX

# புனா ஒப்பந்தம்[1]

1. மாகாண சட்டமன்றங்களில் பொதுத்தொகுதி இடங்களி லிருந்து தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பின்கண்டவாறு இடங்கள் ஒதுக்கப்படும்:

சென்னை 30; சிந்துவுடன் கூடிய பம்பாய் 15; பஞ்சாப் 8; பீகார் மற்றும் ஒரிசா 18; மத்திய மாகாணங்கள் 20; அஸ்ஸாம் 7; வங்காளம் 30; ஐக்கிய மாகாணங்கள் 20; மொத்தம் 148.

பிரதமரின் முடிவில் அறிவிக்கப்பட்ட மாகாண சட்ட மன்றங்களின் மொத்த பலத்தின் அடிப்படையில் அமைந்ததே இந்த எண்ணிக்கை.

2. இந்த இடங்களுக்கான தேர்தல் கூட்டு வாக்காளர் தொகுதிகள் மூலம் நடைபெறும். இதில் பின்கண்ட நடைமுறை பின்பற்றப்படும்:

ஒரு தொகுதியின் பொதுவாக்காளர் பட்டியலில் பதிவு செய்துகொண்ட தாழ்த்தப்பட்ட இன உறுப்பினர்கள் அனைவரும் ஒரு வாக்காளர் குழுமமாக அமைவார்கள். இவர்கள் ஒவ்வொரு வருக்கும் ஒரு வாக்கு இருக்கும்; இத்தகைய தனித்தொகுதி ஒவ் வொன்றுக்கும் நான்கு பேர் அடங்கிய ஒரு பட்டியலை இந்த வாக்காளர்கள் வாக்களித்துத் தேர்ந்தெடுப்பார்கள்; இவ்வாறு நடை பெறும் பூர்வாங்கத் தேர்தலில் மிக அதிக வாக்குகள் பெற்ற நான்கு பேர் பொது வாக்காளர் பட்டியலைக் கொண்டு நடைபெறும் தேர்தலில் வேட்பாளர்களாகப் போட்டியிடுவார்கள்.

3. மத்திய சட்டமன்றத்துக்குத் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதிலும் மேலே 2 ஆவது விதி யில் கூறப்பட்டிருக்கும் அதே நடைமுறையே பின்பற்றப்படும்.

1. 1932 செப்டம்பர் 25ல் கையொப்பம் ஆயிற்று.

மாகாண சட்டமன்றங்களில் அவர்களது பிரதிநிதித்துவம் சம்பந்தமாக நடைபெற்றது போன்றே கூட்டு வாக்காளர் கோட்பாடும், பூர்வாங்கத் தேர்தல் முறையும் கடைப்பிடிக்கப்படும்.

4. மத்திய சட்டமன்றத்தில் பிரிட்டிஷ் இந்தியாவுக்காக ஒதுக்கப்படும் பொதுத் தொகுதிகளில் 18 சதவிகித இடங்கள் மேற்கண்ட சட்டமன்றத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகளுக்காக ஒதுக்கப்படும்.

5. இதுவரை கூறப்பட்டு வந்துள்ளபடி, மத்திய, மாகாண சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் போட்டியிடும் தாழ்த்தப்பட்ட இன மக்களின் வேட்பாளர் பட்டியலை முடிவு செய்யும் பூர்வாங்கத் தேர்தல் முறையை கீழே உள்ள 6 ஆவது விதியின் பிரகாரம் பரஸ்பரம் உடன்பாட்டின்பேரில் எப்போது வேண்டுமானாலும் ரத்துச் செய்யலாம்; அவ்வாறு செய்யாதபட்சத்தில் இந்தத் தேர்தல் முறை பத்தாண்டுகளுக்குப் பிறகு முடிவுக்கு வரும்.

6. விதி1 மற்றும் விதி 4 ல் கண்டுள்ளபடி மாகாண சட்டமன்றங்களிலும், மத்திய சட்டமன்றத்திலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையானது இந்த ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்ட சமூகங்களுக்கிடையே பரஸ்பர உடன்பாட்டின் மூலம் தீர்மானிக்கப்படும் வரை தொடர்ந்து நீடிக்கும்.

7. மத்திய, மாகாண சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் தாழ்த்தப்பட்ட இன மக்கள் வாக்களிப்பதற்கான தகுதி லோதியன் குழுவின் அறிக்கையில் சுட்டிக் காட்டியபடி அமையும்.

8. ஒருவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவராக இருக்கும் காரணத்துக்காக எந்த ஊராட்சித்தேர்தல்களிலும் வாக்களிக்கவோ, வேட்பாளராக போட்டியிடவோ அல்லது எந்த அரசு உத்தியோகங்களிலும் நியமிக்கப்படவோ எத்தகைய தடையும் இருக்காது. அரசு உத்தியோகங்களில் நியமனம் செய்யப்படுவதற்குத் தேவையான கல்வித் தகுதிகள் இருக்குமானால் இத்தகைய நியமனங்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் பெற்றுத் தருவதற்கு எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்படும்.

9. ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட இனத்தவர்களுக்குக் கல்வி வசதிகள் செய்துதரக் கல்வி மானியத்திலிருந்து கணிசமான தொகை ஒதுக்கப்படும்.

# பின் இணைப்பு XXI

## 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி மாகாண சட்டமன்றங்களில் சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம்

### 1. கீழ்ச்சபை

| மாகாணம் | மொத்த இடங்கள் | முஸ்லீம்கள் | | | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | | | இந்தியக் கிறித்தவர்கள் | | | சீக்கியர்கள் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | சட்டத்தின்படி ஒதுக்கப் படும் இடங்கள் | மக்கட்தொகைப்படியான இடங்கள் | அதிகம் + அல்லது குறைவு - | சட்டத்தின்படி ஒதுக்கப்படும் இடங்கள் | மக்கட் தொகைப்படியான இடங்கள் | அதிகம் + அல்லது குறைவு- | சட்டத்தின்படி ஒதுக்கப்படும் இடங்கள் | மக்கட்தொகைப்படியான இடங்கள் | அதிகம் + குறைவு - | சட்டத்தின்படி ஒதுக்கப்படும் இடங்கள் | மக்கட்தொகைப்படியான இடங்கள் | அதிகம் + குறைவு - |
| சென்னை | 215 | 29 | 17 | +12 | 30 | 35 | -5 | 9 | 9 | ... | இல்லை | இல்லை | ... |
| பம்பாய் | 175 | 30 | 16 | +14 | 15 | 16 | -1 | 3 | 3 | .. | இல்லை | இல்லை | .. |
| வங்காளம் | 250 | 119 | 137 | -18 | 30 | 33 | -3 | 3 | இல்லை | +3 | இல்லை | இல்லை | .. |
| ஐ.மா | 228 | 66 | 35 | +31 | 20 | 49 | 29 | 2 | இல்லை | +2 | இல்லை | 1 | -1 |
| பஞ்சாப் | 175 | 86 | 100 | 14 | 8 | 8 | .. | 2 | 3 | -1 | 32 | 23 | +9 |
| பீகார் | 152 | 40 | 20 | +20 | 15 | 20 | -5 | 1 | இல்லை | +1 | இல்லை | இல்லை | .. |
| ம.மா - பேரார் | 112 | 14 | 5 | +9 | 20 | 20 | .. | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| அஸ்ஸாம் | 108 | 34 | 36 | -2 | 7 | 7 | .. | 1 | இல்லை | +1 | இல்லை | இல்லை | .. |

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) | (13) | (14) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வ.மே.எ.மா | 50 | 36 | 46 | -10 | இல்லை | .. | .. | இல்லை | இல்லை | .. | 3 | 1 | +2 |
| ஓரிசா | 60 | 4 | 1 | +3 | 6 | 9 | -3 | 1 | இல்லை | +1 | இல்லை | இல்லை | .. |
| சிந்து | 60 | 34 | 43 | -9 | இல்லை | 3 | -3 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | ... |
| மொத்த இடங்கள் | 1585 | 492 | 456 | +36 | 151 | 200 | -49 | 22 | 15 | -7 | 35 | 25 | +10 |
| **மேல்சபை** | | | | | | | | | | | | | |
| சென்னை | 56 | 7 | 4 | +3 | இல்லை | 9 | -9 | 3 | 2 | +1 | இல்லை | இல்லை | .. |
| பம்பாய் | 30 | 5 | 3 | +2 | இல்லை | 3 | -3 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| வங்காளம் | 65 | 17 | 36 | -19 | இல்லை | 8 | -8 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| ஐக்கிய மாகாணங்கள் | 60 | 17 | 9 | +8 | இல்லை | 13 | -13 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| பீகார் | 30 | 4 | 4 | .. | இல்லை | 4 | -4 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| அஸ்ஸாம் | 22 | 10 | 7 | +3 | இல்லை | 1 | -1 | இல்லை | இல்லை | .. | இல்லை | இல்லை | .. |
| மொத்தம் | 263 | 60 | 63 | -3 | இல்லை | 38 | -38 | 3 | 2 | +1 | இல்லை | இல்லை | .. |

## பின் இணைப்பு XXII

### 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்தின்படி மத்திய சட்டமன்றத்தில் சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவம்

| | பிரிட்டிஷ் இந்தியாவுக்கான மொத்த இடங்கள் | முஸ்லீம்கள் | | | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | | | இந்தியக் கிறித்தவர்கள் | | | சீக்கியர்கள் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | சட்டத்தின்படி இடங்கள் | மக்கட்தொகையின்படி இடங்கள் | அதிகம் + குறைவு - | சட்டத்தின்படி இடங்கள் | மக்கட்தொகையின்படி இடங்கள் | அதிகம் + குறைவு - | சட்டத்தின்படி இடங்கள் | மக்கட்தொகையின்படி இடங்கள் | அதிகம் + குறைவு - | சட்டத்தின்படி இடங்கள் | மக்கட்தொகையின்படி இடங்கள் | அதிகம் + குறைவு - |
| I. கீழ்ச்சபை | 250 | 82 | 67 | +15 | 19 | 35 | -16 | 8 | 3 | +5 | 6 | 3 | +3 |
| II. மேல்சபை | 150 | 49 | 40 | +9 | 6 | 21 | -15 | இல்லை | 2 | -2 | 4 | 2 | +2 |

## பின் இணைப்பு XXIII

# அரசுப் பணிகளில் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் இந்திய அரசின் தீர்மானம்

*ஜூலை 4, 1934*
*பிரிவு -1 - (பொது)*

1. எண்.எப். 14/17 B/33 சட்டசபையில் கொடுத்த வாக்குறுதிகளின்படி இந்தியஅரசு 1925 ஆம் ஆண்டிலிருந்து கடைப்பிடித்து வந்த கொள்கைகளின் முடிவுகளைக் கவனமாக மறு ஆய்வு செய்தது. இக்கொள்கை அரசுப்பணிகளில் நேரடி நியமனத்தில் குறிப்பிட்ட விழுக்காட்டை வகுப்புகளிடையே உள்ள சமமின்மையைப் போக்க ஒதுக்கீடு செய்வதாகும். பொதுப்பணிகளில் அதிகமான விழுக்காட்டை முகமதியர்களுக்கு வழங்கவேண்டும் என்ற கோட்பாடு உடையதெனினும் இக்கொள்கை அவர்களுக்குரிய பங்கை வழங்கத் தவறிவிட்டது. குறிப்பிட்ட விழுக்காடு முகமதியர்களுக்கென வழங்கப்படாவிட்டால் இந்தநிலை ஈடுசெய்யப்படமுடியாது எனக் கருத்துத் தெரிவிக்கப்பட்டது. மொத்த மக்கள் தொகையில் முகமதியர் அதிகமாக வாழும் பகுதிகளில் செல்லும் ரயில்வே துறைகளில் கூட மிகச் சிறிய அளவு முகமதியரே இடம்பெற்றிருப்பது கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது.

மறு ஆய்வு இம்முறையீடுகள் சரியானவையே எனக் காட்டியது. பணிகளில் முகமதியர் நிலையை மேம்படுத்த, தேர்வு குறித்த விதிகளை மறு ஆய்வு செய்யவேண்டுமென்பதை விசாரணைகள் வழிஉணர்ந்து அது சரியானது என்ற முடிவுக்கு இந்திய அரசு வந்தது.

2. இந்தப் பொது விளைவைக் கருதும்போது, இந்திய அரசு ஆங்கிலோ-இந்தியர், குடியேறிய ஐரோப்பியர், மற்றும் நலிந்த பிரிவினரையும் கருத்தில் கொள்ளவேண்டியிருந்தது. ஆங்கிலோ இந்தியர் பொதுப்பணியின் சில பிரிவுகளில் அதிகமான விழுக்காட்டில்

---

1. இந்திய அரசிதழ் பகுதி 1 சூலை 1934.

உள்ளனர். இந்தப் பணியைச் சார்ந்து இருக்கும் விகிதம் பற்றி உணர்ந்த நிலையில், புதிய சூழலில், அவர்கள் இருக்கும் இடத்திலிருந்து விரைவாக மாற்றுவது ஒருகடுமையான பொருளாதாரப் பெயர்ச்சியைச் செய்யுமாதலால் அவர்களை மாற்றுவது தடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென உணரப் பட்டது. சில துறைகளில் ஆங்கிலோ-இந்தியர் குடியேறிய ஐரோப் பியர் ஆகியோரின் பணிநிலை குறித்த விதிகள் இக் கொள்கையை நடைமுறைப்படுத்தும் அளவில் அமைக்கப்பட்டன.

3. தாழ்த்தப்பட்ட பிரிவினரைப் பொறுத்தவரை பொதுப்பணி களில் அவர்களுக்கு நியாயமான பங்கு அளிக்க எல்லா உரிய நடவடிக்கைகளும் எடுக்கப்படவேண்டும் என்பது பொதுவான ஒரு அடிப்படையாகும். இதில் சாதி இந்துக்களின் கருத்து இன்ன தென்று 1932 இன் புனா ஒப்பந்தத்தில் முன்னர் தெரிவிக்கப் பட்டது. பேரரசு இந்த உடன்பாட்டை ஏற்று இக்கருத்தை மனத்திற் கொண்டது. தற்போதுள்ள நிலையில், இந்த வகுப்புகளில் பொதுக் கல்வி நிலையில், இந்துக்களுக்கு முழுமையாக உள்ள இடங்களில் குறிப்பிட்ட விழுக்காட்டை இவர்களுக்கு ஒதுக்கீடு செய்வது எந்தப் பயனையும் விளைவிக்காது. ஆனால் தாழ்த்தப்பட்ட பிரிவினரில் தகுதியுடைவர்கள் திறந்தவழிப் போட்டிகளில் வெற்றியடைய முடியாது. ஆகையால் அந்த வகுப்புகளைச் சேர்ந்த உரிய தகுதி பெற்ற வேட்பாளர்கள் எவரும் வேலை நியமனம் பெறும் நியாய மான வாய்ப்புகளை இழந்துவிடாதபடி பார்த்துக்கொள்ள அரசு உறுதிபூண்டுள்ளது.

4. மேற்குறித்த வகுப்புகளைத் தவிர மற்ற சிறுபான்மை வகுப்பினரையும் குறித்து இந்திய அரசு கவனமாகப் பரிசீலித்தது. புதிய சட்டங்கள் இப்பொழுதுபோலவே தொடர்ந்து அவர் களுக்குப்பணிகளில் நியாயமான பிரதிநிதித்துவம் அளிக்கும் என நிறைவடைந்தது.

## பிரிவு II- விதிகளின் இலக்குகள்

5. இந்திய அரசு கீழேகண்ட விதிகளின் செயல்முறை குறித்துக் கண்காணித்து ஆண்டிறுதியில் விவர அறிக்கை தயாரிப்பதென எண்ணியுள்ளது.

6. கீழ்க்கண்ட குறிக்கோள்களை அடைவதற்காக ராஜாங்க மந்திரியின் ஒப்புதலுடன் இந்திய அரசாங்கம் வகுத்துள்ள பொது

விதிகள் கீழே விளக்கப்படுகின்றன. இந்தவிதிகள் நேரடி நியமனத்திற்கே உரியவை. பணி உயர்வு நியமனங்கள் தற்போதுள்ளது போல முழுமையாகத் தகுதியடிப்படையிலேயே தொடரும். இவ்விதிகள் இந்திய சிவில் சர்வீஸ்/ மத்தியப் பணித்துறைகள், வகுப்பு I, வகுப்பு II உத்தியோகங்கள் மற்றும் இந்திய அரசின் நிர்வாகக் கட்டுப்பாட்டில் உள்ள துணை நிலைப்பணிகள் ஆகியவற்றுக்குப் பொருந்தும். துணை நிலைப் பணிகளில் சில விதிவிலக்குப் பெறுகின்றன. அவை உயர்தொழில்நுட்பப் பணிகள், தனித்தகுதிகள் வேண்டப்படும்பணிகள் ஆகியன. ஆனால் பர்மா மாநிலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் இப்பணிகளுக்கு இவ்விதிவிலக்கு இல்லை. ரயில்வே துறையைப் பொறுத்தவரை நான்கு மாநிலப் பொறுப்பில் உள்ள ரயில்வே, தனியார் பொறுப்பில் உள்ளவை ஆகியவற்றிலும், கீழ்மட்டத்திலுள்ள தொழிலாளர் தவிர எல்லாப் பணியிடங்களுக்கும் இதேபோன்ற விதிகளையே கடைப்பிடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

## பிரிவு III - அனைத்திந்திய அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும் பணிகளுக்கான விதிகள்

7. (i) அனைத்திந்திய அளவில் தேர்வுசெய்யப்படும் இந்தியப் படைத்துறை சாராப் பணிகள், மத்திய மற்றும் துணைநிலைப் பணிகளுக்கான தேர்வில் கீழ்க்கண்ட விதிகள் பின்பற்றப்படும்:

i. இந்தியர்களை நேரடியாகத் தேர்ந்தெடுத்து நிரப்பப்படும் இடங்களில் 25 விழுக்காடு முகமதியர்களுக்கும் 8 1/3 விழுக்காடு சிறுபான்மைச் சமூகங்களுக்கும் ஒதுக்கப்படும்.

ii. திறந்தவழித் தேர்வால் தேர்ந்தெடுக்கப்படும் முகமதியர்கள் மற்றும் சிறுபான்மைச் சமூகத்தினர் இந்த விழுக்காட்டுக்குக் குறைவாகப் பெற்றால், நியமனத்தின்வழி இவ்விழுக்காடுகள் அளிக்கப்பெறும். எனினும் முகமதியர் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட விழுக்காட்டிலும் மிகுதியாகப் பெற்றால், ஏனைச் சிறுபான்மையருக்கு ஒதுக்கப்பட்ட விழுக்காட்டில் குறைக்கப்படமாட்டாது. ஏனைச்சிறுபான்மையர் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட விழுக்காட்டிலும் மிகுதியாகப் பெற்றால், முகமதியர்களுக்காக ஒதுக்கப்பட்ட விழுக்காட்டில் குறைக்கப்பட மாட்டாது.

iii. ஏனைச்சிறுபான்மைச் சமூக உறுப்பினர் திறந்தவழித் தேர்வில் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட விழுக்காட்டினும் குறை வாகப் பெற்றால், நியமனத்திற்குரிய தகுதிபடைத்தவர்கள் இல்லையென்றால் 81/3 விழுக்காட்டில் எஞ்சிய பகுதி முகமதியர்களுக்குக் கிடைக்கும்.

iv. ஏனைச் சிறுபான்மையருக்கு ஒதுக்கப்பட்ட 8 1/3 விழுக்காடு எந்த வரையறுத்த விகிதத்திலும் அவர்களுக்கிடையே பிரித்து வழங்கப்பட மாட்டாது.

V. எல்லா நிலைகளிலும் ஒரு குறைந்தபட்சக் கல்வித் தகுதி விதிக்கப்படும். ஒதுக்கீடுகளும் இந்த விதிக்குட்பட்டவையே.

Vi. இத்தீர்மானத்தின் 2ஆம் பத்தியில் கூறப்பட்டுள்ள கார ணங்களுக்காக, இந்திய அரசு தனிக்கவனம் செலுத்தியது. அதில், அனைத்திந்திய அளவில் ரயில்வே துறையில் தேர்ந் தெடுக்கப்படும் அரசிதழ் பதிவுபெற்ற பதவிகளுக்கு, ஆங்கிலோ- இந்தியர், குடியேறிய ஐரோப்பியர் ஆகியோரைப் பணியமர்த்துதல் குறித்துத் தனிக்கவனம் செலுத்தியது. ஆங்கிலோ-இந்தியர், குடியேறிய ஐரோப்பிய சமூகத்தினர் தற்போது பெற்றுள்ள பிரதிநிதித்துவத்தை ஏறத்தாழ அப்படியே பெற, இந்திய வகுப்பினர்களின் உறுப்பினர் களுக்குக் கிடைக்கும் மொத்த இடங்களில் ஏறத்தாழ ஒன்பது விழுக்காடு தேவைப்படும். இந்திய அரசு, தற்போது இச் சமூகம் பணி உயர்வின் அடிப்படையில் அரசிதழ் பதிவு பெற்ற பணிகளுக்கும், நேரடித் தேர்வுப் பணிகளுக்கும் ஒன்பது விழுக்காட்டுக்கு மேல் பெறுவதை எண்ணி நிறை வடைகிறது. இச்சூழல்களில் தனி ஒதுக்கீடு தேவையில்லை என முடிவு செய்யப்பட்டது. இச்சமூகம் ஒன்பது விழுக் காட்டிற்குக் கீழே எப்போதேனும் பெறுமானால் அதனைச் சரிசெய்வதற்கும் அவர்களுடைய சட்டபூர்வமான உரிமை களைப் பாதுகாப்பதற்கும் நேரடி நியமனத்தில் தேவை யானது செய்வது பற்றிக் கருதப்படும்.

## பிரிவு IV வட்டார அளவில் தேர்ந்தெடுக்கப்படும் பணிகளுக்கான விதிகள்

3. அனைத்திந்திய அளவில் இல்லாமல், வட்டார அளவில் தேர்ந்தெடுக்கப்படும் பணிகளுக்கு, எடுத்துக்காட்டாக ரயில்வே

துறை அஞ்சல் மற்றும் தொலைபேசித்துறை, சுங்கத்துறை, வருமான வரித்துறை ஆகிய மற்றவற்றில் உள்ள துணைநிலைப் பதவிகள் போன்ற பணிகளுக்கு, தேர்வு நிகழும்போது மேற்கூறிய விதிகள் கீழ்க்கண்ட மாற்றங்களோடு பின்பற்றப்படும் :

1. இந்தியா முழுவதுக்குமாக மொத்த இடஒதுக்கீடு முகமதியர்களுக்கு 25 விழுக்காடாகும். ஏனைச் சிறுபான்மையருக்கு 8 1/3 விழுக்காடாகும். இவ்விகிதங்கள், ஒவ்வொரு வட்டார ரயில்வே துறையிலும் அங்குள்ள முகமதியர்களின் தொகையையும், ஏனைச் சிறுபான்மையரின் தொகையையும், அந்தப் பகுதிக்குரிய அரசு கடைப்பிடிக்கும் தேர்வு விதிகளையும் மனத்தில் கொண்டு உருவாக்கப்பட வேண்டும்.

2. ரயில்வே துறை, அஞ்சல் மற்றும் தந்தித்துறை சுங்கத் துறை ஆகியவற்றில் ஆங்கிலோ-இந்தியர்களும் குடியேறிய ஐரோப்பியரும் தற்போது பணியமர்த்தப்பட்டுள்ளனர். இவர்கள் பணி செய்யும் இத்துறைகளுக்கு பத்தி எண் 2 இல் குறிப்பிட்டுள்ள கொள்கையை நடைமுறைப்படுத்தும் வகையில் தேவைப்படும் தனிஏற்பாடுகள் அடுத்த பத்தியில் விளக்கப் பெற்றுள்ளன.

9.(1) (a) ஆங்கிலோ-இந்திய, குடியேறிய ஐரோப்பிய சமூகத்தினர் ரயில்வே துறையின் துணைநிலை உதவியாளர்கள் பதவிக்குரிய எட்டு விழுக்காட்டைப் பாதுகாக்க நேரடிநியமனத்தின் எல்லா இடங்களிலும் தக்க ஒதுக்கீடு செய்யப்படும். இந்தக் கூடுதல் விழுக்காடு ஒரு தனி விழுக்காட்டை உறுதிசெய்வதன் வழியாகப் பெறப் படும். 1. தற்போது பணியமர்த்தப்பட்டுள்ள இச்சமூக உறுப்பினர்களின் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டு ஒவ்வொரு ரயில்வே துறைக்கும் 2. இயந்திரப் பொறியியல், கட்டுமானப் பொறியியல் போக்குவரத்துத்துறை போன்றவற்றில் தற்போது பணிபுரியும் ஆங்கிலோ-இந்தியர் தொடர்ந்து இப்பிரிவுகளில் பணிசெய்யுமாறு உறுதிசெய்ய, ரயில்வே துறையில் ஒவ்வொரு பிரிவு அல்லது துறையிலும் தனி விழுக்காடுகள் ஏற்படுத்துவதன் வழியாகக் கூடுதல் விழுக்காடு அடையப்பெறும். துணைநிலைப்பதவிகளில் உயர் நிலைப் பதவி எதுவும் ஒதுக்கீட்டுக்கு உள்ளாகாது. தற்போது உள்ளது போலவே இவை முழுதும் தகுதியடிப்படையில் பணி உயர்வு வழங்கி அளிக்கப்பெறும்.

(b). இதுவரை எல்லாச் சிறுபான்மைச் சமூகத்தினருக்கும் கடைப்பிடித்து வந்த 331/3 என்ற விழுக்காடு, முகமதியர்க்கு 25

விழுக்காடும் ஆங்கிலோ-இந்தியர்க்கு எட்டு விழுக்காடும் அளிக்கப் பெறுவதால், முகமதிய ஆங்கிலோ-இந்தியரல்லாத ஏனைச் சிறு பான்மையரின் நலன்களைப் பாதுகாக்க இதுவரை எல்லா சிறு பான்மை வகுப்பினர்களுக்கும் அளிக்கப்பட்டு வந்த ஒருபுற இட ஒதுக்கீட்டை அதிகப்படுத்த வேண்டியுள்ளது. எனவே, அவர்களுக்கு நேரடி நியமனங்களில் ஆறு விழுக்காடு அளிப்பதென முடிவு செய்யப் பட்டது. ஏறத்தாழ இவ்விழுக்காட்டளவு இவ்வகுப்பினர் தற்போது அப்பதவிகளில் உள்ளனர். இந்த மொத்த ஒதுக்கீடு, பத்தி 8, (1) இல் உள்ள தீர்மானத்தில் கூறியவண்ணம், அடையப்பெறும். இதுமேலும் சிறுபான்மைச் சமூகங்களுக்கு இடையே உட்கூறுபடுத்தப்படாது.

(2) அஞ்சல் தந்தித் துறைகளிலும், எல்லா துணை நிலைப் பணிகளிலும் ஏறத்தாழ 2.2 விழுக்காடு பெறும் ஆங்கிலோ-இந்தியர், குடியேறிய ஐரோப்பியச் சமூகத்தினர் நலன்களைப் பாதுகாக்கும் வகையில் ரயில்வே துறையில் பின்பற்றப்படும் அதே கொள்கை பின்பற்றப்படும். இந்தச் சமூகத்திற்கு 5 விழுக்காட்டளவு ஒதுக்கீட்டை, பணிப்பிரிவுகளில், துறைகளில் பணிவகைகளில் வழங்கினால் அது அவர்கள் இப்போது வகிக்கும் விழுக்காட்டிற்குத் சற்று குறைவாகவே இருக்கும். ஆங்கிலோ-இந்தியர்களுக்குத் தனி ஒதுக்கீடு செய்துள்ள துறைகளில், துறைப் பிரிவுகளில் ஏனைச் சிறுபான்மையர்க்கும் அவர்கள் இப்போது வகிப்பதற்கு ஏற்றத் தாழ்வான பணியிடங்களை இவர்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படும். ஆங்கிலோ-இந்தியர், முகமதியர் அல்லாத சிறுபான்மையர் ஆகியோர் பெறும் மொத்த ஒதுக்கீடு எந்நிலையிலும் 8 1/3 விழுக் காடுக்குக் குறையக்கூடாது.

3) தற்போது ஆங்கிலோ-இந்தியர் பெரிய துறைமுகங்களில் உள்ள மதிப்பீட்டுத்துறை, உயர்தடுப்புப்பணி ஆகியவற்றில் மிகுதி யாகப் பணிபுரிகின்றனர். முதலில் கூறப்பட்ட துறைக்குச் சிறப்புத் தொழில்நுட்பத் தகுதிகள் தேவைப்படுவதால் தீர்மானத்தின் பத்தி 6ல் குறிப்பிடப்பட்டுள்ள பொதுக்கொள்கைகளுக்குப் பொருந்த இவ்விதி களைப் பயன்படுத்துவதிலிருந்து விலக்களிக்கப்படுகிறது. தடுப்புப் பணிகளில் சிறப்புத் தகுதிகள் தேவைப்படுகின்றன. இப்போதுள்ள அமைப்பின்படி, ஆங்கிலோ-இந்தியர்க்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் தொடர்ந்து அவர்களுக்கே உரியதாகக் கொள்ளப்படும்.

ஆணை: இத்தீர்மானம் எல்லா வட்டார அரசுகளுக்கும் நிர்வாகங்களுக்கும், இந்திய அரசின் பல துறைகளுக்கும் தகவலுக் காகவும் (வழிகாட்டலுக்காகவும்) அனுப்பப்படவேண்டும். இந்திய அரசிதழிலும் இது வெளியிடப்பட வேண்டும்.

எம்.ஜி.ஹேலட்,
இந்திய அரசின் செயலாளர்.

பின் இணைப்பு XXIV

# பணிகளில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கான பிரதிநிதித்துவம் குறித்த இந்திய அரசின் 1943 ஆம் ஆண்டின் தீர்மானம்

## உள்துறை

### தீர்மானம்

*புது டில்லி ஆகஸ்டு 11, 1943*

*1. எண் 23/5/42 ESTS(S) 1942 இல் மத்தியசட்டசபையில் அளித்த உறுதிமொழியைத் தொடர்ந்து, இந்திய அரசு 1934முதல் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பிரதிநிதித்துவம் குறித்துக் கடைப்பிடித்த கொள்கையை மிகக் கவனமாக மறு ஆய்வு செய்தது. ஏனெனில் 1935 ஆம் வருட இந்திய அரசுச் சட்டம் தங்கள் ஆளுகையின் கீழுள்ள தாழ்த்தப்பட்ட மக்களை 'ஷெட்யூல்டு பிரிவினர்' என்று குறிக்கின்றது. எண். எப். பி 14/17- பி/33 எண்ணிட்ட ஜுலை 4 1934 நாளைய அவர் களின் தீர்மானத்தில், அப்போதைய பொதுக்கல்வி நிலையில் இப்பிரிவினர்க்குச் சில இடங்களை ஒதுக்குவதன் வழியாக எந்தப் பயனும் விளையாது என்று எண்ணியதைக் குறிப்பிட்டது. எனினும் பட்டியலில் கண்ட பிரிவினர்க்குத் தகுந்த பிரதிநிதித்துவம் அளிப் பதற்காக, பொதுப் பணிகளுக்குத் தேர்வின் வழி உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், தகுதியுடைய ஷெட்யூல்டு பிரிவினரைப் பொதுப்பணியிடங்களுக்கு நியமனம் செய்யலாம் என அவர்கள் ஆணையிட்டனர். அதுமுதல் பொதுப்பணிகளில் ஷெட்யூல்டு பிரி வினருக்கு அதிகமான பிரதிநிதித்துவம் பெற பல நடவடிக்கை கள் எடுக்கப்பட்டுள்ளன. எனினும் இதுகாறும் பெறப்பட்டுள்ள முடிவுகள் போதுமானவையல்ல. இந்திய அரசு தகுதியுள்ளவர்களைப் பெறுவது கடினமாக இருப்பதால் இது நேருகின்றது எனக் கருது கின்றது. அவர்கள் இப்போது குறிப்பிட்ட விழுக்காடு ஒதுக்கீடு செய்யப்பட்டால் இந்தச் சாதியினர் சிறந்த தகுதி பெற்றுப் பல அரசுப் பணிகளுக்குத் தங்களைத் தகுதியுடைய வர்களாக ஆக்கிக் கொள்ளலாம் எனக்கருதுகின்றனர். வயது வரம்பில் சலுகை அளித் தல், கட்டணச் சலுகை ஆகியன ஷெட்யூல்டு பிரிவு மாணவர்களி லிருந்து தகுதியுடைவர்களைப் பெற உதவி செய்யும். இந்திய*

அரசு இவற்றிக்குத்தக, கீழே பத்தி 4இல் குறிப்பிடப்பட்டுள்ள விதிகளைக் கொண்டுவர முடிவு செய்துள்ளது.

2. பிற வகுப்பினரின் மொத்தத்தொகையோடு ஒப்பிடும் போது ஷெட்யூல்டு வகுப்பினர் எத்தனை விழுக்காடு உள்ளனர் என்று கணக்கிடும் அடிப்படையில், பிற சாதியினர் ஒதுக்கப்படாத இடங்களில் உரிய பங்கைப் பெறும் நிலையில், ஷெட்யூல்டு வகுப்பினர் 12.75 விழுக்காடு மொத்தக் காலியிடங்களில் பெறத் தகுதி பெறுகின்றனர். மக்கள்தொகை அடிப்படையில் ஷெட்யூல்டு வகுப்பினர் தமக்குரிய காலியிடங்களை நிரப்புவதற்குரிய போதுமான உறுப்பினர்கள் வருவதில்லை. எனவே இந்திய அரசு தற்போதைக்குக் குறைந்த அளவில் 8 1/3 விழுக்காடு ஒதுக்கீடு செய்தால் போதுமென முடிவுசெய்துள்ளது. இந்த வகுப்பினரிடமிருந்து தகுதிவாய்ந்த உறுப்பினர்கள் மிகுதியாக வரும் காலத்தில் இந்த விழுக்காட்டை உயர்த்துவது குறித்துக் கருதுவதாக உள்ளனர்.

3. கீழே குறிப்பிடப்பட்டுள்ள இந்த விதிகள் நேரடித் தேர்வுக்கே பொருந்தும். பணி உயர்வில் வருபவர்க்கு இது பொருந்தாது. பணி உயர்வில் வகுப்புப் பாகுபாடு இல்லாமல் தேர்வு செய்யும் இப்போதைய வழக்கமே நீடிக்கும். இந்தவிதிகள் மத்தியப் பணிகளுக்கும் (வகுப்பு I வகுப்பு II) இந்திய அரசின் கட்டுப்பாட்டில் உள்ள துணைநிலைப் பணிகளுக்கும் பொருந்தும். இவற்றில் சில பணிகளும் பணியிடங்களும் வகுப்புவாரித் தேர்விலிருந்து விலக்கப் பட்டுள்ளன. இவற்றுக்கு மிகுந்த தொழில்நுட்பமும் தனித் தேர்ச்சிகளும் தேவைப்படும். எனவே இவை 1934 ஜூலை 4 ஆம் நாள் எண் எப் 14/17-பி/33 எண்ணிட்ட தீர்மானத்தில் அடங்கியுள்ள வகுப்புவாரி பிரதிநிதித்துவ நோக்கிலிருந்து விலக்கப்பட்டுள்ளன. ரயில்வே துறையைப் பொறுத்துவரை, இந்த விதிகள் தாழ்ந்த பணியாளர்கள் தொழிலாளர்களைத் தவிர மற்ற எல்லாப் பணியிடங்களுக்கும் பொருந்தும். தனியார் நிர்வகிக்கும் ரயில்வே துறைகளிலும் இத்தகைய விதிகளைப் பின்பற்றுமாறு கேட்டுக் கொள்ளப்படும்.

4. பொதுப்பணிகளில் ஷெட்யூல்டு வகுப்பினர் சிறந்த பிரதிநிதித்துவம் பெறக் கீழ்க்கண்ட விதிகள் எதிர்காலத்தில் கடைப் பிடிக்கப்படும்:

1) இந்தியர்களின் நேரடித் தேர்வுகளில் மத்திய மற்றும் துணைநிலைப் பணிகளில் அனைத்திந்திய அடிப்படையில் தேர்வு செய்யப்

படும்போது 8 1/3 விழுக்காடு இடங்கள் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்படும்.

2) அனைத்திந்திய அளவில் தேர்வு செய்யப்படாது வட்டார, பிராந்திய அளவில் தேர்வு செய்யப்படும்போது ரயில்வே துறை, அஞ்சல், தபால் துறைகள், சுங்கத்துறைகள், வருமான வரித் துறைகள் ஆகியவற்றில உள்ள துணைநிலைப் பணிகளுக்கு இந்தியா முழுமையுமா 8 1/3 விழுக்காடு இடங்கள் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு வழங்கப்படும். வட்டார பிராந்தியப் பகுதிகளில் அங்குள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் மக்கள் தொகையைக் கொண்டும், அந்தப் பகுதியில் உள்ள மாநில அரசு கடைப்பிடிக்கும் விதிகளையும் கருத்தில் கொண்டும் ஒரு குறிப்பிட்ட விழுக்காடை நிர்ணயிப்பதன் மூலம் இந்த ஒதுக்கீடு பெறப்படும்.

3) தேர்வு பொதுவான திறந்தமுறையில் அமையும்போது ஷெட்யூல்டு பிரிவினர் அவர்களுக்கு ஒதுக்கப்படுவதை விடக் குறைவான இடங்களையே பெறுகின்றனர். இந்த வித்தியாசத்தைத் தகுதியுள்ள அச்சாதி உறுப்பினர்களை நியமிப்பதன் வழியாகச் சரி செய்யலாம்.

4) ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த உறுப்பினர்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களைவிடக் குறைவாகத் திறந்த வழித் தேர்வில் பெற்றாலும், தகுதியுள்ள இச்சாதி உறுப்பினர் கிடைக்காவிட்டாலும், நியமனம் செய்வதற்குப் போதுமான எண்ணிக்கையுடையவர் கிடைக்காவிடினும், அவர்களுக்காக ஒதுக்கப்பட்ட காலியிடங்கள் ஒதுக்கப்படாத இடங்களாகக் கருதப்படும். ஆனால் அதற்கு ஒப்பான எண்ணிக்கையுடைய இடங்கள் அந்த ஆண்டில் பிரிவு 1 அல்லது பிரிவு 2 என மேலே குறிப்பிட்ட பிரிவுகளில் ஒதுக்கப்படும்.

5) தகுதியுடைய ஷெட்யூல்டு வகுப்பினர் அவர்களுக்குரிய இடங்களை நிரப்ப இல்லாமல் போய், முந்தைய ஆண்டிலிருந்து பகுதி(4) இல் கூறியுள்ளபடி, முன் கொண்டுவரப்பட்டு அவர்களால் தொடர்ந்து நிரப்பப்படாவிடின் அவ்விடங்கள் ஒதுக்கப்படாத இடங்களாகக் கருதப்படும்.

6) எல்லா நிலைகளிலும், ஒரு குறைந்தபட்ச கல்வித்தகுதி நிர்ணயிக்கப்பட்டு, இடஒதுக்கீடு இந்நிபந்தனைக்கு உட்படுத்தப்படும்.

7. ஷெட்யூல்டு வகுப்பைச் சார்ந்த உறுப்பினர்களுக்கு வயது வரம்பு ஒரு குறிப்பிட்ட பணி அல்லது பணியிடத்திற்குக் குறிப்பிடப்படும்போது, மூன்றாண்டுகள் அதிகமாக இருக்க அனுமதிக்கப் படும்.

8. எந்தத் தேர்வுக்கும், சேர்க்கைக்கும் விதிக்கப்பட்ட கட்டணம், ஷெட்யூல்டு வகுப்பைச் சார்ந்த உறுப்பினர்களுக்குக் கால்பகுதியாக குறைக்கப்படும்.

9. மேற்கண்ட விதிகளில் குறிக்கப்பட்டவை மூன்று மாதத் திற்கோ அல்லது மேலும் நீண்டகாலத்திற்கோ உரிய தற்காலிகப் பணியிடங்களுக்கும் பொருந்தும். நிலையான பணியிடங்களைத் தற்காலிகமாக, அரசுப் பணியில் நிலையாக இல்லாதவர்களைக் கொண்டு நிரப்பப்படும்போதும் இவ்விதிகள் பொருந்தும்.

10. இவ்விதிகளுக்குப் பொருத்தமானவர் என்று ஷெட்யூல்டு சாதியினர் ஒருவரை ஏற்றுக்கொள்ள அவர் இந்திய அரசு 1936 இல் வெளியிட்ட ஆணை (ஷெட்யூல்டு வகுப்பினர்) யின்படி அதற்குரிய சாதியைச் சேர்ந்தவராக அப்பகுதியில் அவரும் அவர் குடும்பத் தினரும் இருத்தல் வேண்டும்.

ஆணை: இத்தீர்மானத்தின் நகல் எல்லாத் தலைமை ஆணை யர்களுக்கும், இந்திய அரசின் பலதுறைகளுக்கும், புலனாய்வுத் துறை, கூட்டாட்சிப் பணித் தேர்வாணையம் ஆகியவற்றுக்கும் தகவலுக்காக அனுப்பப்படவேண்டும். அரசியல்துறை, நிதித்துறை, கவர்னர்-ஜெனரலின் செயலாளர்(பொது) கவர்னர்-ஜெனரலின் செயலாளர்(சீர்திருத்தம்) கவர்னர்-ஜெனரலின் செயலாளர்(தனி) கவர்னர்-ஜெனரலின் செயலாளர் சட்டசபைத்துறை, கூட்டாட்சி-நீதிமன்றம், கவர்னர்-ஜெனரலின் படைப்பிரிவுச் செயலாளர், மற்றும் எல்லா மாநில அரசுகளுக்கும் தகவலுக்காக அனுப்பப்பட வேண்டும். இத்தீர்மானம் இந்தியாவின் அரசிதழிலும் வெளியிடப் பட வேண்டும்.

இ. கோன்ரான் சுமித்
செயலாளர்.

பின் இணைப்பு - XXV

# கிரிப்ஸ் திட்டம்

## 1941 மார்ச் 29ல் பிரசுரிக்கப்பட்டது இந்தியத் தலைவர்களுடன் விவாதிப்பதற்கான நகல் பிரகடனம்

இந்தியாவின் எதிர்காலம் சம்பந்தமாக அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் நிறைவேற்றப்படாதது குறித்து இந்த நாட்டிலும் இந்தியாவிலும் தெரிவிக்கப்பட்டுள்ள கவலைகளை மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் கருத்தில்கொண்டு, இந்தியாவில் கூடிய விரைவில் சுயாட்சியை ஏற்படுத்துவதற்கு தாங்கள் மேற்கொள்ளப் போகும் நடவடிக்கைகளைத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் தெரிவிப்பதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஒரு புதிய இந்தியக் கூட்டரசை உருவாக்குவதே எமது குறிக்கோள். மன்னர்பால் கொண்ட பொது விசுவாசத்தால் பிரிட்டனும் இதர குடியேற்ற நாடுகளுடனும் இணைந்த ஒரு குடியேற்ற நாடாக இந்தியா அமைந்திருக்கும்; எல்லா அம்சங்களிலும் அவற்றுக்குச் சமமாக அது திகழும்; தனது உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரங்களில் அது எவ்வகையிலும் யாருக்கும் கீழ்ப்பட்டதாக இருக்காது.

எனவே, மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கம் பின்கண்ட பிரகடனத்தை வெளியிடுகிறது:

அ. போர் நடவடிக்கை முடிந்த உடனேயே கீழ்கண்ட துறையில் இந்தியாவுக்கு ஒரு புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கும் கடமை வழங்கப்பட்ட ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அமைப்பை பின்வருமாறு விளக்கப்பட்ட விதத்தில் இந்தியாவில் நிறுவ நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும்;

ஆ. அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் அமைப்பில் சமஸ்தானங்கள் பின்கண்ட விதத்தில் பங்கொடுத்துக் கொள்ள வகை செய்யப்படும்.

இ. இவ்வாறு வகுத்தளிக்கப்படும் அரசியலமைப்புச்

சட்டத்தை கீழ்க்கண்ட நிபந்தனைகளின்படி ஏற்கவும் உடனடியாக அதனைச் செயல்படுத்தவும் மன்னர்பிரான் அரசு சம்மதிக்கின்றது:

I. புதிய அரசியலமைப்பை ஏற்கத் தயாராக இல்லாத பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த எந்த ஒரு மாகாணமும் தனது இப்போதைய அரசியல் சட்டரீதியான நிலையைத் தக்கவைத்துக் கொள்ள உரிமை அளிக்கப்படவேண்டும்; அது விரும்பினால் பின்னர் சேருவதற்கு வகை செய்யப்பட வேண்டும்.

இவ்விதம் புதிய அரசியலமைப்பில் சேராத மாகாணங்கள் விரும்பும் பட்சத்தில் இந்தியக் கூட்டரசுக்குள்ள அதே அந்தஸ்தை அளிக்கக்கூடிய ஒரு புதிய அரசியலமைப்பை அவை உருவாக்கிக் கொள்வதற்கு மன்னர் பிரான் அரசு சம்மதிக்கும்; கீழ்க்கண்டவை ஒத்த நடைமுறைகள் இது விஷயத்தில் பின்பற்றப்படும்.

II. மன்னர் பிரான் அரசும் அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பும் பேச்சுவார்த்தைகள் நடத்தி ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திடும். பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர் கைகளுக்கு பொறுப்பை முற்றிலுமாக மாற்றுவதால் எழக்கூடிய எல்லா முக்கிய விஷயங்களும் இந்த ஒப்பந்தத்தில் இடம் பெற்றிருக்கும்; மன்னர்பிரான் அரசு அளித்த வாக்குறுதிகளுக்கு இணங்க இன மற்றும் சமய சிறுபான்மையினரைப் பாதுகாப்பதற்கு ஒப்பந்தத்தில் வகை செய்யப்படும்; ஆனால் பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் இதர உறுப்பு நாடுகளுடனான தனது உறவை எதிர்காலத்தில் தீர்மானிக்கும் விஷயத்தில் இந்தியக் கூட்டரசுக்குள்ள அதிகாரம் எவ்வகையிலும் கட்டுப்படுத்தப்பட மாட்டாது.

புதிய அரசியலமைப்புச் சட்டத்தைப் பின்பற்ற ஓர் இந்திய சமஸ்தானம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அதனுடனான ஒப்பந்த ஏற்பாடுகளைத் திருத்தியமைப்பது சம்பந்தமாகப் பேச்சுவார்த்தைகள் நடத்தப்படவேண்டும்; ஏனென்றால் புதிய அரசியலமைப்பில் இவ்வாறு செய்வது அவசியமாகலாம்.

ஈ. பிரதானசமூகங்களின் கருத்தைப் பிரதிபலிக்கும் தலைவர்கள் போர் முடிவடைவதற்குள் வேறு ஏதேனும் ஏற்பாடு குறித்து ஓர்

உடன்பாட்டுக்கு வந்தாலொழிய அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பு பின்கண்டவாறு அமைந்திருக்கும்:

போர் முடிவில் மாகாண சட்டமன்றங்களுக்குத் தேர்தல்கள் நடத்துவது அவசியமாகக் கூடும்; அவ்வாறு தேர்தல்கள் நடைபெற்று முடிவுகள் தெரியவந்த உடனேயே மாகாண சட்டமன்றங்களின் கீழ்ச்சபைகளது உறுப்பினர்கள் அனைவரும் அடங்கிய ஒரு தேர்தல் குழுமம் அமைக்கப்படும்; அந்தக் குழுமம் மாகாண பிரதிநிதித்துவ அடிப்படையில் அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பினைத் தேர்ந்தெடுக்கும். இந்தப் புதிய அமைப்பின் உறுப்பினர்கள் எண்ணிக்கை தேர்தல் குழுமத்தின் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்காக இருக்கும்.

இந்திய சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் விஷயத்தில் போன்றே அவற்றின் மொத்த மக்கட்தொகை விகிதாசாரத்துக்கு ஏற்ப தங்கள் பிரதிநிதிகளை நியமிக்கும்படிக் கேட்டுக் கொள்ளப்படும்.

(உ) தற்போது இந்தியாவை எதிர்நோக்கும் நெருக்கடியான கட்டத்தின்போதும், புதிய அரசியலமைப்புச்சட்டம் வகுக்கப்படும் வரையிலும் மன்னர்பிரான் அரசு தனது உலகப்போர் முயற்சியின் ஒரு பகுதியாக இந்தியாவைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அதற்கான கட்டுப்பாட்டையும் திசைவழியையும் தன்னிடமே வைத்துக்கொள்ளும் பொறுப்பையும் தவிர்க்கமுடியாதபடி ஏற்க வேண்டும்; ஆனால் இந்தியாவின் ராணுவ, தார்மிக, பொருளாயத வளங்களை முழு அளவுக்கு ஒருங்கு திரட்டும் பணி இந்திய மக்களின் ஒத்துழைப்புடன் இந்திய அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்க வேண்டும். இந்திய மக்களின் பிரதான பகுதியினரது தலைவர்கள் தங்கள் நாட்டின், காமன்வெல்த்தின், ஐக்கிய நாடுகளின் கலந்தாலோசனையில் உடனடியாகவும் பயனுறுதியுள்ள முறையிலும் பங்கு கொள்ளவேண்டும் என்று மன்னர் பிரான் அரசு விரும்புகிறது, வேண்டுகிறது. எதிர்காலத்தில் இந்தியாவின் சுதந்திரத்திற்கு உயிர் நாடியான, இன்றியமையாத ஒரு பணியை நிறைவேற்றுவதில் இதன் மூலம் அவர்கள் தங்களது செயலூக்கமிக்க, ஆக்கப்பூர்வமான உதவியை செய்தவர்களாவார்கள்.



# சிறப்புப் பெயரகராதி

★ ★ ★

